

# தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு






டாக்டர். க. த. திருநாவுக்கரசு

# தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு

பேராசிரியர்

டாக்டர். க. த. திருநாவுக்கரசு




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
டி. டி. டி. ஐ. அஞ்சல், தரமணி, சென்னை-600113.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Then Kizhakku Asia Nadugalil Thamizh Panpadu (Tamil Culture in South-East Asia) |
| Editor & Author | : | K. D. Thirunavukkarasu International institute of Thamil Studies, Madras-600 113 |
| Publisher | : | International Institute of Tamil Studies, T. T. T. I. Post, Taramani, Madras, 600113. |
| Publication Number | : | 138 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | DECEMBER 1987 |
| Paper used | : | 16 Kgs white printing |
| Size of the Book | : | 14 x 21 cms. |
| Printing types used | : | 10'point |
| Number of pages | : | VIII+663+18+12+5 |
| Number of copies | : | 1200 |
| Price | : | Rs. 70/- (Seventy only) |
| Printers | : | Jayasree Printers 238, Pycrofts Road, Triplicane Madras, 60005. |
| Binding | : | Boxboard |
| Artist | : | Mr. Ad (Ganesen) |
| Subject | : | History |

# முன்னுரை

"சிங்களம் புட்பகம் சாவக - மாதிய
தீவு பலவினுஞ் சென்றேறி - அங்குத்
தங்கள் புலிக்கொடி மீன்கொடியும் - நின்று
சால்புறக் கண்டவர் தாய்நாடு"

எனும் பாரதியாரின் பாடல், பண்டை உலக வரலாற்றில் தமிழர்கள் (திராவிடர்கள்) தலைசிறந்த கடலோடிகளாக விளங்கியதைத் தெரிவிக்கின்றது. தமிழர்களுடைய வாழ்வியல் நோக்காகத் 'திரைகடல் ஓடியும் திரவியம் தேடும், வழக்கம் இருந்து வந்தது. இதன் விளைவாகப் பல்வேறு நாட்டு மக்களைக் கண்டு பழகியதோடு, அப்புதிய நாடுகளில் தங்கள் குடியேற்றங் களை அமைத்து வாழவும் பண்டைத் தமிழர் முற்பட்டனர். இத்தகைய வாழ்க்கை முறையால், ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஒன்றுபட்ட ஓர் உலக சமுதாயத்தை அவர்கள் காண முயன்றனர். இதன் பயனாக, 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' எனும் பரந்துபட்ட மனப்பான்மையைப் பண்டைத் தமிழர்கள் பெற்றனர்.

இந்திய நாட்டில் பழம்பெரும் சிறப்பு வாய்ந்தது தமிழ்ப் பண்பாடு. இப்பண்பாட்டினை 'வெப்ப மண்டல கிரேக்கப் பண்பாடு' என அறிஞர் ரெனே குரோசெட் போற்றுவர். கிரேக்கர்களுக்கு முற்பட்ட் பொனீஷியர் எனும் பண்டை உலக கடலோடி இனத்தவரோடு ஒப்ப வைத்து போற்றத்தக்கவர் தமிழர் என்பது அவர் துணிவாகும்.

உலகின் பல்வேறு பகுதிகளில், தமிழர்கள் குடியேறி வாழ்ந்தமைக்கும், வாழ்கின்றமைக்கும் பல்வேறு சான்றுகள் கிடைத்துள்ளன. அக்குடியேற்ற பகுதிகளுள் தென்கிழக்கு ஆசியா முதன்மை இடம் பெறுகிறது. பண்டைக்காலத் தமிழகம் ஆயிரத்து இருநூறு கி. மீ. அளவிற்கு நீண்ட நெடுங்கடற் கரையைப் பெற்றிருந்தது. இதனால், மேற்கு நாடுகளோடும், கீழ்த்திசை நாடுகளோடும் கடல்வாணிபம் செய்வதில் பண்டைத் தமிழர்கள் சிறப்புற்று விளங்கினர். இதனை,

"சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகம்
கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலிங்கங்கலிங்கம்
-வங்கம்
கங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலம்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்நிலந் தாமிவையே,

எனும் பழம்பாடல் தமிழ் நாட்டைச் சூழ்ந்த பதினேழ் நிலங்களைக் குறிப்பிடுகின்றது. இதன்மூலம் பண்டைத்

தமிழர்கள் பல நாடுகளுடன் கொண்ட தொடர்பும் புலனாகின்றது.

தென்கிழக்கு ஆசிய நாடுகள், தமிழகத்தின் கிழக்குக் கடற்கரையான 'சோழ மண்டலக் கடற்கரைக்கு' நேர் கிழக்காக ஏறக்குறைய ஈராயிரம் கி. மீ. தொலைவில் உள்ள நாடுகளாகும். அவற்றோடு வாணிகத்தொடர்பும், பண்பாட்டுத் தொடர்பும் சிறப்புமிக்க கடல்மறவர்களாகிய தமிழர்கள் கொண்டதில் வியப்பில்லை.

தென்கிழக்கு ஆசிய நாடுகளான பர்மா, வியட்நாம், காம்பூச்சியா, தாய்லாந்து, சுமத்திரா, ஜாவா, பாலி முதலிய நாடுகளில் பண்டைத் தமிழருடைய வாழ்வியல், கலைச் சின்னங்கள் காணப்படுவதை அறிஞர்கள் அவ்வப்போது சிறப்பித்துப் பேசியும் எழுதியும் உள்ளனர்.

ஆனால், இன்று வரையில் அவற்றைப் பற்றி முழுமையாக அறிவதற்குரிய வாய்ப்பு தமிழிலும் ஆங்கிலத்திலும் நமக்குக் கிட்டவில்லை. இந்த நெடுநாளைய தேவையை நிறைவேற்றும் வகையில், 'தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு' எனும் இந்நூல் அமைந்திருக்கிறது.

கி. மு. மூன்றாம் நூற்றாண்டு முதல் தமிழகத்திற்கும் தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கும் இடையே வாணிகத் தொடர்பும், பண்பாட்டுத் தொடர்பும் தோன்றி வளர்ந்து உள்ளதாகத் தெரிகிறது. அக்காலம் முதல் இன்று வரை, அந்நாடுகளில் பல்வேறு தொடர்புகள் நிலவியமைக்கு அங்குக் கிடைத்துள்ள தமிழ்ப்பண்பாட்டின் தொல்பொருள் சின்னங்கள் பல சான்று பகருகின்றன. ஐரோப்பிய 'காலனி ஆதிக்க' காலத்தில் பேரளவிற்குத் தமிழர்கள் குடியேறியுள்ள நிலப்பகுதி தென்கிழக்கு ஆசிய நாடுகளேயாகும். இன்றும் கணிசமான அளவிற்கு, அங்குத் தமிழர்கள் வாழ்ந்து வருகின்றனர். இதனால், அந்நாடுகளில், தமிழ்ப் பண்பாட்டின் பரவுதல் ஒரு தொடர்கதையாகவே இருந்து வருகிறது.

அந்தக் கதையை முழுமையாக அறிந்து கொள்ளுவதற்குத் 'தென்கிழக்கு ஆசியநாடுகளில் தமிழ்ப்பண்பாடு' எனும் இந்நூல் பேருதவியாக இருக்கும் என நம்புகின்றேன்.

ஆறாவது உலகத்தமிழ் மாநாடு மலேசியாவில் நடைபெற்ற இச்சமயத்தில், 'தென்கிழக்கு ஆசியநாடுகளில் தமிழ்ப்பண்பாடு' எனும் நூலினை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிடுவது தமிழ் மக்களுடைய பண்டைச் சிறப்பினைப் புலப்படுத்தும் செயலாகும்.

முதலாவது உலகத் தமிழ் மாநாடு கோலாலம்பூரில் நடைபெற்ற பொழுது (1966) அம்மாநாட்டின் தலைமை உரையில் டாக்டர் பிலியோசா, ''தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு எனும் ஆய்வினை மேற்கொண்டால், உலகம் வியக்கத்

தக்க பல புதிய உண்மைகள் புலப்படும்'' என்று அறிவுறுத்தி யுள்ளார். இதற்கு முன்பே 'தமிழின் தூதுவராக' உலகளாவிய நீண்ட நெடும் பயணத்தை மேற்கொண்ட டாக்டர் தனிநாயக அடிகள் பலமுறை இத்தகைய ஆராய்ச்சியை மேற்கொள்ள வேண்டும் என்று இந்திய நாட்டு அறிஞர்களுக்கு வேண்டு கோள் விடுத்துள்ளமையும் இங்கு நினைவுகூரத்தக்கதாகும்.

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் இந்த ஆய்வு 1974-இல் தொடங்கப்பெற்றது. இந்த நூலாசிரியரைக் கள ஆய்வுப் பணிக்கு அனுப்புமாறு 'யுனஸ்கோ' விடம் நிதிஉதவி வேண்டப்பட்டது. என்ன காரணத்தினாலோ இந்நிறுவனத் தினரின் முயற்சி வெற்றி பெறவில்லை. ஆயினும், ஆர்வத்தோடு இப்பணி 1980-ன் தொடக்கத்தில் ஒருவாறு நிறைவு செய்யப் பெற்றது. எனினும், இந்நிறுவனத்தின் தலைமைப் பதவியில் இருந்தவர் இதனை நூலாக வெளியிட முன்வரவில்லை. இந்நிறுவனத்திற்குப் புதிய தலைவராக 1986-ல் பொறுப்பேற்ற டாக்டர் அ. நா. பெருமாள் அவர்கள் இதனை நூலாக வெளியிட முன்வந்தார்கள். அவருக்கு என் நன்றியினைத் தெரிவிக்கும் கடப்பாடுடையேன்.

இந்நூலினை, இயன்ற வரையில் நடுநிலைமையில் நின்று, 1986-ஆம் ஆண்டு வரையில் தென்கிழக்கு ஆசிய நாடுகளின் ஆராய்ச்சியில் ஈடுபட்ட ஐரோப்பிய அறிஞர்களின் கருத்துகளை யும், தென்கிழக்கு ஆசியநாடுகளின் ஆராய்ச்சியாளர்களின் கருத் துகளையும், இந்திய வரலாற்றுப் பேரறிஞர்களின் சிந்தனை களையும் சீர்தூக்கிப் பார்த்து, யாவரும் ஒப்புக்கொள்ளத்தக்க கருத்துகளையே தொகை வகைப்படுத்தி, கால வரன்முறையில் நிரல்பட இந்தப்பண்பாட்டு வரலாற்றை எழுத முயன்றுள்ளேன்.

இந்த 'நாகரிகப் பண்பாட்டு வரலாற்றைத்' தற்சார்பற்ற முறையில் பகுப்பாய்வும் தொகுப்பாய்வும் அடிப்படையாக அமைய வரலாற்று ஆய்வியல் கண்ணோட்டத்தில் தெளிவுறுத்த முயன்றுள்ளேன். அண்மைக் கால அமெரிக்க ஆராய்ச்சி யாளர்கள், 'புதுமையாகக் கூறவேண்டும்' எனும் நோக்கில், மரபு வழிவந்த பல வரலாற்று உண்மைகளை மறைத்தும் குறைத்தும் சிதைத்தும், புதியன புகுத்தியும் தென்கிழக்கு ஆசிய நாடுகளின் வரலாற்றை எழுதியுள்ளனர். அவற்றின் 'குணம் நாடி குற்றமும்நாடி மிகைநாடி' ஏற்றுக்கொள்ளத்தக்கனவற்றை நன்றியுணர்வோடு எடுத்துக் காட்டியுள்ளேன். அவர்களுடைய சிந்தனைப்போக்கில் வெளிப்படும் குறைபாடுகளையும் தேவைப் படும் இடங்களில் சுட்டியும் உள்ளேன்.

தென்கிழக்கு ஆசிய நாடுகளை, 'தமிழ்ப் பண்பாட்டின் அடிமை நாடுகளாகக் காட்ட வேண்டும்' என்பது இந்த ஆய்வாளரின் நோக்கமன்று. எத்துணை அளவிற்குத் தமிழருடைய பண்பாட்டின் தாக்கம் அந்நாடுகளில் வேரூன்றி யுள்ளது என்பதனை அகழ்ந்து எடுத்து புறத்தே புலப்படுமாறு செய்யும் பணியே இந்நூலில் மேற்கொள்ளப்பட்டுளளது.

இந்த நூலினை முற்றிலும் கூர்ந்து நோக்குவாருக்குத் தமிழகத்திலிருந்து பண்டைக் காலத்தில் மூவகைத தமிழ்ப் பண்பாட்டு அலைகள் அந்நாடுகளில் சென்று வீசியுள்ளமை எளிதில் புலனாகும். அவை (1) சங்க காலத்தமிழ்ப் பண்பாட்டு அலை (2) பல்லவர் காலத் தமிழ்ப்பண்பாட்டு அலை (3)சோழப் பெருவேந்தர் காலத் தமிழ்ப் பண்பாட்டு அலை என்பனவாகும். இவற்றை அந்நாடுகளில் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ள தொல் பொருள் சின்னங்களாலும், கல்வெட்டுகளாலும், சீன நாட்டின் காலவழிச் செய்திக்கோவைகளாலும் நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

'காலனி ஆதிக்க'த்திற்கு முற்பட்ட நிலையிலேயே (இஸ்லாமியர் ஆட்சிக் காலத்தில்) தமிழகத்திற்கும் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் சிலவற்றிற்கும் நேரடியான வாணிகத் தொடர்பும் மணவுறவு வழிபட்ட பண்பாட்டுத் தொடர்பும் இருந்ததை யாரும புறக்கணிக்க இயலாது.

ஐரோப்பிய ஆட்சிக்காலத்தில் தென்னகத்திலிருந்து அந்நாடு களில் சென்று குடியேறிய தமிழ் மக்களின் வழித்தோன்றல்கள், தங்கள் முன்னோரின் வழிவந்த தமிழ்ப்பண்பாட்டை இன்றும் மொழித்துறையிலும் சமயத்துறையிலும் போற்றி வருவதை யாரும் குறைத்து மதிப்பிட இயலாது. இந்த நூலில் கடந்த நானூறு ஆண்டுக் காலத்தில் அந்த நாடுகளில், தமிழ் மக்கள் சென்று குடியேறிய வரலாறும் தங்கள் கடுமையான உழைப்பால் அந்நாடுகளைச் செல்வம் கொழிக்கும் சீமைகளாக அவர்கள் மாற்றிய செய்திகளும் தக்க ஆதாரங்களோடு எடுத்துரைக்கப் பட்டுள்ளன. மற்றும், இன்று அந்நாடுகளில் வாழும் தமிழ் மக்களுடைய நிலைமைகளையும் எதிர்காலத்தில் தமிழர் களுடைய வாழ்வும் செல்வாக்கும் எந்நிலையை அடையக்கூடும் என்பதைப் பற்றிய கருத்தோட்டத்தையும் இந்நூலாசிரியர் ஆங்காங்கே சுட்டிக்காட்டியுள்ளார்.

அந்நாடுகளின் வரலாற்றைக் காலவரன்முறைப்படுத்திக் கூறுவதைப் பின்புலமாகக் கொண்டு அந்நாடுகளில் உண்டான தமிழ்ப்பண்பாட்டின் தாக்கம் இந்நூலில் மதிப்பீடு செய்யப் பட்டுள்ளது. அந்நாடுகளின் அரசியல்வரலாற்றின் பின்னணியைத் தெரிந்து கொண்டால்தான் தமிழ்ப் பண்பாட்டுப் பரவுதலின் நோக்கையும் போக்கையும் எளிதில் புரிந்துகொள்ள இயலும் எனும் கருத்தினாலேயே, அந்நாடுகளின் அரசியல் வரலாறு இந்நூலில் ஒவ்வோர் இயலிலும் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன. இதனால், இரண்டொரு செய்திகள் 'கூறியது கூறலாகத்' தோன்றக்கூடும்.

தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப்பண்பாட்டின் தாக் கத்தைப் பிழிந்து எடுத்தால்,

(1) பாண்டிய, பல்லவ, சோழ அரசர் குடி மரபுகளில் அரசியல் உறவு,

(2) கடல் வாணிகத் தொடர்பு

(3) சமயத்துறையில் சிவலிங்க வழிபாடு, நடராசர் வழிபாடு, காரைக்கால் அம்மையார் வழிபாடு, அகத்தியர் வழிபாடு முதலியன.

(4) பாவை நோன்பும் விழாவும்

(5) குடும்ப வாழ்க்கையில் இடம்பெறும் திருமணச் சடங்குகள், மகப்பேறு சடங்குகள், ஈமச்சடங்குகள் முதலியவற்றுள் தமிழ்ப்பண்பாட்டின் தாக்கம்.

(6) கலைத்துறையில் தமிழகக் கோயிற்கட்டடக்கலையின் செல்வாக்கு

(7) தமிழகச் சிற்பக் கலையின் பாதிப்பு

(8) கம்பராமாயணத்தின் தாக்கம்.

(9) தென்கிழக்கு ஆசிய மொழிகளில் இடம் பெற்றுள்ள தமிழ்ச் சொற்கள்.

(10) பல்லவ கிரந்த எழுத்து தென்கிழக்கு ஆசிய நாடுகளின் பல்வேறு தொழில்களுக்கு அடிப்படை எழுத்து வடிவமாக அமைந்தமை.

என்பன முதன்மைக் கூறுகளாகக் காட்சி அளிக்கும். வருங் காலத்தில் நடைபெறக்கூடிய ஆராய்ச்சிகளால் மேலும் பல புதிய உண்மைகள் புலனாகக் கூடும் எனும் நம்பிக்கை இவ்வாசிரியனுக்கு என்றும் உண்டு.

இந்நூலினை அழகுற அச்சிட்டு உதவிய ஜெயஸ்ரீ அச்சகத்தார்க்கு இந்நூலாசிரியரின் நன்றி உரித்தாகும்.

இந்நூல் செம்மையாக வெளிவருவதற்கு, என்னிடம் டாக்டர் பட்டத்திற்காக ஆய்வு செய்யும் மாணவர் இருவரும் முழுப்பொறுப்பேற்றுள்ளனர். இந்நூல் அச்சாகுங்கால், அச்சுப் படிவத்திருத்தம் முதல்பல்வேறு பொறுப்புகளையும் ஏற்று உதவி புரிந்த செல்வன் மு. அ. மாணிக்கவேலு, எம். ஏ., எம்.ஃபில் அவர்கட்கும், பொருட்குறிப்பு அகராதியினைத் தயாரித்துக் கொடுத்த செல்வி. பி. வெ. சுசீலா, எம். ஏ., எம்.ஃபில் அவர்கட்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலின் இறுதியில் ''அரசர்களின் கால வரன் முறைகளும் சிறப்புமிகு நிகழ்ச்சிகளும்'' எனும் அட்டவணையும் விளக்கப் படங்களும் நாட்டுப்படங்களும் இயன்றவரையில் சேர்க்கப் பட்டுள்ளன. இவை வாசகர்களுக்குப் பேருதவியாக அமையும் என நம்புகின்றேன்.

அறிஞர்களின் 'நெடுநாளையக் கனவினை' இச்சிறுநூல் ஓரளவிற்காகிலும் நினைவாக்குமென நினைக்கிறேன். இதனை விரிவுப்படுத்தி, தெளிவுறுத்த முயலும் ஆர்வம்கொண்ட இந்த ஆசிரியனுக்கு, 'தமிழ்கூறும் நல்லுலகம்' தங்கள் ஆதரவினை அளிக்குமாறு அன்புடன் வேண்டுகின்றேன்.

சென்னை,
திருவள்ளுவராண்டு 2018,
மார்கழி, 15. (30-12-87)

க.த. திருநாவுக்கரசு

# உள்ளுறை

# 1. 1.

# நாட்டு அமைப்பு

ஆசியப் பெருநிலப்பரப்பின் தென்கிழக்கே உள்ள நாடுகளை, ஒட்டுமொத்தமாகக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்படும் பெயரே, 'தென்கிழக்கு ஆசியா' என்பதாகும்..

## பெயர் வழக்கு

ஐரோப்பியர்கள் கீழைநாடுகளில், குடியேற்றங்களை அமைத்த காலத்தில் (பதினாறு, பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில்), இந்தியாவிற்குக் கிழக்கே உள்ள நாடுகளை, 'இந்தியாவிற்கு அப்பாலுள்ள நிலப்பரப்பு' (Further India) என்னும் பெயராலேயே, அந்நாடுகளைச் சுட்டினர்.

பதினெட்டாம் நூற்றாண்டினை யொட்டி, கான்ஸ்டாண்டிநோபிலுக்கு அருகிலுள்ள நாடுகளை 'அணிமைக்கிழக்கு (Near East) நாடுகள்' என்றும் அவற்றுக்கு அப்பால் இந்தியா வரையிலுள்ள நாடுகளை, 'மையக்கிழக்கு (Middle East) நாடுகள்' எனவும், இந்தியாவிற்குக் கிழக்கே உள்ள நாடுகளைத் 'தொலைக்கிழக்கு (Far East) நாடுகள்' அல்லது 'தூரக் கிழக்கு நாடுகள்' எனவும் ஐரோப்பிய வரலாற்று ஆசிரியர்கள் சுட்டினர்.

சென்ற நூற்றாண்டின் இறுதியில், தென்கிழக்கு ஆசிய நாடுகளில், இந்தியப் பண்பாட்டின் தடையங்கள் காணப் படுவதைக் கருத்தில் கொண்டு, நெதர்லாந்து நாட்டு அறிஞர்கள், அவற்றை 'இந்தியக் குடியேற்றங்கள்' (Indian Colonies) என்னும் பெயரால், குறிப்பிடலாயினர்.

இந்நூற்றாண்டின் முதல் இருபதுகளில், பேராசிரியர் டாக்டர் ஆர். சி. மஜூம்தார் [R. C. Majumdar] அவர்களால், 'பரந்த இந்தியா' (Greater India) என்னும் பெயரால், 'இந்திய நாகரிகம் பரவியுள்ள பரந்து பட்ட பகுதி', எனும் பொருளில், அந்நாடுகள் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டன.

காலப் போக்கில், இப்பெயரே, பெருவழக்குடையதாக மாறியது. ஆனால், இரண்டாவது உலகப்போரின் பொழுது வல்லரசுகள், பசிபிக் மாக்கடலில் பர்மாவிற்கும் பிலிப்பைன் சுக்கும் இடையில், ஒரு படைத்தளம் அமைத்துக் கொண்டன. அப்படைத்தளப்பகுதியைத் 'தென்கிழக்கு ஆசியப் போர்முனை' (South East Asian Front) என்னும் பெயரால் அவர்கள் குறிப்பிட்டனர். இரண்டாவது உலகப்போர் முடிவுற்ற பிறகு (1945), இப்பகுதியைத் 'தென்கிழக்கு ஆசியா' எனும் பெயரால் சுட்டும் பழக்கம் பெருகியது.

மற்றும், இதைத்தொடர்ந்து அந்நாடுகள் அரசியல் விழிப் புணர்ச்சி பெற்று, விடுதலைக்குப் போராடத் தொடங்கின பொழுது, 'இந்தியாவிற்கு என்றுமே தங்கள் நாடுகள், அரசியல் அடிமையாக இருந்ததில்லை' என்று அவை அறிவித்தன. எனவே, 'இந்தியக் (காலனிகள்) குடியேற்ற நாடுகள்' எனும் பெயரையும் 'பரந்த இந்தியா' (Greater India) எனும் பெயரையும் அவை வெறுத்தன.[1] இதன் விளைவாகத் 'தென்கிழக்கு ஆசிய நாடுகள்' எனும் பெயரே, பெருவழக்கிற்கு வந்தது.

'தென்கிழக்கு ஆசியநாடுகள்' எனும் பெயர், பண்பாட்டு அடிப்படையிலோ, இனமொழிகளின் அடிப்படையிலோ அமைந் தது அன்று. 'இப்பெயர் ஓரளவிற்கு நிலவியல் சார்புடைது.[2] பசிபிக் மாக்கடலில் உள்ள பிலிப்பைன்சு, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகள் நீங்கலாக உள்ள தீவுகளையும், தீபகற்பங் களையும், குறிப்பதற்கு ஒரு 'வசதியான' பெயராக இது

---

1. F. B. Burton, South. East Asia, PP. 4-8.
2. H. H. E. Loofs, Main-land South - East A sia, Pp. 6- 10,

கொள்ளப்பட்டது. 'தென்கிழக்கு ஆசியநாடுகள்' எனும் பெயர், நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

## நாடுகள்

''தென்கிழக்கு ஆசியா' எனும் பொதுப் பெயரால் சுட்டப்படும் நாடுகள் யாவை?' என்பதனை, அடுத்து அறிய முயலுவோம்.

இந்தியாவிற்குக் கிழக்கே பர்மாவும், மலாயாவும் உள்ளன. பர்மாவிற்குக் கிழக்கே உள்ள 'நிலப்பரப்பை இந்தோ-சீனா' எனச் சுட்டுவது பழைய வழக்கு. இப்பகுதியில் தான், தாய்லாந்து (சையாம்), காம்பூச்சியா (கம்போடியா, காம்போஜம்), லாவோஸ், வடக்கு வியட்னாம், தெற்கு வியட்னாம் (அன்னாம்-சம்பா) எனும் நாடுகள் உள்ளன. இவற்றைத் தென்கிழக்கு ஆசியாவின் 'முதன்மை நிலப்பகுதி' எனும் பெயராலும் குறிப்பிடுவர். இவற்றைப் பண்டை இந்திய நூல்கள் 'தீபாந்தர பாரதம்' எனும் பெயரால் சுட்டின. இதைப் போன்றே, பர்மாவையும் மலாயாவையும் சேர்த்து, 'சுவர்ண தீபம்' எனவும் அந்நூல்கள் குறிப்பிட்டன. ஜாவாவை, 'யவத்தீபம்' என்றும் அந்தச் சம்ஸ்கிருத நூல்கள் சுட்டுகின்றன. இதனால், பண்டைக் காலத்திலேயே, நாவலந் தீவைச் சேர்ந்த பாரத நாட்டு மக்களுக்கு, இன்றைய தென்கிழக்கு ஆசிய நாடுகள் பல, நன்கு தெரிந்து இருந்தன என்பது புலனாகிறது.

இந்நாடுகளின் எல்லைகள், பத்தொன்பதாம் நூற்றாண்டில், ஐரோப்பியர்கள் அவற்றை ஆட்சி செய்த பொழுது உண்டானவை. இவற்றுள் 'தாய்லாந்து' எனப்படும் சையாம், ஐரோப்பியர்களின் ஆதிக்கத்திற்கு அடிமையாகாது, தனியுரிமை நாடாகவே இருந்துவருகிறது. மற்ற நாடுகள் எல்லாம், இந்தியா சுதந்திரம் அடைந்தபிறகு, விடுதலை பெற்ற தனியுரிமை நாடுகளாயின.

ஜாவா, சுமத்திரா, போர்னியோ, செலிபசு, பாலி, சுந்தா போன்ற தீவுகள் அடங்கிய பகுதியைத் தென்கிழக்கு ஆசியாவின் 'தீவுப்பகுதிகள்' எனும் பெயரால் குறிப்பிடுவதும் உண்டு. இந்தியாவோடு, இத்தென்கிழக்கு ஆசிய நாடுகளையும், இலங்கையையும் சேர்த்து 'பருவ மழை (மான் சூன்) ஆசியா' எனும் பெயரால், அறிஞர் எ. எல். பாஷாம் (A L. Basham) குறிப்பிடுவார்.

இந்நாடுகளில் எல்லாம், நெற்பயிரிடுதலே முதன்மையான தொழிலாக இருந்துவருகிறது. அரிசியே, முதன்மையான உணவுப் பொருளாகும்.

இந்தியாவில் கிடைக்காத கனிமப் பொருள்கள் பல. இந்நாடுகளில் கிடைக்கின்றன. பர்மா, மண்ணெண்ணெய், கல்யெண்ணெய் (Petrol) உற்பத்திக்குப் பேர்போன நாடாகும்.

## குடியேற்றம்

உலக உருண்டையில், இப்பகுதி, மிகவும் தொன்மை வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. தொல்பழங்காலம் முதற் கொண்டு, மனிதன் இங்குத் தொடர்ந்து வாழ்ந்து வருவதாகத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். கி. மு. 1500 அளவில், இந்நாடுகளில் புதிய கற்கால நாகரிகம் தழைத் தோங்கியது. அதன்பிறகு, பல புதிய இனமக்கள், இந்நாடுகளில் குடியேறினர். அவர்கள் தொன்மைக் குடிகளோடு பெரிதும் இரண்டறக் கலந்துவிட்டனர்.

## மொழி

இந்த மக்கள் பேசியமொழி, பாலினீசிய- மலாய் மொழி. வடக்குப் பகுதிகளில் மங்கோலிய மொழியின் தாக்கம் அதிகம். தீவுப்பகுதியில், வேறு பலமொழிகளும் பழைய மொழியுடன் கலந்துவிட்டன. இதனால், இங்கு வாழும் மக்கள் பேசும்மொழி, நாட்டிற்கு நாடு, வேறுபட்டுக் காணப்படுகிறது. எனினும், அம்மொழிகள் யாவும், ஒரே மூலமொழியில் இருந்து, பிறந்தன வேயாகும்.

## நிலவியல் அமைப்பு

இந்தியாவினை மேற்கு எல்லையாகவும், ஜப்பானைக்கிழக்கு எல்லையாகவும், சீனாவை வடக்கு எல்லையாகவும், ஆஸ்திரேலி யாவைத் தெற்கு எல்லையாகவும் தென்கிழக்கு ஆசியா கொண் டுள்ளது. எனினும், இக்காலத்து அறிஞர்கள் பர்மாவைத் தென் கிழக்கு ஆசிய நாடுகளுள் ஒன்றாகக் கருதுவதில்லை. இத்தென் கிழக்கு ஆசியாவை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரித்துக்கூறும் மரபு ஒன்று வளர்ந்து வருகிறது. முதலாவதுபகுதி கிரா தீபகற்பம் வரையிலுள்ள முதன்மையான நிலப்பகுதியாகும். இப்பகுதியில் தாய்லாந்து, காம்பூச்சியா, லாவோஸ், வியட்நாம் ஆகிய நாடுகள் அடங்கும். மற்றொரு பகுதியில், மலேசிய உலகம் அமைந் திருக்கிறது. மலாயா தீபகற்பமும், இந்தோனேசிய, பிலிப்பைன்சு தீவுகளின் மாபெரும் பிறை வளைவும், சிங்கப்பூர் நகரமும், போர்னியோ தீவும் சேர்ந்தது இப்பகுதியாகும். இவை அனைத்தையும் ஒன்றாகச் சேர்த்துத்தான் 'தென்கிழக்கு ஆசியா' என்னும் பெயரால், அவற்றை நாம் சுட்டுகிறோம்.

மேற்கண்ட பகுதிகளின் தனிப்பட்ட தற்பண்பு வாய்ந்த நாகரிகங்களும், பண்பாடுகளும் வளர்ந்து, சிறந்திருக்கின்றன. அவ்விரு பகுதிகளுக்கும் பொதுவாகச் சில பண்புகள் உள்ளன. அவை, அவற்றை ஒன்றாக இணைத்து, ஒரு வடிவத்தைப் பெறுமாறு செய்துள்ளன. அந்நாடுகள் அனைத்தும் தீபகற்பங்களாகவோ, தீவுகளாகவோ உள்ளமை அவற்றிடையே காணப்பெறும் முதன்மையான பொதுமைப் பண்பாகும். இதனால், கடலக வாழ்வில், இயல்பாகவே அந்நாடுகள் ஆர்வமும், ஈடுபாடும் கொண்டுள்ளன. தங்களுடைய தற்காப்பிற்கு, அவை கடற்படையை நம்பி வாழ்கின்றன. சமயத்துறையில் ஓர் ஒற்றுமை இயல்பு அந்நாடுகளிடையே நின்றுநிலவி வருகிறது. பெரும்பாலான நாடுகளுள், பௌத்த சமயமே செல்வாக்குற்றிருந்தது; இன்றும் இருந்து வருகிறது. இதனால், அம்மக்களிடையே ஒருவகை ஒருமைப் பாட்டுணர்வு அறிந்தோ, அறியாமலோ நெடுங்காலமாக இழையோடிச் செல்லுகிறது.

இந்நாடுகளுக்கு வடக்கே உள்ள சீனாவும், மேற்கேயுள்ள இந்தியாவும் வரலாற்றுக் காலம் நெடுக, நாகரித்தின் ஒளிச்சுடரைத் தந்துதவியுள்ளன. பண்டைக் காலத்தில், இந்தியாவின் செல்வாக்கு முதன்மையானதாகும். இடைக் காலத்தில் சீனாவின் செல்வாக்குப் பேரளவினதாகும். இன்றும் குறிப்பிடத்தக்க அளவிற்குச் சீனாவின் பண்பாட்டுத் தாக்கம் இருந்து வருகிறது. இந்தியா, சீனா ஆகிய நாடுகளின் நாகரிகப் பரவுதலால், பையப்பைய தென்கிழக்கு ஆசியாவில் ஒருவகைக் 'கலவை நாகரிகம்' உருவாயிற்று. இவ்வகையில் இந்தியாவிற்கும் சீனாவிற்கும் தென்கிழக்கு ஆசியநாடுகள் கடமைப் பட்டனவாக இன்றும் இருந்துவருவதை, எளிதில் யாரும் புறக்கணித்துவிட முடியாது.

## பிணைப்பிற்குரிய காரணங்கள்

தென்கிழக்கு ஆசிய நாடுகளைத் தனிப்பட்ட பண்புகளின் ஒருமைப்பாடுடைய ஒரு பகுதியாகக் கருதுவதற்குரிய காரணங்கள் பல. அவற்றை நிலவியல், பண்பாடு, வரலாறு ஆகிய மூவகைத் துறைகளைச் சார்ந்தனவாக நாம் வகைப் படுத்தலாம். தென்கிழக்கு ஆசியப் பகுதி, அக்கம்பக்கத்திலுள்ள நாடுகளிலிருந்து அகன்ற கடல்களாலும், மலைகளாலும் அல்லது காடுகளாலும் வேறுபடுத்தப்பட்டுள்ளன. பெரிதும் அவை அனைத்தும் வெப்ப மண்டலத்தைச் சேர்ந்த நாடுகளாக

உள்ளன, இப்பகுதியில் வாழும் மக்கள் முதன்மையான உணவுப் பொருளாக அரிசியை நம்பி வாழ்கின்றனர். இதைப் போன்றே, வாழ்க்கைத்துறையிலும் பெரிதும் ஒப்புமை இருந்து வருகிறது. மேற்கு இரியன் (முந்நாளைய நெதர்லாந்தின் நியூகினியா) தென்கிழக்கு ஆசியாவின் கிழக்கு எல்லையாகும். அரசியல் அடிப்படையில், அது இப்பொழுது இந்தோனேசியா வின் ஒரு பகுதியாக இருந்துவருகிறது. எனினும், நிலவியல் அடிப்படையில் அது, பெரிதும் ஆஸ்திரேலியாவோடு நெருங்கிய தொடர்புடையது. ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களோடு இதனுடைய மக்கள், இனத்தொடர்பு கொண்டவர்களாக இருக்கின்றனர். அதனுடைய பறவைகள், விலங்குகள், செடிகொடிகள் போன்றவை எல்லாம், ஆஸ்திரேலிய நாட்டின் மாவடை, மரவடைகளோடு நெருங்கிய தொடர்பு உடையனவாகும்.

## இனக்கலப்பு

தென்கிழக்கு ஆசியாவில், பலவகையான மக்களின மரபுகள் உள்ளன. எனினும், பெரும்பாலான மக்களிடத்து இனமரபின் பொதுமைப் பண்பு முனைப்பாக இருந்துவருகிறது. மலாயாவில் நீக்கிரோ இனத்தவரின் முதாதையரைப் போன்ற பழங்குடி மக்கள், பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட அளவில் வாழ்ந்துவருகின்றனர். இப்பழங்குடிமக்களே, தென்கிழக்கு ஆசிய மக்களின் இனமரபிலிருந்து பெரிதும் வேறுபடுகின்றனர். ஆனால், இனப்பன்மையைக் காட்டிலும், அவர்களிடையே பண்பாட்டு ஒப்புமைப் பண்புகள் ஆற்றலுடையனவாக அமைந்துள்ளன.

உலகியல் சார்பான செயல்முறைகளிலும், தொழில் முறைகளிலும் அவர்களிடையே நெருங்கிய பிணைப்பும் இணைப்பும் காணப்படுகின்றன. நீர்ப்பாசன முறைகள், நெல்லைப்பயிரிடுதல், எருது-எருமைகள் போன்ற விலங்குகளைப் பழக்கப்படுத்துதல், உலோகங்களை அடிப்படைத் தேவை களுக்குப் பயன்படுத்துதல், கடலக வாழ்வில் திறமையுற்று விளங்குதல் போன்ற தொழில்களில் பொதுமைப் பண்புகள் மிகுதியாக உள்ளன. பெண்களுக்கு முதன்மை அளித்தல், தாய் வழியில் கால்வழியினர் சிறத்தல், நீர்ப்பாசனப் பயிர்த்தொழிலின் அடிப்படையில் மலர்ச்சியுற்ற வேளாண்மை (மருதநில) நாகரிகம் போன்ற சமூகவியல் துறைகளில், நெருக்கமான தொடர்புகள் இருந்துவருகின்றன, சமயத்துறையில் ஆவி வழிபாடு மூதாதையர் வழிபாடு, நிலத்திற்குரிய நிலத்தெய்வ வழிபாடு இறந்தோரைத் தாழிகளில் இட்டுப் பிணக்குழிகளில் புதைத்தல்,

மலைக்கும் கடலுக்கும் எதிரான புராணக் கதைகள், சிறகுகளைக் கொண்ட உயிரினங்களுக்கு எதிராக நீர்வாழ் உயிரினங்கள், மலைவாழ் மக்களுக்கு எதிராகக் கடற்கரையில் வாழ் மக்கள் முதலியவற்றைப்பற்றிய புராணக்கதைகள் போன்றவை தென்கிழக்கு ஆசிய நாடுகள் முழுவதிலும் ஆழவேருன்றியுள்ளன. வயாங்கு (wayang) என்ற பொம்மலாட்ட நாடகம், கமேலான் (Gamelan) என்ற இசைக்கருவிகள், ஆடைகளிலும் துணிகளிலும் வண்ணக்கலவை பூசி, அழகுபடுத்தும் 'பதிக்' போன்ற கலைத் துறைக்குரிய பண்புகள் இந்நாடுகள் அனைத்திற்கும் பொதுப் படையானவை. இவை யாவற்றையும்விட, தென்கிழக்கு ஆசியா முழுவதிலும், பெண்கள் உயர்ந்த நிலையில், சிறப்புடன் வாழ்ந்து வருவது இந்நாடுகளுக்குரியதனிச்சிறப்புவாய்ந்த பண்புகளாகும்.

## பழங்குடி மக்கள்

வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட தொல்பழங் காலத் திலேயே, தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பழங்குடி மக்களின் அலைவுகளும், இடப்பெயர்ச்சிகளும் ஓய்ந்துவிட்டன. இந்திய, சீனப் பண்பாடுகளின் தாக்குதல்கள் உண்டாவதற்கு முன்பே, அந்நாடுகளில் பழங்குடிமக்கள் நிலையாக ஓரிடத்தில் வாழத் தொடங்கிவிட்டனர். எனினும், சீனாவின் நாகரிகமும், ஆதிக்கமும் யாங்டிசி ஆற்றிலிருந்து தெற்கே பரவத் தொடங்கிய பொழுது, அப்பகுதியில் நிலைத்து வாழ்ந்த பழங்குடிகள் சிலர், கூட்டம் கூட்டமாக இடம் பெயர்ந் துள்ளனர். தங்களுடைய தனித்தன்மையைப் போற்றிக் காத்துக் கொள்ளவே, அவர்கள் இவ்வாறு இடம் பெயர்ந்து சென்றனர். அதன் விளைவாகக் கடந்த ஈராயிரம் ஆண்டுகளுள் உள்நாட்டுக் குடியேற்றங்களும் இடப்பெயர்வுகளும், கால இடையீடுகளுக்கு இடையே, தொடர்ந்து நடைபெறலாயின.

# 1. 2

# இன மரபுகள்

## தொல் பொருள் சின்னங்கள்

வரலாற்று நூலின் தொடக்கத்திற்கு முற்பட்ட காலத்தில், பல்வேறு இனங்களைச் சார்ந்த மக்கள் பலர், தென்கிழக்கு ஆசியாவின் தொல்பழங்குடிகளாய் வாழ்ந்து வந்தனர். அங்கு மனித இனம் கூர்தல் அறநெறிப்படி, பையப் பைய வளர்ந்து, சிறந்ததை அறிவிக்கும் தொல் பொருள் சின்னங்கள், பரவலாகக் கிடைத்துள்ளன. தொல் பழங்கால மக்கள் பயன்படுத்திய கருவிகள், வாழ்விடங்கள், எலும்புக்கூடுகள் போன்றவை அகழ் வாராய்ச்சிகளில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. தொல்பொருள் ஆராய்ச்சியாளர் கண்டெடுத்துள்ள பழம் பொருட் சின்னங் களோடு, ஆதிமனிதனின் எச்சமிச்சங்களைத் தொடர்பு படுத்தி ஆராய்கின்ற பொழுது, பல அரிய உண்மைகள் புலனா கின்றன.

மனித இனம் தோன்றி, வளர்ந்த முக்கியமான ஒரு கால கட்டத்தை, தென் கிழக்கு ஆசியாவில் கிடைத்துள்ள எலும்புக் கூடுகள் எடுத்தியம்புகின்றன. மத்திய ஜாவாவில், சோலே ஆற்றங் கரையில் உள்ள திரினில் (Trinil) என்ற ஊரில், 1891ல் மனிதனு டைய தொடக்ககால அமைப்பையுடைய மண்டை ஓடு ஒன்று கிடைத்திருக்கிறது. அது ஆந்திராபாய்டு குரங்குக்கும் மனிதனுக் கும் இடைப்பட்ட நீளமான ஓமினிட் வகையைச் சேர்ந்த

மண்டை ஓடாகும். மனித இனவரலாற்றில், முதன் முதலாக அறியப்படுகின்ற இந்த மனிதனைப் பொதுவாக 'ஜாவா மனிதன்' என்று மானிட இயல் நூலார் குறிப்பிட்டுள்ளனர்.

இவ்வாதி மனிதனை 'பிதிகாந்தரோபஸ்',(Pithecanthropus) என்ற பெயரால் குறிப்பிடுவதும் உண்டு. கிரேக்க மொழியில் 'பிதிக்கோஸ்' என்னும் சொல்லிற்கு 'வாலில்லாக் குரங்கு' என்பது பொருள்; 'ஆந்தரோபஸ்' என்னும் சொல்லிற்கு மனிதன் என்பது பொருள். எனவே, நாம் குரங்கு மனிதன் என்று ஜாவாமனிதனைக் குறிப்பிடலாம்.

பின்னர், இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில், பல்வேறு மண்டை ஓடுகள் ஜாவாவில் கிடைத்துள்ளன. அவற்றுள் சில நீளமாயும் பருமனாகவும் உள்ளன. இவற்றிலிருந்து, குரங்கிலிருந்து, மனித இனம் படிப்படியாகத் திருத்தமும் செம மையும் பெற்ற உடலுறுப்புகளோடு ஜாவாவில் வளர்ச்சி யுற்றதை நாம் அறிய இயலுகிறது.

வெப்ப மண்டலத்துக்குட்பட்ட கிழக்கு ஆசியாவில், பிளீஸ் டோசீனிக்கு மண்ணியல் அமைப்புக் காலத்தில், மனித இனத் தின் ஒருவகை வடிவம், மனிதக்குரங்கிற்கும் முற்பட்ட ஒருவகை நிலையிலிருந்து மாறியும், திருந்தியும், பையப் பைய வளர்ச்சி யுற்றதை நாம் காணுகின்றோம். இவ்வகையில், மனித இனத் தின் தொட்டிலாக ஜாவா விளங்கியது எனலாம். தொல்பழங் காலத்தின் ஒரு பகுதியில், இத்தகைய மனிதர்கள் ஜாவாவிலி ருந்து, தென் கிழக்கு ஆசியா முழுவதிலும் குடியேறியதோடு, சீனாவிலும் நுழைந்திருக்கலாம் என்று எண்ணுவதற்குரிய வகை யில் தொல்பொருள் சின்னங்கள், அந்நாடுகளில் பரவலாகக் கிடைத்துள்ளன. சீனாவில் கிடைத்துள்ள பீகிங்கு (பெய்திங்) மனிதனின் மண்டை ஓடு, ஜாவா யனிதனுடைய மண்டை ஓட்டைக் காட்டிலும் வளர்ச்சியுற்றிருப்பதோடு, செப்பமுற்றும் காணப் பெறுகிறது. இந்தோசீனாவின் வட பகுதியில் சினாந்த ரோபஸ் (Sinanthropus) எனப்படும் மனிதக் குரங்கின் பற்கள் பல கிடைத்துள்ளன. இதனால், ஜாவாவிலிருந்து மனித இனத் தின் முதாதையர், காலப்போக்கில் வடக்கு நோக்கிச் சென்றி ருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

உலகின் வேறு சில பகுதிகளில் கிடைத்துள்ள, மனித இனத் தின் கூர்தலறச் சின்னங்களின் காலத்தைக்காட்டிலும் ஜாவா மனிதன், பீகிங்கு மனிதன் என்ற மனித இனத்தின் முதாதையர் வடிவங்கள், காலத்தால், பன்னெடுங் காலம் முந்திய நிலையைச்

சேர்ந்தனவாகும். இரண்டு வடிவங்களுமே இரண்டு கால்களை யும் ஊன்றிச் செங்குத்தாக நிற்கும் நிலையை அடைந்தவையாக இருக்கலாம். மனித இன வளர்ச்சியில், உண்மையான தொடக்க நிலையினை இவ்விரு மனித மூதாதையர் வடிவங்கள் தோற்று வித்திருக்கலாம். அக்காலத்திலிருந்தே மனிதன், தன் கைகளை யும் தோள்களையும் பயன்படுத்தி, கற்கருவிகளைச் செய்யக் கற்றான்; ஓவியங்களை வரைந்து பழகினான். இவற்றின் மூலம், மனித மூளையின் வளர்ச்சிக்கு, அவன் வழி கோலினான். அது முதல், தன்னைச் சூழ்ந்துள்ள புற உலகினை அடக்கியாளக் கற்றான். தான் செய்யக் கற்ற கருவிகளை மாற்றியும் திருத்தி யும் செப்பம் செய்வதன் மூலம், சிந்தனைத் திறனைப் பையப் பைய வளர்த்துக் கொள்ளும் வாய்ப்பையும், வசதியையும் அவன் பெற்றான். ஜாவா, மலாயா, பர்மா, வடசீனா போன்ற நாடுகளில் பழைய கற்கருவிக்கால அல்லது புதுக்கற் கருவிக்கால வெட்டுக் கருவிகளும், அறுக்கும் கருவிகளும் கற்களினால் செய் யப்பெற்றுள்ளதைத் தொல்பொருள் சின்னங்கள் சிலவற்றால் நாம் அறிகிறோம். அதே சமயத்தில், மரத்தால் செய்யப் பெற்ற கருவிகள் சில மலாயா, பர்மா போன்ற நாடுகளில் மட்டும் அருகிய வழக்காகக் கண்டெடுக்கப் பெற்றுள்ளன. இத்தகைய கருவிகளைக் கொண்டு அவன் மரத்தினாலும், எலும்பினாலும் செய்யப் பெறும் கருவிகளைச் செப்பம் செய்துகொண்டான்.

பல ஆயிரக்கணக்கான ஆண்டுகள் குரங்கு மனிதர்களும், அவர்களுடைய வழித் தோன்றல்களாகிய மனிதக் குரங்குகளும் தென்கிழக்கு ஆசியாவின் காடுகளில் அலைந்து திரிந்தன. ஆறு களையொட்டியும், கடற்கரையோரங்களிலும் அவர்கள் சுற்றித்திரிந்தனர்; வேட்டையாடுதல், பழங்களைப் பறித்தல் போன்ற செயல்களில் ஈடுபட்டு வாழ்ந்தனர். குகைகளிலும் மரப் பொந்துகளிலும் வாழ்ந்து வந்தனர். இன்றைய மனித னின் நேர்முக மூதாதையின் மண்டை ஓடுகளும், அவற்றின் துண்டுகளும், மத்திய ஜாவாவில் கண்டெடுக்கப் பெற்றுள்ளன. இவை மனித இன வளர்ச்சியின், மற்றொரு காலகட்டத்தை நமக்கு நினைவூட்டுகின்றன. நகான்டாங்கு என்னும் இடத்தில் சோலோ ஆற்றுப் படுகையில் இச்சின்னங்கள் அகழ்ந்தெடுக்கப் பெற்றுள்ளன. இதனால், அம்மனிதனை ''சோலோ மனிதன்'' என்று மானிடவியல் நூலார் சுட்டுகின்றனர். அவனுடைய மண்டைஓடும் மூளைப் பெட்டியும் 'பிதகாந்தரோபஸ்' மனித னுடையவற்றைக் காட்டிலும், பெரிதாகவுள்ளன. ஆனால், மற்ற வகையில் அவனோடு மிகுதியான ஒப்புமை உடையதாகவும் சோலோ மனிதன் விளங்குகிறான். எனவே, அவன் இன்னும்

ஹோமோ சேபியன்ஸ் எனப்படும் மனிதனாக மாறவில்லை என்பது தெரிகிறது. தென் கிழக்கு ஆசியாவில் 'ஹோமோ சேபிய' மனிதனின் மிகப்பழைய வடிவத்திற்கு 'வட்ஜாக்ட்' மனிதன்'' என்பதுபெயர். அம்மனிதனின் எச்சமிச்சங்களும் ஜாவாவின் தென் கடற்கரைப் பகுதிச்கு அருகில் கிடைத்துள் ளன. இத்தகைய மனிதனின் மண்டை ஓடு, பன்னீராயிரம ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று அறிஞர் கணக்கிட்டுள்ளனர்.

''ஹோமோ சேபியன்ஸ்'' இறுதியாக வடிவெடுத்த நாள் முதல், ஆயிரம் ஆண்டுக் காலம் வரையில் ஆசியக் கண்டத்தின் மூலப்பகுதியிலிருந்து, பலவகை மனித இனவடிவ அமைப்புடை யோர் தொடர்ந்து தென்கிழக்கு ஆசியாவிற்கு நில வழியாகவும் நீர் வழியாகவும் வந்து கொண்டு இருந்தனர். தென்கிழக்கு ஆசிய வரலாற்றில் 'தெற்கிற்கு விரட்டப்படுதல்' அடிக்கடி நிகழ்ந்து வந்த நிகழ்ச்சியாகும். இவ்வாறு வரலாற்று நூலின் காலத்திற்கு முன்னர், தென் கிழக்கு ஆசியாவிற்குள் தொடர்ந்து புகுந்த மனித இனக்குழுக்கள் பல. அவை ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களினமான ஆஸ்டிராலாய்ட்(Austroloids) 'நிக்கிரிட் டோக்கள் (Negritoes)', 'மெலனோய்ட்டுகள் (Melonoids)', இந்தோனேசியர்கள் என்னும் தொல்பழங்குடிகளாகும்.

## மக்கள் இனங்கள்

தென் கிழக்கு ஆசியாவில், முதன் முதல் எங்கும் பரவிய பழங்குடி மக்கள் ஆஸ்டிராலாய்ட் என்போராவர். அவர்களைப் போன்ற 'வெட்டாய்ட்' பழங்குடி மக்களின மரபினரும் ஆவர். ஆஸ்டிரலாய்ட் பழங்குடி மக்களின் அமைப்பு ஆஸ்திரேலி யாவிலும், மலாயா, செனாய். சகாய் குன்றுவாழ் பழங்குடி மக்களினிடையிலும் காணப்பெறுகின்றன. இம்மரபினரிடத்து (பழைய மலாய் மக்கள் குருதி கலவைக் காணப்பட்டபோதிலும்) செலிபசின் சில குழுக்களிடத்தும், சுமத்திராவின் மேற்கடற் கரைக்கு அப்பாலுள்ள எங்கானோ, மென்ட்டவேய் தீவுகளில் வாழும் பழங்குடி மக்களிடத்தும் காணப்படுகிறது. ஸ்ரீலங்காவில் வெட்டாய்ட் (வேடர்) இன மரபு வகையினர் உள்ளனர். தென் னிந்தியாவில் வாழும் மக்களிடத்து 'வெட்டாய்ட்' இனமரபுக் கூறுகள் மிகுதியாகக்கலந்துள்ளன. ஆஸ்டிரலாய்ட்-வெட்டாய்ட் மக்கள் கரிய தோலும், இறங்கிய மூக்கும், சுருளான, ஆனால் கம்பளி போன்றதல்லாத மயிரும் உடையவராவர்.

அடுத்து குறிப்பிடத்தக்க தொன்மைச்சிறப்புடைய பழங்குடி மக்கள் கம்பளிபோன்ற குட்டை மயிரையுடைய நீக்கிரோட்ட

களாவர். அவர்கள் இப்பொழுது மலாயாவில் கெடா, பெராக்குப் பகுதிகளில் வாழும் செமாங்குபழங்குடி மக்களும், கேளாந்தனி (Kelantan)கள் மக்களும், பிலிப்பைன் தீவுகளிலுள்ள ஏயிடர்கள் என்பவருமாவர்.

இவர்களைத் தொடர்ந்து மெலனிசாய்ட் மக்கள் தென்கிழக்கு ஆசியாவிற்கு வந்திருக்கலாம். இவ்வினத்தைச் சேர்ந்த பழங்குடிமக்கள், தென்கிழக்கு ஆசியாவில் காணப் பெறவில்லை. எனினும், பண்டை மெலினிசாய்ட் இன மரபைச் சார்ந்த மக்களுடைய மண்டை ஓடுகள், வட சீனாவிலும், இந்தோசீனாவிலும் அகழ்ந்தெடுக்கப் பெற்றுள் ளன. அவ்வினத்தைச் சார்ந்த மக்கள், இக்காலத்தில் ஆஸ்திரேலியாவுக்கும், நியூகினியாவிற்கும் அருகிலுள்ள பசுபிக்கு தீவுகளில் மிகப் பலராக வாழ்ந்துவருகின்றனர்,

இம்மூவகை இனத்தைச் சேர்ந்த மக்கள், தென்கிழக்கு ஆசியாவின் பழைய கற்கருவிக் காலத்திற்கும் புதியகற்கருவிக் காலத்திற்கும் இடைப்பட்ட மெசொலிதிக் கற்கருவிக்காலத்தில் எங்கும் பரவியிருந்ததாகத் தெரிகிறது. அக்காலத்தில், கற்கருவிகளின் தரத்திலும்,அமைப்பிலும் தொழில் நுட்பத்திலும் மிகுந்த முன்னேற்றம் காணப்படுகின்றது. அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான கற்கருவிகள்,போர்க்கருவிகள்,மற்றும் தட்டுமுட்டுச் சாமான்கள் அக்காலத்தில் திருத்தமாகச் செய்யப்பெற்றிருந்தன. இவையல்லாமல், மீன் பிடிக்கும் தூண்டில், குடையப் பெற்ற சிறுபடகுகள், துடுப்புகள் போன்றவை புதியனவாக அக்கால மக்களால் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளன. மெசொலிதிக் கருவிகளைச் செய்யும் தொழிற்கூடங்கள் இந்தோசீனா, தாய்லாந்து, மலாயா பகுதிகளிலும் சுமத்திரா, முதல் பிலிப் பைன்சு வரையிலுள்ள பெரிய தீவுகளிலும் அகழ்ந்தெடுக்கப் பெற்றுள்ளன. இந்தோசீனாவிலுள்ள தொங்கின் வடபகுதியில் காணப்பெறும் குகைகளில், அரைகுறையாக வழவழப்பாக்கப் பெற்ற உளியைப் போன்ற முனைகளைக் கொண்ட கருவிகள் பல கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இத்தகைய பாணியில் செய்யப் பெற்ற கருவிகளின் தொழில் நுட்பத்தைப் 'பாஸ்கோனியன்' (Basconian) என்று பெயரிட்டு உரைப்பர். இதிலிருந்து சிறிது வேறுபட்ட அமைப்பினையுடைய கற்கருவிகளை, ஹோபாபினியன் (Hoabhinian) என்னும் பெயரால் சுட்டுவர். முதல் வகையைச் சேர்ந்த கற்கருவிகள், தாய்லாந்தில் கிடைத்துள்ளன; மலாயாவிலும் சுமத்திராவிலும் வழவழப்பாக்கப்பட்ட கைக் கோடரிகளும், வாய்ச்சிகளும் கண்டெடுக்கப்பெற்றுள்ளன.

வரலாற்று நூல் காலத்தில், கடைசியாகத் தென்கிழக்கு ஆசியாவினுள் நுழைந்தசிறப்புமிக்கபழங்குடிமக்களினத்தவருக்கு இந்தோனேசிய உடற்கூற்று அமைப்பினர் என்பது பெயராகும். அவர்களை 'ஆஸ்திரோனேசியர்'என்றும் சுட்டுவர். இன்றைய தென்கிழக்குஆசியத் தீவுகளிலும் மலாயாவிலும் உள்ள மக்களுள் அடிப்படையாக உள்ளவர்கள் மேற்கண்ட இந்தோனேசியப் பழங்குடி மக்களின் வழித்தோன்றல்களாவர். தென்சினாவிலும், இந்தோசீனாவிலும் இவ்வினத்தவரே பெரும்பான்மையினராக உள்ளனர். இந்தோனேசிய உடற்கூற்று இனமக்களை நாம் இரு வகையாகப் பாகுபடுத்தலாம். மலாய்களுக்கு முற்பட்ட பழமையுடையவர், மலாய் என்னும் இருவகையினராவர் மலாய்க்கு முற்பட்ட பழமையுடைய இனமக்களிடத்து மங்கோலியக்கலப்பு மிகத் தெளிவாகத் தோன்றுகிறது. தென்கிழக்கு ஆசியாவின் இந்தோனேசிய உடற்கூற்று மக்கள் இனத்தவருள், இவ்வகையினரே முதல் அடிப்படைத் தளத்தை அமைத்தவர்களாக இருக்கலாம். இவ்வினத்தவர், பெரிதும் தென்கிழக்கு ஆசியாவின் முதன்மைப் பகுதியிலே பரவியுள்ளனர். எனினும், அவ்வினத்தவர் சுமத்திராவில் படகர்களாகவும், நியாஸின் தீவுப்பழங்குடிகளாகவும், செலிபசின் தோரஜர்கள், போர்னியோவின் டயக்குகள் போன்றவர்கள் எல்லாரும் மலாய் மக்களுக்கு முற்பட்ட பழமையுடையவராவர். மலாய்களை கடற்ரைரயோர மலாய்கள் எனறும் கூறுவர். அவர்கள மிகுந்த கலவை இனத்தவராவர். ஜாவனியர். சூடானியர் தீபகற்ப மலாய்கள், சுமத்திராவின் கடற்கரையோர மலாய்கள், மதுரீசியர்கள், பாலினீசியர்கள் ஆகிய எல்லாரும் இந்த உடற்கூற்று இனத்தைச் சேர்ந்தவர்களாகவே கருதப்படுகின்றனர். உண்மையில், இவ்வினத்தவரே தென்கிழக்கு ஆசியாவில் உள்ள இயல்பான, மலாய் உடற்கூற்று அமைப்புடைய மக்களினத்தவராவர்.

## கருவிகள்

தென்கிழக்கு ஆசியாவில் இந்தோனேசியர் வந்தேறியபிறகே, அங்குப் புதியகற்கருவிக் காலம் தொடங்கியதாகத் தெரிகிறது. அக்காலத்தில் பலதிறப்பட்ட கற்கருவிகள் பயன்படுத்தப் பெற்றன. அவையாவும், தொழில்நுட்பத்திறன் மிக்கனவாகவும் வழவழப்பாகவும் செய்யப் பெற்றிருந்தன. ஆனால், அக்கால மக்கள் உலோகங்களைப் பயன்படுத்துவதை அறிந்தவர்கள் அல்லர். மலாயா தீபகற்பத்திலும், ஜாவா, சுமத்திரா தீவுகளிலும் காணப்படும் சிறப்புமிக்க புதுச்கற்காலக் கருவி நாற்கோண வடிவில் செய்யப்பெற்ற வாய்ச்சிகளாகும். இவை மிகவும்

கடினமான கற்களால் செய்யப் பெற்றன; குறுக்கு வெட்டில் சதுரமாகவோ. நாற்கோண வடிவமாகவோ செய்யப் பெற்றிருந்தன; தேய்த்தும், செதுக்கியும் வழவழப்பாக மெருகிடப் பெற்றும் இருந்தன. ஒருமுனை வாய்ச்சி அல்லது உளியைப் போன்று கூர்மையாக்கப்பட்டிருந்தது. இக்கருவிகள் மரங்களைச் செதுக்கித் தங்களுக்கேற்ற வகையில் அமைத்துக் கொள்ள, அப்பழங்குடிமக்கள் பயன்படுத்தி இருக்கலாம். சிறியகருவிகள் செதுக்குவேலை செய்வதற்கும், பெரிய கருவிகள், படகுகள் கட்டுவதற்கும், வீடுகள் கட்டுவதற்கும் பயன்படுத்தப் பெற்றிருக்கலாம். ஜாவாவில் முழுமையாகச் செய்யப் பெற்ற வாய்ச்சிகளும அரைகுறையாகச் செய்யப்பெற்ற வாய்ச்சிகளும் பேரளவில் கிடைத்துள்ளன. அங்குப் பிற்பகுதிகளுக்குத் தேவைப்படும் கருவிகளையும் செய்துவழங்கிய தொழில்நிலையம் ஒனறு இருந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

## தொன்மைப் பண்பாடு

உணவைச் சமைப்பதற்கும், உணவுப்பொருள்களைச் சேமித்து வைப்பதற்கும் ஆதிமனிதன், மட்பாண்டங்களைச் செய்யக் கற்றான். இந்தோனேசிய உடற்கூற்று இனமக்கள் ஒரு சிறிது கலையுணர்வுமிக்க களிமண் பாண்டங்கள் பலவற்றைச் செய்துள்ளனர். எடுத்துக்காட்டாக மலாய் மக்கள் செய்த புதுக்கற்கருவிக் கால மட்பாண்டங்களை நாம் குறிப்பிடலாம். அவை முரட்டுத்தனமான வேலைப்பாடு உடையன. எனினும் கற்பனைசெய்து காணஇயலாதவகையில் அம்மண்பாண்டங்கள் அலங்கரிக்கப் பெற்றுள்ளன என்றும் கூறுவர். பல்வேறு வடிவஅமைப்புகளிலும் அலங்கார முறைகளிலும் உண்மையான கலையுணர்வு பொங்கி வழிகின்றது.

## பண்பாட்டு வளர்ச்சி

மனித இனம் முதன்முதல் கண்ட 'தொழிற்புரட்சி' புதிய கற்கருவிக்கால நாகரிகத்தின் பொழுது நடைபெற்றதாகும். உலக வரலாற்றின் ஏடுகளைப் புரட்டினால், நாம் இந்த உண்மையினை உணரலாம். ஆனால், அதுபல்வேறு காலங்களில், பல்வேறு நாடுகளில் நடைபெற்றது என்பதைஅறிகிறோம். புதிய கற்கருவி நாகரிகக் காலத்தில்தான், மனிதன்உணவைத் தேடுவதையும் உணவுப்பொருள்களுக்காக வேட்டையாடுவதையும் கைவிட்டு, உணவுப்பொருள்களைப் பயிரிடக் கற்றான். அதன் மூலம் புதிய வாழ்க்கை முறைகளை அவன் அறிந்தான். அவற்றால் நாகரிக வளர்ச்சியுமுற்றான். உழவுத் தொழிலோடு வரலாறு

குகிறது. அதனுடன் தொழில் நுட்பங்களும் வாழ்க்கை முறைகளும் இணைந்தும், வளர்ந்தும், சிறந்தும் உள்ளன. உணவுப் பொருள்களைப் பயிரிடுவது, விலங்குகளைப் பழக்குவது, மண்பாண்டங்கள் செய்வது ஆகிய மூன்றும் புதியகற்கருவிக் காலத்தில் சமூகப் பொருளாதாரத் துறைகளில் சாதிக்கப்பெற்ற மாபெரும் சாதனை களாகும்.

இக்காலத்திலும் இந்தோனேசிய மக்கள், தங்களுக்குத் தேவையான உணவுப்பொருளை ஓரளவிற்கு வேட்டையாடுதல், மீன்பிடித்தல் மூலமும் பெற்றனர்; பேரளவிற்கு உழவுத்தொழில் செய்து அவர்கள் உணவுப் பொருள்களை விளைவித்தனர். அவர்கள் மாற்றுப்பயிர் முறையின் மூலம், நெல்லையும் சோளத்தையும் பயிரிட்டு வந்தனர். ஒவ்வோராண்டும், தற்காலிகமாகப் பயிரிடும் இடத்தைவிட்டு, மற்றொரு வயலில் பயிரிடும் இடமாற்றுப்பயிர் முறையினாலும் அல்லது நிலையான நீர்ப்பாசன வசதியைக் கொண்ட வயல்களிலும் பயிரிட்டுவந்தனர். முந்தையதற்கு 'லடாங்கு' முறை என்றும், அடுத்ததற்குச் 'சவாக்கு' முறை என்றும் பெயர். இத்தானியங்களை அவர்கள் உணவுப் பொருள்களாகப் பயன்படுத்தியதோடு,ஒருவகை இனிய மதுவை அவற்றிலிருந்து செய்யவும் கற்றனர். மூங்கில்களை அல்லது மரக்கட்டைகளை அடுக்கி, மரவீடுகள் கட்டிக்கொண்டு அவர்கள் வாழ்ந்தனர். அவர்கள் எருதுகளையும் பன்றிகளையும் நன்கு பழக்கியிருந்தனர். மரப்பட்டைகளிலிருந்து அவர்கள் துணிகளைச் செய்துகொண்டனர். அவர்கள் எல்லா இயற்கைப் பொருள்களிலும் உயிராற்றல் அல்லது ஆன்மிகச் சக்தி ஒன்று இருப்பதாக நம்பினர். சிறப்பாக உணவுப் பயிர்களில் அது நிலை பெற்றிருப்பதாக அவர்கள் கருதினர். அதையே தெய்வமாக வழிபட்டனர். அவர்களை ஆவிவழிபாட்டுக் கொள்கையினர் என்று நாம் கூறலாம். நெல்விளையும் வயல்களின் உயிர்ச் சக்தியை அவர்கள், ஒருவகைப் பெண் தெய்வமாக உருவகப்படுத்தி வழிபட்டனர். அத்தெய்வத்தை 'நெல் தாய்' என்று போற்றினர். இத்தெய்வ வழிபாட்டை ஒட்டிச் சிக்கலான பல சடங்குகள் தோன்றின. விதிகளும், விலக்குகளும் இவ்வழிபாட்டு முறையில் மிகக் கடுமையான முறையில் கடைப்பிடிக்கப் பெற்றன.

நிலையான சமூகவாழ்கைக்கு வேளாண்மைத் தொழில் அடிகோலியது. அதனால் சமுதாய நடைமுறைகளும், பழக்க வழக்கங்களும் நன்கு வளர்ச்சியுற்றன. உழவர் சமூகத்தைக் கொண்ட கிராம வாழ்க்கை முறை உருவாகியதோடு, அதுவே சமூதாயத்தின் அடிப்படை அமைப்பாகவும் நிலவத் தொடங்கிற்று. ஆண்மதகுரு அல்லது பெண்மதகுரு தலைமைத்

தாங்கி, அதனை நெறிப்படுத்திவந்தனர். அம்மதகுரு மரபுவழிவந்த சமய, சமூகப் பழக்கவழக்கங்களைக் காக்குப் காவலராகக் கருதப்பட்டார். தனிமனிதன், சமூகம் ஆகியவற்றிற்குரிய கடமைகளும், உரிமைகளும் உழவுத் தொழில்சார்ந்த சடங்குகளும், சமூகச் சிறப்புரிமைகளும், தண்டனைகளும், வாய்மொழியாக ஒருதலைமுறையினரிட மிருந்து, மற்றொரு தலைமுறையினருக்கு வழங்கப்பட்டு வந்தன.

ஆதிகால இந்தோனேசிய சமூக வாழ்க்கையின் சிறப்புமிக்க ஓர் இயல்பு, பெருங்கற்படைப் பண்பாட்டால் தெரியவருகிறது அப்பெருங்கற்படை சமாதிகள் செங்குத்தான நடுகற்கள், (menhirs), தரைமட்டத்தில் கிடத்தப்பெற்ற கற்பலகைக் கட்டுமானமும் (Dolmens), கல்லினால் அமைக்கப்பெற்ற நாற் பட்டைக் கூர்க்கோபுரம் (Stone Pyramids), படிமேடைத் தளங்கள் என்று பலவகைப்படும். இவையாவும் மூதாதையர் வழிபாட்டோடும், பலியீட்டு வழிபாட்டு முறைகளோடும் தொடர்புடையனவாக இருந்திருக்க வேண்டும். அவற்றுள் சிலவற்றின்மீது மாயவித்தைக்குரிய சின்னங்கள் செதுக்கப் பெற்றுள்ளன. அவை வட்ட வடிவமாகவும், வனமல்லிகை போன்ற வடிவமாகவும் உள்ளன. இந்த பெருங்கற்படைப் பண் பாடு சுமித்திராவின் மேற்குக் கரைக்கு அப்பாலுள்ள நையாய் தீவுகளில் இன்றும் நின்று நிலவி வருகிறது. மேலும் புளோரஸ் சும்பா தீவுகளிலும் காணப்படுகிறது. இன்றும் ஜாவா, சுமித்திரா, பாலி முதலியவற்றின் சிலபகுதிகளில் இப்பெருங்கற் படை சமாதி கற்சமயச் சடங்குகளுக்குரிய நிலைக்களன் களாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

புதிய கற்கருவிக் காலம் என்பது, தென்கிழக்கு ஆசியாவில் ஏறக்குறைய கி. மு. 1500 முதல் கி.மு. 300 வரை நிலவியது எனலாம். அன்றாடப்பழக்கத்திற்கும் கலைப்பண்பைப் புலப் படுத்துவதற்கும் உலோகங்களினால் செய்யப்பட்ட கருவிகள் கி. மு. 300 அளவிலேயே வழக்கத்திற்கு வந்தன. எனினும், அவற்றோடு நன்கு மெருகிடப் பெற்ற வழவழப்பான கற்கருவி களும் புழக்கத்தில் இருந்து வந்தன. பையப் பைய உலோகக் கருவிக்கால நாகரிகம் ஆதிக்கம் பெறலாயிற்று. சீனாவிலிருந்தே தென்கிழக்கு ஆசியாவிற்கு வெண்கலக் கருவி நாகரிகமும், இரும்புக் கருவி நாகரிகமும் பரவிற்று. இதை 'டாங்கு சான் (Dong son)' என்ற பெயரால் அழைப்பர். அன்னாமிலுள்ள ஊர் ஒன்றில் வெண்கலக் கருவித் தொழிற் சாலை அகழ்ந்தெடுக்கப்

பெற்றது. டாங்குசான் பாணியின் தொடக்க நிலை முறை கி.மு. மூன்று அல்லது நான்காம் நூற்றாண்டில், மத்திய சீனாவில் சிறப்புற்று விளங்கிய நாகரிகத்தோடு நெருங்கிய தொடர்புடைய தாகும். இவ்வாறு வெண்கலத்தைப் பயன்படுத்தும் வழி முறைகள் தென்கிழக்கு ஆசிய மக்களுக்குத் தெரியவந்தன. 'டாங்கு சான்' பண்பாட்டின் தலைமைக் கூறாகப் போற்றப் பெறுவது பெரிய வெண்கல முரசுகளாகும். அம்முரசுகளை பல் வகை மனிதர், விலங்குகளின் வடிவங்களைக் கொண்டு அலங் கரித்துள்ளனர். அல்லது அலங்கரிப்பு அழகு முறைகளைக் கையாண்டுள்ளனர்.

இரும்பு மிகப் பிற்பட்ட காலத்தில்—டாங்குசான் பண் பாட்டின் கடைப்பகுதியிலேயே— பயன்படுத்தப் பெற்றதாகத் தெரிகிறது. ஆனால், நாடெங்கும் பரவலாகவும் பேரளவிலும் பயன்படுத்தப் பெற்றது, வெண்கலக் கருவிகளேயாகும். இந்திய வாணிகம் தென்கிழக்கு ஆசியாவில் பரவிய பின்னரும், இந்திய வாணிகக் குடியிருப்புகள் நாடெங்கும் அமைக்கப்பட்ட பிறகுமே இரும்புக் கருவிகள் பழக்கத்திற்கு வந்தன. இந்த டாங்குசான் பண்பாட்டுக் காலத்தில் 'தாழிப்புதையல்' முறையும் புதிதாகப் புகுத்தப் பெற்றமை தெரிகிறது.

## பெருங்கற்படைப் பண்பாடு

இந்த உலோக காலப் பண்பாட்டோடு தொடர்புடைய (கி.மு. மூன்றாம் நூற்றாண்டு முதல்) புதிய பெருங்கற்படைப் பண்பாடு ஒன்று வளர்ச்சியுற்றது. அதனுடைய தலைமைக் கூறாகச் சிற்பங்கள் விளங்கின. வட்டவடிவமான சிற்பங்களும், புடைப்புச் சிற்பங்களும் இப்பண்பாட்டின் கவர்ச்சிமிகு படைப் புகளாகும். தென் சுமத்திராவில், பசுமாக் மேட்டு நிலங்களில் காணப்படும் வீரரின் சிற்பங்கள் வட்டச் சிற்பங்களுக்குச் சிறந்த எடுத்துக் காட்டுகளாகும். இச்சிற்பங்களோடு, சிறிய அளவில் கட்டப்பெற்ற அமைப்புகளைக் காட்டிலும் வடிவாலும், அமைப் பாலும் நேர்த்தியுடையன.

இரட்டைத் திருகு சுருள்கள், தொடுகோடுகளால் இணைக் கப்பட்ட வட்டங்கள், இடையிடையே பூவேலைப்பாட்டோடு கூடிய கரைகட்டப்பெற்ற அலையலையான கோடுகள் இப்புதிய பெருங்கற்படைக் கருவிகளில் பொறிக்கப் பெற்றுள்ளன. அவை எளிமையோடு பொலிவுறும் பழைய பெருங்கற்படைக் கருவி களின் அமைப்புமுறையிலும் அலங்கரிப்பு முறையிலிருந்து வேறு பட்டவை; சிக்கலானவை; ஏரும் எழிலும் வாய்ந்தவை. இத் தகைய பண்டைக்கால டாங்கு-சான் அலங்கரிப்பு முறைகள்

மரபு வழியாக இன்றும் பல பழங்குடி மக்களிடத்துப் பயின்று வழங்குகின்றன. குறிப்பாகத் தென் சீனாவில் வாழும் சில மக்களிடத்தும் படக்குகள் (Bataks), டயக்குகள் (Dayaks). மலாய்ப்பழங்குடி மக்கள் கூட்டங்கள் சிலவற்றினிடத்தும் இவ் வலங்கரிப்பு முறை இன்றும் நின்று நிலவி, வருகிறது.

சுமத்திராவில் டாங்கு-சான் பண்பாட்டுக் காரித்திற்குரிய கல்லறை அமைப்புகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன அவற்றின் உட் சுவர்களில் ஓவியங்கள் வரையப் பெற்றுள்ளதைக் காண லாம். மலாயா தீபகற்பத்திலும், மற்றும் உள்ள தீவுக்குழுக்கள் பலவற்றுள்ளும் இத்தகைய கல்லறைகள் பல அகழ்ந்தெடுக்கப் பட்டுள்ளன. அவற்றுள், கண்ணாடி மணிகளும் மங்கிய சிவப்பு நிறமுள்ள நேர்த்தியான மணிகளும் கிடைத்துள்ளன. சில மணிகள் அவ்வவ்வட்டாரங்களிலும், பெரும்பாலான மணிகள் நடுநிலக் கடற்பகுதியிலும் செய்யப்பெற்றனவாகத் தோன்று கின்றன. தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கும் ஐரோப்பாவிற்கும், இந்தியாவிற்கும் இடையே வாணிகத் தொடர்பு இருந்தமைக்கு இம்மணிகள் சான்று பகருகின்றன.

தென் கிழக்கு ஆசியாவில், படிப்படியாக மலர்ச்சியுற்ற புதிய கற்கருவிக் கால நாகரிகம், தொடக்க காலப் பெருங்கற் படைப் பண்பாடு, டாங்கு சான் பண்பாடு, பிற்காலப் பெருங் கற்படை ஆகிய அனைத்தும் மக்களினப் பெருக்கத்திற்குப் பேருதவி புரிந்தன. இதனால், பல்வகைப் பண்பாடுகள் தொடர்பு கொள்ளுவதற்குரிய நிலைக்களனாகத் தென்கிழக்கு ஆசியா விளங்கலாயிற்று.

## தமிழகத் தொல் பழங்காலப் பண்பாடு

இதுவரையில் நாம் கண்ட, தென்கிழக்கு ஆசிய நாடுகளின் தொல் பழங்கால வரலாற்றுச் செய்திகளும், கூறுகளும், நம் தமிழகத்தின் தொன்மைக்கால வரலாற்லோடு நெருக்கமான ஒப்புமை உடையனவாக உள்ளன.

தென்னிந்தியப் பழங்குடி மக்களுள், ஆஸ்டிரோலாயிட்ஸ், நீக்கிட்டோ இனக்கலப்பு உள்ளதை, இன்றைய ஆதிதிரா விடர்களின் உடற்கூற்றையும், பழங்குடி மக்களின் இனக் கூற்றையும் ஆராய்ந்த ஹட்டன், பி. எஸ். குகா போன்ற இனமரபியல் ஆராய்ச்சியாளர் தெளிவுறுத்தியுள்ளனர்.[3]

---

3. J. H Hutton, Caste in India Pp. 48-50
B. S. Guha The Census of India, 1931 Pt 3 Pp. 27-30

புதுக்கற்கருவிக்காலம் பண்பாட்டு தடையங்கள் தமிழ் நாட்டில் காணப் பெறுவதைப் போன்றே, தென் கிழக்கு ஆசிய நாடுகளிலும் கிடைத்துள்ளன. வாழ்க்கை முறையும் ஏறக்குறைய ஒன்றாகவே தோன்றுகின்றது.

புதுக்கற்கருவிக்காலப் பண்பாட்டிற்குப் பிறகு, இந்தியாவில், தமிழ் நாட்டிலேயே 'மெசொலிதிக் எனப்படும் நுண்ணிய கற்கருவிப் பண்பாடு தோன்றியது.

இப்பண்பாடு, தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் சிறப்புற்று விளங்கியது. இவ்விரு காலகட்டங்களிலும், தமிழகத்திலும், தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும், தொல்காப்பியனார் சித்திரித்துள்ள 'நானிலப்' பண்பாடே, வீறுடன் விளங்கியதைக் காணுகின்றோம்.

இதையொட்டி பெருங்கல் பண்பாடு (Megalithic) இவ்விரு நாடுகளிலும் அரும்பியுள்ளமை இங்குக் கருதத் தக்கது. பெருங்கற்படைப் பண்பாட்டின் தலைமைச் சின்னமான 'தாழிப்புதையல்' தமிழ் நாட்டின் தனிப் பெருஞ்சிறப்பாகும். இந்த முறை எங்கிருந்தோ கொண்டுவந்து தென்கிழக்கு ஆசிய நாடுகளில் புகுத்தப்பட்டதாக அந்நாடுகளில் தொல்பொருள் ஆய்வாளர் கருதுகின்றனர். அங்கு, இரும்புக் கருவிப்பண்பாடு, கி. மு. மூன்றாம் நூற்றாண்டை ஒட்டித்தான் தோன்றியதாகத் தெரிகிறது மற்றும், அக்கால வாழ்க்கை முறை, பழக்க வழக்கங்கள் போன்றவை தமிழ் நாட்டோடு நெருக்கமான ஒப்புமை உடையனவாக உள்ளன. இவற்றைக் கூர்ந்து நோக்கும்போது, கி. மு. ஆயிரம் அளவிலேயே, தமிழ்நாட்டு மக்கள் திரைகடல் ஓடியும் திரவியம் தேட முயன்று இருக்க வேண்டும் என்பது புலனாகிறது. அக்காலத்தில், தென்கிழக்கு ஆசிய நாடுகளில், தமிழகத்தின் நாகரிக ஒளியை, அந்நாடுகளுக்குத் தமிழக வணிகர்கள் கொண்டு சென்று இருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

வடக்கில் சீனாவும், மேற்கில் இந்தியாவும் உள்ளமையால், தென்கிழக்கு ஆசியப் பகுதிக்கு இவ்விருநாடுகளின் தொடர்பும் எளிதில் அமைந்தது. இதன் விளைவாக, அந்நாட்டு மக்கள், நாகரிகத்தில் முன்னேற்றம் அடைய் வாய்ப்புக் கிடைத்தது. எழுத்து, கலை, அரசு, சமயம் முதலியவற்றை நம் நாட்டு மக்களின் தொடர்பால், அவர்கள் கற்றுக் கொண்டனர். வடக்குப் பகுதியில் மட்டும் சீனப்பண்பாடு ஊடுருவிக் கொண்டு இருந்தது.

## வாணிகரின்குடியேற்றங்கள்

தமிழ் நாட்டு வாணிகர்கள், வாணிகத்தின் பொருட்டு, கிறிஸ்துவ நூற்றாண்டின் தொடக்கத்திற்கு முன்பே, தென் கிழக்கு ஆசியாவின் பல இடங்களில் குடியேறி இருந்தனர். தொடக்கத்தில், அக்குடியேற்றங்கள் சிறியனவாக இருந்தன. எனினும், நாளடைவில் அவை வளர்ந்து, பெருகின. குடியேறி களான தமிழர்கள், அந்நாட்டுப் பழங்குடி மக்களோடு நல்லுறவு கொண்டனர். வாணிகத்தில் நேர்மையுடன் நடந்து கொண்ட னர். செல்வத்தைச் சேர்த்தனர்; கோயில்களைக் கட்டினர்; தமிழருடைய எளிய வாழ்க்கையும், நற்பண்புகளும், தெய்வப் பற்றும், இனிய நட்புறவும் பழங்குடி மக்களின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்து இருக்க வேண்டும். மேலும், அங்குக் குடியேறிய மக்கள் அந்த நாட்டுப் பெண்களை மணந்து, அவர்களுடன் கலந்து போய் விட்டார்கள். தொடக்கத்தில் இம்முறையிலேயே தமிழ்ப்பண்பாடு, தென்கிழக்கு ஆசிய மக்கள் இடையே, பரவி இருத்தல் வேண்டும்.

மற்றும், தமிழக அரசர்கள் (இராசேந்திர சோழன் நீங்கலாக) யாரும், படையெடுத்துச் சென்று, தென்கிழக்கு ஆசிய மக்களின் மீது அதிகாரம் செலுத்தவில்லை. பல்லவர் களின் கிளைக் குடியினர், காம்பூச்சியாவில் குடியேறிய பிறகே, தமக்கென்று ஓர் இராச்சியத்தை அங்கு அமைத்துக் கொண்ட னர். மற்றக் குடியேறிகள், எல்லாம் வாணிகர்களாகவும் சமயச் சான்றோர்களாகவும் இருந்தனர்.

கல்வி கற்றோர்களும், சான்றோர்களும், உயர்நிலையில் இருந்தவர்களும், செல்வர்களும் சமயப்பற்று மிகுந்தவர்களு மாக அங்கு வாழ்ந்தனர். இவர்களுடைய நல் வாழ்க்கை முறை களைக் கண்டும், அறிந்தும், அனுபவித்தும் வந்த அந்த நாட்டுத் தலைவர்களும், மேட்டுக் குடி மக்களும் தமிழ்நாட்டுக் குடியேறி களைப் போலவே, தங்களுடைய வாழ்க்கையை அமைத்துக் கொண்டு இருக்க வேண்டும். இதைக் கண்ட அந்நாடுகளின் பிற மக்களும், தங்கள் நாட்டுத் தலைவர்களையும், மேட்டுக் குடி மக்களையும் பின்பற்றித், தங்கள் வாழ்க்கை முறைகளை, அவர் களுடைய பாணியில் அமைத்துக் கொண்டு இருக்க வேண்டும். இம்முறையில், தமிழ்ப் பண்பாடும், சமயமும், எழுத்தும் பல தலைமுறைகளாக அச்சமுதாய வாழ்க்கையில், ஊடுருவிப்பரவி இருத்தல் வேண்டும்.

இவ்வாறு பண்பாட்டுக் கொப்பரையில் உருக்கி உருவாக்கப் பட்டதமிழ்ப் பண்பாடும், இந்திய நாகரிகமும் அந்த நாடுகளில் அரசுகளின் எழுச்சிக்கு உந்துதல் சக்திகளாக அமைந்தன.

## அரசுகளின் தோற்றம்

இவ்வாறு, தமிழக இந்தியப் பண்பாடுகளில் மூழ்கித் திளைத்த அந்நாடுகளின் மேட்டுக் குடி மக்களே, ஆங்காங்கு சிறு சிறு அரசுகளை அமைத்துக் கொண்டு, ஆட்சிபுரியத் தொடங்கினர். அவர்கள் கடல் வாணிகத்தைப் போற்றி ஆதரித்தனர். மேலும், சைவ, வைணவ, பௌத்த சமயங் களுக்கும், அவர்கள் ஆதரவு அளித்து இருக்க வேண்டும்.

கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டில், தென் கிழக்கு ஆசிய நாடுகளில், இவ்வாறு, பல சிற்றரசுகள் தோன்றி இருந்தன.

இவை, ஆற்றல் மிக்க தலைவர்களை அரசர்களாகப் பெற்ற பொழுது, 'பேரரசினை' நிறுவ முயன்றன. இதனால் உள்நாட்டுப் போர்கள் நடைபெறலாயின. அந்நிலையில் அவ்வரசுகளுள் சில, சீனாவின் உதவியை நாடின. இவ்வாறு தென்கிழக்கு ஆசிய அரசுகள், சீனாவின் மேலாண்மையை ஏற்கும் நிலை உண்டாயிற்று.

வரலாற்று நூலின் தொடக்கத்திற்கு முற்பட்ட காலத்தில் தமிழகத்திற்கும் தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கும் இடையே நிலவியப் பண்பாட்டுத் தொடர்பைத் தனிநிலையில் ஆராய வேண்டும். அப்பொழுது பல உண்மைகள் புலப்படலாம். இந்த நூலில், வரலாற்று நூலின் தொடக்க காலம் முதல் நிலவி வரும் பண்பாட்டுத் தொடர்புகளையே, சுட்டிக் காட்டும் முயற்சி மேற் கொள்ளப்பட்டுள்ளது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

# 2. 1.

# நாடும் மக்களினமும்

தென்கிழக்கு ஆசியாவில், இந்தியாவை ஒட்டியுள்ள சுதந்திரக் குடியாட்சி நாடு பர்மா, 1962 முதல் இராணுவ ஆட்சிக்குட்பட்ட நாடாக, இது இருந்து வருகிறது. வடக்கே இந்தியாவும், சீனாவும் இதற்கு எல்லைகளாக உள்ளன. கிழக்கே தாய்லாந்தும், லாவோசும், சீனாவும் உள்ளன; தென்மேற்குப் பகுதியில் அந்தமான் கடல் இருக்கிறது. மேற்குப் பகுதியில் இந்தியாவும், வங்காள தேசமும், வங்காள விரிகுடாவும் எல்லைகளாக உள்ளன.

பர்மாவின் நிலப்பரப்பு 6780. 34 சதுர கி. மீட்டராக விரிந்து கிடக்கிறது. மேற்கும், தென்மேற்குமாக அதனுடைய கடற்கரை 1900 கி. மீ. நீண்ட நெடுங்கரையாக உள்ளதைக் காணுகின்றோம். இந்தியாவோடு மிக நெருக்கமான தொடர்புடையதாகப் பர்மா காணப்படுகிறது. எனினும், நிலவியல் அடிப்படையில், அது தனித்ததோர் அமைப்பினை உடையதாகவே இருந்துவருகிறது. அதனுடைய அரசியல் வரலாறும், பண்டைக் காலம் முதல் தனித்தன்மையுடையதாகவே திகழ்கிறது. எனினும், இந்தியா, சீனாவெனும் இரு பெரும் நாடுகளுக்கு இடையே இருந்து வருவதால், இந்நாட்டில் இருவகைப் பண்பாடுகளின் தாக்கத்தைக் காணுகின்றோம்.

## பெயர் விளக்கம்

'பிரமதேசம்' எனும் பெயராலேயே, பண்டைக் கால இந்திய மக்கள், பர்மாவை அறிந்திருந்தனர். இதனால், 'பர்மா' எனும் பெயர் பற்றிய சுவையான சொல்லாராய்ச்சிகள் நடைபெற்றுள்ளன. 'பிரமனுடை நாடு' எனும் பொருளில், 'பர்மா' எனும் பெயர், அந்நாட்டிற்கு இடப்பட்டு இருக்க வேண்டும் என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். புராணங்களில் சிறப்பித்துப் பேசப்படுகின்ற 'நரகாசுரன்' (தீபாவளிப் பண்டிகையின் கதாநாயகன்) இந்தப் பகுதியைச் சேர்ந்தவனாக இருத்தல் கூடும் என்று பண்டைப் புராணங்களும் பல்வேறு தேசங்களும் பற்றி ஆராய்ச்சி செய்துள்ள அறிஞர்கள் கூறுகின்றனர். 'நரத்து' எனும் பெயருடைய அரசர்கள் பர்மாவினை ஆண்டுள்ளனர்.

இந்த அடிப்படையில் 'பிரம தேசம்' எனும் சம்ஸ்கிருதச் சொல்லில் ஆங்கில மொழிபெயர்ப்பில் இருந்து, சிதைந்து திரிந்த வடிவமே, பர்மா எனும் பெயராக இருத்தல் கூடும் என்பது மொழியியல் அறிஞரின் துணிவாகும்.

இந்நாட்டில், மிராம்மா, (Mramma) எனப்படும் பழங்குடி மக்கள், தொல்பழங்காலம் முதல் வாழ்ந்து வருவதால், அவர்கள் நாட்டை, 'மிரம்மா நாடு' என்று அயல்நாட்டு மக்கள் சுட்டியிருக்கலாம்; நாளடைவில் மகரம் திரிந்து, பகரமாக மாறி, அப்பெயர் பர்மா எனத் திரிந்து இருக்கலாம் என்பது சில வரலாற்று ஆசிரியர்களின் நம்பிக்கையாகும்.

இக்கால ஆராய்ச்சியாளர்கள், 'பர்மா' என்னும் சொல். 'பிரமா' என்னும் சொல்லடியாகப் பிறந்தது என்று சொல்வது பொருத்தமற்றது என்பர். பர்மிய மொழியின் பழைய சொல் 'மியான்மா' (Myanma) என்பதாகும். அச்சொல்லிற்கு 'மனிதன்' என்பது பொருள். அச்சொல்லின் திரிபே, 'பர்மா' என்னும் பெயராகும். பர்மியர்கள், தங்களைப் 'பாமா' என்னும்பெயரால் குறிப்பிடுகின்றனர். அச்சொல், 'பர்மா' என்னும் சொல்லின் பர்மிய வடிவாகும். ஏனெனில், பர்மிய மொழியின் எழுத்துகளில் 'ர' (R) ஒலியோ, வடிவமோ கிடையாது. எனவே, 'பர்மா' எனும் சொல், 'பாமா' என்ற பர்மிய சொல்லின் ஐரோப்பிய மொழிவடிவமாகும் என்பது அவ்வாராய்ச்சியாளர்கள் தரும் விளக்கமாகும்.[1]

---

1. W. S. Desai, India and Burma, P.3

## பல்வேறு பெயர்கள்

பர்மாவினைச் 'சுவர்ண பூமி' என்று வடமொழிவாணர்கள் குறிப்பிட்டுள்ளனர். தமிழில் 'அருமணதேயம்' என்று பர்மாவைச் சுட்டுவது மரபு. பர்மாவினைப் பொன்விளையும் நாடாகக் குறிப்பிடுவதற்குரிய காரணம் புலனாகவில்லை. பண்டைக் காலத்தில், பர்மாவில் தங்கச் சுரங்கங்கள் இருந் தனவா என்பது உறுதியாகத் தெரியவில்லை. ஆயினும், அத்தீப கற்பத்திற்கு வழங்கிய சமஸ்கிருதப் பெயரினையே, நடுநிலக் கடற்பகுதி நாடுகளைச் சேர்ந்த நிலநூலாசிரியர்களும் ஏற்றுக் கொண்டுள்ளனர். அவர்கள் பர்மாவைக் 'கோல்டன் கிரைசு' (Golden Chryse) என்னும் பெயரால் குறிப்பிட்டுள்ளனர். பாலி மொழி நூல்கள் பர்மாவைச் 'சோனபிரந்தம்' (Sona Brenta) என்னும் பெயரால் சுட்டுகின்றன. 'சோன்' என்பது சொர்ண (பொன்) எனும் வடசொல்லின் திரிபு என்பதும் கருதத்தக்கது.

## பண்டைக்கால எல்லை

பர்மாவின் பண்டைக் காலத்திய எல்லை, இன்று காணப் படுவதைப்போன்று இருக்கவில்லை. அக்காலத்தில் சுவர்ண பூமி என்று குறிப்பிடப்பட்டது இக்காலத்தில் 'பெகூ' (Pegu) என வழங்கப்படும் பிரதேசமாக இருந்திருக்கலாம் என அறிஞர் கள் கருதுகின்றனர்.

## பர்மாவின் இயற்கை அமைப்பும் நகரங்களும்

நில அமைப்பின்படி, பர்மாவை இரு பகுதிகளாகப் பிரிக்க லாம். மேல் பர்மா (Upper Burma), அடர்ந்த காடுகளும், உயர்ந்த மலைகளும், பாய்ந்தோடுகின்ற ஆறுகளும், பள்ளத் தாக்குகளும் கொண்ட பகுதியாகும். கீழ்பர்மா (Lower Burma) வளங்கொழிக்கும் சமவெளிப் பகுதியாகும். ஐராவதி, சார்வில், மற்றும் சிட்டாங் போன்ற ஆறுகள், கீழ்பர்மாவை வளமான பகுதியாகச் செய்துள்ளன. இப்பகுதியிலேயே, நெல் வயல்கள் பரந்து கிடக்கின்றன. நெல் விளைச்சலில் பர்மா, உலகில் முதன்மை இடம் வகிக்கிறது. பர்மாவின் தேக்கு மரங்கள், உலகப் புகழ் பெற்றவை. தகரச் சுரங்கங்களும் பரவலாக அங்கு உள்ளன. நிலக்கரியைத் தவிர, மற்றக்கனி வளங்கள் அனைத்தும் வாய்க்கப் பெற்ற நாடு, பர்மா வாகும்.

பர்மாவின் மேலைப் பகுதியில், பண்டைக் காலத்தில் நாகரிகமற்ற காட்டுவாழ் மக்கள், வாழ்ந்து வந்தனர். அவர்கள்

கெமர் (Khmer) இனத்தைச் சேர்ந்தவராவர். இதனால் பண்டை உலகிற்கு அப்பகுதியைப் பற்றித் தெரிந்து கொள்ள வாய்ப்பில்லை.

## வரலாற்றின் தொடக்கம்

பர்மாவின் பழங்கால வரலாறு, இருள் நிறைந்ததாகக் காணப்படுகிறது. பர்மாவின் உண்மையான வரலாறு கி. பி. பதினோராம் நூற்றாண்டில்தான், தொடங்குகிறது எனக் கூறின், அது தவறாகாது. எனினும், தொல்பொருள் ஆராய்ச்சி யாளர்களால் அகழ்ந்தெடுக்கப்பட்ட பழம்பொருள் சின்னங் களும், பர்மாவில் வழங்கும் பழங்கதைகளும், அதனுடைய பண்டைய வரலாற்றை அறிய ஓரளவிற்குப் பயன்படுகின்றன. அப்பழங்கதைகள் வரலாற்றிற்கு நேரடியாகப் பயன்படாவிட் டாலும், பர்மிய நாகரிகம் இந்தியப்பண்பாட்டில் இருந்து முளைத்து எழுந்ததை உணர்த்துவதற்குப் பெரிதும் அவை உதவியாக இருக்கின்றன. அக்கதைகளால், தொன்றுதொட்டு பர்மாவின் நாகரிகத் தலையூற்றாய், இந்தியா விளங்கி வருவது புலனாகின்றது.

இன்று பர்மா, பௌத்த சமய நாடாக விளங்குகிறது. அந்நாட்டு மக்களுள், எண்பத்தைந்து விழுக்காடு பௌத்தர் களாக உள்ளவர். பர்மாவில் புத்த சமயத்தின் தோற்றம் பற்றி வழங்குகின்ற கதையொன்றில், புத்தர் பெருமானே பர்மாவிற்கு வந்து சென்றதாகக் கூறப்படுகிறது. அசோகரின் இரு தூதர் களான 'சோனன்', 'உத்தரன்' என்பவர்கள், பர்மாவிற்குச் சென்று, புத்த சமயப் பிரச்சாரம் செய்ததாகத் 'தீபவமிசம்' எனும் சிங்களத்தின் காலவழிச் செய்திக் கோவை தெரிவிக் கிறது. ஆனால், இன்றுவரை நமக்குக் கிடைத்துள்ள அசோகரின் கற்சாசனங்களில், பர்மாவிற்குக் தூதர் குழுவை அனுப்பிய தைப் பற்றிய குறிப்பைக் காணோம். மேலும், சீன வரலாற்றுக் குறிப்பேடுகள், கி. பி. முதலாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை, பர்மாவில் நாகரிகம் என்னவென்பதை அறியாதப் பழங்குடி மக்கள் இருந்து வந்ததாகச் சொல்லு கின்றன. எனவே, அசோகன் காலத்தில், புத்த சமயம் பர்மாவில் புகுந்தது எனும் கதை, பிற்காலத்திய மக்களின் கற்பனையில் தோன்றியதாகத் தெரிகிறது.

## மக்களினம்

பர்மியர்கள், இந்தியர்களும் அல்லர், சீனர்களும் அல்லர் அவர்களுக்கே தனியுரிமையுடைய பண்புகளுடன், கடந்த

ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலம் முதல், ஒரு தனிப் பட்ட தேசிய இனமாக, அவர்கள் வளர்ச்சியுற்றுள்ளனர். இதனால், ஒரு தனிப்பட்ட இனப்பண்பாட்டைப் பெற்ற மக்களினமாக, அவர்கள் விளங்கி வருகின்றனர். வரலாற்றுக் காலம் நெடுக, அவர்கள் தங்களுக்கென்று தனிப்பண்பு வாய்ந்த அரசியல், சமூக முறைகளையும் போற்றி வளர்த்துள்ளனர். அவர்களுடைய நாகரிகம், 'பர்மியப்' பண்புகளை உடையதாகக் காணப்படுகிறது. எனினும், அவர்கடைய மொழி, இலக்கியம், கலை முதலிய துறைகளை உருவாக்குவதில், இந்தியாவும், சீனா வும் பெரும்பங்கு பெற்றுள்ளன. அவற்றுள்ளும், இந்தியாவின் செல்வாக்கு எளிதில் புறக்கணிக்க முடியாததாகவும், ஆழ வேரூன்றியதாகவும் இருந்து வருகிறது.

இன்று பர்மாவில் வாழும் மக்களை, நால்வகைப் பழங்குடி இனமக்களைச் சேர்ந்தவர்களாகப் பிரிக்கலாம். ஒவ்வோர் இனத்தவரும் தமக்கென தனிமொழியும், இனமரபுக் கூறுகளும் உடையவர்களாக உள்ளனர். பர்மாவின் கீழைப்பகுதியில் மோன் (Mons) களும், வடகிழக்குப் பகுதியில் ஷான்க (Shons) ளும், மற்றப்பகுதிகளில் மிரம்மா (Mramnoars) எனப்படும் பர்மர்களும் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் திபெத்திய மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவராவர். மேற்கண்ட பழங் குடி மக்களுள், மோன்கள் மிகப் பழங்காலந்தொட்டுப் பர்மா வில் வாழ்ந்து வருகின்றனர். மற்ற இரு பிரிவினரும், கெரேன் கள் எனப்படும் பழங்குடி இன மக்களும் பிற்காலத்தில் இங்குக் குடியேறியவர்களாவர். 'மோன்கள்' மொழியமைப்பில், காம் பூச்சியாவில் உள்ள கெமர்கள் இனத்தோடு நெருங்கிய தொடர்புடையவர்களாவர். இவ்விரு இனங்களும், ஓரினத்தின் இருகிளைகளாகும். இவர்கள் தங்கள் நாட்டை 'ரமோன் நாடு' (இன்றைய பெகூ பிரதேசத்தை) அல்லது 'ரமோன்களின் தாயகம்' என்று கூறி வந்தனர். 'ரமோன்' என்ற சொல்லின் மூதற்குறையாகத் திரிந்த வடிவமே, 'மோன்' என்று பெருவழக் குற்றது.

## மோன்களின் மூதாதையர்

கி. பி. முதல் நூற்றாண்டிலிருந்தே, 'மோன்க'ளிடம் இந்திய நாகரிகம் பரவத் தொடங்கியது. தென்னிந்தியாவில் தெலுங்கானாப் பகுதியில் வாழ்ந்த கடல்மறவர்கள், மோன்கள் நாட்டில் குடியேறி, அவர்களிடத்து, இந்தியப் பண்பாட்டினைப் பரப்பினர் என்று அறிஞர்கள் கூறுவர். இக்காரணத்தினால் தான், பர்மியர்கள், மோன்களோடு தொடர்பு கொள்ளத்

தொடங்கிய காலத்தில், மோன்களைத் 'தலேங்குகள்' (Talyings) என்ற பேரால் சுட்டினர். 'தலேங்குகள்' என்னும் சொல், 'கலிங்கர்' என்னும் சொல்லின் திரிபு என்பர்.

இமய மலைப்பகுதியில் வாழும் திபெத்தியர்கள், நேப்பாளிகள் போன்றுள்ள பல்வகைப்பட்ட மக்களோடு மிரம்மர் (பர்மியர்கள்) ஒட்டும் உறவும் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். எனவே, இவர்கள் ஓரினத்ததச் சேர்ந்தவர்களாக இருக்கலாம். இவர்களுடைய தாயகம், கோபி பாலைவனத்துக்குத்தெற்குப் பகுதியெனக் கருதப்படுகின்றது. சீனர்களின் அல்லது நாடோடி மக்களின் தாக்குதல்களுக்கு அஞ்சி, இவர்கள் தென் திசை நோக்கி வந்தவராகலாம். அவ்வாறு வந்தபொழுது, திபெத், நேப்பாளம் முதலிய இமயமலைப் பகுதிகளில் தங்கி, அங்கிருந்து பர்மாவிற்குள் இவர்கள் நுழைந்திருக்கலாம். இவர்கள் பர்மாவிற்குள் நுழைந்த காலத்தை அறுதியிட்டு கூறமுடியவில்லை.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு அளவில்தான், இவர்கள் மேலைப்பர்மாவில் செல்வாக்குற்றனர். இவர்கள் இமயமலைப் பகுதியிலிருந்து பிரமபுத்திரா, சிண்டுவின் ஆற்று வெளிகளின் வழியாகப் பர்மாவினுள்நுழைந்த பொழுது, இந்தியப் பண்பாட்டைத் தழுவிய 'பயூஸ்' (pyus) மக்கள், நாகரிகமுடையவர்களாக இந்த நாட்டை ஆண்டு வந்தனர். இவர்களுடைய தலைநகரம் 'ஸ்ரீஷேத்திரம்' (புரோம்) என்ற பெயருடையதாகும். இவர்கள் புத்த சமயத்தைத் தழுவியவர்கள் என்பது கல்வெட்டுகளால் அறியப்படுகிறது. 'பயூஸ்' மக்களின் இனமும், மொழியும் பர்மாவில் மறைந்தொழிந்தன. பர்மியர்கள் அவற்றைத் தங்களுக்குரிய பண்பாட்டோடு இணைத்துக் கொண்டனர்.

## ஷான்கள்

ஷான்கள் (Shans) சையாமியர்களோடு தொடர்புடைய இனத்தைச் சேர்ந்த மக்களவார். பர்மியர்களுக்குப் பிறகு, இவர்கள் பர்மாவில் குடியேறினர். தாய்லாந்தின் தென் மேற்குப் பகுதிகளைச் சார்ந்த பிரதேசங்களில்,தங்கள் அரசுகளைஇவர்கள் அமைத்தனர். கெரேன்கள் ஆற்றல்மிக்க படைமறவர்களாக இருந்து வருகின்றனர். எனவே, பர்மாவில் நான்குவகைப் பழங்குடி மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இவர்களுள் செல்வாக்கு மிகுந்த 'மிரம்மர் (பர்மா), களின் நாடு எனும் பொருளிலேயே, பர்மா' எனும் பெயர் வழங்கிவருகிறது.

பேயின்னவுங்கு கி. பி. 1568-69ல் தாய்லாந்தின் தலைநகரை, மீண்டும் முற்றுகையிட்டான். அரக்கானை வென்று, தன் னாட்சிக்குட்படுத்துவதற்கு முன்பு, இவனைக் காலன் பிடித்துச் சென்றான்.

பேயின்னவுங்கு இன்றைய பர்மாவைவிட, மிகப்பரந்த தொரு நாட்டின் பேரரசனாக விளங்கினான். தனது அறுபத் தாறாம் வயதில், அவன் இறந்தான். இறக்கும் பொழுது "97 குழந்தைகளை விட்டுச் சென்றான். அவனுடைய வாழ்க்கை பர்மாவில் என்றுமே, கண்டறியாத மனித சக்தியின் வெளிப் பாடாக அமைந்தது"[6] என்று பர்மியர் பெருமிதப்படுவர்.

### பர்மாவில் ஓர் இராசராசன்

பேயின்னவுங்கு 'இராசாதிராசன்' என்ற பட்டம்பூண்டு, தான் கைப்பற்றியிருந்த பர்மாவின் மற்றப் பகுதிகளைத் தனக் குக்கீழ்ப்படிந்த சிற்றரசர்களை ஆளுமாறு, அவர்களிடத்து அவன் விட்டுவிட்டான். இதனால், அவன் பர்மாவில் உண் டாக்கிய 'அரசியல் ஒருமைப்பாடு' பெயர் அளவிலேயே, நின்று விட்டது; நிலப்பிரபுத்துவ ஆட்சிமுறையாக (Feudalism) அமைந் தது. பேயின்னவுங்கு மொகலாயப் பேரரசர்களுள் மாண்புமிக்க வரான அக்பருக்கு, ஒரு நல்லெண்ணத் தூதர் குழுவை அனுப்பி னான். அப்பேரரசரும் 'வெள்ளையானைகளின் தலைவரான புத்தர் பெருமானின் பொற்றாமரை அடிகளில், அடைக்கலம் புகுவதற்குப் பர்மா வருவதாக அக்குழுவினரிடம் கூறி, அனுப் பினார் என்று சொல்லப்படுகிறது.

பேயின்னவுங்கு புத்தசமயத்திடத்துப் பேரீடுபாடு உடைய வனாக இருந்தான். தனது புகழ்மிக்க அரசியல், சமய வெற்றி களைப் பொறித்த பெரியதொரு வெண்கல மணியைக் கி. பி. 1557 ல் பகானில், அவன் கட்டித் தொங்கவிட்டான். அவன் நாட்டில் 'மதுவிலக்கை' அமுலுக்குக்கொண்டு வந்தான். அவன் மக்களையும் விலங்குகளையும் பலியிடுவதைத் தடை செய்தான். அதிகாரிகளையும் சமயத் தலைவர்களையும் கொண்டு, அவன் சட்டங்களைத் தொகுக்குமாறு செய்தான். அக்காலத்தில், நாட்டில் வாணிகம் செழிப்புற்றது.

கி. பி. 1576ல் அவன் இலங்கையில் இருந்து, புத்தரின் 'திருப்பல்' என்று சொல்லப்பட்ட ஒரு சின்னத்தைப் பெற்றான். இதனால், அவன் பெருமகிழ்ச்சியுற்றான். ஆனால், புத்தரின்

6. G. E. Harvey, op. cit., p.174

உண்மையான பல்லிற்கு, அவன் எட்டு இலட்சம் ரூபாய் கொடுப்பதாகக் கூறியும், கோவாவில் கி. பி. 1561 ல் வெளிப் படையாக, அப்பல் தீயில் இட்டுப் பொசுக்கப்பட்டது. அவன் தொடர்ந்து போரில் ஈடுபட்டு வந்தமையால், நாட்டில் மக்கள் சக்தி குறைந்து போயிற்று. மேலும், மக்கள் போரை வெறுக்கத் தொடங்கினர். பெகூவைச் சேர்ந்த கலகக்காரர்கள், அவனுடைய அரண்மனையை 1564 ல் தீக்கு இரையாக்கினர். அவ்வரசன் விதித்த கொடிய தண்டனைகளும், புதிதாகப் புகுத்தப்பட்ட கட்டாயப் படைத் தொண்டும் நாட்டிலே, பௌத்த சமயத் துறவிகளைப் பெருக்கின.

## அரசின் நலிவு

அவனுடைய மகன் நந்த அபயன் (1581-99) ஆட்சிக்கு வந்தவுடன், தனது தந்தை கையாண்ட பயனற்ற முறைகளைப் பின்பற்றினான். அபயன் அயூத்தியாவின் மீது படையெடுத்துச் சென்று, தோல்வியுற்றான். கி. பி. 1600 ல் அரக்கானியர்கள், பெகூவைக் கொள்ளையடித்து, தீக்கு இரையாக்கினர்.

சையாமிய அரசன், பர்மாவின் மீது படையெடுத்துத் தவுங்கு வரையில் வெற்றியோடு வந்தான். இதனால், கீழைப் பர்மா சொல்லொணாத் துன்பத்திற்கு ஆளாகியது. தொடர்ந்து உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் பர்மிய மக்கள் போரில் ஈடுபட்டு வந்தமையால், நாட்டிலே உழவுத் தொழிலைச் சரிவர செய்யமுடியவில்லை. இதனால், நாட்டிலே பஞ்சமும் பட்டினி யும் தலைவிரித்தாடின. மனிதர்களை, மனிதர்கள் பிடுங்கித் தின்னும் நிலை உண்டாயிற்று. மீண்டும், பர்மாவில் சிற்றரசர் பலர், கிளைத்து எழுந்தனர்.

## தவுங்குவின் வீழ்ச்சி

ஆயினும், தவுங்கு அரசமரபு மீண்டும், அனவுக பெனுலன் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 1605-1628) புத்துயிர் பெற்றது. அவன் 1607ல் புரோமையும், 1610ல் தவுங்கையும், 1613ல் ரங்கூனுக்கு அருகிலிருந்த 'சிரியத்'தையும் கைப்பற்றினான். அவனுக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த தலூன் (Thalun), 1635 ல் பெகூவிலிருந்த தலைநகரை, ஆவாவிற்கு மாற்றினான். நாட்டு மக்களுடைய நலன்கருதி, அவ்வரசன் பல ஆக்கப் பணிகளைச் செய்தான். பர்மாவின் வரலாற்றிலேயே, முதன்முதலாக அரசாங்கத்தின் வருமானம் 1638-ல் மதிப்பீடு செய்யப்பட்டது. ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியார், 1627-ல் சிரியம், ஆவா,

பாமோ ஆகிய இடங்களில், தங்கள் கம்பெனியின் கிளைகளை நிறுவினர். எனினும், 1677ல் அவற்றை, அவர்கள் மூடிவிட்டனர். மீண்டும் சிரியத்திலிருந்த கிளை 1709ல் திறக்கப்பட்டது. ஆனால், கீழைப்பர்மாவைச் சேர்ந்த 'தலேங்குகளால்' 1743-ல் அக்கம்பெனியின் கட்டடங்கள் அழிக்கப்பட்டன. தலேங்குகள் 1752ல் ஆவாவைக் கைப்பற்றித் தவுங்கு அரசமரபின் ஆட்சிக்கு ஒரு முடிவு கண்டனர்.

## ரங்கூன் மாநகர வரலாறு

தவுங்குவின் வீழ்ச்சி, அலவுங்கபயா (Alaungapaya) என்பவன், பர்மாவில் தன்னாட்சியை நிறுவுவதற்கு உறுதுணையாயிற்று. தலேங்குகளின் படையெடுப்பை எதிர்த்த, தவுங்கு படையைச் சேர்ந்த ஒரு வீரனே, இந்த அலவுங்கபயா என்பவனாவான். அவனுடைய தாக்குதல்களை எதிர்த்துப் போரிட முடியாத தலேங்குகள், 1753ல் ஆவாவை விட்டோடினர். 1755ல் அலவுங்கபாயா புரோமையும், தேகனையும் கைப்பற்றினான். 'தேகன்' நகரின் பெயரை மாற்றி, 'ரங்கூன்' (Rangoon) என்று அவன் பெயரிட்டான். 'ரங்கூன்' என்ற பர்மியச் சொல்லிற்குப் 'போராட்டத்தின் முடிவு' என்பது பொருள். அதே ஆண்டில், பயா, அஸாமிலுள்ள மணிப்பூரை முற்றுகையிட்டான். மேலும், 1756ல் சிரியத்தை அவன் கைப்பற்றினான். தலேங்குகளுக்கு உதவி புரிந்த பிரெஞ்சுக் காரர்களுக்குப் பாடம் கற்பிக்க விரும்பி, புதுச்சேரியிலிருந்து வந்த இரண்டு கப்பல்களை அவன் கைப்பற்றிக் கொண்டான். சிரியம், தீக்கிரையாக்கப்பட்டது. அன்று முதல் 'ரங்கூன்' சிறந்த தொரு துறைமுகமாக வளர்ச்சியுற்றது. அலவுங்கபயா 1757ல், பெகூவின் மீது படையெடுத்துச் சென்று தலேங்குகளை அடியோடு அழித்தான்.

அவனுடைய மண்ணாசை, நாளுக்குநாள் பெருகிக் கொண்டே போயிற்று. அவன் மணிப்பூரை மீண்டும், கொடிய முறையில் முற்றுகையிட்டான். அம்முற்றுகையின் மூலம், பர்மாவிற்குத் துன்பத்தை விலைகொடுத்து அவன் வாங்கினான். ஆங்கிலேயர்கள், தலேங்குகளுக்கு உதவி புரிகிறார்கள் என்று அவன் தவறாகக் கருதி, ஆங்கிலேயர்களைப் பகைத்துக் கொண்டான். அலவுங்கபயா தெனாசரிமைக் கைப்பற்றினான். சையாமின் தலைநகராகிய அயூத்தியாவின் மீது படையெடுத்துச் சென்றான். அந்நகர் ஐந்தாவது முறையாகப் பர்மியர்களால், முற்றுகையிடப்பட்டது. அப்போரில் தோல்வியுற்றுத் திரும்புகின்ற பொழுது, அலவுங்கபயா இறந்தான். ஒரு சிற்றூரின தலைவனாகத் தன் வாழ்க்கையைத் தொடங்கிய அலவுங்கபயா

சிறிது காலத்திற்குள், பர்மாவின் தலைவனாகியதோடு அமையாது, தான் ஒரு மாபெரும் வீரன் என்பதை நாடறியச் செய்தான்.

## ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் தலையீடு

அவனுக்குப் பிறகு, ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனிக்கும் பர்மா அரசர்களுக்கும் இடையே உண்டான தகராறு முற்றியது. எவ்வாறோ ரங்கூனில் அக்கம்பெனியின் கிளை ஒன்று நிறுவப் பட்டது. பர்மாவின் அரசன், மீண்டும் மணிப்பூரைத் தாக்கினான். ஆறாவது முறையாகப் பர்மிய அரசன், அயூத்தியாவை முற்று கையிட்டான். இம்முறை சையாம் வீழ்ச்சியுற்றது. வெற்றி பெற்ற பர்மிய அரசன், பெருஞ்செல்வத்தோடு, நாடு திரும் பினான். இப்போரின் விளைவாகப் பாங்சாக் (Bangkok), சையாமின் தலைநகர் ஆயிற்று.

இந்நிலையில், வாரணாசி (காசி)யிலிருந்து ஒன்பது பார்ப் பனர்கள் பர்மாவிற்கு அழைக்கப்பட்டனர். அவர்களுடைய உதவியைக் கொண்டு, சம்ஸ்கிருதத்திலிருந்து பல நூற்கள், பர்மிய மொழியில், மொழி பெயர்க்கப்பட்டன. 1765-69ல் சீனர்கள், பர்மாவின்மீது படையெடுத்து வந்தனர். அவர்களைப் பர்மிய அரசன் விரட்டி அடித்தான். ரங்கூனில் உள்ள 'சுவேதகன்' (Suvetakan) கோயில், பழுதுபார்க்கப்பட்டது. அதனுடன் புதிய அடைப்புகள் பல சேர்க்கப்பட்டன. அதன் கோபுரம் கடைசியாக ஏறக்குறைய 20 மீட்டர் உயரம் உடைய தாகக் கட்டப்பட்டது.

## வெளிநாட்டுப்பயணிகள் கண்ட பர்மா

ருஷியாவைச் சேர்ந்த நிக்கேதின் (Nikeitin) என்பார், பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், கிழக்காசிய நாடுகளைக் கண்டறிவதற்கு வந்தார். அவர் வந்தபொழுது பெகூ, சிறந்ததொரு துறைமுகமாக விளங்கியதைக் குறிப்பிட் டுள்ளார். 1496ல் இத்தாலிய நாட்டு வாணிகரான ஸ்டெப் பனோ (Stephano) அந்நகரிற்கு வந்தார். அக்காலத்தில், மேலைப் பர்மாவில், கலகமும் குழப்பமும் நிறைந்து காணப் பட்டன. அதனால், இவர் ஆவாவிற்குச் செல்வது தடைப் பட்டது.

கி.பி. 1505ல் வர்தீமன் (Varthema) என்ற மற்றோர் இத்தாலிய நாட்டு வாணிகன், பெகூவிற்கு வந்தான். இவன் பெகூவை ஆண்ட பின்னியான் (Binnyan) என்ற அரசனைச்

சந்தித்துத், தான் கொண்டுவந்து இருந்த பவழத்தைப் பெரும் பொருளுக்கு விற்றான். வர்த்தீமன், "பெகூ அரசன் மிகுந்த அன்பும், கருணையுணர்வும் உடையவனாக இருந்தான். அதனால் குழந்தைகளும் அவனிடம் சென்றுபேசினர். பெரிய நகரங்களின் விலைமதிப்பைக் காட்டிலும், அதிகமதிப்பு வாய்ந்த இரத்தினங்களை அவன் அணிந்திருந்தான். அதனால், இரவு நேரத்தில், அவன் ஞாயிற்றைப் போன்று பேரொளி மிக்கவனாகத் தோன்றினான்" என்று தன் பயணக் குறிப்பில், எழுதியுள்ளான்.

## கீழைப்பர்மாவின் பொற்காலம்

கி. பி. 1519ல் மார்த்துபனில், போர்ச்சுகீசிய வாணிகக் கம்பெனி நிறுவப்பட்டது. 1539ல் கவுங்கு அரசன் வரேறு (Wareru) பெகூ அரசமரபினரை அழித்து, அந்நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். வரேறு அரசமரபினருடைய ஆட்சியின் இறுதிப் பதினாறு ஆண்டுகள் (கி.பி. 1423-1439), கீழைப் பர்மாவின் பொற்காலமாகப் போற்றப்படுகிறது. வடக்கில் வாழ்ந்த நாகரிகமற்ற மக்களைக் காட்டிலும், இப்பகுதி நாகரிகத்தில் உயர்ந்தநிலையை அடைந்திருந்தது என்பதில் சிறிதும் ஐயமில்லை. பர்மாவை வென்றவர்கள், தாங்கள் அழிக்கக் கூடாத நாகரிகச் சின்னங்களைக் கைகளாலும் தொட்டுப் பாழாக்காது போற்றினர்.

## கோயில்களைக் கொள்ளையிட்ட அரசன்

பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியில், பர்மாவின் மேலைப் பகுதி "சீறிவரும் ஷான் அரசர்களின் ஆரவாரம் நிறைந்த"[7] இடமாகக் காணப்பட்டது. இரத்த வெறி பிடித்த அரக்கனான தோகன்-பவா (Thokan bawar 1527-43), "பர்மாவின் கோயில்களான பகோடாக்களுக்கும் பௌத்த சமயத்திற்கும் எத்தகைய தொடர்பும் இல்லை. அவை விலைமதிக்க முடியாத, அரிய பொருள்களைக் கொட்டி வைக்கும் கருவூலங்கள்" என்று கருதினான். இதனால், நாட்டில் இருந்த கோயில்களை எல்லாம் அவன் கொள்ளையடித்தான். பௌத்த சமயத் துறவிகளைக் கூட்டம் கூட்டமாக அவன் படுகொலை செய்தான். மடங்களிலிருந்த சுவடிகளை எல்லாம் அவன் தீயிட்டுக் கொளுத்தினான். அவனுடைய கொடுமை நிறைந்த ஆட்சியால், மக்கள் அல்லலுற்றனர்." இந்நிலையில்,

---

7. G. E. Harvey. op. cit; p. 121

பர்மாவினை ஒரு குடைக்கீழ்க் கொண்டுவர விரும்பிய பேயினவுங்கு ஆவாவைக் கைப்பற்றினான்.

## பெகூ அரசு

வாழ்க்கையின் தொடக்க காலத்தில், தெருத் தெருவாகச் சுற்றி வாணிகம் செய்து கொண்டிருந்த வரேறு (Wareru) என்பவன், பெகூ அரசினை நிறுவிய முதல் அரசனாவான். இவன் கி.பி. 1287ல், கீழைப்பர்மா முழுவதையும் தன்வீர தீரச் செயல்களால் கைப்பற்றினான். இவன், ஷான் மரபைச் சேர்ந்தவன் ஆவான். சால்வீன் ஆறு, கடலில் கலக்கும் இடத்தில் அமைந்திருந்த மார்த்தபன் (Martaban) என்ற ஊரை இவன் தலைநகராக்கிக் கொண்டான்.

இவன் பர்மாவில், பன்னெடுங்காலமாக வழங்கிவந்த பழக்க வழக்கங்களை, மனுதரும சாத்திரத்தின் அடிப்படையில் தொகுத்து, சட்ட நூல் ஒன்றைத் தயாரிக்குமாறு செய்தான். அதற்குத் 'தம்மட்டு' (தருமதடாகம்) என்று இவன் பேரிட்டான். மனுதரும சாத்திரத்தின் தழுவலான அந்நூல், ''திருமணம் என்னும் சடங்கே தேவையற்றது'' என்று கூறுகிறது; சாதி முறையை ஏற்றுக் கொள்ளவில்லை.

1296ல் வரேறு கொலை செய்யப்பட்டான். சையாமியர்கள் மார்த்தபன் நகரை அடிக்கடி முற்றுகையிட்டனர். இதனால், அவனுக்குப் பிறகு வந்த அரசர்கள், தலைநகரை டோன்வன் (Donwan) என்ற உள்நாட்டு நகருக்கு மாற்றினர். அங்கும் சையாமியர்கள் தொடர்ந்து தாக்கிவந்தனர். இதனால், அவர்கள் தலைநகரை 1369ல் பெகூ (Pegu) விற்கு மாற்றினர்.

இவ்வரச மரபிலே சிறப்புற்று விளங்கியவன் இராசதரிதன் (Razadarit) என்பவன் ஆவான். இவன் பதினாறு வயதில் (1385—1423) அரசு கட்டில் ஏறினான். ஆட்சிக்கு வந்த நாள் முதல், இவ்வரசன் ஆவாவோடு பெரும்போர் புரிந்தான். இறுதியில் இவன் ஆவாவைக் கைப்பற்றினான். மேலும், உள்நாட்டில் உண்டான கலகங்களை அடக்கி, நாட்டிலே அமைதியை இவன் நிலைநாட்டினான். இராசதரிதனை 'அறிவில் சிறந்தவன்; அருளுள்ளம் வாய்ந்தவன்; சொல்லிலும், செயலிலும் பெருந்தன்மை உடையவன்; இறப்பைத் தவிர மற்றப் பகைவர்களை எல்லாம் வெற்றி கொண்டவன்; அரசர்களுக்குள்ளே அரியேறு போன்றவன்'' என்று அக்காலத்திய வரலாற்றுக் குறிப்பேடு இவ்வரசனைப் பாராட்டுகிறது.

## பர்மாவின் விக்டோரியா

இவனுடைய மகள் ஷின்சாவாபு (Shinsawabu) இளம் வயதில் விதவையானாள். பிறகு, ஆவா அரசனுக்குத் திருமணம் செய்து கொடுக்கப்பட்டாள். அக்காலத்திய, பர்மிய அரசிகளைப் போன்று, இவளும் பல (குறைந்தது மூன்று) கணவரை மணந்தாள். திடீரென்று அவளுக்கு ஆவாவின் மீது வெறுப்பு உண்டாயிற்று. 1430ல் ஷின்சாவாபு தாய்வீட்டிற்குத் திரும்பிவந்தாள். தன் தகப்பனாரின் கால்வழியில் அரசுரிமை ஏற்பதற்கு ஆண் மக்கள் யாரும் இல்லாமையால், 1453ல், அவள் பெகூவின் அரசியாக முடிசூட்டிக் கொண்டாள். ஷின்சாவாபு, ஏழு ஆண்டுகள் திறமையாக நாட்டை ஆட்சி புரிந்தாள். அக்காலத்தில் நாடு செழிப்பும், அமைதியும் உடையதாக இருந்தது. அவள் தேகனு (Dagon)க்குச் சென்று, சமயப் பணி புரிந்தாள். சுவேதகன் (Swedagon) கோயிலை விரிவுபடுத்திப் பல புதிய கட்டடங்களைக் கட்டினாள். முதலில் பௌத்த சமயத் துறவியாக இருந்து, பின்னர் அதைவிட்டு நீங்கிய ஒருவனுக்கு, தன் மகளை அவள், திருமணம் செய்து கொடுத்தாள். மேலும், தனக்குப் பிறகு, அந்நாட்டினை ஆளும் உரிமையைத், தன் மருமகனுக்கு அவள் வழங்கினாள். இந்நூற்றாண்டின் தொடக்க காலத்திய பர்மிய மக்கள் அவளை, 'பர்மாவின் விக்டோரியா' என்று போற்றினர். இங்கிலாந்தின் விக்டோரியா ஒரே கணவனோடு (ஏழாம் எட்வர்ட்டுடன்) ஒழுங்காக வாழ்ந்த பெருமாட்டி என்பதை மறக்கலாகாது. கி. பி. 1745ல் பெகூவிலிருந்து இலங்கைக்கு ஒரு சமயத்தூதர் குழு அனுப்பப்பட்டது. அக்குழு பர்மாவிற்குத் திரும்பியபின், பர்மிய பௌத்த சமயத்தில் உண்டான பிளவுகள் நீக்கப்பட்டன. ஒன்றுபட்ட பௌத்த சமயமாக, அது செம்மைப்படுத்தப்பட்டது.

## அரக்கான்

பர்மாவின் வடமேற்குக் கடற்கரைப் பகுதியான அரக்கான் 1287 வரை, பகான் அரசின் மேலாதிக்கத்திற்குட்பட்ட சிற்றரசராக இருந்துவந்தது. மிப்தி (Mipti) எனும் அரசன், அரக்கானை நெடுங்காலம் ஆண்டதாகக் கூறப்படுகிறது. அவ்வரசன் நடுநிலைப் பிறழாது செங்கோலோச்சியதாகத் தெரிகிறது. "வேலைக்காரர்கள் செய்யும் தவற்றிற்குத் தலைவர்களும், மனைவியரும் குழந்தைகளும் செய்யும் தவற்றிற்கு தகப்பன்மார்களும், மாணவர்கள் செய்யும் தவற்றிற்கு ஆசிரியர்களும் தண்டிக்கப்படுவார்கள்"[8] என்று அவன் சட்ட

8. G. E. Harvey, Op. Cit: p. 138

மியற்றிச் செயல்படுத்தினான் என்று பர்மாவின் காலவழிச் செய்திக் கோவைகள் அவனைப் புகழ்ந்து உரைக்கின்றன.

கி. பி. 1347 முதல் 1430 வரை, அரக்கானின் அமைதியை ஆவாவும், பெகூவும் கெடுத்தன. 1404ல் நரமெய்க்கலன் என்ற அரக்கானின் அரசன், வங்காளத்துச் சுல்தானிடம் அடைக்கலம் புகுந்தான். அச்சுல்தானின் உதவியைக்கொண்டு, தன்னுடைய நாட்டை 1430ல் அவன் மீண்டும் பெற்றான். கி. பி. 1433ல் முரோ-அவுங்கு என்ற நகரை அவன் நிறுவினான். அது முதல் கி. பி. 1785 வரை அந்நகரம், அரக்கானின் தலை நகராக இருந்து வந்தது. அரக்கான் அரசர்கள், புத்த சமயத்தவர்கள். எனினும், 1437 முதல், இஸ்லாமிய சமயத்திற்குரிய பெயர்களையும், பட்டங்களையும் அவர்கள் சூட்டிக் கொண்டனர். அவர்கள் கழுத்தில் அணிந்த அழகிய அணியில் இருந்த பதக்கங்களில் பாரசீக எழுத்துகளில் கலிமாவைப் பொறித்துக் கொண்டனர். 1459ல் அரக்கான் அரசன், சிட்டகாங்கைக் கைப்பற்றினான். வங்காளத்திற்கும் அரக்கானிற்கும் நெருங்கிய தொடர்பு இருந்து வந்தது.

சபக்ஷா எனப்படும் மின்பின் (Minbin) அரசன் காலத்தில் (1531-1553), தலைநகரைச் சுற்றிக் கோட்டைக் கொத்தளங்கள் அமைக்கப்பட்டன. அந்நகரில் பல கோயில்களைச் சபக்ஷா கட்டினான். 1546ல் பெகூ அரசன், படையெடுத்து வந்தான். அவனை எதிர்த்துப் புறமுதுகிட்டு, ஓடுமாறு ஷா செய்தான். அவனுக்குப் பிறகு, அரக்கான் போர்ச்சுகீசியரோடு சேர்ந்து கொண்டது. கி. பி. 1666ல் அவுரங்கசீபின் ஆளுநரான ஷயிஸ்டகான் கைப்பற்றும் வரை, ஆற்றல் மிக்கவரசாக அது விளங்கியது.

### உள்நாட்டுப் போர்

பர்மாவில், பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய அரசர்கள், கி. பி. 1775 முதல் 1782 வரை, பலமுறை அஸாம் மீது படையெடுத்துச் சென்றனர். அதனால், மணிப்பூர், சச்சார் (Cachar), ஜெயிந்தியா (Jainthia) முதலிய ஊர்கள் பேரழிவுற்றன.

### வீழ்ச்சியின் வித்து

அலவுங்கபயாவின் மூன்றாவது மகன் போதாபயா, ஆவாவிற்கு அருகில் இருந்த அமரபுரத்திற்குத் (Amarapura) தலைநகரை மாற்றினான். அவன் 1785ல், அரக்கானைக் கைப்பற்றி

னான். குருமார்களுக்கு நிலவுடைமை உண்டா வென்பதை அறிய பௌத்த சமயத்துறவிகளுக்கும், மடங்களுக்கும், மானிய மாக விடப்பட்ட நிலங்களைப் பற்றி அறிவிக்கும் பட்டயங்களை ஒன்று சேர்த்து, அவன் ஆராய்ந்தான். கி. பி. 1784, 1803 ஆகிய இரண்டு ஆண்டுகளிலும், அவன் அரசாங்கத்தின் வரு மானத்தை மதிப்பீடு செய்தான். போதாபயா கி. பி. 1785ல் சையாம் மீது படையெடுத்துச் சென்று, தோல்வியுற்றான்.

அரக்கானை விட்டோடி சிட்டகாங்கில் ஒளிந்து கொண்ட அரக்கானிய கலகக்காரர்களைப் பிடிப்பதற்காகப் பர்மியப் படை ஒன்றை, அவன் சிட்டகாங்கிற்கு அனுப்பிவைத்தான். அப்படை சிட்டகாங்கில் நுழைந்து, மக்களைத் துன்புறுத்தியது. இதனால், இந்தியகவர்னர் ஜெனரலுக்கும் பர்மிய அரசருக்கும் பகைமை உண்டாயிற்று. மேலும், மணிப்பூரின் உள்நாட்டு விவகாரங்களில் பர்மா, தலையிடத் தொடங்கியது. அதன் பயனாக, மணிப்பூரிலும் பிரமபுத்திரா ஆற்று வெளியிலும் பர்மாவின் ஆதிக்கம் நிலைநாட்டப்பட்டது. நாளடைவில், வங்காளத்தின் பல பகுதிகள் பர்மாவிற்கு உரிமையுடையனவா கும்' என்று பர்மிய அரசன்உரிமை கொண்டாடினான். போதாபயா டாக்கா, முர்ஷிதாபாத் ஆகிய நகரங்களின் மீது படையெடுத்துச் சென்றான். இந்நிலையில் தனது 75-வது வயதில், போதாபயா 228 பிள்ளைகளையும், 1222 பேரப்பிள்ளை களையும் விட்டுவிட்டு இறந்தான். அவன் பேயின்னவுங்கிற்கு அடுத்தபடியாகப் பர்மாவை ஆண்ட ஆற்றல்மிக்க மாபெரும் மன்னனாகப் போற்றப் படுகிறான்.

## ஆங்கிலேயரின் ஆதிக்கம்

அவனுடைய ஆட்சிக்குப் பிறகு, பர்மாவின் வரலாறு, ஆங்கி லேயருக்கும், பர்மியர்களுக்கும் இடையே நடந்த போராட்டத் தின் வரலாறாகவே காணப்படுகிறது. மூன்று முறை பர்மா விற்கும் ஆங்கிலேயருக்கும் இடையே போர் நடந்தது. இறுதி யாக 1897ல், பர்மா ஆங்கிலேயப் பேரரசின் ஆட்சிக்குட்படுத் தப்பட்டது. கி பி. 1937ஆம் ஆண்டு வரை, பர்மா இந்தியா வோடு இணைக்கப்பட்டிருந்தது. இந்தியாவில் உண்டான விடுதலைப் போராட்டம் பர்மிய மக்களை விழிப்புறச் செய்தது. வெள்ளையரின், ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறுவதற்கு பர்மா முயன்றது. இதனால், 1937ல் பர்மா தனி நாடாகப் பிரிக்கப் பட்டது. எனினும் விடுதலைப் போராட்டத்தில் பர்மா, இந்தியாவின் அடிச்சுவடுகளைக் தொடர்ந்து பின்பற்றியது-

1948ஆம் ஆண்டில் ஆங்கிலேயப் பேரரசின் ஆதிக்கத்திலிருந்து பர்மா விடுதலை பெற்லது.

## பல்லவர் காலப் பர்மா

பர்மாவின் அரசியல் வரலாறு, பல அரசுகளின் எழுச்சியும் வீழ்ச்சியும் நிறைந்ததாகக் காணப்படுகிறது. எனினும், பர்மிய மக்களுடைய வாழ்க்கை ஓர் உள்ளார்ந்த பண்பினை உறுதுணை யாய்க் கொண்டு வளர்ந்ததாகத் தெரிகிறது. அதனுடைய பண் பாடும், வாணிகமும், சமயமும், புதியதாக நாட்டினுள்ளே புகுந்த அயலாரின் நெறிமுறைகளையும் பழக்கவழக்கங்களை யும், நாகரிகத்தையும் ஓரளவிற்குப் போற்றிப் பின்பற்றத் தொடங்கியதனால், சிறப்புற்றது எனலாம்.

## தமிழ்ப் பண்பாடு

இந்திய நாகரிகமும் பண்பாடும் நில வழியாகவும், கடல் வழியாகவும் சென்று, பர்மாவில் பரவத் தொடங்கின. பெரும் பாலும், இந்திய வாணிகர்களின் மூலம்தான், பர்மாவில் இந்திய நாகரிகம் பரவியிருத்தல் வேண்டும். வாணிகத் தொடர் பின் விளைவாகப் பர்மாவில் இந்தியர்கள் குடியேறத் தொடங் கினர். இக்குடியேற்றங்கள் இந்தியாவின் சமயம், கலை, பண்பாடு ஆகியவற்றைப் பர்மாவில் கால்கொள்ளச் செய்தன. பர்மிய மக்களின் உள்ளத்தை ஈனயான பௌத்த சமயம் பெரிதும் கவர்ந்தது. அவர்களுடைய அன்றாட வாழ்க்கையில் இச்சமயம் சிறப்பிடம் பெற்றது. இதற்குப் பிறகு, பர்மாவிற்கு வந்த மகாயான புத்த சமயமும், இந்து சமயமும் மன்னர்களால் போற்றப் பட்டன; செல்வச் சீமான்களால் சீராட்டப்பட்டன. எனினும், அவை நாட்டுமக்களின் பேராதரவைப் பெற்றதாகத் தெரியவில்லை. இதனால்தான், பர்மாவில் இன்றுவரை தேரவாதப் புத்தசமயம் சீரும் சிறப்பும் பெற்றுத் திகழமுடி கிறது.

எனவே, பர்மிய நாகரிகம் ஈனயான புத்த சமயத்தின் அணைப்பாலும், ஆதரவாலும் சிறப்புற்றதில் வியப்பில்லை. தென்னிந்தியாவினின்றும், இலங்கையினின்றும் நேரடியாகப் பர்மா பெற்ற இச் சமயப் பண்பாடு, அதன் நாகரிகத்தின் அடிப் படையாக அமைக்கப்பட்டது. அவ்வடிப்படையின் மீது, நில வழியாக வடஇந்தியாவிலிருந்து வந்த தாந்திரிக பௌத்த சமயமும் நடமாட வேண்டியதாயிற்று. ஓரளவிற்குச் சிறப்புமிகு இடத்தைக் கலைத்துறையில் வைதிக இந்து சமயமும், மகாயான பௌத்த சமயமும் பெற்றன.

## பல்லவரும் பர்மாவும்

தொல்பொருள் ஆராய்ச்சியாளர், ம்மாண்கூண் என்னும் இடத்தில், இரண்டு தங்கத் தாம்பாளங்களைக் கண்டெடுத்துள்ளனர். அவ்விரு தாம்பாளங்களும் தென்னிந்திய (கிரந்த) எழுத்துகளில், பாலிமொழியிலுள்ள நூலின் கருத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன. இதனால், தென்னிந்தியாவோடு பர்மா கொண்டிருந்த நெருங்கிய தொடர்பு புலனாகின்றது. மேலும், தென்னிந்திய நகரங்களுள், கி.பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் சிறப்புற்று விளங்கிய 'கல்வி, கரையிலா காஞ்சி மாநகரத்தில்' தழைத்தோங்கிய ஈனயான பௌத்த சமயம், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு அளவில், பர்மாவில் வேரூன்றத் தொடங்கியதைச் சரித்திரம் பேசுகிறது. காஞ்சி மாநகரில், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு அளவில் ஈனயான பௌத்த சமயம், மாண்புமிக்க பேராசிரியரான தருமபாலரின் தலைமையின்கீழ், சிறப்புற்று விளங்கியது. பண்டைத்தலேங்குகளின் இலக்கியங்களில், அடிக்கடி தருமபாலரைப் பற்றியும், காஞ்சி மாநகரைப் பற்றியும், குறிப்புகள் பல காணப்படுகின்றன. தலேங்குகளுடைய தொடக்க காலத்திய கல்வெட்டுகள், பல்லவர்களுடைய கிரந்த எழுத்துவடிவங்களை உடையனவாக உள்ளன.

புரோமில், இருபது பொன்னேடுகளைக் கொண்ட ஓர் ஓலைச்சுவடி கிடைத்து இருக்கிறது. அதில், பாலிமொழியிலுள்ள மறைநூல் கருத்துகள், சுலோகங்களாகப் 'பயூ' மொழியில் பொறிக்கப் பட்டுள்ளன. அப் 'பயூ' மொழி எழுத்துகள், தமிழ் மொழியின், பழைய எழுத்து வடிவமான வட்டெழுத்தைப் போன்று எழுதப்பட்டுள்ளன. அவ்வெழுத்து வடிவம் நேரடியாகத் தென் இந்தியாவில் இருந்து, கொண்டு செல்லப்பட்டதாக இருக்க வேண்டும் என்பது புலனாகிறது. களிமண் பட்டயங்களிலும், வெள்ளிப் பாத்திரங்களின்மீதும் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துகளாலும் பழைய புரோமில், ஈனயான பௌத்த சமயத்தோடு, மகாயான பௌத்த சமயமும், வைதிக இந்து சமயமும் செல்வாக்குற்று இருந்தமை தெரியவருகிறது. இதனை, அங்குக் கிடைத்துள்ள சிற்பங்களும் வெண்கலச் சிலைகளும் உறுதிப்படுத்துகின்றன.

பர்மாவின் பழங்குடி மக்களான பயூக்கள் இறந்தோரின் சாம்பலைத் தாழியிலிட்டு, அதன் மீது இறந்தோர் பெயரை எழுதிப் புதைக்கும் பழக்கம் உடையவராக இருந்தனர். கி. பி. எட்டாம் நூற்றாண்டு அளவில், புதைக்கப்பட்ட தாழிகளின் மீது, 'ஆரிய

விக்கிரம', 'தைரிய விக்கிரம', 'சிம்ம விக்கிரம' என்ற பெயர்கள் காணப்படுகின்றன. அவை, யாதோ ஓர் அரச மரபைக் குறிப்பதாகத் தெரிகிறது. இதிலிருந்து அக்காலப் பயூத் தலைவர்கள் இந்திய இரத்தக் கலப்பு உடையவர்களாக இருந்திருக்கலாம் என்பது குறிப்பாகத் தோன்றுகிறது.

மேலும், சில தாழிகளில் 'வர்மன்', 'விக்கிரமன்' என்னும் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அத்தாழிகளின் எழுத்துகள் பொறிக்கப்பட்ட காலம் நம் கருத்தைக் கவருகிறது. அக்காலத்தில், தமிழ் நாட்டில் செங்கோலோச்சிய மாண்புமிக்க மாபெரும் பல்லவர்கள், 'வர்மன்' என்ற பட்டப்பெயரைச் சூட்டிக்கொண்டவர்களாக இருந்தனர். இதனால், தமிழகத்திற்கும் பர்மாவிற்கும் நெருங்கிய அரசியல் தொடர்பு இருந்திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

வெள்ளியாலான பேழை ஒன்றைத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர், பர்மாவில் கண்டெடுத்தனர். அப்பேழை கி. பி. ஏழாம் அல்லது எட்டாம் நூற்றாண்டில் செய்யப்பட்டதாக இருக்கலாம் என்று அவர்கள் கருதுகின்றனர். அப்பேழையில் புத்தரின் திருவுருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அதன் மூடியின் ஓரத்தைச் சுற்றிலும், பயூமொழியிலும், பாலிமொழியிலும் பொறிக்கப்பட்ட எழுத்துகள் காணப்படுகின்றன. அவ்வெழுத்துகள் தென்னிந்தியாவிற்குரிய கிரந்த எழுத்துகளைப் போன்று தோன்றுகின்றன. அவை பெரிதும் பல்லவர், கதம்பர் காலத்திய எழுத்து வடிவத்தை ஒத்துள்ளன.

அப்பேழையின் கீழ்ப்புறத்தில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துகள் "ஸ்ரீ பிரபு வர்மன்" என்ற ஓர் அரசனைக் குறிப்பிடுகிறது. ஸ்ரீ பிரபுவர்மன், அந்நாட்டை ஆண்ட மோன் அரச மரபைச் சேர்ந்தவனாக இருக்கலாம்; 'வர்மன்' என்னும் பட்டப்பெயர், இந்திய மன்னர்கட்கு உரியது என்பது உறுதி. பர்மாவினை ஆண்ட மோன் மரபைச் சேர்ந்த அரசர்கள், தமிழகத்தில் ஆட்சி புரிந்த பல்லவர்களைக்கண்டு, அவர்களைப் போன்று, தாங்களும் பட்டப்பெயர்களைச் சூட்டிக்கொண்டிருக்கலாம். இதைப் போன்று, இன்னும் பல இந்தியச் சொற்கள் 'மோன்' மொழியில் சேர்த்துக்கொள்ளப் பட்டுள்ளன. பேழையில் பொறிக்கப்பட்டுள்ள புத்தர் வடிவம், ஈனயான புத்த சமயத்திற்குரிய திருவுருவமாகும்.

## சைவமும் பௌத்தமும்

மேலும், பர்மாவில் 35 செ. மீ. (பதினான்கு அங்குலம், உயரம் உள்ள சிவலிங்கமும், பாலர் அரசமரபினர் காலத்திய போதிசத்துவரின் சிலையும் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. இதனால் சைவமும் பௌத்தமும் பர்மாவில், ஒரே காலத்தில் செல்வாக்குடன் இருந்தமை, அறியப்படுகின்றன. குப்தர் காலத்திய சிற்பமுறையில் அமைந்த புத்தர் சிலைகளும் அங்குக் கண்டு எடுக்கப்பட்டுள்ளன. அச்சிலைகளில் பாலிமொழி, சம்ஸ்கிருத மொழி எழுத்துகள் காணப்படுகின்றன. அவை பர்மாவில் செய்யப்பட்டவை. எனினும், மகாயான பௌத்த சமயத்திற்குரிய கலைப் பண்பு நிறைந்தனவாக அவை உள்ளன. எனவே, அக்காலத்தில் மகாயான பௌத்த சமயம், அம்மண்ணில் கால்கொள்ளத்தொடங்கியமை புலனாகிறது.

இவை அல்லாமல், வைதிக சமயத்திற்குரிய தெய்வங்களான திருமால், கணேசர், கருடன், அனுமான், துர்க்கை முதலியோரின் சிலைகள், பர்மாவின் பல பகுதிகளில் கண்டெடுக்கப்பெற்றுள்ளன. இவற்றிலிருந்து கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் எட்டாம் நூற்றாண்டு வரை, பர்மாவில் மூவகைச் சமயங்களும் போற்றப்பட்டதை நாம் உய்த்துணரலாம். "பர்மாவின் பொது மக்கள், இன்றுள்ளதைப் போன்றே, அன்றும் ஈனயான பௌத்த சமயத்தைத் தழுவியவர்களாகவும், அரசர்கள் புத்த சமயம், இந்து சமயம் ஆகிய இரண்டையும் சமமாகக் கருதிப் போற்றும் சமயப் பொறை உடையவர்களாகவும் இருந்திருக்கலாம். அதே நேரத்தில், அவர்களையடுத்து, பர்மாவில் குடியேறிச் சிறுசிறு குழுக்களாக இருந்த மகாயான பௌத்த சமயத்தைத் தழுவிய மக்களும், அமைதியாக வாழ்ந்தும் இருக்கலாம்."[9]

## பல்லவர் கலைப்பாணி

இங்குப் பல்லவர் சிற்ப முறையினைப் பின்பற்றி, அமைக்கப்பட்டுள்ள சிற்பங்கள் பல கிடைத்துள்ளன. அவை பண்டைக் காலப் புரோம் நகரில் காணப்படும் இந்து சமயச் சிற்பங்களாகும். அவற்றுள், சிறப்புடையவை திருமால், இலக்குமி ஆகியோரின் புடைப்புச் சிற்பங்களாகும். அவற்றின் தலைகள் சிதைந்து போயுள்ளன. அவை பல்லவர் சிற்ப முறையினைப் பின்பற்றிச்

---

9. Reginald Le May, The Culture of South East Asia. P.3

செய்யப்பட்டுள்ளன. எனினும் சில நுட்பமான வேறு பாடுகள் அவற்றிடையே இடம் பெற்றுள்ளன. ''கருடன் மீது அமர்ந்துள்ள திருமாலின் சிலை' கைத்திறனில்லா சிற்பியின் அழகற்ற படைப்பாகும். அக்கலைஞன், தன்னுடைய வடிவம் கொடுக்கும் முயற்சியில் பெருந்தோல்வி உற்றனன்''[10] என்பர் குவாரிட்சு வேல்ஸ்.

கி.பி. 1926-27 ல், ஒரு ஸ்தூபியின் கீழுள்ள அறை ஒன்றைத் தொல்லியலாளர் அகழ்ந்து எடுத்தனர். அது கற்பலகை ஒன்றால் மூடப்பட்டிருந்தது, அதன் மீது ஒரு ஸ்தூபியின் வடிவம் செதுக்கப்பட்டுள்ளது. அத்தூபியின் தலைப்பகுதியில் ஐந்து குடைகள் அரைவட்ட வடிவில் பொறிக்கப்பட்டுள்ளன. இதைக் கண்ட தொல்லியல் ஆராய்ச்சியாளர், இம்முறை தென்னிந்தியாவில் காணப்படும் சிற்ப முறையோடு, நெருங்கிய தொடர்புடையதாகும் எனும் முடிவிற்கு வந்துள்ளனர்.

'புரோம்' நகரின் பண்டைப் பெயர் 'ஸ்ரீக்ஷேத்திரம்' என்பதாகும். தென் இந்தியாவில் கதம்பர்களுடைய தலைநகராக விளங்கிய 'வனவாசி' என்ற பெயரும், ஸ்ரீக்ஷேத்திரத்திற்குரிய மற்றொரு பெயராக வழங்கி வந்தமை இங்குக் குறிப்பிடத் தக்கது. பெகூவிற்கு 'உசா' என்பது பழங்காலப் பெயராகும். அப்பெயர் 'ஒரிஸா'எனும் இந்திய அரசுக்குரிய பெயரின் திரிபாகச் சிலர் கூறுவர். தட்டோனில் இருந்த 'மோன்' இராச்சியத்திற்கு 'இரகமணதேசம்' என்பது பெயர். அதைப்பற்றி தாய்லாந்தில் உள்ள லோபபுரித்தூண் கல்வெட்டு, மிக விரிவாகப் பேசுகிறது. அக்கல்வெட்டு 'மோன்' மொழியிலுள்ள மிகப் பழைய கல்வெட்டாகும். அக்கல்வெட்டும் பல்லவர்களால் பயன்படுத்தப்பட்ட 'கிரந்த எழுத்துக்களால்' பொறிக்கப்பட்டிருக்கிறது.

## இந்தியாவில் பர்மிய அரசரின் திருப்பணி.

புத்த கயாவில் இரண்டு பர்மிய கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. கயசிந்தன் அங்குள்ள உலகப் புகழ்வாய்ந்த பௌத்த சமயக் கோயிலைப் பழுதுபார்த்துச் செப்பனிட்டான். அக்கல்வெட்டு இந்தச் செய்தியைத் தெரிவிக்கிறது. அவன் முதலில் ஒரு குருவினைப் புத்த கயாவிற்கு, அனுப்பி வைத்தான். அந்தக் குருவினால், அத்திருப்பணியைச் செய்து முடிக்க முடியவில்லை. எனவே, பர்மிய அரசன், ஓர் இளவரசனையும், அமைச்சனையும் இந்தியாவிற்கு அனுப்பி வைத்தான். அவர்கள் கண்ணும்

10. Quaritch Wales, H.G., The Making of Greater India, p.33

கருத்துமாகத் திருக்கோயில் திருப்பணியைச் செய்து முடித்தனர். அப்பணி கி.பி. 1079ல் தொடங்கப்பெற்றது; 1086ல் முடிக்கப்பெற்றது. புத்தகயாவிலுள்ள 'மகாபோதி' கோயிலைப் போன்ற வடிவ அமைப்பைக்கொண்ட சிறிய கோயில் ஒன்று, பகானில் கட்டப்பட்டுள்ளது. அதனைப் பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், 'ஹிடிலே-மின்லோ' என்ற பர்மிய அரசன் கட்டினான். அக்கோயில் நேர்த்தியுடையதாகவோ, கலையழகு வாய்ந்ததாகவோ தோன்றவில்லை.

### பாலர் கலைப்பரணி

பகானின் எழுச்சிக் காலத்தில், புதிய கலைப்பாணியை உடைய புத்தர் சிலைகள், பர்மாவில் புகுத்தப்பட்டன. அக்காலத்திய கிழக்கிந்தியாவில், பாலர் அரச மரபு ஆதிக்கம் செலுத்தி வந்தது. அவ்வரச மரபினரின் ஆதரவில், வளமிக்க மகாயான பௌத்த சமயத்தின் திரிந்தவடிவமாகத் தாந்திரிகப் பௌத்த சமயம் தலை எடுக்கலாயிற்று. அதன் விளைவாகப் பௌத்தருடைய கலையிலும், முக்கியமான சில மாற்றங்கள் உண்டாயின. பகானில் பெரிதும் போற்றப்பட்ட புத்தர் சிலையின் சிறப்பியல்புகள் இரண்டு இங்குக் குறிப்பிடத்தக்கன. புத்தர் வீற்றிருக்கும் பீடம் விரிவுபடுத்தப்பட்ட தாமரை மலர் வடிவில் நம் கருத்தைக் கவருகின்றது. இது ஒரு வகையான புதுப்பாணியாகும். அடுத்து, பாதங்கள் உயர்த்தப்பட்ட நிலையில், கால்கள் 'பத்மாசன நிலையில்', அச்சிலை வடிக்கப்பட்டுள்ளது. பர்மாவிலேயே அச்சிலை செய்யப்பட்டுள்ளது. ஆனால், அதனுடைய அமைப்பும், செய்முறை அழகும் இந்தியாவில் செய்யப்பட்ட சிலைகளைப்போன்றுள்ளன.

மேலைப் பர்மாவில், தாந்திரிகப் பௌத்த சமயம் பரவியிருந்தமைக்குரிய சின்னங்கள், பல கிடைத்துள்ளன. பகானில் லோகநாதரோடு கூடிய தாரையின் சிலை, அவலோகிசுவரர், மைத்திரேயர் முதலிய சிலைகள் கண்டெடுக்கப் பட்டுள்ளன.

கி. பி. எட்டாம் நூற்றாண்டு முதல் பதின் மூன்றாம் நூற்றாண்டுவரை, கிழக்கிந்தியக் கலைப்பாணியைப் பர்மா அப்படியே பின்பற்றலாயிற்று. பழைய புரோமில் பல போதிசத்துவரின் சிலைகளும், போதிசத்துவரின் வெண்கலச்சிலை ஒன்றும் தட்டோனில் பாலர் கலைப் பண்புகளோடு காணப்படுகின்றன. தட்டோனில் பாலர் கலைப்பண்புகளோடு காணப்படும் திருமாலின் சிற்பங்கள் இங்குச் சுட்டத் தக்கவையாகும். அவற்றுள், செதுக்கப்பட்ட ஆதிசேஷன் மீது திருமால் கிடக்கும் கோலத்திய சிற்பங்கள் இங்குக் குறிப்பிடத்தக்கன. இவை தமிழ் நாட்டு வைணவ சமயத்தின் தாக்கத்தையே தெரிவிக்கின்றன.

தட்டோனில் கிடைத்துள்ள இறுகிய களிமண் பலகை ஒன்றில், மது அருந்திய மங்கையொருத்தி நடனமாட, அவளைச் சுற்றி இசை வாணர்கள் நிற்கும் நிலையில் செதுக்கப்பட்ட சிற்பம் ஒன்று காணப்படுகிறது. அவ்வாடல் மகளின் நடையுடை பாவனைகள், முகச்சாயல் முதலியனயாவும் அவளை 'இந்தியப் பெண்மணி' என்பதை, எடுத்தியம்புகின்றன. அவளைச் சூழ்ந்து நின்று, கருவிகளின் மூலம் இசையினை எழுப்பும் ஆடவர் அனைவரும் இந்தியர்களே என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆடல் மகளின் அபிநயத்தோற்றம், தமிழ்நாட்டுப் பரத நாட்டிய மெய்ப்பாட்டுக் குறியீட்டை நினைவுபடுத்துகிறது.

## கோயில்கள்

பகானுக்கு அருகில் நைன்பயா (Nanpaya) எனும் கோயில் இருக்கிறது. அக்கோயில் முழுவதும் கருங்கற்களால் கட்டப்பட்டு இருக்கிறது. அதன் சுவர்களில் நேர்த்தி வாய்ந்த, அரைகுறையான புடைப்புச் சிற்பங்கள் பலசிறந்த நிலையில் உள்ளன. அவற்றுள் இந்து சமயத்தின் தெய்வங்கள், சிறந்த முறையில் செதுக்கப் பட்டுள்ளன. பகானில் உள்ள பூபயா (Bupaya) என்னும் கோயில் மிகப் பழைமையானதாகும். நாட் (Nat), அலவங்கு (Alaung), கயவுங்கு (Gayaung) முதலிய கோயில்களும் பகானில் காணப்படுகின்றன. அலவுங்கு, கயவுங்கு பெரிய விமானங்கள் உடையனவாகும். அவை திருமாலின் கோயில்களாக உள்ளன. அங்குத் திருமாலின் பத்து அவதாரங்களையும் விளக்கும் சிற்பங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்பதாவது அவதாரமாகப் புத்தரின் உருவம் செதுக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. அக்கோயில் ஏறக்குறைய பதினொன்றாம் அல்லது பன்னிரெண்டாம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

அக்கோயிலைப் பற்றி ஆராய்ந்த குவாரிட்ச் வேல்ஸ் என்னும் தொல் பொருள் ஆராய்ச்சியாளர் ''புத்த சமயத்தைப் பின்பற்றி ஒழுகியவர்கள், இந்து சமயக் கோயில் சிற்ப முறையினைப் பின்பற்றி, இந்துக்களுக்குரிய கோயிலைக் கட்டியுள்ளமை நமக்கு வியப்பூட்டலாம். புத்த சமயம் இந்தியாவில் வீழ்ச்சியுற்ற காலத்தில், தென்னிந்தியாவைச் சேர்ந்த பல்லவ-சோழர் கட்டடக் கலை முறை பர்மாவிற்கு இறக்குமதி செய்யப்பட்டு, அம்முறையைப் பௌத்தர்கள் பின்பற்றி உள்ளனர் என்பதை இவற்றால் நாம் அறிகிறோம்''[11] என்று அறிவித்துள்ளமை ஆழ்ந்து சிந்திக்கத் தக்கதாகும்.

---

11. Quaritch Wales, op. cit., p, 34

## 2. 4.

# சோழப் பேரரசர் கண்ட பர்மா

முதலாம் இராசேந்திர சோழனுடைய காலத்தில் (கி.பி. 1012-1044), சோழருடைய ஆதிக்கம் கடல்கடந்த நாடுகளில் பரவிற்று. இவனுடைய பதின்மூன்றாம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளிலும், இறுதிக் காலக் கல்வெட்டுகளிலும் இராசேந்திர சோழன், கடார நாட்டின் மீதும், மற்றும் பல்வேறு தீவுகளின் மீதும் படையெடுத்துச் சென்று வெற்றி பெற்ற செய்திகள் விரிவாகத் தரப்பட்டுள்ளன. கடாரப் படையெடுப்பு கி.பி.1025-27 அளவில் நடைபெற்றதாகத் தோன்றுகிறது.

### கடாரப்படையெடுப்பு

'கடாரம்' என்பது 'பரக்கும் ஓதக் கடாரம்'[12] எனவும் 'குளிறு தெண்டிரைக் கடாரம்'[13] எனவும் சுட்டப்பட்டுள்ளதைக் காணுகின்றோம். இவற்றிலிருந்து, கடற்கரையில் அமைந்து இருந்த ஒரு நகரமே, கடாரம் என்பது தெளிவாகிறது. செப்பேடுகளில் வரையப்பட்டுள்ள வடமொழிப்பகுதியில், அதனைக் கடாரம்[14] என்று குறிப்பிட்டுள்ளனர். சங்கத்தொகை நூல்களுள் ஒன்று பத்துப் பாட்டு. அதிலுள்ள 'பட்டினப்பாலை' எனும் பாடலில், 'காழகம்' எனும் நாடு சுட்டப்படுகிறது. அதற்கு உரைவிளக்கம் தந்த நச்சினார்க்கினியர் எனும்

---

12. கலிங்கத்துப்பரணி 138
13. ஷை 189
14. .Epi. ind; vol 22. No. 34

உரை ஆசிரியர், 'காழகம் எனப்படுவது கடாரமேயாம்' என்று மொழிந்துள்ளார்.[15]

இராசேந்திர சோழனுடைய அயல்நாட்டுப் படையெடுப்பில், இக் கடாரப் படையெடுப்பு முதன்மை வாய்ந்ததாகக் கருதப் பட்டது. 'கடாரம் கொண்டான்' எனும் சிறப்புப்பெயர், இராசேந்திரனுக்கு வழங்கியமையே, இதற்குப் போதிய சான்றாகும்.

கல்வெட்டுக் கலைஞர் திரு. வெங்கையா அவர்கள், இராசேந்திரனுடைய கடாரப்படையெடுப்பில் போர் நடந்ததாகக் குறிப்பிடப்படும் இடங்களை ஆராய்ந்துள்ளார். அவற்றுள் 'பப்பாளம்' என்பது எங்குள்ளது? என்பதை மகாவமிசத்தின் துணையைக் கொண்டு, அவர் முடிவு கட்டியுள்ளார். பர்மாவின் துறைமுகத்தை 'பப்பாளம்' என மகா வமிசம் சுட்டுவதில் இருந்து, 'பப்பாளம்' மகாவமிசம் குறிப்பிடும் 'பப்பாள' மாகவே இருத்தல் கூடும் எனும் முடிவிற்குத் தமிழ்நாட்டுக் கல்வெட்டு ஆராய்ச்சியாளர் திரு. வெங்கையா வந்துள்ளார்.[16] அதனால், கடாரம் என்பது பர்மாவில் இருந்த இராச்சியமாக இருத்தல் வேண்டும் எனத் தோன்றுகிறது. 1918 வரை ஆராய்ச்சியாளர் கடாரம், பர்மாவில் உள்ளதாகவே கருதினர்.

## வெற்றித்தூண்கள்

இக்கருத்தினை உறுதிப்படுத்தும் வகையில், பர்மாவின் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் பெகூவிற்கு அருகில் ஆறு பட்டைகளைக்கொண்ட இரண்டு வெற்றித் தூண்களைக் கண்டு பிடித்தனர். அவற்றை ஆராய்ந்து பார்த்த பின்னர், "கி.பி. 1025-1027 அளவில் நடைபெற்ற இராசேந்திர சோழனின் படையெடுப்பில் நாட்டப்பட்ட வெற்றித்தூண்கள் அவை" எனும் முடிவிற்கு அவர்கள் வந்தனர். அவற்றில் காணப்படும் கல்வெட்டு வாசகத்தால், இம்முடிவிற்கு வந்தனர். அத்தூண்களில் கி.பி. பதினோராம் நூற்றாண்டுக்குரிய தமிழ்மொழி வரிவடிவத்தில் கல்வெட்டுச் செய்திகள் பொறிக்கப்பட்டுள்ளதைக் கண்டுள்ளனர். இத்தூண் கல்வெட்டுகளை ஆராய்ந்த பர்மியக் கல்வெட்டுத்துறை அதிகாரி, டேஸேயென்கோ என்பவர், "அவை இராசேந்திர சோழனுடைய வெற்றித் தூண்களே" என்பதை அறுதியிட்டு உறுதியாக்க் கூறியுள்ளார்.[17]

---

15. பத்து. பட்டி.191 உரை
16. Epi. Ind. Vol.22; pp.280-283
17. Archaeological Report on Burma, 1908, para 25

ஆனால், 1918-ஆம் ஆண்டில் கோடஸ் (Coedes) என்னும் டச்சுக்காரர், மலாயா தீபகற்பத்தில் உள்ள 'கடொ' என்னும் பகுதியே, இராசேந்திர சோழனின் கல்வெட்டில் குறிப்பிடப் படும் 'கடாரம்' என்று தாம் கருதுவதாகத் தெரிவித்தார். இவருடைய கருத்தினையே, சமகாலத்து அறிஞர்கள் போற்றத் தொடங்கினர். இதன் விளைவாகப் பெகூவில் உள்ள இரு வெற்றித்தூண் தமிழ்க் கல்வெட்டுகள், பொய்யானவை என்று புறக்கணிக்கப்பட்டன.

## இராசேந்திர சோழனும் பர்மாவும்

இங்கு நாம் ஒன்றை மறந்துவிடக் கூடாது. பர்மா நாட்டில் பெகூ பகுதியில், தமிழ் வரிவடிவத்தில் இராசேந்திர சோழன் பெயருடன் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. 'அந்தக் கல்வெட்டுகளை நாம் ஏன் புறக்கணிக்க வேண்டும்?' என்பதற்கு அறிஞர்கள், தக்க காரணம் காட்ட முன்வரவில்லை. பர்மிய கல்வெட்டு அதிகாரியே, ''இராசேந்திரன் கல்வெட்டுகளே'' என்று ஒப்புக்கொண்டுள்ளனர். இராசேந்திர சோழன் பர்மாவையும் வெற்றி கொண்டான் என்பதற்கு இதைவிட மறைக்க முடியாத, மறுக்க இயலாத சான்று வேறு என்ன வேண்டும்? தமிழ் நாட்டுத் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையினர் இத்தூண் கல்வெட்டுகளை ஆராய்ந்து, உண்மையை உலகிற்கு உணர்த்த வேண்டும்.

எனக்குக் கிடைத்த பர்மியக் கல்வெட்டுத்துறை அறிக்கையை, அலசி ஆராய்ந்த பொழுது, இராசேந்திர சோழன் இருமுறை கடற்படையெடுப்பு நடத்தி இருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. முதல் படையெடுப்பு அந்தமான் நிக்கோபார் தீவுகளில் படைகளுடன் தங்கி, அங்கிருந்து பர்மாவின் மீது படையெடுத்துச் சென்றிருக்கலாம் எனத் துணிவதற்குத் தக்க தடையங்கள் உள்ளன. இதனை இராசேந்திரனுடைய முதல் கடற்படையெடுப்பாகக் கருதலாம்.

## கதையின் கரு

இதைப் பர்மிய நாட்டுக் கல்வெட்டு ஒன்று, சிறிது திரித்துக் கூறுகிறது. ''சான் சீத்தா என்ற பர்மிய மன்னன் காலத்தில், பகான் நகரத்திற்குச் சோழ அரசன் ஒருவன் வந்தான். அச் சோழ வேந்தனுக்குப் 'புத்தம், தருமம், சங்கம்' எனும் முப் பொருள் தத்துவங்களைப் 'பொன்' ஏட்டில், சிவப்பு மையால் எழுதி, பர்மாவின் அரசன் வரவேற்பு அளித்தான். சோழ அரசன், புத்தர் பெருமானுடைய போதனைகளைச் செவி

மடுத்து, பக்திப் பரவசமாகி, பௌத்த சமயத்தைத் தழுவினான். தன் நாட்டிற்குச் சென்று, அம்மதத்திற்குத் தொண்டாற்றப் போவதாகக் கூறி, அந்தச் சோழ மன்னன் சென்றான். இக் கதை பர்மிய அரசியல் தோல்வியை, ஆன்மிக வெற்றி எனச் சித்திரிப்பதாகத் தோன்றுகிறது.

இந்த வெற்றித் தூண் தமிழ்க்கல்வெட்டுகளால், இந்தப் படையெடுப்பிற்கு முன்பே, பர்மாவிற்கும் தமிழகத்திற்கும் ஈனயான சமயத்துறையிலும், வாணிகத் துறையிலும் தொடர்புகள் இருந்திருக்க வேண்டும் என்பது புலப்படுகிறது.

# 2.5.

# ஆனந்தாவின் ஆலயம்

பதினொன்றாம் நூற்றாண்டில் பர்மாவில், பகான் நகரில் ஓர் அரசு தோன்றியது. பழங்காலத்தில், பகான் நகருக்கு 'அரிமர்த்தனபுரம்' என்ற பெயர் வழங்கியதை முன்னரே கண்டோம். அக்காலத்தில் பர்மியக் கலைகளும் நாகரிகமும் செழிப்புற்று விளங்கின. பகானின் நிலையான அரசு, மூன்று நூற்றாண்டுகளுக்கு மேல் புகழ்பூத்து விளங்கியது. அங்கு ஆட்சி புரிந்த மன்னர்கள் கோயில் கட்டும் பணியில் பேரீடுபாடு கொண்டிருந்தனர். அவர்கள் பெரிய கோயில்கள் பலவற்றைக் கட்டினர். அவற்றிற்குப் 'பகோடாக்கள் (Pogodas)' என்பது பெயர். இத்தகைய கோயில்கள், பகான் நகரில் மட்டும் 800க்கு மேல் இருந்தமைக்குரிய பழம்பொருள் சின்னங்கள் கிடைத்துள்ளன.

## இந்தியக் கோயிலா?

பர்மாவில் காணப்படும் இந்தியக் கலைப் பாணியில் அமைந்த கோயில்களுள், மிகப் பெரியதும், பேரழகு வாய்ந்தது மாக விளங்குவது ஆனந்தாவின் கோயிலாகும். இது பகான் நகரில் பொன்றாப் புகழோடு பொலிவுறுகிறது. பர்மியக் கலையின், தலை சிறந்த படைப்பென இதனை அறிஞர் போற்றுகின்றனர். பேரரசன் கயாசிந்தனின் சிறப்புமிகு சாதனைகளில் ஒன்றாக இத்திருக் கோயில் திகழ்கிறது.

இக்கோயிலை இந்தியநாட்டுச் சிற்பிகளே கட்டியுள்ளனர் என்பதற்குரிய தடையங்கள் கிடைத்துள்ளன. இம்மாபெரும்

கோயிலை, எழுப்புவதற்குரிய அகத்தெழுச்சியை இந்தியாவில் இருந்தே, இப் பேரரசன் பெற்றிருக்க வேண்டும். இந்தியாவில் இஸ்லாமியர்களின் கொடுமையைப் பொறுக்க இயலாது, பௌத்த சமயத் துறவிகள், பர்மாவிற்கு ஓடிச்சென்றனர். ஒரிஸாவில் 'உதய கிரி' எனும் இடத்திலுள்ள 'ஆனந்தா' கோயிலைப்பற்றிப் பெருமையாகக் கயசிந்தனிடம் அவர்கள் சொன்னார்களாம். தன்னுடைய மனக்கண்களால், அக்கோயிலைக் கற்பனை செய்து பார்த்து அம்மன்னன், மகிழ்ந்தான். நாளடைவில், அத்தகைய கோயில் ஒன்றைத் தன் நாட்டில் எழுப்ப அவன் துடித்தான். இந்திய நாட்டிலிருந்து சிற்பிகளை வரவழைத்தான், தன் உள்ளத்தில் உருவெடுத்த அந்தக் கோயிலை, கல்லிலே கலைக்கோயிலாக எழுப்புமாறு செய்தான்.

ஆனந்தாவின் அழகுமிகு ஆலயம், குப்தர் காலத்திய எழிலையும் நேர்த்தியையும் பர்மிய மண்ணில் புத்தொளிவிட்டுப் பிரகாசிக்கச் செய்கிறது எனச் சிலர் கூறுவர். ஆனால், இக்கால கலைவல்லார், இதனை ஒப்புக்கொள்ளுவது இல்லை. அதில் பர்மிய நாட்டுக் கலைப்பண்பாகிய விரிவான அணியழகு இணைந்தும், இழைந்தும் காணப்படுகிறது. மற்றும், தென்னிந்தியக் கோயில் கட்டட அமைப்பினை உடையதாகவும் உள்ளது என்பன இக்கால கலை நூலாரின் கணிப்பாகும்.

## கோயிலின் அமைப்பு

ஆனந்தாவின் அழகுமிகு கோயில், 550 சதுர மீட்டர் கொண்ட முற்றத்தின் மையப் பகுதியில் கட்டப்பட்டுள்ளது. அக்கோயிலின் உள்ளே 9.30 மீட்டர் உயரம் உள்ள புத்தரின் சிலை வழிபாட்டிற்குரிய தெய்வமாக அமைக்கப்பட்டு இருக்கிறது. கோயிலின் சுவர் 11.70 மீட்டர் உயரம் உடையது. அதற்குமேல் வளைந்த முகட்டையுடைய இரண்டு கூரைகள் அணிசெய்கின்றன. அதன்மீது, அகன்ற நிலையில் இருந்து குறுகிச் செல்லும் நான்கு மாடங்கள், ஒன்றின்மீது ஒன்றாகக் கட்டப்பட்டுள்ளன. அதன் தோற்றம், வட இந்தியக் கோயில் கோபுரங்களைப் போன்றதாகும். கோபுரத்தின் உச்சியில் தூபி ஒன்று நாட்டப்பட்டுள்ளது. கூரையின் நான்கு மூலைகளிலும் பெரிய தோரண வாயில் வளைவுகளோடு கூடிய, சிறிய கோபுரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு அமைப்பின் அழகும் கலையின் முறைப்பாடும், இணைந்தும் இசைந்தும் தோன்றும் எழில்மிகு தேவாலயமாக ஆனந்தாவின் அழகுமிகு ஆலயம் அமைக்கப்பட்டுள்ளது.

## கவின்மிகு கல்லோவியங்கள்

ஆனந்தாவின் திருக்கோயில் சுவர்களில், சிற்பங்கள் செதுக்கப்பட்ட கற்பலகைகள் புதைக்கப்பட்டுள்ளன. நன்கு மெருகிடப்பட்ட களிமண் பலகைகளும் புதைக்கப்பட்டுள்ளன. அவை அழகுக்கு, அழகு செய்யப்பட்டதைப்போன்று, கண்ணையும் கருத்தையும் கவரும் கவின்மிகு கல்லோவியங்களாகக் காட்சி தருகின்றன. அரைகுறையான வடிவுடைய புடைப்புச் சிற்பங்கள் எண்பது கற்சுவரில் செதுக்கப்பட்டுள்ளன.

மெருகிடப்பட்ட களிமண் பலகைகளில், புத்தசாதகக் கதைகளில் இருந்து, பல காட்சிகளும், புத்தரின் வாழ்க்கையில் இருந்து பல நிகழ்ச்சிகளும் கல்லோவியங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இக்கோயிலின் அமைப்புமுறை, ஓர் அளவிற்குப் புதியதாக இருக்கிறது. எனினும், இதன் அடிப்படை இந்தியக் கோயில் கட்டடக் கலை மரபையே பின்பற்றி அமைக்கப்பட்டுள்ளமை, கூர்ந்து நோக்குவார்க்குப் புலனாகாமல் போகாது.

## தென்னிந்தியக் கலைப்பாணி

கடந்த மூன்று நூற்றாண்டுகளாக, உலக அறிஞர்கள் பலருடைய கருத்தை, இக்கோயில் கவர்ந்துள்ளது. 'கல்லும் சொல்லாதோ கவி' என்பதை இக்கோயிலைக் காண்பவர்கள் உண்மை வெறும் புகழ்ச்சி இல்லை!' எனத் துணிவார்கள். இதனை நேரிலே கண்டு உள்ளத்தைப் பறிகொடுத்த கலை ஆர்வலர்கள் பலராவர். அவர்களுள் பெருஞ்சிறப்பு வாய்ந்த அறிஞர் சிலருடைய கருத்துரைகளைக் காண்போம்.

''ஆனந்தா கோயிலைத் திட்டமிட்டுக் கட்டிய சிற்பிகள் இந்தியர்கள் என்பதில் சிறிதும் ஐயத்திற்கு இடமில்லை. இக்கோயிலின் விமானம் முதல் அடிமட்டம் வரையில் உள்ள எல்லாப் பொருள்களும், இதன் தாழ்வாரங்களில் காணப்படும் சிற்பங்களும், அடிச்சுவர்களில் களிமண் பலகைகளில் காணப்படும் சிற்பங்களும் இந்தியக் கலைப் பண்பின் முத்திரைகள் பொறிக்கப்பட்டனவாக உள்ளன. இக்காரணத்தால், ஆனந்தாக் கோயில், பர்மாவின் தலைநகரில் கட்டப்பட்டு இருந்தாலும், இதனை இந்தியக் கோயில் எனவே கூறலாம்''[18] என்பது கலைவல்லார் ஒருவரின் கருத்தாகும்.

தென் கிழக்காசிய நாடுகளின் தொல் பொருள் ஆராய்ச்சியில் குவாரிட்ச் வேல்ஸ் எனும் ஆங்கிலேய அறிஞர் சிறந்து விளங்குகிறார். ஆனந்தாவின் கோயிலை மிக நுட்பமாக அவர் ஆராய்ந்

18. Chas, Duroiselle, The Ananda Temple at Pagan, P 9.

துள்ளார். ''இங்குத் தென்னிந்தியத் திருக்கோயில் ஒன்று (ஆனந்தாக் கோயில்), வட இந்திய சிகரத்தையுடையதாகக் காணுகின்றோம். இத்தகைய கலப்புமுறை, பிற்காலப் பர்மியக் கட்டடக் கலைப்பாணியில் புகுந்து இருக்கலாம் எனத் தோன்றுகிறது. பெருமிதத் தோற்றம் உடைய இந்தியக் கோயில்களைப் போன்றே, கோயில் கட்டும் வழக்கம், கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டு வரையில், பர்மாவில் இருந்து வந்தமை புலனாகின்றது. ஆயினும், அம்முறையைப் பின்பற்றிய பர்மியர்கள், அம்முயற்சியில் வெற்றி பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது[19] என்று அவர் அறிவித்துள்ளமை இங்குக் கருதத்தக்கது.

பர்மாவில் உள்ள கோயில்களைத் தென்னிந்திய சிற்பிகளே கட்டியிருக்க வேண்டும். அக்கோயிலின் அமைப்பு மட்டுமே அன்றி, அவற்றில் உள்ள சிலைகளும், அவற்றின் வடிவ அமைப்பும், தோற்றமும், சாயலும் தனிச்சிறப்பு வாய்ந்த தமிழகக் கலைமுறையை ஒத்துள்ளன. மேலும், நெடுங்காலம் தமிழர்கள் அந்நாட்டில் நிலைத்து வாழ்ந்தமையால், அவர்கள் ஆற்றியுள்ள கலைத்தொண்டு பர்மிய நாகரிக வளர்ச்சிக்கு உறுதுணையாக அமைந்தது[20] எனும் அறிஞரின் துணிவுரை, இங்கு நினைவு கூர்தற்கு உரியதாகும்.

ஆனந்தாவின் கோயில் அமைப்பையும், கலைச்சிறப்பையும் காணுகின்ற பொழுது, நமக்கு வியப்பு உண்டாகிறது. பௌத்த சமயத்தைச் சேர்ந்தவர்கள், இந்து சமயக் கோயில் அமைப்பைப் பின்பற்றியுள்ளார்கள் என எண்ணத் தோன்றும். ஆனால், நாம் ஓர் உண்மையை மறந்துவிடக்கூடாது. பௌத்த சமயம் இந்தியாவில் வீழ்ச்சியுற்ற காலத்தில், ஆனந்தாவின் அழகுமிகு ஆலயம் கட்டப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. அக்காலத்தில், தென்னிந்தியாவில் இருந்து பல்லவ, சோழர் கலைப்பாணிகள், பர்மாவில் இறக்குமதி செய்யப்பட்டன; புதுமை மோகத்துடன் பௌத்தர்களால் போற்றிப் பின்பற்றப்பட்டன.

இதன் விளைவாகப் பர்மாவில் கட்டடக் கலைப்பாணியில், இந்து சமயத்தினுடைய கோயில் அமைப்பு முறையின் சாயல் படிந்தது[21] எனலாம். இவ்வாய்வுரைகள் யாவும், பர்மாவின் பகான் நகரிலுள்ள ஆனந்தாவின் திருக்கோயிலின் அமைப்பிலும் வனப்பிலும் பொதுவாக இந்தியக் கலைப்பாணியின் சாயல்

19. Quaritch wales, op. cit. p. 48
20. Epigraphia Indica. Vol. 4 : p. 148
21. Reginald Le May, op. cit. p. 42

சிறப்பாகத் தமிழ் நாட்டு, திராவிடக் கட்டடக் கலைப்பாணி யின் தாக்கம் கணிசமான அளவிற்குப் பதிந்துள்ளதைப் பறை சாற்றுகின்றன,

## பிற கோயில்கள்

பர்மாவின் சிறப்புமிகு அரசனான அலவுங்கசித்து, பர்மாவில் பல கோயில்களை எடுப்பித்துள்ளான். இவன் கி. பி. 1144 இல் பகானில் ஒரு கோயில் கட்டினான். அதற்குத் 'தட்பை யினியு கோயில்' எனும் பெயர் வழங்கிவருகிறது. அக்கோயில் இவ்வரசனுக்குப் பொன்றாப் புகழைத் தேடித் தந்துள்ளது. அக் கோயிலும் இந்தியக் கோயில் கலைப்பாணியைப் பின்பற்றி அமைக்கப்பட்டதாகும். அதில் ஐந்து மாடங்கள் உள்ளன. தூபம், விகாரை ஆகிய இரண்டினுடைய அமைப்புகள் கலந்த ஒன்றாக அது காட்சி அளிக்கிறது. அக்கோயிலுக்கு அருகிலே உள்ள 'ஷு வேகு' (Shewegu) கோயிலையும் இவ்வரசனே கட்டி யுள்ளான். அக்கோயிலில் தான், இவ்வரசன் காலமானான்.

ஆனந்தா, தட்பையினிய, ஷுவேகு ஆகிய மூன்று கோயில் களும் செங்கற்களாலும், சுதையாலும் கட்டப்பட்டவையாகும். இவை யாவும் பர்மியக் கலைப்பாணியின் தலைசிறந்த சின்னங்க ளாகும். அவற்றிற்கு இணையாக, இந்தியாவீல் சிந்து மாநிலத் தில் (பாகிஸ்தானில்), மீர்பூர் காஸ் எனற இடத்தில், கி.பி. 400 அளவில் கட்டப்பட்ட கோயில் ஒன்று இருப்பதாக அறிஞர் ஆனந்த குமாரசாமி கூறுகிறார். சதுரவடிவமான அடித் தளத்தையுடைய செங்கற்களால் கட்டப்பட்ட தூபி ஒன்று அங்கு இருக்கின்றது. அதன் அடித்தளத்தில் மூன்று சிறிய கோயில்கள் கட்டப்பட்டுள்ளன.

இவற்றால், பர்மாவில் கோயில் கட்டும் பழக்கமும், கலைப் பாணியும் இந்தியாவில் இருந்து கற்றுக் கொள்ளப்பட்ட செய்தி உறுதிப்படுகிறது. இந்நூற்றாண்டின் முற்பகுதிவரை, ஆங்கிலே யர்களால், இந்தியாவின் ஒரு பகுதியாகவே பர்மா ஆட்சி செய் யப்பட்டமை இங்கு நினைவுகூர்தல் வேண்டும். நாட்டு எல்லை அமைப்பால் மட்டும் அல்லாமல், பண்பாட்டுப் பாரம்பரியத் தாலும் பர்மிய நாடு, நம் பாரதத்தோடு நெருக்கமான உறவு கொண்டுள்ளமை, கலை வளர்ச்சியாலும் புலனாகின்றது.

## 2.6.

# இலக்கியக் கலை

பதினைந்தாம் நூற்றாண்டில், பர்மிய மொழியில் சிறந்த இலக்கியங்கள் தோன்றியதை, நாம் முன்னரே கண்டோம். பர்மிய மொழியின் இலக்கிய வளர்ச்சியில், பௌத்தத் துறவிகள் பெரும்பங்கு கொண்டுள்ளனர்.

### கவிதைக் கலை

பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் (கி.பி. 1468-1529), பிக்சு இரத்தசாரர் என்ற புலவர் வாழ்ந்தார். அவர் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர். ஜகைங்கு மலையில் இருந்து பௌத்தக் கல்லூரியில் அவர் கல்வி பயின்றவராவர். இரத்தசாரர், இளமையிலேயே சிறந்த கவிஞராகத் திகழ்ந்தார். அவர் 'அத்திபால சாதகம்' என்பது பற்றி, 'அத்திபால பியோ' எனும் பெருங்காப்பியத்தை இயற்றியுள்ளார். அக்காப்பியம், கவிநயம் வாய்ந்தது; சொல் நயம் மிக்கது; பொருள் நயம் பொதிந்தது. இவ்வியல்புகளால், இதனைச் சிறந்ததோர் இலக்கியப் படைப்பாகப் பர்மிய அறிஞர் போற்றுகின்றனர்.

இந்தப் புலவருடைய காலத்திலேயே, 'சிந்துயே' எனும் மற்றொரு கவிஞர், சிறப்புற்று விளங்கினார். அவர் அரசவைப் புலவராகப் பெருவாழ்வு பெற்றிருந்தார். கி.பி. 1476 அளவில் அவர் இயற்றிய பாடல்களின் தொகுப்புகள் சில வெளிவந்தன. பண்டைக் காலப் பர்மிய அரசர்களுடைய வீரம், கொடைத் திறன் பற்றி, நாட்டில் வழங்கி வந்த செய்திகளை அடிப் படையாகக் கொண்டு, பல வீரவரலாற்றுப் பாடல்களை, அவர் இயற்றியுள்ளார். மற்றும், நாட்டுப் பாடல்களையும் பாடி

யுள்ளார். இவற்றோடு, வரலாற்றுச் செய்திகள் நிறைந்த கதைப்பாடல்களையும் அவர் படைத்துள்ளார்.

## தாலப்பருவப்பாடல்

ஆயினும், இத்தகைய கதைப்பாடல் வகையில் அவருக்கு முன்னோடியாக விளங்கியவர் 'ஆதுமினையோ' என்பவராவர். இவர், அரக்கானின் இளவரசனைப் போற்றிப் பாடிய ''எசியின்'' எனும் அவைக்களப் பாடல், பெரும் புகழ்வாய்ந்தது. இப்பாட்டின் நோக்கையும் போக்கையும் பின்பற்றியே, 'சிந்துயே' தம் போற்றிப் பாடல்களையும், கதைப்பாடல்களையும் இயற்றியுள்ளார். எசியின் எனும் பாடல், அரசருடைய குழந்தையை, முதன்முதல் தொட்டிலில் இட்டுப் பாராட்டி சீராட்டும் காட்சிகளைச் சித்திரிப்பதாகும். ஓரளவிற்கு இது, தாலாட்டு முறையில் அமைந்த தாலாட்டுப் போற்றிப்பாடலாகும்.

நம்முடைய ''பிள்ளைத் தமிழ்'' இலக்கியத்துள் இடம் பெறும் தால (தாலாட்டு)ப் பருவப் பாடல்கள் ''எசியின்'' பாடல்களைப் போன்று தோன்றுகின்றன. குழந்தையினுடைய குடிப்பெருமையையும், மூதாதையரின் வீரத்தையும், கொடை அளி, செங்கோல் திறன்களையும் போற்றியுரைக்கும் முறையில் அமைந்த இசைப்பாடல்களாக இவை உள்ளன.

அரசிளங் குழந்தை எதிர்காலத்தில், எவ்வெவ்வாறு சீரும் சிறப்பும் பெற்று, புகழ் பூத்து விளங்கும் என்பதை, முன் கூட்டியே அறிவிக்கும் 'முன்னறிவிப்புப்' பாடல்களாகவும் அவை போற்றப்படுகின்றன. இத்தகைய 'தாலாட்டுப் பாடல்கள்' வெறும் நாட்டுப்புறச் சாயல்வாய்ந்த, பாமரர் ப்பாடல்களாகப் பர்மிய மொழியில் அமையவில்லை. நம் தமிழ் மொழியில் ஏற்றமிகு இலக்கியப் பாடல்களாகப் 'பிள்ளைத் தமிழ்'ப் பாடல்கள் பொலிவுறுவதைப் போன்று, பர்மிய மொழியின் ''எசியன்''எனும் தாலாட்டு, வீரப்பாடல்களும் ஏரும், எழிலும் பெற்று, இலக்கிய மணத்தோடு திகழ்கின்றன.

## இயற்கைக் கவிஞர்

பர்மாவின் தெற்குப் பகுதியில், தவுங்கு எனும் நகரை மையமாகக் கொண்டு பதினைந்தாம் நூற்றாண்டில், ஓர் அரசு எழுச்சியுற்றதை முன்னர், நாம் கண்டோம். அந்நகரில் புலவர் க்ளும், கவிஞர்களும், கலைஞர்களும் சென்று கூடினர். பொதுவாக அவர்கள் எல்லாருமே, அரசவைக் கவிஞர்களாகவே சிறப்புற்று விளங்கினர். அவர்களுள் நவதேகியி (Nawadegyi)

என்பவர் பெருமைமிகு கவிவாணராக விளங்கினார். அவர் சீனா வின் எல்லைப் பகுதியிலும், தாய்லாந்தின் கடற்கரைப் பகுதி யாகிய 'மோன் பிரதேசத்திலும்' தாயகத்தின் சார்பாகப் போர் புரிந்துள்ளார். இதனால், அப்பகுதிகளில் இனிய இயற்கைக் காட்சிகள் அவருடைய பாடல்களில் இடம் பெற்றுள்ளன. விண்ணைத் தீண்டித் தழுவும் நீல மலைகளும், வற்றாது வளங் கொழிக்கும் ஆறுகளும், பூங்குயில் கூவிடும் மாஞ்சோலைகளும், பச்சைப்படாம் போர்த்த பார்மகளின் பேரெழிலும் அவருடைய பாடல்களில், சிந்தைக்கினிய சொல்லோவியங்களாகத் தீட்டப் பட்டுள்ளன,

## மழைப்பாடல்கள்

இவருடைய சீடர்களுள், தலை சிறந்தவர் 'நாத் ஷின்ன வுங்கு' (Nath Shinaunge) என்பவராவர். அவர் தவுங்குவின் வீரமிகு மன்னராவார். இயற்கையெழிலைப் பற்றிக் கவிபாடு வதில் அவர் வல்லவராக விளங்கினார். புத்தர் பெருமானைப் போற்றி வணங்கும் துதிப்பாடல்களையும் அவர் இயற்றியுள் ளார். அவை பக்திச்சுவை ததும்புவனவாக உள்ளன. அவை அல்லாமல், நாத்ஷின்னவுங்கு 'மழைப் பாடல்கள்' எனும் புதிய தோர் இலக்கியப் பாடல் வகையையும் படைத்துள்ளார். அவை, அன்பின் ஆற்றலை அறிவிக்கின்றன; இதயக் கனிவை எடுத்தியம்புகின்றன; கலையழகு வாய்ந்த கவிதைகளாக விளங்குகின்றன.

## உரைநடையின் தோற்றமும் வளர்ச்சியும்

தவுங்கு அரசர்களின் ஆட்சிக் காலத்தில், பர்மிய மொழியின் உரைநடை வளர்ச்சி உச்சநிலையை அடைந்தது. 'பின்னயி தாலா'(Binnyadala) என்றஅமைச்சர், பர்மிய வரலாற்று நூலை மோன் மொழியில் இருந்து, பர்மிய மொழியில் மொழி பெயர்த் தார். அவருடைய நடை பெருமிதம் வாய்ந்ததாகும்.

ஊகாலர் (Ookala) என்பவர், கி.பி. 1724ல் 'மகாராச வமிசம்' எனும் வரலாற்று நூலைப் பர்மிய மொழியில் எழுதி னார்.

## நாடகம்

பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில், ஆவா (Ava) மீண்டும் தலைநகரமாயிற்று. அங்கு 'நாடகம்' எனும் புதிய இலக்கியவகை, போற்றி ஆதரிக்கப்பெற்றது. உங்கிப தேசராஜா (Wungipades raja) என்பவர், (கி.பி. 1684-1754)

எழுதிய 'மாணிக்க யாத்திரை' (Mannikakjat) என்னும் செய்யுள் நாடகமே, பர்மிய மொழியில் தோன்றிய முதல் நாடகமாகும்.

## இராமகாதையின் தாக்கம்

பேரரசர் அலவுங்கபயா என்பவர், கி.பி. 1702ல் புதியதோர் அரசமரபைச் 'சுவேபோ' என்னும் நகரில் நிறுவினார். இக்காலத்தில் 'இராமகாதை' பர்மிய மக்களின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. பர்மியக் கவிஞர்கள் 'இராமன் சீதை' வரலாற்றைச் சிறப்புமிகு கவிதைகளில் பாடத் தொடங்கினர். தாய்லாந்து நாட்டின் பண்பாட்டுத் தாக்கத்தாலேயே, 'இராமகாதை' பர்மாவில் செல்வாக்குற்றது என்பர்.

மாங்தோ (Mangtoe) என்பவர், 1751 அளவில், இராமனைப்பற்றிப் பெருங்காப்பியம் ஒன்றை இயற்றினார். இராமர் ஏழை, எளிய மக்களிடத்துப் பேரன்பு பூண்ட 'ஏழை பங்காளனாக' அக்காப்பியத்தில் சித்திரிக்கப்பெற்றுள்ளமை நம் கருத்தைக் கவருகிறது. உள்ளத்தை உருக்கத்தக்க பாடல்கள் பல அதில் இடம் பெற்றுள்ளன.

மாங்ஜா என்பவர், சையாமிய மொழியில் உள்ள இராம நாடகத்தை, அதிலுள்ள இசைமிகு இனிய கீதங்களுடன், பர்மிய மொழியில், மொழிபெயர்த்துள்ளார். இவ்வாறு பர்மிய இலக்கியம், பௌத்த, இந்து சமயப் பழங்கதைகளைக் கருப்பொருளாகக் கொண்டு, வளர்ந்து சிறந்துள்ளமை கருதத்தக்கதாகும்.

## எழுத்து வடிவம்

பர்மிய மொழியின் எழுத்துமுறை, தமிழகத்தின் பல்லவருடைய கிரந்த எழுத்துகளை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டதாகும். உயிர் எழுத்துகள் பதினொன்றும், மெய்யெழுத்துகள் 32ம் உள்ளன. ஓரசைச் சொற்களைக் கொண்ட 'தனிநிலை' மொழி, பர்மிய மொழி.

பர்மியக் கலை வளர்ச்சிக்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் உந்துதல் சக்தியாகவும் தூண்டு கோலாகவும் இந்தியச் சிந்தனையும், பண்பாட்டு மரபுவழியும் பன்னெடுங்காலமாக அமைந்துள்ளதை யாரும் மறைக்க இயலாது.

## 2.7.
## பர்மாவில் தமிழ்ப்பண்பாடு

### இனக்கலப்பு

வரலாற்றுக் காலம் நெடுக, இந்தியாவில் இருந்து வந்து குடியேறிய மக்களைப் பர்மா, ஆர்வத்துடன் வரவேற்று, வாழ் வளித்து வந்துள்ளது; தொடக்க காலத்தில், பர்மாவில் குடி யேறிய இந்தியர்கள், பர்மிய மக்கள் சமுதாயத்தில் இரண்டறக் கலந்தனர். காலப் போக்கில் பர்மிய மக்களாக மாறிவிட்டனர். இன்றும் ஓரினமாக்கப்படும் இரசவாதம் தொடர்ந்து நடை பெற்று வருகிறது.

கி.பி. 1470ல் நிகேதின் (Nigitin) எனும் ருஷிய நாட்டுப் பயணி பர்மாவிற்குச் சென்று இருந்தார். ‘பெகூ’ எனும் துறைமுகத்தின் அருமைபெருமைகளை அவர் விளக்கியுரைத்துள் ளார். அந்நிலையில், அத்துறைமுகத்தில் இந்தியர் (தமிழர்) களே பேரளவிற்கு வாணிகத்தில் ஈடுபட்டுள்ள செய்தியை அவர் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார்.[22]

கிழக்காசிய நாடுகளோடு இந்தியாவைத் தொடர்பு படுத் தும் நிலவியல், சங்கிலியாகப் பர்மா விளங்கி வருகிறது. கிழக் காசிய நாடுகளும், அந்நாட்டு மக்களும் இந்தியாவில் தோன்றிய பௌத்த சமயம் பர்மாவில் சிறப்புற்று விளங்குவதைப் பாராட்டு கின்றன. இதன் மூலம், இந்தியர்களாகிய நம்மோடு தோழமை கொள்ளுகின்றனர்.

---

22. W. S. Desai, India and Burma, p. 24

இக்காலத்தில், தெற்கு ஆசிய நாடுகள், தென்கிழக்காசிய நாடுகள் பலவற்றின் மக்களினங்கள், மொழிகள், பண்பாடுகள் அனைத்தும் ஒன்றாகக் கலக்கும் மைய இடமாக ரங்கூன் மாநகர் விளங்குகிறது. மற்றொரு புறம் சீனாவோடு தொடர்பு கொண்டு, மங்கோலிய இனப்பண்பாட்டைக் கீழை நாடுகளுக்கு அது வழங்கி வருகிறது.

## பர்மாவில் தமிழர் குடியேற்றம்

கீழைப்பர்மா, பிரிட்டிஷாரின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. அப்பொழுது (1852 அளவில்), தமிழ் மக்கள் பேரளவிற்குப் பர்மாவிற்குச்சென்று குடியேறினர். அங்குப் பலவகைத் தொழிலில் இவர்கள், ஈடுபட்டனர். எனினும், உழவுத் தொழிலையே பெரும்பாலோர் செய்து வந்தனர். கணிசமான எண்ணிக்கையுடைய நகரத்துச் செட்டிமார்கள், அங்கு வட்டிக் கடை வைத்து இருந்தனர். வெளிநாட்டுச் செலாவணியை அரிசி, தேக்கு மூலமே, பர்மா இரண்டாவது உலகப்போருக்கு முன்னர் பெற்றி வந்தது. அப்பொழுது, 98,55,258 ஏக்கர் விளைநிலத்தில் அங்கு நெல் பயிரிடப்பட்டது.

இவ்வாறு பர்மா, நெற்களஞ்சியமாக மாறுவதற்குத் தமிழருடைய உழைப்பு முதலீடாக அமைந்தது. இதனைப், ''பர்மா நிலத்தில் பச்சைவயல் முகங்காட்ட, பச்சை வயலிடையே பச்சரிசி சிரித்திருக்க, அத்தனையும் பொன்னாக ஆக்கிப் படைத்தவர்கள் நம்மவரே என்றால், நாட்டோர் மறுப்பதில்லை'' என்று கவியரசர் கண்ணதாசன் மொழிந்துள்ளமை இங்கு நினைவுகூர்தற்கு உரியதாகும்.

பர்மாவின் 1931 ஆம் ஆண்டுக் குடிமக்கள் கணிப்பால், தமிழர் உட்பட பர்மாவில் வாழ்ந்த இந்தியரின் எண்ணிக்கை பதினோர் இலட்சம் என்பது தெரிகிறது.

## 1931-ல் பர்மாவின் குடிக்கணிப்பு

| வரிசை எண். | மொழிவழி இந்திய மக்கள் | பர்மாவில் பிறந்தவர் | இந்தியக் குடியேறிகள் | தொழில் |
|---|---|---|---|---|
| 1. | ஆந்திரர் | 10, 386 | 4, 00, 196 | துறைமுகம், கூலி வேலை, ரிக்ஷா இழுத்தல் |
| 2. | இந்திமொழியினர் (வட இந்திய மக்கள்) | 12, 820 | 1, 68, 580 | வாணிகம், நகை வாணிகம், கூலி வேலை. |
| 3. | ஓரியர் (ஒரிஸா மாநிலத்தவர்) | 1, 076 | 1, 31, 826 | வாணிகம், கிணறு வெட்டுதல், கட்டடம் கட்டுதல் (ஒட்டர் வேலை) பிற கூலி வேலைகள் |
| 4. | தமிழர் | 22, 536 | 3, 57, 011[23] | அலுவலகப்பணி காசுக்கடை உழவுத் தொழில் வாணிகம |

23. 1945க்குப் பிறகு தமிழர் 1,30,000 பேர் பர்மாவில் வாழ்வதாகக் குறிப்பிடுகிறார்கள்.

## தமிழர் வெளியேற்றம்

1930-ஆம் ஆண்டில், 'இந்தியர் பர்மியர் இனக்கலவரம்' பர்மாவில் உண்டாயிற்று. இதன் விளைவாகப் பர்மாவின் செழிப்பிற்கும், சிறப்பிற்கும் காரணமான தமிழ்க் குடிமக்கள், பேரளவிற்குப் பர்மாவில் இருந்து, தங்கள் தாயகம் திரும்பத் தொடங்கினர். மற்றும், பர்மாவில் தேசிய உணர்வு, கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியது.

இதுவரை இந்தியாவின் ஒரு மாகாணமாக பர்மா இருந்து வந்த நிலைமை மாறியது. இந்தியாவில் இருந்து பிரிக்கப்பட்டு, தனிநாடாக, ஆங்கிலேய ஆட்சியாளர்களால் 'பர்மா' எனும் நாடு உருவாக்கப்பட்டது. இதனால், உண்டான தொல்லைகளாலும், நெருக்கடிகளாலும் திரளான தமிழ் மக்கள் அவ்வப்போது பர்மாவை விட்டு வெளியேறினர்.

மற்றும், 1941-ஆம் ஆண்டு, இரண்டாவது உலகப்போர் பர்மாவிலும் பரவியது. அது ஜப்பானியரின் தாக்குதலுக்கு இரையாகியது. அந்நிலையில், அங்கு வாழ்ந்த இந்தியருள் பெரும்பாலோர் தாயகம் திரும்ப வேண்டிய அவலநிலை உண்டாயிற்று. ஐந்து இலட்சத்திற்கு மேற்பட்ட இந்தியர்கள், அப்போது பாரதத்தை நோக்கி வந்தனர். இதனை ''மாபெரும் வெளியேற்றம்'' என்று குறிப்பிடுவர். அப்பொழுது ஏறக்குறைய மூன்று இலட்சம் தமிழர்கள், பர்மாவில் இருந்து ஆதரவற்றவர் (அகதி)களாகத் தமிழ் நாடாகிய சென்னை மாகாணத்திற்கு வந்தனர். 1942—43 ஆம் ஆண்டுகளில், தமிழ் நாட்டின் ஒவ்வொரு சிற்றூரிலும், குறைந்தது நான்கைந்து குடும்பங்களாகிலும் பர்மாவில் இருந்து வெளியேறிய ஆதரவற்றோர் குடும்பங்களாக இருந்தன.

தங்கள் சொத்தையும், உடைமைகளையும், வீடு வாசல்களையும் பர்மாவிலேயே விட்டுவிட்டு, மணிப்புரி மூலம் நிலவழியாக, நம் மக்கள் பர்மாவில் இருந்து வெளியேறிய சோகக் கதையை உலகம் நன்கு அறியும். எஞ்சியோர், போருக்குப் பிறகு, பர்மாவின் 'புதிய மறுவாழ்விற்கு' அரும்பாடுபட்டனர். 1962-ஆம் ஆண்டு, பர்மாவின் அரசியலிலே மாற்றம் உண்டாயிற்று. அதனால், 'சுரண்டும் அயல் நாட்டவரை' வெளியேற்றும் திட்டம் செயல்படுத்தப்பட்டது. இதன் விளைவாக, இரண்டு இலட்சத்திற்கு மேற்பட்ட இந்தியர்கள், பர்மாவிலிருந்து வெளியேற்றப்பட்டனர். இடையிடையே நடைபெற்ற உடன்படிக்கைகளின்படி, இன்னும் தொடர்ந்து இந்தியர்கள் வெளியேறிக் கொண்டுள்ளனர்.

### நகரத்தாரின் நற்பணி

கி.பி. 1850 முதல் பொருளீட்ட, திரள்திரளாக நகரததுச் செட்டிமார்கள், பர்மாவிற்குச் சென்று, குடியேறி வந்தனர். தொடக்கத்தில் மேமியோ, மோல்மோன் நகரங்களில் இவர்கள் தங்கி, வாழ்ந்தனர். 1930-ஆம் ஆண்டிற்குள், இவர்கள் பர்மா முழுவதிலும் பரவி இருந்தனர். 1940அளவில் பர்மாவில் மட்டும் 1665 வட்டிக் கடைகள் நகரத்தாரால் நடத்தப்பட்டு வந்ததாகத் தெரிகிறது. ஏறக்குறைய பத்து கோடி ரூபாயை அக்காலத்தில் இவர்கள், வட்டிக் கடைகளில் முதலீடு செய்து இருந்தனர். 1941-ஆம் ஆண்டு அளவில், பர்மாவின் மூன்று இலட்சம் ஏக்கர் விளைநிலம் நகரத்தாரின் சொத்தாக இருந்து வந்தது.

ஆனால், நாம் முன்னர் கண்ட காரணங்களால், நகரத்தாரில் தொண்ணூறு விழுக்காட்டினர், பையப்பையத் தமிழகத்திற்குத் திரும்பி விட்டனர். எஞ்சியுள்ள தமிழ் மக்கள், பர்மாவில் தமிழ்ப் பண்பாட்டின் காவலர்களாக இருந்து வருகின்றனர்.

### சமயப்பணி

பர்மாவில் நெடுங்காலமாகத் தமிழும், சைவமும் போற்றி வளர்க்கப்பட்டு வந்ததை அறிகிறோம்.

தேன் கருமாப்பிள்ளை என்பவர், ரங்கூன் மாநகரில் மாரியம்மன் திருக்கோயில் ஒன்றை எழுப்பியுள்ளார். ஆடி, தை, சித்திரைமாதங்களில், இத் திருக்கோயிலில் திருவிழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. இக்கோயிலில் ஆடி மாதத்தில் நடைபெறும் 'தீ மிதித்தல் திருவிழா, பெருஞ்சிறப்பு வாய்ந்தது. இக்கோயிலில் நடைபெறும் விழாக்கள் எல்லாவற்றுக்குமே, பர்மாவின் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்துவரும் தமிழ் மக்கள் பேரார்வத்தோடு வந்து வழிபாடு செய்கின்றனர். தமிழன் குடியேறிய நாடுகளில் எல்லாம் கண்ணகி மதுரையை எரித்ததன் அடையாளமாகப் போற்றப்படும் 'தீமிதித்தல்' திருவிழா நடத்தப்பட்டு வருவது கருதத்தக்கதாகும்.

இராமநாதன் செட்டியார் என்பவர் அங்குத் திருமால் (பெருமாள்) கோயிலைக் கட்டியுள்ளார். இக்கோயில், காஞ்சி வரதராசப் பெருமாள் கோயிலின் பாணியில், அமைக்கப்பட்டுள்ளது. கோயில் வழிபாட்டுமுறை பாஞ்சாரத்திரிக ஆகமத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். தமிழருடைய கலைத்திறனிற்கும் பண்

பாட்டின் சிறப்பிற்கும் இக்கோயில் சிறந்ததோர் எடுத்துக் காட்டாகும்.

இந்நாட்டுத் தமிழரிடையே, முருகவழிபாடு முக்கியத் துவம் வாய்ந்ததாகக் காணப்படுகிறது. பசுமந்தான் எனும் இடத்தில், நகரத்தார் தண்டாயுதபாணி கோயிலை எடுப்பித் துள்ளனர். தட்டோனில் தண்டாயுதபாணியின் கோயில் ஒன்று கட்டப்பட்டுள்ளது. மோல்மோனில் சிவன் கோயில் ஒன்று சிறப்புற்று விளங்குகிறது. இக்கோயில்களில் எல்லாம் நாள்வழிபாடும், திருவிழாக்களும் செம்மையாக நடத்தப்பட்டு வருகின்றன. திருவிழாக்களில் இயல், இசை, நாடகமாகிய முத்தமிழும் அங்குள்ள தமிழர்களால், போற்றி ஆதரிக்கப்படு வதை இன்றும் காணலாம்.

தமிழர்கள், பர்மாவில் கொண்டாடும் இத்திருவிழாக்களுள் பௌத்த குருமார்களும் கலந்து கொள்கின்றனர். 'தீமிதிப்பு'ப் போன்ற சடங்குகளிலும் அவர்கள் நேரடியாகவே பங்கு கொண்டு, வழிபாடும் செய்து வருகின்றனர். தேரில் முருகப் பெருமான் ஊர்வலம் வரும் பொழுது, பர்மிய மக்கள் தட்டுகளில் தீபாராதனைப் பொருள்களை ஏந்திய வண்ணம் தங்கள் வீட்டு வாசல்களில் காத்து நிற்கின்றனர்; தங்கள் வீட்டுற்கு நேராகத் தேர்வந்தவுடன் அர்ச்சனை ஆராதனை செய்து, திருநீற்றைப் பெற்று, நெற்றியில் வழிபாட்டுணர் வோடும் பக்தியுணர்வோடும் அணிந்து கொள்கின்றனர். இந்த அளவிற்குத் தமிழரின் சமய வழிபாட்டில், பர்மிய மக்கள் பேரீடுபாடு கொண்டுள்ளனர்.

## தமிழ்ப்பணி

1965-ஆம் ஆண்டிற்கு முன்னர் 'அகில பர்மா தமிழ்ச் சங்கம்', செட்டியார் உயர்நிலைப்பள்ளி, 'கம்பை தனவைசியர் கல்விக் கழகம்' போன்ற அமைப்புகள் தமிழ் வளர்ச்சிக்கு ஆக்க மும் ஊக்கமும் அளித்துவந்தன. பர்மாவின் தி. மு. கழகமும் தமிழின் மறுமலர்ச்சிக்கும், தமிழ் மக்களின் விழிப்புணர்ச்சிக்கும் அரும்பணி ஆற்றியது. தமிழ் நாளிதழ்களும், வார இதழ்களும் கூட இங்கு நடத்தப்பட்டன.

இப்பொழுது கல்விக் கூடங்களை அரசு எடுத்துக் கொண்டு விட்டது. ஆங்கிலமும் தேசியமொழியாகிய பர்மிய மொழியுமே இன்று, பள்ளிகளில் பயிற்றுவிக்கப்படுகின்றன. இந்நிலையில் தமிழரின் கலைக் கழகங்களும் சமய நிறுவனங்களுமே தமிழை வளர்த்து வருகின்றன. இந்த அவல நிலையை மாற்றுவதற்கு மதுரையில் தொடங்கப்படும் 'உலகத் தமிழ்ச் சங்கம்' முயல வேண்டும்.

# 3.0.1

# நாடுகள்

## நிலவமைப்பு

இந்தோ-சீனா, ஆசியாவின் தென்கிழக்குக் கோடியில் இருக்கிறது. தாய்லாந்து எனப்படும் சயாமும், இந்தோ-சீனாவும் சேர்ந்து ஆசியாவின் தென் கிழக்குப் பகுதியில் ஒரு தீபகற்பமாக அமைந்துள்ளன. இந்தோ-சீனாவில், ஐந்து மாநிலங்கள் உள்ளன. வடக்கில் உள்ளது தொங்கின் (Tonkin). கிழக்குப் பகுதியில் உள்ளது வடவியட்நாம். இதனுடைய பழைய பெயர் அன்னாம். மேற்குப் பகுதியில் 'கம்போடியா' எனப்பட்ட காம்பூச்சியா இருக்கிறது. அதற்குச்சற்று வடமேற்கே லாவோஸ் (Laos) காணப்படுகிறது. தெற்குப் பகுதியில் கொச்சின் சீனா (Cochin-China) என்று வழங்கப்பட்ட தென் வியட்னாம் உள்ளது. இவற்றுள், இன்று எல்லாநாடுகளுமே தனியுரிமை பெற்ற நாடுகளாக மாறிவிட்டன. இந்தோ-சீனாவின் வடக்கே,சீனா அமைந்துள்ளது. அதை யொட்டி சீனக் கடல் பரவியுள்ளது. இந்தோ-சீனாவிற்கு மேற்கே தாய்லாந்தும், அதற்கப்பால் பர்மாவும் உள்ளன. பண்டைக்காலத்தில் 'கோகி' (Koki) என்ற பெயரால், இந்தோ-சீனாவை, நம் நாட்டு மக்கள் குறிப்பிட்டனர்.

இந்திய நாகரிகம், தென் கிழக்கு ஆசிய நாடுகளில் பரவியமைக்குக் கிழக்கு எல்லையாக இந்தோ-சீனா விளங்குகிறது இதனுடைய நாகரிகமும் பண்பாடும் இந்திய நாகரிகத்தையும் பண்பாட்டையும் அடிப்படையாகக் கொண்டு வளர்ந்தன. ''பண்டைக்கால இந்தோ-சீனத்தின் சமய, அரசியல் அமைப்புகளைப் பொறுத்த வரையில், இந்நாடு உண்மையில் இந்தியா

வின் மகளாக விளங்குகிறது. இம்மக்கள் பண்டைக் காலத்தி லேயே தாயகத்தோடு கொண்டிருந்த உறவினை அறுத்துக் கொண்டனர். அதனால், பல நூற்றாண்டுகளாக அவள், தன் தாயினால் மறக்கப்பட்டு விட்டாள்.[1] வடபகுதி சீனாவின் செல் வாக்கிற்கு ஆட்பட்டிருந்தது. இவ்வாறு, இந்தோ-சீனா இரு பெரும் நாகரிகங்கள் சந்திக்கும் நாடாக இருந்து வருகிறது, இதனால்தான், அங்கு இந்நாடு, 'இந்திய சீனா' என மருவி வழங்கலாயிற்று. காம்பூச்சியாவில் இன்று வரை இந்திய நாகரி கம் நிலைத்த வாழ்வைப் பெற்றுள்ளது. வியட்னாமின் பண் பாடும் சமயமும், சீனாவினைப் பெரிதும் தழுவியதாக இருந்து வருவது இங்குக் குறிப்பிடத் தக்கது.

## மக்கள்

இந்தோ சீனாவில் உள்ள மக்களுள், ஐந்தில் நான்கு பகுதி யினர், அன்னாமியர் (Annam) ஆவர். அவர்கள் பெரும் பாலும் லாவோஸ், வியட்னாம், தொங்கின் என்னும் பகுதிகளில் வாழுகின்றனர். காம்பூச்சியாவில் உள்ளவர்கள் கெமர் (Khmers) கள்; தென் அன்னாமில் (சம்பா), சாமியர் (Chams) என்னும் மக்கள் வாழ்ந்து வருகின்றனர், லாவோஸ்சிலுள்ள மக்கள், லாவோஸிகள் எனச் சுட்டப்படுகின்றனர். இந்தோ-சீனாவின் பழங்குடி மக்கள், காஸ்கர் (Khas) என்றும், மோய்கள் (Mois) என்றும் வழங்கப்படுகின்ற இனத்தைச் சேர்ந்தவர்க ளாவர். அவர்கள் செவ்வாற்றின் ஓரமாகவுள்ள மலைகளில் இப்பொழுது வாழுகின்றனர். மௌவுங்கு (Moungs)கள் என்று அவர்களைக் குறிப்பிடுகின்றனர்.

கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில், தென் சீனாவிலிருந்து அன்னாமியர்கள் வந்திருக்கலாம். அவர் கள் செவ்வாற்றின் கழிமுகப் பகுதியைச் சேர்ந்த தொங்கினில் தங்கினர். அவர்களுடைய மொழி, பழக்க வழக்கங்கள், சமயம் முதலியன சீனர்களுடைய நாகரிகப் பண்பாட்டோடு ஒப்புமை யுடையனவாக இன்றும் காணப்படுகின்றன. காம்பூச்சியா விலுள்ள மக்கள், கெமர் (Khmer) இனத்தின் வழித்தோன்றல் களாகக் கருதப்பெறுகின்றனர். அவர்கள் மேகாங்கு ஆற்றுப் பள்ளத்தாக்கில் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் சயாமிய மக்களோடு நெருங்கிய ஒட்டும், உறவும் உடையவர்களாக இருந்து வருகின்றனர்.

---

1. R. Finot, The Kingdoms in Indo-China, IHQ, P. 599

## இந்தோ-சீனாவில் ஒரு கங்கை

அவர்கள் வாழும் பகுதியில் ஓடும், 'மேகாங்கு' எனும் ஆற்றின் பெயரைப் பற்றி, இங்குக் குறிப்பிடுவது பொருத்த மாகும். மே காங்கு (Me-Kong) எனும் சொல், 'மா-கங்கா' என்னும் சொற்களின் திரிபு என்பர். 'மே' என்னும் சொல், 'தாய்' என்னும் பொருணர்த்தும் (காம்பூச்சிய மக்களுடைய) கெமர் மொழிச் சொல் என்றும், 'காங்கு' என்னும் சொல் 'கங்கா என்ற சமஸ்கிருத மொழிச் சொல்லின் திரிபு என்றும் கூறுவர். இதனால், 'மேகாங்கு' என்னும் பெயர் 'கங்கை அம்மா' என்னும் பொருளுடையது என்று அறிஞர் கருதுகின்றனர். ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே, இந்தியாவிற்கும் இந்தோ-சீனாவிற்கும் இடையே, இருந்துவந்த நெருங்கிய தொடர்பிற்கு இந்த ஆற்றின் பெயர், அழியாப் பெருஞ் சின்னமாக இருந்து வருகிறது.

## 3.1.

## பியூணான்

### பழம்பெரு நாடு

சீனாவின் பண்டைக்கால வரலாற்றுக் குறிப்பேடுகளால், கி. பி. முதலாம் நூற்றாண்டு அளவில் பியூணான் (Funan). சென்-லா (Chen-la) என்ற இருபெரும் நாடுகளாக இந்தோ-சீனா பிரிந்து இருந்ததாகத் தெரிகிறது. இவ்விரு நாடுகளும் தனியுரிமை வாய்ந்த நாடுகளாக இருந்தனவா அல்லது 'சென்-லா' பியூணாவின் ஆதிக்கத்திற்குட்பட்ட சிற்றரசாக இருந்ததா என்பது தெளிவாகத் தெரியவில்லை. பியூணான் என்னும் சொல், மலையைக் குறிப்பிடும் 'பனோம்' (Phnom) என்ற சொல்லின் திரிபாக ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். எனவே பியூணான் என்பதற்கு 'மலை நாடு''என்று பொருள் கூறுகின்றனர். கவுண்டினியன் (Kaundinya) என்ற வியத்தகு ஆற்றல் வாய்ந்த இந்தியன், இந்தோ-சீனாவிலும் அதற்குத் தெற்கிலுமுள்ள தீவுகளிலும் நாகரிகத்தினைக் கொண்டு வந்து புகுத்தினான் என்று கூறப்படுகிறது. காம்பூச்சிய அரச மரபுகளும், இடைக்கால சம்பா, சாவகம், சுமத்திரா, போர்னியோ போன்ற நாடுகளின் அரசர் குடிகளும் கவுண்டினியனைத், தங்கள் மூதாதை என்று பெருமையோடு போற்றுவது, இதனை வலியுறுத்துகிறது. இந்தக் கவுண்டினியன் தமிழ் நாட்டில், சங்க காலத்தில் வாழ்ந்த கவுணியன் விண்ணந்தாயன் (புற நானுறு 166) என்ற பார்ப்பனரின் வழித்தோன்றலாகவே இருந்திருக்க வேண்டும் என்று பிரஞ்சு நாட்டு அறிஞர் டாக்டர் ழூவே ´பிலியோழா அவர்கள் கருதுகிறார். அந்தக் கவுண்டினியன், தமிழ் நாட்டிலிருந்து பியூ-

ணானுக்குக் குடியேறியிருக்கலாம்.[2] 'கவுண்டினியன்' மரபைக் (King-Tai) 'கவுணியன்' மரபு என்பது தமிழ் நாட்டு வழக்கு. திருஞான சம்பந்தர் கவுணிய மரபைச் சேர்ந்தவர் என்பது இங்கு நினைவுகூர்தற்குரியது.

## புராண மரபு

தாங்-தாய் (K'ang-T'ai) என்ற சீன எழுத்தாளன்தான், முதன் முதல் கவுண்டினியனைப் பற்றிக் குறிப்பிடுகிறான். அவன் கி. பி. மூன்றாம் நூற்றாண்டில் பியூணானுக்குச் சென்று வந்தான். அவன் பியூணானை, நாசியோமா குடியைச் சேர்ந்த ஓர் அரசகுமாரி ஆண்டு வந்ததாகக் கூறுகிறான். 'அக்காலத்தில் மோ பௌ (Mo Fou) நாட்டில், ஹவுன் சென் (Houen-Chen) என்பவன் பேய்களை மிகுந்த பக்தியோடு வழிபட்டு வந்தான். அப்பேய் அவனுக்கு ஒரு வில்லைக் கொடுத்தது. அவனைக் கிழக்குத்திசை நோக்கிச் செல்லுமாறு அது பணித்தது. உடனே, அவன் ஒரு படகில் ஏறிப் புறப்பட்டான். அப்படகு பியூணானின் கடற்கரையை அடைந்தது.

அந்நாட்டை, ஒரு பெண் ஆட்சி புரிந்துவந்தாள். அவனைக் கண்டு அவ்வரச குமாரி சீற்றம் கொண்டாள். அவள், பெரும் கப்பல் படையினைத் துணையாகக் கொண்டு, அவனைத் தாக்கினாள். கடுமையான போர் நடந்தது. ஹவுன்-சென் அவளை இறந்துபடாமல் காப்பாற்றினான். இதுவரை தனக்குப் பகைவனாக இருந்த அவனிடத்து, அவ்வரசிளங்குமரி காதல் கொண்டாள். இவ்வாறு ஹவுன்-சென் பியூணானின் அரசன் ஆனான்'' என்பது சீன நாட்டு எழுத்தாளனுடைய குறிப்பாகும்.

இக்கதையில் குறிப்பிடப் பெறும் ஹவுன்சென் என்பவன் 'கவுண்டினிய' னாக இருக்க வேண்டும் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். அவன் தென்னிந்தியப் பார்ப்பனக் குடியைச் சேர்ந்தவன் என்றும், அவனுக்கும் நாசியோமா இளவரசிக்கும் பிறந்த மகளின் வழிவந்தவர்களே, பிற்காலத்தில் பியூணானினை ஆண்ட அரசர்கள் என்பதும் ஆராய்ச்சியாளர் கருத்தாகும். கவுண்டினியன் அசுவத்தாமனின் கால்வழியில் வந்தவன் என்பதனால், ஒரு கால் அவன் பல்லவ அரச மரபைச் சேர்ந்தவனாக இருப்பானோ என்று சில வரலாற்று ஆசிரியர்கள் ஐயுறுகின்றனர். இதனால், தென் இந்தியப் பார்ப்பனர்கள், தென் கிழக்

2. Proceedings of the First International Conference Seminar of Tamil Studies, 1966, Volume I. I.A.T.R. Kuala Lumpur, 1968, pp. 27-28

காசிய நாடுகளுக்குச் சென்று, தங்கள் சமயக் கொள்கைகளை அந்நாட்டு மக்களிடையே புகுத்தியமை புலனாகிறது.

இந்தோ-சீனாவில், மிசோன் (Mison) என்னும் இடத்தில் கிடைத்துள்ள சம்ஸ்கிருத மொழிக் கல்வெட்டு, பியூணானின் அரசமரபைத் தோற்றுவித்தவன் கவுண்டினியன் என்பதைத் தெளிவாகத் தெரிவிக்கிறது. இவனே ஜாவா, சுமத்திரா ஆகிய நாடுகளின் அரச மரபுகளைத் தோற்றுவித்ததாகக் கதைகள் சில வழங்கி வருகின்றன. இவன் அலைகடலைக் கண்டு அஞ்சாது, பல நாடுகளுக்குச் சென்று தனது வெற்றிக் கொடியை நாட்டிய, துணிச்சல்மிக்க இந்திய வீரனாக விளங்கினான் என்பது தெரிகிறது. கவுண்டினியன் சற்றேறக்குறைய கி. பி. முதலாம் நூற்றாண்டு அளவில், இந்தோ-சீனாவிற்குச் சென்றிருக்கலாம் என்று நம்பப்படுகிறது.

பியூணானுக்கு நாகரிகத்தின் ஒளிச்சுடரைக் கவுண்டினியன் கொண்டு சென்றான். அதன் பிறகு, பியூணானில் பையப்பைய நாகரிக வளர்ச்சி உண்டாயிற்று என்று சீன வரலாற்றுக் குறிப்பேடுகள் கூறுகின்றன.

## தொல் பொருள் சின்னங்கள்

இந்தோ-சீனாவில் (தென் வியட்னாமில்) கிடைத்துள்ள மிகப்பழைய கல்வெடடு வோ-சண் (Vo cant) எனும் இடத்தில் உள்ளதாகும். இதுபுத்த சமயத் தொடர்பு உடையதாகக் காணப்படுகிறது. இக்கல்வெட்டு வடமொழி எழுத்துகளால் குறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு, கி. பி. மூன்றாம் நூற்றாண்டிற்குப்பிற்பட்டது அன்று' என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. இக்கல்வெட்டு இந்தியாவில் கானேரி, கிர்நார் என்னும் இடங்களில் காணப்படும் பௌத்த சமயச் சார்புடைய கல்வெட்டுகளோடு நெருங்கிய ஒப்புமையுடையது. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் ஐ-சிங் (I. Tsing) என்ற சீன யாத்திரிகர் இந்நாட்டிற்குச் சென்றிருந்தார். அவர் ஆதிகாலத்தில் பௌத்த சமயம் பியூணானில் சிறப்புற்று விளங்கியதாகவும், அச்சமயத்தை ஒரு கொடிய அரசன் அழித்து, ஒழித்துவிட்டான். அதனால், இந்து சமயமே பியூணான் மக்களால் போற்றிப் பின்பற்றப் பட்டு வருவதாகவும் குறிப்பிட்டுள்ளார். இவற்றால், கி. பி. மூன்றாம் நூற்றாண்டு அளவில், பியூணானில் பௌத்த சமயம் பரவி இருக்கலாம் என்பது தெரியவருகிறது.

இந்து சமயமும், பண்பாடும் எந்த அளவிற்கு இந்த நாட்டு மக்களிடையே செல்வாக்கும், ஆதரவும் பெற்றிருந்தது என்பதை

அறிவதற்கு இங்குக் கிடைத்துள்ள மூன்று சம்ஸ்கிருத மொழிக் கல்வெட்டுகள் உதவியாக உள்ளன. முதல் கல்வெட்டு திருமாலைப் போற்றி வழிபடும் பாடலுடன் தொடங்குகிறது. இரண்டாவது கல்வெட்டு, குணவர்மன் என்ற அரசன், 'சக்கரவர்த்த சாமி' எனப்படும் திருமாலிற்கு அளித்த அறக்கட்டளைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இத்தெய்வத்தைக் கோயிலில் எழுந்தருளச் செய்வதற்கு, வேதங்களிலும், உபவேதங்களிலும், வேதத்தின் அங்கங்களிலும் வல்ல பிராமணர்களும், சுருதிகளில் வல்ல முனிவர்களும் முறையாகச் சடங்குகளைச் செய்தனர் என்பதையும் இக்கல்வெட்டு அறிவிக்கிறது.

மூன்றாவது கல்வெட்டு, பௌத்த விசாரைக்கு வழங்கிய அறக்கட்டளையைப் பற்றிப் பேசுகிறது. அக்கல்வெட்டில் புத்தம், தருமம், சங்கம் ஆகிய மூன்றையும் பற்றிக் குறிப்பிடப் பெற்றுள்ளது. இரண்டாவது கல்வெட்டில் பாகவதர்களைப் பற்றியும், மற்றொரு கல்வெட்டில் ஆரிய திவாதரர் பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன.

சீனர்களுடைய வரலாற்றுக் குறிப்பேடுகளினால், சைவசமயமும் பௌத்த சமயமும் பியூணானில் சிறப்புற்று விளங்கியதை நாம் அறிய முடிகிறது. மேற்கண்ட முதலிரண்டு கல்வெட்டுகளினால், வைணவ சமயமும் இந்நாட்டில் புகுத்தப் பெற்றமை புலனாகின்றது.

மூன்றாவது கல்வெட்டு, பியூணானின் இரண்டு முக்கிய அரசர்களைப் பற்றிய செய்திகள் சிலவற்றைத் தெரிவிக்கிறது. ஜெயவர்மனும் அவனுடைய மகன் ருத்திரவர்மனும் மாண்பு மிக்க மன்னர்களாகப் போற்றப்படுகின்றனர். இந்திய அரச மரபிற்கு இணங்க, அவர்கள் அறநெறிப்பிறழாது, செங்கோல் ஓச்சினர் என்று அக்கல்வெட்டு தெரிவிக்கின்றது.

### பல்லவரோடு தொடர்பு

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் பியூணானின் அரசர்கள், 'வர்மன்' என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டனர். கி. பி. மூன்றாம் நூற்றாண்டில் பான்சான் (Fan-Chan) என்ற பியூணானின் அரசன், இந்தியாவிற்குத் தூதர் குழு ஒன்றை அனுப்பி வைத்தான். இந்நிகழ்ச்சிக்குப் பின்னர், ஐந்தாண்டுகள் கழித்து, கி. பி. 240-ல் பியூணானின் அரசனான பாண்செயம் (Fan-seum) இந்தியாவிலிருந்து வந்த தூதர் குழு ஒன்றை வரவேற்றுப் பாராட்டினான். அதே ஆண்டில், சீனப் பேரரசரிடமிருந்தும் ஒரு தூதர் குழு பியூணானுக்கு வந்தது. நான்காம் நூற்றாண்டின்

நடுப்பகுதியில், சந்தனன் என்ற பியூணான் நாட்டு மன்னன், சீனப் பேரரசரின் அவைக்கு ஒரு தூதர் குழுவை அனுப்பி வைத்தான்.

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில், மற்றொரு கவுண்டினியன் பியூணானுக்கு வந்ததைப்பற்றிய எழுத்துச் சான்றுகள் கிடைத்துள்ளன. இந்த இரண்டாம் கவுண்டினியன் காம்போஜத்தின் சமயத்துறை-சமூகத் துறைச்சீர்திருத்தக்காரனாகப் பேசப்பெறுகிறான். பியூணானில் முதன் முதலாக இந்து அரசினை நிறுவிய பெருமை, முதல் கவுண்டினியரைச் சேரும். இந்து சமயம், பண்பாடு, சமூகப் பழக்க வழக்கங்கள் முதலியவற்றைப் பியூணானில் நிலைநாட்டிப் பொன்றாப் புகழ் பெற்றவன், இரண்டாம் கவுண்டினியன் என்பது ஆராய்ச்சியாளரின் கருத்தாகும். இந்நூற்றாண்டின் இறுதியில் பியூணானின் அரசன் நாகசேனன் என்ற ஒரு துறவியைச் சீனாவிற்கு அனுப்பிவைத்தான். இக்காலத்தில், இந்து சமய தெய்வமான சிவபெருமானின் தெய்விகத்தன்மையும், மாண்பும் பியூணானில் நன்கு பரவியிருந்தன. நாகசேனன், சீனப் பேரரசரிடம் சிவனுடைய பெருமையையும் சிறப்பையும் எடுத்துரைத்ததாகக் கூறுவர்.

பியூணானின் அரச மரபினர், சந்திர குலத்தைக் சேர்ந்தவர்கள் என்று அவர்களுடைய கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. பியூணானின் ஆதி அரசன் ஒருவன் சந்திரனுடைய பெண்களைத் திருமணம் செய்து கொண்டதாகச் சொல்லப்படுகிறது. தமிழகத்தை ஆட்சி புரிந்த பல்லவர்களும் சந்திர குலத்தைச் சேர்ந்தவர்களாவர். அவர்களுடைய தலைநகரமாகிய காஞ்சிபுரத்தைப் பற்றிக் கெமர்களுடைய கல்வெட்டுகளில் சிறப்பாகப் பேசப்படுகிறது. பியூணான், அவர்களுடைய கல்வெட்டுகளுள் இந்தியாவில் உள்ள நகரங்களில் காஞ்சியைத் தவிர வேறெந்த நகரைப்பற்றிய குறிப்பைக் காணோம். இதனால் பல்லவர்களுக்கும் கெமர்களுக்கும் நெடுங்காலம் முதல் ஏதோ ஒருவகையான தொடர்பு இருந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. மேலும், கெமர்களும் பல்லவர்களைப் போன்றே அசுவத்தாமனின் மரபிலே வந்த, ஒருவனுக்கும் நாக கன்னிகை ஒருத்திக்கும் பிறந்தவனே, தம்முடைய மூதாதை என்று கூறி வந்தமை இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும். எனவே, பியூணானின் கலைவளர்ச்சிக்கு, மூலாதாரமாகப் பல்லவருடைய கலைப்பாணி இருந்ததாக ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

### கலை நலம்

பியூணானின் தென் பகுதியில் கிடைத்துள்ள ஹரியரனு டைய கற்சிலை மாண்புமிக்கது. அது இப்பொழுது பனம்பென் தொல் பொருள் காட்சி சாலையில் இருக்கிறது. அதனுடைய வடிவழகிற்கும், வீரம் நிறைந்த தோற்றத்திற்கும் ஒப்பாக வேறொரு சிலை இந்தியாவில் கூட காணப்பெறவில்லை என்பர் ரெஜினால்டு லேமே.[3] அச்சிலை முற்றுப் பெறாத நிலையில் காணப் பெறுகிறது. ஆனால் முதிர்ச்சி அடைந்த கலையின் வெளிப்பாடாக அச்சிலை விளங்குகிறது. மேலும், அதில் வட்டாரப் பண்புகள் சிறப்பாகப் பதிந்திருப்பதும் அதற்கு, ஓர் அழகைத் தருகிறது. அது மனித வடிவைக் காட்டிலும் பேரள வினதாக இருக்கிறது. இச்சிலை கி. பி. ஏழாம் நூற்றாண் டைச் சேர்ந்ததாகக் கருதப்படுகிறது. அவ்வாறாயின், அது பியூணாவின் இறுதிக் காலத்தில்-அங்கோருக்கு முற்பட்ட கெமர் களின் கலை வளர்ச்சிக் காலத்தில்-செய்யப்பட்டதாக இருக்க வேண்டும்.

### தையல் பாகன் சிலை

மாதொரு பாகனாக விளங்கும் சிவபெருமானுடைய அர்த்த நாரீசுவரச் திருக்கோலத்தைச் சித்திரிக்கும் மணல் கல்லி னால் செய்யப்பட்ட, சிலை ஒன்று, இங்குக் கிடைத்துள்ளது. அது பியூணான் காலத்தில் செய்யப்பட்ட சிலை என்று கலை நூல் வல்லார் கருதுகின்றனர். அச்சிலை, 7.5 மீட்டர் உயரம் உடையதாகக் காணப்படுகிறது. அதனுடைய காதுகளும், தலையணியும் பெரிதும் பண்டைத்தென் இந்திய அணிமுறை யினை ஒத்திருக்கின்றன. இத்தகைய அழகு நிறைந்த அர்த்த நாரீசுவர சிலை இந்தியாவிலும், பியூணானிலுமே கிடைத்துள் ளன. தென்கிழக்கு ஆசியாவில் வேறெந்த நாட்டிலும் இதைப் போன்ற சிலை கிடைக்கவில்லை எனபர்.

தாய்லாந்தின் தேசிய தொல்பொருள் காட்சி சாலையில் உள்ள சிலைகள் இக்காலத்தைச் சேர்ந்தவை. அவை பல்லவ, பாண்டிய கலைமுறையைப் பின்பற்றிச் செய்யப்பட்டனவாக உள்ளன.

அவை சோழர் காலத்திய சிலைகளின் நெளிவும், சுளிவும் நிறைந்தும் தொய்வான தோற்றத்தோடும் பொலிவுமிக்க

---

3. Reginald Le May; The Culture of South East Asia, P. 110.

வடிவழகுடனும் விளங்குகின்றன. இவற்றால், அவை சோழர் காலத்திய சிலைகளுக்கு முன்னோடிகளாக இருக்க வேண்டும் என்று அறிஞர்கள் சிலர் நம்புகின்றனர்.[4]

## ஒற்றைக்கல் கோயில்கள்

பியூணான் காலத்திய புத்த விகாரைகளின் சிகரங்கள், தென்னிந்தியாவில் பல்லவர்கள் ஒற்றைக் கல்லில் செதுக்கிய கோயில்களின் பாணியில் அமைக்கப்பட்டுள்ளன.

## செங்கல்லில் சிற்பங்கள்

தாட் பனோம் என்னும் இடத்தில் செங்கற்களால் கட்டப் பட்டுள்ள கோயில், பௌத்தர்களுடைய ஸ்தூபியாகும். அது கெமர் கலைஞர்களின் கைவண்ணத்தைக் கல்லோவியங்களாகக் காட்டுகிறது. அத்துடன் இந்தியக்கலை மரபு எவ்வாறு மாற்றி யும் திருத்தியும் அமைத்துக் கொள்ளப்பட்டது என்பதை, அது அறிவிக்கிறது. செங்கல் சுவர்களில் அழகிய சிற்பங்கள் செதுக்கப் பட்டுள்ளன. அவற்றின் அமைப்பும், செயற்பாடும் நேர்த்தி வாய்ந்தன. அவை, பேரளவிற்குப் பண்டைக் கெமர்களுடைய கலைப்பாணியைக் காட்டிலும் பொலிவுமிக்கனவாக உள்ளன. 'புத்தர் பெருமான் அறவாழி உருட்டும்' காட்சி, காண்பார் உள்ளத்தையும் உணர்வையும் எளிதில் கவர்ந்துவிடுகின்றது. 'புத்தர் பெருமானின் முதல் உபதேசம்' உயிர்த்துடிப்பும் கலை நயமும் நிறைந்தது; காண்பவரின் கண்களுக்கும் கருத்திற்கும் சிறந்த விருந்து அளிக்கிறது. இவ்விரு காட்சிகளும் அமராவதி சிற்பங்களோடு தொடர்புடையனவாகத் தோன்றுகின்றன. இவை அல்லாமல், யானைகள், குதிரைகள் அணிவகுத்துச் செல்லும் காட்சிகள் வியப்பும் விம்மிதமும் அளிக்கின்றன. இச் சிற்பங்கள் நன்கு முதிர்ச்சியடைந்த கலை முறையின் அழகுணர்ச் சியையும், ஆற்றலையும் அறிவிக்கும் வகையில் அமைந்துள்ளன. இக்கோயிலும் சிற்பங்களும் கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டனவாக இருக்கமுடியாது என்பது தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களின் கருத்தாகும்.

---

4. Reginald Le May, Op. Cit; P. 112

## 3.1.2.

## பண்பாடு

### அரசின் தோற்றம்

பியூணான் பழங்குடி மக்கள், 'இனக்குழு' (Tribal society) சமுதாய நிலையில் இருந்து, கி. பி. மூன்றாம் நூற்றாண்டை யொட்டி, நிலப்பிரபுத்துவ சமுதாய அமைப்பை உருவாக்கினர். இதன் விளைவாக சிற்றரசுகள் சில தோன்றின.

அரசன் ஆட்சி செய்யத் தொடங்கிய சிறிது காலத்திற்கு எல்லாம், மதகுருமார்கள் அந்நாட்டில் செல்வாக்குப் பெற்றனர். மதகுருமார்கள் வைதிக சமயத்தைச் சேர்ந்த பிராமணர்களாக இருந்தனர். தமக்கு வியத்தகு மந்திர சக்தியும், தெய்விக ஆற்றலும் இருப்பதாக மக்கள் இடையே பரப்புவதற்கு—மக்களை நம்புமாறு செய்வதற்கு—மதகுருமார்களின் உதவியை அரசர்கள் நாடினர்.

மற்றும், தங்கள் நிலையை வலுப்படுத்திக் கொள்ளுவதற்காக, அந்தப் பிராமண மதகுருமார்களுக்குத் தங்கள் உடன் பிறந்த சகோதரிகளையும், தாங்கள் பெற்றெடுத்த பெண்களையும் அவ்வரசர்கள் திருமணம் செய்து கொடுத்தனர். அருகிய வழக்காகப் பிராமணப் பெண்களையும் அவ்வரசர்கள் மணம் செய்து கொண்டனர்.

சில சமயங்களில், பிராமணர் அல்லாத இந்தியக் குடியேறிகள் கூட, அரச குடும்பத்தில் மணவுறவு கொண்டதாகத் தெரிகிறது. இதன் விளைவாக, பியூணானின் பழங்குடி மக்களுக்கும் இந்தியக் குடியேறிகளுக்கும் இடையே இருந்த இனமரபுக் கூறுகளின வேற்றுமைகள் மறையத் தொடங்கின.

இந்த வகையில், இந்தோசீனா, இந்தியமயமாக்கப்பட்ட பொழுது, பெரிதும் அது, தீபகற்ப இந்தியாவில் உள்ள திராவிட மக்களுடைய பண்பாட்டினோடு பெரிதும் வேறுபடாத நிலையில் புதுவகைப் பண்பாட்டை உருவாக்கிப் போற்றியது.[5]

## வாழ்வியல்

தென்னாட்டுச் சைவசமயம், பியூணானில் தழைத்தோங்கியது. கோயில் கட்டடக் கலைப் பாணி, சிற்ப வடிவ அமைப்புகள்; வாழ்க்கை முறையின் சிறப்புமிகு இயல்புகள் முதலியனயாவும், தமிழ் நாட்டின் பிரதிபலிப்பாகப் பியூணானில் நிலவியது.

திருமணச் சடங்குகள், விருந்தோம்பல், குழந்தை பிறந்த சில மாதங்களில் அல்லது ஆண்டுகளில் அதற்குக் காதுகுத்துதல், தலைமயிரை நீக்கும் சடங்கு, உடைகளாக வேட்டியும், சேலையும் அணிதல், ஆடவர் குறுமீசை வைத்துக் கொள்ளுதல், இறந்தோரை அடக்கம் செய்யும் முறை, சவ அடக்கத்தின் பொழுது, தலைமுடியைப் பிள்ளைகளும், பங்காளிகளும் மழித்துக் கொள்ளுதல், தாழிப்புதையல் போன்ற பழக்கவழக்கங்கள் எல்லாம், சங்க காலத் தமிழரின் வாழ்வியலில் சிறப்புற்று விளங்கிய பழக்க வழக்கங்களே யாகும்.

இவற்றால், தமிழ்நாட்டு மக்களின் குடியேற்றம், பியூணானில், கிறித்துவ நூற்றாண்டின் தொடக்கத்திற்கு முன்பே, அமையத் தொடங்கி இருக்க வேண்டும் எனும் எண்ணம் எழுகிறது.

5. G. Coedes, The Making of South East Asia; P.55

# 3.2.1.

# வரலாறு

### நாடும் மக்களினமும்

இந்தோ-சீனாவில், பண்டைக் காலத்தில் தோன்றிய மற்றோர் அரசு, சம்பா (Champa). இன்றைக்குத் தென்வியட்நாம் (South Vietnam) என வழங்கும் நாடே, இந்நூற்றாண்டின் முற்பகுதிவரை 'அன்னாம்' (Annam) என்றும், பழங்காலத்தில் 'சம்பா' என்ற புகழ்மிக்க நாடாகவும் திகழ்ந்தது. கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு அளவில்தான், அந்நாட்டிற்கு 'அன்னாம்' என்னும் பெயர் வழங்கத் தொடங்கியது. காம்பூச்சியாவிற்குக் கிழக்கேயுள்ள பகுதியே, 'சம்பா' எனும் நாடாகும்.

### சம்பா: பெயர் விளக்கம்

'சம்பா' என்ற ஒரு நகரம் வட இந்தியாவின் கிழக்குப் பகுதியில் பகல்பூருக்கு அருகில், அங்க நாட்டின் தலைநகரமாக இருந்தது. அங்கிருந்து அன்னாம் நாட்டில் குடியேறிய மக்கள், தங்கள் நகரத்தின் நினைவாகத், தாங்கள் குடியேறிய நாட்டிற்குச் 'சம்பா' என்னும் பெயரை இட்டு, வழங்கி இருக்கலாம் என்பது சில வரலாற்றாசிரியர்களின் கருத்தாகும்.[1] ஆனால், அப்பெயர், தமிழ்நாட்டின் சோழர் தலைநகரமாகிய காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து வந்தது எனக் கூறலாம். ஏனெனில், காவிரிப்பூம்பட்டினத்திற்குச் 'சம்பாபதி' என்று மற்றொரு

---

1. P. N. Bose, The Indian Colony of Champa, P. 16

பெயர் வழங்கியதைப் பண்டைத் தமிழ் இலக்கியத்தால் அறிகிறோம்.

''சம்பு என்பான் சம்பா பதியினுள்
செங்கதிர்ச் செல்வன் திருக்குலம் வேண்ட
கரகம் கவிழ்த்த காவிரிப்பாவை
செங்குணக் கொழுகி அச்சம் பாபதியைப்
பொங்குநீர்ப் பரப்பொடு பொருந்தித் தோன்ற''

(மணிமேகலை, பதிகம்: 8-1-4)

என்பது மணிமேகலையால் அறியப்படுகிறது. தமிழகத்து மக்கள், தாங்கள் குடியேறிய நாட்டிற்குக் காவிரிப்பூம்பட்டினத்தின் நினைவாக 'சம்பா' என்ற பெயரை, அந்நாட்டிற்கு வழங்கியிருக்கலாம். அந்நாட்டில் கிடைத்துள்ள மிகப் பழைய கல்வெட்டுகள் தென்னிந்திய எழுத்துகளில் பொறிக்கப்பட்டிருப்பது இக்கருத்தினை அரண் செய்கிறது.

சம்பாவின் பழங்குடி மக்களான சாமியர் - Chams மலாயா, பாலினீசியா இனத்தைச் சேர்ந்தவர்களாவர்.[2] இவர்கள் பெரும்பாலும் கடல் வழியாக இந்நாட்டிற்குள் நுழைந்திருக்கலாம். எக்காலத்தில், சாமியர்கள் சம்பாவினுள் நுழைந்தனர் என்பதை அறுதியிட்டுக் கூற இயலவில்லை. சீனாவின் வரலாற்றுக் காலவழிச் செய்திக் கோவை, கி. மு. மூன்றாம் நூற்றாண்டிற்கு முன்பே, சாமியர், இந்தோ-சீனாவில் குடியேறித், தங்களுக்கென்று தனியரசு ஒன்றை நிறுவியதாகத் தெரிவிக்கிறது.

மௌரியப் பேரரசு வீழ்ச்சியுற்றபின் சுங்கர்களும், கண்வர்களும் மகதத்தை ஆண்டு கொண்டிருந்தனர். அக்காலத்தில், தக்கணத்தில்ஆந்திரர்களும்,தமிழகத்தில் முடியுடை மூவேந்தர்களும் ஆட்சி புரிந்தனர். கி. மு. முதல் நூற்றாண்டிற்கும், கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில்தான், இந்தியர்கள் சம்பாவிற்குச் சென்று, குடியேறியிருக்க வேண்டும். சம்பாவில் வோசண் (Vo-chann) என்னும் இடத்தில் கிடைத்துள்ள கல்வெட்டு ஒன்றால், சம்பாவில் குடியேறிய மக்களின் தாயகம், தென்னிந்தியா என்பது தெரியவருகிறது. அக்கல்வெட்டு 'ஸ்ரீமாறன்' என்ற அரசனுடைய குடும்பத்தைப் பற்றிக்குறிப்பிடுகிறது. பாண்டிய அரசமரபைச் சேர்ந்த ஸ்ரீமாறன், சம்பாவில் குடியேறி இருக்கலாம். இக்கல்வெட்டின் காலத்தை, அதன்

2. R. C. Majumdar, Ancient Indian Colonies in the Far East, Vol. I. Champa-P. 4.

வாசகத்திலிருந்து அறிய முடியவில்லை என்றாலும், அதனுடைய எழுத்து அமைப்பு முறை முதலாம் உருத்திர தாமனின், கிர்நார் (கி.பி. 150) கல்வெட்டையும், வசிஷ்டபுத்திர சதகர்ணியின் காணேரிக் கல்வெட்டையும் பெரிதும் ஒத்திருக்கிறது. இக்காரணங்களால், இக்கல்வெட்டு கி. பி. இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். இதனால், இந்து அல்லது இந்து சமயத்தை ஏற்றுக் கொண்ட அரசமரபு ஒன்றை 'ஸ்ரீமாறன்' என்பவன், கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில், அல்லது மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், சம்பாவில் நிறுவினான் என்பது புலனாகின்றது. அந்த அரசு, பிற்காலத்தில், கௌதாரா (Kauthara) எனப்பட்ட மாநிலத்தை ஆட்சிபுரிந்து வந்ததாகத் தெரிகிறது. அண்மைக்கால ஆராய்ச்சியாளரான ஃபிலியோஜா, "'மாறன்' என்பது பாண்டியரின் குடிப்பெயர். ஸ்ரீமாறன் எனும் தமிழகத்தைச் சேர்ந்தவன் சம்பாவில் முதன் முதலாக அரசினை நிறுவினான். அவன் தமிழ் நாட்டுப் பாண்டியர் குடியில் தோன்றியவனாக இருத்தல் கூடும்."[3] என்று கூறியுள்ளார்

சம்பாவில், தங்கள் அரசியல் ஆதிக்கத்தைத் தமிழர்கள்; நிலை நாட்டுவதற்கு நெடுங் காலத்திற்கு முன்பே, வாணிகத்தின் மூலம் இந்நாட்டோடு தொடர்பு கொண்டிருக்க வேண்டும். இக் குடியேற்றம், அறிவுத்துறையில் மட்டும் சம்பாவின் மக்கள் உள்ளத்தைக் கவர்ந்தது அன்று. இந்தியாவிலிருந்து குடியேறிய மக்கள் சம்பா நாட்டினைக் கைப்பற்றினார்கள். கைப்பற்றிய பிறகு, தங்கள் நாகரிகத்தையும் பண்பாட்டையும் சம்பாவில் புகுத்தினர். சீனா, திபெத், கொரியா போன்ற நாடுகளில் குடியேறிய மக்கள், அந்நாடுகளைக் கைப்பற்றவில்லை. அதற்கு மாறாகத், தங்கள் அறிவாற்றலால் அந்நாடுகளை வென்றனர். ஆனால், சம்பாவில், ஜாவா, சுமத்திரா, தாய்லாந்து, காம்பூச்சியா போன்ற நாடுகளில் நிகழ்ந்ததைப் போன்று, இந்தியக் குடியேறிகள் நாட்டையும் அறிவுத் துறையையும் கைப்பற்றினர்.

சம்பாவில் கி. பி. முதல் நூற்றாண்டில் குடியேறிய போதிலும், அந்நாட்டின் உண்மையான வரலாறு, கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே தொடங்குகிறது. சம்பாவினை ஆண்ட முதல் அரசன் ஸ்ரீமாறன் என்பதனை முன்பு, நாம் கண்டோம். இவன் தனது ஆட்சியைக் கி. பி. 190இல் தொடங்கியதாகத் தெரிகிறது.

3. Presidential Address, First International Tamil Conference Seminar, Kuala Lumpur, 1966

ஸ்ரீமாறன், சம்பாவின் வடபகுதியில் இருந்த, அமராவதி மாநிலத்தில், 'இந்திரபுரம்' என்ற தலை நகரை அமைத்து, ஆட்சிபுரிந்தான். இவனுக்குப் பிறகு ஆட்சிக்குவந்த அரசனின் காலத்தைக் குறிப்பிடாத 'வோ-சண்' கல்வெட்டு பிழையற்ற சமஸ்கிருதத்தில், இந்திய நாட்டு அரசர்களுடைய கல்வெட்டு களைப் போன்று, பொறிக்கப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். இது, இந்தோ-சீனாவில் கிடைத்துள்ள மிகப் பழைய சமஸ்கிருத மொழிக் கல்வெட்டாகும்.

சம்பாவினைப் பன்னிரண்டு அரச மரபுகள் ஆண்டன. அவற்றுள் முதலாவது அரச மரபு, சம்பாவில், இந்திய நாகரிகத் தைப் புகுத்தியதாக நம்பப்படுகிறது. அவ்வரச மரபின் தலைவ னாக ஸ்ரீமாறன் விளங்குகிறான். இவனுக்குப் பின்வந்த அரசர் கள், தங்களை ஸ்ரீமாற அரசகுடியில் வந்தவர்கள் என்று கூறிக் கொள்ளுவதில் பெருமிதம் கொண்டனர். எனவே, ஸ்ரீமாறனைப் பற்றிக் கூறும் வோ-சண் கல்வெட்டு, வைதிக சமயத் தொடர் புடையதாக இருக்கலாம் என்று சில ஆராய்ச்சியாளர்கள் கருது கின்றனர். ஆயினும் இக்கல்வெட்டில் காணப்படும் அறவுரைகள், அசோகனுடைய கல்வெட்டுகளில் கூறப்படுவதைப் போன்று உள்ளமையால், இக்கல்வெட்டு புத்தசமயக் கல்வெட்டாகவே இருக்கவேண்டும் என்பர் ஈலியட்.[4]

இந்திய நாகரிகமும் பண்பாடும், சம்பாவில் வேரூன்றத் தொடங்கிய காலம் இது. இங்கு முதலில் குடியேறிய தமிழர்கள் வாணிகர்களாகவோ, வீரவாழ்வை விரும்பிய கடல் மறவர் களாகவோ இருந்திருக்க வேண்டும். அவர்கள், தென்னிந்தியா விலிருந்து வைதிகச் சமயத்தினைக் கொண்டுசென்று புகுத்தி யிருக்கலாம்.

### நாட்டின் பிரிவுகள்

பண்டைக்காலத்தில் சம்பாவை 4 மாநிலங்களாகப் பிரித்து இருந்தனர். பாண்டுரங்கா, விசயா, கௌதாரா, அமராவதி என்னும் அம்மாநிலங்களின் பெயர்களே சம்பா, இந்தியாவோடு நெருங்கிய தொடர்புடையதாக இருந்ததை வலியுறுத்துகின்றன.

### 'வர்மர்' ஆட்சி

கி. பி. 340-ஆம் ஆண்டு அளவில், சம்பாவில் இரண்டாவது அரசமரபு ஆட்சிக்கு வந்தது. அம்மரபில் சிறப்புற்று விளங்கி யவன் பத்திரவர்மன் (கி. பி. 380-413) என்னும் புகழ்மிக்க

4. H. M. Eliot. Hinduism and Buddhism, Vol. III; p. 139

அரசனாவான். இவ்வரசன் பல்லவ மன்னர்களைப் போன்று 'தரும மகாராசன்' என்ற பட்டப்பெயரைச் சூட்டிக்கொண்டிருந்தான். பத்திரவர்மன், சைவ சமயத்தைப் போற்றி ஆதரித்தான். மீசோன் (Mison) என்னுமிடத்தில் 'பத்திரேச்சுவரம்' என்னும் சிவன் கோயிலை,அவன் கட்டினான். அக்கோயிலின் பராமரிப்பிற்காக, அவன் நாட்டின் பெரும் பகுதியை அறக் கொடையாக அளித்தான்.

அக்கோயில் மரத்தினால், அமைக்கப்பட்டிருந்தது. அதனுடைய சிதைவுற்ற சின்னங்கள் மட்டுமே, இன்றைக்குக் காணப்படுகின்றன. அரசர்களையே, தெய்வங்களாகப் போற்றும் 'தேவராஜ' வழிபாட்டு நெறி, இந்நாட்டிலும் கால்கொள்ளத் தொடங்கியது. பத்திரவர்மனின் காலத்திய கல்வெட்டுகள் மூன்று கிடைத்துள்ளன. இவற்றில் காணப்படும் எழுத்து முறை கிரந்த எழுத்து முறையைப் போன்று அமைந்துள்ளமையால், ஆதியில் சம்பாவில் குடியேறிய மக்கள் பல்லவ நாட்டவராக இருக்கலாம் என்னும் கருத்து வலியுறுகிறது.

## மாண்பு மிக்க மன்னர்கள்

### கங்கராசனின் கங்கைக் காட்சி

பத்திரவர்மனின் மகனான கங்கராசன், சிறந்த சிவபக்தனாக விளங்கினான். இவ்வரசன் சம்பாவிலிருந்து, இந்தியாவிற்குப் புனிதயாத்திரை செய்தான். இவன், இந்தியாவில், கங்கை ஆற்றைக்கண்டு வணங்கி, மிக்க மகிழ்ச்சியுடன் தாயகம் திரும்பினான். இந்தியக் குடியேற்ற நாடுகளில் வாழ்ந்த வைதிக சமயத்தைப் பின்பற்றி ஒழுகிய மக்களுள், முதன் முதலாக இந்தியாவிற்குப்புனி தயாத்திரை செய்தவன், இந்த கங்கராசனாகத்தான் இருக்க இயலும்.

கங்கராசன் முடிதுறந்தமையால், நாட்டில் கலகமும் குழப்பமும் உண்டாயிற்று. இறுதியில் புதியதோர் அரசமரபு (420-528), சம்பாவினை ஆளத்தொடங்கியது. இந்நிலையில், சீனாவின் பெரும்படை சம்பாவைத் தாக்கியது. சீனர்களை எதிர்த்துப் போரிட இயலாத சம்பா, மாற்றாரின் அடிமையாயிற்று. சம்பாபுரியின் கோயில்களும் சிலைகளும் அழிக்கப்பட்டன. சிறிது காலத்திற்கெல்லாம், சம்பாவின் அரசன் இறந்தான். பியூணானின் (Funan) இளவரசன், சம்பாவின் அரசு கட்டிலைக் கைப்பற்றினான். இவனுக்குப்பிறகு, மீண்டும் சம்பாவில், அரசியல் கொந்தளிப்பு உண்டாயிற்று.

## சிறப்புமிகு அரசர்கள்

சம்பாவை ஆண்ட நான்காவது அரச மரபின் (கி. பி. 529-757) முதல் அரசன் உருத்திரவர்மன், தான் 'பிரமக்ஷத்திரிய' மரபிலே வந்தவனென்று பெருமையாகக் கூறிக் கொண்டான். அவன் பிராமண க்ஷத்திரிய சாதிகளின் கலப்பினால், தோன்றிய கலவை இனத்தைச் சேர்ந்தவன் என்பது இதனால், தெரிகிறது. தமிழ் நாட்டுப் பல்லவ அரசர்களும், இவ்வாறே கூறிக் கொண்டனர். கி. பி. 534ல் இவ்வரசன், சீனப் பேரரசனுக்குப் பரிசுப் பொருள்களை அனுப்பிவைத்தான். ஆனால், இம்முறையைப் பின்பற்றிச் சீன அரசனுடைய நட்பைப் புதுப்பித்துக் கொள்ளுவதை உருத்திரவர்மன் வேண்டும் என்றே, புறக்கணித்தான், இவனுடைய ஆட்சிக்காலத்தில், மாண்புமிக்க பத்திரேசுவரர் கோயில் தீக்கு இரையாகியது.

இவனுக்குப்பிறகு, சம்பூவர்மன் என்ற இவனுடைய மகன் அரசு கட்டிலேறினான். இவ்வரசனுடைய ஆட்சிக்காலத்தில், சீனாவில், மாபெரும் மாறுதல்கள் உண்டாயின. அந்நிலையில் சீனர்கள்,சம்பாவின் மீது படையெடுத்து வந்தனர். அப்பொழுது சம்பூவர்மன், நாட்டைவிட்டோடினான். சீனப்படைத் தலைவன் சாமீய மொழியில் எழுதப் பெற்ற 1350 பௌத்த சமயச் சாத்திர நூல்களை எடுத்துச் சென்றான். சீனப்படை திரும்பிச் சென்றபிறகு, சம்பூவர்மன் நாட்டிற்குத் திரும்பி வந்தான். அது முதல்,சீனாவோடு நட்புறவு கொண்டு வாழ,அவன் முயன்றான். தன் தந்தையின் காலத்தில் தீ வாய்ப்பட்டு. அழிந்துபோன பத்திரேச்சுவரருடைய கோயிலை, அவன் புதியதாகக் கட்டினான். ஆனால், இறைவனுடைய பெயரை மாற்றிச் 'சம்புபத்திரேச்சுரர்' என்று அவன் பெயரிட்டான். அக்கோயிலின், கண்காணிப்பிற்காகப், பெரும் நிலப்பரப்பைத் தேவதானமாகக் கொடுத்தான். இவ்வாறு, சம்பூவர்மன், சம்பாவில் தமிழகப் பண்பாடும் நாகரிகமும் தழைத்தோங்கச் செய்தான்.

இவ்வரசனுடைய மகனான 'கண்டரப்ப தருமன்', கி.பி. 630ல் ஆட்சிக்கு வந்தான். இவ்வரசனை நாட்டு மக்கள் 'தருமத்தின் திருவுருவமாகக்', கருதிப்போற்றினர். இவன் சீனாவோடு நட்புறவு கொண்டிருந்தான். இவனுக்கு ஆண் மக்கள் இல்லை. இதனால், இவனுடைய தங்கையின் மகனான ஸ்ரீபத்திரேச்சுரவர்மன், மாமனுக்குப் பிறகு அரசனாக முடிசூட்டிக் கொண்டான். இவனுடைய ஆட்சியைக் கவிழ்த்து, கண்டருப்ப தருமனின் மகள், சம்பாவின் அரசியானாள். பிறகு, அவள் தன்னுடைய கணவனான பிரகாச தருமனை அரசன் ஆக்கினாள்.

இவன், விக்ரந்தவர்மன் என்ற பட்டப் பெயருடன், ஆட்சி புரிந்தான். இவனுடைய ஆட்சி, அமைதி நிறைந்ததாக இருந்தது. இவ்வரசன் பல கோயிலைக் கட்டியும், சிலைகள் அமைத்தும், சிற்பங்களைச் செதுக்கியும் வைதிக சமய வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்துள்ளான். இவன் பல கோயில்களுக்கு, அறக்கொடை வழங்கியுள்ளான். அத்தேவதானங்களை எடுத்துரைக்கும் கல்வெட்டுகள், இந்தியக் கல்வெட்டுகளின் முறையைப் பின்பற்றி, அமைந்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. இவனுடைய ஆட்சிக்காலத்தில், சம்பாவிலிருந்து விலைமதிப்பீடற்கரிய பொருள்களுடன் நான்குமுறை தூதர் குழுக்கள், சீனாவிற்கு அனுப்பப்பட்டன.

சம்பாவின், ஐந்தாவது அரச மரபு, கி.பி. 758ல் ஆட்சிக்கு வந்தது. இவ்வரச மரபினர், சம்பாவின் தெற்குப் பகுதியான பாண்டுரங்கா மாநிலத்தின் வீரபுரத்தினைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தனர். கி. பி. 774 முதல் 786 வரை சைலேந்திர்ப்பேரரசர்கள், சம்பாவின் கடற்கரையைத்தாக்கி வந்தனர். சம்பாவின் கோயில்களைக் கொள்ளையடித்தும், சிதைத்தும் அவர்கள் பாழாக்கினர். ஆயினும், சிறிது காலத்திற்கெல்லாம், சம்பாவின் அரசர்கள் இப்பேரதிர்ச்சியினின்றும் மீண்டும் தலையெடுத்தனர். கோயில்களுக்குத் தங்கள் பணியைத் தொடர்ந்து செய்தனர். சிவபெருமான், சங்கர நாராயணன், கணேசர், பகவதி முதலிய தெய்வங்களின் சிலைகளைச் செய்தும் புதிதாகக் கட்டிய கோயில்களுள் அவற்றை அமைத்தும் அவர்கள் வழிபாடு செய்தனர். இவ்வரசமரபினர், அனைவரும் சிறந்த சிவபக்தர்களாக விளங்கினர். இவர்கள் கட்டிய கோயில்களில் இருந்த சிவபெருமானின் பெயர்கள், இம்மன்னர்களுக்குச் சூட்டப்பெற்று 'அரசதெய்வங்களாக' மக்களால், போற்றப்பட்டனர். இக்காலத்தில் சைவ சமயம், சம்பாவில் சிறந்த செல்வாக்குடன் வளர்ந்தது.

ஆறாவது அரசமரபை நிறுவிய இரண்டாம் இந்திரவர்மன், சம்பாவின் வடபகுதியிலிருந்த அமராவதியைச் சேர்ந்தவனாவான். இவன் கி. பி. 860-ல் சம்பாவின் அரசனானான். உடனே, பாண்டுரங்காவிலிருந்த தலைநகரை, வடக்கே இருந்த சித்திரபுரத்திற்கு, இவன் மாற்றினான். இவ்வரசனுடைய கல்வெட்டுகள் பிருகு முனிவருடைய மரபிலே இவன் வந்தவன் என்று குறிப்பிடுகின்றன. இவ்வரசன் சிவபெருமானைத் தொழுத போதிலும் புத்தரையும் வழிபட்டு வந்ததாகத் தெரிகிறது. "இத்தகைய புதுமைப்போக்கும் புதுநோக்கும், சிவபெருமான், புத்தர் ஆகிய இருவரிடத்தில் ஈடுபாடும் கொண்டிருந்தமை கனிஷ்கனையும்

ஹர்ஷவர்த்தனனையும்தான் நினைவுபடுத்துகிறது. இந்திரவர்மனது கல்வெட்டு ஒன்று(கி.பி. 875),இவ்வரசன் கட்டிய பௌத்த மடாலயத்தைப்பற்றிக் குறிப்பிடுகிறது. இவன் ஸ்ரீஇலக்குமிந்திர போகேசுவரர்' என்ற பெயரில், புத்தரை வழிபட்டு வந்தான். பௌத்த தருமத்தை நாட்டில் பரப்புவதற்குப் பெரும்பொருளை அறக்கொடையாக இவ்வரசன் வழங்கினான். இந்திரவர்மன் இறந்த பிறகு, 'பரமபுத்த லோகன்' என்று புத்தரின் பக்தனாகப் போற்றப்பட்டான். இவனுடைய மகன், முதலாம் ஜெயசிம்ம வர்மனும், அவனுடைய படைத்தலைவனும், சைவசமயத்தைப் போற்றி ஆதரித்தனர்.

ஸ்ரீஹரிவர்மன், ஏழாவது அரசமரபின் (கி. பி. 900-986) முதல் அரசனாகச் சம்பாவை ஆண்டான். அவன் இந்தியத் தத்துவ சாத்திரங்களிலும், சைவ சித்தாந்தத்திலும், இந்து பௌத்த சமய சாத்திரங்களிலும், அளவை நூல்களிம்லு வல்லவனாக விளங்கினான். ஹரிவர்மன் சக்தி வழிபாட்டை மேற்கொண்டு ஒழுகினான். கி. பி. 918ல் அவ்வரசன் யாஸ்-போ நகரில் கோயில் ஒன்றைக் கட்டினான். அதில் தேவி (பகவதி)யின் சிலையினை அமைத்து, அவன் வழிபட்டான். இது முதல் சம்பாவில், சக்திவழிபாடு ஓங்கத்தொடங்கியது. அம்மாபெரும் தேவியின் சிலையை கி. பி. 945-ல் சம்பாவின் மீது படையெடுத்து, வந்த, காம்போஜ மன்னனான இரண்டாம் இராஜேந்திர வர்மன், தன்னுடைய நாட்டிற்கு எடுத்துச் சென்றான்.

## 3.2.3.

# சம்பாவின் வீழ்ச்சி

### அரசியல் குழப்பம்

முதலாம் ஹரிவர்மனுக்குப் பிறகு, சம்பாவின் வரலாறு போரும் பூசலும் நிறைந்த ஒன்றாகக் காணப்படுகிறது. கி. பி. 982ல் அன்னாமியர்கள், சம்பாவின் தலைநகரான இந்திரபுரத்தைக் கைப்பற்றிக், கொள்ளையடித்துப் பேரழிவிற்குள்ளாக்கினர். இதே காலத்தில், இந்தியாவின் வட மேற்குவாயிலை இசுலாமியப் படையெடுப்பாளர்கள் தட்டிக் கொண்டிருந்தனர். தென்கிழக்கு ஆசியாவில், அன்னாமியர்களும், காம்போஜர்களும் மாறி, மாறிச் சம்பாவைத்தாக்கிக் கொண்டிருந்தனர். இத்தகைய இன்னல் நிறைந்த காலத்திலேதான், சம்பாவின் எட்டாவது அரச மரபு (கி. பி. 982-1044), தலையெடுக்கத் தொடங்கியது. சம்பாவின் ஆட்சியைக் கி. பி. 989ல் ஐந்தாம் இந்திரவர்மன் வன்முறையில் கைப்பற்றினான். அவன் சம்பாவின் நடுப்பகுதியிலிருந்த விசயாவைத் தலைநகராகக் கொண்டு ஆண்டான். அத்தலை நகரின் பெயராலேயே, 'விசய இராச்சியம்' என்று சம்பாவின், அரசு சிறப்புற்று விளங்கியது. அவ்வரசன் இருமுறை சீனாவிற்குத் தூதுக்குழுவை அனுப்பி, சீனாவின் நட்பினை நன்கு வலுப்படுத்திக் கொண்டான். அவனை அடுத்து ஆட்சிக்கு வந்த ஆறாம் இந்திரவர்மன், விசயாவில் இருந்த தலைநகரை மீண்டும் இந்திரபுரத்திற்கே, மாற்றிக் கொண்டான். இரண்டாம் ஹரிவர்மன் (கி.பி. 1010-1030) அரசனாகியவுடன் அன்னாமியரோடும், சீனர்களோடும் நட்புறவு பூண்டான். அதன் பயனாக நாட்டில் அமைதி நிலவியது.

இரண்டாம் ஹரிவர்மனுடைய பரந்த நோக்கத்தால், சற்றேறக்குறைய ஐம்பதாண்டுகள் சம்பாநாடு, அன்னாமியரின் தாக்குதலின்றி, நலம்பலபெற்று விளங்கியது. சீனாவோடு கொண்ட நட்பு குலையாவண்ணம், ஒழுங்காக ஆண்டுதோறும் தூதர்குழு ஒன்றைச் சம்பா, அந்நாட்டிற்கு அனுப்பி வந்தது. அன்னாமிற்கும் சம்பாவிற்கும் இடையே, உளங்கனிந்த நட்புறவு இருந்து வந்தபோதிலும், அன்னாமிய அரசு இன்னல் இழைக்கக் கூடிய ஆற்றல்மிக்க பகையரசாகவே, சம்பாவின் மக்களால் கருதப்பட்டது. நான்காம் விக்கிரந்தவர்மன் காலத்தில், சம்பாவில், உள்நாட்டுப்போர் உண்டாயிற்று. முதலில் அவனுடைய மகனும், பிறகு போ-சான் (Bo-Chan) கோட்டையில் இருந்த படைகளும், அன்னாமியப் பேரரசனிடம் அடைக்கலம் புகுந்தனர்.

இரண்டாம் ஜெயசிம்மவர்மன் ஆட்சிக்கு வந்தவுடன், நாட்டில் பெரும் குழப்பம் உண்டாயிற்று. இவன் கி. பி. 1401-ல் ஆட்சிக்கு வந்தான். மூன்றாவது ஆண்டு முடிவதற்குள், தன்னுடைய கடற்படையைக் கொண்டு, அன்னாமிய கடற்கரைப் பகுதியை இவன் தாக்கினான். எனினும், வெற்றிபெறாது இவன் திரும்ப நேர்ந்தது. அன்னாமியப் பேரரசன் பாத்மா (Phadma) நில வழியாகவும் கடல் வழியாகவும் இரு பெரும்படைகளைச் சம்பாவிற்கு அனுப்பி வைத்தான். சம்பாவின் படை, பேராற்றல் வாய்ந்தபகைவரின்படைமுன் நிற்க இயலாது, சிதறியோடிற்று. அரசனும்30,000வீரர்களும் போர்க்களத்தில் மாண்டனர். வெற்றி வெறியால் செருக்குற்ற அன்னாமியப்படை, சம்பாவின் தலைநகரைக் கொள்ளையடித்தும் தீவைத்தும் பாழாக்கியது. அன்னாமியப்பேரரசன் அளவிடற்கரிய பொன்னையும், மணிகளையும் கவர்ந்து சென்றான்; எண்ணற்ற மக்களைச்சிறைப்படுத்திச்சென்றான். அவன் சம்பாவின் அரண்மனையில் இருந்த மகளிர் எல்லாரையும், தன் நாட்டிற்குச் சிறைப்பிடித்துச் சென்றான். அம்மகளிருள் ஒருத்தி, அன்னாமிய அரசனுடன் செல்லுவதைக் காட்டிலும், மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காகச் செத்து மடிவது சிறந்ததென்று கருதினாள். கப்பலில் ஏறும்பொழுது, அவள் கடலில் குதித்து, அவள் மடிந்தாள். இதைக் கண்ட அன்னாமியப் பேரரசன், அவளுடைய திண்ணிய கற்பு உள்ளத்தைக் கண்டு வியந்து, அவளைக் 'கற்புக்கரசி' என்று பாராட்டியதாக ஒரு நாட்டுப்புறக் கதை இன்றும் வழங்கி வருகிறது.

### சிறு திருப்பம்

கி. பி. 989-ல் பதவிக்கு வந்த, ஐந்தாம் இந்திரவர்மனின் அரசமரபு, அன்னாமியர்களின் தாக்குதலினால் அழிந்தொழிந்

தது. கி. பி. 1050-ல், பழைய அரச மரபைச் சேர்ந்த ஜெய பரமேசுவரவர்மன், சம்பாவினை ஆளத் தொடங்கினான். இப் புதிய அரசன், பல தொல்லைகளை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது. அன்னாமியர்கள் பல முறை தொடர்ந்து படையெடுத்து வந்ததனால், சம்பாவின் ஆட்சி சீர்குலையத் தொடங்கியது. அதனால், மத்திய அரசு நலிவுற்றது. இவ்வாய்ப் பைச் சம்பாவின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த குறுநில மன்னர்கள் பயன்படுத்திக்கொண்டனர். சிறப்பாகத் தெற்குப் பகுதியிலிருந்த பாண்டுரங்கா மாநிலம் சம்பாவின் ஆட்சியிலிருந்து விலகித், தனியரசாக உரிமை பெறுவதற்காக, அதன் மாநிலத்தலைவர் கள் பலமுறை கலகம் செய்து வந்தனர். பத்தாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியான இக்காலத்தில், காம்போஜத்தின் மன்னர் களும் இருமுறை சம்பாவின் மீது படையெடுத்து வந்தனர்.

புதிதாகப் பட்டத்திற்கு வந்த அரசன், திறமை மிக்கதொரு படையைப் பாண்டுரங்காவிற்கு அனுப்பி, அதை முற்றிலும் அடிப்பணியுமாறு செய்தான். இதையடுத்துக் காம்போஜத்தின் மீது, தனது கருத்தைச் செலுத்தினான். அச்சமயம், காம்போ ஜத்தில் உள்நாட்டுக் கலகம் பேயாட்டம் ஆடுவதை அவன் அறிந்தான். பாண்டுரங்கா மாநிலத்தை அடக்கிய பெருமை வாய்ந்த இளவரசன் 'மகாசேனாதிபதி' என்பவனுடைய தலை மையின்கீழ், ஒரு பெரும்படையைக் காம்பூச்சியாவைத் தாக்கு வதற்கு, அவ்வரசன் அனுப்பினான். இளவரசன் பகைவரைப் படுதோல்வி அடையுமாறு செய்தான். கம்பூபுரம் என்ற நகரை அவன் கைப்பற்றிக்கொண்டான். அங்கு இருந்த பல கோயில் களை அவன் இடித்து அழித்தான். அந்நாட்டிலிருந்து ஆயிரக் கணக்காகக் கொண்டு வந்த கெமர் அடிமைகளைச், சம்பாவி லுள்ள கோயில்களுக்கெல்லாம், அவன் பகிர்ந்து கொடுத்தான்.

ஜெயபரமேசுவரவர்மன், தனக்கு முற்பட்ட காலத்தில் கட்டப்பட்ட, சமய நிலையங்களான கோயில்கள், மடாலயங் கள் முதலியவற்றிற்கு உண்டான சிதைவுகளையும், அழிவுகளை யும் பழுதுபார்த்துச் செம்மைப்படுத்தத் தொடங்கினான். இவன் போ நகரத்தின், புகழ்மிக்க தேவியை மீண்டும் கோயிலினுள் நிலைநாட்டி, கடவுள்மங்கலம் செய்தான்; பெரும்பாலான கோயில்களைப் பழுது பார்த்தும், பலபுதிய கோயில்களைக் கட்டியும், அவற்றிற்குப் போதிய பொருள் வருவாய்க்காக அறக் கொடையளித்தான். இவன் சீனாவோடும், அன்னாமோடும் நட்புறவு கொண்டிருந்ததோடு, தவறாமல் தூதர் குழுக்களை அனுப்பி, தங்களுடைய நட்பினை அவ்வப்போது உறுதிப்படுத்திக் கொண்டான்.

இவ்வாறு, ஜெயபரமேசுவரின் ஆட்சி, வெற்றிமிக்கதாய் விளங்கியதோடு, சம்பாவின் குறைகளையும் நலிவுகளையும் போக்கி, நலமும் வளமும் மிக்க நாடாக விளங்கச் செய்தது. அயல் நாட்டுப் படையெடுப்புகளாலும், உள்நாட்டு குழப்பங்களாலும் சிதறுண்டு கிடந்த நாட்டை, அமைதியும் ஆற்றலும், ஒற்றுமையும் மிக்க, பெரிய நாடாக மாற்றிய பெருமை, இவ்வரசனையே சாரும். கி. பி. 1059 அளவில், இவன் இறந்தான்.

இவனையடுத்துச் செழிப்பும், சிறப்புமிக்க சம்பாவிற்கு அரசுனான உருத்திரவர்மனுக்கு, அன்னாமியரின் ஆதிக்கத்திற்கு ஒரு முடிவு காண வேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று. அவ்வெண்ணத்தால், சம்பாவிற்குத் தீமை விளைந்தது. கி. பி. 1062ல், இவன் அன்னாமியர்களை எதிர்த்துப் போரிட்டு, தனக்கு உதவிபுரியுமாறு, சீனப் பேரரசனுக்குத் தூதரை அனுப்பினான். இம்முயற்சி தோல்வியுற்றது. ஆயினும் கி.பி.1068முதல் அன்னாமியர்களிடத்துக் தனது பகைமையைக் காட்ட இவன் தொடங்கினான். சம்பாவின் பெரும்படை வீரத்துடன் போர் புரிந்த போதிலும், புறமுதுகிட்டு ஓடவேண்டியதாயிற்று. உருத்திரவர்மன் பகைவரின் கைதியானான். தன்னுடைய வெற்றி விழாவை அன்னாமியப் பேரரசன், சம்பாவின் தலைநகரான விசயபுரியில் மிகச்சிறப்பாகக் கொண்டாடினான். பிறகு, அவன் அந்நகரையும் சுற்றுப்புறங்களையும் தீக்கிரையாக்கினான். போரில் சிறைப்படுத்தப்பட்ட 50,000 வீரர்களையும், சம்பாவின் அரசனையும் சிறைப்படுத்தித் தன்னுடைய தலைநகரத்திற்குக் கொண்டு சென்றான்.

சிறிது காலத்திற்குள், உருத்திரவர்மன் தன்னுடைய நாட்டின் வடபகுதியிலிருந்த மூன்று மாவட்டங்களைக் காணிக்கையாக அன்னாம் அரசனுக்குக் கொடுத்து, விடுதலை பெற்றான்.

சம்பாவின் மதிப்பும் செல்வாக்கும், இதனால் பெரிதும் பாதிக்கப்பட்டன. அன்னாமியர்கள் நாளடைவில், சம்பாவைத் தங்கள் அடிமை நாடாக்குவதற்கு இச்செயல் அடிகோலியது.

## அணையும் விளக்கின் பேரொளி

விடுதலைபெற்ற உருத்திரவர்மன், சம்பாவிற்குத் திரும்பிய பொழுது, சம்பாவின் பல பகுதிகளுக்கு, முன்னர் ஊர், பேர் அறியப்படாதிருந்த பலர், தங்களை, அரசர்கள் என்று உரிமை கொண்டாடும் காட்சியைக் கண்டான். இந்நிலை பத்து ஆண்டுகளுக்குத் தொடர்ந்து, இருந்து வந்ததாகத் தெரிகிறது. உரிமைப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த ஹரிவர்மன் என்பவன், இறுதி

யில் தனது படை பலத்தால், சம்பாவின் பெரும் பகுதியில், தன்னுடைய ஆட்சியை நிலைநாட்டினான். இவனை வரலாற்று நூலார், நான்காம் ஹரிவர்மன் என்பர். நாட்டின் நிலைமையுணர்ந்து, அதற்கேற்ப இவ்வரசன் தன்னைத் தகுதியும், திறமையும் உடையவனாக்கிக் கொண்டான். 1075ல் படையெடுத்து வந்த அன்னாமியர்களை, எதிர்த்து வெற்றியோடு முன்னேறா வண்ணம் தடுத்து, அவன் நிறுத்தினான். காம்போஜப் படைகள், அவனை எதிர்த்துப் போரிட முடியாது, சோமேசு வரம், எனும் இடத்தில், படுதோல்வி அடைந்தது. அந்தப்படைக்குத் தலைமை தாங்கிய இளவரசன் நந்தனவர்ம தேவனை, ஹரிவர்மன் சிறைப்படுத்தினான். அவன், சம்பாவின் தென்பகுதியான, பாண்டுரங்காவைத்தவிர, நாட்டின் மற்றப் பகுதிகளையெல்லாம், மறுபடியும் ஒன்று சேர்த்து, சம்பாவைப் புதியதொரு வல்லரசாக மாற்றினான். நாட்டு மக்களின் நல்வாழ்விற்குரிய பல, ஆக்க வேலைகளில் அவன் ஈடுபட்டான்.

கோயில்களையும், புத்த விகாரைகளையும் அவன் புதுப்பித்தான். வேறுபல புதிய கோயில்களையும் அவன் கட்டினான். 'நல்ல அரசன்' என்னும் பட்டத்தைத் தனக்கு உரியதாக அவன் சூட்டிக்கொண்டான். கி. பி. 1081ல் தன்னுடைய 41-ஆம் வயதில் அவ்வரசன் அரசினைத்துறந்து, துறவியானான். ஆனால். ஒரு மாதத்திற்குள் ஹரிவர்மன் இறந்துவிட்டான். அப்பொழுது, அவனுடைய பதினான்கு மனைவியர், அவனோடு உடன்கட்டை ஏறினர்.

ஹரிவர்மனுடைய ஒன்பது வயது நிறையாத மகன், தந்தைக்குப்பின் அரச கட்டில் ஏறினான். ஆனால், பல தொல்லைகள் நிறைந்த அரசினைக் கட்டிக் காப்பதற்கு, ஆற்றல் மிக்க வீரனையே, அரசனாக ஏற்றுக்கொள்ள நாட்டு மக்கள் முனைந்து நின்றனர். எனவே, அச்சிறுவனுடைய சிற்றப்பன், அண்ணனுடைய மகன் சார்பில், நாடாளத் தொடங்கினான். 'பரம போதிசத்துவன்' என்ற பெயருடையவனுமான அவன், அரசனானான். அரசனாகிய உடனே, அவன் பாண்டுரங்காவின் மீது படையெடுத்துச் சென்றான். வஞ்சனையால், அந்நாட்டைக் கைபபற்றியிருந்த தலைவனை விரட்டி, அவன் அதனைத் தனது ஆட்சியின் கீழ்க்கொண்டு வந்தான். மேலும் அவன், அன்னாமோடு நட்புறவு கொள்வதற்காகத் தூதர்களைத் திறைப் பொருள்களோடு அனுப்பிவைத்தான்.

அவனுக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த, அவனுடைய அண்ணன் மகனான ஐந்தாம் இந்திரவர்மன், அன்னாமியரோடு போர் தொடுத்தான். தன் மூதாதையருள் ஓர் அரசன் அன்னாமிற்குத்

திறைப் பொருளாக அளித்தும், தனது நாட்டின் வடபகுதியில் இருப்பதுமான மூன்று மாவட்டங்களை, அவன் கைப்பற்றினான். எனினும், இந்திரவர்மன் விரைவில் தோற்கடிக்கப்பட்டு, விரட்டப்பட்டான். மேற்கொண்டு பகைவரால் துன்பம் உண்டாகாமல் பார்த்துக் கொள்ள விரும்பிய இந்திரவர்மன், அன்னாமிய அரசனுக்குத் திறைப் பொருள்களை அனுப்பினான். பிறகு, போரின்றி அமைதியாக அவன் வாழ்ந்தான்.

இதன்பிறகு, முப்பதாண்டுகள் வரை, சம்பா அமைதியான வாழ்வும், வளனும் பெற்று விளங்கியது. ஆயினும், ஆறாம் ஜெய இந்திரவர்மன் காலத்தில், மீண்டும் தொல்லைகள் உண்டாயின. அக்காலத்தில் காம்போஜத்தின் அரசனாக விளங்கிய இரண்டாம் சூரியவர்மன், அன்னாமியர்களோடு நெடுங்காலம் வெற்றி தோல்வியின்றிப் போர்புரிந்து கொண்டிருந்தான். இதனால், சம்பா அவன்மீது இரக்கம் காட்டத் தொடங்கியது. இவ்விரு நாடுகளும் கூட்டணி அமைத்து, அன்னாமின்மீது படையெடுத்த போது, அவை படுதோல்வியடைந்தன.

இதனால், சம்பாவின் மன்னன், அக்கூட்டணியிலிருந்து விலகிக்கொண்டான்; மீண்டும், அன்னாமிற்குக் கப்பம் கட்டத் தொடங்கினான். இதைக்கண்டு சீற்றமுற்ற சூரியவர்மன் நட்டாற்றில் கைவிட்ட கூட்டாளியைத், தண்டிக்கத் துணிந்தான். எனவே, கி. பி. 1145ல் சம்பாவின் மீது, சூரியவர்மன் படையெடுத்தான். போரில், அவன் மாபெரும் வெற்றி பெற்றான். விசயாவின் 'மன்னாதி மன்னன்' என்று தன்னை, அறிவித்துக்கொண்டான். இப்போரில் சம்பாவின் அரசன் இறந்தான்.

ஆனால், தென்பகுதியான பாண்டுரங்காவில், புதியதோர் அரசன் தோன்றினான். அவ்வரசனும், அவனைத் தொடர்ந்து ஆட்சிக்கு வந்த ஆறாம் ஜெயஹரிவர்மனும், காம்போஜத்தோடு, ஓயாது, தொடர்ந்து போராடி வந்தனர். காம்போஜத்தின் படைத்தலைவனான சங்கரன், பாண்டுரங்காவை விசயத்தின் துணையைக்கொண்டு தாக்கினான். இவன் 1147ல் தோல்வியடைந்தான். அடுத்த ஆண்டு, காம்போஜத்தின் பேரரசன் பன்மடங்கு ஆற்றலும், திறமையும் வாய்ந்த சிறந்ததொரு படையினைச் சம்பாவின்மீது ஏவினான். இதைத் தொடர்ந்து நடந்த போரில், ஜெயஹரிவர்மன் அவ்விரு நாட்டுப்படைகளையும் புறமுதுகிட்டு, ஓடுமாறு செய்தான். மாபெரும் வெற்றி பெற்ற சம்பாவின் மன்னன், கி. பி. 1149-ல் பெருமிதத்தோடு கூடிய ஆடம்பர ஆரவாரத்துடன் முடிசூட்டிக்கொண்டான்.

எனினும், ஹரிவர்மனுக்கு உண்டான தொல்லைகள் இவற்றுடன் முடிந்தபாடில்லை. சம்பாவின் மலைப்பகுதியில் வாழ்ந்த காட்டுமிராண்டிகளான 'கிராதர்கள்' காம்போஜ அரசனின் தூண்டுதலின் பேரில், சம்பாவின்மீது படையெடுத்துச் சென்றனர். பெரும்போர் நடந்தது, போரின் இறுதியில், கிரா தர்கள் தோற்கடிக்கப்பட்டனர். ஆயினும், ஹரிவர்மனின் மைத்துனன் 'வஞ்சராசன்' கிராதர்களோடு சேர்ந்து கொண்டு தன்னை 'அரசன்' என்று அறிவித்துப், போட்டி அரசினை நிறுவினான். ஹரிவர்மன், தனது மைத்துனனையும், அவனது படைகளையும் தோற்கடித்தான். தோற்று ஓடிய 'வஞ்சராசன்' அன்னாமிய அரசனிடம் அடைக்கலம் அடைந்தான்.

தன்னிடம் அடைக்கலம் புகுந்த 'வஞ்சராசனை' அன்னாமியப் பேரரசன், 'சம்பாவின் பேரரசன்' என்று அறிவித்து, பெரும்படையினை உதவி, அவனைச் சம்பாவிற்குத் திருப்பி அனுபபி வைத்தான். அப்பெரும்படை ஹரிவர்மனை எதிர்த்து நிற்க முடியாது, புறமுதுகிட்டு ஓடியது. இதனையடுத்து, உள் நாட்டுக்கலகம் முதலில் அமராவதியிலும், பின்னர், பாண்டு ரங்காவிலும் உண்டாயிற்று. ஹரிவர்மன் உள்நாட்டு, வெளி நாட்டுப் பகைவர்களை இறுதியாக வென்று, வாகை சூடினான். மாண்புமிக்க மாபெரும் வீரனாகிய அம்மன்னன், தனது ஆட்சி யின் பிற்காலத்தில், போரின்றி அமைதியாக வாழ்ந்தான். கோயில் திருப்பணி செய்வதிலும், பொதுநலப் பணிகள் புரிவதி லும் தன்னுடைய எஞ்சிய வாழ்நாளை அவன் கழித்தான்.

ஹரிவர்மன் பெரிய வெற்றிகளைப் பெற்றபோதிலும், அன்னாமின் அரசியல் தொடர்பில் ஆணவத்தோடு நடந்து கொள்ளாது, அன்பளிப்புகளும், திறைப்பொருள்களும் அனுப்பு வதன் மூலம், நட்புறவு பூண்டிருந்தான். இவ்வாறே, சீன அரச னிடம் அவன் செல்வாக்கும் சிறப்பும் பெற்றுத் திகழ்ந்தான். அவ்வரசன் இறந்தவுடன், அரசுரிமையாக வேறொருவன் வன் முறையில் கைப்பற்றிக் கொண்டான். அவன் அன்னாமியர் களுக்கு ஒழுங்காய்ப் பரிசுப் பொருள்களை அனுப்பிவைத்தான். தன் பதவியேற்பினை ஏற்று, ஆதரிக்குமாறு, அவன் சீனப் பேரரசனுக்குத் தூதரை அனுப்பிவைத்தான். இவ்வாறு, அவன பரிசுப் பொருள்களாக அனுப்பிவைத்தவை, அவன் அராபிய நாட்டு வாணிகர்களை, வழிமறித்துக் கொள்ளையடித்த பொருள்களாகும். அராபிய நாட்டு வாணிகர்கள், அவன் தூதர் களை அனுப்புவதற்கு முன்பே, சீனப்பேரரசனிடம் தங்களுக்கு உண்டான இழப்பினைப்பற்றி முறையிட்டிருந்தனர். இதனால், சீனப்பேரரசன், சம்பாவின் புதிய அரசனான ஏழாம் இந்திர

வர்மன் அனுப்பியப் பரிசுப் பொருள்களை ஏற்றுக்கொள்ளாமல் திருப்பி அனுப்பியதோடு, அவனைச் சம்பாவின் அரசனாக ஒப்புக்கொள்ளவும் மறுத்தான்.

நெடுங்காலமாகக் காம்போஜத்தோடு நடந்து வந்த போர், இம்மன்னனுடைய ஆட்சிக்காலத்தில், ஒரு முடிவிற்கு வந்ததை முன்னர் விரிவாகக் கண்டோம். இவ்வரசன் பல அறக்கொடைகள் வழங்கினான். சம்பா, இடைக்காலத்தில் இழந்த ஆதிக்கத்தையும், ஆற்றலையும், வாழ்வையும், வளத்தையும் மீண்டும் பெற்றதுபோல், இவ்வரசன் காலத்தில் சிறப்புற்று விளங்கத் தொடங்கியது. இவனுடைய ஆட்சிக்காலத்தில் மூன்று பெரிய அதிகாரிகள் அரசனையும், அரசனது குடும்பத்தினரையும் காப்பதற்காகத், தங்கள் உடல், பொருள், ஆவி ஆகிய மூன்றையும் அர்ப்பணிப்பதாகச் சூளுரை செய்துகொண்டனர். இவர்களைச் 'சஞ்சகர்' (Sanjak) என்பர்.

இவர்களுடைய குடும்பங்கள் தலைமுறைதோறும், மன்னர்களின் மெய்க்காப்பாளராகப் பணிபுரிந்து வந்தன. இக்குடும்பங்களுக்கு மன்னர்கள் பட்டமும் பதவிகளும் வழங்கிப் பாராட்டி வந்தனர். இத்தகைய மெய்க்காப்பாளர், இடைக்காலத்தமிழகத்தில் சோழ நாட்டில் 'வேளக்காரப்படையினர்' என்றும், பாண்டிய நாட்டில் 'ஆபத்து உதவிகள்' என்றும் சிறப்புற்று விளங்கியமை இங்கு நினைவுகூர்தற்கு உரியதாகும்.

ஏழாம் ஜெயவர்மனின் வன்முறைப் போக்கினை, எட்டாம் ஜெய இந்திரவர்மனும் தொடர்ந்து கடைப்பிடித்தான். இவனும், காம்போஜத்தோடு போர்புரிய வேண்டியதாயிற்று. இவ்வரசன் காம்போஜத்திற்குச் சிறையாளியாகக் கொண்டு செல்லப்பட்டான். முப்பதாண்டுகள் வரை, காம்போஜப் படைகள், சம்பாவில் தங்கியிருந்தன. கி. பி. 1220-ல் காம்போஜப் படைகள் திரும்பிச் சென்றன.

இதன் பிறகு, புகழ்மிக்க ஆறாம் ஜெயஹரிவர்மனின் பேரனான நான்காம் ஜெயபரமேசுவரவர்மன் அரசு கட்டில் ஏறினான். இவன் ஆட்சிக்கு வந்ததும் காம்போஜத்தோடு ஓர் உடன்படிக்கை செய்து கொண்டான். இவனுக்குப் பின்னர், இவனுடைய தம்பியான ஒன்பதாம் ஜெய இந்திரவர்மன் ஆட்சிக்கு வந்தான். அவனுடைய சகோதரியின் மகன், அவனைக் கொலை செய்துவிட்டான். இக்கொலைகாரன் கி. பி. 1366-ல், பதினொன்றாம் இந்திரவர்மன் என்ற பட்டப்பெயருடன் முடிசூட்டிக்கொண்டான்.

## கூப்ளாய்கானின் தலையீடு

இவனுடைய ஆட்சிக்காலத்தில், மங்கோலியர்கள் சம்பாவின் மீது படையெடுத்து வந்தனர். மாபெரும் வீரனான கூப்ளாய் கான், சம்பா முதலிய நாடுகளின் மன்னர்களை அழைத்துத் தன்னுடைய மேலாண்மைக்குட்பட்டுக், கப்பம் கட்டுமாறு கட்டளையிட்டான். சம்பாவின் அரசன், அதற்கு இசைந்தான். அதனால், கூப்ளாய்கான் சம்பாவினைத் தனது பேரரசின் ஒரு பகுதியாகக் கருதத் தொடங்கினான். இரண்டு அரசப்பிரதிநிதி களை அனுப்பிச் சம்பாவினை ஆளுமாறு, அவன் செய்தான். இத்தகைய மானக்கேடான இழிசெயலுக்குச் சம்பாவின் அரசன் இணங்கிய போதிலும், அவனுடைய மகன் ஹரிசித்துப் பணிந்து போக மறுத்தான். இவன் நாட்டு மக்களுடைய ஆதர வைப் பெற்று, கூப்ளாய்கானின், பிரதிநிதிகளை நாட்டைவிட்டு விரட்டினான். கூப்ளாய்கான் சையாமிற்கும், மலாயாவிற்கும் அனுப்பிய தூதர்களைக் கைப்பற்றிய ஹரிசித்து, அவர்களைச் சிறையில் அடைத்தான்.

இதனால், உண்டான கூப்ளாய்கானின் வெறுப்பு பெருஞ் சீற்றமாகக் கொழுந்துவிட்டு எரிந்தது. ஒரு பெரும்படையைச் 'சகத்து' என்பவன் தலைமையின் கீழ், அவன் சம்பாவிற்கு அனுப்பி வைத்தான். அப்படைச் சம்பாவிற்குப் போகவொட் டாமல் அன்னாம், வழி மறித்தது. உடனே கூப்ளாய்கான் அப்படையைக் கடல்வழியாகச் சம்பாவிற்கு அனுப்பினான். எதிர்ப்பின்றி, அப்படை சம்பாவில் இறங்கியது. 1283-ம் ஆண்டு, ஜனவரி மாதத்தில், சம்பாவில், இருதிறப்படைகளுக்கும் பெரும் போர் நடந்தது. ஆறுமணி நேரம் சம்பா சலியாது வீரப்போர் புரிந்தது. எனினும், சம்பா பின்வாங்க வேண்டியதாயிற்று. நாட்டின் பெரும்பகுதியைச் 'சகத்துக் கைப்பற்றிக் கொண்டான். ஆனால், இந்திரவர்மன் அடிபணியாது, தன்னுடைய படைகளு டன் மலைப்பகுதிகளிற் சென்று, மறைந்து கொண்டான். அங்கிருந்தே காம்போஜம், அன்னாம், ஜாவா ஆகிய நாடு களைத் தனக்குப் படையுதவி புரியுமாறு தூதர்களை அந்நாடு களுக்கு அனுப்பியிருப்பதாக, அவன் மங்கோலியப்படைத் தலை வனுக்குத் தெரிவித்தான். சகத்து, உடனே மலைப்பகுதிகளை யெல்லாம் தாக்கினான். அதனால் சம்பாவின்படை, சிதறுண் டது. எனினும், இந்திரவர்மன் மங்கோலியரின் கைகளுக்கு அகப்படாது தப்பியோடினான். கி. பி. 1284ல் கூப்ளாய்கான், மீண்டும் பெரும்படை ஒன்றை அனுப்பினான். ஆயினும், இந்திர வர்மன் பகைவர் கையில் சிக்கவில்லை. இதனால், போர்வெறி கொண்ட கூப்ளாய்கான், நிலப்படை ஒன்றை அனுப்பி

வைத்தான். ஆனால், முன்பு தடைசெய்ததைப் போன்றே, இம் முறையும் அன்னாமிய அரசன் மங்கோலியப்படை, தன்னுடைய நாட்டின் வழியாகச் செல்வதற்கு உடன்பட மறுத்தான். எனவே கூப்ளாய்கான் முதலில் அன்னாமின்மீது போர் தொடுத்தான். மங்கோலியப்படை வடக்கே சீனாவிலிருந்தும், தெற்கே சம்பாவிலிருந்தும் வந்து குவிந்தன. ஆனால், அன்னாமியப் பேரரசனால் ஒருமுகமாகத் தோற்கடிக்கப்பட்டன.

இவ்வாறு, மேற்கொண்டு விளையக்கூடிய பெருந்தீங்கிலிருந்து, சம்பா காப்பாற்றப்பட்டது, பிறகு, இந்திரவர்மன் விலையுயர்ந்த பொருள்களைத் திறைப் பொருளாகக் கூப்ளாய் கானிற்கு அனுப்பி, அவனுடைய அன்பையும், நட்புறவையும் பெற்றான். இவனுக்குப் பிறகு, ஆட்சிக்கு வந்த இவனுடைய மகனான நான்காம் ஜெயசிம்மவர்மன், பிறருக்கு அடங்கிய சிற்றரசனாக வாழ விரும்பவில்லை. எனவே, முதலில் கூப்ளாய் கானிற்குத் திறை செலுத்தி வருவதை, அவன் நிறுத்தினான். அன்னாமிற்கு வழக்கமாகக் கட்டி வந்த கப்பத்தைக் கட்ட இவன் மறுத்தான். இவ்வரசன் ஜாவாவின், இளவரசியை மணம் புரிந்து கொண்டான். மேலும், அன்னாமின் இளவரசியை மணம் செய்து கொள்ளப் பேராவலோடு இருந்தான். முதலில், அன்னாமின் அரசன் இதற்கு உடன்படவில்லை. ஆயினும், ஜெய சிம்மன் தன் நாட்டின் வடபகுதியிலிருந்த இரண்டு மாநிலங்களைப் பரிசாக அன்னாமிற்குக் கொடுத்து, அன்னாமிய இளவரசியை மணக்க முன்வந்தான். இவ்வாறு, இரண்டாவது முறையாக அன்னாமின் பொருட்டுச் சம்பா துண்டாடப் பெற்றது. அன்னாமிய இளவரசியை மணந்த சில ஆண்டுகளுக்குள் (கி. பி. 1307-ல்), நான்காம் ஜெயசிம்மவர்மன் இறந்தான்.

## அடிமை விலங்கு

பிறகு, ஜெயசிம்மவர்மனின் மகனான மகேந்திரவர்மன், சம்பாவின் அரசனானான். இரண்டு மாநிலங்கள் சம்பாவிலிருந்து துண்டாடப் பெற்றமை, மக்களுடைய உள்ளத்தைக் குமுறும் எரி மலையாக்கியது. இதனால், அடிக்கடி நாட்டில் குழப்பங்களும், கலகங்களும் உண்டாயின. இந்நிலையில் கி. பி, 1312-ல், அன்னாமியப் பேரரசன், சம்பாவின் மீது படையெடுத்து, எளிதில் வெற்றி பெற்றான். மகேந்திரவர்மன் சிறையில் அடைக்கப்பட்டான். இவனுடைய தம்பியிடம், சம்பாவின் ஆட்சிப்பொறுப்பை அன்னாமியப் பேரரசன் ஒப்படைத்தான். இவன், அன்னாமியப் பேரரசுக்குட்பட்ட குறுநில மன்னனாகச் சம்பாவை ஆட்சிபுரிந்தான்.

இவ்வாறு, சம்பா, அன்னாமியப் பேரரசின் ஒரு மாநிலமாக மாறியது. இப்புதிய அரசனும், அன்னாமியரின் ஆதிக்கத்தி லிருந்து விடுதலை பெற முயன்று, தோல்வியுற்றான். உயிர் தப்பினால் போதும் என்று, அவன் தலைமறைவாக ஓடி விட்டான். அதனால் அன்னாமியப் பேரரசின் படைத் தலைவர் கள், சம்பாவில் அரசப்பிரதிநிதிகளாக அமர்ந்து, ஆட்சிபுரியத் தொடங்கினர். நாளடைவில், அவ்வரசப் பிரதிநிதிகள், தங்களை 'உரிமை பெற்ற அரசர்கள்' என்று அறிவித்தனர். இவர்கள் சற்றேறக்குறைய 150 ஆண்டுகள் சிற்சில இடையூறுகளுக் கிடையே, அன்னாமோடு தொடர்ந்து போர் புரிந்து வந்தனர். கி. பி. 1740-ல், அன்னாமியப் பேரரசன் 10,0000 வீரர்களைக் கொண்ட கடற்படையைச் சம்பாவிற்கு அனுப்பினான். 1,50,000 வீரர்களைக் கொண்ட நிலப்படைக்குத், தானே, தலைமை தாங்கி, அவ்வரசன் சம்பாவின் மீது படையெடுத்து வந்தான். அவன் சம்பாவின் தலைநகரான விசயாவைக் கைப்பற்றினான்; வேரல்லா (Varella) முனைவரையிலுள்ள நாட்டினைத் தன் பேரரசோடு அவன் சேர்த்துக் கொண்டான்.

எஞ்சிய சிறு பகுதியில் சிற்றரசர் சிலர், அன்னாமியரின் கருணையால் பிழைத்து வந்தனர். ஆயினும், இச்சிற்றரசர்கள் 'சம்பாவின் அரசர்' என்னும் பெருமையோடு வாழ்ந்தனர். சீனாவும், இவர்களைச் சம்பாவின் அரசர்களென்று ஏற்றுக் கொண்டமை இங்குக் குறிப்பிடத்தக்கது. இக்குறுநில மன்னர் களுள் ஓர் அரசன், அன்னாமியர்களின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற, இறுதியாக முயன்றான். ஆனால், அவன் தோற்கடிக்கப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டான். சம்பா இராச்சியத்தில் பண்ராங்கு ஆறு வரையிருந்த நாட்டினை, அன்னாமியர்கள் தங்கள் நாட்டுடன் இணைத்துக் கொண்டனர். சம்பா அரசின் தலைநகரம் பண்ணியில் உள்ள 'பால்சாணார்' என்னும் இடத்திற்கு மாற்றப்பட்டது. சம்பாவின் அரசன் என்று பெயரளவில் விளங்கி வந்த அரசனும், கி. பி. 1822-ல் அன்னா மியர்களின் கொடுங்கோன்மையைப் பொறுக்க முடியாது, பெருங்கூட்டத்தோடு சென்று காம்போஜத்தில் அடைக்கலம் புகுந்தான். இவ்வாறு சம்பாவை ஆண்ட மாண்பு மிக்க இந்து அரசமரபின் நெடுங்காலத்திய வரலாறு, ஒரு முடிவிற்கு வந்தது. இன்று சம்பா, தன்னுடைய பெயரையும் இழந்து, தன்னை அடிமை நாடாக்கிய மக்கள் கூட்டத்தினரின் பேரால் 'அன்னாம்' என்று அழைக்கப்படுகிறது.

## 3.2.2.

# நாகரிகம்

### தமிழகத் தாக்கம்

சம்பாவின் வரலாறு, பெரிதும் அந்நாட்டில் அமைக்கப் பட்ட இந்தியக் குடியேற்றங்களின் வரலாறாகவே விளங்குகிறது. இதனால்தான், இந்திய நாகரிகத்தின் கூறுகள் அனைத்தும் சம்பாவில் ஆழவேரூன்றி வளர்ந்ததை நாம் காணுகின்றோம். தமிழகக் குடியேறிகள், சம்பாவிற்குத் தங்களுடன் தமிழகச் சமயங்களையும், சமுதாயப் பழக்க வழக்கங்களையும் கொண்டு சென்றனர். சம்பாவை ஆண்ட அரசர்கள் அனைவரும், இந்தியரின் கால்வழியினராக இருந்தமையால், அரண்மனையில் இந்தியப் பண்பாடும் நாகரிகமும் செழித்து வளர்ந்ததில், வியப் பிற்கு இடமில்லை. இந்திய அரசர்களைப் போன்றே, சம்பாவின் அரசர்கள், அரசவையைப் பிராமணர்களையும் புலவர்களையும் கொண்டு அணி செய்தனர். வைதிக சமயத்தை, அரசர்கள் போற்றிய காரணத்தால், நாட்டு மக்களும் 'அரசன் எவ்வழி, குடிகள் அவ்வழி' என்பதற்கு இணங்க, வைதிகச் சமயத்தையே பின்பற்றி ஒழுகினர்.

இந்தியக் கலைகளான சிற்பமும், கட்டடக்கலையும் சம்பாவின் சூழ்நிலைக்கேற்ப, சிற்சில மாறுதல்களோடு அந்நாட்டில் வளர்க் கப்பட்டமை குறிப்பிடத்தக்கதாகும். சாமியர்கள் நாட்டில், இந்திய இதிகாசங்களும், புராணங்களும் படிக்கப்பட்டன. மக்களாலும் மன்னர்களாலும் இந்தியாவில் காணப்படுவதைப் போன்று, பெரும் கோயில்களும், மடங்களும் சம்பாவில் கட்

டப்பட்டன. சம்பாவின் அன்றாட வாழ்வின் பல துறைகளிலும் தமிழ்ப் பண்பாட்டின் நறுமணம் கமழத் தொடங்கியது.

தென்கிழக்கு ஆசியாவில் பரவிய தமிழ் நாகரிகத்தின் ஒரு கூறாகவும், உட்பிரிவாகவும் சம்பா மாறியது. சம்பாவின் பழங்குடி மக்களான சாமியர்கள், இந்தியக் குடியேறிகளின் பழக்க வழக்கங்களையும், நடையுடை பாவனைகளையும் ஆவலோடு பின்பற்றினர். தமிழ்ப் பண்பாட்டின் சிறந்த குறிக்கோள்கள் சாமியர்களின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. இவ்வாறு சம்பாவில் 'தமிழச் சாமிய' கலப்பினால், புதியதொரு நாகரிகத்தைச் சாமியர்கள் தோற்றுவித்தனர்.

## அரசியல் நிலை

தொடக்கம் முதல் இறுதி வரையில் முடியாட்சியே, சம்பாவின் ஆட்சி அமைப்பாக இருந்து வந்தது. தமிழக அரசர்களைப் போன்றே, சம்பாவின் அரசர்களும் வரம்பற்ற உரிமைகளையுடைய அரசர்களாக விளங்கினர். அரசன், நாட்டின் தன்னிகரற்ற தலைவனாகத் திகழ்ந்தான். ஆட்சித் துறையிலும் அறம் வழங்கும் நீதிமன்றத் துறையிலும் அரசனே, தலைவனாக அமர்ந்து செயலாற்றி வந்தான். அறநூல்கள் அரசர்களின் அதிகாரத்தை நெறிப்படுத்துவதற்கு உதவியதே தவிர, அவற்றால் அரசர்களைக் கட்டுப்படுத்தவோ, தடுத்து நிறுத்தவோ இயலாத காரணத்தால் அரசனுடைய அதிகாரத்தைக் கட்டுப்படுத்தும் அமைப்புகள் அக்காலத்தில் இருந்தனவா என்பது தெரியவில்லை. அரசன் தெய்விகத் தன்மையுடையவனாகக் கருதப்பட்டான். இவ்வகையில், தமிழ்நாட்டுக் குடியேறிகள், வைதிக சமயத்தின் கருத்தினையே, போற்றினர் என்பது தெரிகிறது. போ நகரத்தின் கல்வெட்டு (எண் 30), பிராமணர்கள் கூட அரசனுடைய திருவடிகளைப் போற்றி வணங்கினர் என்று குறிப்பிடுகிறது.

## அரசுரிமை

அரசுரிமை பெண்வழி வருவோருக்கே பெரிதும் வழங்கப்பட்டது. அரசர்களை அடுத்து, அவர்களுடைய மருமக்கள் (சகோதரியின் பிள்ளைகள்) மட்டும் ஆட்சிக்கு வரவில்லை. சகோதரிகளின் கணவரும் பெண்வழி ஆட்சியுரிமை பெற்றதைக் காணுகின்றோம். அந்நாட்டு மக்களிடையே, பெருவழக்காக இருந்து வந்த தாய்வழி, மரபுரிமையே இவ்வழக்கத்திற்குக் காரணமாகும் என்பர்.

## இளவரசர்

ஓர் அரசனுக்குப் பிறகு, பட்டத்திற்கு வரத்தக்க அரசகுமாரர் 'யுவராஜர்' என்று போற்றப்பட்டனர். வயது வந்தவுடன், இளவரசர்கள் படைத்தலைவர்களாகவோ, இராசப்பிரதிநிதிகளாகவோ பதவியேற்று, அரசனுக்கு உதவி புரிந்தனர். இளவரசனுக்கு, சாமியமொழியில் ''புலையா'' என்பது பெயர். இளவரசர்கள் பெரும் குடிமக்களைக் கொண்ட குழுவினரால், பெரும்பாலும் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். அரசர்கள், தங்கள் பிள்ளைகளுக்காக முடிதுறக்கும் பழக்கம் இருந்தமை தெரிகிறது.

## அபிடேகப் பெயர்கள்

தமிழ்நாட்டு அரசர்களைப் போன்றே, சம்பாவின் அரசர்களும் அரசுகட்டில் ஏறியபொழுது, அபிடேகப் பெயர்களைப் பூண்டனர். சக்கரவர்த்தி ஒருவனுக்கு இருக்க வேண்டிய 32 பண்புகளைச் சம்பாவில் உள்ள மிசோன் (Mison) கோயிலில் காணும் கல்வெட்டு ஒன்று, குறிப்பிடுகிறது. அரசர்கள் இறந்த பிறகு, வேறு பெயர்களிடப் பெற்றனர். அப்புதிய பெயரைத் 'திண்டிகைப்' பெயர் (dindika) என்பர். இவை அல்லாமல், அரசர்கள் வேறுபல சிறப்புப்பெயர்களையும், பட்டப் பெயர்களையும் சூட்டிக் கொண்டனர். அரசர்கள் யானைகளின் மீது, வெண்கொற்றக் குடையின் கீழ் அமர்ந்து, பறையறையச் சங்குகள் முழங்க, நகர்வலம் வந்தனர். அரசர்களுக்கு வெற்றிலைப் பாக்குமடித்துத்தரும் அடைப்பக்காரர்கள் அரசரின் பின்னே பேழையை ஏந்தியவண்ணம் சென்றனர்.

## அரசனின் உரிமையும் கடமையும்

அறுவடைக்கு முன்பு, சம்பாவில் ஒரு விழா நடைபெற்று வந்தது. அவ்விழாவிற்கு அரசன், தலைமை தாங்கித், தன்கை நிறைய அரிசியை வாரி வழங்குவான். இவ்விழா அறுவடைக்கு உரிய பருவம் வந்து விட்டதை, நினைவூட்டும் வகையில் கொண்டாடப்பட்டது.

அரசர்களின் இல்வாழ்க்கை, அவரவர்களுடைய பண்பு நலத்திற்கேற்ப அமைந்திருந்தது. சில மன்னர்கள் இருமனைவியரோடு வாழ்ந்தனர். வேறு சில அரசர்கள் அந்தப்புரத்தில் ஆரணங்குகளை நிறைத்து, அழகு பார்த்தனர். அரசிகளைத் தவிர, காமக்கிழத்தியரும், ஆடல் மகளிரும் அரசரின் அந்தப்புரத்தை அணிசெய்தனர். அரசர்கள் இறந்த பொழுது, பட்டத்து அரசியர் தம் கணவருடன் உடன்கட்டை ஏறினர்.

அரசனது அவைக்களத்தில் முதியோர்களும், பிராமணர் களும், அறிஞர்களும், புலவர்களும், சோதிடர்களும் இடம் பெற்றிருந்தனர். இவர்களுடைய அறிவுரையை, அரசர்கள் நாட்டினுடைய நல்லாட்சியின் பொருட்டு, அவ்வப்போது நாடியவண்ணமிருந்தனர்.

சம்பாவின் அரசர்கள், பொதுவாக ஆடம்பர ஆரவாரம் நிறைந்தவராக, இன்பத்தை நாடும் சொகுசு வாழ்க்கையையே நடத்தினர். எனினும், குறிப்பாக கங்கராசன், ஹரிவர்மன் போன்ற மன்னர்கள், மண்ணக வாழ்க்கையை விட, விண்ணக வாழ்க்கையை உயர்ந்த ஆன்மிக வாழ்க்கை நெறியைப் பொன்னே போல் போற்றினர் என்பதும் இங்குக் கருதத்தக்கது. இவ்வகையில், தமிழக அரசர்களின் சிறப்புமிக்க இலட்சியங் களும், குறிக்கோள்களும் குடியேற்ற நாட்டு மன்னர்களிடமும் நிலைபெற்றிருந்தமை வியப்பிற்குரியதாகும்.

## ஆட்சிமுறை

முடியாட்சிமுறை சிறப்புற்று விளங்கிய சம்பாவில் அரசர் கள், நாடு முழுவதையும் வரம்பற்ற தங்கள் அதிகாரத்தினால் ஆட்சிபுரிந்து வந்தனர். மத்திய ஆட்சி அமைப்பை மூன்று வகையாகப் பிரித்துக் கூறலாம். அவை ஆட்சியியல், படையியல், சமயவியல் என்னும் மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரித்து வகைப் படுத்தலாம். நாட்டாட்சித் துறையின், தலைமையிடத்தில் இரண்டு தலைமை அமைச்சர்களும், அவர்களின் கீழ் மூன்றுபடி நிலை அதிகாரிகளும் பணிபுரிந்தனர். காவல் படையின் தலைவன், சேனாதிபதி ஆகிய இருவரும் முதன்மையான படைத்துறை அதிகாரிகளாவர். சமயத் துறையில் அரசகுருவும், பிராமணர்களும், சோதிடர்களும் புலவர்களும் இடம் பெற்றனர்.

## நாட்டுப் பிரிவுகள்

நாடு மூன்று பெரும் மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. 'அமராவதி' என்ற மாநிலம் வட பகுதியில் இருந்தது. அதை இன்றைய 'குவாங்கு நாமிற்கு' இணையாகக் கூறலாம். சம்பா புரம், இந்திரபுரம் என்ற புகழ்மிக்க இருபெரும் தலை நகரங்கள் இப்பகுதியிலேயே இருந்தன. விசயா என்னும் மாநிலம், சம்பா, அரசின் நடுப்பகுதியில் இருந்ததாகும். தற்காலத்திய பின்டின் (BintDinn) மாவட்டம் அதற்கு இணையாகும். அதனுடைய முக்கிய நகரமாகிய விசயா, சிறிது காலத்திற்குச் சம்பா அரசு முழுவதற்குமே, பெருந்தலை நகராகத் திகழ்ந்தது. ஸ்ரீவிந்யா

என்ற துறைமுகம் இப்பகுதியிலேயே இருந்தது. மூன்றாவது மாநிலம் 'பாண்டு ரங்கா' என்பது. அது சம்பாவின் தெற்கே உள்ள பான்-ரான் (Phan Rann), பின், துவால் (Binn Thuan) பள்ளத்தாதக்குப் பகுதியில் இருந்தது. அதனுடைய முதன்மை நகரம் 'வீரபுரம்' என்பதாகும். அதற்கு 'இராசபுரம்' என்ற மற்றொரு பெயரும் வழங்கியது. ஒரு முறை அது நாடு முழுவதற்கும் தலைநகராக விளங்கியது. கான்ஹோவா (Khan Hoa) பகுதியில் 'கௌதாரா' என்ற பெரு நிலப் பரப்பு இருந்தது. சில சமயங்களில், அது தனி மாநிலமாகவும் விளங்கியது.

இந்த மாநிலங்கள் 'பிரமாரா' என்ற மாவட்டங்களாகவும், 'விசயா', என்ற வட்டங்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தன. பல்லவர் காலத்திய மாவட்டங்களுக்கு, 'விசயம்' எனும் பெயர் வழங்கியமை நினைவுகூர்தற்குரியது. நாட்டாட்சியின் அடிப்படை உறுப்பாக ஊர்கள் விளங்கின. நான்காம் ஹரிவர்மன் காலத்தில் (கி. பி. 1080), நாடு முப்பத்தெட்டு மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது.

மாநிலத்தின் ஆட்சிப்பொறுப்பு, ஆளுநர் ஒருவரிடமும், படைத்தலைவர் ஒருவரிடமும் ஒப்படைக்கப் பட்டிருந்தது. வரிகளைக் தண்டுவதற்கும், ஆட்சித் துறையின் பொது அலுவல்களைக் கவனிப்பதற்கும் பல்வேறுபடி நிலைகளைச் சேர்ந்த ஐம்பது அதிகாரிகள் ஆளுநரின் கீழ், பணிபுரிந்து வந்தனர். இவ்வதிகாரிகளுக்கு மானியங்களோ, வேறு வகையான வருவாய்களோ வழங்கப்பட்டன. ஆனால், பணத்தை ஊதியமாகக் கொடுக்கும் வழக்கம் அங்கு இருந்ததாகத் தெரியவில்லை. கட்டாய உழைப்பினைப் போன்ற ஒருமுறை, இந்நாட்டில் வழக்கில் இருந்தது. இந்த முறை, தமிழ்நாட்டுச் சோழர் கால ஆட்சிமுறையை நினைவு படுத்துகிறது.

## வரிப்பொருள்

அரசின் முதன்மையான வருவாய் நிலவரியாக இருந்தது. பெரும்பாலும் அது, ஆறில் ஒரு பங்காகத் தண்டப்பட்டது. சில சமயங்களில் பத்தில் ஒரு பங்கும் நிலவரியாகத் தண்டப்பட்டமை கல்வெட்டுகளால் அறியப்படுகிறது. அரசனுடைய வருவாயில் கணிசமான பங்கு, கோயில்களுக்குத் தானமாக அளிக்கப்பட்டது. மேலும், இறையிலி நிலங்களை அரசன் கோயில்களுக்கு மானியமாக வழங்கி வந்தான். தொழில் துறை உற்பத்திப் பொருள்களின் மீதும், வாணிகப் பொருள்களின் மீதும் வரிகள் விதிக்கப்பட்டன.

## குற்றமும் தண்டனையும்

நீதி வழங்கும் உரிமையும், கடமையும் அரசனையே சார்ந்து இருந்தது. இந்து நீதி சாத்திரக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு, வழக்குகள் விசாரிக்கப்பட்டு, தீர்ப்புகள் வழங்கப்பட்டன. இரண்டாம் ஜெய இந்திரவர்மன் மனுநீதி சாத்திரத்தின், பதினெட்டு சட்டப்பிரிவுகளையும் பின்பற்றி, நீதி வழங்கியதாக அறிகிறோம். பார்க்கவியம், சுக்கிரநீதி, நாரதீயம் போன்ற சமஸ்கிருத நீதி சாத்திரங்களில், சம்பாவின் மன்னர்கள் தேர்ச்சி பெற்றிருந்தனர்.

குற்றவாளிகள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். குறிப்பிட்ட சிலகொடிய குற்றங்களுக்காக, குற்றவாளிகளுடைய பொருள்கள், உடைமைகள் பறிமுதல் செய்யப் பட்டன. அவர்களுடைய தனியுரிமைகளும் பறிக்கப்பட்டன. கடனைத்தீர்க்காதவர்களுக்கு, அடிமைகளாக வேலை செய்யுமாறு தண்டனை அளிக்கப்பட்டது. பொதுவாகக் கொடிய குற்றம் செய்தவர்களுக்குக் கசையடி கொடுக்கப்பட்டது. திருட்டு, கொள்ளை போன்ற குற்றங்களுக்குக் கைவிரல்கள் துண்டிக்கப்பட்டன. கொலைக் குற்றம் செய்தவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. மற்றும் சில கொடிய குற்றங்கள் செய்தவர்கள் நாடு கடத்தப்பட்டனர்.

## நால் வகைப்படை

நாட்டில் நிலையான நால்வகைப் படைகளை அரசர்கள் போற்றிக்காத்து வந்தனர். ஐம்பதினாயிரத்திற்கும் மேற்பட்ட காலாட்படை இருந்தது. அரசனுடைய காவலர்கள் (Guards) மட்டும், 5000 பேர் இருந்தனர். அரசனுடைய உடன் பிறந்தவர்களோ, பிள்ளைகளோ படைத்தலைவர்களாகப் பணிபுரிந்தனர்.

சாமியர் படையில் காலாட்படை, குதிரைப்படை, யானைப் படை ஆகிய மூன்றும் சிறப்புற்று விளங்கின. 1171-ஆம் ஆண்டில், சீனர்களிடமிருந்து புதிய போர்க்கலையைச் சாமியர்கள் கற்றுக் கொண்டனர். குதிரைகளின் மீது அமர்ந்துள்ள வீரர்கள், வில்லின் மூலம் அம்புகளை எய்யும் அரியகலையை அவர்கள் கற்றனர். யானைப் படை முதன்மையானதும், முக்கியமானதுமான படையாக விளங்கியது. சம்பா மன்னர்கள் பதினான்காயிரம் யானைப் படைகளை உடையவர்களாக இருந்தனர்.

கடற்படையில் பெரிய நாவாய்களும், இலேசான கப்பல்களும் இருந்தன. போர்க்கப்பல்கள் மிகப்பலவாக இருந்தமை கல்வெட்டுகளால் தெரிகிறது. நூறு போர்க்கப்பல்களைக்

கொண்டது ஒரு கடற்படைப்பிரிவாக இருந்தது. இவ்வாறு பல பிரிவுகள் இருந்தன. நிலப்படையில் வெற்றிக்குக் கடற்படையின் உதவி இன்றியமையாது தேவைப்பட்டமைக்குப் பல போர் நிகழ்ச்சிகள் சான்று பகருகின்றன.

## சமுதாய நிலை

### சாதிப் பாகு பாடு

இந்தியாவின் சமயங்களைப் போற்றிய சம்பாவின் சமுதாயத்தில், இந்தியாவிற்குரிய சாதிப்பாகுபாடு இடம் பெற்றிருந்ததில் வியப்பில்லை. கொள்கை அளவில் நால்வகைச் சாதிகள் இருந்தன. ஆனால், பிராமண, க்ஷத்திரியப் பிரிவுகளே பெரு வழக்காக இருந்தன. பிராமணர்கள் தன்னிகரற்ற செல்வாக்கு உடையவர்களாக விளங்கவில்லை. அவர்களுக்கு மதிப்பு இருந்தது. பிராமணரைக் கொலை செய்வது கொடிய குற்றமாகக் கருதப்பட்டது. ஆனால், அவர்கள் அரசனை அடக்கியாளும் அளவிற்குச் சம்பாவில் ஆதிக்கம் பெறவில்லை. இவ்விரு சாதியினரையும் குறிப்பிடுகிற பொழுது, க்ஷத்திரியரை முதலிலும், பின்னர் பிராமணரையும் குப்பிடுவது அந்நாட்டு வழக்கமாக இருந்தது.

இந்தியாவில் காணப்படுவதைப் போன்று, சம்பாவில் சாதிப் பேய் தலைவிரித்து ஆடவில்லை. பெரும்பாலும் அரசமரபினர், பிராமணப் பெண்களை மணம் புரிந்து கொண்டமை இதற்கு இடையூறாக இருந்தது போலும். சாதிப்பாபாகுட்டோடு, சாமியர்களின் பண்டைச் சமுதாயப்பிரிவுகள் மோதுண்டன. சாமியர் பலகுடிகளாக இருந்தனர். ஒவ்வொரு குடிக்கும் ஒவ்வொரு குடி மரபுச் சின்னம் (Totems) இருந்தது. சாமியர்களின் குடிப் பெயரிலிருந்து, ஒவ்வொரு தனிமனிதரின் பெயரைப்பிரித்து அறிவதுகடினம். ஆயினும், அப்பெயர்கள் பெரும்பாலும், சமஸ்கிருத மொழிச் சொற்களாக இருந்தமை கருதத்தக்கது. நாட்டுப்பழங்குடி மக்களிடத்து, சாதிப்பாகுபாடு செல்வாக்குப் பெறவில்லை. இந்தியக் குடியேறிகளிடத்துத்தான், சாதி வேற்றுமை சிறப்பிடம் பெற்றது.

சம்பாவில், முற்காலத்தில் இருந்த பார்ப்பனர்கள், அணிமைக் காலத்தில் இசுலாமியர் ஆயினர். ஆயினும் அவர்கள் ''ஆச்சாரியர்'', ''குரு'' என்ற பட்டத்தைப் பெற்றவர்களாக உள்ளனர். இப்பொழுது, அங்கு வாழ்ந்து வரும் ''பார்ப்பனர்''

---

5 K. A. Nilakanta Sastri, South Indian Influences in the Far East; P. 62.

'பஸ்ஸே' என்று அழைக்கப் படுகின்றனர். இச்சொல் 'தபஸ்வி' என்ற சொல்லின் மரூஉ என்று அறிஞர்கள் கருது கின்றனர்.[5] அவர்களுக்குச் சமஸ்கிருத மொழி தெரியாது. ஆனால், அவர்கள் கெமர் எழுத்துக்களில், எழுதப்பட்ட சாத் திரங்களைப் படித்து, அவற்றிற்குப் பொருள் விளக்கம் கூறுகின் றனர். தங்களுடைய மூதாதையர், இந்தியாவிலிருந்து-சிறப் பாகச் சோழ மண்டலக் கடற்கரையிலிருந்து எட்டாம் நூற் றாண்டு அளவில், காம்போஜத்திற்கு வந்ததாக அவர்கள் நம்பு கின்றனர். இந்தக் குடியேற்றம், பல்லவருடைய ஆட்சிக் காலத்தில் நடைபெற்றதாகத் தெரிகிறது.

சாமியச் சமுதாயத்தில் மற்றொரு முக்கியமான பாகுபாடு பெருஞ் செல்வாக்குற்றிருந்தது. செல்வர்களாகிய பெருங்குடி மக்களுக்கும், ஏழை எளியவராகிய பொது மக்களுக்கும் இடையே பெருத்த வேறுபாடு இருந்து வந்தது. சாதிப் பிரிவும், ஏழை பணக்கார வர்க்கப் பிரிவும் பெரிதும் ஒன்றையொன்று தழு வியதாகவே அமைந்து இருந்தன. 'பெருங்குடி மக்கள்' எனப் பட்டவர்கள், பெரும்பாலும் க்ஷத்திரியர்களாகவும், பிராமணர் களாகவும் இருந்தனர். சிறுபான்மை செல்வச் செழிப்பு மிக்க வாணிகர்களும், அரசியல் பணிக்காகப் பட்டங்களையும், வேறு பல சிறப்புகளையும் பெற்றவர்களும் பெருங்குடி மக்கள் பிரிவில் இடம் பெற்றிருந்தனர். 'பெருங்குடி மக்கள்' என்பார், ஆடை, அணிகலன்கள், சிறப்புமிக்க ஊர்திகள், இசைக் கருவிகள் முதலிய புறத்தோற்றத்திற்குரிய தனியுரிமைகளைப் பெற்றிருந்தனர். இவை எல்லாவற்றையும்விட, அரசவையில், அரசனுக்கு அருகில் அமரும் சிறப்புரிமையை அவர்கள் பெற்றிருந்தனர். இவ்வியல்பு கள் இடைக்காலத் தமிழகத்தின் பல்வேறு அரசுகளிலும் சிறப் பிடம் பெற்றிருந்தமை இங்குக் குறிப்பிடத் தக்கது.

## மரபுரிமை

தமிழ்ப் பண்பாடும் இந்திய நாகரிகமும் சாமியர்களின் மர புரிமையை மாற்ற முடியவில்லை. சாமியர்களிடையே, தாய்வழி உரிமையே செல்வாக்குற்றிருந்தது. இந்தியாவின் திருமண முறைகள்,சம்பாவில் பின்பற்றப்பட்டன. பிராமணப்புரோகிதர், திருமணத்தில் முக்கிய இடத்தைப்பெற்றார். அவர்கள் நாள் கோள் பார்த்துத் திருமணத்தை நடத்தி வைத்தனர். குறிப்பிட்ட நன்னாளில், உற்றார் உறவினருக்கு இடையே புரோகிதர், மண மகன், மணமகன் ஆகிய இருவருடைய கைகளையும் இணைத்து, மந்திரங்களை ஓதிச் சடங்குகள் பலவற்றைச் செய்து, திரு மணத்தை நடத்தினார்.

## ஆடை அணிகலன்கள்

பண்டைச் சம்பாவில் வாழ்ந்த மக்களின் ஆடை, அணிகலன்களைப்பற்றிக் கல்வெட்டுகளும், சிற்பங்களும் பல செய்திகளைத் தெரிவிக்கின்றன. மிகக் குறைந்த அளவிற்கே, மக்கள் ஆடைகளை அணிந்தனர். இடுப்புக்குக் கீழுள்ள பகுதியே, உடையால் மறைக்கப்பட்டது. மற்றப் பகுதிகள் ஆடையற்றனவாகவே, சிற்பங்களில் காணப்படுகின்றன. சீனர்களின் குறிப்பும் கலைகள் வழங்கும் சான்றும், இவ்வகையில் மிகவும் ஒத்துக்காணப்படுகின்றன. காலப்போக்கில் மேலாடை அணியும் பழக்கம் உண்டாயிற்று. மிகப்பிற்பட்ட காலத்திய சிற்பங்களில், நாம் இதைக் காணுகின்றோம்.

இடுப்பிலிருந்து தொங்கிய உடைகளுள் இரண்டு வகையானவை இருந்தன. ஒன்று கணுக்கால் வரை தொங்கும் நீளமான உடை. மற்றொன்று முழங்காலை மட்டும் மறைத்த குறுகலான ஆடை. நீண்ட உடையினை மகளிரும், குறுகலான உடையினை ஆடவரும் அணிந்திருந்தனர். அவற்றை இடுப்பில் நன்றாக இழுத்துக்கட்டுவதற்குக் கச்சை போன்ற ஒன்றை, அவர்கள் பயன்படுத்தி வந்தனர். துறவிகள் காவியுடை அணிந்திருந்தனர்.

அவர்கள் பயன்படுத்திய அணிகலன்களுள் மோதிரம், வாளி, தொங்கல், காதணி, குழை, பதக்கம், காப்பு, வாகுவலயம், பட்டடை, அட்டிகை, மேகலை போன்றவை குறிப்பிடத்தக்கன.

## ஒப்பனை

முடியை அலங்கரிப்பதில் சாமியர், அதிகக் கருத்தினைச் செலுத்தினர் என்று கூறினால், அது மிகையாகாது. சிற்பங்களில் பல்வேறு வகையான முறைகளில், கொண்டைகள் போடப்பட்டமையும், புதிய அழகுமிக்க முறைகளில் கூந்தல்கள் முடிக்கப்பட்டமை அழகோவியங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. நேர்த்தியும் கவர்ச்சியும் வாய்ந்தவகையில் மகளிர் கூந்தல் முடிப்பதை ஒரு கலையாகப் போற்றி வளர்த்துள்ளனர்.

தலைப்பாகை போன்ற அலங்காரங்களையும் சாமியர்கள் செய்து கொண்டனர். அவை பல பாணிகளில் செய்யப்பட்டிருந்தன. செல்வர்கள் செருப்புகளை அணிந்தனர். பொதுமக்கள் காலணியின்றியே நடந்து சென்றனர்.

## இறந்தோரை அடக்கம் செய்தல்

சம்பாவில் இறந்தோரை அடக்கம் செய்த முறை சிறப்புடையதாகும். பொது மக்கள் இறந்துவிட்டால், மறுநாளே அடக்கம் செய்யப்பட்டனர். அரசர்களோ, பெருங்குடி மக்களோ இறந்து விட்டால், மூன்று நாட்களுக்குப் பிறகுதான், அடக்கம் செய்யப் பட்டனர். இறந்தோரின் குடும்பத்தைச் சேர்ந்த ஆண்களும் பெண்களும், தங்கள் தலைமயிரை மழித்துப் பாடையுடன் சுடுகாட்டிற்குச் சென்றனர். தமிழ் நாட்டின் தெற்கு, மேற்கு மாவட்டங்களில் இறந்தோரின் பங்காளிகளான ஆண்கள், சவ அடக்கம் செய்வதற்கு முன்போ, முடிந்தபிறகோ தலைமுடியை மழித்துக் கொள்ளுவதைக் காணலாம். சவ ஊர்வலம் மேள தாளங்களோடு. சங்குகள் முழங்கச் சென்றது. பாடையை வண்டியில் வைத்துத் தள்ளிச் சென்றனர். ஆற்றங்கரை ஓரங் களில் பிணங்கள் கொளுத்தப்பட்டன. அதன்பிறகு, உறவினர் கள் அமைதியாக வீடு திரும்பினர். சம்பாவில் வாழ்ந்த ஏழை எளிய மக்கள், இறந்து போன தங்கள் உறவினரின் சாம்பலைத் தாழிகளில் இட்டும், பெருங்குடி மக்கள் செம்பாலும், பொன் னாலும் செய்யப்பட்ட தாழிகளில் இட்டும் அவற்றை ஆற்றிலோ, கடலிலோ விட்டு வந்தனர். இத்தகைய பழக்கம் இன்றும் தமிழ் நாட்டில் வழக்கில் இருந்து வருகின்றது.

சம்பாவில் கணவர் இறந்தால், மனைவியர் உடன்கட்டை ஏறும் வழக்கம் இருந்ததாகத் தெரிகிறது. உடன்கட்டை ஏறாத விதவைகள், கைம்மைக் கோலம்பூண்டு வாழ்ந்தனர்.

## அடிமைகள்

சாமியக் கடலோடிகள், ஈவு இரக்கமற்ற கொள்ளைக் கூட் டத்தினராக இருந்தனர். கடற்கரைப் பட்டினங்களுக்குச் சென்று, தாக்கிக் கொள்ளையடித்து வந்ததுடன், அவர்கள் கடற்கரைப் பக்கமாகச் சென்ற மரக்கலங்களை வழிமறித்துத் தீயிட்டுப் பொசுக்கிப் பொருள்களைக் கொள்ளையடித்தனர். இதனால், கீழைக்கடலில் வாணிகம் செய்வோர் அஞ்சி, நடுங்கினர். இதன் விளைவாகச் சாமியரிடையே அடிமைகள் பெருகலாயினர். அடிமை வாணிகம் சம்பாவில் பெருகிற்று. பெருங்குடி மக்களுக் கும், பொது மக்களுக்கும் அடுத்த நிலையில், அல்லற்பட்டு ஆற் றாது கண்ணீர் வடித்த அடிமைகள், சம்பாவின் சமுதாயத்தில் இடம் பெற்றனர்.

## புத்தாண்டு விழா

திருவிழாக்களும், பலவகை விளையாட்டு விழாக்களும் சம்பாவில் கொண்டாடப் பட்டன. புத்தாண்டு அன்று, யானை ஒன்றை நகருக்கு வெளியே அழைத்துச் சென்று, அதை அவிழ்த்து விடும் விழா நடத்தப்பட்டது. தீமைகள் எல்லாம் அகற்றப்படுவதற்கு அறிகுறியாக அவ்விழாவினைச் சாமியர் கொண்டாடினர்.

# 3. 2. 3.

## சமய நிலை

இந்திய நாகரிகத்தின் உயிர் நாடியாக விளங்குவது சமயம். எனவே, சம்பாவில் புதிய குடியேற்றத்தை நிறுவிய தமிழர்கள், தங்கள் சமயத்தையும், வழிபாட்டு நெறிகளையும், தாயகத்தி லிருந்து தங்களுடன் கொண்டு சென்றனர். இந்தக் குடியேற்ற நாடுகளில் இந்திய நாகரிகத்தின் முதன்மைப் பண்பாகிய சமயம், ஆழ வேரூன்றி வளர்ந்ததைப் போன்று, வேறெந்த பண்புகளும் செல்வாக்குறவில்லை. இன்று அத்தீவுகளில் இந்தியர்கள் பெற்ற அரசியல் ஆதிக்கம் 'பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போய் விட்டது' ஆனால், அதை உண்மை என்று இன்றும் உணர்த்து வது சமயமும், அதனுடன் தொடர்புடைய கலைச் செல்வங் களுமேயாகும்.

### சைவ, வைணவம்

தமிழ் நாட்டின் சமயங்கள், இந்நாட்டில் அடைந்த வளர்ச்சி படிப்படியானது. வைதிக சமயத்தின் பழமைப் பற்றுமிக்க பகு தியே, இங்குச் செல்வாக்குப் பெற்றது எனலாம். அச்சமயமே, தமிழ் நாகரிக வளர்ச்சி முழுவதிலும் முதன்மையும், முக்கியத் துவமும் பெற்று விளங்கியது. இந்தியச் சமயச் சிந்தனை களோடு, சம்பாவினுடைய பழங்குடி மக்களின் நம்பிக்கைகளும், பழக்க வழக்கங்களும் பின்னிப்பிணைந்து புதியதொரு வடிவத தைப் பெற்றது. இந்து சமயத்தின் உயிராற்றலும், உணர்ச்சிம திறனும், புதிய நாட்டு மக்களுடைய உள்ளங்களை எல்லாம் எவ்வாறு கவர்ந்தது என்பதையும், அயல்நெறியினர் எத்துணை ஆர்வத்தோடு, இந்திய நாகரிகத்தில் மூழ்கித் திளைத்தனர் என் பதையும் அறிவதற்கும் ஓர் அளவு கோலாக அது விளங்குகிறது.

## பக்திநெறியின் தாக்கம்

சம்பாவில் தழைத்தோங்கிய வைதிக சமயம், வேத காலத்திய பழைய சமயம் அன்று. பிற்காலத்திய பக்தி நெறியாகிய வைதிக சமயமாகும். அதை நாம் சைவம், வைணவம் என்று இரு பெரும் பிரிவுகளாகப் பிரித்துக் கூறலாம். வழிபடு தெய்வங்களின் ஒருமைத்தன்மையில் இச்சமயங்கள், சிறப்புற்று விளங்கின. சம்பாவில் சைவசமயமே, பெருஞ் செல்வாக்குற்று விளங்கியது. அதற்கடுத்து பௌத்த சமயம் சிறப்புறத் தொடங்கியது.

## சைவம்

சம்பாவில் இந்து சமயத் திருமூர்த்திகளான பிரமன், திருமால், சிவபெருமான் ஆகிய மூவருள், சிவபெருமானே தன்னிகரற்ற தனிப்பெரும் சிறப்பினைப் பெற்றிருந்தார். சிவ வழிபாடே மக்களாலும், மன்னர்களாலும் போற்றபபட்டது. சாமியர் சிவனைத் தங்கள் பழைய தெய்வங்களுள் ஒன்றாகவே, கருதிப் போற்றினர். பண்டைச் சம்பாவில் மிசோன் என்னும் இடத்தில் இருக்கும் கோயில்களும், போ-நகர் என்னும் இடத்தில் இருக்கும் கோயில்களும் சிவனுக்குரிய கோயில்களாகவே காணப்படுகின்றன. சம்பா அரசியல் காவல் தெய்வமாகவும், சிவபெருமான் கருதப்பட்டார். சம்பாவில் முதன் முதல், அரசை நிறுவிய 'ஸ்ரீமாறன்' என்ற அரசன் சைவன் என்பதும், அவன் பாண்டியர் குடிவழியில் வந்தவன் என்பதும் நினைவுகூர்தற்குரியன.

சிவபெருமானும், உமாதேவியுமே சம்பாவின் கல்வெட்டுகளில் முதலிடம் பெற்றுள்ளனர். சம்பாவின் கல்வெட்டுகள் சிவபெருமானைச் சர்வன், பவன், பசுபதி, ஈசானன், உருத்திரம், மகாதேவன், உக்கிரன் என்னும் பல பெயர்களால் குறிப்பிடுகின்றன. திருமூர்த்திகளில் முதல் மூர்த்தி என்றும், 'தேவாதி தேவர்' என்றும் சிவபெருமானைக் கல்வெட்டுகள் போற்றுகின்றன. தேவருலகக் காட்சியைச் சித்திரிக்கும் கல்வெட்டுகள், சிவபெருமானை, அந்த அமரர் உலகிற்குத் தலைவனாகக் கூறுகின்றன. சிவபெருமான், வெறும் கருத்துப் பொருளாக மட்டும் போற்றப்படவில்லை. அவரைத் தெய்விக மகனாகக் கொண்டு, புனையப்பட்ட எண்ணற்ற புனைகதைகளும், புராணக் கதைகளும் அந்நாட்டு மக்களிடையே, செல்வாக்குப் பெற்றிருந்தன. நீலகண்டன், ஆலமர் செல்வன், திரிபுராந்தகன், காமனை எரிந்தோன் போன்ற பல புராணக் கதைகள். மக்களிடத்து நன்கு பரவியிருந்தன. இவ்வாறு பல நிலைகளில் சிவ வழிபாடு சிறப்புற்று விளங்கி வருவது தமிழகத்திலேயே யாகும்.

## சிவலிங்க வழிபாடு

சிவபெருமானை, தேவ மகனாகவும், சிவலிங்க வடிவமாகவும் சம்பா மக்கள் போற்றி வழிபட்டனர். சிவனுடைய திருமேனியைக் காட்டிலும், சிவலிங்கங்கமே இந்தியாவைப் போன்று, சம்பாவிலும் பெருவழக்குடையனவாக விளங்கின. மிகப் பழைய காலத்தைச் சேர்ந்த சிவலிங்கம் ஒன்று, தேசியத் தெய்வமாகச் சாமியரின் வரலாற்றுக்காலம் நெடுகப் பெருமதிப்புடன் போற்றப்பட்டு வந்தது. கி. பி. நான்காம் நூற்றாண்டின் இறுதியில், அல்லது ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பத்திரவர்மர் என்று அழைக்கப்பட்டது. இச்சிவலிங்கம், அமைக்கப்பட்ட கோயில், மிசோன் என்னும் இடத்தில் இருந்தது. அக்கோயிலை மையமாகக் கொண்டு, வேறு பல கோயில்கள் தோன்றின. விரைவில், அந்நகரம் 'தேசியக் கோயில் நகரமாக'ச் சிறப்புற்றது. மதுரை மாநகரம் பண்டைக் காலத்தில் இந்த அமைப்பில் இருந்ததாகப் பரிபாடல் தெரிவிக்கிறது. காலப் போக்கில், மாண்புமிக்க பெரிய கோயில்கள் இந்நகரத்திற் கட்டப்பட்டன. அவை எல்லாம், சிவன் கோயில்களாகவே இருந்தன.

கி. பி. 478-க்கும் 578-க்கும் இடையில், அப்பத்திரேசுவரர் திருக்கோயில் தீயிட்டுக் கொளுத்தப்பட்டது. பின்னர் சம்புவர்மன் காலத்தில், அக்கோயில் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. தான் புதுப்பித்த கோயிலுக்குத் தன்னுடைய பெயரைச் சேர்த்து 'சம்புபத்திரேச்சுரர்' ஆலயம் என்று அவன் பெயரிட்டான். அவ்வரசனுக்குப் பின்னர், தொடர்ந்து ஆட்சிக்கு வந்த பிரகாச தர்மன், இரண்டாம் இத்திரவர்மன் போன்ற பிற மன்னர்களும், இக்கோயிலில் எழுந்தருளியுள்ள 'தேவாதி தேவரான சிவபெருமானுக்கு, எண்ணற்ற பொருள்களை நிபந்தமாக வழங்கியதோடு, அவ்விறைவனைப்பற்றிய துதிப் பாடல்கள் பலவற்றைப் பாடியும் உள்ளனர். காலப் போக்கில், அந்தலிங்கம் தோன்றியதைப்பற்றி, ஒரு புராணக் கதை உண்டாயிற்று. கி. பி. 875 ல் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றில், அந்த லிங்கத்தைச் சிவ பெருமானே, பிருகு முனிவருக்குக் கொடுத்தார் என்றும், அம்முனிவர் அதனை உரோஜனுக்குக் கொடுத்தார் என்றும், அவ்வரசனே சம்பாவின் முதல் அரசனாவான் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. கடவுள்களுக்கெல்லாம் தலைவராக விளங்குபவர் 'சம்புபத்திரேசுவரர்' என்றும், மக்கள் வழிபடுவதற்குரிய தெய்வம் அவரே என்றும், சம்பாபுரியின் 'காவல் தெய்வம் பத்திரேசுவரர்' என்றும், அவருடைய அருளைப் பெற்ற அரசர்களே,

உலகப் புகழ்மிக்க, பேரரசர்களாக விளங்கினர் என்றும் வேறு சில கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

பதினோராம் நூற்றாண்டின் இடைப்பகுதி முதல், கிரிசரான பத்திரேசுவரர், தேசியக் தெய்வமாகப், போற்றி வழிபடும் பேற்றைப் பெற்றார். பின்னர்,வந்த மன்னர்கள் எல்லாம், தாங்கள் உரோஜவின் மறு பிறவி என்று கூறிக்கொண்டதோடு, உரோஜன் அமைத்ததாகக் கருதப்படும் அக்கோயிலுக்குப் பல திருப்பணிகள் செய்தனர், பகைவர்களால் சிறப்பாகக், காம்போஜர்களால் அடிக்கடி பாழ்படுத்தப்பட்டமையால், அடுத்து வந்த அரசர்கள் அக்கோயிலைப் பழுது பார்த்ததோடு, புதிய பல அறக் கட்டளைகளையும் வழங்கிவந்தனர்.

நான்காம் ஜெய இந்திரவர்மன், பத்திரேசுவரரின் கோயிலை, வெள்ளியால் அலங்கரித்து, கோபுரங்களைப் 'பொன் தகடுகளால்' அழகு படுத்தினான். இப்பணிக்கு 75 இராத்தல் பொன்னும், சற்றேறக் குறைய 34,000 கி. கிராம் வெள்ளியும் தேவைப் பட்டிருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர்கள் மதிப்பிட்டுள்ளனர்.[6] தமிழ் நாட்டில், சிதம்பரம் நடராசர் கோயில், பொன் வேயப்பட்ட கூரையினை உடையது.

சிவலிங்க வடிவங்களுள், முகலிங்கங்கள் சிறப்பிடம் பெற்றன. போநகரில் உள்ள சாம்புவின் முகலிங்கம், சிறப்புடைய தெய்வமாகப் போற்றப்பட்டது. கி. பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்று, 'விசித்திசாகரன்' என்ற அரசன், அம்முகலிங்கத்தைக் கோயிலில் அமைத்தான் என்று அறிவிக்கிறது. அப்படி அவன் அந்தலிங்கத்தை அமைத்த நாளினைக் கூட,இரண்டு கல்வெட்டுகள் குறிப்பிடுபின்றன. இத்தொன்மைச் சிறப்புவாய்ந்த லிங்கத்தைக் கடல் வழியாகப் படையெடுத்து வந்த காட்டு மிராண்டிமக்கள், கி. பி. 774-ல் அழித்தனர். ஆனல் சத்தியவர்மன் என்ற அரசன், அந்த லிங்கத்தைப் புதுப்பித்தான். அதற்குத் தன்னுடைய பெயரை இட்டான். அது முதல் 'சத்திய முகலிங்கம்', என்ற பெயர் வழங்கலாயிற்று. இந்த முகலிங்கத்தைப் பற்றிய குறிப்பு கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையில், காணப்படுகிறது.

பழைய சிவலிங்களைப் போற்றிக்காப்பதும், புதிய லிங்கங்களை அமைப்பதும் தங்களுடைய புனிதமான கடமையாகச் சம்பாவின் அரசர்கள் கருதினர். புதிய லிங்கங்களுக்குத் தங்களுடைய பெயர்களைச் சேர்த்துப் பெயரிடுவதை அவர்கள் வழக்க

6. R. C. Majumdar, Champa, p, 183

மாகப் கொண்டிருந்தனர். தமிழ்நாட்டில் குறிப்பிட்ட ஓர் அரசன் கட்டிய கோயிலுக்குத், தன்னுடைய பெயரை இட்டு வழங்குவது மரபாகும். குணபரன் கட்டிய ஈச்சுரம், 'குணபரஈச் சுரம்' என்றும், இராசராசன் எடுப்பித்த கோயில், 'இராச ராசேச்சுரம்' என்றும் வழங்கப்பட்டு வருவதை நாம், நன்கு அறி வோம். இதைப்போன்று, சம்பாவில் கோயில்களுக்கு மட்டும் அல்லாமல். கோயிலில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளுக்கும் அப் பெயரிடப் பெற்றதைக் காணுகின்றோம்.

## தேவதாசிகள்

இந்த மாபெரும் சிவன் கோயில்களில், சிவத்தொண்டு செய்த தேவதாசிகள் (உருத்திர கணிகையர்) பலர், அரசரால் அமர்த்தப்பட்டிருந்தனர். அவர்கள் இசை, நாட்டியத்தோடு இறை வழிபாடு சிறப்புற்று விளங்கப் பேருதவி புரிந்தனர். தமிழ கத்தின் கோயில்களில் 'தேவதாசிகள்' தொண்டாற்றியதைப் போன்று, சம்பாவிலும் தொண்டாற்றினர் என்பதும், இம்முறை தமிழகக் குடியேறிகளால் சம்பாவில் புகுத்தப்பட்டது என்பதும் இங்குக் கருதத்தக்கனவாகும்.

## சக்தி வழிபாடு

சிவபெருமானுடன் சிவசக்தியாகிய உமாதேவியும் போற்றி வழிபட்டதைக் காணுகின்றோம். சக்தியை உமா, கௌரி, தேவி, மகாதேவி, பகவதி, மகாபகவதி எனப் பலவாறாகக் குறிக்கப் பட்டாள். மேலும், அவள் மாதரி, லிங்கேசுவரி என்றும், பூமீசுவரி என்றும் அழைக்கப்பட்டாள். மலையரசன் மகளாகவும் சக்தி கருதப்பட்டாள்.

கௌதாரா என்ற சம்பாவின் தெற்கு மாநிலத்தில், சக்தி வழி பாடு சிறப்புற்று விளங்கியதாகத் தெரிகிறது. போ நகரிலுள்ள பகவதி, கௌதாரேசுவரி கோயில். நாடு முழுவதும் இருந்த மக்க ளால், பெரிதும் போற்றப்பட்ட சக்திகோயிலாகும். சக்தியின் பண்புகள் அனைத்தையும், தாந்திரிகச் சமய நெறியில் விளங்கும் துதிப்பாடல் ஒன்று, முதலாம் ஜெயபரமேசுவரவர் மனின் போநகர்க்கல்வெட்டில் காணப்படுகிறது. சிவனும், சக்தி யும் ஒருவரே என்ற கோட்பாடு, இப்பாடலில் அழகுற விளக்கப் பட்டுள்ளது. 'அர்த்தநாரி' எனப்படும் 'மாதொருபாகன்' கோலத்தைப்பற்றிய குறிப்பு, இப்பாடலில் இடம்பெற்றுள்ளமை கருதத்தக்கது. 'டாங்கு பியூஸ்கு' (Dong Phue) நகரில் கிடைத்த அர்த்தநாரியின் சிலை, இக்கருத்திற்குச் சான்று பகருகிறது.

சக்தி, சில சமயங்களில் நந்தியின் மீது நிற்பதைப் போன்ற சிற்பங்களும் செதுக்கப்பட்டுள்ளன. மிசோனில் உள்ள புடைப்புச் சிற்பம் ஒன்றில், பத்துக் கைகளையுடைய காளி நடனமாடும் நிலையில் செதுக்கப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்க தாகும். மகிஷாசுர மர்த்தினி கோலமும் சம்பாவின் சிற்பங் களில் இடம் பெற்றுள்ளமை கருதத்தக்கதாகும். இவற்றால், சக்திவழிபாடு, சம்பாவில் சிலவழிபாட்டோடு, ஒத்த சிறப்புடன் விளங்கியமை புலனாகிறது.

## விநாயகர் வழிபாடு

சக்திக்கு அடுத்துச் சிவனோடு தொடர்புடைய தெய்வமாகக் 'கணேசர்' போற்றப்பட்டதைப் பார்க்கிறோம். சம்பாவில் விநாயகரின் உருவச்சிலைகள் மிகப் பலவாகக் கிடைத்துள்ளன. இதனால், குறிப்பிட்ட ஒரு காலத்தில், விநாயக வழிபாடு சிறப் புற்று விளங்கியிருக்க வேண்டுமென்பது தெரிகிறது. 'போ' நகரில் விநாயகருக்குத் தனிக்கோயில் ஒன்று இருந்தமை, கல் வெட்டுகளால் தெரியவருகிறது. கி. பி. 817-ல் ஜெயஹரிவர்மன் விநாயகருக்குத் தனிக்கோயில் கட்டினான் என்பது குறிப்பிடத் தக்கது. இத்தெய்வம் வீற்றிருக்கும் திருக்கோலத்திலேயே சிலை களாகச் செய்யப்பட்டுள்ளன.

## முருக வழிபாடு

குமரன் எனப்படும் முருகனுடைய வழிபாடு, சம்பாவில் பெருவழக்குடையதாக இருந்தது. கார்த்திகேயன் என்ற பெய ரால், பெரிதும் முருகன் குறிப்பிடப்படுகிறான். முருகப்பெரு மானின் சிலைகள் நான்கைந்து கிடைத்துள்ளன. இரண்டு சிலை கள் அவருடைய மயில் வாகனத்தோடு காணப்படுகின்றன. வேறு இரு சிலைகளில், முருகன் காண்டாமிருகத்தின் மீது அமர்ந்து காட்சி தருகிறான். இந்தியாவில் உள்ளவர்களுக்கு இக்காட்சி புதுமையானது. காம்பூச்சியபவில் இக்காட்சி பெருவழக்காகும்.

சிவபெருமானுடைய வாகனமாகிய நந்தியின் சிலைகள் கோயில்களின் தலைவாயில்களில் மிகப்பலவாக அமைக்கப் பட்டுள்ளன. மூலத்தானத்தை நோக்கி இறைவனைப் பார்த்த வண்ணம், கூனல் முதுகினையுடைய எருதொன்று படுத்து இருப்பதைப்போன்று அவை அமைக்கப்பட்டுள்ளன.

## வைணவம்

சம்பாவின் வரலாற்றில், சைவசமயம் சீரும் சிறப்பும் பெற்று விளங்கியதைப் போன்று, வேறெச்சமயமும் சிறப்புற்று விளங்க

வில்லை என்பது உண்மை. எனினும், பிற சமயங்களும் ஓரள விற்குப் போற்றி ஆதரிக்கப்பட்டன. சம்பாவின் பிற்காலத்திய அரசர்கள், வைணவ சமயத்தைப் போற்றினர். திருமால், பல வகைப் பெயர்களால் போற்றப்பட்டார். கோவிந்தன், மாதவன், ஹரி, சங்கரநாராயணன், நாரயணன் புருஷோத்தமன் என்பன அவற்றுள் சில. பரம்பொருளாகிய திருமாலைவிட அவருடைய அவதாரங்களான கண்ணன், இராமன் முதலிய திருக்கோலங் கள் இந்தியாவில் பெருஞ்சிறப்பினைப் பெற்றதைப்போன்று, சம்பாவிலும் அவதாரங்களே வழிபடும் தெய்வங்களாகப் பெரி தும் போற்றப்பட்டன. இராமன், கண்ணன், அவதாரங்களைப் பற்றிய குறிப்புகள் மிகப்பலவாக உள்ளன. இராமன் தன்னு டைய ஆற்றலை. நான்கு இராமன் வடிவங்களாகத் தோன்று மாறு பிரித்துக் கொண்டான் என்று கல்வெட்டு ஒன்று தெரி விக்கிறது. அந்நிலையில் இலக்குமணனுக்கே முதலிடம் தரப் பட்டது.

இராம இலக்குமணர்களையே நான்கு இராமன் வடிவங்கள் என்று அக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. கண்ணன் புரிந்த திரு விளையாடல்கள் மிகச் சிறப்பாகப் பேசப்படுகின்றன.

சம்பாவின் மன்னர்கள், தங்களைத் திருமாலுடன் ஒப்பிட் டுப் பேசுவதில் மகிழ்ச்சியுற்றனர். சில சமயங்களில் அவர்கள், தங்களைச் சிவபெருமானின் அமிசமாகவே கருதினர். ஜெயருத் திரவர்மன், தன்னைத் திருமாலின் அவதாரம் என்றே கருதி னான். அவனுடைய மகன் ஸ்ரீஜெய உறரிவர்மதேவ சிவானந் தன், அவதார மூர்த்திகளாகிய இராமன், கண்ணன் ஆகியோ ரைக் காட்டிலும் சிறந்தவர் திருமால் என்றும், அவருடைய புகழ் மண்ணும் விண்ணும் நன்கறியும் என்றும், அப்பரம் பொருளா கிய நாராயணனுடைய திருவவதாரமே, தான் என்றும் கூறிக் கொண்டான். அரசர்களைத் திருமாலோடு ஒப்பவைத்துப் போற்றுதல் தொல்காப்பியர் காலத்திய தமிழகத்தில் வழக்கில் இருந்தது. இவ்வாறு போற்றுவதைப் ‘பூவை நிலை’ என்பர். நம் மாழ்வார் ‘திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண் டேனே’ என்று பாடியுள்ளமையும் இங்கு நினைவுகூரத் தக்க தாகும்.

நான்கு திருக்கைகளை யுடைய கோலத்தில், திருமாலின் தெய்வவடிவம் சம்பாவில் வணங்கப்பட்டது. கருட வாகனத் தில், அவர் ஏறிச்செல்வதும், பாற்கடலில் ஆதிசேடன்மீது அவர் அறிதுயில் கொள்ளுவதும் சிற்பங்களாகவும், சிலைகளாக வும் செதுக்கப்பட்டுள்ளன. திருமாலின் சக்தியாகிய இலக்குமி, ‘ஸ்ரீ’ என்றும், ‘பத்மா’ என்றும் அடிக்கடி கல்வெட்டுகளில்

குறிப்பிடப்படுகிறார். கருடவாகனத்தின் செப்புச் சிலைகளும் சம்பாவில் பல கிடைத்துள்ளன.

## பிற தெய்வங்கள்

படைப்புக்கடவுளாகிய பிரமனைப் பற்றிப் பல குறிப்புகள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. ஆனால், அவர் என்றும் சிறப்பான இடத்தைச் சம்பாவில் பெறவில்லை. நான்முக னுடைய திருமேனியும். தாமரை மலரும் சில சிற்பங்களில் மிக நேர்த்தியாகச் செதுக்கப்பட்டன.

திருமூர்த்திகளுக்கு அடுத்த நிலையில், சிறு சிறு தெய்வங்க ளான இந்திரன், குபேரன், யமன், சந்திரசூரியர், கலைமகள் போன்ற தெய்வங்களும் வழிபாட்டிற்குரியவர்களாக விளங் கினர்.

## பரம்பொருள் தத்துவம்

இந்து சமயச் சடங்குகளும் சம்பாவில் சிறப்பிடம் பெற்றி ருந்தன. பரம்பொருளின் தத்துவமும் சம்பாவில், நன்கு செல்வாக்குற்றிருந்தது. கல்வெட்டு ஒன்று, முழு முதற்பொரு ளான இறைவனை 'அவன்' என்ற சொல்லால் சுட்டுகிறது. மனம், மொழி, மெய்களைக்கடந்து நிற்கும். கடவுளைப் பற்றிய தூய்மையான, உயர்ந்த சிந்தனையும் சம்பாவின் மக்களிடையே வளர்ச்சியுற்றிருந்தது.

இந்து சமயத்தின் துன்பியல் நோக்கு, சாமிய மக்களுடைய உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, உலகம் நிலை யாமை முதலியவற்றைப் பற்றிச் சம்பாவின் அரசர்களும், அதி காரிகளும், செல்வர்களும் நன்குணர்ந்து இருந்ததைக் கல் வெட்டுகள் தெரிவிக்கின்றன. 'நில்லாதவற்றை நிலையின' என்று அறியும் 'புல்லறிவாண்மை', அவர்கள் இடத்தில் இல்லை. தாங் கள் செய்யும் செயல்களினால், உண்டாகும் தீவினைப் பயனி லிருந்து தப்புவதையும், பேரின்பமாகிய வீடுபேற்றை அடைவதை யும் குறிக்கோளாகக் கொண்டு அவர்கள், ஒல்லும் வகையெல் லாம் ஓயாது. அறம் செய்து வந்தனர். வீடுபேற்றை அவர்கள் 'சிவலோகம்' என்ற சொல்லாலேயே குறிப்பிட்டு வந்தமை, அவர்களுடைய அழுத்தமான சைவ, சமயப்பற்றைக் காட்டு கின்றது எனலாம்.

## பௌத்தம்

பௌத்த சமயம் சம்பாவில் போற்றிப் பின்பற்றப்பட்டது. எக்காலத்தில், எவ்வாறு பௌத்தசமயம், சம்பாவிற்குள் நுழைந்தது என்பதை, நம்மால் தெளிவாக அறிய முடியவில்லை. சற்றேறக்குறைய கி. பி. ஏழாம் நூற்றாண்டு அளவில், பௌத்தசமயம், சம்பாவில் நுழைந்திருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். கி. பி. 560ல் சீனர்கள் சம்பாவிலிருந்து 1350புத்த சமயச்சாத்திர நூற்களைக் கைப்பற்றிச் சென்றனர் என்று தெரியவருவதால், அதற்கு முன்பே, பௌத்தசமயம் சம்பாவில், செல்வாக்குப் பெற்றிருக்க வேண்டும் என்பது புலனாகின்றது.

ஜினன், போகநாதன், லோகேசுவரன், சகாதன், சாக்கிய முனி, அமிதபா, வச்சிரபாணி, வயிரோசனன், பிராமுடிந்த லோகேசுவரன் என்னும் பலபெயர்கள், புத்தருக்குச் சம்பாவில் வழங்கி வந்தன.

அரசர்களுடைய ஆதரவைப் பெற்று, பௌத்த சமயம் விரைவில் சீரும் சிறப்பும் அடையலாயிற்று. மக்களாலும் பௌத்த விகாரைகள் பலகட்டப்பட்டன. பௌத்த சங்கமும், அதன் துறவிகள் பலரும், சம்பாவில் செல்வாக்குற்று விளங்கினர். அவர்கள் நாட்டின் பல்வேறு பகுதிகளில். பௌத்த மடாலயங்களைக் கட்டியுள்ளனர்.

கி. பி. 875-ஆம் ஆண்டில், சம்பாவின் அரசனான ஸ்ரீஜெய இந்திரவர்மன், லோகேசுவரரின் திருவுருவத்தைக் கோயில் ஒன்றில் நிறுவி, அதனைத் தன் பெயரால் ‘இலக்குமீந்திர லோகேசுவரர்’ என்று அழைத்தான். அவ்வரசன் பௌத்த பிக்குகளின் சங்கத்திற்காக ஒரு மடாலயத்தைக் கட்டினான். அதில் அத்துறவிகளுக்குக் தேவையான பொருள்களை மட்டுமல்லாமல் வசதியான வாழ்க்கைக்குக் தேவையான நுகர்ச்சிப் பொருள்கள் முதலியவற்றையும், அம்மடத்திற்கு வழங்கி வந்தான்.

## சிலைகள்

டாங்குடுவாங்கு (DongDuong), புத்த சமயத்தின் கோட்டையாக விளங்கியது. இங்கு நடைபெற்ற தொல்பொருள் ஆராய்ச்சியின் விளைவாக, மிகப் பரந்ததொரு புத்தருடைய ஆலயம் இங்கு அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளது. அதன் இடிபாடுகளுக்கு இடையில், புத்தர் பெருமானின் சிலைகள் பல கிடைத்துள்ளன. 1.75

மீட்டர் உயரத்தில், நின்ற கோலத்தில் இங்கு ஒரு புத்தரின் சிலை கிடைத்துள்ளது. இதுவரையில் சம்பாவில் கிடைத்துள்ள புத்தர் சிலைகளுள், இச்சிலை மிகவும் நேர்த்தியானதாகவும் கலைப் பண்பு நிறைந்ததாகவும் கர்ணப்படுகிறது.

## மகாயானம்

மகாயான பௌத்த சமயக் கொள்கைகள் சம்பாவில் நன்கு பரவியிருந்தன. ஸ்ரீஜெய இந்திரவர்ம தேவன், மகாயான தத்துவ சாத்திரங்களில் வல்லவனாக விளங்கினான் என்று கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இட்சிங்கு (ITsing) என்ற சீன யாத்திரிகனுடைய குறிப்புகளிலிருந்து, மகாயான சமயத்தின் கிளைகள் சம்பாவில் செல்வாக்குற்றிருந்ததை நாம் அறி கிறோம்.

## சைவ-பௌத்த இணைப்பு

சிவபெருமான், புத்தர் ஆகிய இரு தெய்வங்களுக்கும் இடையே, அதிகமான வேற்றுமையைச் சம்பாவின் மக்கள், காணவில்லை. சைவ சமயக் கொள்கைகள் பௌத்த சமயத் திடத்திலும், பௌத்த சமயக் கொள்கைகள் சைவ சமயத்திடத் திலும் செல்வாக்குப் பெற்றிருந்தன. இவ்விரு சமயத்தின் கோயில்களும் அருகருகே, அமைக்கப்பட்டிருந்தன. டாங்குடு வாங்கில் உள்ள புத்தர் கோயிலை, சிவபெருமானின் வடிவங்கள் அணிசெய்கின்றன.

## சமயப் பொறை

சம்பாவின் சமய வளர்ச்சியின், முதலிலிருந்து முடிவு வரையில், காணப்படும் சிறப்புமிக்க பண்பு சமயப் பொறை யாகும். பல திறப்பட்ட கொள்கைகளை அடிப்படையாகக் கொண்ட வைதிக சமய நெறிகளும், பௌத்த சமயமும் அந் நாட்டில் நிலை பெற்றிருந்தன. எனினும், அவற்றிடையே பூசலோ, பகைமை உணர்ச்சியோ உண்டாகவில்லை. அதற்கு மாறாகப் பரந்த உள்ளப் பண்போடு, எல்லாச் சமயங்களையும் மதித்துப் போற்றும் மனப்பான்மை, மக்களிடையே வளர்ந்து வந்ததைப் பார்க்கிறோம். அரசர்களும் சமயப் பொறை உடை யவர்களாகவே விளங்கினர். வேற்றுச் சமயத்தைச் சார்ந்தோ ரையும் போற்றி ஆதரித்தனர். பிரகாச தருமன் என்ற அரசன் சிவலிங்கங்களை நிறுவி, சிவவழிபாட்டிற்கு ஊக்கமும், ஆக்கமும் அளித்த அதே நேரத்தில், திருமாலுக்குக் கோயில் ஒன்றைச் கட்டியுள்ளான் என்பது இங்கு நினைவுகூர்தற்குரியதாகும். இந்திரவர்மன் என்ற அரசனும் சைவத்திற்கும், பௌத்தத்திற்

கும் இடையே, எத்தகைய வேறுபாட்டையும் காட்டாமல், ஒத்த ஆர்வத்தோடு இவ்விரு சமயங்களுக்கும் திருப்பணி புரிந்துள் ளான். மக்களும், மன்னரின் அடிச்சுவட்டினைப் பின்பற்றினர். இதனால் நாட்டிலே நல்லதொரு அமைதியான சூழ்நிலை நிலவ முடிந்தது. இதுவரையிலும் இந்தியக் குடியேறிகள், தாயகத்தின் சிறந்த மரபுகளைப் போற்றிக் காத்துள்ளமை பாராட்டத்தக்கதாகும்.

பல நாடுகளின் ஆற்றல் மிக்க கலைப்பண்புகள், சம்பாவின் கலையை மாற்றமுற்று, வளரச் செய்தன. காம்பூச்சியா, ஜாவா போன்ற நாடுகளில் காணப்படும் மாபெரும் கோயில்களைப் போன்ற கட்டடங்கள், இந்நாட்டில் கட்டப்படவில்லை. எனினும் செங்கற்களால் கட்டப்பட்ட சம்பாவின் கட்டடங்கள் பெரும் பாலும் சிதைந்தும் அழிந்தும் போனமைபோக, எஞ்சியுள்ளவை, நன்கு வளர்ச்சியுற்ற கலையுணர்ச்சிக்கும் கட்டடக்கலைத் திறமைக்கும் இன்றும் சான்று பகருகின்றன. நம் நாட்டைப் போன்றே, சம்பாவிலும், கலை என்பது சமயத்திற்குக் குற்றேவல் செய்யும் பணிப் பெண்ணாகவே, காணப்படுகிறது. அந்நாட்டு மக்கள், தங்களுடைய பொன்னையும், பொருளையும் சமயச் சார்பான கோயில்களையும், மடாலங்களையும் கட்டுவதிலும் தெய்வத் திருமேனிகளைச் செய்து கோயிலில் அமைப்பதிலும் செலவழித்தனர்.

## கோயிலின் அமைப்பு

சம்பாவில் கட்டப்பட்டுள்ள கோயில்கள் எல்லாம், பெரும் பாலும் கிழக்கு நோக்கியே கட்டப்பட்டுள்ளன. அங்குள்ள கோயில்கள் திராவிடக் கட்டடக்கலை முறையைப் பின்பற்றி, அமைக்கப்பட்டுள்ளன என்பதில் ஐயமில்லை. பெரும்பாலும் இங்குள்ள கோயில்கள், செங்கற்களால் கட்டப்பட்டுள்ளன. ஆயினும், அவற்றிடையே கருங்கற் பலகைகளும், கருங்கல் துண்டுகளும் தாராளமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இக் கோயில்கள், இயற்கை அழகு நிறைந்த இடங்களில் அமைக்கப் பட்டுள்ளன. அவை ஒரே பாணியைப் பின்பற்றி அமைக்கப் பட்டுள்ளன. எனினும், நுட்பமான வேலைப்பாடுகளில் அவற்றிடையே வேற்றுமை காணப்படுகின்றன. ஒரு பெரிய கோயிலைச் சூழ்ந்து, இரண்டு, மூன்று சிறிய கோயில்கள் கட்டப் பட்டுள்ளன. அவை பெரும்பாலும் பிற்காலத்தில் கட்டப் பட்டனவாக இருக்கலாம். தமிழ் நாட்டில் காணப்படும் பரிவார தேவதைகளின் கோயில்களைப் போல அவை உள்ளன.

கோயில்களையும் அதைச் சார்ந்த கட்டடங்களையும் சுற்றி, ஒரு மதில் சுவர் அமைக்கப்பட்டிருக்கிறது. தலைவாயில் மூலமாகத்தான், கோயிலுக்குள் நுழைய முடியும். தலைவாயிலில் கோபுரம் கட்டப்பட்டிருக்கிறது. அக்கோபுரம், மூலக்கோயிலின் விமானத்தைப் போன்று காட்சிதருகிறது. மூலக்கோயிலுக்கு எதிரெதிராக இரண்டு வாயில்கள் உள்ளன. அவற்றிற்குப் படிகள் அமைக்கப்பட்டுள்ளன. அப்படிகள், கிழக்கிலும் மேற்கிலும் கட்டப்பட்டுள்ளன. இவற்றிற்கு அப்பால், பெரியதொரு மண்டபம் இருக்கிறது. அதற்கு ஓட்டாலான கூரை அமைக்கப் பட்டிருக்கிறது. அதனைச் சுவர்கள் அல்லது தூண்கள் தாங்கிக் கொண்டு நிற்கின்றன.

கோயிலின் கருவறை சதுர வடிவமானது. அதனுடைய உயர்ந்த சுவர்கள் எல்லாம், சிற்ப வேலைப்பாடின்றி மெருகிடப் பட்டுள்ளன. கூரைக்குமேல் படிப்படியான வளையங்களோடு கூடிய கூம்பிய வடிவில், விமானம் ஒன்று அமைக்கப்பட்டிருக் கிறது. அவ்விமானத்தைச் சார்ந்த வளையங்கள் குறுகிக் கொண்டு முகடு வரை செல்லுகின்றன. கூரையுடைய தாழ் வாரப் பகுதியை ஒட்டிக், கோயிலின் வாயில் அமைக்கப்பட்டிருக் கிறது, அவ்வாயிலில் படிகள் உள்ளன. கற்களால் செய்யப்பட்ட சாளரங்களும், உத்திரங்களும் அவ்வழியில் பொருத்தப்பட்டிருக் கின்றன. உத்திரங்களுக்கு மேல் கற்களால் அல்லது செங்கற் களால் கட்டப்பட்ட விட்ட முக்கோணக் கூரை இருக்கிறது. இந்த விட்ட முக்கோணம் பெரிதும் சிற்பங்களை உடையனவாக உள்ளன. அச்சிற்பங்கள் சில சமயங்களில் விரிவானவையாகவும், நேர்த்தி வாய்ந்தனவாகவும் உள்ளன.

வெளிப்புறத்தில் மூலத்தானத்தின் மீது, சதுர வடிவில் ஒரு விமானமும் அதன் மீது ஒரு சிகரமும் காணப்படுகின்றன. அங்கு மூவகைப்பட்ட சிகரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. பொதுவாக நான்கு மாடங்கள், ஒன்றன்மீது ஒன்றாக அடுக்கப்பட்டுள்ளன. அவை, மேலே செல்லச் செல்ல ஒன்றைக் காட்டிலும் மற் றொன்று, வடிவில் குறுகிக் கொண்டு செல்லுகின்றன. அவற்றின் உச்சியில் வளைகோடுகளாலான 'பிரமிட்டு' போன்ற கற்பலகைப் பொருத்தப் பட்டிருக்கிறது.

இரண்டாவது வகையான கோயில்களில் இருமாடங்களைக் கொண்ட விமானங்களே அமைக்கப்பட்டுள்ளன. மேலே உள்ள மாடத்தில், நீண்ட தோரண வாயில் போன்ற கூரை இருக்கிறது. இருபக்கத்து மூலைகளிலும் கூர்மையான சாளரம் போன்ற அமைப்புகள் உள்ளன. மூன்றாவது வகையான கோயிலில்,

திராவிட சிற்பங்களாக அமைந்த கோபுரங்களில் இடம் பெறும் கூடுகள் இதில் நிறைய உள்ளன. சுவைகளிலிருந்து நேரடியாக வளைகோடுகளாலான 'பிரமிட்டு' போன்ற விமானம் மேல் நோக்கி எழுப்பப்பட்டுள்ளது. ஆமலகம் என்று சொல்லப்படும் உறுப்பு வட இந்தியக்கோயில் சிகரத்தில் உள்ளதைப் போன்று, அமைக்கப்பட்டுள்ளது.

## சிறப்புமிகு கோயில்கள்

சம்பாவில் மூன்று முக்கியமான கோயில் குழுக்கள் காணப்படுகின்றன. அவை மிசோன், டாங்குடுவாங்கு, போநகர் என்னும் இடங்களிலுள்ளன. டாங்குடுவாங்கில் உள்ளவை, பௌத்த சமயச் சார்புடைய கோயில்களாகும். மற்றவை எல்லாம் சைவ சமயத்திற்குரியன.

## மாமல்லபுரத்துத் தேர்களின் சாயல்

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் கட்டப்பட்டுள்ள மிசோன் என்னும் இடத்திலுள்ள கோயில்கள், திராவிடக் கட்டடக் கலை முறையைப் பின்பற்றியே கட்டப்பட்டுள்ளன. இக் கோயில்கள் வட்ட வடிவமான பள்ளத்தாக்கில் கட்டப்பட்டுள்ளன. இக் கோயில்களின் உயரம் போகப் போக அகலம் குறைந்து, ஒன்றின் மேல் ஒன்றாக மாடிபோல் அமைக்கப்பட்டிருக்கும் மாடங்கள் உடையனவாக உள்ளன. இவை மாமல்லபுரத் தேர்களையும், காஞ்சிபுரத்துக் கயிலாசநாதர் கோயிலையும் அமைப்பில். பெரிதும் ஒத்திருக்கின்றன, மாமல்லபுரத்துக் தருமராசர் ரதமும், அருச்சுனன தேரும் கொண்டுள்ள சிகரங்களே, பெரிதும் சம்பாவின்கோயில் கோபுரங்களுக்கு வழிகாட்டியாக அமைந்திருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.[7] மிசோனில் முப்பது கோயில்கள் உள்ளன. அவை மண்டபங்கள், வாயில்கோபுரங்கள், பல சிறிய கோயில்கள் போன்ற அமைப்புகளை உடையனவாக விளங்குகின்றன.

## பிற கோயில்கள்

மிசோனிலிருந்து, தென்கிழக்கில் 20 கி. மீ. தொலைவில் 'டாங்கு டுவாங்கு' கோயில்கள் உள்ளன. நீண்ட சதுரவடிவில் உள்ள அவ்விடத்தில், ஒரு பெரிய மதில்சுவர் காணப்படுகிறது. கிழக்குத் திசையில் மட்டும் ஒரேவொரு வாயில் இருக்கிறது. நடுப்பகுதியின் மேற்குப் பக்கத்தில் மூலக்கோயில் கட்டப்பட்டு

---

7. R. C. Majumdar, Ancient Indian Colonies in the Far East, p. 187

இருக்கிறது. அதைச் சுற்றி நான்கு கோயில்கள், அமைக்கப்பட்டுள்ளன. அவற்றுக்கு முன்னால், நான்கு வளைவுகளைக் கொண்ட பெரியதொரு கட்டடம் காணப்படுகிறது. அதற்குப் பக்கத்தில், இரண்டு கோயில்களும், இரண்டு மடங்களும் உள்ளன. இவை அனைத்தையும் சுற்றி, ஒரு மதில்சுவர் இருக்கிறது. இம் மதில்சுவர் முதல் சுற்றாலையாக விளங்குகிறது. இந்தச் சுவரைச் சுற்றிலுமுள்ள முற்றத்தில், ஏழு சிறு கோயில்கள் உள்ளன. அதற்கு அப்பால் உள்ள இரண்டு முற்றத்தில் அறைகள், மண்டபங்கள் முதலியன உள்ளன.

போநகரில் ஆறு கோயில்கள், வடக்குத் தெற்காக இரண்டு வரிசைகளில் கட்டப்பட்டுள்ளன. அவை, குன்றுகளின் மீது அமைக்கப்பட்டுள்ளன. அக்கோயில்களுள் பகவதிக்காகக் கட்டப்பட்டுள்ள கோயில், சிறப்புடையதாகும். இக்கோயிலின் உள்ளே, கோபுரத்தின் இடையே, காற்று வாரிகள் அமைக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்க சிறப்பியல்பாகும். விமானம் நான்கு மாடங்களையுடையதாக அழகாகக் கட்டப்பட்டிருக்கிறது. விமானத்தின் நான்கு பக்கங்களிலும், மான்கள், யானைகள், அன்னங்கள் போன்ற விலங்குகளும், பறவைகளும் நேர்த்தியாகச் செதுக்கப்பட்டுள்ளன. சம்பாவின் சிற்பக் கலையின் வன்மையும், மென்மையும் வியக்கத்தக்க வகையில் இங்குக் கலந்துள்ளன.

## சிற்பக் கலை

சம்பாவில் கி. பி. எட்டாம் நூற்றாண்டு அளவில், புதிதாகப் பிறந்த கலைமுறையின், இயற்கைத் தன்மை, அக்காலத்திய இந்தியச் சிற்பங்களின் இணைந்த தோற்றத்திற்கு உயிர் அளித்ததுபோல், காணப்படுகிறது. ‘டாங்கு டுவாங்கில்’ உள்ள சிற்பங்கள், நாட்டு மக்களின் தோற்றத்தைப் பிரதிபலிக்கும் வகையில் செதுக்கப்பட்டுள்ளன. அங்கு அமைக்கப்பட்டுள்ள புத்தர் சிலைகள், தடித்த உதடுகளும், சப்பை மூக்குகளும் கொண்டு காணப்படுகின்றன. சிற்பங்களின் ஒப்பனையும், அணியும் நேர்த்தியும் நாகரிகமும் அற்றனவாகவும், மிகையாகவும் தோன்றுகின்றன.

செடி கொடிகளோடு கலந்த, அழகிய பூவேலைப்பாடு செய்வதில் சாமியர்கள் ஒப்பாரும் மிக்காருமின்றி விளங்கினர். பண்டை மரபினைப் பின்பற்றியே, அவர்கள் தழைகளோடு கூடி பூக்கொத்துக்களையும், இலைத் தொகுதிகளையும், கொடிகளையும் செதுக்கினர். எனினும் அவற்றில், அவர்கள் நயமும், எழில்மிக்க பண்புகளையும் கலந்துள்ளனர். இதனால், அவை கவர்ச்சியின்பம் அளிக்கின்றன. தூண்களிலும், சுவர்களிலும்

கடந்து நிற்கும் கட்டைகளிலும் இவ்வழகிய வேலைப்பாடுகள் செய்யப்பட்டுள்ளன, சில சமயங்களில் இந்தியாவில் காணப்படும் சுருள்களைப் போன்று, சுவர்களில் உட்குழிவாக அச்சுருள்கள் பூவேலைப்பாட்டுடன் அழகுறச்செதுக்கப்பட்டுள்ளன.

### நடராசர் சிலை

பான்ராங்கு (Phan Rang) அருகில் உள்ள சக் பா தாப் (Chuk Ba Thap) கோயிலின் கலைவாயிலுக்குமேல், ஒரு மாடம் இருக்கிறது. அம்மாடத்தில் நடராசர் சிலை ஒன்று ஆறுகைகளுடன் காணப்படுகிறது. அச்சிலையின் அமைப்பும் அழகும் சோழர்காலத்திய நடராசவடிவத்தினை நினைவுபடுத்துகின்றன.

### புதுவகையான கலைப்பாணி

கி. பி. பத்தாம் நூற்றாண்டு அளவில், சம்பாவின் கலை மரபில் பெரும் மாற்றம் உண்டாயிற்று. இக்காலத்துக் கட்டடங்கள், சாமியக் கட்டடக் கலைக்குச் சிறந்த சான்றுகளாகும். படிப்படியான தோற்றம் உள்ளவாறு அமைக்கப்பட்டுள்ள தூண்களும், ஒப்பனையின் அழகும் இக்கலைக்குத் தனிச்சிறப்பைத் தருகின்றன. இக்காலத்தைச் சேர்ந்த நடன மங்கையர் சிற்பங்கள், தனிச் சிறப்பு வாய்ந்ததொரு நெகிழ்ச்சியும், கண்ணையும் கருத்தையும் கவரும் நயமிக்க நேர்த்தியும் உடையனவாகக் காணப்படுகின்றன.

### படிமக்கலை

தெய்வத் திருமேனிகள் பல சம்பாவில் மிக அழகாகச் செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கது போ நகரிலுள்ள உமாதேவியாரின் திருமேனியாகும். சிவபெருமான், புத்தர், முருகன், கணேசர் வடிவங்களும், நடராசர் திருவுருவும் சம்பாவின் சிற்பக்கலை, தமிழகக் கலைமரபின் அடிப்படையில் வளர்ந்ததை நினைவு படுத்துகின்றன. எனவே, தமிழ்ப் பண்பாட்டின் சாயலும், இந்தியக் கலைமரபின் கூறுகளும் சம்பாவின் கலைப் பொருட்களில் பதிந்துள்ளதை எளிதிற் கண்டறியலாம்.

பழங்கால இந்தோ-சீனத்தில் வழங்கிய கலைமரபுகளான கெமர் வழிப்பட்ட காம்பூச்சிய கலையும், சாமியக்(சம்பா) கலையும் இந்தியக் கலைகளிலிருந்து தோன்றியவை என்பது இவற்றால் புலனாகின்றது. கட்டடம் அமைக்கும் முறையும், சிலை அமைக்கும் வகையும் தமிழக முறைகளை ஒத்தவையாகும். எனினும், அவற்றில் சொந்தக் கற்பனைக்குப் பஞ்சம் இல்லை. காம்போஜம், சம்பா ஆகிய நாடுகளின் பழைய கலைகளில் இந்திய மணத்துடன் உள்நாட்டு மணமும் சிறிது கமழ்கிறது.

## இலக்கியம்

சம்ஸ்கிருதமொழி, சம்பாவின் ஆட்சிமொழியாக இருந்தது என்று கூறினால், அது மிகையாகாது. இந்திய இலக்கியங்கள் அங்குப் போற்றி வளர்க்கப்பட்டன. சற்றேறக்குறைய நூறு சம்ஸ்கிருதக் கல்வெட்டுகள் சம்பாவில் கிடைத்துள்ளன. அவை பல்லவர் காலத்திய 'கிரந்த' எழுத்துகளை ஒட்டி அமைக்கப் பட்ட வடமொழி எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளன. இந்தியாவிலிருந்து, சம்ஸ்கிருத நூல்கள் பல படியெடுக்கப்பட்டு, சம் பாவிற்குக் கொண்டு செல்லப் பட்டன. மேலும், சம்பாவிலேயே புதியதாகச் சில சம்ஸ்கிருத நூல்கள் இயற்றப்பட்டன. அவ் வாறு இயற்றப்பட்ட நூல்களில் சிலவற்றின் பெயரும், அந் நூல் களிலிருந்து எடுக்கப்பட்ட வாசகங்கள் சிலவும் கல்வெட்டுகளில் குறிப்பிடப் பட்டுள்ளன. ஹரிவர்மன் (803-817) ஆட்சியில் அர்த்த புராண சாத்திரம் என்ற கால வழிச் செய்திக் கோவை, சம்ஸ்கிருத மொழியில் இயற்றப்பட்டமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

மன்னர்கள் இலக்கியத்தைச் சுவைப்பவர்களாகவும், இலக் கியப் படைப்பாளர்களாகவும் சிறப்புற்று விளங்கினர். பத்திர வர்மன் என்ற அரசன், நான்கு வேதங்களிலும் நன்கு பயிற்சி பெற்றிருந்தான். முதலாம் ஜெய இந்திரவர்மன் அறுவகைப் பட்ட இந்திய தத்துவங்களில் தேர்ச்சி பெற்று விளங்கியதோடு, பாணினியின் வியாகரத்திலும் பௌத்த சமயத்திற்குரிய தத்துவத் திலும், ஆகயானம், உத்திர கல்பம் ஆகிய சைவ சமய நூல் களிலும் புலமை பெற்றிருந்தான். நான்காம் ஸ்ரீஜெய இந்திர வர்மன் இலக்கணம், சோதிடம், மகாயான தத்துவம், தரும சாத்திரங்கள் போன்றவற்றினைக் கசடறக் கற்றறிந்தான், இவற்றிலிருந்து சம்பாவில் சம்ஸ்கிருத மொழியும், கலைகளும் பெற்றிருந்த செல்வாக்கினை உய்த்துணரலாம்.

கல்வெட்டுகளினால் இந்திய இதிகாசங்களான இராமாயண மும், மகாபாரதமும் நன்கு போற்றப்பட்டமையும், புராணங் களும், தரும சாத்திரங்களும் படிக்கப்பட்டமையும் தெரிய வரு கின்றன. கல்வெட்டுகளில் சம்ஸ்கிருத இலக்கிய மணம் வீசுவ திலிருந்து அக்காலத்திய சம்பாவின் மக்கள், சம்ஸ்கிருத இலக்கி யங்களிலும் நல்ல பழக்கம் உடையவர்களாக இருந்தனர் என்பது புலனாகிறது.

சம்பாவின் இலக்கியப்பணி செம்மையாகவும் சிறப்பாகவும் நடை பெற்று வந்தமைக்குக் கிடைத்துள்ள ஒரு மறைமுகமான

சான்று இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். கி. பி 605-ல் லியூ பாங்கு (Liu Fang) என்ற சீனப்படைத் தலைவன், சம்பாவை முற்றுகையிட்டுக் கொள்ளையடித்த பொழுது, 1950 பௌத்த சமய ஏடுகளைக் கொண்டு சென்றான் என்று சீனாவின் கால வழிச் செய்திக் கோவை ஒன்று குறிப்பிடுகிறது. இதனால், மிகப் பழங்காலத்திலேயே சம்பா, இலக்கிய வளமிக்க நாடாக இருந்தது என்பதை அறிகிறோம். இவ்வாறு சம்பாவின், அரசியல் முதல் இலக்கியம் வரை உள்ள நாகரிகத்தின் நற்பண்புகள் அனைத்திலும், தமிழ்ப் பண்பாட்டின் சுவடுகள் பதிந்திருப்பதை யாரும் மறுக்கவோ, மறைக்கவோ இயலாது.

# 3.3.1.

# வரலாறு: ஒரு கண்ணோட்டம்

காம்பூச்சியாவின் பழைய பெயர் காம்போஜம் என்பதாகும். ஐரோப்பியர்கள் இதனைக் 'கம்போடியா' என்னும் பெயரால் சுட்டினர். அணிமைக்காலம் முதல் 'காம்பூச்சியா' எனும் பெயரால் இந்நாடு குறிப்பிடப்படுகிறது.

### கெமர்களின் எழுச்சி

சென்ற இயலில், நாம் கண்ட கதைக் குறிப்புகளாலும், ஓரிரு கல்வெட்டுகளாலும் அறியப்படுவனவற்றைத் தவிர, இந்தோ-சீனாவின் பண்டை வரலாறு இருள்செறிந்ததாக இருக்கிறது. இந்நாட்டில் கெமர்களும், சாமியர்களும் தலையெடுக்கத் தொடங்கிய காலம் முதல், இந்நாட்டைப் பற்றி ஓரளவிற்குத் தெளிவாக, நாம் அறிய இயலுகிறது. 'கெமர்கள் மாபெரும் கட்டடங்களைக் கட்டுவதில் வல்லவர்கள்' என்ற வரலாற்றுப் புகழைப் பெற்றவர்கள் ஆவர். இவர்களே, இக்காலத்திய காம்பூச்சியாவில் வாழும் மக்களுடைய மூதாதையராவர். கெமர்களின் பண்டை அரசினைச், சென் லா (Chen-la) என்று சீன வரலாற்றுக் குறிப்பேடு குறிப்பிடுகின்றது. முன்பு குறிப்பிட்டதைப்போன்று, இந்நாடு பியூணானின் ஆட்சிக்குட்பட்ட சிற்றரசாக இருந்ததா என்பது தெளிவாகத் தெரியவில்லை. ஆனால், இந்நாட்டு அரசமரபும் பியூணானைப் போன்று, இந்திய மக்களின் கால்வழியில் வந்தது என்பது உறுதி.

## காம்பூச்சியரின் எழுச்சி

தங்கள் மரபின் தோற்றம் பற்றிய சுவைமிக்க கதை ஒன்றினைக் கெமர்கள் குறிப்பிட்டுள்ளனர். 'கம்புசுயம்பு" என்ற முனிவரைத் தங்களுடைய மூதாதை என்று அவர்கள் கூறுகின்றனர். அம்முனிவருக்குச் சிவபெருமான், தேவர் உலகத்து மங்கை ஒருத்தியை மனைவியாக அளித்ததாகவும், அவ்விருவருடைய வழித்தோன்றல்களே, கெமர்கள் என்றும் அவர்கள் பெருமிதத்துடன் கூறிக்சொள்ளுகின்றனர். கம்புசுயம்புவின் வழிவந்த மன்னர்கள், 'காம்போஜர்' எனப்பட்டனர். இக்கதை கவுண்டினியனுடைய கதையிலிருந்து வேறுபட்டது. எனினும் சென்லா, கெமர் பேரரசாக வளர்ச்சியுற்றவுடன் கெமர் மன்னர்கள், தாங்களும் கவுண்டினியனின் கால்வழியினர் என்று உறவு கொண்டாடியதைக் காணுகின்றோம். கெமர்கள் தாய் வழியுரிமை (Matriarchy) யுடையவர்கள். ஒருகால், கெமர்கள் பியூணான் அரசமரபோடு மணவுறவு கொண்டமையால், கவுண்டினியனோடு ஒட்டும், உறவும் கொண்டாடி இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

## கெமர்களும் நாகரும்

இதைப் போன்றவொரு கதை, ஸ்கந்த சிஷ்யன் என்ற பல்லவ அரசனைப் பற்றியும் கூறப்படுகிறது. அவன், அசுவத்தாமனுக்கும் நாக கன்னிகைக்கும் பிறந்ததாகச் சொல்லுவர். தமிழ் இலக்கியத்தில், நெடுமுடிக்கிள்ளிக்கும், பீலிவளை என்ற நாகநாட்டு இளவரசிக்கும் பிறந்தவனே, தொண்டைமான் இளந்திரையன் என்று குறிப்பிடப்பெற்றுள்ளமை இங்குக்கருதத்தக்கது.

இந்த உருவகக் கதையினால், நாகரிகம் அற்ற பழங்குடி மக்களாகிய நாகர்களிடம் இருந்து, காம்போஜத்தை இந்தியக் குடியேறிகள் கைப்பற்றிய செய்தி தெரிய வருகிறது. நாகரிகத்தின் புத்தொளி, அந்நாட்டிற்குக் கொண்டு செல்லப்பட்டமையும், முறையான ஓர் ஆட்சி நிறுவப்பட்டமையும் இதனால், அறியப்படுகின்றன. கம்பு, சிவன் என்ற பெயர்கள், காம்போஜத்தில் ஆதிகாலத்தில் புகுத்தப்பட்டமையால், அக்காலத்தில் சைவ சமயமே, ஆதிக்கம் பெற்றிருக்கவேண்டும் என்பதும் புலனாகிறது.

## பெயர் விளக்கம்

கெமர்களின் மொழி, கீழைப்பர்மாவில் வாழும் மோன்கள், தலேங்குகளின் மொழியேயாகும். அஸாமில் வாழும் காசிகள்

(Khasis) மொழியோடும் நெருங்கிய தொடர்பு உடையதாகும். காசிகள், கெமர்களைப் போன்று, இன்றுவரை தாய்வழி உரிமை யுடையவர்களாக இருந்துவருவது குறிப்பிடத்தக்கது.

கம்புவின் வழிவந்தவர்கள் ஆட்சிபுரிந்த நாடு 'காம்போஜம்' என்று பெயர் பெற்றது. காம்போஜம் என்ற பெயரை ஐரோப்பியர்கள் 'கம்போடியா' (Cambodia) என்று திரித்து வழங்கலாயினர். சில ஆண்டுகளுக்கு முன்னர், அந்நாட்டு அரசு, 'காம்பூச்சியா' என்று, தம் நாட்டின் பெயரைப் பழைய முறைப்படி மாற்றி அமைத்துக்கொண்டது,

இக்காம்போஜ நாட்டைப், பண்டை இந்திய மக்கள் நன்கு அறிந்திருந்தனர். வியாசர் அருளிய மகாபாரதத்தில், காம்போஜ அரசன், தன்னுடைய பெரும்படையோடு கௌரவருக்கு உதவியாகப் போரில் கலந்து கொண்டதாகச் சொல்லப்படுகிறது. மாண்புமிக்க சம்ஸ்கிருத கவிஞரான காளிதாசர், தம்முடைய 'இரகுவமிசத்'தில் இராகவன் (இராமரின் முப்பாட்டன்) திக்கு விஜயம் செய்தபொழுது, காம்போஜ மன்னனைத் தோற்கடித்ததாகக் கூறுகிறார். இதனால், கி.பி. நான்காம் நூற்றாண்டில் காம்போஜத்தைப் பற்றி, இந்திய மக்கள் நன்கு அறிந்திருந்தமை தெரிகிறது. பிரமாண்டபுராணம் என்ற வடமொழி நூல், காம்போஜத்தை 'அங்க தீபம்' என்ற நிலப்பகுதியில் இருப்பதாகக் குறிப்பிடுகிறது.[1]

## அரசின் தோற்றம்

காம்பூச்சியாவின் முதல் அரசனாக உருத்திரவர்மன் என்பவன் போற்றப்படுகிறான். அவனுக்குப் பிறகு, ஆட்சிக்கு வந்த சிரேஷ்டவர்மன் என்ற அரசன், 'சிரேஷ்ட புரம்' என்ற தலைநகரை அமைத்து, அங்கிருந்து ஆண்டான். இங்கு ஆட்சிபுரிந்த அரசர்களுள், புகழ்மிக்கவன் உருத்திரவர்மன் என்பவனாவான். காம்போஜ நாட்டின் பண்டைக் கல்வெட்டுகள், உருத்திரவர்மன் பற்றி மிகப் பெருமையாகப் பேசுகின்றன. அவ்வரசனுடைய அரசவையினை, ஆயுர் வேதத்தில் வல்லுநர்களான பிரமதத்தன், பிரமசிம்மன் என்ற புகழ்மிக்க சகோதரர்கள் அணிசெய்தனர்.

## தமிழ்நாட்டுக் குடியேறிகள் அமைத்த அரசு

அக்காலத்தில் காம்போஜத்தில் சைவமும் வைணவமும் தழைத்தோங்கின. காம்போஜத்தின் அரசர்கள், பல்லவர்களுக்

---

1. Swami Sadanand; Hindu Culture in Greater India, PP. 75-87

குரிய 'வர்மன்' என்ற பட்டப் பெயரைப் பூண்டு இருந்தனர். ஆங்கோர்வாட், பயோன் முதலிய கோயில்கள் தென்னிந்தியக் கோயில்களைப்பெரிதும் ஒத்துள்ளன. மேலும், தென்னிந்தியாவி லிருந்து 'சிவநடராச வடிவம்' காம்போஜத்திற்குக் கொண்டு செல்லப்பட்டமை ஆகிய எல்லாவற்றையும் ஒருங்கு இணைத்துப் பார்க்கின்றபொழுது, தென்னிந்தியர்களே கம்போடியாவிற்குச் சென்று, குடியேறி இருக்கவேண்டும் என்ற முடிவிற்கு வர வேண்டியுள்ளது என்று ஆராய்ச்சியாளர் கூறுவர்.[2]

பண்டைக்காலக் கெமர் அரசர்களுள், சிறந்தவர்கள் பவவர் மனும், அவனுடைய தம்பி சித்திரசேனனுமாவர். இவர்கள் இரு வரும் பியூணானை ஆண்ட உருத்திரவர்மனுடைய உறவினர் களாவர். உருத்திர வர்மன் இறந்தவுடன், இவர்களிருவரும் பியூ ணானின் அரசைக் கவிழ்த்துத், தங்கள் ஆட்சியை நாடு முழு வதிலும் பரப்பினர். இவர்கள் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியிலும், ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் ஆண்டதாகத் தெரிகிறது.

### காஞ்சியும் கெமர் அரசர்களும்

இப்பகுதியில் கிடைத்துள்ள மிகப்பழைய கல்வெட்டு பவவர் மனுடையதாகும். அக்கல்வெட்டு சம்ஸ்கிருத மொழியில் பாட லாகப் பொறிக்கப்பட்டிருக்கிறது. ''பவவர்மன், தனது வில்லின் ஆற்றலால் பெற்ற வெற்றிகளில் அடைந்த பொன்னை யும், பொருளையும் கொண்டு, சிவலிங்கம் ஒன்றை அமைத்துத் திருப்பணி செய்ததை'' அக்கல்வெட்டு அறிவிக்கிறது. பண்டைக் காலத்திய கெமர் அரசர்கள், சைவ சமயத்தில் பெரிதும் ஈடு பாடுடையவர்களாக இருந்தனர். அவர்களுடைய மதகுரு 'சோமவர்மன்' என்பவராவர். அவர் சாமவேதத்தினை நன்கு கற்றிருந்ததாகவும் தென்னிந்தியாவில் காஞ்சிமாநகரைச் சேர்ந்த ''கடிகையில்'' கல்வி பயின்றதாகவும், தெரிகிறது. அக் குருநாதர் பவவர்மனின் தங்கையை மணம்புரிந்து கொண்டார். சோமவர்மர் ''திரிபுவன ஈசுவரருக்கும் சூரியனுக்கும்'' கோயில் கட்டினார். அக்கோவிலின் விழாக்காலங்களில் இராமா யணமும், பாரதமும் விரிவுரையாற்றுவதற்குரிய அறக்கட்டளை களை அமைத்து, தம்மிடமிருந்த இராமாயண ஏடுகளை, அக் கோயிலுக்குக் கொடுத்து, அவர் உதவியதாகவும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

---

2. P.N. Bose, Hindu Colony of Cambodia; P.17

## முதல் பேரரசன்

பவவர்மனுக்குப் பிறகு, சித்திரசேனன் 'மகேந்திரவர்மன், (கி.பி. 604-627) என்ற பட்டப் பெயருடன் அரசனாக முடி சூட்டிக்கொண்டான். அருகிலிருந்த சம்பாவுடன் அவன் மிக நெருங்கிய தொடர்பு கொண்டான். கி.பி, 604-ல்' மகேந்திர வர்மன் பொறித்த கல்வெட்டு ஒன்று காம்பூச்சியாவில் கிடைத்திருக்கிறது. அது பல்லவர்கள் காலத்திய, கிரந்த எழுத்துகளால் சம்ஸ்கிருத மொழியில் பொறிக்கப்பட்டிருக்கிறது அதில் யோக நெறியையும், பாசுபதத்தைக் கைக்கொண்டுள்ள சிவபெருமானைவழிபடும் துறவிகள் சிலரைப்பற்றியும்குறிப்புகள் காணப்படுகின்றன. உண்மையில், காம்போஜத்தை ஆட்சிபுரிந்த சித்திரசேனனுக்கும், அதே காலத்தில் தமிழ்நாட்டை ஆட்சி புரிந்த பல்லவ வேந்தனாகிய மகேந்திர வர்மனுக்கும் தொடர்பு இருந்திருக்க வேண்டும்என்பது இதனால் புலனாகின்றது. இந்திய அரசர்களுள், பல்லவ மரபினரைத் தவிர, பிற அரசமரபினருள் யாரும் 'மகேந்திரன்' என்ற பெயரையோ, 'வர்மன்' என்ற பட்டப் பெயரையோ அக்காலத்தில் பெருவழக்காகச் சூட்டிக் கொள்ளவில்லை. பல்லவர் மரபைச் சேர்ந்தவர்களே, இப்பெயர் களைப் பெரிதும் போற்றியதாகத் தெரிகிறது.

காம்போஜ மன்னனான சித்திரசேனன், அரசு கட்டிலேறிய வுடன், மகேந்திரவர்மன் என்ற அபிடேகப் பெயரைச் சூட்டிக் கொண்டான். இதனால் காஞ்சிக்கும் காம்போஜத்திற்கும் யாதோ ஒருவகையான தொடர்பு இருந்திருக்க வேண்டும் என்பதும், அத்தொடர்பின் பயனாகக் காம்போஜ மன்னன், பல்லவர் குடியின் சிறப்பை உணர்ந்து, அவர்களைப் போன்று தானும், பட்டங்களைச் சூட்டிக்கொள்ளவும் பெயர்களை மாற்றியமைத்துக் கொள்ளவும் முன்வந்திருக்க வேண்டும் என்பதும் அறியப்படுகிறது.[3]

காம்போஜத்திலும், அதற்கு முற்பட்ட காலத்தில் பியூணா னிலும் 'பாசுபத' சைவசமயம் பரவியிருந்ததாகத் தெரிகிறது. கி. பி. 627-ல் 'ஹரியரன்' வழிபாட்டிற்குரிய தெய்வச்சிலைகள் இங்குச் செய்யப்பட்டன. மகேந்திரன் 'பவபுரம்' என்ற தலை நகரை நிறுவினான். அவன், சைவ—வைணவச் சமயங்களை ஆதரித்தான். எனினும், அவன் சிறந்த சிவபக்தனாகவே விளங்கி னான். அவ்வரசன் நான்கு கோயில்களைக் கட்டி, அவற்றுள்

---

3. K. A. Nilakanta Sastri, South Indian Influence in the Far East; p. 37

சிவலிங்கங்களை அமைத்தான். இந்திய இதிகாசங்களான இராமாயணமும், பாரதமும், மற்றப் புராணங்களும் அவனுடைய ஆட்சிக் காலத்தில் சென்-லா முழுவதும் நன்கு பரவி இருந்தன. இவற்றையும் காரைக்கால் அம்மையார் பாடல்களைப் போன்ற பக்திப் பாடல்களையும் கோயில்களில் படிப்பதற்கும் ஓதுவதற்கும், அரசன் அறக்கட்டளை அமைத்தான். இவையாவும் சென்-லாவிலும், காம்போஜத்திலும் வைதிக சமயம் விரைவாகத் தழைத்து வளரத் தொடங்கியமைக்குச் சான்று பகருகின்றன.

சித்திரசேனனுக்குப் பிறகு, ஈசானவர்மன் ஆட்சிக்கு வந்தான். அவனுடைய ஆட்சிக் காலத்தில், பிராமணர்களின் ஆசிரமங்கள் பல காம்போஜத்தில் அமைக்கப்பட்டன. வேத வேள்விகளும், துறவு வாழ்க்கையும் போற்றப்பட்டன. இக் காலத்தில் வணக்கத்திற்குரிய ஈசான தத்தர், வித்தியாவிநயர் போன்ற மாபெரும் துறவிகள் அங்கு வாழ்ந்தனர். கி. பி. 639-ல் இரண்டாம் பவவர்மன், 'நான்கு கைகளையுடைய தேவியின்' சிலைக்குக் கோயில் அமைத்து, வழிபாடு செய்தான்.

கி. பி. 665 அளவில் ஆட்சிக்கு வந்த, ஜெயவர்மன், தான் சைவசமயத்தைச் சார்ந்தவனாக இருந்தும், பௌத்த சமயத்தை ஆதரித்தான். பிரமதத்தரின் வழிவந்த சிம்மதத்தர் இவனுடைய மருத்துவராக விளங்கினார். அக்காலத்தில் அரசர் குடிக்குரிய மருத்துவர்கள், அமைச்சர்களாகவும் இருந்து வந்தனர் என்பது, இங்குக் குறிப்பிடத்தக்கது. அவ்வரசனுடைய ஆட்சிக் காலத்தில், மற்றுமொரு 'ஹரியரன்' கோயில் கட்டப் பட்டது. அதற்குச் சிறப்பாக விழாக்கள் நடத்தப்பட்டன. கி. பி. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி, காம்போஜத்தின் வரலாற்றில் இன்னல் செறிந்த காலமாகும். அக்காலத்தில் காம்போஜ அரசு சீர்குலைந்து, பல சிற்றரசுகளாகச் சிதறுண்டு போயிற்று. சைலேந்திரப் பேரரசின் தாக்குதலை எதிர்க்கும் ஆற்றலற்று, காம்போஜம், அதற்கு அடிப்பணிந்தது.

## 3.3.2.

# காம்பூச்சியாவில் பல்லவர்கள்

### காஞ்சியில் பல்லவர்

தமிழ் நாட்டின் வடபகுதியான தொண்டை மண்டலத்தை, காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு கி. பி. நான்காம் நூற்றாண்டு முதல் ஆட்சி புரிந்த அரச மரபினர் பல்லவர் எனப்படுபவராவர். அவர்களுடைய ஆட்சி, தென்னிந்தியாவில் மட்டும் அல்லாமல், தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் பரவி யிருந்ததாக வரலாற்று அறிஞர்கள் கருதுகின்றனர்.[4]

பல்லவ அரசன் இரண்டாம் ஸ்கந்த சிஷ்யனுடைய இராயக் கோட்டைச் செப்பேட்டில் காணப்படும் வாசகம் ஒன்று நம் கருத்தைக் கவருகிறது. அச்செப்பேட்டை வழங்கிய அரசனைக் 'கடலைக் குடித்த, அகத்தியரோடு உவமித்துப் போற்றுகிறது.[5] இதனால், ஸ்கந்த சிஷ்யன் கடல்களை-கடல் சூழ்ந்த நாடுகளை அடக்கி யொடுக்கினான் என்பது பெறப்படுகிறது. இராவண னைப் பற்றிய குறிப்போ, இராமனைப் பற்றிய குறிப்போ இந்தச் செப்பேட்டில் இடம் பெறவில்லை. எனவே, இங்குக் குறிப்பிடப்படுவது இலங்கைப் படையெடுப்பாக இருக்க இயலாது.

---

4. T. N. Subramanian, Pallavas of Kanchi in South East Asia, p. 6
5. Epi. ind., Vol; 5; p. 49, pp. 9-11

கி. பி. ஏழாம் நூற்றாண்டு அளவில், அகத்தியர் வழிபாட்டு நெறி, தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பெருஞ் செல்வாக்குடன் இருந்ததை அறிகிறோம்.[6]

எனவே, அகஸ்தியரைப் பற்றிய உவமையில் இருந்து, ஸ்கந்த சிஷ்யன் தென்கிழக்கு ஆசிய நாடுகளை வெற்றி கொண்டு இருக்க வேண்டும் எனத் துணியலாம்.

இரண்டாம் நரசிம்மவர்மனாகிய இராசசிம்மனுடைய வயலூர்க் கல்வெட்டு, 'திவீபலட்சத்தீ(வி)ல் வாழும் குடி மக்களின் நலனையும், அவன் நாடுவதாகத் தெரிவிக்கிறது.[7] இந்தக் கல்வெட்டைப் பதிப்பித்த கல்வெட்டு அறிஞர் எச். கிருஷ்ண சாஸ்திரி ''இத்தொடர் இலட்சத்தீவுகளைக் குறிக்க வில்லை; நெடுந்தொலைவிற்கு அப்பால், கடலில் உள்ள எண்ணற்ற தீவுகளையே சுட்டுகிறது.[8] என்று முடிவு செய்துள்ளார்.

மேற்கண்ட வயலூர்க் கல்வெட்டு, இராசசிம்மன் ஆட்சிக்கு வந்தவுடன் பிறப்பித்த ஆணையாகத் தோன்றுகிறது. இதனால், இராசசிம்மன் ஆட்சிக்கு வருவதற்கு முன்னரே, பல்லவ அரசர் நெடுந்தொலைவில் கடல்களுக்கு அப்பால் உள்ள நாடுகளை ஆட்சி புரிந்திருக்க வேண்டும் என்பது புலனாகிறது. இந்த உய்த்துணர்வை, ஸ்கந்த சிஷ்யனைப் பற்றிய வாசகத்தோடு தொடர்புப்படுத்திப் பார்ப்போமானால், பல்லவர்களுடைய கடலாதிக்கம் பற்றிய நம்பிக்கை உறுதிபபடும்.

இராசசிம்மனுக்குத் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் அரசியல் ஆதிக்கம் இருந்ததற்குச் சீனாவின் காலவழிச் செய்திக்கோவை ஒன்று சான்று பகருகிறது. எகிப்தியரும், அராபியரும் சீனப் பேரரசனுக்கும் பல்லவ இராசசிம்மனுக்கும் பகைவர்களாக இருந்தனர். அவர்களை அடக்கியொடுக்குவதில் இவ்விருவரும் தீவிரமாகக் கூட்டணி அமைத்துச் செயல்பட்டனர்.[9]

காம்பூச்சியாவின் கெமர் அரசர்களைப் பல்லவர் வென்றதைப் பற்றிய குறிப்பு சாளுக்கிய விநயாதித்தனின் கல்வெட்டு ஒன்றில் காணப்படுகிறது.

---

6. O. G. Gangoly, 'The Cult of Agastya : and the Origin of Indo-Colonial Art, in Rupam, Vol. 25; 1926 ; P. 42
7. Epi. Ind. vol. 8; PP. 181-82
8. Ibid; PP. 25-26
9. K. A. Nilakanta Sastri (ed), Foreign Notices of South India PP. 116-117

சம்பாவில் மிசோன் எனும் இடத்தில், கிடைத்துள்ள கல்வெட்டு ஒன்று, ''இந்த வாமேசுவரருடைய கோசத்தை (லிங்கம்), விக்கிரவர்மன் எனப்படும் இராசசிம்மன் அமைத்தான். இது உலகம் உள்ளளவும் நிலைபெற்று விளங்குவதாக''[10] என்று கூறுகிறது.

'இராசசிம்மன்' எனும் பெயருடைய இருவர், இதே காலத்தில், சம்பாவின் இரு பகுதிகளை ஆட்சிபுரிந்துள்ளனர். முதலாவது அரசன் கி. பி. 655-690க்கும் இடையே ஆண்டவனாவான். இரண்டாம் அரசன் கி.பி. 710-730க்கும் இடையே ஆட்சிபுரிந்துள்ளான். இவ்விருவருள் 'மிசோன் கல்வெட்டைப் பொறித்தவன் யார்?' என்பது தெரியவில்லை. எனினும், இவ்விருவரும் பல்லவப் பேரரசன் இராசசிம்மனுடைய சமகாலத்தவர் என்பது மட்டும் தெளிவாகிறது. எனவே, அவர்கள் பல்லவனுடைய மேலாண்மையை ஏற்றுக் கொண்டவர் என்பது, 'இராசசிம்மன்' எனும் சிறப்புப் பெயரை, அவர்கள் சூட்டிக் கொண்டமையால் புலனாகிறது.

இக்கருத்துகளை எல்லாம், தொகுத்து நோக்குகின்ற பொழுது, பல்லவப் பேரரசனுடைய மேலாண்மை தென்கிழக்கு ஆசிய நாடுகளில் நிலைநாட்டப்பட்டு இருக்க வேண்டும் எனும் எண்ணமே மேலோங்கி நிற்கிறது.

இக்கருத்தினை அரண் செய்யும் வகையில், காம்பூச்சியாவினை ஆண்ட அரசர்கள் சிலருடைய பெயர்களும் அமைந்துள்ளன.

உருத்திரவர்மன் என்பவன் காம்பூச்சியாவின் சிறப்புமிகு அரசனாவான். அவனுக்கு முன்னர், கிருதவர்மன், சிரேஷ்டவர்மன் எனும் மன்னர்களும் ஆட்சி புரிந்ததை முன்னர்க் கண்டோம்.

இந்தப் பெயர்களில் 'வர்மன்' எனும் சிறப்பு விகுதி இடம் பெற்றிருப்பதை நோக்குக. 'வர்மன்' எனும் பெயர்ச்சொல், 'சத்திரியரை'க் குறிக்கும் சிறப்புப் பெயராகச் சம்ஸ்கிருதத்தில் உள்ள 'அமரகோசம்' எனும் நிகண்டு தெரிவிக்கிறது. இதே கருத்தினைத் தமிழிலுள்ள நிகண்டுகளும் அறிவிக்கின்றன. கி.பி. ஏழாம் நூற்றாண்டு அளவில், 'வர்மன்' எனும் பட்டப் பெயரைச் சூடியிருந்த இந்திய அரசர்கள், பல்லவரே ஆவர் என்பதனை முன்னரே கண்டோம். எனவே, காம்பூச்சியாவின்

---

10. R. C. Majumdar, Champa, Part 3; Ins. No. 1

அரசர்கள், பல்லவர்களுடைய அரசியல் மேலாண்மையை ஏற்றுக் கொண்டவர்களாக இருந்து இருத்தல் வேண்டும் என்பது தெளிவாகிறது.

மற்றும், காம்பூச்சியாவின் சிறப்புமிகு அரசனான பவ வர்மனுக்கு, ஒரு தம்பி இருந்தான். அவனுக்குச் 'சித்திரசேனன்' என்பது பெயராகும் என்பதனை முன்னரே கண்டோம். அவன் அரசனாக முடி சூட்டிக் கொண்ட பொழுது, மகேந்திரவர்மன் எனும் அபிடேகப் பெயரைப் பூண்டான். கி. பி. 604-ல், அவன் காம்பூச்சியாவில் பொறித்த கல்வெட்டு ஒன்று கிடைத்து இருக்கிறது.

தான் பெற்ற வெற்றிகளின் சின்னமாக, மலையின் மீது உள்ள கிரி ஈசுவரனுக்கு ஒரு கோயிலை அவன் எடுப்பித்தான். அதில் மாபெரும் லிங்கம் ஒன்றைப் பிரதிட்டைச் செய்தான். இதை ஆராய்ந்த வரலாற்றுப் பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார், ''இதே காலகட்டத்தில், பல்லவர் குலத்தின் சிறப்பிற்குக் காரணமாகவும், மகேந்திரவர்மன் எனும் பெயரை யுடைய முதல் அரசனாகவும் பல்லவர் அரச குடும்பத்தில் தோன்றித் தமிழக வரலாற்றில் பொன்றாப் புகழுடையவனாக வாழ்ந்ததை நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். காவிரி ஆற்றை எதிர்நோக்கிய வண்ணம் திருச்சிராப்பள்ளிக் குன்றின் மீது அவனும் கிரி ஈசுவரனுக்கு ஒரு கோயிலை அமைத்துள்ளான். இவ்விரு மகேந்திரவர்மர்களுடைய கல்வெட்டுகளில் காணப் படும் எழுத்துகளில் நெருக்கமான ஒற்றுமைப் பண்புகளைக் கூர்ந்து நோக்குகின்ற பொழுது, 'இவை எல்லாம் தற்செயல் நிகழ்ச்சிப் பொருத்தமாகவா இருக்கும்?' எனும் ஐயம் எழுகிறது.

நூற்றுக்கணக்கான கிலோ மீட்டர்களால் இடையறவு பட்டிருக்கும் இவ்விரு நாடுகளிலும், எண்ணிப் பார்க்க இயலாத வகையில், மிக நுட்பமான ஒப்புமைப் பண்புகள் முனைப்பாக உள்ளன. எல்லாவகையான செயல்களிலும், வழக்கங்களிலும் ஒரே வகையான பண்பாடு சிறப்புற்று விளங்குவதற்கு, இவ்விரு அரசர்களின் கல்வெட்டுப் பதிவேடுகள் சிறப்புமிக்க சான்று களாக அமைந்துள்ளமை, நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது''[11] என்று தெரிவித்துள்ளமை, ஆழ்ந்து சிந்திப்பதற்குரியதாகும்.

இவருடைய கூற்றிலிருந்து, வேறு யாதோ ஒருவகையான தொடர்பு நிலவி இருக்க வேண்டும் எனும் எண்ணம் உறுதிப்படு

11. K. A. Nilakanta Sastri, South Indian Influences in the Far East; P. 37

கிறது. அணிமைக்கால ஆராய்ச்சி, அத்தொடர்பு அரசியலாதிக்கத் தொடர்பாகத்தான் இருக்க வேண்டும் எனும் உண்மையை வெளிப்படுத்தியுள்ளது.

சித்திரசேனனுடைய 'பூலோகோம் (Phu Lokhom) கல்வெட்டு, வீரவர்மன், சித்திரசேனன் எனும் இருவரையும் குறிப்பிடுகிறது. இப்பெயர்கள், பல்லவர்களுடைய சாசனங்களில் காணப்படும் வீர (கூர்ச்சர) வர்மன், சித்திரமாயன், சித்திர மேகன் எனும் பெயர்களை நினைவுபடுத்துகின்றன.

காம்பூச்சியாவின் அரசனான முதலாம் ஜெயவர்மனுடைய கல்வெட்டு ஒன்று, பல்லவர்களைப் பற்றி நேரடியாகவே குறிப்பிடுகிறது. அக்கல்வெட்டு வாசகம் முழுமையாகக் கிடைக்கவில்லை. எனினும், ''ஆ-காஞ்சிபுர நிருபா'' எனும் தொடர் மட்டும்[12] கிடைத்து இருக்கிறது. அது காஞ்சி அரசனைப் போற்றும் வகையிலேயே அமைந்துள்ளதைக் காணுகின்றோம். இந்த அரசனுடைய ஆட்சியின் தொடக்கத்தை அறிவிக்கும் கல்வெட்டு, கி. பி. 657-ல் இவனால் பொறிக்கப்பட்டதாகும். இவனுடைய ஆட்சியின் முடிவினைத் தெரிவிக்கும் கல்வெட்டு 674-ல் பொறிக்கப்பட்டதாகும்.

இதுவரையில் நாம் கண்ட பல்வேறு சான்றுகளும், விளக்கங்களும் பல்லவர் அரசகுடிக்கும், தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கும் நெடுங்காலமாக அரசியல் தொடர்பு இருந்து வந்தமையும், அது முதலாம் மகேந்திரவர்மனுடைய ஆட்சிக்கு முன்பு இருந்தே, நின்று நிலவி வருவதையும் தெளிவுறுத்துகின்றன.

## திருமண உறவு

இராசசிம்மனுடைய மனைவி ரங்கபதாகை என்பவள், காம்பூச்சிய அரசனுடைய மகளாவாள் என்பது அறிஞர் சிலரின் கருத்தாகும்.[13]

## காஞ்சி அரியணையில் காம்பூச்சிய இளவரசன்

காஞ்சியைச் சிறப்பாக ஆட்சி புரிந்துவந்த பல்லவருடைய அரசமரபு, (கி. பி. 315-731) பரமேசுவரவர்மனோடு, கால்வழி

12. T. V. Mahalingam; Readings in South Indian History, P. 19.
13. T. N. Subramanian; op. cit; PP. 45-48

இல்லாமல், அழியும் நிலை உண்டாயிற்று. இதைத் தொடர்ந்து பல்லவர் மணிமுடியைச் சூட்டிக் கொள்ளுவதற்காகச் சிலர் போட்டியிட்டனர்.

பல்லவ அரசமரபின் கிளைக் குடியைச் சேர்ந்த சிம்மவிஷ்ணுவின் தம்பியான வீமவர்மனுடைய ஆறாவது கால்வழியில் வந்த இரணியவர்மன், நெடுந்தொலைவில் உள்ள நாட்டில், அரசனாக இருந்தான். அவன் காடுகளும், மலைகளும், ஆறுகளும், கடல்களும் இடையிட்ட ஒரு நாட்டில் இருந்தான். அவனுக்கும் காஞ்சிப் பல்லவர்களுக்கும் நெருக்கமான தொடர்பு இருந்து வந்ததாகத் தெரியவில்லை. ஆனால், பல்லவ அரச மரபில் தந்தை வழியிலும், தாய்வழியிலும் தூய்மையான அரசகுடித் தொடர்பு உடையவன் இரணியவர்மன் என்று அக்காலத்துப் பல்லவ நாட்டுப் பெருமக்களால் கருதப்பட்டான்.

எனவே, பல்லவப் பேரரசின் மகாசாமந்தர்களும், நகரத்தாரும், மூலப்பிரகிருதியாரும், காடக முத்தரையரும், கடிகைத் தலைவரான தரணிகொண்ட போஜரும் நெடுந்தொலைவிற்கு அப்பாலுள்ள நாட்டிற்குச் சென்று, இரணியவர்மனைக் கண்டனர். அவனைப் 'பல்லவ அரியணையில் அமருவதற்குத் தங்களுடன் வருமாறு' அவர்கள் அழைத்தனர்.

இரணியவர்மன், 'தனக்குத் தமிழ்நாட்டில் அரசனாக விருப்பம் இல்லை' என்று மறுத்துவிட்டான். ஆனால், தன்னுடைய ஆண்பிள்ளைகள் நால்வருள், அரசராக விரும்புகிறவரை அனுப்பிவைப்பதாக அவன் சொன்னான். ஆனால், அவனுடைய நான்காவது மகனாகவும் வயதில் மிகவும் இளைஞனாகவும் இருந்தவனே, நெடுந்தொலைவில் உள்ள நாட்டிற்குச் செல்லுவதற்கு இசைந்தான். மற்றவர்கள் புதிய நாட்டின் சூழ்நிலை எப்படி இருக்குமோ என்று அஞ்சினர். 'இளங்கன்று பயம் அறியாது' எனும் பழமொழிக்கு ஏற்ப, கடைக்குட்டி, காஞ்சிக்குச் செல்லுவதற்குத் தன் தந்தையிடம் வாழ்த்துதலை வேண்டி நின்றான்.

காஞ்சிப் பெருமக்கள், அவனை அழைத்துவந்து, பல்லவப் பேரரசிற்கு மன்னனாக முடி சூட்டினர். 'நந்திவர்மப் பல்லவன்' எனும பட்டப் பெயரோடு, அவன் ஆட்சிபுரியத் தொடங்கினான்.

இந்த வரலாற்றைக் காஞ்சியில், இருக்கும் நந்திவர்மன் எடுப்பித்த, வைகுந்த பெருமாள் கோயிலில் காணப்படும் "வரலாற்றுச் சிற்பங்கள்'' தெரிவிப்பதாக டாக்டர் சி. மீனாட்சி

அறிவித்துள்ளார்.[14] இந்தச் சிற்பங்களில் கூறப்படும் செய்தி உண்மை நிகழ்ச்சியேயாகும். ஆனால், 'இரணியவர்மன் அப்பொழுது வாழ்ந்து வந்த நாடு எது?' எனும் வினாவினை எழுப்பினால், பதினைந்து ஆண்டுகளுக்கு முன்புவரை, அதற்குச் சரியான விடையை யாரும் கொடுக்க வில்லை என்பது தெரியவரும்.

திரு. தி. நா சுப்பிரமணியன், இந்தச் சிக்கலுக்குத் தீர்வு காண, நெடுங்காலம் முயன்றுள்ளார். பல்லவமல்லன், காஞ்சிக்கு வந்த பொழுது, ''பலகிரி, நதி, வனம், ககனங்களைக் கடந்து வந்தான்'' என்று வைகுந்த பெருமாள் கோயில், ''வரலாற்றுச் சிற்பக் கல்வெட்டின்'' எட்டாம் பகுதி (H) தெரிவிக்கிறது.

இந்த வாசகத்தை ஆராய்ந்து பார்க்கும்பொழுது, அவன் தென்னிந்தியாவிலிருந்து காஞ்சிக்கு வந்து இருப்பதாகத் தெரியவில்லை. இக்கல்வெட்டில் காணப்படும் 'ககனம்' எனும் சொல்லிற்கு, 'எளிதில் கடக்க இயலாதக் கடல்' எனும் பொருளே முனைப்பாக வெளிப்படுகிறது. இந்தப் பொருளில், நந்திவர்மன் கடந்து வந்த வழியைப்பற்றி ஆராய்ந்த அறிஞர், அவன் கடல் கடந்த நாடு ஒன்றில் இருந்து காஞ்சிக்குப் பல்லவப் பேரரசின் பெருங்குடி மக்கள் அழைத்துக் கொண்டு வந்து இருக்க வேண்டும் என்பது புலனாகிறது.

காம்பூச்சியாவின் கல்வெட்டுகளில், பீமவர்மனையும், இரணியவர்மனையும் பறறிய குறிப்புகள் காணப்படுவதால், பல்லவ அரசமரபின் இளைய கிளை, சிம்ம விஷ்ணுவின் தம்பியான பீமவர்மன் காலத்திலேயே (கி.பி. 520 அளவில்), காம்பூச்சியாவில் குடியேறி இருந்ததோடு, அங்கு ஓர் இராச்சியத்தை ஆட்சிபுரிந்து வந்ததையும் அறிய முடிகிறது என்பது திரு. தி.நா. சுப்பிரமணியத்தின் துணிவாகும்.[15] இதனை டாக்டர் டி. வி. மகாலிங்கமும் உடன்பட்டுள்ளார்.[16]

மேற்கண்ட ஆய்வுரையினால் பல்லவர்களுக்கும் தென்கிழக்கு ஆசியாவிற்கும், சிறப்பாகக் காம்பூச்சியாவிற்கும் நேரடியான அரசியல் தொடர்பு இருந்துவந்தமை வெளிப்படுகிறது,

---

14. C. Minakshi, Historical Sculptures of the Vaikuntha Perumal Temple, Madras Arch. Survey of India, No.63 April; 1943 PP.56-59
15. T N. Subramanian; op. cit; PP. 80-94
16. T. V. Mahalingam, op. cit; PP. 27-32

பண்டைத்தமிழக வரலாற்றின், 'புதிய செய்தியாக' இப்பண்பாட்டுப் பரவுதல் அமைகிறது எனலாம்.

## பேரரசின் சிதைவு

பவவர்மன் அரும்பாடுபட்டு நிறுவிய காம்போஜப் பேரரசு, விரைவில் சிதைந்து போயிற்று. இதன் விளைவாகப் பல சிற்றரசுகள் தோன்றின. அவற்றுள் இரண்டினைச் சீனர், 'நிலமாகியகாம்போஜம்' என்றும், 'நீர்மயமாகிய காம்போஜம்' என்றும் குறிப்பிட்டுள்ளனர். இவற்றின் பரப்பினைத் திட்டவட்டமாக அறிய இயலவில்லை. 'நிலப்பகுதியாகிய காம்போஜம்' என்பது, குன்றுகளும், பள்ளத்தாக்குகளும் நிறைந்த பகுதிகளைக் குறிப்பதாகலாம். அப்பகுதி இன்றைய காம்பூச்சியாவிற்கு வடக்கேயுள்ள லாவோஸின் பெரும்பகுதியையும், சீனாவின் மாநிலமான தொங்கின் வரையிலும், பியூனானில் இருந்த தாய்களின் இராச்சியம் வரையிலும் பரவியிருந்த அரசாக இருக்கலாம். மேகாங்கின் நடுப்பகுதியிலிருந்த இவ்வரசு கி.பி. 717-ல், சீனாவிற்கு ஒரு தூதர்குழுவை அனுப்பிவைத்தது. ஆனால், ஐந்தாண்டுகள் கழித்து, சீனாவை எதிர்த்துக் கலகம் செய்த அன்னாமிய தலைவனுக்கு உதவியாக, இந்நாடு ஒரு படையினைக் கம்போடியாவிறகு அனுப்பி வைத்தது. ஆயினும், சில ஆண்டுகளில் சீனாவிற்கும் இந்நாட்டிற்கும் இடையே நட்புறவு உண்டாயிற்று. கி.பி. 771-ல் கம்போடிய அரசர், சீனப் பேரரசரின் அவைக்களத்திற்குச் சென்று வந்தார். கடைசியாக 799-ல் காம்பூச்சியாவிலிருந்து ஒரு தூதர் குழு சீனாவிற்கு அனுப்பப்பட்டது.

'காம்போஜம்' என்று பொதுவாகக் குறிப்பிடப்படுவது தான், 'நீர்மயமான காம்போஜம்' என்று சீனர்களால் அழைக்கப்பட்டது. அது மேகாங்கு ஆற்றின் தாழ் நிலப்பள்ளத்தாக்கை உள்ளடக்கியதாக இருந்தது. அவற்றுள், மூன்று முறையே சம்பபுரம், வியாதபுரம், அநிருத்தபுரம் என்ற தலைநகரங்களை உடையனவாக இருந்தன. இவற்றுள், முதல் அரசு இன்றைய மேகாங்கின் மீதுள்ள சம்போர் பகுதியாகும். வியாதபுரம் பழைய பியூனானின் பகுதியாக (பா பனோம் மலையடிவாரம்) இருக்கலாம். அநிருத்தபுரம் பெரும்பாலும் ஆங்கோருக்குக் கிழக்கு பகுதியாக இருக்கவேண்டும். இவ்வரசுகளைப் பற்றித் தெளிவான செய்திகள் ஒன்றும் கிடைக்கவில்லை. அநிருத்தபுரத்து அரசர்கள், தாங்கள் கவுண்டினிய கோத்திரத்தில் தோன்றியவர்கள் என்று கூறிக்கொண்டனர்.

கி.பி. எட்டாம் நூற்றாண்டில், காம்போஜத்தில் உண்டான அரசியல் சிதைவு, அதன் சுற்றுப்புறங்களிலிருந்த அரசுகளுக்கு.

எளிதில் இரையாகுமாறு அதைச் செய்தது. கி.பி.732ல் ஜாவா வின் அரசனான சஞ்சயன், அதைக் கைப்பற்றினான். பின்னர் எட்டாம் நூற்றாண்டின், பிற்பகுதியில், சைலேந்திரப் பேரரசர் கள், காம்போஜத்தைத் தங்கள் ஆட்சியின் கீழ்க்கொண்டு வந்தனர்.

## பேரரசின் புத்துயிர்ப்பு

போரில் தோற்ற ஜெயவர்மன், ஜாவாவிற்கு ஓடித் தலை மறைவாக ஒளிந்து கொண்டிருந்தான். அவ்விளவரசன் கி.பி. 802-ல், காம்போஜத்தினைச் சைலேந்திரப் பேரரசிலிருந்து விடு விக்க விரும்பினான். அதனால், அப்பேரரசை எதிர்த்துக் கடும் போர் புரிந்து, இறுதியில் அவன் வெற்றியும் பெற்றான். அவனு டைய ஆட்சிக் (கி.பி. 802-869) காலத்தில், காம்போஜம், தான் முன்னர் இழந்த பெருமையை மீண்டும் பெறத் தொடங் கியது. இரண்டாம் ஜெயவர்மன் பேரும் புகழும் பெற்றான். அவனுடைய ஆட்சிக் காலத்தில், தென்கிழக்கு ஆசியா வில், கெமர்களின் பேரரசு சிறந்து விளங்கியது. ஜெயவர் மனுடைய ஆட்சி இந்தோ சீனாவின் பெரும்பகுதியிலும், சயா மிலும், கீழைப் பர்மாவரையிலும் பரவியது. இக்காலத்தில் இந்து சமயம் நாடாளும் அரசின் சமயமாகப் போற்றப்பட்டது. இவ்வரசன், 'கௌண்' மலையில், அதாவது பண்டைக் காலத் திலேயே மகேந்திர மலையில் ஒரு கோயிலைக் கட்டினான். ஆங்கோர் நகரத்திற்கு அருகில்தான், இந்த மகேந்திரமலை இருந்தது. அவனுடைய ஆட்சிக்காலம் முதல் அரசவையில் சிக்கலான பல சமயச் சடங்குகள் செய்யும் பழக்கம் உண்டா யிற்று. அச்சடங்குகளைக் கண்காணிக்க, ஒரு தலைமை மதகுரு அமர்த்தப்பட்டார்.

காம்போஜத்தின் புரோகிதப் பரம்பரையை இந்த ஜெய வர்மன் தோற்றுவித்தான் என்று ஒரு கல்வெட்டு அறிவிக்கிறது. "ஜெயவர்மன், தான், ஒரு பேரரசனாக விளங்க விரும்பி, ஜன பாதத்திலிருந்து சித்துக்களில் வல்ல இரணிய தருமன் என்ற பிராமணனை வரவழைத்தான். அந்த பிராமணன் 'அரசதெய் வத்தை' (தேவராசர்) வழிபடுவதற்குரிய விதிமுறைகளை வகுத்துத் தந்தான். அக்குரு, அரசனுடைய குலகுருவாகிய சிவகைவல்யருக்குச் சாத்திரங்களைக் கற்பித்தான். அரசன், சிவகைவல்யரின் தாய்வழிக் குடும்பத்தினரையே தன்னுடைய அரச குருமார்களாக அமர்த்தப் போவதாக அறிவித்தான்" என்பதை ஜெயவர்மன் கல்வெட்டு தெரிவிக்கிறது.

## தேவராச வழிபாடு

அக்கல்வெட்டு, பல துறைகளில் சிறப்பு உடையதாகக் காணப்படுகிறது. கெமர்கள், தாய்வழி உரிமையைப் போற்றி வந்தனர். அந்த உரிமை நெறியைக் காம்போஜத்தில் குடியேறிய பிராமணர்களும் போற்றிப் பின்பற்றினர் என்பது புலனாகிறது. இந்தியாவில் வாழும் பிராமணர்கள், தாய்வழி உரிமையை முற்றிலும் வெறுத்தவர்கள் என்பது இங்கு நினைவு கூர்தற்குரியது. காம்போஜத்தின் அரசர்கள் தெய்விகத் தன்மை வாய்ந்த 'அரச தெய்வங்களாக'க் காட்சியளிக்கத் தொடங்கியமை, அக்கல்வெட்டால் அறியப்படும் மற்றொரு செய்தியாகும். அக்காலம் முதல், அரசர்கள், தாங்கள் வழிபடும் கடவுளோடு, தங்களை ஒப்புமையுடைவர்களாகக் கருதத் தொடங்கினர். அதனால், அத்தெய்வங்கட்குரிய பெயர்களையே, தங்களுக்குரிய பெயர்களாகச் சூட்டிக்கொண்டனர். கோயில்களில், தெய்வங்களின் சின்னங்களைத் தாங்கிய அரசர்களின் சிலைகள் அமைக்கப்பெற்றன. அவற்றிற்குச் சிறப்பாக வழிபாடு நடத்தப்பட்டது. இவ்வாறு கெமர்களின் கோயில்கள், திருக்கோயில்களாக மட்டும் விளங்காமல், தெய்விகத் தன்மை வாய்ந்த அரச தெய்வ்ங்களின் சிலைகள் அணிசெய்யும் தொல்பொருள் காட்சிச் சாலைகளாகவும், காட்சிதரத்தொடங்கின. இத்தகைய 'அரச தெய்வ' வழிபாடு, காம்போஜத்தில் மட்டுமன்றிச் சம்பா, சாவகம், சுமத்திரா போன்ற தென்கிழக்காசிய நாடுகளிலும் சிறப்புற்று விளங்கியது. பாசுபத சைவத் துறவிகளே, இத்தகைய கோயில்களில் பூசாரிகளாகப் பணிபுரிந்தனர்.

கெமர்கள் கட்டடக் கலையில் வல்லுநர்களாக விளங்கினர். இரண்டாம் ஜெயவர்மனால் தோற்றுவிக்கப்பட்டதும், ஆனால், தலைநகரமாக மாற்றப்படாததுமான ஆங்கோர் (Angor) நகரம். தென்கிழக்கு ஆசியாவில் கட்டடக்கலையின் வளர்ப்புப் பண்ணையாக விளங்கத்தொடங்கியது. சமயத்தொடர்பான மாபெரும் கட்டடங்களைக் கெமர்கள் இருவகை நோக்கங்களோடு கட்டினர். தாங்கள் வழிபடும் தெய்வத்திற்குச், சிறந்ததோர் அழகிய கோயில் அமைக்கவேண்டும் என்ற நோக்கத்தோடும், பேரரசர்களை அரச தெய்வங்களாக்கிப் பொன்றாப் புகழ் பெற்று விளங்குமாறு செய்ய விரும்பியும், மாபெரும் கோயில்களைக் கெமர்கள் கட்டத் தொடங்கினர். கெமர்கள் தங்கள் அரசனை, அவன் வழிபட்டுவந்த தெய்வமாகவே, கருதிப் போற்றினர். இதனால், அரசனுடைய சிலையையும், அவன் வழிபட்டு வந்த சிவலிங்கத்தையும் கோயில்களில் வைத்து வழிபாடு செய்தனர். அரசனின் சிலைக்குத் தெய்வீகத் தன்மையை

ஊட்டும் மந்திரச் சடங்குகள் பேரளவில் செய்யப்பட்டன. இவ்வாறு ஆங்கோரின் கோயில்கள், பட்டைக் கோபுரங்கள் சேர்ந்த ஓர் அமைப்பாக மாறின. இத்தகைய கோயில்களைக் கட்டுவதிலும், அவற்றிற்கு ஆடம்பரமாகச் சடங்குகள் செய்வதிலும் அரசர்கள் தங்கள் பெரும் பொருளையும், காலத்தையும் செலவிட்டனர்.

## ஆங்கோர் நகரின் தோற்றம்

கெமர் அரசர்களுள் முதன் முதல், கட்டடக் கலையினைப் போற்றியவன் யசோவர்மன். அவனே, உண்மையில் ஆங்கோர் நகரத்தை, நிருமாணித்ததாகக் கூறுவர். அந்நகருக்கு முதலில் 'யசோதபுரம்' என்ற பெயரே, வழங்கியதாகத் தெரிகிறது. அக்காலத்தில் யசோதபுரம், பிற்காலத்திய ஆங்கோர் நகரைக் காட்டிலும் பெரும்பரப்பு உடையதாக இருந்தது. அந்நகருள் பெரியதோர் ஏரியும், சைவ, வைணவத் துறவிகள் வாழ்ந்த மடங்களும் அமைக்கப்பட்டிருந்தன.

ஐந்தாம் ஜெயவர்ம (கி. பி. 968-1001) னுக்குப் பிராமண மருமகன் ஒருவன் இருந்தான். அவனுடைய பெயர் 'பட்டதிவாகரன்' என்பதாகும். அவனுடைய உதவியைக் கொண்டு, நாட்டிலே சைவ, வைணவ சமயங்கள் தழைத்தோங்குமாறு ஜெயவர்மன் செய்தான். பட்டதிவாகரன் வேதங்களிலும், ஆகமங்களிலும் வல்லவனாகவும், சிறந்த பண்பாடுடையவனாகவும் இருந்தான். அதனால், ஜெயவர்மன் தன் மகளை அவனுக்குத் திருமணம் செய்து கொடுத்ததாகத் தெரிகிறது.

அவனுடைய ஆட்சிக் காலத்தில், சற்றேறக்குறைய கி. பி. 968-ல் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று, 'தக்ஷிண பாதம்' (தக்கணப்பகுதி), சைவ சமயத்தின் நிலைக்களனாய் விளங்கியதைக் குறிப்பிடுகிறது. மேலும், காஞ்சியை ஆண்ட பல்லவ மன்னர்களையும் தென்னாட்டில் தோன்றிய சங்கராச்சாரியாரையும் பற்றி அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதனால், தென் இந்தியச் செல்வாக்கு, அங்கு மிகுதிப்பட்டிருந்ததை, நாம் உணரமுடிகிறது. ஆகவே, புதிதாய்க் குடியேறிய நாடுகளிலுள்ள இந்து மதத்தலைவர்கள், தாய்நாட்டு நாகரிகத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்ததாகத் தெரிகிறது.

# 3. 3. 3.
# காம்பூச்சியப் பேரரசின் வீழ்ச்சி

## சூரிய வர்மன்

கி.பி. 1001-ல், ஐந்தாம் ஜெயவர்மன் இறந்தான்.பத்தாண்டு கள் அரச பதவிக்குக் கடுமையான போட்டி இருந்து வந்தது. போட்டியிட்ட இளவரசர்களுக்கு இடையே, உள்நாட்டுப் போரும் பூசலும், கலகமும் கொலையும் தொடர்ந்து நடந்தன. இறுதியாக, முதலாம் சூரியவர்மன் அரசன் ஆனான். இத்தகைய கலகமும் குழப்பமும் எதிர்காலத்தில் நிகழாமலிருக்க, மாவட்ட அதிகாரிகளாக 400 பேர்களை அவன் அமர்த்தினான். மேலும், அவர்களைப் பார்ப்பனர்களும் முனிவர்களும் வளர்க்கும் வேள் வித் தீயின் முன்பு, தங்கள் உடல், பொருள், ஆவி, ஆகிய மூன்றையும் தங்கள் அரசன் பொருட்டுத் தியாகம் செய்யத் துணிந்துள்ளதாகச் சூளுரை செய்யுமாறு அவன் பணிந்தான்.

அவ்வரசனின் கல்வெட்டுகளில், புத்தரைப் பற்றிய கடவுள் வாழ்த்து முதலிலும்,சிவபெருமானைப் பற்றிய கடவுள் வாழ்த்து அடுத்தும் காணப்படுகின்றன. இதனாலும், அவன் இறந்த பிறகு 'நிர்வாண பாதன்' என்ற சிறப்புப் பெயரால் குறிப்பிடப் பட்டமையாலும், ஒருகால் அவன் புத்த சமயத்தைத் தழுவியவ னாக இருந்திருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர் கருது கின்றனர். அவன் சிறந்த அறிவாளியாகவும், பாடியங்கள், காப் பியங்கள், அறுவகைத் தத்துவங்கள், தரும சாத்திரங்கள் ஆகிய

வற்றை நன்கு கற்றவனாகவும் விளங்கினான். அவனுடைய அவைக்களத்தினை யோகீசுவர பண்டித, சிவாசாரியர், சிவ பிந்து, சங்கரபண்டிதர் போன்ற சமயத் தத்துவ நூல் வல்லுநர் கள் அணி செய்தனர்.

அவ்வரசன் முன்னெச்சரிக்கையோடு, நாட்டின் நலன் கருதிச் செய்த திட்டங்கள் பயனற்றுப் போய்விட்டன. கி. பி. 1049-ல் அவன் இறந்தான். உடனே, நாட்டில் குழப்பம் உண்டா யிற்று. அவனுக்குப் பிறகு, அமைச்சர்களால் முடிசூட்டப்பெற்ற உதய ஆதித்திய வர்மன், அரசனானான். அவனுடைய ஆட்சிக் காலம் முழுவதும், நாடெங்கும் கலகங்களும். குழப்பங்களும் நடைபெற்றன. அந்நிலையில் சம்பா நாட்டு அரசனது, படை யெடுப்புப் பேரழிவை உண்டாக்கியது. இத்தகைய இன்னல் களுக்கும் இடையூறுகளுக்கும் இடையே கி.பி. 1066 ல் அம் மன்னன் மாண்டான். அவனுடைய இளைய தம்பியான ஹர்ஷ வர்மனை, அரச குருவும், அமைச்சர்களும் அரசனாக்கினர்.

## சீனாவும் காம்போஜமும்

ஹர்ஷ வர்மனுடைய ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்த இரண்டு கொடிய படையெடுப்புகள் இங்குக் குறிப்பிடத்தக்கன. கி.பி. 1076-ல் சீனப் பேரரசனின் அழைப்பின் பேரில், அவனுக்குத் துணையாகப் பெரும் படையொன்றைத் தொங்கின் நாட்டின், அன்னாம் அரசினைத் தாக்க அவன் அனுப்பினான். அப்படைத் தோற்கடிக்கப் பட்டதோடு, படைத் தலைவன் பகைவரின் கையில் சிக்கிக் கொண்டான்.

இத்தகைய நிகழ்ச்சிகள், காம்போஜத்தின் உள்நாட்டு அரசியல் நிலையைச் சீர்குலையுமாறு செய்தன. கி.பி, 1082-ல் காம்போஜத்தின் வடப்குதியில், ஆறாம் ஜெயவர்மன் ஆட்சி புரியத் தொடங்கினான். இந்த நாட்டுப்பிளவு, ஜெயவர்மனுக் குப்பிறகு, அரசு கட்டில் ஏறிய இரண்டாம் சூரியவர்மன் காலம் வரை தொடர்ந்து இருந்துவந்தது. சூரியவர்மன், தன் ஆட்சியின் கீழ், நாட்டின் இரு பகுதிகளையும் ஒருங்கே இணைத்து, ஒரு வல்லரசு நாடாக அதை மாற்றி யமைத்தான்.

சூரிய வர்மன் (கி. பி. 1112-1152) ஆட்சிக்கு வந்ததும், அன்னாம், சம்பா ஆகிய நாடுகளின்மீது பலமுறை படை யெடுத்துச் சென்றான். அவனுடைய அன்னாம் படையெடுப்பு, பேரிழப்பைத் தந்தது. அவன் நான்கு முறை படையெடுத்துச் சென்றான். ஆனால், நான்கு முறையும், அவன் தோல்வியே கண்டான். சம்பா, அன்னாமோடு உடன்படிக்கை செய்து

கொண்டதைக் கண்டு, அவன் பொறாமையும் வெறுப்பும் அடைந்தான். இறுதியில் சம்பாவின்மீது போர் தொடுக்கப் பெரும் படையுடன் சூர்யவர்மன் சென்றான். முதல் முயற்சியில் அவன் வெற்றியும்பெற்றான். சம்பாவின் வடபகுதியான விசய இராச்சியம், அவனுக்குக் கப்பம்கட்ட இசைந்தது. ஆனால், அவன் சம்பாவின் தென்பகுதியைக் கைப்பற்ற விரும்பி, இரு முறை அதன்மீது படையெடுத்துச் சென்றபோது, படுதோல்வி அடைந்தான்.

இத்தகைய இடர்ப்பாடுகள், அவனுடைய ஆட்சிக் காலத்தில் உண்டான போதிலும், சூரியவர்மன் பெரியதொரு பேரரசை ஆண்ட ஆற்றல்மிக்கப் பேரரசனாகவே போற்றப்படுகிறான். கி.பி. எட்டாம் நூற்றாண்டிற்குப் பிறகு, இடையீடுபட்டிருந்த சீனநாட்டு நட்புறவை அவன் புதுப்பித்துக் கொண்டான். கி. பி. 1117, 1121ஆகிய ஆண்டுகளில், இரண்டு நல்லெண்ணத் தூதர் குழுவினைச் சீனாவிற்கு, அவன் அனுப்பினான். அக்குழுவினரை அன்புடன் வரவேற்ற சீனப் பேரரசன், சூரிய வர்மனுக்குப் பல பெரிய பட்டங்கள் வழங்கிப் பாராட்டினான். அவ்வரசன் காலத்தில், காம்போஜப் பேரரசு, மிகப் பரந்த ஒன்றாக விளங்கியது. இவற்றால், அவன் ஆட்சிக்காலத்தில் உள்நாட்டுக்குழப்பங்கள் உண்டாயின. எனினும், காம்போஜப் பேரரசின் பரப்பும் ஆதிக்கமும் பெருகிக் கொண்டிருந்தன.

இந்தப் பேரரசின் மாண்புமிக்க பழம்பொருள் சின்னங்கள், இன்றும் நின்று நிலவுகின்றன. உலகப் பேரதிசயங்களுள் ஒன்றாகக் கருதப்பெறுகின்ற சிறப்புமிக்க ஆங்கோர்வாட் கோயிலைக் கட்டியதன் மூலம், இரண்டாம் சூரியவர்மன், இறந்தும் இறவாப்புகழ் பெற்றுத் திகழ்கிறான். அவன் சமய வாழ்க்கையில், பெரிதும் ஈடுபாடுடையவன். திவாகர பண்டிதர் என்ற குரு, பெருமறை என்னும் தாந்திரிகக் கலையைப் பற்றிய தெய்விக உண்மையை அவ்வரசனுக்குப் போதித்து அருளினார். அக்குருவின் விருப்பப்படி, சூரியவர்மன் பல யாகங்களைச் செய்தான். கி. பி. 1145-க்குப் பிறகு, சூரியவர்மன் இறந்ததாகத் தெரிகிறது.

## இருண்ட காலம்

இதையடுத்து, முப்பத்தைந்து ஆண்டுகள் காம்போஜ நாட்டின் வரலாறு இருள் செறிந்து காணப்படுகிறது. உள்நாட்டுக் குழப்பங்களாலும், வெளிநாட்டுப் போர்களாலும் பேரிழப்புகள் உண்டாயின. சம்பாவின்மீது, காம்போஜ அரசர்கள் பலமுறை படையெடுத்துச் சென்றனர். போரின் தொடக்-

கத்தில், அவர்கள் வெற்றி பெற்றனர். எனினும், போரின் இறுதியில் பெரும்பாலும், அவர்கள் பெருந்தோல்வியுற்றனர். இவற்றைத் தொடர்ந்து, சப்பா நாட்டின் அரசனான ஏழாம் ஜெய இந்திரவர்மன் பெரும்படையோடு காம்போஜத்தைத் தாக்கினான். இப்போர் ஒரு நிலையான முடிவிற்கு வராமல், ஏழாண்டுகள் தொடர்ந்து நடந்து வந்தது. இறுதியாகக் கி. பி. 1177ல் ஒரு பெரும் கப்பற்படையுடன், சம்பா நாட்டு அரசன் இதை எதிர்த்துக் கடுமையான கடற்போர் புரிந்தான். பகையரசன் காம்போஜத்தின் தலைநகரைக் கைப்பற்றிச் சூறையாடினான். அளவிடற்கரிய பெரும் செல்வத்தைக் கொள்ளை அடித்துக் கொண்டு அவன், தன் தாயகம் திரும்பினான். காம்போஜத்தின் மன்னனான திரிபுவன ஆதித்திய வர்மன், இப்போரின் இடையே கொல்லப்பட்டான்.

### மாபெரும் மன்னன்

அவனுக்குப் பிறகு கி. பி. 1181ல். . ஏழாம் ஜெயவர்மன் அரசு கட்டிலேறினான். அவன் காம்போஜத்தின் பேரரசர்களுள் இறுதியாகத் தோன்றியவனாவான். அவனுடைய படையெடுப்புகள், சமயத் தொண்டு, பொது நலத் தொண்டுகள் முதலியவை பற்றி நாம் விரிவாக அறிய முடிகிறது.

அவன் ஆட்சிக் காலத்தில், சம்பாவோடு நெடுங்காலமாக நடந்து வந்த போர் முடிவுற்றமை குறிப்பிடத்தக்கது. அவன் ஆட்சிக்கு வந்த சிறிது காலத்திற்கெல்லாம், சம்பாவின் அரசன் எட்டாம் ஜெய இந்திரவர்மன் காம்போஜத்தை முற்றுகையிட்டான். தன்னிடம் அடைக்கலம் புகுந்தவனும், சம்பா நாட்டைச் சேர்ந்தவனுமான ஸ்ரீசூரிய வர்மதேவன் தலைமையின்கீழ், ஒரு பெரும்படையைக் காம்போஜப் பேரரசன், பகைவனை எதிர்த்துப் போரிடுமாறு அனுப்பி வைத்தான். காம்போஜத்தின் படைத்தலைவன் போரில் முழுவெற்றி பெற்றான். சம்பாவின் அரசனைச் சிறைப்படுத்திக் கொணர்ந்தான். சம்பா, தன்னை வெற்றி கொண்ட காம்போஜத்தின் அடிகளை வருடி, வணங்கி, வாழ நேரிட்டது. ஜெயவர்மன், சம்பா அரசினை இரண்டாகப் பிரித்தான். விசயத்தைத் தலைநகராகக்கொண்டிருந்த வடபகுதியைத் தன்னுடைய மைத்துனன் சூரிய ஜெயவர்ம தேவனிடம் ஒப்படைத்தான். இராசபுரத்தை தலைநகராகக் கொண்ட தென் பகுதிக்குப் பெரு வெற்றியைத் தேடித் தந்த தன்னுடைய படைத்தலைவன் சூரியவர்மதேவனை அவன் தலைவனாக்கினான்.

சிறிது காலத்திற் கெல்லாம், சம்பா நாட்டின் வடபகுதியில், கலகமும் குழப்பமும் உண்டாயிற்று. கலக்காரர்களால்

'ரசுபதி விசயன்' என்பவன் அரசனாக்கப் பட்டான். இதைக் கண்டு, சினமுற்ற ஜெயவர்மன் பெரும் படை யொன்றை முன்பு சிறைப்படுத்தப் பெற்ற சம்பாவின் அரசனோடு, அனுப்பிவைத் தான். காம்போஜப் படைகள் சூரியவர்ம தேவனோடு சேர்ந்து அவனுடைய தலைமையின் கீழ், ரசுபதி விசயனைப் புறமுது கிட்டு ஓடுமாறு செய்தன. ரசுபதி தோற்கடிக்கப்பட்ட தோடு, கொலையும் செய்யப்பட்டான். அவனுடைய அரசான 'விசயா' கைபபற்றப்பட்டது. ஆனால், சூரியவர்ம தேவன் விசயாவின் மன்னனாக முடிசூட்டிக் கொண்டான். வடக்கு, தெற்கு என்று இருபகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்த சம்பா வின் அரசினை, அவன் ஒன்றாக இணைத்து, அதனைப் பேரரசாகத் தன், ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வந்தான். இதனால், சம்பாவின் பழைய அரசனான எட்டாம் ஜெய இந்திரவர்மன் ஏமாற்றம் அடைந்தான். எனவே, அவன் சூரிய வர்ம தேவனை எதிர்த்துப் போரிடத் தொடங்கினான். போரில் அவன் தோல்வியுற்று ஓடிய பொழுது, கொலை செய்யப்பட் டான்.

ஏழாம் ஜெயவர்மன், இருமுறை சம்பாவின் மீது படை யெடுத்து வந்தான். சூரியவர்மன் எளிதில் வெற்றி பெற்றான். எனவே சற்றேறக்குறைய பத்து ஆண்டுகள் சூரியவர்மனை எதிர்த்துப் போரிடக் காம்போஜ அரசன் முயலவில்லை. ஆயினும், மூன்றாம் முறையாகக் காம்போஜத்தில் அடைக்கலம் அடைந்திருந்தவனும், சூரியவர்மனின் மாமனுமான தளபதி 'கிராமன்' தலைமையின்கீழ், ஒரு பெரும்படை சம்பாவினைத் தாக்குவதற்கு அனுப்பப்பட்டது. கி, பி- 1203ல் சூரியவர்மன் தோற்கடிக்கப்பட்டான். தளபதி கிராமன், சம்பாவின் அரச னாக முடிசூட்டிக் கொண்டான்.

புதிதாக அரசு கட்டிலேறியவனுக்குப் பல இன்னல்களும், இடையூறுகளும் உண்டாயின. நாட்டின் பல பகுதிகளில், கலகங் கள் ஏற்பட்டன. அவற்றை அடக்கி யொடுக்கியவுடன், அன்னாம் நாட்டோடு, கி. பி. 1207ல் போர்புரிய நேரிட்டது. பத்து ஆண்டுகட்கு மேலாகத்தொடர்ந்து போர் நடந்து வந்தது. பெரும்பாலும், அன்னாமியர்களே வெற்றிகள் பல பெற்றுவந்தனர். இப்போர்களினால், உண்டான தொல்லைகள் காம்போஜத்துக்குப் பெருஞ்சுமையாக அமைந்தன. கி. பி. 1220ல் காம்போஜ நாடு பகைவரிடம் அடி பணிந்தது. ஜெயவர் மன் இத் தோல்வியையும், மானக்கேட்டையும் பொறுத்துக் கொள்ள இயலாமல் இறந்து போனான். எனினும், சம்பாவைக்

கைப்பற்றி, அதனைத் தனது சிற்றரசு நாடாக மாற்றியதோடு அமையாமல், காம்போஜத்தின் கிழக்குப் பகுதியில் சீனக்கடல் வரை காம்போஜத்தின் ஆதிக்கத்தினை நிலைநாட்டிய பெருமை, இவ்வரசனையே சாரும்.

மேற்குத் திசையில், ஜெயவர்மன் சிறந்த வெற்றி பெற்றான். அக்காலத்தில் பர்மா உட்பட விளங்கிய ஒரு பேரரசின், தலைமையிடமாகப் 'பகான்' விளங்கியது. பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் பகானின் தென்பகுதி ஜெயவர்மனால் காம்போஜத்தோடு இணைக்கப்பட்டது. இவ்வாறு வங்காள விரிகுடா முதல், கிழக்கே சீனக்கடல் வரையிலும் பரவியிருந்த இந்தோ-சீன வட பகுதிகளையும், தன்னகத்தே கொண்டிருந்த ஒரு பெரும் பேரரசை ஜெயவர்மன் ஆட்சிபுரிந்து வந்தமை இங்குக் குறிப்பிடத் தக்கது.

அவ்வரசனுடைய சமயத் தொண்டும், பொதுநலப் பணியும் பெரும் பேரரசின் மாண்பினை விளக்கமுறச் செய்கிறது. தாபுரோம் (Taprohm) என்னும் இடத்தில் கிடைத்த கல்வெட்டு ஒன்று, அவ்வரசனின் ஆழ்ந்த சமயப் பற்றையும், நாட்டின் செல்வச் செழிப்பையும் வெளிப்படுத்துகிறது. அக்கல்வெட்டு தாபுரோமில் உள்ள கோயிலான 'இராச விகாரத்தை'ப் பற்றியும் அக்கோயிலின் பின்புறத்தில் அரசன் தன்னுடைய தாயாரின் சிலையை அமைத்ததைப் பற்றியும் அறிவிக்கிறது. அக்கோயிலில் உள்ள தெய்வங்களுக்குப் பணிபுரிய 66, 625 ஆட்கள் வேலைக்கு அமர்த்தப் பட்டிருந்தனர். அக்கோயிலின் அன்றாடத் திருப்பணிக்காக அறக்கொடையாகப் பல ஊர்கள் விடப்பட்டிருந்தன. அக்கோயிலைச் சார்ந்திருந்த கல்லூரியில் 439 பேராசிரியாகள் இருந்தனர். அவர்களிடம் 970 மாணவர்கள் கல்வி பயின்றனர், ஆசிரியர், மாணவர் ஆகிய இரு சாராருக்கும், வாழ்க்கை வசதிகளும் இலவசமாக அளிக்கப்பட்டன. அங்கு 566 தொகுதிகளைக் கொண்ட கற்களால கட்டப்பட்ட வீடுகளும், 288 தொகுதிகளைக் கொண்ட செங்கற்களால் கட்டப்பட்ட வீடுகளும் இருந்தன. இராசவிகாரத்தில் பேரளவு பொன்னும்வெள்ளியும் 35 வைரக் கற்களும, 40, 620 முத்துக்களும, 4,540 விலையுயர்ந்த பிற மணிகளும் இருந்தன. இவையாவும் அக்கோயிலுக்குரியனவாகும். அக்கல்வெட்டு, காம்போஜத்தில் 798 கோயில்களும், 102 மருத்துவ மனைகளும் இருந்ததாகவும், அவற்றின் கண்காணிப்பிற்காக நாடோறும அரசினால் படியளக்கப்பட்டது என்றும் குறிப்பிடுகின்றது, இதைப் போன்றே, பல கல்வெட்டுகள் இந்நாட்டின் பல பகுதிகளில் கிடைத்துள்ளன. அவற்றால், கோயில் வழிபாட்டு முறை, நோயாளிகளுக்கு

மருத்துவ உதவி அளிக்கப்பட்ட முறை, முதலியவற்றைப் பற்றிய செய்திகள் பலவற்றை நாம் அறியமுடிகிறது.

ஜெய்வர்மனுடைய கல்வெட்டு ஒன்றில், அவனுடைய மனைவியைப்பற்றி, சுவை மிக்க கதை ஒன்று வழங்கப்படுகிறது. முதன் முதல், அவ்வரசன் சம்பாவின் மீது படையெடுத்துச் சென்ற பொழுது, அவள் பல்வகை அற்புதச் செயல்கள் மூலம் தனது களங்கமற்ற கற்பின் ஆற்றலைப் புலப்படுத்தினாள். இதன் பிறகு, தன்னுடைய தமக்கையால் அவள் புத்த சமயத்தில் சேர்க்கப்பட்டாள். தன் கணவன் அருகில் இல்லாத பொழுது அவன் உருவத்தைத், தன் கண் எதிரில் கண்டு மகிழும் ஆற்றலை அவள் பெற்றிருந்தாள் என்று கல்வெட்டுகள் அவ்வரசியைப் போற்றுகின்றன.

பொதுவாக நோக்குமிடத்து, ஜெயவர்மனுடைய ஆட்சியில் நாடு நலம் பெற்றது; மக்கள் மகிழ்வுடனும், மனநிறைவுடனும் வாழ முடிந்தது; நாட்டு மக்களின் நலத்தினைக் கருதிய அரசாகக் காம்போஜப் பேரரசு சிறப்புற்று விளங்கியது. இன்னும் காண்பவருடைய கருத்தைக் கவரும் கவின்மிகு கலைக் கோயில் களைப் படைத்து மகிழ்ந்தது. ஜெயவர்மன் ‘ஆங்கோர் தோம்’ என்னும் தலை நகரை அழகுமிக்க கலைக்கூடமாக்கினான். அந்நகரின் அழிவுச்சின்னங்கள், இன்னும் பார்வையாளரின் உள்ளத்தே வியப்பையும் பெருமித உணர்வையும் தவறாது எழச் செய்கின்றன.

## வீழ்ச்சி

ஜெயவர்மனுக்குப் பிறகு பல அரசர்கள் அரசு கட்டில் ஏறினர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவன் ஜெயவர்மன் பரமே சுவரன் என்பவனாவான். அவன் கி. பி. 1327ல் ஆட்சிக்கு வந் தான். காம்போஜத்தின் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படும் கடைசி அரசன் இவனேயாவான். இவ்வரசனுக்குப் பிறகு காம் போஜத்தின் வரலாறு தெளிவற்றுக் காணப்படுகிறது.

காம்போஜத்தின் ஆற்றல் நலிவுற்றது. சம்பாவிலிருந்து காம்போஜப் பேரரசு வெளியேறியதும், அன்னாமில் தோல்வி யுற்றதும் அதனுடைய ஆதிக்கமும் ஆற்றலும் அழிவுற்றதையும் அறிவிக்கின்றன. இவற்றிற்கு இடையே, அடிக்கடி மன்னர்கள் முடிதுறந்தமையும், பதவிப் போராட்டங்களும் இக்காலத்தை அமைதியற்றதாகச் செய்து விட்டன. மேற்குப் பக்கத்தில் ‘தாய்களுடைய ஆதிக்க வளர்ச்சியும்’ கிழக்கே, அன்னாமியர் களின் வெற்றியும் காம்போஜத்தின் அழிவிற்கு அடிகோலின.

எனினும், கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டுவரை காம்போஜம் ஆற்றல்மிக்க சிறந்த அரசாக விளங்கிவந்தது. மங்கோலியப் பேரரசன் கூப்ளாய்கான், சம்பாவைக் கைப்பற்றிய பொழுது, தனது மேலாண்மையை ஏற்றுக்கொள்ளுமாறு தூதர்களை அவன் காம்போஜத்திற்கு அனுப்பினான். அந்நிலையிலும், கூப்ளாய்கானின் தலைமைப்பேற்றை ஏற்றுக்கொள்ள காம் போஜம் மறுத்தது. பின்னர், அளவில் சுருங்கிய சிற்றரசாக அது மாறியது. எனினும், கி. பி. 1854ல் பிரெஞ்சுக்காரர்களின் ஆட்சிக்கு அடிமையாகும் வரை, ஒரு பேரரசாக விளங்கிய காம்போஜம், கம்போடியா என்றவொரு சிறு தனியரசாக மாறியது. இப்பொழுது காம்பூச்சியா எனும் தனியுரிமை நாடாகத் திகழ்கிறது.

# 3.3.4.

# காம்பூச்சியப் பண்பாட்டில் தமிழ் நாகரிகக் கூறுகள்

## ஆட்சி முறை

காம்பூச்சியாவிலிருந்த இந்து அரசுகளும் ஆட்சிமுறை அமைப்பில் இந்தியாவைப் பின்பற்றியதாகத் தெரிகிறது. பொருள்நூல் (அருத்த சாத்திரம்) அந்நாட்டில் கற்கப்பட்டதாகக் கல்வெட்டு ஒன்றில் குறிக்கப்பட்டிருக்கிறது. அதிகாரிகள், அரசனால் நன்கு சோதிக்கப்பட்டு, அதன்பிறகு அவர்களிடம் ஆட்சிப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. மற்றொரு கல்வெட்டில், 'இராசசபாபதி' என்று ஓர் அதிகாரி குறிப்பிடப் படுகிறான். 'இராசசபை' (அரசவை) ஒன்று இருந்திருக்க வேண்டும் என்பது இதனால் புலனாகின்றது.

## அமைச்சர்

அமைச்சர்களைப் பற்றிய குறிப்புகள் பல கிடைத்துள்ளன அவர்கள், பல துறைகளுக்குப் பொறுப்புவாய்ந்த தலைவர்களாக விளங்கினர். ஆட்சியின் அன்றாடச் செயல் முறைகளை அவர்கள் கவனித்து வந்தனர். அயல் நாடுகளோடு நட்புறவு கொள்ளுவதற்கும், போரைத் தவிர்ப்பதற்கும் தூதர்கள் பெரிதும் பயன்படுத்தப்பட்டனர்.

## படைத்தலைவர்

படைத்துறை அதிகாரிகள் பலர் இருந்தனர். அவர்களுள் 'மகா அசுவபதி' என்ற அதிகாரி சிறப்பாகப் பேசப்படுகிறான்.

அவன் குதிரைப்படை (அசுவம்—குதிரை)த் தலைவனாக இருந்திருக்க வேண்டும் என்பதை அவனுடைய பெயர் தெரிவிக்கிறது. இரண்டு கடற்படை அதிகாரிகளைப்பற்றிய குறிப்பும், கல்வெட்டுகளில் காணப்படுகின்றது. 'மகா நௌவாககன்' 'சாமந்த நௌவாககன்' என்ற இரண்டு அதிகாரிகளுள் முதல் அதிகாரி, கடற்படையின் தலைவன் என்றும், இரண்டாவது அதிகாரி கடற்படை வீரர்களின் தலைவன் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். அரசனுடைய மெய்க்காப்பாளர் 'சஞ்சகர்' என்று குறிப்பிடப்படுகின்றனர். அவர்கள், பாண்டிய மன்னர்களின் 'ஆபத்து உதவி'களைப் போன்று, அரசனுக்கு உற்ற துணையாக இருந்து வந்தனர்.

## கடற்படை

கடற்படையோடு, யானைப்படையும் சிறப்புடையதாக விளங்கியது. போர் யானைகள், நன்கு பயிற்றுவிக்கப்பட்டன. காம்போஜ அரசர்கள் காலாட்படைக்கு அடுத்து, யானைப் படையைப் பெரிதும் போற்றி, ஆதரித்ததாகக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

பல பெரிய மாவட்டங்களாக நாடு பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு மாவட்டத்திற்கும் அரசப்பிரதிநிதி ஒருவர், தலைவராக விளங்கினார். சீனருடைய காலவழிச் செய்திக் கோவைகள், காம்போஜத்தில் 30 நகரங்கள் இருந்ததாகக் குறிப்பிடுகின்றன. ''ஒவ்வொரு நகரத்திலும் பல்லாயிரக்கணக்கான வீடுகள் இருந்தன. அந்த நகரங்கள் ஒவ்வொன்றுக்கும் ஆளுநர் (Governor) ஒருவர் இருந்தார்'' என்றும் அவை தெரிவிக்கின்றன. காம்போஜம் 30 மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பதும், அவை ஒவ்வொன்றிற்கும் ஒரு பட்டணம் தலைநகரமாக இருந்தது என்பதும், அந்நகரத்திற்கு ஓர் அரசப் பிரதிநிதி தலைவராக இருந்து வந்தார் என்பதும் இதனால் தெரிய வருகின்றன. நகரங்கள் திட்டமிட்டு அமைக்கப்பட்டிருந்தன. அவற்றை அகழிகளும், அரண்களும் சூழ்ந்து இருந்தன. நகரில் ஏரிகளும் குளங்களும், சத்திரங்களும் கல்விக் கூடங்களும் அமைக்கப்பட்டிருந்தன.

## அதிகாரிகள்

அரசியல் அதிகாரிகளின் பதவிகள், மரபுவழி உரிமையுடையனவாக இருந்தன. அமைச்சர்களும், அதிகாரிகளும் அரசனிடமிருந்து பட்டங்களும், பாராட்டுகளும், மானியங்களும், பொற்

பதக்கங்களும் பரிசாகப் பெற்றனர். அதிகாரிகளைப் பாராட்டிப் பட்டம் வழங்குவதற்கு ஒரு விழா நடைபெற்றதாகத் தெரிகிறது.

### அரசவை

பேரரசாகச் சிறப்புற்ற காம்பூச்சிய 'அரசவை', அதனுடைய பெருமைக்கும் சிறப்பிற்கும் ஏற்ப ஆடம்பர ஆரவாரங்கள் நிறைந்ததாகக் காணப்பட்டது. அரசர் கொலுவிருக்கும் நிலை, கோலாகலமாகவும், பகட்டுமிக்க வகையிலும் கருத்தைக் கவரத்தக்கதாகவும் இருந்தது என்று சீனாவின் வரலாற்றுக் குறிப்பேடுகள் கூறுகின்றன.

### மரபுரிமை

காம்போஜத்தில் கிடைத்துள்ள கல்வெட்டுகளில், உடன் பிறந்தவளின் மகனுக்கே முதன்மையிடம் கொடுக்கப்பெற்றது. இதைக் கூர்ந்து நோக்குகின்ற பொழுது, அந்நாட்டில் மரபுரிமை, பெண்வழி உரிமையான 'மருமக்கள் தாய' உரிமையாக இருந்திருக்கவேண்டும் எனத் தோன்றுகிறது. பிற்காலத்தில் (பத்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட) கல்வெட்டுகளில் பெண் வழி வந்தவர்கள் அரசுரிமை ஏற்பதே,வெளிப்படையாகப் பேசப் படுவதைப் பார்க்கின்றோம். இத்தகைய 'மருமக்கள் தாய முறை' இன்றைக்கும் லாவோசில், வழக்கில் இருந்துவருவது இங்குக்குறிப்பிடத் தக்கதாகும். கேரளத்தின், மருமக்கள் தாய முறைக்கும் காம்போஜத்தின் மகள் வழி மரபுரிமைக்கும் இடையே, உள்ள ஒற்றுமை வேற்றுமைகளின் தோற்றம் பற்றி ஆராய்ந்தால், செய்திகள் பலவற்றை நாம் அறிய இயலும்.

### கெமர் அரசர்களின் சிறப்பியல்பு

காம்பூச்சியப் பேரரசர்களின் தனி வாழ்க்கை சிறப்புமிக்கது. அவர்கள் ஒழுக்கத்தில் சிறந்தவர்கள். அக்காலத்தில் அரேபியாவிலிருந்து காம்போஜத்திற்குப் பல பயணிகள் சென்று வந்தனர். அவர்கள், பல அரிய காட்சிகளைக் கண்டு திரும்பினர். அவர்களுள் சிலர், வரைந்த வரலாற்றுக் குறிப்பேடுகள் சில கிடைத்துள்ளன. அவை காம்போஜ மன்னர்களைப் பற்றிச் சுவையான சில செய்திகளைத் தெரிவிக்கின்றன. இபின் கோர்டாட்ஸ் பேக் (கி. பி. 844-848) என்ற அராபியர் ''இந்திய நாட்டு மன்னர்களும், மக்களும் மது அருந்துவதைப் பாவமாகக் கருதி' வெறுத்து ஒதுக்குகின்றனர். ஆனால், அவர்கள் கூடா வொழுக்கத்தைத் மேற்கொள்ளுவதைப் பெரிய தீமையாகக் கருதுவதில்லை. கெமர் மன்னர்கள் மதுவையும், கூடா ஒழுக்கத்தை

யும் ஒருங்கே, வெறுத்து ஒதுக்கி வாழுகின்றனர்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

அப்துல்லா முகமது பின் இஷாக் என்ற மற்றோர் அராபியர், காம்போஜத்தில் இரண்டு ஆண்டுகள் தங்கியிருந்தார். அவர், ''ஒழுக்கக் கேடாக நடந்துகொள்ளுவதையும், மது அருந்து வதையும் வெறுக்கின்ற அரசரை, நான் வேறு எந்நாட்டிலும் கண்டதில்லை. இவ்விரு குற்றங்களைச் செய்கின்றவர்களுக்கு இந்நாட்டில் மிகக் கடுமையான தண்டனை விதிக்கப்படுகிறது'' என்று வியப்புடன் மொழிந்துள்ளார். எனினும், அரசர்கள் பெரிய அந்தப்புரங்களை, உடையவர்களாக இருந்தனர் என்பதை நாம் கல்வெட்டுகளால் அறிகிறோம்.

தமிழகப் பண்பாட்டின் பல்வேறு இயல்புகளும், கூறுகளும் காம்பூச்சிய மக்களுடைய வாழ்க்கையில் ஊடுருவிச் சென்று, பரவியிருந்ததை நாம் காணுகின்றோம். இந்நாட்டின் மக்கள் வாழ்க்கையில் இந்து சமய ஒழுக்க நெறிகளும் கொள்கைகளும் வேரூன்றியுள்ளன.

## கெமர் அரசர்களின் நீர்ப்பாசனப் பணிகள்

நெல் பயிரிடுதலையே பெரிதும் காம்பூச்சியா நம்பி இருந்தது. இதனால், பருவமழைக் காலத்தில், பெருக்கு எடுத்தோடும் வெள்ள நீரைத் தடுத்து நிறுத்தி, ஏரிகளிலும், குளங்களிலும் நிரப்பி, ஆண்டு முழுவதற்கும் பாசனத்திற்கு அந்நீரைப் பயன்படுமாறு அவர்கள் செய்தனர்.

குன்றுகளுக்கு இடையே உள்ள பள்ளத்தாக்குகளில், சிறியதும் பெரியதுமான பல ஏரிகளையும், குளங்களையும் கெமர்கள் அமைத்தனர். மலைகளில் இருந்து, சமவெளிகளில் பாய்ந்தோடும் ஆறுகள் இடையே, அணைகளைக் கட்டி, நீரினைத் தேக்கி, உழவுத் தொழிலுக்குப் பயன்படுத்தும் சிறப்பு மிகு பாசன திட்டங்களைச் செய்து முடித்தனர்.[17]

உலக வரலாற்றிலேயே, நீர்ப்பாசனத் திட்டங்களாக ஏரிகளை வெட்டுவதிலும், அணைகளைக் கட்டுவதிலும் திராவிடர்களே வல்லவர்கள் எனும் கருத்து, நீரியல் ஆராய்ச்சி அறிஞர்கள் இடையே நிலவுகிறது.

தமிழ் நாட்டில், சங்ககாலம் முதற்கொண்டு, காடு கெடுத்து நாடாக்கி, குளந்தொட்டு வளம் பெருக்குவதை அரசர்கள் யாவரும் தலையாய கடமையாகக் கருதி வந்தனர்.

---

17. G. Coedes, op. cit; PP. 229-231

பல்லவர்கள் ஆட்சிக்காலத்தில் (கி. பி. 350-870), தமிழ் நாட்டில், பல்லவர்களுடைய தலைநகர் அமைந்துள்ள இன்றைய செங்கற்பட்டு மாவட்டத்தில், ஏரிகளையும் குளங் களையும் மிகப் பலவாகப் பல்லவ மன்னர்கள் அமைத்துள்ளனர். திரையன் (தென்) ஏரி, மதுராந்தகப் பேரேரி, உத்திரமேரூர் ஏரி, காவேரி(ப்) பாக்கத்து ஏரி போன்றவையும், வைரமேகத்தடாகம் முதலியவையும் பல்லவர்காலப் படைப்புகளேயாகும்.

பல்லவரின் இப்பணியால், இன்றைய தமிழ்நாட்டில், 'ஏரிகள் நிறைந்த மாவட்டமாக' (Lake District)ச், செங்கற்பட்டு மாவட்டம் சிறப்புற்று விளங்குகிறது.

இந்த நீர்ப்பாசனப் பணிமுறைகளைக் காம்பூச்சியாவின் அரசர்கள், தமிழ் நாட்டுப் பல்லவர்களிடம் இருந்தே கற்று இருக்கவேண்டும் என்பது அறிஞர்களின் துணிவாகும்.

மரபுவழி, தமிழகம் பெற்று இருந்த இந்தத் தொழில்நுட்பக் கலையினைக் கெமர்கள் அறிந்து கொண்டு இருக்க வேண்டும். பல்லவருக்கும் காம்பூச்சியாவிற்கும் நெருக்கமான தொடர்பு இருந்து வந்ததை, நாம் முன்னரே கண்டோம். எனவே, இத் தொழில்முறை அறிவு, கெமர்களுக்கு எளிதிலேயே கிடைத்து இருக்கலாம். வேளாண்மைப் பொருளாதார நாடாகிய தமிழகத்தின் அனுபவ அறிவு, அதே வகையான பொருளாதாரப் போக்குடைய காம்பூச்சியாவிற்கு, மிகவும் பொருத்தமாக இருந்து இருக்கலாம்.

## சாதிமுறை

சமுதாய நிலை, பழங்காலத்திலிருந்து ஒரே வகையாக இருந்துவந்தது. சாதிமுறை சமுதாயத்தின் அடிப்படையாக அமைந்து இருந்தது. 'சதுர்வர்ணம்' எனப்படும் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நால்வகைச் சாதியின ரைப்பற்றி, இங்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகள் சில குறிப்பிடு கின்றன. புத்த சமயத்தைப் பின்பற்றிய மன்னன் முதலாம் சூரியவர்மன், நால்வகைச் சாதிப் பிரிவினரும், தத்தம் கடமை களைத் தவறாது பின்பற்றி ஒழுகுமாறு கண்காணித்து வந்தான். என்று ஒருகல்வெட்டு கூறுகிறது. ஆயினும், சாதிப்பாகுபாட்டு முறை, இந்தியாவைப் போன்று, அங்குக் கண்டிப்பாகக் கட்டாயப்படுத்தப்படவில்லை. கல்வெட்டுகளில் பிராமண, க்ஷத்திரிய சாதிகளே பேசப்பெறுகின்றன. காம்போஜ நாட்டு அரசர்கள், பெரும்பாலும் பிராமணப் பெண்களையே மணம் செய்து கொண்டனர். இவ்வாறு, அந்நாட்டு அரசர்களும்,

பிராமணர்களும் கலவை இனமாக இருந்துவந்தனர். அதனால் தான், சாதிப்பாகுபாடு காம்போஜத்தில் கட்டாயப்படுத்தப் படவில்லை என்பர் ஆராய்ச்சியாளர். மேலும், பிராமணர்களை விட அந்நாட்டு மன்னர்கள், உயர்குடி மக்களாகவும், அரச தெய்வங்களாகவும் போற்றப்பட்டனர் என்பதை நாம் மறத்த லாகாது.

காம்போஜத்தில் உள்ள பனோம் பேங்கில் (Phnom Ponch), இன்றும் பார்ப்பனர்கள் வாழ்ந்துவருகின்றனர். அவர்கள் குடுமி யும் பூணூலும் உடையவர்களாக காணப்படுகின்றனர். அவர் கள் கோயில் வழிபாட்டிலும், சமயச் சடங்குகளிலும் முதன்மை யான இடத்தைக் கடந்த காலத்தில் பெற்றிருந்தனர். அதைப் போன்றே, அரசவையில் நடத்தப்படும் சடங்குகளிலும் அவர் களுக்குச் சிறப்பிடம் தரப்பட்டது. முடிசூட்டு விழாவில் அவர் கள் பெரும்பங்கு கொண்டனர்.

ஆனால், அதே சமயத்தில் அரசருக்குப் பெண் கொடுக்கும் பேறு பெற்றவர்களாகப் பார்ப்பனர்கள் விளங்கினர். அதனால், அரச குடிகளுக்கும் பிராமணர் குடிகளுக்கும் நெருக்கமான உறவு உண்டாயிற்று. அரச குருமார்களாக விளங்கிய பிராமணர்களின் செல்வாக்கு மிகுந்த காலத்தில், அவரவர்கள் திரைமறை வாகவும் வெளிப்படையாகவும் அரசர்களை ஆதரித்தும், எதி ராகச் சூழ்ச்சி செய்தும் வந்தனர். அதன் விளைவாக 'அரசனே சிறந்தவன்' என்ற கருத்தை நிலைநாட்ட வேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. அதனால், 'அரச தெய்வ' வழிபாட்டு முறை யினை நாட்டிலே, பரப்புவதற்கு அரசர்கள் அரும்பாடு பட்டனர். அவர்களுக்கு உதவிபுரிவதற்காக வெளிநாடுகளி லிருந்து புதிதாகப் பல குருமார்கள் காம்பூச்சியாவிற்கு வர வழைக்கப்பட்டனர்.

காம்போஜ நாட்டின் பழக்க வழக்கங்களைப் பற்றிச் செயூ-தா-குவான் (Cheu-T'a-Kuan) என்ற சீனர் விரிவாகத் தம் குறிப்பேட்டில், குறித்துள்ளார். அவருடைய குறிப்புகளில் இருந்து பல அரிய செய்திகள் தெரிய வருகின்றன. அக்காலத்தில் காம்போஜ நாட்டின் சமூக அமைப்பில் இருவகைப் பிரிவுகள் இருந்தன. அரசர்களும், செல்வர்களும், பெரிய அதிகாரிகளும் உயர்குடி மக்களாகக் கருதப்பெற்றனர். மற்றையோர் பொது மக்களாவர். வீடுகளின் அமைப்பும், அளவும் அவ்வீட்டிற்குரிய தலைவரின் பதவி நிலையைப் பொறுத்தே வரையறை செய்யப் பட்டது. ஓலை வேய்ந்த தங்கள் குடிசைகளுக்கு, ஓடுகளைக் கொண்டு கூரை அமைக்கவும் பொது மக்கள் அஞ்சி நடுங்கினர்.

## ஆடையலங்காரம்

ஆடவரும் மகளிரும் (அரசரும் அரசியரும் உட்பட) உடலின், மேற்பகுதியை மூடாமல் இடையில் மட்டும் ஆடை அணிந்து வாழ்ந்தனர். வெளியில் செல்லும் பொழுது மட்டும் ஏழைகளும் செல்வர்களும் இடையில் அணிந்த ஆடையோடு ஒரு சிறு துண்டினை மேலே சுற்றிக் கொள்வர். எல்லாரும் தங்கள் தலைமயிரினை மடித்து, ஒரு வகை முடிச்சு போட்டுக் கொள்ளும் வழக்கம் உடையவர்களாக இருந்தனர்.

உயர்குடி மக்கள், செல்வ செழிப்புமிக்க ஆடம்பர வாழ்க்கையில் மூழ்கித் திளைத்தனர். அரண்மனையும், செல்வர் மாளிகைகளும் கண்ணைப் பறிக்கும் அழகுடையனவாக இருந்தன. காம்போஜத்தின் நாகரிகமும் சமயமும், அரசவை நாகரிகமாகவே விளங்கின. அரசர்களும் உயர்குடி மக்களும் பொது மக்களோடு கலந்து வாழாது தனிப்பட்ட இனமாகவே, தங்களைக் கருதி வாழ்ந்தனர். அரண்மனைகளிலும் கெமர்களுடைய வளமனைகளிலும், பொன்னால் செய்யப் பெற்ற சிங்கங்கள் இரண்டு வாயிலைக் காத்து நின்றன. மிக உயர்ந்த அதிகாரிகள் தங்கப் பூண்கள் போடப்பட்ட பல்லக்குகளில் ஏறிச் சென்றனர்; பொன்னாலான பிடிகளையுடைய குடைகளின் கீழ் அமர்ந்து, அவர்கள் உலா வந்தனர்.

## மனைவியர்

காம்பூச்சியா நாட்டு அரசர்கள், ஒவ்வொருவருக்கும் குறைந்தது இரண்டு மனைவியராகிலும் இருந்தனர். அவர்களோடு எண்ணற்ற பெண்களைக் கொண்ட உவளகம் (Harem) ஒன்றை, அரசர்கள் பேணி வந்தனர். கீழே நிற்கும் குடிமக்கள் கண்டு, வணங்கும் வண்ணம், அரசன் அரண்மனையில் மாடம் ஒன்றில், பட்டத்து அரசியோடு தோன்றிக் காட்சி கொடுக்கும் வழக்கம் இருந்துவந்தது. ஆண்டு முழுவதும் பலவகை விழாக்களும், கேளிக்கைகளும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றன. அரம்பையர் போன்று, அழகே உருவான மங்கையரின் ஆடலும், பாடலும், அரண்மனை விழாக்களையும் சமயத் தொடர்பான திருநாட்களையும் அணி செய்தன. யானைப் போர், காட்டுப் பன்றிப்போர் முதலியன அரசர்களின் பொழுது போக்கு விளையாட்டுகளாக இருந்தன.

## நீதி நிர்வாகம்

அரசர்கள், தாங்களே வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்கினர். கடுஞ்சோதனைகள் மூலம் வழக்குகளை விசாரித்துத்

தீர்ப்பு வழங்கும் முறையும் வழக்கில் இருந்தது. கொடிய குற்றம் செய்தோரின் உடல் உறுப்புகள் சிதைக்கப் பெற்றன.

## வாணிகம்

ஆண்டுதோறும் நான்குமுறை, காம்போஜத்தில் அறுவடை செய்யப்பெற்றது. மீன்கொத்திப் பறவையின் சிறகு, தந்தம், காண்டாமிருகத்தின் கொம்புகள், அரக்கு முதலியன இந் நாட்டில் கிடைத்த விலையுயர்ந்த பொருள்களாகும். பொன், வெள்ளி, பட்டுத்துணி, தகரம், பீங்கான், சாதிலிங்கம், காகிதம், வெடியுப்பு முதலிய பொருள்கள், இந்நாட்டில் இறக்குமதி செய்யப்பட்டன. பெரும்பாலும் பெண்களே வாணிகம் செய்வதில் ஈடுபட்டிருந்தனர்.

## நீராடல்

காம்போஜத்தின் சமுதாய வாழ்விலும், ஒழுகலாற்று வாழ்க்கை முறையிலும் இந்தியப் பண்பாடு செல்வாக்குப் பெற்றது. அதனால், நயமிக்க பண்புகள் பல, அங்கு மலர்ந்தன. அவற்றின்மீது பழங்குடி மக்களின் இயல்பூக்கங்களான இழிந்த பண்பாட்டின் கூறுகள் சில, தங்களுடைய ஆதிக்கத்தை நிலை நாட்டத் தொடங்கின. அந்நாட்டு மக்களுள், ஒரே குடும்பத்தைச் சேர்ந்த ஆடவரும், மகளிரும் ஆடையின்றி நிர்வாணமாக ஒரே தொட்டியில் ஒன்றாகக் கூடி, நீராடும் பழக்கம் புதிதாக உண்டானமை இதற்குச் சிறந்ததொரு சான்றாகும். நகரத்தின் புறத்தே ஓடும் ஆறுகளில், ஆயிரக்கணக்கான மகளிர், கரை யோரங்களில் நிற்கும் மக்கள், தங்கள் உடலழகை அடிமுதல் முடிவரை வியப்புடன் கண்டு மகிழும்வண்ணம், ஆடையின்றி நீராடும் பழக்கம் காம்போஜத்தில் புதிதாகப் புகுந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இப்புதுப்புனல் விழா காம்போஜத்தின் தேசியத் திருவிழாவாகக் கொண்டாடப் பெற்றது. இப்புனல் விளையாட்டில், அரசகுடும்பத்தைச் சேர்ந்த ஆரணங்குகளும், உயர் குடிகளைச் சேர்ந்த செல்வ மங்கையரும் பெரு மகிழ்ச்சி யுடன் கலந்து கொண்டனர்.

## கற்பு நிலை

இதைவிட மிகவெறுக்கத்தக்க செயல் ஒன்று, காம்போஜத் தில் பெருவழக்காக இருந்து வந்தது. கன்னிப் பெண்களுக்குத் திருமணம் புரிவதற்கு முன்பு புத்த, சைவ சமயங்களைச் சேர்ந்த துறவிகளைக் கொண்டு அப்பெண்ணை, 'மறுமுறை பூப்படையு மாறு' செய்யும் சடங்கு ஒன்று அந்நாட்டு மக்களால் போற்றிப் பின்பற்றப்பட்டது. இச் சடங்கினைச் செய்வதற்காகப்

பெற்றோர்கள், துறவிகளுக்குப் பொன்னையும், பொருளையும் பரிசாகக் கொடுத்து, அழைத்து வந்தனர். இந்தியாவில் இத்தகைய பழக்கம் குறிப்பிட்ட ஒரு சாராரிடையே, மிக அருகிய அளவிலேயே இருந்துவந்தது. அத்தகைய ஒழுகலாற்றை உடைய மக்கள், இழிந்தவர்களாகக் கருதப்பட்டு, சமுதாயத்தி லிருந்து, ஒதுக்கிவைக்கப்பட்டனர். இக்கொடிய பழக்கம், 'இந்தியாவிலிருந்து காம்போஜத்திற்குச் சென்றதா? அல்லது தாயகத்திற்கு இதனைக் காம்போஜம் அன்புப்பரிசாக அளித்ததா?' என்பதனை, நாம் அறுதியிட்டுக் கூற இயலவில்லை.

மேலும், மணமான மகளிரிடத்தும் கற்பு நெறி கடைப் பிடித்து ஒழுகப்பட்டதாகத் தெரியவில்லை. பொதுவாகக் காம்போஜத்தில் ஆண், பெண் கூட்டுறவைப் பொருத்தவரையில் ஒழுகலாற்று அறநெறி போற்றப்படவில்லை என்பது புலனா கின்றது.

எனினும், இதற்கு விதிவிலக்கு இல்லாமல் இல்லை. கற்புடைப் பெண்டிர் 'பதிவிரதை' என்றும், 'அருந்ததி' என்றும் போற்றப்பட்டனர். பவவர்மனின் தங்கையைப் 'பதிவிரதை' என்றும், 'அருந்ததி' போன்ற கற்புக்கரசி என்றும் கல்வெட்டுகள் போற்றுகின்றன. இந்தியப் பண்பாட்டின் எதிரொலி என்று இதை நாம் கூறலாம்.

### கல்வி நிலை

நாட்டு மக்களிடையே, பொதுக்கல்வி பரவலாக காணப் பட்டது. வான நூல் அறிவு, மக்களிடையே நன்கு பரவி இருந்தது தீய நாட்களைப் பெண்கள்கூட எளிதில் கணக்கிட்டுக் கூறும் அறிவாற்றலைப் பெற்றிருந்தனர். தத்தம் சமயத்தைப் பின் பற்றும் மக்கள் குழுவினருக்குத், துறவிகள் கல்வி கற்பித்தனர். பள்ளி செல்லும் வயதுவந்த பிள்ளைகளுக்கும் துறவிகளே, கல்வி கற்பித்தமை இங்குக் குறிப்பிடத்தக்கது. அக்காலத்தில் கல்வியறிவு மக்களிடையே எத்துணை அளவிற்குப் பரவியிருந்தது என்பதை உய்த்துணர முடிகிறது. மேலும், அவற்றால், அறிவு டைமை மிகச் சிறப்புடையதாகப் போற்றப் பெற்றமை புலனா கிறது. பெரும்பாலான அரசர்கள் சிறந்த கல்வியறிவு உடைய வர்களாக விளங்கினர். சமய சாத்திரங்களை நன்கு பயின்ற துறவிகளைப் பற்றியும், பல தலைமுறைகளாகக் கல்வியில் சிறந்து விளங்கிய பார்ப்பனக் குடும்பங்களைப்பற்றியும் பல குறிப்புகள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. அமைச்சர் களும், அதிகாரிகளும், அவர்தம் மனைவியரும் சிறந்த கல்வி யறிவு உடையவர்களாக விளங்கினர்.

சமயச்சார்பில்லாத சப்தம், வைசேசிகம், நியாயம், சாங்கியம், அருத்த சாத்திரம் போன்ற பல கலைஞானங்கள் அங்குக் கற்பிக்கப்பட்டன. இவற்றோடு, சமயச் சார்புடைய புராணங்களும், இதிகாசங்களும், தத்துவ நூல்களும் தக்கார்க்குப் பயிற்றுவிக்கப்பட்டன.

சம்ஸ்கிருத மொழி, பெரிதும் போற்றி ஆதரிக்கப்பட்டது. கவிதை இலக்கியம் சிறப்புற்று விளங்கியது. அரசர்களும், அமைச்சர்களும், அதிகாரிகளும், அறிஞர்களும் சம்ஸ்கிருத இலக்கியக்கடலில் மூழ்கித் திளைத்தனர். ஓர் அமைச்சன், 'கவிதை அமிழ்தமாகிய கடலினைச் சுவைத்து இன்புற்றான்' என்று ஒரு கல்வெட்டு கூறுகிறது. காம்பூச்சியாவில் சம்ஸ்கிருத மொழியும், இலக்கியமும் போற்றி வளர்க்கப்பட்டமைக்குக் கல்வெட்டுகளே போதிய சான்றுகளாகும். கல்வெட்டுகளில் காணப்படும் மெய்க் கீர்த்திகள் நீண்ட நெடும் சம்ஸ்கிருதப் பாடல்களாக உள்ளன. அவற்றில் இலக்கிய மணம் கமழ்கிறது; கற்பனைவளம், கருத்தாழம், சொல்நயம், உவமையுருவகங்கள் முதலியன அவற்றில் சிறப்பிடம் பெற்றுள்ளன. அவற்றை நாம் கூர்ந்து நோக்குவோமானால், அவை சம்ஸ்கிருத மொழியில் எழுதப்பட்டுள்ள 'வீரகாப்பியத்துணுக்குகள்' என்ற முடிவிற்கு வருவது உறுதி.

### ஆண்டுக் கணக்கு முறை

காம்போஜத்தில் காணப்படும் கல்வெட்டுகளில் சார்களின் சகாப்தமே, முற்றிலும் பயன்படுத்தப்பெற்றுள்ளது. நாள், கிழமை முதலியவற்றைக் கல்வெட்டுகள் குறிப்பிடும் முறைகளினால், அந்நாட்டில் இந்திய வானநூல் அறிவு, நன்கு பரவியிருந்ததை அறிய முடிகிறது. ஒரு மாவட்டத்தின், ஆளுநர் சோதிடத்தில் சிறந்து விளங்கினார் என்று கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகிறது.

### கல்வெட்டில் சம்ஸ்கிருத மொழி

கல்வெட்டுகள் கெமர் மொழியிலும், சம்ஸ்கிருத மொழியிலும் ஒருங்கே பொறிக்கப்பட்டுள்ளன. ஒரு சில கல்வெட்டுகள் சம்ஸ்கிருத மொழியில் மட்டும் பொறிக்கப் பெற்றுள்ளன. இதனால், கெமர் மொழி ஓரளவிற்குச் செல்வாக்குப் பெற்று விளங்கத் தொடங்கியமை புலனாகின்றது.

### நூலகங்கள்

கோயில்கள் தோறும், நூல் நிலையங்கள் இருந்தன. கருவறைக்குக் கிழக்குப் பக்கத்தில் அமைக்கப் பெற்ற ஒரு சிறிய

அறையில் ஏட்டுச் சுவடிகள் சேகரித்து வைக்கப்பட்டிருந்தன. அந்நூல் நிலையத்திற்குப் 'புத்தக ஆசிரமம்' என்னும் பெயர் வழங்கிவந்தமை இங்குக் குறிப்பிடத் தக்கது. காம்போஜத்தில் புத்தக ஆசிரமங்கள் பல இருந்தன. அவற்றுள், இராசேந்திர வர்மனுடைய கல்வெட்டு 'இரணிய ருசி' என்பவர் நிறுவிய நூலகம் சிறப்புற்று விளங்கியதைத் தெரிவிக்கிறது. அறிஞர்களும் சான்றோர்களும், தங்களிடத்து இருந்த ஏட்டுச் சுவடிகளை நூலகங்களுக்கு அன்பளிப்பாக அளித்தனர் என்பதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. கல்வி வளர்ச்சிக்கு, நூல் நிலையங்கள் இன்றியமையாதன என்பதை அம்மக்கள், நன்குணர்ந்திருந்தனர் என்பது இதனால் அறியப்படுகிறது. சோழப் பெருவேந்தர் ஆட்சிக் காலத்தில், தமிழ்நாட்டுக் கோயில்களில் நூலகங்கள் இருந்தன. அவற்றிற்குச் 'சரசுவதி பண்டாரம்' என்பது பெயர். காம்பூச்சிய அரசன் ஒருவனுடைய பெயர் இராசேந்திர வர்மன் என்று வழங்கியமையும், கோயில்களில் நூலகங்கள் அமைக்கப்பட்டு இருந்தமையும் சோழரின் பாதிப்பைப் புலப்படுத்துகின்றன.

இத்தகைய உயர்ந்த பண்பாடும் நாகரிகமும் அந் நாட்டில் நிலவிய போதிலும், அவற்றின் தரம் குறைந்து கொண்டு போனதற்குரிய தடயங்கள் சில காணப்படுகின்றன. நெடுங் காலமாக இக்குடியேற்ற நாட்டின் தலையூற்றாக விளங்கி வந்த தமிழகம், நாளடைவில் அயலாருடைய தாக்குதல்களுக்கு ஆளாகி நாகரிகப்பண்பாட்டில் நலிவுற்றது. இதன் விளைவாக காம்பூச்சியாவினுடைய நாகரிகத்தின் தரமும் குன்றத் தொடங்கியது எனலாம். இந்நாட்டில், இந்தியப் பண்பாட்டுத் தூண்டுதலும் புத்துணர்ச்சியும் நலிவுற்றன. இதன் பயனாகப், பழங்குடி மக்களின் பண்பாட்டுக் கூறுகள் மீண்டும் தலையெடுக்கத் தொடங்கின. இதனைக் காம்பூச்சியாவின் கலை, இலக்கியம் முதலியவை அடைந்த மாற்றங்கள் தெரிவிக்கின்றன. பொதுவாக, அந்நாட்டின் மொழி, பண்பாட்டு மொழியாகிய சம்ஸ்கிருதத்தின் செல்வாக்கைப் புறக்கணிக்கத் தொடங்கியது. நாட்டுமொழி தலையெடுக்க முயன்றது. கலைகளில் புகுத்தப்பெற்ற வட்டாரப் பண்புகள், அக்கலைகளை விரைவில் இழிநிலைக்குக் கொண்டு சென்றன. இவையாவும், குறிப்பிட்ட ஒரு கால கட்டத்தில் நிகழவில்லை. ஆயினும், இவையாவும் பிற்காலத்தில் உண்டாகப் போகும் பெரிய மாற்றங்களைக் குறிப்பாக உணர்த்துவனவாக அமைந்தன.

### சமய நிலை

காம்போஜத்தில் கண்டெடுக்கப் பெற்ற சம்ஸ்கிருத மொழிக் கல்வெட்டுகள், அந் நாட்டின் சமய வளர்ச்சியை அறிவதற்குப்

பேருதவி புரிகின்றன; நாகரிக நிலையை அறிவதற்கு உதவு கின்றன. இந்தியப் பண்பாடு நன்கு பரவியிருந்தமைக்கு, அவை சான்று பகருகின்றன. அந்நாட்டில் வாழ்ந்த மக்கள், இந்தியாவின் பல்வேறு சமயங்களின் கொள்கைகளையும், கோட்பாடுகளையும், பழக்க வழக்கங்களையும், சடங்கு முறைகளையும், தெய்வ வழிபாட்டு நெறி முறைகளையும், சிற்பக் கலைப்பாணியையும் பேரளவிற்குப் பின்பற்றினர் என்பதை அக்கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. மேலும், பாமர மக்களிடத்தில் சமயம், எத்தகைய செல்வாக்கினைப் பெற்றிருந்தது என்பதையும், அவை எடுத்தியம்புகின்றன. எண்ணற்ற கோயில்களும், தெய்வத்திரு மேனிகளும், பக்தியின் அடிப்படையில் செய்யப்பட்ட தருமங்களும், நிறுவப்பட்ட அறக்கட்டளைகளும் அந்நாட்டு மக்களின் உள்ளக்கிடக்கையைப் பிரதிபலிக்கின்றன. இவை எல்லாவற்றையும் விடச் சிறந்து விளங்கிய சமயத்தின் வேறு சில இயல்புகளையும் அக்கல்வெட்டுகள் அறிவிக்கின்றன. சமயத்தின் புறத் தோற்றங்களைக் காட்டிலும், அதன் உயிர் நாடியான சமய உண்மைகள், எவ்வாறு அங்குச் சிறப்புற்றிருந்தன என்பதையும் அவை தெரிவிக்கின்றன. சமயத்தின் உயர்ந்த பண்புகளும், ஆழ்ந்த உணர்வுகளும், ஆன்மிக உணர்ச்சியும் எவ்வாறு மேம்பட்டிருந்தன என்பதை, அவற்றால், நாம் எளிதில் அறிய முடிகிறது. அவை இந்தியப் பண்பாட்டின் பிழம்பாக விளங்கியமை இங்குக் குறிப்பிடத்தக்கது. இவை யாவும், சோழப் பேரரசர் காலத்திய தமிழ் நாட்டின் சமய வாழ்வைப் பிரதிபலிப்பவையாக உள்ளன.

## துறவிகளும் ஆசிரமங்களும்

அக்கல்வெட்டுகளிலிருந்து, உண்மையான பக்தியுணர்வும், அதில் மக்கள் கொண்டிருந்த ஆர்வமும், ஈடுபாடும் புலனாகின்றன. பிறவிப் பெருங்கடலை நீந்த வேண்டும் என்ற வேட்கையும் மெய்ப்பொருளைக் காணவேண்டும் என்ற பேரவாவும் அதற்காகப் ‘பொறிவாயில் ஐந்தவித்துப் பொய்தீர் ஒழுக்க நெறி’ நிற்கவேண்டும் என்ற ஆர்வமும் அந்நாட்டுப் பெரியோர்களிடத்துப் பெருகி வந்ததை, அவை எடுத்துரைக்கின்றன. மற்றீண்டுவாரா நெறியில் சென்று, கூற்றுவனை வென்று, சிந்தையும் மொழியும் செல்லா அந்தமில் இன்பத்து வீடு பேற்றை அடைவதற்கு அந்நாட்டுச் சான்றோர்கள், ஒல்லும் வகையெல்லாம் ஓயாது முயன்ற தவ நெறியைப்பற்றியும் பல குறிப்புகள் கிடைத்துள்ளன. இத்தகைய சிறப்புமிக்கப் பண்புகள் பொதுவாக இந்தியாவில், சிறப்பாகத் தமிழகத்தின் ஆன்மிக வாழ்க்கையினுடைய அடித்தளத்தை அமைத்தனவாகும். அவை தெளிவும்

நயமும் பொருந்திய நடையில், அழகும், அன்பும்பொங்கிவழியும் இனிய நடையில் எடுத்துரைக்கப் பட்டுள்ளன.

சமயத்தின் உண்மையான உணர்வு பொதுமக்கள் இடையே, சிறப்பாக நிலவியதை நாம் காணமுடிகிறது. ஆனால், காம் பூச்சிய நாட்டில் அரசர்களிடத்தும், செல்வர்களிடத்தும், உயர் அதிகாரிகளிடத்தும், பெருங்குடி மக்களிடத்தும் முன்னர், நாம் கண்ட சமய உணர்வுகளும் பண்புகளும் நிறைந்து விளங்கியமை வியப்பும், விம்மிதமும் அளிக்கும் செய்தியாகும். அரசியல் தலைமையும், சமயத்துறைத் தலைமையும் காம்பூச்சியத்தில் மிக நெருக்கமான தொடர்பையும், உறவையும் கொண்டிருந்தன.

சிறு பிள்ளைகளாக இருக்கும் போதே, அரசர்கள் அரசகுரு மார்களிடமிருந்து சமயக்கல்வியைக் கற்றனர். அக்குருமார்கள், பெரும்பாலும் பல தலைமுறைகளாக அரசகுருமார்களாக இருந்துவரும், ஆச்சாரியர் மரபைச் சேர்ந்தவர்களாக இருந் தனர். அரசர்களும், அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் அரச குருமார்களாக விளங்கியமைக்கும் பல சான்றுகள் கிடைத் துள்ளன. அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், குருமார்கள் குடும்பத்தில் பெண் கொடுப்பதும் பெண் எடுப்பதும் பெருவழக்க மாக இருந்தன.

இரண்டாம் ஜெயவர்மன் காலத்தில், தமிழகத்தில் இருந்து குடியேறிய சிவகைவல்யரின் குடும்பம், தொடர்ந்து இருநூற் றைம்பது ஆண்டுகளுக்கு மேல், அரச குருமார்களை அளித்து வந்தது. அதனால், அக்குடும்பம் செல்வாக்கு மிக்கதாக விளங்கியது. கைவல்யரின் மகன் சதாசிவன், பேரன் வாமசிவன் முதலியோர் சிறப்புற்று விளங்கினர். வாமசிவன், யசோவர்ம னுக்குக் கல்வி கற்பிக்கும் ஆசிரியனாகப் பணியாற்றினான். இவற்றிலிருந்து அந்நாட்டு மக்களின் சமய உணர்வும், அதைப் பேணிக்காத்த அரசர்களின் ஆர்வமும் அளவிட்டுரைக்க இயலாத தாக இருந்தமை புலவாகின்றது.

காம்பூச்சியாவின் இத்தகைய சமய வாழ்க்கையும், ஆன்மிக உணர்ச்சியும் தழைத் தோங்கியமைக்கு இரண்டு காரணங்களை நாம் கூறலாம். முதலாவதாக அந்நாடு சோழ மண்டலக் கடற் கரையோடு நெருங்கிய தொடர்புடையதாக வரலாற்றுக்காலம் நெடுக இருந்து வந்தமை இங்குக் குறிப்பிடத் தக்கது. அந்நாட் டின் பல பகுதிகளில், தொடர்ச்சியாகப் பல ஆசிரமங்கள் அமைக் கப்பட்டிருந்தமை மற்றொன்றாகும். ஆன்று, அவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்களாகிய துறவிகள் பலர், அவ்வாசிர மங்களில் தங்கி, தவம் செய்தனர். அவர்கள் மக்களுக்குக் கல்வி புகட்டியதோடு, சமய உணர்வையும் ஊட்டிவந்தனர். அவர்கள்

'வாழ்ந்து காட்டிய வாழ்க்கை நெறி' மக்களுடைய உள்ளத்தில், சமய நம்பிக்கையை எளிதில் எழச்செய்தது. எத்துணையும் பேதமுறாது எவ்வுயிர்க்கும் அருள்தாங்கி வாழ்ந்த அந்த அற வோர்கள், நாட்டு மக்களுக்கு வழி காட்டும் வான்பொருளாக விளங்கினர்.

## காம்பூச்சியாவில் அகத்தியர்

தமிழ் நாட்டிற்கும், காம்போஜத்திற்கும் இடையே இருந்து வந்த நெருக்கமான உறவினை அறிவதற்கு உதவும் மறைமுகச் சான்றுகளாகிய கல்வெட்டுகள் அல்லாமல், வெளிப்படையான பல குறிப்புகளும் கிடைத்திருக்கின்றன. தமிழ் நாட்டிலிருந்து அகத்தியர் என்ற தமிழ் முனிவர் காம்பூச்சியாவிற்குச் சென்ற தாகத் தெரிகிறது. அங்கு அவர் ஓர் அரசமரபினைத் தோற்று வித்தார் என்றும் ஒரு செவிவழிச் செய்தி இந்நாட்டில் வழங்கி வருகிறது[18]

இந்தியாவில், காளிந்தி நதிக்கரையில் பிறந்தவன் என்று நம்பப்படும் திவாகர பட்டன் என்ற துறவி, அலை கடல்களுக்கு அப்பாலுள்ள காம்பூச்சியாவிற்குச் சென்று சமயப்பணி புரிந்து வந்தான். அப்பொழுது இராசேந்திர்வர்மன் என்ற அரசன் தன்னுடைய அருமை மகளான இராசலக்குமியை அந்தத் துறவிக்குத் திருமணம் செய்து கொடுத்தான் என்ற செய்தியை நாம் கேள்விப்படுகிறோம்.

கி. பி. பத்தாம் நூற்றாண்டு அளவில், பல குருமார்கள் இந்தியாவிலிருந்து காம்பூச்சியாவிற்கு அழைக்கப்பட்டுள்ளனர். இரண்டாம் ஜெயவர்மனுக்குத் தாந்திரிக சமயத்தின் சடங்கு களைச் செய்து, ஞான உபதேசம் செய்தருளிய இரணிய தருமன் என்ற பிராமணர், இந்தியாவிலிருந்து வரவழைக்கப் பட்டவர்என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. அவர் வேதங் களிலும், ஆகமங்களிலும் வல்லவராக விளங்கினார். அவ ருடைய மரபில் வந்தவர்கள், காம்பூச்சியாவில் உயர்ந்த பதவி களை வகிக்கலாயினர். இந்தக் காலக் கட்டத்தில் காம்போஜத் திலிருந்து, பலர் இந்தியாவிற்குச் சென்று இந்து, பௌத்த சமயக் கலைஞானங்களைக் கற்றும், ஆன்மிக வாழ்க்கைக்குரிய அறிவுரைகளைத் தக்காரிடத்துப் பயின்றும் தாயகத்திற்குத் திரும்பினர். அவர்களுள் இந்திரவர்மனுடைய குருவாகிய சிவ சோமரை எடுத்துக் காட்டாகக் கூறலாம். அவருடைய சம

---

18. K. A. Nilakanta Sastri, Agastya or the Rise and Spread of Hindu Culture in Journal of Benares Hindu University, (22-8-1936); P. 7

காலத்திய கல்வெட்டு ஒன்றில், சாத்திரங்களை அவர் தவத்திரு சங்கராசாரியாரிடம் பயின்றதாகக் குறிப்பிடப் பட்டுள்ளமை இங்குக் கருதத் தக்கது. ஆதிசங்கரர் மரபில் வந்த, காஞ்சி காம கோட்டத்து சங்கராலயத்தைச் சேர்ந்தவராக, இச்சங்கரரை அறிஞர் சிலர் கருதுகின்றனர். ஆசிரமங்கள், அந் நாட்டில் சிறப் புற்று விளங்கின. அவை ஒழுக்கத்தின் நிலைக்களனாகவும், பக் தியின் ஊற்றாகவும் விளங்கிய துறவிகளின் உறைவிடங்களாகத் திகழ்ந்தன. தங்கள் வாழ்க்கையைக் கலைஞானங்களைக் கற்ப தற்கும் கற்றவற்றைப் பிறருக்கு எடுத்துரைப்பதற்கும், தியானம் செய்வதற்கும், யோகத்தில் அமர்வதற்குமே அவர்கள் பயன் படுத்தினர். இத்தகைய சான்றோர்கள் வாழ்ந்த ஆசிரமங்கள் பல, காம்பூச்சியாவில் இருந்தன. யசோவர்மன் மட்டும் 100 ஆசிரமங்களை அமைத்து, சமயப் பணிபுரிந்தான். அவ்வாசிர மங்களின் கண்காணிப்பைப் பற்றியும், ஆசிரமங்களில் தங்கி இருந்தோர் பின்பற்றுவதற்குரிய விதிமுறைகள் பற்றியும் கல் வெட்டுகள் பேசுகின்றன. அவை காம்போஜத்தில் இந்தியப் பண்பாட்டின் ஆற்றல்மிக்க வளர்ப்புப் பண்ணைகளாக விளங் கின அவற்றிலிருந்து தூய்மையும், ஆற்றலும், நிலைபேறு முடைய நாகரிக ஒளி எட்டுத் திக்குகளிலும் சென்று சுடர்விட்டு ஒளிர்ந்தது.

இந்தியாவிலிருந்து கொண்டு வந்து, காம்பூச்சியாவில் புகுத் தப்பட்டது இந்து சமயம். அந்நாட்டின் புதிய சூழ்நிலையில், அது நன்கு தழைத்து வளர்ந்தது. நாடாளும் அரசர்களும், சமயத் தலைவர்களும். புரோகிதர்களும் அந்நாட்டில் இந்து சமயத்தைப் போற்றித் தழுவினர். எனினும், நாட்டு மக்களுள் பெரும்பாலோர், விலங்கு வழிபாடும், பேய்வழிபாடும் செய்து வந்தனர். ஆயினும், அப்பழங்குடி மக்களின் 'சிறு தெய்வங் களை' இந்து சமயம் ஏற்றுக் கொண்டது. காம்பூச்சியாவில் இருந்த கோயில்களில் எல்லாம் திருவிழாக்கள், ஆடம்பர ஆர வாரத்துடன் நடத்தப்பட்டன. அவ்விழாக்களில் நாட்டின் பல பகுதிகளில் இருந்து ஆயிரக்கணக்கான மக்களும், யாத்திரிகர் களும் கலந்து கொண்டனர். வேதவேள்வி வழிபாட்டோடு, பக்தி நெறியின் சிறப்பியல்பான உருவ வழிபாடும் அங்குச் சிறப் புற்று விளங்கியது,

## சிவ வழிபாடு

கெமர்கள், பண்டைக் காலத்தில் சைவ சமயத்தைப் போற் றினர். மக்களுடைய உள்ளத்தைச்சிவலிங்க வழிபாடு கவர்ந்தது. சிவபெருமான் 'ஸ்ரீசிகர ஈசுவரன்', 'ஸ்ரீகிரி ஈசுவரன்' என்னும்

பெயர்களால் போற்றப்பட்டார். திருக்கயிலை மலையில், சிவ பெருமான் எழுந்து அருளியிருப்பதாகக் கூறுவது இந்திய மரபு. அம்மரபைப் பின்பற்றியே, காம்பூச்சிய மக்களும், இறைவனை 'ஸ்ரீசிகர ஈசுவரன்' என்று போற்றினர் போலும். மும்மூர்த்தி களில் முதன்மையானவர் என்றும், மாபெரும் துறவி என்றும் சிவபெருமான் போற்றப்பட்டார். அவருடைய திருமேனியின் திருக்கோலத்தைப் பற்றிய பல செய்திகளையும் காம்பூச்சிய மக்கள் நன்கு அறிந்திருந்தனர்.

தேவார காலம் முதல், தமிழகத்தில் சிறப்புற்று விளங்கிய சிவபெருமானின் அட்ட மூர்த்த வடிவம், காம்பூச்சிய நாட்டு மக்களால், போற்றிவழிபடப்பட்டமைக்குரிய சான்றுகள் பல கிடைத்துள்ளன. இதனால், இறைவன் அனைத்துமாய், அனைத்துக்கும் அப்பாலுமாய் விளங்கும் இயல்பினை, அவர்கள் நன்குணர்ந்திருந்தனர் என்பது தெரிய வருகிறது. ஒரு கல்வெட் டில், சிவபெருமான் பரமாத்மாவாகப் போற்றப்பட்டுள்ளார். அப் பரம்பொருளோடு இரண்டறக் கலத்தலே, வீடு பேறு என்று அக்கல்வெட்டு பேசுகிறது. இக்கருத்து ஓரளவிற்கு 'அத்துவித' தத்துவத்தின் சாயலாகத் தோன்றுகிறது சிவபெருமானுக்குச் செய்யப்பட்ட யாகங்கள், 'சிவ யக்ஞம்' என்ற பெயரால் குறிப் பிடப்படுகின்றன. இது ஆகமங்களில் காணப்படும் கலைச் சொல் வழக்காகும்.

சைவ சமயத்தின் பல்வேறு பிரிவுகளுள், ஒன்றான பாசு பதமும் காம்பூச்சியாவில் செல்வாக்குற்றிருந்தது. அச்சமயத்தைச் சார்ந்த துறவிகள் பலர், அங்குச் சமயத் தொண்டாற்றி வந் தனர். அவர்களுள் 'ஆச்சாரியர் வித்தியா புஷ்ப', என்பவர் சைவ சித்தாந்தத்திலும், அதன் கலைஞானங்களிலும் சிறப் புற்று விளங்கினார்; மற்றும் சிறந்த கவிஞராகவும் அவர் விளங் கினார் என்று ஒரு கல்வெட்டு அறிவிக்கிறது. பாசுபதம், பௌத்த சமயத்தைப் போன்று அந்நாட்டில் சிறப்புற்று விளங்க் வில்லை. எனினும், அச்சமயத்தில் பெண்களும் துறவிகளாகச் சிறப்புற்று விளங்கினர் என்பது நம் கருத்தைக் கவரும் புதிய செய்தியாகும்.

## திருமால் வழிபாடு

திருமால் வழிபாடும் காம்பூச்சியாவின் மக்களிடையே, பரவி யிருந்ததைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. குணவர்மன் 'சக்கரதீர்த்த சுவாமி' என்ற பெயருடன் விளங்கிய திருமால்

கோயிலுக்குச் செய்த திருப்பணிகளைப் பற்றி, அவை அறிவிக்கின்றன. அவற்றுள் ஒரு கல்வெட்டு, குணவர்மனால் நிறுவப்பட்ட இத்திருக்கோயிலில், ''ஒரு முறை இறைவனை வணங்குகின்ற விஷ்ணு பக்தர்கள், மனநிறைவைப் பெறுவர். பாவச் செயல்களினால் உண்டாகக் கூடிய துன்பங்கள் அவர்களை அணுகா. ஸ்ரீவைகுந்தத்தை அவர்கள் சென்று அடைவர்'' என்று குறிப்பிடுகின்றது. இதிலிருந்து பக்திநெறியின் சிறப்பும், ஊழ்வினையின் கொடிய பிடியிலிருந்து தப்புவதற்கு இறைவனுடைய அடிகளைச் சேர்தலே, உயிர்களின் இலட்சியமாக இருக்க வேண்டும் என்பதும் தெளிவாகப் புலனாகின்றது. மேலும், வைணவ சமயத்தின் அடிப்படை சித்தாந்தமான 'பிரபத்தி' இங்குத் தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளதைப் பார்க்கின்றோம். தமிழ் நாட்டு ஆழ்வார்களின் 'அடிசேர்தல்' எனும் 'பிரபத்தி' தத்துவம், இராமாநுஜரால் சரணாகதி தத்துவமாகப் போற்றப்பட்டது. இதனால் கி.பி. பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஸ்ரீ இராமானுஜ ஆச்சாரியாரின் சரணாகதி தத்துவம், காம்பூச்சியாவில் பரவி இருந்ததைக் காணுகிறோம்.[19] திருமாலிற்குச் 'சக்கரவர்த்தி' என்ற பெயர் அங்கு வழங்கியதிலிருந்து, திருமாலைப் பற்றிய பாகவத புராண இதிகாசக் கருத்துகளும் காம்போஜ மக்களிடத்தில் நன்கு பரவியிருந்தமை அறியப்படுகிறது.

காம்பூச்சியாவின் திருமால் கோயில்களில், தமிழ் நாட்டுத் தென்கலை வைணவர் பின்பற்றும் பாஞ்சராந்திர ஆகமப்படி பூசைகள் செய்யப்பட்டன.[20] இந்த பாஞ்சராந்திர ஆகம வழிபாடு தமிழ் நாட்டிற்கே உரியதாகும்.

காம்பூச்சிய நாட்டுப் பழங்குடி மக்கள், வழிபட்டு வந்த ஒரு காதல் தெய்வத்தோடு, கண்ணன் வழிபாடு இணைக்கப்பட்டு, புதியதொரு தெய்வ வழிபாடாகக் கெமர்களால் மேற்கொள்ளப்பட்டதாகத் தெரிகிறது இது தமிழ் நாட்டு 'கண்ணன்-நப்பின்னை' கதையின் சாயலுடையதாகத் தோன்றுகிறது.

## சங்கர நாராயணர் வழிபாடு

சிவபெருமானையும், திருமாலையும் ஒன்றாக இணைத்து வழிபடும் நெறியும், இங்கு நன்கு வளர்ச்சியுற்றிருந்தது. இத்தெய்வத்தினை, 'சங்கர நாராயணன்', 'சம்பு-விஷ்ணு' 'ஹர அச்சுதன்' 'ஹரிசங்கரன்' 'ஹரிஅரன்' என்னும் பல பெயர்களால் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இவ்வழி

19. R. C. Majumdar, Kambuja Desa, P. 41
20. G.Coedes, Op. cit., p. 203.

பாடு இந்தியாவில் 'ஐயனார்' வழிபாடாகவும், 'ஹரியரன்' வழிபாடாகவும் விளங்கியமையும், இன்றைக்கும் கேரளத்தில் 'ஐயப்பன்' வழிபாடாக விளங்கி வருவதும் இங்கு நினைவு கூர்தற்குரியதாகும்.

இந்து சமயத்தின் இரு கிளைகளான சைவ, வைணவ நெறிகளுக்கு இடையே போட்டியும், பூசலும் உண்டாவதைக் தவிர்ப்பதற்கும், 'ஹரியும் சிவனும் ஒன்று' என்ற கருத்தினை மக்களிடத்தில் பரப்புவதற்கும், சான்றோர்கள், இந்தியாவில் இத்தகைய தொரு வழிபாட்டு நெறியினைத் தோற்றுவித்தனர் என்று அறிஞர்கள் கூறுவர். அவ்வழிபாட்டு நெறியும் காம்பூச்சியாவின் மக்களுடைய உள்ளத்தைக் கவர்ந்ததில் வியப்பொன்றும் இல்லை.

## சக்திவழிபாடு

திருமூர்த்திகளை வழிபட்ட காம்போஜ மக்கள், அவர்தம் தேவிகளையும், தெய்வங்களாக ஏற்றுப் போற்றி, வழிபட்டனர். உமை, துர்க்கை, பகவதி, சதுர்புஜ தேவி, இலக்குமி, சரசுவதி போன்ற பெண் தெய்வங்களைக் கெமர்கள் வழிபட்டனர் என்பதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

## நாக வழிபாடு

வரலாற்றுக் காலத் தொடக்கத்தில், கெமர்கள் நாக வழிபாட்டை மேற்கொண்டிருந்தனர். பல்லவர்கள் தோற்றம் பற்றிக் கூறப்படும் கதையில் வரும் பீலிவளை என்ற நாகக் கன்னியைப் போன்று, கவுண்டினியன் கதைகளிலும் ஒரு நாகக் கன்னிகை வருவது இங்குக் குறிப்பிடத்தக்கது. மேலும், கெமர்களின் சிற்ப வடிவங்களுள் ஒன்பதுதலை நாகம் ஒன்று சிறப்பிடம் பெற்றுள்ளது. கெமர் மன்னர்கள் ஒவ்வொரு நாளிரவும், முன்னேரத்தில், நாகக் கன்னிகளை அல்லது தெய்வீகச் சடங்குகளால் நாகக் கன்னிகையாக மாற்றப்பட்ட பெண்களோடு, கூடி இன்புறுவராம். இதனால். காம்பூச்சிய அரசமரபு நாகக் கன்னியர்களின் வழி வந்ததாகக் கூறுவர்.

## தேவராஜ வழிபாடு

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், ஆட்சிக்கு வந்த இரண்டாம் ஜெயவர்மன் காலத்தில், முதன் முதலாக 'தேவராஜ' வழிபாட்டு நெறி, காம்போஜத்தில் தோன்றியது. இந்த வழிபாட்டு நெறியைச் சிறப்புற நடத்தி வைப்பதற்காக ஓர் அரச குரு பதவியில் அமர்த்தப்பட்டார். அவருடைய

மரபினர் தொடர்ந்து, பல தலைமுறைகள் அப்பதவியினை வகித்துவந்தனர். சிவ கைவல்யர் என்பவரே, ஜெயவர்மனின் அரச குருவாகப் பணிபுரிந்தார். தேவராஜ வழிபாட்டு நெறி புதுமையானது. அரசனுடைய இறைமைப் பண்புகளைத் தெய்விகத்தன்மை யுடையனவாகக் கொண்டு, அதனை அறிவிக்கும் வகையில், அரசனை இறைவனாக உருவகப்படுத்தி வழிபடும் நெறியே, தேவராஜ வழிபாட்டு நெறியாகும். இறைமைப் பண்புகளையுடைய அரசனை, சிவலிங்க வடிவில் வழிபாடு செய்வது, இந்நெறியினர் பின்பற்றிய வழிபாட்டு முறையாகும். அரசனைக் குறிக்கும் சிவலிங்கத்தை, மலையின்மேல் கட்டப்பட்ட கோயிலின் அல்லது பெரிய குன்றுகளைப் போன்று கட்டப்பட்ட கோயிலின் உச்சியில் எழுந்தருளச் செய்து, வழிபட்டனர். அம்மலையினை அல்லது அம்மாபெரும் கோயிலைச் சிவபெருமான் உறையும் கயிலாய மலையாகக் கருதினர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இவ்வழிபாட்டு நெறி, ஒருகால் தாந்திரிகச் சமயச் சார்புடையதாகவும் இருந்திருக்கலாம். இக்கோவில்களில், சைவ சமயத்தின் பாசுபதக் கிளையினரே, பூசாரிகளாகவும் இருந்தனர். தமிழ் நாட்டில் சோழர் காலத்தில் 'பள்ளிப்படை' கோயில்களுக்குப் பாசுபதத் துறவிகளே பூசாரிகளாக இருந்தனர். இத்தகைய வழிபாடு ஜாவாவிலும் பெருவழக்காக இருந்தமை அந்நாட்டின் தொல்பொருள் சின்னங்களால் தெரிய வருகிறது. ஜெயவர்மன் காம்பூச்சியாவின் அரசனாவதற்கு முன்பு, சிறிது காலம் ஜாவாவில் தங்கியிருந்தான். அப்பொழுது, இந்த வழிபாட்டு நெறி அவனைப் பெரிதும் கவர்ந்திருக்கலாம். பின்னர், அவன் காம்போஜத்தின் அரசனாகப் பதவியேற்றான். பிறகு அம்முறையினைப் போற்றி, அவன் பின்பற்றினான். சிவ கைவல்யர் என்ற குருவினை, அவன் ஜாவாவிலிருந்து அழைத்து வந்தான். அவனுடைய கல்வெட்டு ஒன்றினால், இச்செய்திகள் தெரிய வருகின்றன.[21]

நாடாளும் வேந்தனைக் காத்தற் கடவுளாகிய திருமாலோடு ஒப்பிட்டுப் போற்றிப் பாடுவது, நம் நாட்டில் தொன்றுதொட்டு இருநதுவரும் வழக்கமாகும்.

மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்!

என்பர் தொல்காப்பியர் (தொல். பொருள். புறத். 5).

---

21. R. C. Majumdar, Op. Cit., P. 76-77.

'மாயோனைப் பொருந்திய நிலைபெற்ற பெருஞ்சிறப்பினை யுடைய கெடாத விழுப்புகழைப் பொருந்திய பூவை நிலையைக் கூறுதலும்' என்று இளம்பூரணர் என்ற உரையாசிரியர் விளக்கம் கூறுவர்[22]

திருவள்ளுவர் அரசனுடைய பண்புநலன்களை 'இறை மாட்சி' என்ற அதிகாரத்தில் விளக்கியுள்ளார். 'இறைமாட்சி' என்ற தொடரினை விளக்கவந்த பரிமேலழகர் "அஃதாவது அவன்தன் நற்குண நற்செய்கைகள் உலகபாலகர் உருவாய் நின்று உலகம் காத்தலின், இறை என்றார்" என்று மொழிந்துள் ளார்.[23]

இந்திய அரசநீதி நூலார் கருத்தினைத் தழுவி, பரிமேலழகர் விளக்கம் தந்துள்ளார். சுக்கிர நீதி என்ற பொருள் நூலில் "எல்லாவுலகங்களும் அரசனின்றி அச்சத்தால் எப்பக்கங்களிலும் சிதறுண்டிருக்குங்கால், அவ்வெல்லாவற்றையும் காத்தற் பொருட்டு பிரமதேவன் இந்திரன், வாயு, இயமன், சூரியன், அக்கினி, வருணன், சந்திரன், குபேரன் ஆகிய இவர்களுடைய அழிவில்லாத கூறுகளைக் கொண்டு, அரசனைப் படைத்தான்[24] என்று குறிப்பிட்டுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

வள்ளுவர்,

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப்படும்" (குறள் 388)

என்று சிறப்பித்துக் கூறுகிறார்.

"தான் முறைசெய்து பிறர் நலியாமல் காத்தலையும் செய்யும் அரசன், பிறப்பான் மகனேயாயினும் செயலான் மக்கட்குக் கடவுள்" என்று மதித்துப் போற்றப்படுவான் என்பது இதற்குப் பொருளாகும்.

இவற்றால், தொல்காப்பியர் அரசனைக்காத்தற் கடவுளாகிய திருமாலோடு ஒப்பவைத்துப் போற்றுவதும், திருவள்ளுவர் மன்பதை காக்கும் மன்னன், தெய்விகப் பேராற்றல் உடையவன் என்று கருதுவதும், அவனை 'இறை' (கடவுள்) என்ற சொல்லா லேயே அவர் குறிப்பிடுவதும் தெளிவாகிறது.

தமிழகத்தில் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிய காலத் தில், திருமாலின் அடியார்களாகிய ஆழ்வார்கள், அரசனைத் திருமாலின் வடிவமாகவே கருதினர். இதனை,

---

22. தொல. பொருள். புறத். 5, இளம். உரை.
23. திருக்குறள், இறையாட்சி, முன்; உரை.
24. சுக்கிரநீதி, அதி சு. 71-72 (பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் தமிழாக்கம்).

"திருவுடை மன்னரைக் காணின்
திருமாலைக் கண்டேனே யென்னும்"

(திருவாய். பதி. 34. பா. 8)

என்று நம்மாழ்வார் பாடியுள்ளமையால் அறிகிறோம்.

மேற்கண்ட கருத்துகள், தமிழகத்தில் மன்னனை—இறைவனாகச்—சிறப்பாகத் திருமாலாகப் போற்றும் வழக்கம் நெடுங்காலமாக இருந்து வருவதை வலியுறுத்துகின்றன. அரசனைத் தெய்வமாகவும், திருமாலாகவும் போற்றுவது இந்தியநாட்டு மரபு. இம்மரபு, காம்போஜத்தில், சிறிது வேறுபட்டு விளங்கியதைக் காணுகின்றோம். அரசனை அந்நாட்டு மக்கள், சிவபெருமானோடு ஒப்பவைத்துப் போற்றியுள்ளனர். இது அந்த நாட்டில்,சைவ சமயம் பெற்றிருந்த செல்வாக்கினால் உண்டான மாற்றம் என்று நாம் கூறலாம். ஆனால், தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தோன்றிய 'தேவராஜ வழிபாட்டு' நெறியைப் போன்ற ஒன்று, இந்தியாவில் எங்குமே தனிப்பட்ட ஒரு நெறியாகத் தழைத்து விளங்கவில்லை.

காம்போஜ நாட்டில் தெய்வத் தன்மையுடையனவாகக் கருதப்பட்ட அரசன், இறந்தபிறகே தேவராஜனாகப் போற்றப் பட்டான். அப்பொழுது அவனுக்குப் புதிய பெயரும், பட்டமும் சூட்டப்பட்டதை அறிகிறோம். இறந்துவிட்ட அரசர்களுக்கு 'லோகன்' அல்லது 'பாதன்' என்ற பட்டப் பெயர் சூட்டப் பட்டது. அந்தப் பெயர்கள் பிரமன், விஷ்ணு, சிவன், இந்திரன் என்ற பெயர்களோடு இணைக்கப்பட்டு, மறைந்த மன்னர்களுக்குப் புதிய பெயர்களாகச் சூட்டப்பட்டன. நான்காம் ஜெயவர்மன் 'பரமசிவப் பாதன்' என்றும், மூன்றாம் ஜெயவர்மன் 'விஷ்ணுலோகன்' என்றும் பெயரிடப்பட்டமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். இந்த வழக்கு ஓர் உண்மையை நமக்கு நினைவுபடுத்துகிறது. இடைக்காலத் தமிழகத்தில் இறந்தவர்களை, அவர்கள் வழிபடும் தெய்வத்தின் திருவடியைச் சேர்ந்ததாகக் கூறுவதும், அவர்கள் வழிபடும் தெய்வத்தின் உறைவிடமாகக் கருதப்படும் வீடுபேற்றுலகிற்குச் சென்று விட்டதாகக் கூறுவதும் வழக்கமாகும். இன்றும் 'சிவபெருமானின் திருவடி நிழலை அடைந்துவிட்டார்' என்றும் 'சிவலோகபதவி' அல்லது 'வைகுந்தபதவி' அடைந்துவிட்டார் என்றும் கூறுவது தமிழகத்தில் மறைந்து வரும் வழக்காகும், இதைப்போன்றதொரு வழக்கம், அந்நாட்டில் இருந்துவந்தமை இதனால் தெரிய வருகிறது. சோழப் பேரரசர், காலத்தில் இறந்துவிட்ட அரசர்களின் சவக்குழியில் சிவலிங்கம் அமைத்து, எழுப்பப்

பட்ட கோயில்களுக்குப் 'பள்ளிப்படை' என்பது பெயர். இந்த வழக்கத்தின் விரிந்த நிலையே, காம்பூச்சிய 'தேவராஜ' வழிபாட்டு நெறியாக இருத்தல் கூடும். மார்க்சிய நோக்கில், அரசரும் குருமார்களும், தங்கள் தன்னலத்திற்காக அமைத்துக் கொண்ட ஒரு வகைக் கருவி என்று இதனைக் கூறுவர். அரசரும் அரசரால் போற்றப்பட்டகுருமார்களும் தங்களின் நன்மையைக் கருத்தில் கொண்டு, ஓர் இராஜதந்திர கருவியாக அமைத்துக் கொண்டது இவ்வழிபாட்டுமுறை என்பர். இதனை, அரசரோடு மதகுருமார்களின் (Prise and Priestly Axis) கூட்டமைப்பு, எனவும் கூறுவர். இந்த நோக்கில் தேவராஜ வழிபாடு தோன்றியது எனக் கூறுவர்.

## காரைக்கால் அம்மையாரின் வழிபாடு

தமிழ் நாட்டுச் சைவசமய நாயன்மார்களுள், காலத்தால் முந்தியவர் இவர். காரைக்கால் எனும் கடற்கரைப் பட்டினத்தில் தோன்றிய புனிதவதியார் எனும் இயற் பெயருடையவராவர். நாயன்மார்களுள் சிறப்புமிகு பெண்பால் திருத்தொண்டராக இவரைப் போற்றுகிறோம். இவருடைய காலம், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு என்பர்.

காரைக்கால் அம்மையார் முதன் முதல், தமிழில் 'அந்தாதி' எனும் சிற்றிலக்கிய வகையைத் தொடங்கி வைத்த சிறப்புக் குரியவர். இவர் இயற்றிய அந்தாதிக்கு 'அற்புதத் திருவந்தாதி' என்பது பெயராகும். மற்றும், திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்—ஒன்று, திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்—இரண்டு எனும் பதிகங்களோடு, திருவிரட்டை மணிமாலை எனும் சிற்றிலக்கியத்தையும் இவர் இயற்றியுள்ளார். தமிழில் தோன்றியுள்ள பக்திப் பாடல்களுக்கு முன்னோடியாக அம்மையாரின் திருப்பாடல்கள் அமைந்துள்ளன.

''பிறந்து மொழிபயின்ற
பின்னெல்லாம் காதல்
சிறந்துநின் சேவடியே
சேர்ந்தேன்'' (அற்புதத். 1)

எனும் பாடற்பகுதியே, பக்திநெறியை விளக்குவதற்குப் போதிய சான்றாகும்.

அம்மையார் இல்லற வாழ்க்கையைத் துறந்த பிறகு, தம்மைப் 'பேய்' எனும் சொல்லாலேயே சுட்டுவதை வழக்கமாகக் கொண்டு இருந்தார்.

''செடிதலைக் காரைக்கால் பேய்
செப்பிய செந்தமிழ்'' (மூத்த: 1:10)

எனும் பாடற்பகுதியால், தம்மைத் தாமே, 'பேய்' என்று அவர் சுட்டிக் கொண்டமை புலனாகிறது.

முதன் முதலாகத் தமிழ் இலக்கியத்தில், சிவபெருமானின் திருக்கூத்து பற்றிய செய்திகள், இந்த அம்மையாருடைய பாடல்களில்தான் இடம் பெற்றுள்ளன.

திருவாலங்காட்டில் உள்ள சுடுகாட்டை வருணித்து, அந்தச் சுடுகாட்டில், சிவபெருமான் நடனம் புரிவதாக அம்மையார், பலவாறாகப் போற்றிப் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்றைக் காண்போம்:

''கொங்கை திரங்கி, நரம்பெழுந்து
குண்டுகண் வெண்பல் குழிவயிற்றுப்
பங்கி சிவந்து இருபற்கள் நீண்டு
பரடுயர் நீள்கணைக் காலோர் பெண்பேய்
தங்கி, அலறி, உலறு காட்டில்
தாழ்சடை, எட்டுத் திசையும் வீசி,
அங்கம் குளிர்ந்து அனல்ஆடும் எங்கள்
அப்பன் இடம்திரு ஆலங்காடே'' (மூத்த.1:1)

எனும் பாடலில், திருவாலங்காட்டில் பெண்பேய் ஒன்றின் கோலத்தையும், அப்பனின் ஆடலையும் அம்மையார் குறிப்பிட்டுள்ளார்.

சுடுகாட்டில், நள்ளிருளில் இறைவன் ஆடும் கூத்திற்குப் 'பாண்டரங்கம்' (சுடுகாட்டுச் சாம்பலைப் பூசி ஆடுதல்) என்பது பெயர். இதனை 'ஊழிக் கூத்து' எனவும் கூறுவர்.

தில்லை அம்பலவாணரின் ஆனந்தக் கூத்து, இதிலிருந்து வேறுபட்டது. இந்தக் கூத்தினைப் பிற்காலத்தில் சிறப்பித்துப் பேசப்படும் இறைவனுடைய பிறகூத்துகளுக்கு எல்லாம், 'முன்னோடி' எனவும், 'மூலமுதல் வடிவம்' (Proto-type) எனவும் கருத இடமுண்டு.

மனித இனம் நாகரிகம் அடையாத காலத்தில், இறந்தோரை அடக்கம் செய்த பொழுது, சுடுகாட்டில் ஆடிப்பாடிய ஒருவகைச் சடங்கில் இருந்து, இக்கூத்துத் தோன்றி இருக்கக் கூடும்.

அம்மையார், திருக்கயிலையில் இறைவனிடம் இறவாத இன்ப அன்பாகிய பக்தியைத் தம் உள்ளத்தில் எந்நாளும் ஊற்றெடுக்க அருள்புரியுமாறு வேண்டுகிறார். அடுத்து,

''பிறவாமை வேண்டும்; மீண்டும்
பிறப்புண்டேல், உன்னை என்றும்
மறவாமை வேண்டும்''

என்று புனிதவதியார் இறைவனிடம் வேண்டியுள்ளார்.

இதற்குமேல், ஒரு படி சென்று, இப்பிறவியில் உயிருடன் இருக்கும் காலம் வரையில், என்றும், எப்பொழுதும் இறைவன் திருமுன்னர் இருந்து, அவருடைய திருக்கூத்தைக் கண்டு, மகிழ வரம் அளிக்குமாறு வேண்டுகிறார்.

''..................... இன்னும்
வேண்டுநான் மகிழ்ந்து பாடி
அறவா! நீ ஆடும் போதுன்
அடியின் கீழ் இருக்க''

அருள்புரி என்று வேண்டியுள்ளார். (பெரிய. 24:60)

இந்தக் கருத்தை விளக்கும் வண்ணம், கி.பி. ஆறு முதல் எட்டாம் நூற்றாண்டு இறுதிவரை செய்யப்பட்ட ஊர்த்துவ தாண்டவக் கோல நடராசரின் திருமுன்னர், ஒட்டிய வயிறும், புடைத்துக்கொண்டு காணப்படும் விலா எலும்புகளும், குழி விழுந்த கண்களும் உடைய ஒரு பெண், இருகைகளால் தாளம் போடும் கோலத்தில் செப்புச் சிலைகள் செய்யப்பட்டிருந்தன. திருக்கோயில் வழிபாட்டில், இந்நிலையிலேயே கூத்தப்பிரானை வழிபாட்டுக்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கும் பல சான்றுகள் கிடைத்துள்ளன. தமிழ்நாட்டில், முதன் முதல் வணங்கப் பெற்ற சைவ நாயன்மார், காரைக்கால் அம்மையாரே ஆவர்.

கூத்தனின் ஆனந்த தாண்டவச் சிந்தனை வளர்ச்சியுற்ற காலத்தில், அம்பலவாணரின் திருமுன்பு மாணிக்கவாசகரின் சிலையை வைத்து வழிபடும் வழக்கம் உண்டாயிற்று. இதற்கு முன்னர் அம்மையாரின் செப்புச் சிலைகள் பலசெய்யப்பட்டன. தனித்த நிலையில், கையில் தாளத்தோடு, பேயினைப்போல் புனிதவதியார் காட்சி தந்தவர். தம்மைக் 'காரைக்கால் பேய்' என்றே சுட்டிக்கொண்ட அம்மையாரின் பெயரை, எளிதில் மக்கள் மறந்தனர். இதனால், 'பேய்' எனும் செல்லப் பெயரால் சுட்டுவதும் பேசுவதும் பெருவழக்காயிற்று.

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல், தமிழ் நாட்டின் கடல் வாணிகர்கள் 'காரைக்கால் பேயை'த் தங்கள் குலதெய்வமாகக் கருதிப் போற்றி, வழிபட்டனர்.

அலை கடல்களைக் கடந்து, பிறநாடுகளோடு வாணிகம் செய்வதற்குச் சென்ற பொழுது, தங்கள் 'குலதெய்வமா' கிய அம்மையின் சிலையையும் தங்களுடன் வாணிகர்கள் எடுத்துச் சென்றுள்ளனர்.

தென்கிழக்கு ஆசியநாடுகளில், வாணிகத்தின் பொருட்டுச் சென்று, குடியேறிய தமிழ்நாட்டு வாணிகர்கள், தங்களுடன், தங்கள் குலதெய்வத்தின் சிலைகளையும் எடுத்துச் சென்றுள் ளனர் என்பதற்குரிய சான்றுகள் சில கிடைத்துள்ளன.

மற்றும், காம்பூச்சியா, தாய்லாந்து, இந்தோனேசியா போன்ற நாடுகளில், உள்ள கோயில் சிற்பங்களுள், ஊழிக் கூத்தன் திருமேனியும், அதற்கு எதிரில் காரைக்கால் பேயின் சிலை, கல்லிலும், செம்பிலும் செய்யப்பட்டு வழிபாட்டிற்கும், சிற்ப அலங்காரத்திற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சங்ககாலத்தை ஒட்டி, கடல்வாணிகம் செய்த தமிழ்நாட்டு வாணிகர்கள், மணிமேகலை என்னும் கடல் தெய்வ வழி பாட்டை தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்குக் கொண்டு சென்று பரப்பினர். சிறப்பாக தாய்லாந்து, மலேயா போன்ற நாடுகளில், 'மின்கேலா' எனும் பெயரால் மணிமேகலை என்னும் கடல் தெய்வ வழிபாடு வழக்கில் இருந்ததை அறிகிறோம்.[25]

இதைப்போன்று கி.பி. 5ம் நூற்றாண்டுக்கும், 8ம் நூற்றாண் டுக்கும் இடையே, காரைக்கால் அம்மையாரின் வழிபாடு அந் நாடுகளிலும் வழக்கில் இருந்ததை டாக்டர் ழான். பிலியோசா தக்க காரணங்கள் காட்டி, நிலைநாட்டியுள்ளார்.[26]

சம்பாவில் போங்குலே எனும் கோயிலில் பதினாறு கைகளை உடைய ஊழிக்கூத்தன் திருமுன்னர், அம்மையாரின் சிலை செதுக்கப்பட்டுள்ளது. காம்பூச்சியாவில் ஈசானவர்மன் கல் வெட்டில் சம்பே பிரேய்கூப் கோயிலில் (கி. பி 677) 'நிருத்தே சுவரர்' என்னும் பெயரால், நடராசர் குறிப்பிடப்படுகிறார். அடுத்து சூரியவர்மனின் பண்டேய்ஸ்ரீ எனும் கோயிலில் (11.ம் நூற்றாண்டு) அம்மையாரோடு கூடிய ஊர்த்துவதாண்டவ மூர்த்தியின் கற்சிலையும் செப்புச்சிலையும் காணப்படுகின்றன.[27]

25. Sylvain Levi, Asiatic Researches, JORAS, 1912: No.12, P.48'
26. Chants Devotionuels Tamouls de Karaikkal Ammaiyar, Edition Et Traduction Karavelane, Institute Francais D' Indologic Pondichery 1982, Introd; (Ed.) Gros; Pp. 13-14.
27. C. Sivaramamurti, Nataraja In Art, Thought And Tradition; PP. 353-355; 362.

தென்கிழக்கு ஆசிய நாடுகளில்—சிறப்பாகத் தாய்லாந்தில் பீமாய் (Pimay) எனும் இடத்தில், அம்மையாரின் சிலை கண்டு பிடிக்கப்பட்டுள்ளதைச் சான்றாகக் காட்டியுள்ளார்.[28]

இவற்றால், காரைக்கால் அம்மையாரின் வழிபாடு கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டு வரையில், தென்கிழக்கு ஆசிய நாடுகளில் வழக்கில் இருந்தமை தெளிவாகிறது.

தமிழ் நாட்டு மக்கள் இடையே, வழக்கில் இருந்த பல்வேறு வழிபாட்டு நெறிகளுள், நடராசர் வழிபாட்டு நெறி (ஊழிக் கூத்து), காரைக்கால் அம்மையாரின் வழிபாட்டு நெறியோடு பின்னிப் பிணைந்து இருந்தமை இதனால் புலனாகிறது.

இந்த வழிபாட்டு நெறி, தமிழ் நாட்டு வாணிகர்கள் மூல மாகவும், சைவ சமயத் தொண்டர்கள் வாயிலாகவும் அந்நாடு களுக்குக் கொண்டு செல்லப்பட்டு இருத்தல் கூடும் எனத் துணியலாம்.

## அற நிலையங்கள்

கோயில்கள், அற நிலையங்களான ஆசிரமங்கள் போன்ற வற்றிற்குப் பொது மக்களும், அரசர்களும் பேரளவிற்கு அறக் கொடை வழங்கினர். அக் கொடை பொன்னும், பொருளும், நிலமும் என்ற அளவில் நின்று விடவில்லை. ஆண், பெண் ஆகிய அடிமைகள், அழகிய பெண்கள் (தேவ தாசிகள்), ஆடு மாடுகள் முதலிய வீட்டு விலங்குகள் போன்ற பல திறப்பட்ட பொருள்களைக் கோயிலுக்கு அறக் கொடையாக அக் காலத்தில் மக்கள் வழங்கியுள்ளனர்.

நாட்டிலே இருந்து வந்த எண்ணற்ற ஆசிரமங்களைக் கண் காணிப்பதற்குத் தனிப் பட்ட ஆட்சிக் குழுவொன்று, காம்பூச்சி யாவில் அமைக்கப்பட்டிருந்தது. செம்மையாகவும், சிறப்பாக வும் ஆசிரமங்கள் செயல்பட அவை உதவின். ஆசிரமங்களில் மூன்று வகை இருந்தன. அவை வைணவ ஆசிரமம், பிராமண ஆசிரமம், சௌகாந்த் (பௌத்த) ஆசிரமம் எனப்பட்டன. இவை மிகச் சிறந்த முறையில் அறவோர்கள் வாழ்வதற்குரிய இடங்களாக நிர்வகிக்கப்பட்டு வந்தன. இவ்வாசிரமங்கள் இந்து, பௌத்த சமயத்தின் ஊற்றாகவும், இந்தியப் பண்பாட் டின் வளர்ப்புப் பண்ணையாகவும் சிறப்புற்று விளங்கின.

## புராண இதிகாசங்கள்

காம்பூச்சியா நாட்டில், புனிதத் திரு நூல்கள் பல படிக்கப் பட்டும், ஓதப்பட்டும் வந்ததைக்கல் வெட்டுகள் தெரிவிக்கின்றன.

---

28. Gros, Op. Cit, PP.13-14

வேதங்களிலும், வேதத்தின் ஆறு அங்கங்களிலும் தேர்ச்சி மிக்க பிராமணர்கள் பலர், அங்கு வாழ்ந்தனர். சாம வேதத்தில் மட்டும் பயிற்சி மிக்கோர் பலர், அங்குப் பாராட்டப் பட்டனர். பௌத்த சமயத்தின் மறை நூல்களில் வல்லவர்கள் பலரும் அங்கு வாழ்ந்தனர்.

கோயில்களில் சமய நூல்கள் சேகரித்து வைக்கப் பட்டிருந்தன. அந்நூல் நிலையங்களுக்குப் 'புத்தக ஆசிரமங்கள்' என்ற பெயர் வழங்கி வந்தது. பல கோயில்களில் இராமாயணமும், பாரதமும், புராணங்கள் இரண்டொன்றும் திரளான மக்கள் முன்னிலையில் படிக்கப்பட்டு வந்தன. கோயில்களுக்கு இந் நூல்களில் ஏட்டுச் சுவடிகள் பொது மக்களாலும் துறவிகளாலும் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டன. சோழ வேந்தர் காலத்தில் தமிழகத்தில் சிவன் கோயில்களில் எல்லாம் சைவத் திருமுறைகளைக்கோயிலில் ஓர் அறையில் வைத்துப் பூசை செய்தும் விழா எடுத்தும் வந்தனர். அந்தத் திரு முறைகள் வைக்கப்பட்டிருந்த சன்னதியை திருமுறைக் கோயில் என்று போற்றியதும் இங்கு நினைவு கூரத் தக்கதாகும்.

மக்கள் மன்றத்தில் புராணக் கதைகளும், அவற்றில் காணப் படும், நிகழ்ச்சிகளும் செல்வாக்குற்றிருந்தன. திருப்பாற் கடலைக் கடைந்தமை, தேவ சேனாபதியாகிய கார்த்திகேயன், கயிலைமலை, உதயகிரி, மன்யதன் சாம்பலானது, தீர்த்தங்களின் புனிதத் தன்மை, சூரிய அரச மரபு, சந்திர அரச மரபு, கற்புக்கரசியாகிய அருந்ததி, ஆயிரங் கண்ணனான இந்திரன் மலைகளின் இறக்கைகளை அரிந்ததுபோன்ற பல செய்திகளைக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. ஆயிரக் கணக்கான யாகங்களைப் பற்றியும், மனித குலத்தின் முதல் அரசனான மனுவைப் பற்றியும் இன்னபிற புராண இதிகாச கதைகளையும் காம்போஜ நாட்டு மக்கள் நன்கு அறிந்திருந்தனர்.

இடைக் கால இந்தியாவில் காணப் பட்டதைப் போன்று இந்நாட்டிலும், நாட்டுச் செல்வம் அனைத்தும் கோயில் கட்டுவதிலேயே செலவழிக்கப் பெற்றது. ''ஆயிரக் கணக்கான ஊர்களும், ஆயிரக் கணக்கான அதிகாரிகளும், நூற்றுக்கணக்கான நடன மங்கையரும், எண்ணற்ற தொழிலாளிகளும், சிற்பிகளும், கலை வல்லாரும் இக் கோயில்களைப் பேணிக் காப்பதற்காக அறக் கொடைகளை அரசர்கள் வழங்கினர். ஒரு சிறிய கோயிலில் பதினெட்டுத் தலைமைக் குருக்களும், 740 துறவிகளும், 615 ஆடல் மகளிரும் உட்பட 2232 உதவியாளர்கள் இருந்ததாகக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. திரு விழாக் காலங்களில், ஆயிரக்

கணக்கான கிராம மக்கள் கோயில்களின் வேலைகளைக் கவனிக்க அழைக்கப்பட்டனர்.

## பௌத்த சமயம்

கெமர்களின் பேரரசு சிறந்து விளங்கிய காலத்தின் பிற்பகுதியில், பௌத்த சமயம் காம்போஜத்தில் செல்வாக்குப் பெறத் தொடங்கியது. திபெத்து நாட்டின் பண்டை வரலாற்று ஆசிரியரான தார நாதர், இந்தோ சீனாவில் வசுபந்துவின் சீடர்களால் பௌத்த சமயம் பரப்பப்பட்டதாகக் கூறுகிறார். இச்சமயம் சீனாவோடு, காம்போஜம் கொண்ட தொடர்பால், செல்வாக்குப் பெற்றிருக்க வேண்டும். முதலில் காம்போஜத்தின் அமைச்சர்கள் பௌத்தர்களாயினர். அதன் பிறகு, பிராமண மதகுருமார்கள் பிடியிலிருந்து விடுதலை பெற விரும்பிய அரசர்கள், பௌத்த சமயத்தைத் தழுவத் தொடங்கினர். அவ்வாறு முதன் முதல் பௌத்த சமயத்தைத் தழுவிய கெமர் அரசன், ஏழாம் ஜெயவர்மனின் தந்தையான இரண்டாம் இந்திரவர்மனாவான். மேலும், சூரியவர்மனுக்கு, அவன் இறந்த பிறகு 'நிர்வாண பாதன்' என்ற சிறப்புப் பெயர் சூட்டப்பட்டமை இங்குக் கருதத் தக்கது. தாபுரோம் (Taprohm) கல்வெட்டுகள், பௌத்த சமயக் கொள்கைகளையும் பழக்க வழக்கங்களையும் தெளிவாக அறிவிக்கின்றன. ஒரு கோயிலுக்கு விலையுயர்ந்த பொருள்களை அறக்கொடையாகக் கொடுத்த ஏழாம் ஜெயவர்மன் என்ற அரசன், இத்தகைய அறக்கொடையைத் தான் வழங்குவதன் பயனாகத் தன்னுடைய தாயார், 'இருவினைப் பயனால் வரும் பிறவியாகிய பெருங்கடலை நீந்திக் கரையேறுவார்கள்' என்று தான் நம்புவதாக, அக்கல்வெட்டில் குறிப்பிட்டுள்ளான். அக்கல்வெட்டில் புத்த சமயப் பற்றுமிக்க அரசனுடைய பெருந்தன்மை வாய்ந்த, உள்ளுணர்வின் வெளிப்பாடாகிய எண்ணங்கள் நிறைந்து காணப்படுகின்றன.

## மகாயானப் பௌத்த சமயம்

ஆங்கோர் தோமில் உள்ள பயோன் (Bayon) கோயிலில் காணப்படும் மகாயானப் போதிசத்துவ அவலோகித ஈசுவரரின் வடிவம், ஜெயவர்மனின் முகத்தைப் போன்று தோன்றுவதாக ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். இதனால், அவனுடைய புத்த சமயப்பற்றுப் புலனாகின்றது. தன்னாட்டில் 102 மருத்துவ மனைகள் அமைக்குமாறு தன்னைத் தூண்டிய உள்ளுணர்வைப் பற்றி, ஏழாம் ஜெயவர்மன் பின்வருமாறு ஒரு கல்வெட்டில் குறிப்பிடுகின்றான்.

''ஓர் அரசனுக்கு உண்டாகும் உண்மையான துன்பம் அவனுடைய குடிமக்களுக்கு உண்டாகும் துன்பமேயாகும். அவனுடைய உடலுக்கு உண்டாகும் துன்பம், ஒரு துன்பமாகாது, நோயால் நலிந்து துன்புறும் மக்களைக் கண்ட பொழுது அரசனுடைய (ஏழாம் ஜெயவர்மனின்) உள்ளம், நோயாளிகள் அடையும் மனவேதனையைக் காட்டிலும் சொல்லொணா வெந்துயருற்றுத் துடித்தது''[29]

இத்தகைய அருள்கனிந்த உணர்வோடு, அசோகனுடைய சமயப்பற்றும் மக்களினத்திற்குப் பல்லாற்றானும் தொண்டாற்றத் துடிக்கும் கருணை உள்ளமும் ஏழாம் ஜெயவர்மனிடம் இணைந்தும், இழைந்தும் காணப்பட்டமை கருதத்தக்கது.

## தாந்திரிகப் பௌத்த சமயம்

அதே சமயத்தில், பௌத்த சமயத்தின் இருள்சூழ்ந்த பகுதி ஒன்று, அந்நாட்டில் தலை தூக்கியது. மகாயான பௌத்த சமயத்தினின்று இழிந்த முறையில், அமைந்த 'தந்திரயானம்' (தாந்தரிக பௌத்த சமயம்) இந்நாட்டு மண்ணில் ஆழ வேரூன்றியது. இத்தகைய தாந்திரிகக் கொள்கைகள் காரணமாகத் தான், அரச குருமார்கள் முதன்மையான இடத்தைப் பெற்றிருந்தனர் போலும். அரசியல் துறையில் அரச குருமார்கள் பேராற்றலும் பேராதிக்கமும் உடையவர்களாக விளங்கினர். சந்திர பண்டிதர் என்ற அரசகுரு மூன்றாம் ஹர்ஷவர்மனை, அரசனாக்குவதற்காக நடந்த போராட்டத்திற்குத் தாமே தலைமை தாங்கி, நடத்தி வைத்தார். அவ்வரசனுக்குப் பிறகு ஆட்சி புரிந்த இரண்டு அரசர்கள் காலத்திலும், 'திவாகர பண்டிதர்' என்ற அரசகுரு தன்னிகரற்று விளங்கினார்.

## சந்திர கீர்த்தி

சிறப்பு மிக்க சமயச் சடங்குகளைச் செய்வதற்காக, அரசர்கள், அயல் நாடுகளிலிருந்து சமயக் குருமார்களை வரவழைத்ததாகத் தெரிகிறது. அவ்வாறு அயல் நாட்டிலிருந்து ஒரு குருதேவர், பெரிய விழாச்சிறப்போடு அழைத்துவரப்பட்டதாக ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது. இக்குரு இந்தியாவிலிருந்து அழைத்து வரப்பட்டதாக ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். இந்தோசீனாவின், தலைமைக் குருவான ஆச்சாரிய சந்திரகீர்த்தி என்பவர், புத்த தருமத்தைப் பற்றி முழுவதும் தெளிவாக அறிந்து வருவதற்காகப் புத்த கயாவிற்குச் சென்றதாகத் தெரிகிறது. அவருடைய புகழ் பல நாடுகளுக்குச் சென்று பரவியது. அவரிடம்

29. R. C. Majumdar, op. cit; p. 133

உபதேசம் பெறுவதற்குத் தீபாங்கரன் என்பவன் சொர்ண பூமிக்குச் சென்று, பன்னிரண்டு நாட்கள் ஆச்சாரிய சந்திரகீர்த்தியின் திருவடிகளின் கீழ் (மாணவனாக) அமர்ந்து, பௌத்த சமயங்களின் கலைஞானங்களைக் கற்றான் என்று ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது.

## வசந்த விழா

ஏழாம் ஜெயவர்மனின் தாபுரோம் கல்வெட்டில் காணப்படும் ஏழுபாடல்கள், பௌத்த சமயத்தின் ஆடம்பர, ஆரவாரமிக்க வசந்த விழாவை வருணிக்கின்றன. அவ்விழா சித்திரை மாதத்தில் வளர் பிறையின் எட்டாம் நாள் முதல் பதினைந்தாம் நாள் (பௌர்ணமி) வரையில் கொண்டாடப் பட்டது. அவ்விழாவில் நடன மங்கையரின் நடனம் முதன்மையான இடத்தைத் பெற்றிருந்தது. அப்பொழுது மூன்று தெய்வங்கட்கும், ஆயிரம் தேவதைகளுக்கும், 619 குருமார்களுக்கும் வழிபாடு செய்யப் பட்டது. அவ் விழாவில் அறவோர்களும் அறிஞர்களுமான பிக்குகள், பிராமணர்கள் முதலியோருள் ஆயிரம் பேருக்கு உணவளிக்கப்பட்டது. இறைவனும், தேவியும், வீரன், சக்தி முதலிய தெய்வங்களுடன் ஊர்வலம் வருவதோடு, அவ்விழா முடிவடைந்ததாகத் தெரிகிறது. அவ்விழாவில் சைவ-பௌத்த சமய தெய்வங்கள் ஒன்றாகப் போற்றப்பட்டன.

## குருமார்களின் ஆடம்பர வாழ்க்கை

இவற்றால் பௌத்த சமயிகள் பழங்காலத் தூய ஒழுக்க நெறியினைப் பின்பற்றவில்லை என்பது புலனாகின்றது. பௌத்த சமயத் துறவிகள் மீன், புலால் போன்றவற்றை உண்ணத் தொடங்கினர். உண்பதற்கு முன்பு அவற்றைப் புத்தர் பெருமானுக்கு அவர்கள் படைத்தனர். அவர்களுள் சிலர், பொன் தண்டுகளைக் கொண்ட பொற்பல்லக்குகளில், பொற்குடையின் கீழமர்ந்து உலா வந்தனர். மிக முக்கிய அரசியல் நிகழ்ச்சிகளில் அரசன் பௌத்த சமயத் துறவிகளைக் கலந்து சிந்தித்தான். அக்காலத்தில், பெண் துறவிகள் பௌத்த சமயத்தில் இருந்ததாகத் தெரியவில்லை.

## புதிய திருமூர்த்தி

இவ்வாறு பௌத்த சமயம் காம்பூச்சியாவில் செல்வாக்கினைப் பெற்ற போதிலும், அதற்கும் இந்து சமயத்திற்கும் இடையே பகைமை இருந்ததாகத் தெரியவில்லை. காம்போஜ நாட்டின் சைவ சமயத்தார் பௌத்த சமயத்தை, வைணவ சமயத்தைப் போன்று தம்முடைய சமயத்தோடு தொடர்புடைய

தாகவே கருதினர். அதனால், பௌத்த-சைவ சமயங்களின் கலைப்பண்புகள் ஒன்றாக இணைந்து, கெமர்களின் கலைகளையும் சடங்குகளையும் அழகுபடுத்தின. இந்து கோயில்களில், சிறிதும் வேற்றுமையுணர்வின்றிப் பௌத்த சமயத்திற்குரிய தெய்வத்திருமேனிகள் அமைக்கப்பட்டன. இவ்விருவகைச் சமயங்களின் தெய்வங்களுக்கும் பிராமணர்களே, சிறிதும், வேறுபாடு கருதாது பூசை முதலியவற்றைச் செய்துவந்தனர். காம்போஜத்தில் பௌத்த சமயமும், இந்து சமயமும் இரண்டறக் கலந்த நிலையைக் காணுகின்றோம். அந்நாட்டில் புதியதொரு 'திருமூர்த்தி' வழிபாடு தோன்றியது. பத்மோற்பவன் (பிரமன்), அம்புச நேத்திரன் (திருமால்), புத்தர் ஆகிய மூவரும் 'திருமூர்த்திகளா'கக் கருதப்பெற்றனர். இதனால் 'சிவபெருமானும் புத்தரும் ஒருவரே' என்ற கருத்து நிலவியமை புலனாகின்றது. இத்தகைய 'சைவ—புத்த' வழிபாடு கெமர்களிடம் மட்டுமல்லாமல், சம்பா, ஜாவா, சுமத்திரா முதலிய நாடுகளிலும் சிறப்புற்று விளங்கியது.

## சமயப் பொறை

கெமர் மன்னர்கள், மகாயான புத்த சமயத்தைப் போற்றிய காலத்தில், சைவ சமயத்திற்குரிய சடங்குகள், கோயில் விழாக்கள், அரசவை வழிபாடுகள் முதலியவற்றை அப்படியே அவர்கள், பின்பற்றலாயினர். கி பி. பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டு (Stay Santhor) ஒன்று ''அரசகுரு வழிபாட்டை எக்காரணத்திற்காகவும் புறக்கணிக்க வேண்டியதில்லை. ஆனால், அவர் புத்த சமயச் சாத்திரங்களை நன்கு கற்றவராக இருக்கவேண்டும். விழாக் காலங்களில் புத்தர் பெருமானின் சிலையைத் தக்க சடங்குகளோடு அபிடேகம் செய்து அலங்கரிக்க வேண்டும்'' என்று கூறுகிறது. எனவே, கெமர் மன்னர்கள், பௌத்தர்களாக மாறியபொழுதும், நடைமுறையில் இருந்துவந்த சைவ சமயப் பழக்க வழக்கங்களும் சடங்குகளும் தொடர்ந்து பின்பற்றப்பட்டமை புலனாகின்றன. சிவபெருமானுக்குப் பதிலாகப் போதிசத்துவரின் சிலை, வழிபடு தெய்வமாயிற்று. நாட்டு மக்கள், தங்கள் அரசர் சைவரோ, வைணவரோ, பௌத்தரோ என்பதைப் பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. எனவே, திருக்கோயில் வழிபாட்டை எதிர்க்கும் ஈனயானப் பௌத்த சமயத்தைத் தழுவிய பிறகும், கெமர்களின் அரசவைச் சடங்குகள் பிராமண சமயச்சார்புடையனவாக இருந்ததில் வியப்பொன்றும் இல்லை. காம்போஜப் பிராமணர்கள், நாள்கோள் பார்ப்பதிலும், சோதிடம் சொல்லுவதிலும் தங்கள் வாழ்க்கையை நடத்தினர்.

கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டு முதல், காம்பூச்சியாவில் பௌத்த சமயம் அரசியல் செல்வாக்கினைப் பெற்றுத் தழைத் தோங்கத் தொடங்கியது. தாய்லாந்தின் தாய்கள், காம்பூச்சி யாவைக் கைப்பற்றியதன் விளைவாக இந்நிலை ஏற்பட்டது. ஆங்கோர் வாட் கோயிலில் இருந்த, இந்து சமய தெய்வங்கள் அகற்றப்பட்டன. அதற்கு மாற்றாகப் பௌத்த சமய தெய்வங் களின் சிலைகள் வைக்கப்பட்டன. அது முதல் இன்றுவரை பௌத்த சமயமே, காம்பூச்சியாவில் வாழ்வும் வளனும் பெற்று இலங்குகிறது.

இரண்டாம் நிலையாகிய தொன்மைக் கலைமரபு தழைத் தோங்கிய காலத்தில், புதிய இயல்புகளோடு சிலைகளை அமைக்கும் திறன் இந்தியக் கலை மரபுகளோடு பெரிதும் தொடர்புடையனவாகவே வளர்ந்தது.

ஆயினும், அவற்றில் அந்நாட்டு மக்களுடைய சொந்த கற்பனைக்குப் பஞ்சமில்லை. இவ்வகையில், கெமர்களின் கலை, மாபெரும் கூட்டுறவினாலும் தூண்டுதலாலும் மலர்ச்சியுற்ற தாகத் தெரிகிறது.

இரண்டாவது பகுதியாகிய தொன்மைக் கால மரபு தழைத் தோங்கத் தொடங்கிய காலத்தில், சில புதிய இயல்புகள் தோன்றின.

## காம்பூச்சியாவின் கலைச் செல்வம்

காம்பூச்சியாவின் பழம்பொருள் சின்னங்களும் சிற்பங்களும் இருவகைப்பட்டவையாகத் தோன்றுகின்றன. அவற்றை நாகரிக வளர்ச்சி அடையாத காலத்தவை எனவும், தொன்மைக் கலை மரபு காலத்தியவை எனவும் நாம் பாகுபடுத்திக் கூறலாம். முதல் நிலை பியூணான் காலத்தில், தொடங்குகிறது. இரண்டா வது நிலை கி. பி. பத்தாம் நூற்றாண்டில் ஆங்கோர்வாட்டில் அரும்புகிறது.

பண்டைக் காலத்திய இந்தோசீனாவில் சிறப்புற்று விளங்கிய கலைகளான கெமர் கலைப்பாணியும், சாம் கலைப்பாணியும் இந்தியக்கலை முறைகளில் இருந்து தோன்றியனவாகும். கட்டடம் கட்டும் முறையும், இவற்றிடையே தலையெடுக்கத் தொடங்கின. மனித முகத்தோற்றத்தைக் கொண்ட கலைகள், தூண்களுக்கு மேல் கருட வடிவில் அமைக்கப்பெறும் போதிகைக் கட்டைகள், நாகச் சிற்பங்களைக் கொண்ட கைப்பிடி மேடைகள் போன்றவை அவற்றுள் முக்கியமானவையாகும். அக்காலத்தில் சிற்பங்களில் இத்தகைய கெமர் தேசியக்கூறு முக்கிய இடம்

பெறத் தொடங்கியதை நாம் காணுகின்றோம். எனினும், சமயமும் புராணக் கற்பனைகளும், இந்தியப் பண்புடையன வாகவே நின்று நிலைபெறலாயின. இவற்றோடு 'தேவராஜ' வழிபாட்டு நெறி காம்பூச்சியாவில் பெரும் செல்வாக்கு, பெறலாயிற்று. இப்பண்புகள் அனைத்தும் காம்பூச்சியக் கலையில் பிரதிபலிக்கின்றன. இத்துடன், அவை கலை வளர்ச் சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து, மக்களுடைய ஆர்வத்தைத் தூண்டின.

## புதிய சிற்பம்

திருமாலின் வாகனமான கருடன், திருமாலைத் தூக்கிச் செல்லுவதாகச் சித்திரிப்பது இந்திய வழக்கு. காம்பூச்சியாவில் கருடன் திருமாலை மட்டும் அல்லாமல், அவருடைய கோயிலை யும் அப்படியே, தூக்கிச் செல்லுவதாகச் சித்திரிக்கப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். கோயிலின் அடித்தளத்தில், வரிசைவரிசையாகக் கருடன்கள் விரிந்த சிறகுகளுடன் செதுக்கப் பட்டுள்ளன. காம்பூச்சியத் திருமாலின் கோயிலை, விண்ணகத்து ளுள்ள வைகுந்தத்தின் மண்ணுலக வடிவமாகக் கருதியதனால் இத்தகைய சிற்பங்களைச் செதுக்கினர் என்று கலைநூல் வல்லார் கருதுகின்றனர்.[30]

## பழையபாணி

ஆங்கோர் கோயில் கட்டப்பெறுவதற்கு முற்பட்ட காலத் தில், எளிய முறையில் கட்டப்பட்ட கோயில்கள் பல காம்பூச்சி யாவில் காணப்படுகின்றன. மூன்று படிகளைக் கொண்ட 'பிரமிட்டு' மீது கட்டப்பட்ட கோயில் ஒன்று, 'பிரசாத் அக்யோம்' என்னும் இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டு இருக்கிறது. அதன்மீது சில கூடாரங்கள் உள்ளன. அந்தப் 'பிரமிட்டின்' இடையே கிணறுபோன்று துளைக்கப்பட்ட கோயில் அமைப்புக் காணப்படுகிறது. அங்குக் காணப்படும் கல்வெட்டுகளால், இக் கோயில் சிவ கம்பீர ஈசுவரருடையது என்பது தெரியவருகிறது. இக்கோயில் கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்கும் கி. பி. எட்டாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டகாலத்தில் கட்டப்பட்டது என் றும், பண்டைக் கெமர்களுடைய கலைப் பாணியை அடிப்படை யாகக் கொண்டது என்றும் கலை நூல் வல்லார் கூறுவர்.

## பல்லவர் பாணி

தொகையோ (Takaieo) என்னும் இடத்தில் முற்றுப் பெறாமல் அமைக்கப்பட்டிருக்கும் கோயில் படிப்படியாக

---

30. H. Zimmer, Myths and symbols in Indian Art and Civilization, P. 76

அமைந்த பிரமிட்டுமீது, தனிப்பட்ட 8 விமானங்கள் முறைப் படுத்திக் கட்டப்பட்டு இருப்பதைக் காட்டுகிறது. இப்பணி, பிற் காலத்தில் ஆங்கோர்வாட்டில் முழுநிறைவு அடைந்திருக்கிறது என்பர். இவற்றைப் போன்ற பல பழைய கோயில்கள் காம்பூச்சி யாவில், இங்குமங்கும் சிதறிக் கிடக்கின்றன. அவை தென்னிந்தி யாவில் பல்லவர்கள், முதன்முதல் கட்டிய கோயில்களைப் போன்று காணப்படுகின்றன. சிற்சில பண்புகளில், அவை குப்தர் காலத்திய கோயில்களையும் ஒத்துள்ளன. அலங்கார வேலைப் பாடுகளின்றிப் பொதுவாக எளிமையாகத் தோன்றும் இக் கோயில்கள், வட இந்தியாவின் சிக்கலான கிரேக்கப் பாணியைப் பின்பற்றியவை அல்ல. அவை தமிழகத்தின் பல்லவர்களுடைய பாணியைப் பின்பற்றி அமைக்கப்பட்டவை என்பது தெளிவாகப் புலனாகிறது.[31]

இரண்டாம் ஜெயவர்மன்,மாபெரும் கட்டடங்களைக் கட்டி யுள்ளான். மூன்று பெரும் நகரங்களைப் புதிதாக அவன் நிர்மாணித்துள்ளான். 'அமரேந்திரபுரம்' (பண்டேய் சமர்), ஹரியர ஆலயம் (பிராகுன்), மகேந்திர பர்வதம் (பெங்மியே லியா) என்பன அந்நகரங்களின் பெயர்களாகும். தென்காம்பூச்சி யாவில், அயல்நாடுகளிலிருந்து கலைப் பாணிகளைக் கற்று, கட்டடங்களைக் கட்டிவந்தனர். அதைப் புறக்கணித்துவிட்டு, அவ்வரசனும், அவனுடைய கலைஞர்களும் தங்கள் தேசியக் கலையான கெமர்களின் மரவேலைப்பாட்டுக் கட்டடக் கலை முறையையும், அவற்றின் மரச்சட்டங்கள், படிமேடைகள், ஓடு வேய்ந்த கூரைகள் போன்ற பல உறுப்புகளையும் கற்களினால் செய்தனர். இவ்வாறு கற்களினால் வியத்தகு கோயில்களையும் கட்டடங்களையும் அமைப்பதில், தங்களுக்கேயுரிய தற்பண்பை யும், உண்மையான படைப்புத்திறனோடு கூடிய மதிநுட்பத்தை யும் அவர்கள் வெளிப்படுத்தினர்.

## அகத்தியர் மரபு

முதலாம் இந்திரவர்மன் (877-889), தமிழகப் பிராமண ரான அகஸ்தியரின் வழியிலே வந்தவன் என்று தன்னைக் கூறிக் கொண்டான். இதனால், தமிழகப் பாண்டியரின் கால்வழியில் வந்தவன் அவன் என்பது புலனாகின்றது. பழைய ஆங்கோர் தோம் கோயில் நகருக்குள் திட்டமிட்டுச் செங்கற்களால் சில விமானங்களை அவன் கட்டியுள்ளான். மேலும், பாகோங்கு என்னும் இடத்தில் சிவன் கோயில் ஒன்றையும், அவன் எடுப்பித் துள்ளான். குறுகிச் செல்லும் ஐந்து மாடங்களோடு கூடிய,

31. H.Quaritch Wales, Op. Cit; pp. 152-53

பிரமிட்டு போன்ற விமானத்தையுடைய கோயில் அது. அதன் உள்ளே, சிவலிங்கம் ஒன்றும் அமைக்கப்பட்டிருக்கிறது. அக் கோயில் அமைப்பைச் சுற்றி ஒரு பெரிய சுவரும், மதிலும், அகழியும் அமைக்கப்பட்டிருக்கின்றன. அகழியின் மீது அமைக் கப்பட்டுள்ள பாலங்களின் இருபுறங்களிலும், பல தலைகளை யுடைய நாகங்கள் காவல் தெய்வங்களாக நிறுவப்பட்டுள்ளன.

## மகளிர் சேம அரண்

ஆங்கோரிலுள்ள மாபெரும் கோயிலின் வியத்தகு சிறிய வடி வம் என்று சொல்லத் தக்க வகையில், ஒரு கோயில் ஈசுவரபுரத் தில் கட்டப் பெற்றுள்ளது. அது நுண்ணயமுடைய கலைத் தொண்டின் சான்றாக விளங்குகிறது. அதனை, இந்திரவர்மன் என்னும் அரசன் கட்டியுள்ளான். அதற்குப் 'பண்டேய் ஸ்ரீ' (Bantei Srei) என்பது பெயர், 'மகளிரின் சேம அரண்', என்று அதற்குப் பொருள் கூறுவர். அக்கோயில் சிவபெருமானுக்குக் கட்டப்பட்டிருக்கிறது. அக்கோயிலின் ஒரு பகுதி, பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த இராசேந்திரனாலும், ஐந்தாம் ஜெய வர்மனாலும் கட்டப்பட்டதாகத் தெரிகிறது. கெமர்களுடைய தொன்மைக் கலைமரபு மலர்ச்சியுறத் தொடங்கிய காலத்தில், கட்டப்பட்டதே இக்கோயில் என்பது ஆராய்ச்சியாளர் முடி வாகும்.

ஆங்கோர் நகருக்கு வடமேற்கில் பதினைந்து கல்தொலைவில் காடுகள் அடர்ந்த பகுதியில், அக்கோயில் இருக்கிறது. அக்கோயில் இரண்டு தனிப்பகுதிகளாகக் கட்டப்பட்டிருக்கின்றது. நாற் பது மீட்டர் சதுர வடிவில் ஒரு மதில் சுவர் இருக்கிறது. அதில் இரண்டு முதன்மையான கோபுர வாயில்கள் உள்ளன. ஒன்று கிழக்கிலும், மற்றொன்று மேற்கிலும் அமைக்கப் பட்டிருக் கின்றன. அதைப் போன்றே, மூலக்கோயிலுக்குள் செல்லுவதற்கு உள்வாயில்கள் உள்ளன. அவை அனைத்தும், கிழக்கு நோக்கிக் கட்டப்பட்டுள்ளன. அவற்றின் நடுவில் உள்ள கோயில், மற்ற இரண்டு கோயில்களைக் காட்டிலும் நீளமானதாக இருக்கிறது. கிழக்கு பகுதியில் இரண்டு நூல் நிலைய (புத்தக ஆசிரமங்கள்) கட்டடங்கள் உள்ளன. அவை அனைத்தையும் சுற்றித் தனித் தனியாகக் கட்டப்பட்ட ஆறு படிமேடைகள் உள்ளன. அவற்றிற்கு அப்பால், அகன்ற இடைவெளி இருக்கிறது. இடை வெளிக்குப் பின்னர் மதில் சுவர் நிற்கிறது.

கிழக்குக் கோபுர வாயிலுக்கு வெளியே, அக்கோயிலின் இரண்டாவது பகுதி இருக்கிறது. அதில் இரண்டு கட்டடங்கள் உள்ளன. ஒன்று வடக்கு நோக்கியும், மற்றொன்று தெற்கு

நோக்கியும் அமைக்கப்பட்டுள்ளன. அங்கிருந்து 70 மீட்டர் நீளத்திலும் 17 மீட்டர் அகலத்திலும் படி மேடை ஒன்று நெடுகக் கட்டப்பட்டிருக்கிறது. அதனுடைய கிழக்கு முனையில், பெரியதொரு கோபுரம் வீறுடன் விளங்குகிறது. இப்படி, மேடைக்கு வடக்கே, பாதி வழியில் ஒரு கட்டடமும், தெற்குப் பக்கத்தில் அதைப்போன்று மூன்று கட்டடங்களும் வரிசை வரிசையாக இருக்கின்றன. இவ்வாறு, அதன் அமைப்பு சதுர வடிவமாகத் தோன்றுகிறது. ஒரு பக்கத்தில் மட்டும் நீண்ட கைப்பிடி போன்ற படி மேடையும் இடம் பெற்றிருக்கிறது.

முதற்பகுதியில் கண்ட மூன்று கோயில்களைக் குரங்குகளின் சிலைகளும், பீடத்தின் மீதமர்ந்த சிங்கத்தின் சிலைகளும் காவல் புரிகின்றன. அக்கட்டடங்களிலும் கோபுரங்களிலும் ஏராளமான சிற்பங்கள் அழகுறச் செதுக்கப்பட்டுள்ளன. கோயில் சுவரிலுள்ள மாடங்களிலும் கோபுரங்களின் மாடங்களிலும் நின்ற கோலத்தில், அரம்பையர் சிற்ப வடிவங்கள் அழகு செய்கின்றன.

கெமர்களுடைய கலை புத்துயிர்ப்புப் பெற்று, மலர்ச்சியுறத் தொடங்கிய காலத்தில் கட்டப்பட்டதே, 'பண்டேய்ஸ்ரீ' கோயிலாகும். பண்டைக் கலை மரபிலிருந்தும், அயல்நாடுகளிலிருந்தும் பேரார்வத்தைப்பெற்ற கல்தச்சர்கள், புத்தம் புதிய வடிவங்களைப் புதிது புதிதாகப் படைக்கத் தொடங்கியதன் விளைவே, நேர்த்திமிகு இக்கோயிலாகும். பியூணானின் பண்டைக் கட்டடக் கலை மரபின் அடிப்படையிலே, புதிய கற்பனை வளம் மிக்க பாணிகளை வகுக்கத் தொடங்கிய காலத்தில், அரும்பிய அழகோவியமே 'மகளிரின் சேம அரணாகும்'. சிக்கலான கலைப் பாணியை அல்லது கணிசமான அளவிற்கு முக்கியத்துவம் வாய்ந்த கட்டடக் கலைமுறையைப் பின்பற்றி அமைக்கப் பட்டது இக்கோயில் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இதற்கு முன்பு கட்டப்பட்ட கோயில்கள் எல்லாம், மிகவும் எளிய முறையில் கலைநயம் குன்றிக் காணப்படுகின்றன.

''இந்தியாவில் உள்ள எந்த இந்துக் கோயிலும், இவ்வளவு விரிவான வகையில் சிற்பங்களையுடையதாக இல்லை. சிற்ப வேலைப்பாடு தனிச்சிறப்பு வாய்ந்த நேர்த்தியுடன் காணப்படுகிறது. கோயிலின் கருவில் அடக்கமாக இருப்பதே, அதனுடைய வனப்பிற்குத் காரணமாகும். 'மகளிரின் சேம அரண்' என்னும் அவ்விடத்தின் பெயருக்கு இணங்க, இக்கோயிலின் கலைப் பாணியில் பெண்மையின் மென்மையும இன்மகிழ்வூட்டும் கவர்ச்சியும் இனிது கலந்து உள்ளன''[32] என்பதனால், இக் கோயிலின் கலையழகினை நாம் நன்குணரலாம்.

32. M. Macdonald, Angkor, P.94

யசோவர்மனே (கி.பி.900), ஆங்கோர்தோமைக் கட்டிய தாக இதுவரை நம்பப்பட்டு வந்தது. அவன் பிமேனகஸ் (Phimenakes) என்னும் இடத்தில் திருமால் கோயில் ஒன்றைக் கட்டியுள்ளான். மூன்று மாடங்களோடு கூடிய விமானத்தையும், படி மேடைகளையும் உடையது அது. தொல்பொருள் ஆராய்ச்சி யின் மூலம், யசோவர்மன் ஒரு பெரிய ஏரியை அமைத்து, அதன் நடுவில் நியக்பியன் (Neak Pean) என்ற கோயிலைக் கட்டியமை அறியப்படுகிறது. ஆங்கோர்வாட் நகரினை இவன் அமைத்தான். எனவும், அங்குள்ள கோயில்கள் பிற்காலத்தில் கட்டப்பட்டன எனவும், இக்கால ஆராய்ச்சியாளர் கூறுகின்றார்.

## ஆங்கோர்வாட் கோயில்களின் அமைப்பு

ஆங்கோர்வாட் கோயில்கள், காம்போஜத்தில் உள்ள பழம் பொருள் சின்னங்களுள் மிகச் சிறந்தனவாகும். ‘ஆங்கோர்வாட்’ என்பதற்குக் ‘கோயில்களையுடைய நகரம்’ என்பது பொரு ளாகும். ‘ஆங்கோர்’ என்னும் சொல்லிற்கு, ‘நகரம்’ என்பது பொருள். ‘வாட்’ என்பது ‘வடமரம்’ என்பதன் திரிபு. வடமரம் என்னும் பெயர், ஆலமரத்தைக் குறிப்பதாகும். ஆலமரம் இருக்கு மிடமே கோயில் என்று கருதப்பட்ட காரணத்தினால், ‘வாட்’ என்னும் சொல், பிற்காலத்தில் ‘கோயிலை’க் குறிக்கலாயிற்று. இந்நகரின் பெயரே, தன்னுடைய சிறப்பை உலகிற்கு உணர்த்தி வருகிறது. இங்குள்ள கோயில்களுள் தலைசிறந்தது திருமால் கோயிலாகும். இதை, இரண்டாம் சூரியவர்மன் என்ற அரசன் கட்டினான். பெரிய அகழிக்கு இடையே, இக்கோயில் அமைக்கப் பெற்றிருக்கிறது. இதனால் ஓர் ஏரிக்கு நடுவில் உள்ள ஒரு சிறு தீவைப் போன்று அது காணப்பெறுகிறது. கோயிலின் மதில் சுவரைச்சுற்றிலும் உள்ள அகழி, மொத்தம் 20.3கி. மீ. நீள முடையது. அவ்வகழி 2.33 மீட்டர் அகலம் உடையதாகும். கோயிலின் முன்பக்கத்தில் 10மீட்டர், அகலம் உள்ள மேடைப் பாதை அமைக்கப்பட்டு இருக்கிறது. இதைத்தொடர்ந்து 1.25 மீட்டர் உயரத்தில் அமைக்கப்பட்ட சாலை ஒன்று, 475 மீட்டர் நீளம் உடையதாகக் காணப்படுகிறது. இச்சாலையின் வழியாகத் தான், திருக்கோயிலின் வாயிலை அடையமுடியும். முதல் படி மேடை 241 மீட்டர் கிழக்கு மேற்காகவும், 240 மீட்டர் வடக்குத் தெற்காகவும் அமைக்கப் பட்டிருக்கிறது. மூன்றாவது படிமேடை யிலிருந்து நடுப்பகுதியில் உள்ள விமானம் 64மீட்டர் உயரம் உடையதாகக் கட்டப்பட்டிருக்கிறது.

இந்தக் கோயிலின் சுவர்களில் எல்லாம், நீண்ட தளவரிசை யில் புடைப்புச் சிற்பங்கள் பல செதுக்கப்பட்டுள்ளன. இந்தியப்

புராணக் கதைகளின் நிகழ்ச்சிகளையும், தெய்வங்களையும் அணியணியாகச் சிற்பவடிவில், கெமர் கலைஞர்கள் செதுக்கியுள்ளனர். கலை நுட்பத்திலும், கலைப்பாணியிலும் இந்திய நாட்டுச் சிற்பக் கலைஞர்களை அவர்கள் விஞ்சி விடவில்லை. எனினும், கெமர் கலைஞர்கள், அவர்களுக்கு ஒப்பாகக் கூறும் வகையில், அரும்பாடுபட்டு இச்சிற்பங்களைச் செதுக்கியுள்ளனர். அவை இந்திய மரபுக்கு இணங்கக் கருக்கொண்டிருந்தாலும், காம்பூச்சிய பின்னணிக்கு ஏற்ப செதுக்கப்பட்டுள்ளன. எனவே, இந்தியக்கருத்துகளைக் கெமர்கள் புரிந்து கொண்டதை விளக்கும் வகையில் மட்டும், அச்சிற்பங்கள் அமையவில்லை. மேலும், அவை காம்பூச்சியாவின் மிகச் சிறந்த கலையுணர்வின் வெளிப்பாடாகவும் அமைந்துள்ளன. காம்பூச்சிய பருப்பொருள் வடிவ கோலங்களும், ஆன்மிக வடிவ அமைப்புகளும் கலையுணர்வில் இயங்கும் நிலையினைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. அவற்றைக் கூர்ந்து நோக்குகின்றபொழுது, கலையுணர்வு என்பது கெமர்களுக்கு வெறும் ஆர்வத்தைத் தூண்டும் ஆற்றலாக மட்டும் அமையாமல், வாழ்க்கையின் சாரமாகவே அவர்களுடைய வாழ்வின் மூச்சாகவே விளங்கியமை எளிதில் புலனாகின்றது,[33]

ஆங்கோர்வாட் கோயிலின் அமைப்பு, பண்டைக் காலத்தில் இந்திய மக்கள் இப்பேரண்டத்தைப் பற்றிக் கொண்டிருந்த கொள்கையை அடிப்படையாகக் கொண்டு கட்டப்பட்டதாகும். பேரண்டத்தின் நடுவே, தேவர்கள் வாழும் மேருமலையும், அதைச் சுற்றி சக்கரவாள கிரி இருப்பதாக நம் முன்னோர்கள் கருதினர். அதைப் போன்றே, ஆங்கோர் திட்டமிட்டுக் கட்டப்பட்டுள்ளது. இதனால், மக்கள் சமுதாயத்தின் உள்ளத்தில் அருளுணர்வையும், ஒற்றுமை நயத்தையும் ஊட்டுவித்து, மக்களுக்கு விண்ணுலகிற்கு இடையிலும், சிற்றண்டத்திற்கும் பேரண்டத்திற்கும் இடையிலும், அரசருக்கும் தெய்வங்களுக்கும் இடையிலும் ஒருவகை ஆன்மிகத் தொடர்பினை உண்டாக்கக் கருதினர்[34] எனலாம்.

''மாண்புமிகு இக்கலைச் செல்வத்தின் அருமை பெருமைகளை ஒருவர் எடுத்தியம்ப வேண்டுமென்றால், திறமைமிக்க கட்டடக் கலைஞனுடைய நிர்மாண அறிவும், கவிஞன் ஒருவனுடைய கற்பனைத் திறனும், தலைசிறந்த உரைநடை எழுத்

---

33. Percy Brown, Indian Architecture, Vol -I, P. 263
34. B. Harrison, South-East Asia, pp 32-33

தாளரின் விரைந்தோடும் பேனாவும் அவருக்குத்தேவைப்படும்''[35] என்று ரெஜினால்டு லிமே ஆங்கோர் வாட்டின் அழகிற்குப் புகழ்மாலை சூட்டியுள்ளார்.

பண்டேய் ஸ்ரீயின் கோயிலோடு இதனை ஒப்பிடுகின்ற பொழுது, பெண்மையின் மோகனப்புன்முறுவலுடைய அக்கோயிலுக்கு மாறாக, ஆங்கோர் ஆண்மையின் அழகாற்றலும் வீறும் நிறைந்து வியப்பூட்டும் திருக்கோயிலாகத் தோன்றுகின்றது.[36]

சுருங்கச் சொல்லுவதென்றால், பெருமிதம், ஆற்றல். ஆதிக்கம், இயைபு, அழகு ஆகியவற்றின் திரண்டவடிவமாக ஆங்கோர்வாட் கோயில் நின்று நிலவி வருகிறது எனலாம்.

இங்குள்ள கோயில்களுள் முதன்மையானது என்று எல்லோராலும் போற்றப்படுவது ஆங்கோர்வாட் கோயிலாகும். அது திராவிடக் கட்டடக்கலையை அடிப்படையாகக் கொண்டு, புதியதொரு பாணியில் கட்டப்பட்டிருக்கிறது. அக்கோயிலில் வட்டமான மன்றங்கள் உள்ளன. அம்மன்றங்களின் மீது படிப்படியாக ஒன்றைக் காட்டிலும் மற்றொன்று, அதிக உயரம் உடையதாகப் பல்வகை நிலையில் எழுப்பப்பட்ட கோபுரங்களை நாம் காணுகின்றோம். அவற்றின் நடுவிலுள்ள மன்றத்தின் கோபுரம் வானுற உயர்ந்து ஒரு பெருஞ் சிகரத்தோடு சிறப்புடன் பொலிகிறது. ஒவ்வொரு மன்றத்தைச் சுற்றிலும், படிமேடைகள் அமைக்கப்பட்டுள்ளன. படிமேடைகளை அடுத்துப் பெரிய தூண்கள் கோபுரத்தைத் தாங்கி, நிற்கின்றன. இப்படி மேடைகளின் பக்கச் சுவர்களின் மேல், நேர்த்தி வாய்ந்த புடைப்புச் சிற்பங்கள் சுவரில் செதுக்கப்பட்டுள்ளன. பெரும்பாலும் இந்தியக் காப்பியங்களில் காணப்படும் கதை நிகழ்ச்சிகளே, இங்குச் சிற்பங்களாகவும் ஓவியங்களாகவும் காட்சி தருகின்றன.

மாபெரும் அசுர வடிவத்துடனும், தெளிவான திட்டத்துடனும் அமைக்கப்பட்டிருப்பதால் மட்டும், இக்கோயில் கவர்ச்சியுடையதாகத் தோன்றவில்லை. அதனுடைய பேரழகும் பல்சுவை நல்கும் சிற்ப அலங்காரமும் அதற்கொரு தனிச் சிறப்பை அளித்துள்ளன.

இவ்வியத்தகு கோயிலை முழுமையான தோற்றத்தில் கண்டுகளித்த, டாக்டர் ஆனந்த குமாரசுவாமி அவர்கள், பனை

35. Reginald Le May: The Culture Of South East Asia, P. 133

36. M. Macdonald, Op Cit., P.102

மலையில் பல்லவர்களால் எடுப்பிக்கப்பட்ட திருக்கோயிலையே, ஆங்கோர்வாட் கோயில் பெரிதும் ஒத்திருக்கிறது'[37] என்று துணிந்துள்ளமை இங்குக் கருதத்தக்கது.

ஆங்கோரின் அமைப்பையும் அழகையும் கண்ட கலை வல்லார், அதனுடைய பெருமிதத் தோற்றத்திடம் உள்ளத்தைப் பறிகொடுத்துள்ளனர்.

''ஆங்கோர் கோயில் மனித உள்ளத்தின் கற்பனை அடைந்துள்ள விரிவையும், உன்னதத்தையும் காட்டுகிறது. அது தோன்றிய நாள் முதல் இன்றுவரை, பல்லாயிரக்கணக்கான பல திறப்பட்ட மக்களின் கண்களையும் கருத்தையும் கவர்ந்து வருவதே அதன் கலையழகிற்குச் சிறப்புமிகு சான்றாகும்''[38]

## ஆங்கோர் சிற்பங்கள்

ஆங்கோர் நகரிலுள்ள கோயில்கள், தென்னிந்தியாவிற்கு அடுத்த நிலையில், ஆசியாவின் கோயில் கட்டடக் கலைச் செல்வத்தின் சிறப்பிடமாகத் திகழுகிறது. ஆங்கோரின் அற்புதங்களுள், பல முகங்கள் கொண்ட கோபுரங்களும் அன்றாட வாழ்வைப் பற்றிய ஆயிரக்கணக்கான சிற்பங்களுடைய பயோன் கோயிலும் ஆகும். இவை கெமர் கட்டடக் கலை, சிற்பக் கலை ஆகியவற்றின் உச்ச நிலையைக் காட்டுகின்றன.

ஆங்கோர் நகர அரசு, எழிற் கலைக்கும், சின்னங்களுக்கும் புகழ் பெற்றது. இந்தவுயர் கலை வளர்ச்சிக்கு இரு காரணங்கள் உண்டு என்பர். அவையாவன: 1. அங்கு மனிதன் தன் சூழ் நிலைகளுக்கு ஏற்ப வாழ்வை, வளமாக மாற்றிக் கொண்டான். 2. பன்னிரண்டாம் நூற்றாண்டில் கெமர் சமூகம் நெற்பயிர் விளைச்சலுக் கேற்ற வகையில், இயற்கைச் சூழ்நிலையை மாற்றி, செயற்கைச் சூழலை அமைத்துக் கொண்டமை யாகும். தமிழ் நாட்டின் இயற்கை அமைப்பும், மக்களால் மாற்றி அமைத்துக் கொள்ளப்பட்ட செயற்கைச் சூழலும் வேளாண்மைப் பொருளாதாரத்திற்கு வித்திட்டன. இதைப் போன்ற ஒரு நிலை பழங்கால காம்போஜத்தில் நிலவியமை கருதத் தக்கது.

---

37. Ananda K. Coomaraswamy, History of Indian And Indonesian Art, P.184
38. B. R. Chatterji, 'Indian, Cultural Heritage In Cambodia' in India's Contributions to World Thought And Culture, P.498.

### பாம்புகள் பாலம்

ஆங்கோர் வாட்டிற்குச் செல்லும் சுழல் பாதையின் இறுதிப் பகுதிக் கட்டடத்தின் மூன்றாவது தளத்தில் முடிகிறது. இக் காட்சி சிறப்புற அமைந்துள்ளது. 350 மீ. நீளமுள்ள உயர்ந்த பாலத்தின் இருமடங்கிலும் பாம்பு வடிவிலுள்ள நீர்த் தெய்வங் வங்களான நாகர்கள் காணப்படுகின்றனர்.

அச்சிற்பத்திற்குப் பின்னணியில்,மூன்று வாயில் மாடம் இருக் கிறது. சிலுவை வடிவமுள்ள இதன் மேற் புரத்தில் உயர்ந்த கோபுரங்கள் உள்ளன. இவற்றின் ஒருபகுதி இடிந்து காணப்படு கிறது. மற்ற இரு கோபுரங்களையும் இணைப்பதற்காக, மாடம் இருபுறமும் அகன்றுள்ளது இவை யானைகளும், வண்டிகளும், செல்வதற்காகக் கட்டப்பட்டன என்பர்.

இந்தப் பகுதியில் உள்ள பாம்புச் சிற்பங்கள் காண்பவர் கருத்தைக் கவருவதோடு, அச்சத்தை ஊட்டுவனவாகவும் உள்ளன.

### புன்னகை புரியும் யோகியர் சிலைகள்

ஆங்கோர் சிலைகளில் காணப்படும் மலர்ந்த புன்னகையின் எழில், பிற கீழை நாடுகளின் கலை வடிவங்களில் அருகியே காணப்படுகிறது. இப்புன்னகையை கி. மு. பதினான்காம் நூற்றாண்டில், எகிப்தை ஆண்ட மன்னனும், சமய சீர்திருத்த வாதியுமாகிய நான்காம் ஆமெனேஃபிசின் அல்லது அக்காட் டனின் உதடுகளில் நெளியும் குறு நகையுடன் ஒப்பிட்டுப் பார்த் தால், கெமர் கலையில் முகிழ்ந்த இப்புன்னகை, ஆழ்ந்த அன்பை யும் இனிய அமைதியையும் காட்டுவதைக் காணலாம்.

பயோனில் 'முகங்கள் உள்ள கோபுரங்களின்' பரந்த முகங் களில் இப்புன்னகை மிளிர்கின்றது. இது அனைத்துலகை அணைத்து நிற்கும் புத்தரின், அன்பு தோய்ந்த சிந்தனையைக் குறிக்கின்றது.

### அன்றாட வாழ்க்கைக் காட்சிகள்

பன்னிரண்டாம் நூற்றாண்டில் கெமர் சிற்பி, தான் செதுக் கிய சிற்பங்களில் மக்களுடைய குறைபாடுகளையும், தனிப் பண்புகளையும், இயல்பாகவும் சில வேலைகளில், நையாண்டித் திறனோடும் செதுக்கியுள்ளான்.

அந்தச் சிற்பத் தொகுதியில் வணிகர்கள், கைவினைஞர்கள், கல்தச்சர், சிற்பி, வறுத்தமீன் விற்போர், ஆப்பம், சோறு விற்

போர், மதுவகை பரிமாறுவோர், சமையல்காரர் முதலியோர் களை நாம் எளிதில் காண இயலும்.

வேறு சிற்பங்களில், பெருங் குடிமக்கள், படைவீரர், சாப் பிடும் நிலையில் தொழிலாளிகள் முதலியோருடைய வாழ்க்கைக் காட்சிகளையும் சிற்பி, சிறப்பாகச் செதுக்கியுள்ளான்.

இயற்கைக் காட்சிகள், கால் நடை, குறும்பு செய்யும் சிறுவர் முதலிய சிற்பங்கள் உயிர்த் துடிப்பு உடையன.

## ஆங்கோர்தோம்

ஆங்கோர் கட்டடக் கலைப் பண்புகளான பட்டைக் கோபுரமும் (Pyramids), படிமேடைகளும் கொண்டு சிறப்புற்று விளங்குவது ஆங்கோர்தோமில் உள்ள பயோன் (Bayon) என்னும் கோயிலாகும். ஏழாம் ஜெயவர்மன், ஆங்கோர் வாட்டி லிருந்து 1610 கி. மீ. தொலைவுக்கு அப்பால் புதிதாக ஒரு தலை நகரை நிறுவினான். அதற்கு 'ஆங்கோர் தோம்' என்பது பெயராகும். அது காம்பூச்சியாவின் மற்றொரு கலையரங்க மாகும். அந்நகரம் செல்வச் செழிப்பும் ஆடம்பர ஆரவாரமும் மிக்க பகட்டு வாழ்க்கை உடையதாக இருந்தது. அது சீனர் களுடைய உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்ததாகத் தெரிகிறது அந்நகரைச் சுற்றிலும் வண்ணப் பளிங்குக் (Linomite) கற்களால் கட்டப்பட்ட மாபெரும் மதிற்சுவர் ஒன்று இருந்தது. அதை யடுத்து 100 மீட்டர் அகலமுடைய அகழி அமைக்கப் பெற்றிருந் தது. கீழ்த் திசையில் இரண்டு வாயில்களும், மற்றப் பக்கங்களில் ஒரேவொரு வாயிலுமாக ஐந்து வாயில்கள் இருந்தன. அந்த வாயில்களின் வழியே 29 மீட்டர் நீளம் உடைய நெடுஞ்சாலை கள், நகரத்தினை நோக்கிச் சென்றன. வாயில்களுக்கு வெளிப் புறத்தில், அகழியின்மீது குறுக்குப்பாலங்கள் நான்கு அமைக்கப் பட்டிருந்தன. அவ்வழியின் மொத்த நீளம் 13.675 கி மீ. என்பர். பாலத்தின் மீது அமைக்கப்பட்ட கைப்பிடி சுவர்களின் மீது, பல அழகிய சிற்ப வடிவங்கள் இருந்தன. அவை யாவும் இன்று அழிந்துவிட்டன.

வாயிலின்மீது 9 மீட்டர் உயரத்திலும், 4 மீட்டர் அகலத் திலும் அமைக்கப்பட்ட ஒரு பெரிய தோரணவாயில் காணப் படுகிறது. அதில் பலவகைப் புடைப்புச் சிற்பங்கள் பேரழகு வாய்ந்தனவாக விளங்குகின்றன. வாயிலின் முகப்பில், நேர்த்தி யாக அலங்கரிக்கப் பெற்ற யானை ஒன்று நிற்கிறது. அதன் கால்கள் தாமரை இலைகளை மிதித்துக் கொண்டுள்ளன. அதன் துதிக்கை தாமரைப் பூக்களைப் பறிக்கின்ற நிலையில்

உயிர்க்கலையுடன் ஒளிர்கிறது. இத்தகைய அழகிய வேலைப் பாடமைந்த, ஆங்கோர் தோம் நகரத்தின் தோரணவாயில், உலகிலேயே சிறந்த கலைப்பண்பும் கவர்ச்சியும் உடையது என்பர்.

ஆங்கோர் தோமில் சிறப்புற்று விளங்கிய பயோன் கோயில் மூன்று அடுக்குகளைக் கொண்ட பட்டை விமானங்களையுடைய தாகும். அதன்மீது, பெரியதோர் சிகரம் ஒன்று அமைக்கப் பட்டிருக்கிறது. முதல் மாடத்தில், கிழக்கு மேற்காக 151 மீட்டர் நீளமும் வடக்குத் தெற்காக 91 மீட்டர் நீளமும் உடைய படி மேடைகள் உள்ளன. இரண்டாவது மாடத்தின் அமைப்பு சிறிது சிக்கல் வாய்ந்ததாகக் காணப்பெறுகிறது. இதனுள், முசு மண்டபமும், பெரிய படிமேடையின் இடையே குறுக்கும் நெடுக்குமாகப் பல சிறு படிமேடைகளும், அமைக்கப் பெற்றுள் ளன. மூன்றாவது மாடத்தின் நடுவே, ஒரு பெரிய விமானம் காணப்படுகிறது. இதன் அடிப்பரப்பு வட்டமாகவும், மேலே செல்லச் செல்லக் கூருருளை வடிவமாகவும் கட்டப்பட்டுள்ளது. இதன் நான்கு பக்கங்களிலும் மாடங்கள் பொருத்தப்பட்டுள்ளன. இவ்விமானத்தின் முகட்டினை, மகுடம் அணிந்த தலைகள் நான்கு அணி செய்கின்றன. இத்தலைகள்,சிவபெருமானுடையது என்று ஒரு சாராரும், பிரமதேவனுடையது என்று மற்றொரு சாராரும் கூறுகின்றனர். நிலத்திலிருந்து இவ்விமானத்தின் முகடு 45 மீட்டர் உயரம் உள்ளமை குறிப்பிடத்தக்கது. இதனுள் மாடங்கள், கைப்பிடி மேடைகள், அறைகள், தாழ்வாரங்கள், முற்றங்கள் முதலியன கருத்தைக் கவரும் அழகிய சிற்பங்களோடு காட்சி தருகின்றன.

### சிற்பக்கலை

இங்குள்ள புடைப்புச் சிற்பங்களில் காணப்படும் ஆடல் மகளிரின் தோற்றமும், பாவனையும் பரத நாட்டியக் கலை யினையே நினைவுபடுத்துகின்றன. சிற்பங்கள் யாவும் நேர்த்தி மிகு எழிலுடன் விளங்குகின்றன. இவை காம்போஜத்தின் ஒப்பனைக் கலை அடைந்திருந்த வியத்தகு முன்னேற்றத்தைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. இத்தகைய கவின்மிகு வேலைப் பாடுடைய கோயில்களைக் கட்டிய கலைஞர்களை 'அரக்கர் களைப் போன்று கற்பனை செய்தனர்; அணிகலன்களைச் செய்யும் பொற்கொல்லர்களைப் போன்று இவற்றை நுட்பமாக இழைத்து முடித்தனர்' என்று உலகம் போற்றுகிறது.

காம்போஜத்தின் சிற்பங்கள், உருவச் சிலைகளாக இருந்தா லும், புடைப்புச் சிற்பங்களாக இருந்தாலும் அவை நேர்த்தியும்

நயமும் உடையனவாக உள்ளன. இந்தியச் சிற்பக்கலைக்கும் தொடக்க கால காம்பூச்சிய சிற்பக்கலைக்கும் நெருக்கமான தொடர்புகள் இருந்துவந்தன. நாளடைவில் புதிய பண்புகள் காம்போஜத்தின் சிற்பக்கலையிலும் புகுந்தன. அதன் விளை வாகக் 'காம்போஜ சிற்பக்கலை' என்று சொல்லத்தக்க வகையில், தனிச்சிறப்பியல்புகளுடன் சிற்பக்கலை வளர்ந்து சிறப்புற்றதை நாம் காணுகின்றோம். தெய்வத் திருமேனிகளின் அரைகுறையாக மூடிய கண்களும், புன் முறுவல் பூக்கும் முகத் தோற்றமும் காம்பூச்சிய சிற்பங்களுக்கேயுரிய தனிச்சிறப்பியல்பு களாகும். நிர்வாணமாகிய பேரின்ப நிலையில் அனுபவத்தை உணர்த்தும் புன்முறுவல் என்று, இதைக் கலைநூல் வல்லார் பாராட்டுகின்றனர். கெமர்களுடைய கலை, பௌத்த சமயக் கலையுலகிற்கு அளித்த சிறப்புமிக்க கலைப்பண்பாக இப் பேரின்பப் புன்முறுவல் நிலையினை அறிஞர்கள் போற்றுகின்ற னர். இப்புன்முறுவல் இந்து சமயத் தெய்வங்களின் முகங்களில் தவழ்வதும் குறிப்பிடத்தக்கது. இச்சிற்ப வடிவங்கள், கெமர் களின் உடற்கூற்று அமைப்பினை உடையனவாக இருப்பினும் அவற்றின் பக்கத் தோற்றம் இந்திய—ஆரியப் பண்புகள் நிறைந் தனவாகவே காணப்பெறுகின்றன.

## பயோனின் புடைப்புச் சிற்பங்கள்

கோயிலின் உள்சுவர்களில் புடைப்பு சிற்பங்கள் சமய, அரசவைக் காட்சிகளைச் சித்திரிக்கின்றன. வெளிச் சுவர்களில் ஆங்கோரின் கடந்த கால வரலாற்று நிகழ்ச்சிகளையும், அன்றாட வாழ்க்கையையும் காட்டுகின்றன.

இவற்றில், சிற்பிகள் தம் வருணிக்கும் திறத்தை முழுமையாக வெளிப்படுத்தி யுள்ளனர். அவர்கள் செதுக்கிய சிற்பங்கள் பல. அவற்றுள் புத்தாண்டு கேளிக்கை, நெல் அறுவடை நாள் விழாக் கொண்டாட்டங்கள், ஜால வித்தைக்காரன் படுத்துக்கொண்டு காலால் சக்கரத்தை உருட்டுகிறக் காட்சி, ஒரு கழைக் கூத்தாடி கயிற்றில் நடத்தலும், அதைக் கண்டு மக்கள் வியப்புறும் காட்சி, வேடர்கள் வில், அம்புகளாலும் ஊதுகணைகளாலும் வேட்டையாடும் காட்சி கவினுறச் செதுக்கப்பட்டுள்ளன.

## பயோனின் சமயச் சிற்பங்கள்

இச்சிற்பங்கள் இராமாயணம், மகாபாரதம், அரிவமிசம் முதலியவற்றில் காணப்படும் கதை நிகழ்ச்சிகளை அடிப்படை யாகக் கொண்டு, செதுக்கப் பெற்றுள்ளன. இராமன் மாய மானை விரட்டிக் கொண்டு போதல், வாலி சுக்ரீவன் போர்,

சீதை தீயினை வளர்த்து, அதனுள் இறங்குதல், கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தல், சிவபெருமான் மன்மதனை எரித்தல், பாற்கடல் கடைதல் முதலிய சிற்பங்கள் குறிப்பிடத்தக்கன. இவற்றுள் இறுதியாகக் குறிப்பிடப்பட்ட 'பாற்கடலைக் கடைதல்' மிகவும் நேர்த்தியான காட்சி என்பர். எண்பத்தெட்டு தேவர்கள் திருமுடிகளோடு ஒரு பக்கம் பாம்பைப் பிடித்துக்கொண்டு நிற்கின்றனர். மற்றொரு பக்கத்தில், 92 அசுரர்கள் தலைப்பாகையுடன் காட்சி தருகின்றனர். இதற்கு இடையில்,வேறொரு பக்கத்தில் திருமாலை முன்னேறிச் செல்லவொட்டாமல் தானவர் தலைவர்களான முரன், நிசுந்தன், ஹயக்கிரீவன், பஞ்சசனம் ஆகியோர் தடுத்து நிறுத்திப் போர்க்களத்தில் மடிந்த காட்சி, உயிர்த்துடிப்புடன் சித்திரிக்கப்பட்டுள்ளது.

அநிருத்திரனைச் சிறைபிட்ட வாணாசுரன், கண்ணனை முன்னேறித் தன் நகருக்குள் நுழைய வொட்டாமல் தடுக்கும் காட்சியும், கண்ணன் வாணாசுரனைத் தோற்கடித்து வாகைசூடுதலும் பெருமித உணர்வுடனும் இயற்கையாகத் தோன்றுமாறும் அழகுறச் செதுக்கப்பட்டுள்ளன.

இப்புடைப்புச் சிற்பங்கள் காம்போஜத்தின் கோயில்களை அணி செய்கின்றன. இவை காம்போஜத்தின் சிற்பக் கலையில், தமக்கென ஓரிடத்தைப் பெற்று விளங்குகின்றன. தொடக்க காலத்திய புடைப்புச் சிற்பங்கள் இந்தியாவிலும் ஜாவாவிலும் உள்ளதைப் போன்று, பெரிதும் பிதுங்கிக் கொண்டிருந்தன. காலப் போக்கில், அவை புடைப்புத் தன்மை குறைந்த அளவான முறையில் அழகுறச் செதுக்கப்பட்டன. பின்னர் அவை புடைப்புச் சிற்பங்களைப் போன்ற புடைப்புத் தன்மை சிறிதும் இல்லாமல் செதுக்கப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். அந்நிலையில் அவை கற்களில் செய்யப்பட்ட ஓவியத் திரைகளைப் போன்று, கண்கவர் வனப்புடன் மிளிர்கின்றன. இந்தக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட புடைப்புச் சிற்பங்களில், சமநிலைப் பண்பும்,இயைபும் இலயமும் இணைந்தும் இழைந்தும் காணப்பெறுகின்றன.

சிற்பங்கள், புராண இதிகாச கதை நிகழ்ச்சிகளை மட்டும் அல்லாமல், மனித வாழ்க்கையின் பல்வகைத் தோற்றங்களையும் விலங்குகளுடைய வாழ்க்கை நிலைகளையும் பல்வேறு கோணங்களில் சித்திரிக்கின்றன. படி மேடைகளில் செதுக்கப்பட்டுள்ள புடைப்புச் சிற்பங்கள் யாவும், உயிர்த் துடிப்பும், காண்பார் உள்ளத்தை நெகிழ்விக்கும் ஆற்றலும் வாய்ந்தனவாகத் தோன்று

கின்றன, வீரம் பொருந்திய நிகழ்ச்சிகளை மிகச் சிறந்த முறையில், உயிராற்றல் நிறைந்து காணப்படும் வகையில், சிற்பங்களாகச் செதுக்கியுள்ளமை பாராட்டத்தக்கது. இவற்றால், ஆங்கோர்தோம் சிற்பங்கள், ஆன்மிகப்பண்பில் 'போராபுதூர்' சிற்பங்களைவிடச் சிறப்புடையனவாகும். மிகவும் விரிந்த முறையில், திட்ட மிட்டுத் தாராளமாகப் பண்புகெடாது, அழகொழுகச் செதுக்கப்பட்டுள்ள உயிரோவியங்களாக இவை விளங்குகின்றன. இவை யாவும், பேரளவில் இருந்தாலும், பொருத்தமான வகையில் பொலிவுறுகின்றன எனலாம். இக்கோயில், கெமர்களுடைய கட்டடக்கலை வளர்ச்சியின் இறுதிக் காலத்தைச் சேர்ந்த தொல்பொருள் சின்னமாக இருந்த போதிலும், நேர்த்தியும் நுட்பமும் உடையதாய் விளங்குவது இதற்குரிய சிறப்பாகும்.[39]

## பண்டேய் ஸ்ரீ

ஆங்கோர் வாட் நகரப் பரப்பில் சிறப்புற்று விளங்கும் மற்றொரு கலைக் கருவூலம் 'பண்டேய் ஸ்ரீ' என்பதாகும். இதற்கு 'மகளிர் சேம அரண்' என்பது பொருள். இங்கு எழுப்பப்பட்டுள்ள கோயில்கள் பெண்மையின் மென்மையும் அழகும் கவர்ச்சியும் உடையனவாக உள்ளன. சிவப்பு நிற மணற்கற்களால் இவை கட்டப் பட்டுள்ளன. இக் கோயில்கள் 14-ம் நூற்றாண்டைச் சேர்ந்தவனாக முன்பு கருதப்பட்டது. ஆனால், இப்பொழுது, கி. பி. பத்தாம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த ஐந்தாம் ஜெயவர்மன் காலத்தியதாக நிறுவப்பட்டுள்ளது. இக்கலைக் கோயிலைக் காணுகின்றவர்கள், ஆங்கோர் வாட் கோயில்கள் அமைக்கப் படுவதற்கு முன்பே, இவை எழுப்பப்பட்டிருக்க வேண்டும் என்பதை எளிதில் உணரலாம். கலைப்பாணியும் கட்டட வடிவழகும் பெரிதும் தமிழகச் சாயல் உடையனவாகத் தோன்றுகின்றன. இக் கோயிலின் உள்ளே நுழைகின்றவர்கள் தமிழ் நாட்டு கோயில் ஒன்றின் உள்ளே நுழைந்ததைப் போன்ற அகத்தெழுச்சியை எளிதில் பெறுவர்.

ஆங்கோர் வாட் புடைப்புச் சிற்பங்களில் காணப் பெறும் தேவ அரம்பையரின் தடித்த உதடு உடைய முகத் தோற்றங்கள், பெரிதும் கெமருடைய உடற்கூற்று அமைப்பு முறையைப் புலப்படுத்துகின்றன. ஆனால், பண்டேய் ஸ்ரீயில் காணப்படும் ஆடல் அரம்பையரின் முகத் தோற்றமும், வடிவழகும் தமிழ் நாட்டு ஆடல் அழகினையே நினைவுப் படுத்துகின்றன.

---

39. Ananda. K. Coomaraswamy Op. Cit; pp 192-194

இக் கோயிலின் உள்ளே நுழை வாயிலின் போதகத்தில் தாமரை மலரில் வீற்றிருக்கும் கஜலட்சுமியின் சிற்பம் அழகுறச் செதுக்கப் பட்டுள்ளது. இது மட்டுமல்லாமல், எல்லா வாயிற் படிகளை ஒட்டியுள்ள கதவுகளிலும் வாசக்கால்களிலும் அழகிய பூக்களையும், தளிர்களையும், இலைகளையும் கொண்ட கொடிகள் நேர்த்தியாக அமைக்கப்பட்டுள்ளன. மற்றொரு வாயிலின் போதகத்தில் இரணியனை நரசிம்மன் கொலை செய்யும் கொடிய காட்சி, கவர்ச்சி மிக்க சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது.

இக் கோயில் அமைப்பின் உட்புற முக்கோணப் பகுதியில், மூன்று கருவறைகள் உள்ளன. இம்மூன்றனுள் முதற் கோயிலில் திருமாலும், இரண்டாவது கோயிலில் அவரது மனைவியான இலக்குமியும் மூன்றாவது கோயிலில் சிவபெருமானும் வழிபடு தெய்வங்களாக அமைக்கப் பெற்றிருந்தனர் என்பது தெரிய வருகிறது. இக் கோயில்களின் சுவர்கள், அனைத்திலும் ஏரும் எழிலும் வாய்ந்த கல்லோவியங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இக்கோயில் விமானங்கள் நேர்த்திமிகு வளைவுகளைக் கொண்டனவாக உள்ளன. அவையாவும் பேரளவிற்குச் சிற்பங்களால் அணிசெய்யப் பட்டுள்ளன. பக்கச்சுவர்களில் இராமகாதையின் பல்வேறு காட்சிகள், வனப்புடன் விளக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் அனுமான், வாலியின் சிற்பங்கள் காட்சி தருகின்றன.

''நெடுந்தொலைவிற்கு அப்பால் உள்ள காம்பூச்சியாவின் புதர் அடர்ந்த காடுகளின் இடையே, இந்தியப் பண்பாட்டின் ஒப்பற்ற கலைச் செல்வங்கள் இருக்கக் கூடும் என்பதை நாம் எதிர்பார்க்க இயலாது''[40] எனக் கலைஞர் திருமதி கோமளா வரதன் குறிப்பிட்டுள்ளமை ஆழ்ந்து சிந்திக்கத் தக்கதாகும்.

பண்டேய் ஸ்ரீயிலிருந்து சில கி. மீ. அப்பால், ஐந்து கோபுரங்களைக் கொண்ட பாழடைந்த ஒரு சிவன் கோயில் உள்ளது. அக் கோயிலின் வாயிலில் மூலத்தானத்தை நோக்கிப் படுத்திருக்கும் நந்தி ஒன்றைக் காணலாம். அதற்கு நேராக உள்ள கருவறையில், பெரிய சிவலிங்கம் ஒன்று அழகுறக் காட்சி தருகிறது.

மாபெரும் சக்தி வாய்ந்த கெமர்களின் ஆதரவில் வளர்ச்சியுற்ற சிற்பக்கலை முறை, ஆங்கோர் தோமில் உள்ள பயோன் கோயில் அமைப்போடு ஒரு முடிவிற்கு வந்து விட்டது எனலாம். ஜெயவர்மனின் ஆட்சிக்காலத்தில் கட்டடக் கலைப்பாணியில்

40. Komala varadhan, 'Amidst the ruins of Angkor wat. in The Hindu, Weekly Magazine 13. 07. 1969, P. 1

மெய்யுணர்வு வயமான அசுர வடிவங்களை அமைக்கும் கலைப் பண்பு புகுத்தப்பட்டது.

காம்போஜத்தில் தலைகாட்டத் தொடங்கிய புலன் நுகர்ச்சிப் பண்பின் பிரதிபலிப்பாக இது கருதப்பெறுகிறது. இவ்வாறு ஓரினத்தின் அல்லது நாட்டின் வீழ்ச்சிக்கு முன்னர் தோன்றும் பகட்டு ஆர்வத்தை, அவை உணர்த்துகின்றன. கி.பி. 1431 ஆம் ஆண்டில் நடைபெற்ற தாய்களின் தாக்குதல், ஆங்கோர் வாட்டினை அழித்ததோடு அமையாமல், கெமர்களின் நாகரிகத்திற்கே சமாதி கட்டத் தொடங்கியது. அரும் பாடுபட்டு அவர்கள் கட்டிக்காத்து, உருவாக்கிய மாண்புமிக்க நாகரிகம் மறைந்து போயிற்று. மறைந்து போன அந்நாகரிகத்தின் பழம் பொருட் சின்னங்களாக உள்ள கோயில்களும், சிற்பங்களும் இன்றும் மெல்லிய குரலில் கெமர்களின் கீர்த்தியைப் பாட்டிசைத்த வண்ணம் உள்ளன.

கெமர்கள் தமிழ்ப் பண்பாட்டின் அடிப்படையில் மாபெரும் பேரரசினை நிறுவியும், கோயில்களைக் கட்டியும், தம் புகழை நிலைநாட்டிச் சென்றுள்ளனர். அவர்கள் கலை, சமயம், அரசவைச் சடங்குகள் முதலிய துறைகளில் முற்றிலும் இந்தியாவைப் பின்பற்ற முயன்றனர். அம்முயற்சியில் அவர்கள் பேரளவிற்கு வெற்றியும் பெற்றனர் என்பதை இக்கலைக் கருவூலங்கள் நமக்கு அறிவிக்கின்றன.

பண்டைத் தமிழரின் பழக்க வழக்கங்கள் பலவற்றை இன்றைய கெமர்களின் வாழ்க்கையில் நாம் காணலாம்.

சிறப்பாக இறந்தவர் வீடுகளில் பத்து நாட்களுக்கு மேல், பலருடன் கலந்து பழகாமல், ஒதுங்கி வாழும் நிலை அல்லது பலருடன் கலந்தால் தீட்டுப்பட்டு விடும் எனநம்புதலும், இதைப் போன்றே குழந்தை பிறந்த ஏழு நாட்களையும் தீண்டப்படாத நாட்களாகக் கருதுதலும் இன்றுவரை அங்கு நடைமுறையில் இருந்து வருகின்றன.

இறந்தோரை அடக்கம் செய்யும் முறை, பதினாறாம் நாள் 'கல் எடுத்தல்' சடங்கு, தலை மயிரை மழித்துக் கொள்ளுதல் போன்ற சடங்குகளும் இன்றும் வழக்கில் உள்ளன.

திருமணம் செய்து கொள்ளும் உறவுமுறை, திருமணச்சடங்கு மணமகன், பரிசம் அளித்தல் போன்றவையும் தமிழருடைய பழக்க வழக்கங்களையே நினைவு படுத்துகின்றன.

உணவு முறையில், கெமர்களுடைய அப்ப வகைகளும், கொழுக்கட்டை போன்ற கைப்பிடிப் பண்டங்களும் நம்நாட்டு உணவுப் பண்டங்களாகவே உள்ளன.

கெமர்களின் கலைகளுள் அவர்களுடைய நாட்டியக்கலை, தமிழகப் பரத நாட்டியத்தைப் பெரிதும் தழுவியதாகவே தோன்றுகிறது. 'கம்போடிய சாஸ்திரிய நாட்டியம்' பெரிதும் இந்துப்புராண, இதிகாசக்கதைகளையே தழுவியனவாக உள்ளன.

இவ்வாறு பல்வேறு நிலைகளில், ஆன்மிக அடையாளத்தையும் அதன் சமய, மந்திர ஆற்றல்களையும், ஏரிகள். நீர்ப் பாசனத் திட்டங்கள் ஆகியவற்றின் நடைமுறைப் பயனுடன் இணைத்துச் செயல்பட்டமை, கெமர்களின் அறிவாற்றல் திறனிற்குப் பொன்றாப் புகழைத் தேடித்தந்துள்ளது எனலாம்

# 4. 1.
# நாடும் மக்களும்

## நில அமைப்பு

தென்கிழக்கு ஆசியாவில், மலேயா தீபகற்பத்தின் மேற்குப் பகுதியில் இருக்கும் சுதந்திர நாடு தாய்லாந்து. 1939-ஆம் ஆண்டு வரை. சயாம் (Siam) என்ற பெயராலேயே, அது குறிப்பிடப்பட்டது. இன்றும் அப்பெயர் அருகிய வழக்காக இருந்து வருகிறது. தாய்லாந்து சற்றேறக் குறைய இரண்டு இலட்சம் சதுர கி மீ. பரப்பு கொண்டது. இதில் 95 விழுக்காடு தென் கிழக்கு ஆசியாவின் பெருநிலப் பகுதியைச் சாரும். எஞ்சிய பகுதி, தெற்கே மலேயா தீபகற்பத்தினுள் நீண்டு செல்கிறது. மேற்கே, பர்மாவுடனும், கிழக்கே லாவோஸ், காம்பூச்சியா நாடுகளுடனும் தாய்லாந்து எல்லைத் தொடர்பு கொண்டிருக்கிறது. தென்புறத்தில் சயாம் வளைகுடா என்னும் நீர்ப்பரப்பு எல்லையாக அமைந்துள்ளது. இவ்வளைகுடா மூலம்தான் சயாம் இந்தியப் பெருங்கடலுடனும் பசிபிக் பெருங்கடலுடனும் தொடர்பு கொண்டுள்ளது. தாய்லாந்தின் வடக்கே, சீன நாட்டின் யூணான் மாநிலம் அமைந்திருக்கிறது.

தாய்லாந்தினை நான்கு பகுதிகளாகப் பிரிக்கலாம். இவை, முறையே வடக்குத் தாய்லாந்து, நடுநிலப்பரப்பு, வடகிழக்குப் பகுதி, தெற்கு மாநிலம் என்பன. வடக்குத் தாய்லாந்தில் மலைகள் அதிகம். அவை வடக்குத் தெற்காகவே அமைந்துள்ளன. மேற்கே இம்மலைத் தொடர்கள் 3,034 மீட்டர் முதல் 24,272 மீட்டர் வரை உயரம் உடையனவாகத் தாய்லாந்திற்கும், பர்மாவிற்கும் எல்லையாகக் காணப்படுகின்றன. தெற்கே செல்லச்

செல்ல மலைத்தொடர்களின் உயரம் படிப்படியாகக் குறைந்து கொண்டே சென்று, தென் கோடியில் மலேயாவிற்கு அருகில், கடல் மட்டத்திற்குச் சமமாக நிலத்தின் அமைப்பு சரிந்து விடுகிறது.

## மலைகளும் ஆறுகளும்

வடக்குத் தாய்லாந்தில், நான்கு முக்கிய மலைத்தொடர்கள் உள்ளன. அவை டனாங்டாக்கேய் குண்டான், பிபான்நான், லூ வாங் பிராங் என்பவை. அவை 1120மீட்டர் முதல் 1517மீட்டர் உயரம் உடையன. அவற்றின் நடுவே அமைந்த பள்ளத்தாக்கு களில், நான்கு ஆறுகள் ஓடுகின்றன. அவை மேபிங்கு, மேலாங்கு, மேயோன், மேநான் என்பனவாகும். 'தாய்' மொழியில் 'மே' என்னும் சொல்லிற்கு 'அன்னை' (மா) என்பது பொருளாகும். ஒவ்வோர் ஆற்றையும் உணவூட்டும் அன்னையாகத் தாய்கள் கருதுகின்றனர். இதனால், 'மே' என்னும் அடைமொழியோடு, ஆற்றின் பெயர்களை, அவர்கள் சேர்த்து வழங்கி வருகின்றனர்.

வடக்குத் தாய்லாந்தில் உள்ள மலைகளில், அடர்ந்த காடு கள் காணப்படுகின்றன. மூங்கிலும். தேக்கு மரங்களுமே அக் காடுகளில் முக்கியமாக வளரும் மரங்களாகும். யானைகளும் இங்குப் பேர் எண்ணிக்கையில் வாழ்கின்றன.

பக்நாம்போ என்னும் இடத்தில், வடக்குத் தாய்லாந்தின் ஆறுகள் நான்கு ஒன்றாகக் கலந்து, சௌபியா என்னும் பேராறு உண்டாகிறது. அதனை "மேநாம் சௌபியா" எனப் போற்றுவர். இதற்கு "தீர்த்தங்களில் உயர்ந்ததும் சிறந்தது மான அன்னை" என்பது பொருள். பக்நாம்போவிலிருந்து, நேர் தெற்கேயுள்ள நாட்டின் தலைநகராகிய பேங்காக்கை (Bangok) நோக்கி, சௌபியா ஆறு வளைந்து, வளைந்து ஓடி, சயாம் வளைகுடாவில் கலக்கிறது. இந்த ஆறு ஊடுருவிப் பாயும் நிலப் பரப்பே, நடுநிலப்பரப்பு அல்லது பாங்காங் சமவெளி எனச் சுட்டப்படுகிறது. இந்நடுநிலப்பரப்பு, சற்றேறக்குறைய, 350 கி.மீ. நீளமும், 180 கி.மீ. அகலமும் கொண்டது. நீர் வளமும், நிலவளமும் வாய்ந்த செழிப்புமிக்க நிலப்பரப்பாக, இது விளங்குகிறது.

## தாய்லாந்தின் நெற்களஞ்சியம்

சௌபியா ஆறு, அதிக அகலமும் ஆழமும் உடையது. பேங்காக்கிலிருந்து, பக்நாம்போ வரையில் படகுகளும், சிறிய நீராவிக் கப்பல்களும் இதில் எளிதில் செல்ல இயலுகிறது. இதனால், நடுநிலப்பரப்பில் வாழும் மக்களுக்கு இந்த ஆறு, ஒரு

நெடுஞ்சாலையைப்போல், போக்குவரத்திற்குரிய வசதிகளை அளித்து வருகிறது.

தாய்லாந்து மக்களின் வாழ்க்கையில் நடுநிலப் பரப்பும் சௌபியா ஆறும் மிக முக்கிய இடத்தைப் பெறுகின்றன. இப் பகுதி வேளாண்மைத் தொழிலில் சிறப்புற்று விளங்குகிறது. மக்கள் கூட்டம் மிகுதியாக உடையது; 'தாய்லாந்தின் நெற் களஞ்சியம்' என்று போற்றத்தக்க சீரும், சிறப்பும் கொண்டது இது. இச்சமவெளி 322கி.மீ. நீளம் கொண்ட பெரியதொரு கழி முகத் திடலாக உள்ளது. சௌபியா ஆறு மட்டும் அல்லாமல் மேநாம் பகாங்க், மேநாம் நகார்ன்நயோக் என்னும் ஆறுகளும் அவற்றின் கிளை நதிகளும் இக்கழிமுகத்தை உருவாக்கி யுள்ளன.

இந்நடுநிலப்பரப்பு தொடங்கும் பக்நாம்போ என்னும் இடத்தில், சௌபியாவின் இருகரைகளும், கடல் மட்டத்திற்கு மேல், சற்றேறக்குறைய 13.5 மீட்டர் உயரத்தில் இருக்கின்றன. 200 கி.மீ. தெற்கேயுள்ள அயூத்தியாவிற்கு அருகே, இவ்வுயரம் 4.57 மீட்டர்களே உள்ளது. கடற்கரையிலுள்ள பேங்காக் நகர வீதிகள் அரை மீட்டர் முதல் ஒரு மீட்டர் அகலம் உடையன வாக உள்ளன. சமவெளியில் பாயும் ஆறுகளின் வண்டல் மிகுதியினால், கடற்கரையே சிறிது சிறிதாகத் தொலைவாகப் போய்க்கொண்டிருக்கிறது.

## மேட்டு நிலம்

நடுநிலப் பரப்பிற்கு வடமேற்கேயும், வடக்குத் தாய்லாந் திற்குத் தென்கிழக்கேயும் உள்ளது வடமேற்குப் பகுதி. இது சிறிய மேட்டு நிலமாகும். மேற்கே சற்று உயர்ந்தும், கிழக்கே செல்லச் செல்ல உயரம் குறைந்தும் உள்ளது. இது மேடுபள்ளங் கள் நிறைந்த நிலமாகும். மேற்கிலுள்ள சிறு மலைத்தொடர் களில் இருந்து தோன்றும் சில ஆறுகள் கிழக்கு நோக்கி ஓடி, லாவோஸ், காம்பூச்சியா நாடுகளுக்கும், தாய்லாந்திற்கும் நடுவே எல்லையாக ஓடும் மேகாங்கு என்னும் பெரிய ஆற்றில் கலக்கின்றன. மேடு பள்ளங்கள் நிறைந்த பகுதிகளில் இவை ஓடுவதால், நீர்ப்பாசனத்திற்கோ, போக்குவரத்திற்கோ இவ் வாறுகள் பயன்படுவதில்லை. பொதுவாக, இப்பகுதி வறட்சி மிக்கதாகும்.

தெற்கு மாநிலத்திலிருந்து வடக்குத் தாய்லாந்தில் பரவி யுள்ள டணான்டாங்க் சேய் என்னும் மலைத்தொடர் உள்ளது. இது தெற்கு நோக்கிப் பரவி, பர்மாவிற்கும் தாய்லாந்திற்கும்

எல்லையாக அமைகிறது. இதன் உயரமான பகுதிக்கு 'டென்னா ஸரீம் மலைத்' தொடர் என்பது பெயர். இது நான்கு பிரிவு களாகப் பிரிந்து, தெற்குத் தாய்லாந்தில் கீழ்த்திசையில் செல்லு கிறது. இவற்றுள் மேற்கில் உள்ளதில் ஒரு கணவாய் இருக்கிறது. அதனருகில் குவேநாய், குவேயாய் என்னும் இரு சிறு ஆறுகள் தோன்றுகின்றன. அவை தாய்லாந்தில் புகுந்து, காஞ்சனபுரி என்னும் ஊருக்கு அருகே, ஒன்றாகக் கலந்து, மேக்லாங்கு என்னும் பேராறாய்ப் பெருக்கெடுத்து ஓடுகிறது. இது 400 கி.மீ. வளைந்து வளைந்தோடி, வளைகுடாவின் வடமேற்கே கடலில் கலக்கிறது.

### பசுமை நிறைந்த பள்ளத்தாக்கு

மேகாங்கும் அதன் கிளை ஆறுகளும் ஓடும் பகுதி, ஒரு பள்ளத்தாக்கு; இயற்கையின் வனப்பு நிறைந்த கவர்ச்சிமிகு பகுதி இது. இராசபுரி என்னும் ஊரின் அருகே, இது நிலமட்டத் திலிருந்து சற்றேறக்குறைய 6.7 மீட்டர் பள்ளத்தில் இருக்கிறது. எனினும், மழைக்காலத்தில் பெருக்கெடுத்து ஓடும்பொழுது, இப்பேராறு இருமருங்கிலும் உள்ள ஊர்களை அடித்துச் செல்லுகிறது.

தெற்கு மாநிலத்தில், பல சிற்றாறுகள் ஓடுகின்றன. அவற்றுள் மிக முக்கியமானது 'மேநாம்பெச்புரி' என்பதாகும். இவையெல்லாம் முதலில் வடக்குத் தெற்காக ஓடி மலைகளின் இடைவெளியுள்ள பகுதிகளில் கிழக்குப் பக்கமாகத் திரும்பி, சயாம் வளைகுடாவில் கலக்கின்றன.

### இயற்கை வளம்

தெற்கு மாநில மலைகளில், சுண்ணாம்புக் கற்களுடன் தகரமும், டங்ஸ்டன் எனப்படும் கிடைத்தற்கரிய உலோகமும் கிடைக்கின்றன. இவற்றால், வெளிநாட்டு வாணிகத்தில் தாய் லாந்து சிறப்புற்று விளங்குகிறது.

### சயாம் விளக்கம்

சீனர்கள், தாய்களின் தலைநகரமாகிய சுகோதை (Sukhothai) யைச் 'சியன்' (Sien) என்றும், கெமர்கள் 'சயாம்' (Syam) என்றும் பண்டைக்காலத்தில் சுட்டினர். இவற்றின் அடிப்படையில், 'சயாம்' (Siam) என்னும் பெயர், தோன்றியது என்பது சில உள்நாட்டு அறிஞர்களின் கருத்தாகும். சயாம் (சியாம்—சியாமள) என்னும் சொல்லிற்குக் 'கருமை' என்பது பொருள். கருமை நிறமுடையவர்களாக இருந்த மோன்கள்;

(Mons), கெமர்கள் முதலிய பழங்குடி மக்கள் வாழ்ந்த நிலப் பகுதியைக் 'கறுப்பர் நாடு' என்னும் பொருள்படும்படி, சீனர்கள் 'சியன்' என்று அந்நாட்டைப் பண்டைக்காலத்தில் குறிப்பிட்டனராம். அது திரிந்து, 'சயாம்' என்று வழங்கத் தலைப்பட்டதாக ஐரோப்பிய ஆராய்ச்சியாளர் சிலர் கருதுகின்றனர்.

இந்திய அரசு மரபு ஒன்று, அங்கு ஓர் அரசை நிறுவியதிலிருந்து, அதன் வரலாறு தொடங்குகிறது. சயாமில், முதன் முதலில் சென்று குடியேறிய இந்தியர்கள், அந்நாட்டின் பழங்குடி மக்களைக் 'கறுப்பர்கள்' என்றும், அந்நாட்டினைச் சியாமராத்தன் (சியாமராஷ்டிரா) என்றும் அழைத்ததாக இந்திய வரலாற்றாசிரியர் சிலர் கூறுகின்றனர். 'சியாம்' என்பது 'சியாமளம்' என்னும் சம்ஸ்கிருதச் சொல்லின் திரிபாகும். 'சியாமளம்' என்பதற்கு 'நீலநிறம்' அல்லது 'கறுப்பு நிறம்' என்பது பொருளாகும்.[1] எனவே, சயாம் என்னும் பெயர், மேற்கண்ட பொருளில், ஆதிகாலத்திலேயே, வழங்கத் தலைப்பட்டிருக்கலாம் என்பது இதனால் புலனாகிறது.

வேறொரு சாரார், 'சியாமளம்' என்ற வடசொல்லிற்கும் 'சயாம்' என்னும் பெயருக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பர். கெமர் கல்வெட்டுகளில் காணப்படும் 'சியாம்' என்ற சொல்லும், சீனர்களின் காலவழிச் செய்திக்கோவைகளில் காணப்பெறும் 'சியன்' என்னும் சொல்லும் இங்கு ஆராயத்தக்கன என்பர்.

'சியன்' அல்லது 'சியாம்' என்னும் சொல்லின் பழைய வடிவம் 'ஷான்' என்பதாகும். 'ஷான்' என்ற பழங்குடி இன மக்களுள் ஒரு பகுதியினர், குடியேறி வாழ்ந்த பகுதி, சீனமொழியில் 'சியாம்' என்று வழங்கத் தொடங்கி, அது பிற்காலத்தில் 'சியன்' எனத் திரிந்தது. அதனடியாகச் 'சயாம்' என்று திரிந்திருக்கக் கூடும் என்பர். இவ்விளக்கம் பொருத்தம் உடையதாகத் தோன்றுகிறது.[2]

### தாய்லாந்து: விளக்கம்

சயாமிற்கு இன்று வழங்கிவரும் பெயர் தாய்லாந்து என்பதாகும். தாய்கள் (Thais) எனப்படும் தொல் குடிமக்கள், இந்நாட்டில் வாழ்ந்து வருவதால், 'தாய்களின் நாடு' என்னும் பொருளில், 'தாய்லாந்து' என்னும் பெயர் வழங்கத் தொடங்கியது. 'தாய்' என்னும் சொல்லிற்கு, 'உரிமை' அல்லது

---

1. G. Schlegal, Siamese Studies, P. !.
2. P. N. Bose, The Indian Colony of Siam, Intro. P. vII.

அருளுணர்ச்சி' எனப் பொருள் கூறுவர். தங்கள் உரிமையை நிலைநாட்டி, ஓர் அரசை நிறுவியதால், அப்பழங்குடி மக்கள், தங்களைத் 'தாய்கள்' என்று கூறிக்கொண்டனர், இதனால், அவர்கள் வாழும் நாடு, 'தாய்லாந்து' என்னும் பெயர் பெற்றது என்பர்.

இதனைச் சம்ஸ்கிருத மொழி நூல்கள், 'சியாம தேசம்' என்னும் பெயராலேயே சுட்டி வருகின்றன. தமிழ் மக்கள் இந் நாட்டினை 'சியம்' என்னும் பெயரால் குறிப்பிடுவது வழக்க மாகும்.

## இந்தியக் குடியேற்றம்

தென்கிழக்கு ஆசியாவின் வரலாற்றில், மிகப் பிற்பட்ட காலத்திலேயே, 'சயாம்' தோற்றம் அளிக்கிறது. தாய்லாந்தில் இந்தியர்கள் கி.பி. முதலாம் நூற்றாண்டு அளவிலேயே, குடி யேறினர் என்பதற்குரிய சான்றுகள் சில கிடைத்துள்ளன. இந்தோ-சீனாவைச் சேர்ந்த பகுதிகளில் காணப்படுவதைப் போன்று, இந்தியப் பண்பாடும் நாகரிகமும் இங்கு நன்கு வேரூன்றிச் செழித்தன. இந்நாட்டு மக்களின் பண்பு நலனையும், வாழ்க்கை முறையினையும் முற்றிலும் அவை மாற்றியமைத்தன. இவற்றிற்குச் சான்று பகரும் வகையில், தொல்பொருள் சின்னங் கள் பல கிடைத்துள்ளன.

## தாய்களின் எழுச்சி

இந்நாட்டின் பண்டைய அரசியல் வரலாற்றைப் பற்றி அதிகமாக நாம் ஒன்றும் அறிய இயலவில்லை. சயாமின் வட பகுதி, மோன்களின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. கி. பி. ஏழாம் நூற்றாண்டில் 'துவராபதி' என்ற அரசு, சயாமில் சிறப்புற்று விளங்கியது. பிற்காலத்தில், லாவோசில் (Laos) பல சிற்றரசுகள் தோன்றின. மிகப் பழங்காலம் முதல் சயாமின் தென்பகுதி, காம்பூச்சியாவின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. காம்போஜம், சிறந்த தொரு பேரரசாக விளங்கிய காலத்தில், சயாம் முழுவதும் அதன் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்தது. கி.பி. பதின்மூன்றாம் நூற் றாண்டில், காம்போஜப் பேரரசு வீழ்ச்சியுற்றது. அதற்குப் பிறகுதான், சயாம் தனியுரிமை வாய்ந்த நாடாக மாறியது.

இவ்விடுதலையைச் சயாம், தன் மண்ணில் வாழ்ந்த மக்க ளால் அடையவில்லை. வடக்கே இருந்துவந்த, புதிய இனமான 'தாய்' எனப்படும் மக்கள் கூட்டத்தினராலேயே, இவ்விடுதலை அதற்குக் கிடைத்தது. இவ்வினம், பதினெட்டாம் நூற்றாண்டு வரை, இந்தோ-சீனாவின் வரலாற்றில் சிறப்பிடம் பெற்று விளங்

கியது. காம்போஜம், சம்பா ஆகிய நாடுகளில் சிறப்புற்று விளங்கிய இந்து அரசுகளை இது கவிழ்த்தது.

சீனர்களோடு இனமரபால், நெருங்கிய தொடர்புடைய மங்கோலியப் பழங்குடி மக்களின் ஒரு பிரிவினரே, தாய்களாவர். பண்டைக் காலத்தில் இவர்கள் சீனாவின் தெற்கு, தென் மேற்குப் பகுதிகளில் வாழ்ந்து வந்தனர். கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே, 'தாய்கள்', தங்கள் தாயகத்தில் இருந்து வெளியேறத் தொடங்கினர். சயாம், காம்போஜம், சம்பாவின் வடபகுதி, இந்தோ-சீனாவின் மேட்டு நிலங்களிலிருந்து பர்மாவின் கிழக்குப் பகுதி வரையிலும் உள்ள நிலப்பரப்புகள் ஆகியவற்றில், தாய்கள் கூட்டம், கூட்டமாகச் சென்று, பையப்பையக் குடியேறினர். அக்கூட்டங்களுள் யூணான் (Unnan), தொங்கின் ஆகிய இரு பகுதிகளில் நிலைபெற்று வாழத் தொடங்கிய இரு குழுக்கள், மற்றக் குழுக்களைக் காட்டிலும் மிகுந்த ஆற்றல் வாய்ந்தன வாக விளங்கின.

இவற்றுள் ஒரு குழுவில் இருந்த மக்கள், அன்னாமியர்கள் (Annamites) எனப்பட்டனர். அன்னாமியர்கள், சீன நாகரிகத் தைப் பின்பற்றியதோடு அமையாது, சம்பாவுடன் நெடுங்காலம் போர்புரிந்தும் வந்தனர்.

## 4. 2.

# யூணான்

சீனாவின் தெற்கு மாநிலமாகிய யூணான் பகுதியில் வாழ்ந்த குழுவினர், இந்தியப் பண்பாடு, நாகரிகம் ஆகிய வற்றிற்கு மிகப் பழங் காலத்திலேயே அடிமைகள் ஆயினர். தற் கால யூணானில் இவ்வினத்தினர், தங்கள் அரசினை நிறுவினர். இவர்களுடைய இராச்சியத்தைச் சீனர்கள் 'நாங்-கேயா' (Non-Chao) என்ற பெயரால் குறிப்பிட்டு வந்தனர். இந்தோ-சீன நாட்டு மக்கள், இதனைக் 'காந்தாரா' என்னும் பெயரால் சுட்டினர். இவ்வரசின் ஒரு பகுதி 'விதேக இராச்சியம்' என்றும் அதன் தலைநகரம் 'மிதிலை' என்றும் பெயர் பெற்றிருந்தமை இங்குக் குறிப்பிடத் தக்கது. காந்தாரா நாட்டு மக்களிடையே வழங்கிய எழுத்து வடிவம், தமிழ்நாட்டு கிரந்த எழுத்து வடிவத் தைப் பின்பற்றி அமைக்கப் பெற்றதாகும். இந்தியாவிலிருந்து வந்த அவலோகித ஈசுவரர், இந்நாட்டைப் புத்த சமயத்தைப் பின் பற்றும் நாடாக மாற்றினார் என்னும் கதையொன்று அங்கு வழங்கி வருகிறது.

### காஞ்சியின் துறவிகள்

எட்டாம் நூற்றாண்டின் இறுதியில், இந்நாட்டை ஆண்ட அரசன் சீன நாகரிகத்தில் மூழ்கித் திளைத்தான். இந்தியாவில் காஞ்சியில் இருந்து வந்த சமய ஆச்சாரியர்கள் எழுவர், அவ் வரசனைக் கடிந்து திருத்தியதாகக் கூறப்படுகிறது. ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில், மகத நாட்டைச் சேர்ந்த சந்திர குப்தன் என்ற இந்தியத் துறவி, யூணானுக்கு வந்தான். அவன் மாய வித்தைகள் பல செய்ததன் மூலம், பேரும் புகழும் பெற்று

விளங்கினான். புகழ்மிக்க பிப்பால குகை, போதிமரம், புனித மான கிரிதரகூட மலை, புத்த சமயத்தோடு நெருங்கிய தொடர் புடைய வேறு பல இடங்கள் ஆகிய அனைத்தும் யூனானில் அமைத்துக் கொள்ளப்பட்டன.

பத்தாம் நூற்றாண்டில், சீன யாத்திரிகர் ஒருவர், யூனானில் தாலி (Tali) ஏரிக்கரை அருகில், சாக்கியமுனி என்பவர் அறி வொளியைப் பெற்றதாக அவ்வட்டாரத்தில் வழங்கிய கதை ஒன்றைக் குறிப்பிடுகின்றார். சீன, சம்ஸ்கிருத மொழி எழுத்து களில் பொறிக்கப்பெற்ற வாசகங்களைக் கொண்ட இரண்டு பெரிய வெண்கல மணிகள், யூனானில் கிடைத்துள்ளன. அவை பதினொன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தனவாக நம்பப்படு கின்றன. இச்சான்றுகளால், தாய்லாந்தில் அக்காலத்தில் புத்த சமயம் செல்வாக்கு பெற்றிருந்தமை புலனாகின்றது.

### மகாராசன் பட்டம்

நாங்-கேயாவை ஆண்ட மன்னர்கள், 'மகாராசன்' என்ற பட்டப்பெயர் பூண்டிருந்ததாகத் தெரிகிறது. அவ்வரச குடும்பம் இந்தியாவிலிருந்து, சென்றிருக்க வேண்டும் என்பர். பதின் மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த இரசீத்-உடீன் (Rasid-Ud-din) எனும் பயணி இந்நாட்டைக் காந்தாரம் எனும் பெயரால் குறிப்பிட்டுள்ளார். மேலும், காந்தார நாட்டு மக்கள், இந்தியா விலும் சீனாவிலும் இருந்து, இங்குக் குடியேறிய மக்கள் என்ப தையும் அவர் தெரிவித்துள்ளார். இவற்றால் யூனானை ஆண்ட 'தாய்கள்' இந்தியப் பண்பாட்டையும், நாகரிகத்தையும் பேரளவில் மேற்கொண்டு ஒழுகியமை தெளிவாகிறது.

### காந்தாரம்

கி.பி. ஏழாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில், தாய்களுடைய அரசான 'காந்தாரம்', சீனப் பேரரசின் பிடியிலிருந்து விலகி, உரிமைபெற்ற நாடாகியது. ஒரு நூற்றாண்டிற்குள் 'காந்தார' நாடு சீனாவின்மீது படையெடுக்கும் அளவிற்கு, ஆற்றல் மிக்க தாய் மாறியது. பலமுறை சீனாவை எதிர்த்துப் போரிட்டு, இந்த நாட்டு அரசர் வெற்றிபெற்றனர். இதனால், இந்நாட்டு மன்னர் கி.பி. 850-இல் 'பேரரசர்' என்னும் பட்டத்தைச் சூட்டிக் கொண்டனர். இதனைத் தமக்கு மானக்கேடாகக் கருதிய 'தாங்கு' (Ta'ng) மரபின் சீனப் பேரரசர், நெடுங்காலம் தொடர்ந்து யூனானோடு போர்புரிந்து வந்தனர். அப்போரில் தொடர்ந்து சீனாவைத் தோல்வியுறச் செய்தது யூனான். கி. பி. 884இல் 'காந்தாரப் பேரரசர்' சீனப்பேரரசின் மகளை மணந்து

கொண்டார். இதனால், இரு வல்லரசுகள் இடையே இருந்து வந்த பகைமை தணிந்தது.

இந்தியப் பண்பாட்டைப் போற்றிப் பின்பற்றிய காந்தாரத்தின் தாய்களுடைய அரசு கி.பி. 1253வரை சிறப்புற்று விளங்கியது. மங்கோலிய மாவீரனான கூப்ளாய்கான் அவ்வாண்டில் 'காந்தாராவைக்' கைப்பற்றினான். புகழ்மிக்க தாய்களின் அரசு, தாய்லாந்தின் வடபகுதியில் அழிந்தது. அதனால்தான், தாய்கள் தெற்கு, மேற்கு ஆகிய பக்கங்களை நோக்கிப் புறப்பட்டனர். இவர்களுள் ஒரு கிளையினரான ஆஹோமியர், வடதிசை நோக்கிச் சென்று அசாமைக் கைப்பற்றினர். இன்னொரு பிரிவினரான ஷான்கள் (Shans) மேலைப்பர்மா முழுவதையும் கைப்பற்றிக் கொண்டனர். பதின்மூன்றாம் நூற்றாண்டிற்கு நெடுங்காலத்துக்கு முன்பே, பர்மாவின் கிழக்கு எல்லைப் பகுதியிலும், மேகாங்கு பள்ளத்தாக்கிலும் தாய்களின் அரசுகள் சில அமைக்கப்பெற்றிருந்தன. ஆனால், அவை யாவும் மிகச் சிறிய சிற்றரசுகளாக இருந்தன. கி.பி. பதினான்காம் நூற்றாண்டு அளவில்தான், அந்நாட்டில் பேரரசு தோன்றத் தொடங்கியது.

# 4. 3.

# சுகோதையின் அரசு

தாய்லாந்தின் நடுப்பகுதியில் தோன்றிய சுகோதை என்னும் அரசு, வரலாற்றுச் சிறப்புடையதாகும். 'சுகோதாய்' என்னும் ஊரைத் தலைநகராகக் கொண்ட அரசினை, சுகோதை அரசு என்னும் பெயரால் சுட்டினர். 'சுகோதாய்' என்பதற்கு 'மகிழ்ச்சி (நலம்) மிக்க தாய்மக்கள்' (சுக+தாய்) என்பது பொருள். முதலில் காம்போஜப் பேரரசின் அரசப் பிரதிநிதிகளுடைய தலை நகராக அது விளங்கியது. இப்பகுதியில் கலகம் உண்டான பொழுது, அதை அடக்க காம்போஜப் படைத் தலைவன் ஒருவன், பெரும் படையுடன் அனுப்பப்பட்டான். அவன், அங்கு வந்து சேருவதற்குள், அது தனியரசாக மாறிவிட்டது.

சுகோதையைக் கைப்பற்றியிருந்த இரு, 'தாய்' தலைவர்களுள் ஒருவன், கி.பி. 1229ல் இந்திராதித்தன் என்ற பட்டப் பெயரோடு, சுகோதையின் அரசு கட்டிலில் ஏறினான். அவனுடைய ஆட்சிக் காலத்தில் தாய்களுடைய 'காந்தாரா' இராச்சியம், கூப்ளாய் கான் எனும் மங்கோலிய அரசனால் கைப்பற்றப்பட்டது. எனவே, அந்நாட்டை விட்டுப் பேரளவில் தாய்கள், இங்குக் குடியேறத் தொடங்கினர்.

## முதல் பேரரசன்

இவ்வாறு, புதிய மக்கள் சக்தி, தன்னாட்டில் திரண்ட தாலும், காம்போஜத்தின் ஆற்றல், இச்சமயத்தில் நலிவுற்ற தாலும் இந்திராதித்தன் தொடர்ந்து போர்புரிந்ததன் மூலம், தன்னுடைய அரசினை நான்கு திசைகளிலும் விரிவடையச் செய்தான்.

அவனுடைய மகனான, இராமகோமெங்கு (Ram KhomMong) ஆட்சியில், இவ்வரசு மிகச் சிறந்ததோர் பேரரசாக விளங்கியது. இவ்வரசனுடைய கல்வெட்டுகள், இராமகோமெங்கின் வாழ்க்கையைப் பற்றியும், ஆட்சியைப் பற்றியும், விரிவாகக் கூறுகின்றன. சின வரலாற்றுக் குறிப்பேடுகள் இவ்வரசனையே, முதன்முதலாக 'சியன்' என்று குறிப்பிடுகின்றன. பிற்காலத்தில் இப்பெயரே' சியாம்- சயாம் எனச் சுகோதை என்ற பேரரசின் ஆதிக்கத் திற்குட்பட்ட நாடு முழுவதும் குறிப்பதாயிற்று.

இராமகோமெங்கின் ஆட்சி, வடக்கே பர்மாவின் கீழைப் பகுதி வரையிலும். தெற்கே மலேயா தீபகற்பம் வரையிலும் பரவியிருந்தது. இவ்வரசன் காம்போஜத்தின்மீது, படையெடுத்துச் சென்று, ஆங்கோர் பகுதியைப் பாழாக்கி, வெற்றியோடு திரும்பினான். இத்தகைய பெரும் வெற்றிகளினால் மட்டும், இவன் சிறந்து விளங்கவில்லை. இராமகோமெங்கு நாட்டு மக்களின் நல்வாழ்விற்குத் தேவையான பல ஆக்கப் பணிகள் புரிந்துள்ளான். நாட்டில் பல பெரிய, அழகுமிக்க கோவில்களை அவன் கட்டியுள்ளான். அக்கோவில்களுள், எழில் மிகுந்த புத்தர் சிலைகளை இவன் அமைத்தான். அவற்றுள் ஒன்று 8. 23 மீட்டர் உயரம் உடையதாகும். அரண்மனைகள், மடங்கள், பூங்காக்கள், ஏரிகள், கனிதரும் மரங்கள் அடர்ந்த சோலைகள் முதலியவற்றை நகர் முழுவதிலும் அமைத்துச் சுகோதையைச் சிறந்ததொரு நகரமாக இவன் பொலிவுறச் செய்தான். இவனுடைய ஆட்சியில், மக்கள் மனவமைதியும் வளமும் நிறைந்த வாழ்க்கையுடையவராய் விளங்கினர்.

இவ்வரசனுடைய நீண்ட கல்வெட்டு ஒன்று கிடைத்திருக்கிறது. அது இவனுடைய உயர்ந்த குறிக்கோளையும், அறநெறி வேட்கையையும்,நெறிபிறழாது நாடாகும் பண்பினையும் இனிது விளக்குகின்றது. இவ்வரசன், தனது அரண்மனை வாயிலில் ஓர் ஆராய்ச்சி மணியைத் தொங்கவிட்டிருந்தான். அம்மணியை அடித்து, மக்கள் தங்கள் குறைகளை எளிதில் அரசனிடம் முறையிட்டனர். அரசன் உடனடியாக அவர்களுடைய குறைகளைத் தீர்த்தான் என்று அக்கல்வெட்டு கூறுவது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

நம்முடைய மனுநீதிச் சோழனுடைய வரலாற்றை இது நினைவுபடுத்துகிறது.

இராமகோமெங்கு முதன்முதல் 'தாய்' மொழிக்கு எழுத்து வடிவத்தை அமைத்துத் தந்ததாகக் கூறுவர். இவன், தென்னிந்

திய கிரந்த எழுத்துக்களோடு காம்போஜத்துக் கெமர்களின் எழுத்து முறையையும் பின்பற்றித், 'தாய்' மொழிக்கு எழுத்து வடிவம் அமைத்ததாகத் தெரிகிறது. இவ்வாறு இராமகோ மெங்கு போர்க்காலத்திலும், அமைதிக் காலத்திலும் ஒப்பற்ற ஓர் அரசனாகச் சிறப்புற்று விளங்கினான். தான் வாழ்ந்த காலத்திற்குப் பொருந்தாத-ஆனால், பிற்காலத்திய மக்கள் போற்றத் தக்க-பல முன்னேற்றக் கருத்துகளைக் கொண்ட, அறிவொளி பெற்ற ஆட்சியாளனாக இவன் வாழ்ந்தான்.

## தாய்கள் பெற்ற நாகரிக ஒளி

தாய்கள், சீனப்பௌத்த சமயத்தொடர்பு கொண்டவர்களாக ஒருகால் இருந்து இருக்கலாம். ஆனால், அவர்களுக்கு நாகரிகத்தினைக் கற்பிக்கும் குருதேவர்களாகக் கெமர்களும், மோன்களும் விளங்கினர், தங்கள் சூழ்நிலைக்கு ஏற்ப, அவர்கள் தங்களை மாற்றி அமைத்துக் கொள்வதில் வல்லவர்களாக விளங்கினர். எனவே கெமர், மோன்கள் ஆகியோரின் நாகரிகங்களுள் காணப்பட்ட சிறந்த பண்புகளைத் தாய்கள், தம் வயமாக்கிக் கொண்டனர். இதனால், வடஇந்தியச் சேனர்களின் கலையும், புத்த சமயமும் வடக்குப் பக்கத்தில் வாழ்ந்த தாய்களுடைய நாகரிகத்தில் அழியாத சுவடுகளைப் பொறித்தன.

இராச தந்திரத்தில், தாய்கள் சிறந்து விளங்கினர். அவர்கள் எப்பொழுதும் சீனாவோடு நட்புறவு கொண்டாடுவதை ஒரு கலையாகப் போற்றினர்; சீனப்பேரரசுகள், தங்கள் ஆட்சியைத் தென்கிழக்கு ஆசியாவில் நிலைநாட்ட விரும்பியபோதெல்லாம், அவர்கட்குக் கீழ்ப்படிந்து கப்பம் கட்டுவதைத் தங்கள் கடமையாகக் கொண்டு தாய்கள் ஒழுகினர். சீனாவில் குறிப்பிட்ட அரசனோ, அரச மரபோ ஆற்றல் அற்றதாக இருக்குமானால், தாய்கள் சீனாவின் மேலாண்மையை உதறித்தள்ளி, உரிமை வாய்ந்த தனியரசாகத் தங்கள் நாட்டை வீறுடன் விளங்கச் செய்தனர். அந்நிலையில், சீனாவில் இருந்து அச்சுறுத்தல் கிளம்பினால், அதற்கு ஏற்றவண்ணம் தங்களை மன்னிக்குமாறு அவர்கள் வேண்டி நின்றனர். இவ்வாறு, மேனாம் ஆற்றுப் பள்ளத்தாக்கிலிருந்து, ஸ்ரீவிசயத்தின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த மலேயா வரையில், தங்கள் ஆட்சியைத் தாய்கள் நிலைநாட்டினர்.

தாய்கள், பிற நாகரிகங்களைத் தங்களுக்குரிய பண்பாட்டோடு சேர்த்துத், தம் வயப்படுத்திக் கொள்வதில் வல்லவர்களாக விளங்கினர். இதைப்பற்றி ஆராய்ந்த ஆராய்ச்யாளர் ஒருவர், ''கம்போடியாவிலிருந்து சயாமியர்கள் அரசியல் அமைப்பு, நாகரிகத்தின் நாள்வண்ணக் கோலங்கள், எழுத்து

முறை, எண்ணற்ற சொற்கள் முதலியவற்றைக் கடன் வாங்கி மாற்றியும், திருத்தியும் தங்களுடைய இயல்பிற்கேற்ப அமைத்துக் கொண்டனர். கெமர் கலைஞர்களிடமிருந்து, தாங்கள் கற்ற கலைகளைத் தங்கள் அறிவிற்கும், ஆற்றலுக்கும், பண்பாட்டிற்கும் ஏற்ற முறையில், செம்மைப்படுத்திப் புது மெருகு கொடுத்துத் தாய்கள் தங்களுடையதாக்கிக் கொண்டனர். மோன்கள், பர்மியர்கள் ஆகியோரிடமிருந்து, இந்தியப் பண்பாட்டில் தோன்றிய சட்ட முறைகளையும் நீதிநெறிகளையும் பெற்றனர். இவை எல்லாவற்றையும்விட தாய்லாந்து பர்மாவிலிருந்து சிங்களப் பௌத்த சமயத்தையும், அதன் கலை மரபுகளையும், பெற்றுப் போற்றி வளர்த்தது என்பர்.

தாய்கள் பௌத்த சமயத்தைப் போற்றி வளர்த்தமை, சுகோதைக் கல்வெட்டால் விளக்கமுறுகிறது. புத்த சமயமே, அந்நாட்டு மக்களிடையே பேராதரவு பெற்றிருந்தது. அக்காலத்தில் கதிரை (Kathira) என்ற ஒரு விழா சயாமில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. ஊர்வலங்கள், இசையரங்குகள், சமய நூல்களை ஓதுதல் முதலியன அவ்விழாவில் முக்கிய நிகழ்ச்சிகளாகும். சுகோதை நகரிலே, அழகிய புத்தர் சிலைகள் அமைக்கப்பெற்ற கோவில்கள் பல இருந்தன. இந்நகரத்தின் மேற்கே இருந்த காட்டில், ஸ்ரீதருமராச நகரைச் சேர்ந்த பௌத்த துறவி ஒருவருக்கு, இராமகோமெங்கு ஒரு மடத்தைக் கட்டிக்கொடுத்தான். அத்துறவி, திரிபிடகத்தை மனப்பாடம் செய்திருந்தமை, சுகோதை மக்களுக்குப் பெருவியப்பை அளித்ததாம். பௌத்த சமயம் பெருஞ் செல்வாக்குடன் இருந்தபோதிலும், இந்துசமயத் தெய்வங்களும், தேவதைகளும், ஆவிகளும் அந்நாட்டில் வணங்கப்பட்டு வந்தமை குறிப்பிடத் தக்கது,

## தாய்லாந்தில் அசோகன்

இராமகோமெங்கு பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதியில், மேனாம் ஆற்று அருவியில் குளித்தபொழுது, நீர்ப்பெருக்கால் அடித்துச் செல்லப் பெற்றான். அவனுக்குப் பிறகு, சுகோதை அரசின் செல்வாக்குக் குன்றியது. ஆயினும், 'தாய்' மொழிக் கல்வெட்டு ஒன்றால், கி. பி. 1360 அளவில், சுகோதையை ஸ்ரீசூரியவமிச இராமமகாதரன், இராசாதிராசன் என்ற பட்டத்துடன் ஆண்டமை அறியப்படுகிறது. அவன் இராமகோமெங்கின் பேரனாக இருக்கலாம் என்று வரலாற்றாசிரியர்கள் சிலர் கருதுகின்றனர். அவன் திரிபிடகங்கள், வேதங்கள், சாத்திரங்கள், ஆகமங்கள், அறநூல்கள் முதலியவற்றைக் கற்றுத் தேர்ந்தவனாக விளங்கினான். தன்னுடைய மூதாதையர்

இந்தியாவில், சூரிய குலத்தில் தோன்றிய இராமகாதையின் தலைவனான, இராமனின் வழி வந்தவர்கள் என்று, அவன் கூறிக்கொள்ளுவதில் பெருமையுற்றான். இக்காலத்தில் தமிழ் நாட்டு இராமாயணக் கதைமுறை, தாய் மக்களிடம் செல்வாக்குப் பெற்று இருந்ததாக டாக்டர் பிலியோசா கருதுகிறார்.

அவ்வரசன் மகேசுவரர், திருமால், புத்தர் ஆகியோருக்குக் கோவில்கள் கட்டியுள்ளான். கி. பி 1361ல் இலங்கைக்கு ஒரு தூதர் குழுவை, அவன் அனுப்பினான். அங்கிருந்து, சிறப்புமிக்க ஒரு பௌத்தத் துறவியைத் தன் நாட்டிற்கு, அவன் வரவழைத்தான். அவர் சுகோதைக்கு வந்தவுடன், பக்தி மேலீட்டால் ஸ்ரீசூரியவமிச இராமன், துறவியானான்; அரசியலில் இருந்து விடுதலைபெற விரும்பினான். நாட்டு மக்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி, அவன் தொடர்ந்து சில ஆண்டுகள் வரையில், அரசனாக இருந்தான். இலங்கையிலிருந்து போதி மரக்கிளை ஒன்றை, அவன் கொண்டு வருமாறு செய்தான். அப்போதி மரக்கிளையினைத் தன் நாட்டில் நட்டு, அவன் அதற்குப் பெருவிழா ஒன்று எடுத்தான்.

அவன் காலத்தில், சிறப்புமிக்க சிற்பங்கள் பல செதுக்கப் பெற்றுள்ளன. அவை புனையாத ஓவியங்களைப் போன்று காணப்படுகின்றன. அந்தச் சிற்பங்கள். புத்த சாதகக் கதைகளில் காணப்படும் நிகழ்ச்சிகளில், ஐம்பத்தொன்றைச் சித்திரிக்கின்றன. அச்சிற்பங்கள், இலங்கையின் கலை மரபு தாய்லாந்தில் போற்றப்பட்டமைக்குச் சிறந்த சான்றுகளாகத் திகழுகின்றன.

இவ்வாறு பௌத்த சமயம், சயாமில் செழித்து வளரக் காரணமாக இருந்த ஸ்ரீசூரிய வமிச இராமனைச் 'சயாமின் அசோகன்' என்று அறிஞர்கள் போற்றுகின்றனர்.[3]

இத்தகைய கீர்த்திமிக்க அரசனாக விளங்கிய இராமனிடம், நாட்டினைக் கட்டிக் காக்கும் ஆளுந்திறமை இல்லாமற் போயிற்று. உதானில் (Utan) இருந்த 'தாய்' சிற்றரசன், லோபபுரி (Lopburi) அரண்மனையைக் கைப்பற்றி, நாளடைவில் சிறந்த நிலைக்கு வந்தான். கி. பி. 1350ல், அதனுடைய அரசன், தனியுரிமை வாய்ந்ததோர் அரசுக்குத், தன்னைத் தலைவன் என்று அறிவித்தான்.

---

3. P. N. Bose, Op. Cit., P. 53

# 4. 4.

# அயூத்தியாவும் பேங்காக்கும்

## அயூத்தியா

கி. பி. 1350ல் பட்டத்திற்கு வந்த தாய் சிற்றரசன், இராமாதிபதி என்னும் பட்டப்பெயரைச் சூட்டிக்கொண்டான். அவனே, ஒன்றுபட்ட சயாமின் முதல் அரசன் என்று வரலாற்று ஆசிரியர்கள் பொதுவாகக் கூறுவர். அவ்வரசன் சுகோதைநகர் சிறப்புற்று விளங்குவதற்கு முன்பு, மாட்சிமையுடையதாக விளங்கிய துவராபுரி நகர் இருந்த இடத்திலேயே, அயூத்தியா என்ற அயோத்தியாவை, புதிய தலைநகராக அமைத்து, அங்கிருந்து ஆளத்தொடங்கினான். அவனும், அவனுக்குப் பின்னர் வன்முறையில் ஆட்சியைக் கைப்பற்றிய சில அரசர்களும் பௌத்த மதத்தைப் போற்றினர்.

மகாசக்கரபாதன் என்னும் அரசன், அயூத்தியாவை ஆண்ட காலத்தில், பர்மாவிற்கும் தாய்லாந்திற்கும் இடையே கடும் போர் மூண்டது. பர்மியப் படைகள் அயூத்தியா நகரை, முற்றுகை இடும் நிலை உண்டாயிற்று. அரசன், அவர்களை எதிர்த்து அஞ்சா நெஞ்சத்துடன் கடும் போர் புரிந்தான். பர்மியப் படை, புறமுதுகிட்டு ஓடியது. அப்போரின்பொழுது நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி, தாய்லாந்தின் வரலாற்றில் பொன் னெழுத்துகளால் பொறிக்கப்பட்டுள்ளது. அரசன் யானைமீது அமர்ந்து, பகைவர் கூட்டத்தில் புகுந்து, வீரச்செயல்கள் புரிந்து கொண்டிருந்தான். அவனுடைய நிழல்போல், அவனுடைய மனைவி, அரசி சூரியோதாய் என்னும் வீராங்கனையும், ஆண்

உடை தரித்து, மற்றொரு யானையின்மீது ஏறிக் கணவனைப் பின்தொடர்ந்து, போர்க்களத்தில் புகுந்தாள். பர்மிய வீரன் ஒருவன் அரசன்மேல் அம்பெய்யக் குறிபார்ப்பதைக் கண்ட, அரசி, உடனே தன் யானையைக் குறுக்கே நடத்திச் சென்றாள். அம்பைத் தன் மார்பில் தாங்கிக் கணவன் உயிரை, அவள் காப்பாற்றினாள். வீரமும் தியாக உணர்வும் மிக்குடையவளாக விளங்கிய சூரியோதாயைத், 'தாய் நாட்டைக் காத்த வீர மங்கை' என்று தாய்லாந்து மக்கள் போற்றி வருகின்றனர்.

அயூத்தியா பரம்பரையின் புகழ்மிக்க அரசன் நரேசுவரன் என்பவன் ஆவான். அவனுடைய ஆட்சியில், அயூத்தியா அரசு மிகச் சிறந்த நிலையை அடைந்தது. அவனுடைய ஆட்சிக் காலத்தில், பல பௌத்த சமய கோவில்கள் எழுப்பப்பட்டன. லோபபுரி என்னும் நகரத்தை, தன் தலைநகராக அவன் ஆக்கிக் கொண்டான். அங்குப் பல கோயில்கள் கட்டப்பட்டன. அவற்றுள் யமதர்மராசா கோயில் முக்கியமானது. இந்தியாவில் யமனுக்கு என்று தனிக்கோவில் கட்டப்பட்டதாகத் தெரிய வில்லை. இதனால், உலகில் யமதர்மராசாவின் வழிபாட்டுக்கு என்று அமைக்கப்பட்ட கோவில், இது ஒன்றே எனத் தோன்று கிறது. திருப்பைஞ்ஞீலியில் உள்ள சிவன் கோயிலில், பரிவார தேவதைகளின் சிறு சன்னதிகளில் ஒன்று, யமனுடையதாகக் காணப்படுகிறது.

நரேசுவரன் மாபெரும் வீரன்; பேரரசி சூரியோதாயின் பேரன் அவன்; ஏழை எளிய மக்களிடமும், படை வீரர்களிடத் தும், குடிமக்களிடமும் கண்டிப்புடன் கருணை காட்டுவதில் அவன் சிறந்து விளங்கினான். அவனை, 'அறவோன்' என்றும், 'நீதிமான்' என்னும் மக்கள் போற்றினர். போர்க்களத்தில் அருளுணர்வோடு, அறநெறியில் பிறழாது அவன் போரிட்டான்; பர்மாவோடு போரிட நேரிட்டபொழுது, இருதிறத்துப் படை களும் போரில் ஈடுபட்டு அழிவதை அவன் விரும்பவில்லை. தன்னை மட்டும் எதிர்த்துப் போரிடுமாறு பர்மிய அரசனை அவன் வேண்டிக்கொண்டான். பர்மிய அரசன், மாபெரும் வீரன் ஒருவனைத் தன் சார்பில் போரிடுமாறு அனுப்பினான். இருதிறத்துப் படைகளும் வைத்த கண்களை வாங்காமல், அப் போர்க் காட்சியைக் கண்டன. முதலில் யானைமீது அமர்ந்து, அவர்கள் இருவரும் போர்புரிந்தவர். பின்னர் நிலத்தில் நின்று வில்லும், வேலும், வாளும் கொண்டு அவர்கள் போரிட்டனர். இறுதியில், நடைபெற்ற வாள் போரில், பர்மிய வீரன் தோற் றான். அப்பொழுதும் நரேசுவரன் அவனைக் கொல்லாது, தோல்வியை ஒப்புக் கொள்ளச் செய்தான்.

## திருவடி

இப்போர் நிகழ்ந்த பான்சேடி என்னுமிடத்தில், மாபெரும் நினைவுச் சின்னம் அணிமைக் காலத்தில் எழுப்பப் பெற்றுள்ளது. தம்முடைய ஐம்பதாவது வயதில், 1705ஆம் ஆண்டு, நரேசுவரன் காலமானான். அவனுக்குப் பிறகு தோன்றிய அரசர்கள், ஆற்றல் அற்றவர்களாக இருந்தனர். ஆட்சியைக் கைப்பற்றிய சில அரசர்களும் புத்த சமயத்தைப் போற்றினர்.

இலங்கையைப் பின்பற்றிச் சுகோதையில் கி. பி. 1426-7ல் புத்தர் பெருமானின் திருவடிச் சின்னம் கட்டப்பட்டது. அத் திருவடிகளின்கீழ், புத்தரின் சீடர்களாகவும் சமகாலத்தவர்களாலும் வாழ்ந்த துறவிகள் எண்பதின்மர் வழிபடும் நிலையில் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளனர். அதன் பக்கத்தில், பாலி மொழிக் கல்வெட்டொன்று காணப்படுகிறது. அதில் புத்தரின் 'திருவடி' அமைக்கப்பட்ட ஆண்டும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

## அயூத்தியாவின் அழிவு

அயூத்தியா, கெமர்களின் தலைநகரான ஆங்கோருக்கு மிகவும் அருகில் அமைக்கப்பட்டிருந்தது. இதனால், காம்போஜத்திற்கும் சயாமிற்கும் தொடர்ந்து பெரும் போர்கள் நிகழ்ந்தன. அப்போர்களில், பலமுறை தாய்லாந்து கைப்பற்றிய ஆங்கோரை, மீட்பதற்குத் திரும்பத் திரும்ப, கெமர்கள் போர் புரிய வேண்டி இருந்தது. இத்தகைய நெடுங்காலப் போராட்டத்தின் விளைவாகப் புத்தசமயம், தாய்லாந்தில், சிறிதுசிறிதாக மாற்றமுற்றது. இம்மாற்றத்தைச் சயாமில் கிடைத்துள்ள சிவபெருமானின் சிலை ஒன்று தெரிவிக்கிறது. அச்சிலையில் 'சிவபெருமானும் புத்தரும் ஒருவரே' என்னும் வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது. அவ்வெழுத்துகள் கி. பி. 1510ல் பொறிக்கப்பட்டனவாகக் கருதப்படுகின்றன.

தாய்லாந்து அரசின் ஆற்றல்மிக்க வளர்ச்சி, மேற்குப் பக்கத்திலிருந்த பர்மாவோடு பல்முறை போரிடச் செய்தது. சயாம், இருபக்கங்களிலும் இருபெரும் நாடுகளோடு தொடர்ந்து போர்புரியத் தொடங்கியமையாலும், காலப்போக்கில் உள்நாட்டிலே குழப்பங்களும் கலகங்களும் உண்டானமையாலும் சயாமிய அரசு, ஆட்டம் கொடுத்தது. பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், மலாக்காவை ஆண்ட சுல்தான்களோடு, தாய்லாந்து பகைமை கொண்டு போர்புரியத் தொடங்கியது. தாவோயைச் (Tavoy) சயாம் தாக்கியதன் விளைவாக, பர்மா, சயாமின்மீது 1548-இல் படையெடுத்து வந்தது. அது அயூத்தி

யாவை முற்றுகையிட்டது. அக்காலத்தில், ஐரோப்பிய நாடுகள் சயாமோடு தொடர்பு கொள்ளத்தொடங்கின.

## புத்தரின் புன்னகை

இலங்கை அரசனுடைய வேண்டுகோளுக்கு இணங்கி, கி.பி. 1750இல் புத்த சமயத் தூதர்குழு ஒன்று, தாய்லாந்தில் இருந்து இலங்கைக்குச் சென்றது.

அந்நாட்டுச் சமயத்தை அக்குழு, திருத்தி அமைத்தது. கி.பி. 1767இல். ஆறாவது முறையாகப் பர்மா, அயூத்தியாவைத் தாக்கியது. பர்மாவின் கடுமையான தாக்குதலால். அந்நகரம் அழிவுற்றது. இதன் விளைவாக நான்கு நூற்றாண்டுகள், தாய்லாந்தின் சீரும் சிறப்புமுற்று விளங்கிய அயூத்தியா அரசு அழிந்தது. இதனால், சயாமின் சிறப்பு குன்றத் தொடங்கியது. அந்நகரின் கோயில்கள் பல, பாழடைந்துவிட்டன. பாழடைந்த மேற்குச் சோமன் கோட்டையைச் (Soman Kot) சூழ்ந்து, காடுகள் வளர்ந்துள்ளன, ஆக்கொடிய காட்டிற்கு இடையே. வெண்கலத்தாற் செய்யப்பட்ட புத்தரின் மாபெரும் சிலை ஒன்று 'தன்னை அச்சுறுத்தும் அழிவுச் சக்திகளைச் கண்டு, இன்றும் ஏளனப்புன்னகை புரிந்து கொண்டிருக்கிறது.'

## பேங்காக்கு

அயூத்தியாவின் வீழ்ச்சியை, தக்கதோர் அடிப்படையாகக் கொண்டு. வேறோர், அரசமரபு தாய்லாந்தில் தோன்றியது. அயூத்தியாவின் அரசு, பர்மாவின் படையெடுப்பினால், அழிவுற்ற நிலையில் சயாமியர்கள், சீனர் மரபிலுதித்த பயா-தாக்-லின் (Phaya-Tak-Lin) என்பவனைத் தங்கள் தலைவனாகத் தேர்ந்து எடுத்தனர். அவனுடைய ஆணைக்குக் கீழ்ப்படிந்து, அவர்கள் நின்றனர். அவ்வரசன் பேராற்றல் வாய்ந்த மாபெரும் வீரனாக விளங்கினான். முதலில். தன் நாட்டைவிட்டுப் பர்மியர்களை அவன் ஓட்டினான். பிறகு பயாராக்கின் பௌத்த சங்கத்தைத் திருத்தி அமைக்கும் உரிமை, தனக்கு உண்டென்றும் அவன் அறிவித்தான். பின்னர், அவன் சமயத் துறைச் செயல் முறைகளில் தலையிடலானான். இதனால், பௌத்தத் துறவிகள் சீற்ற முற்றனர். அவர்கள் சயோபியாசக்ரி என்பவன் தலைமையின்கீழ், ஒன்றுகூடி, அரசனை எதிர்த்துக் கலகம் செய்தனர்; நாட்டின் பல பகுதிகளில் கலகங்களும் குழப்பங்களும் உண்டாயின.

கி.பி. 1782-இல், பயராக்கின் அரச பதவியில் இருந்து விரட்டப்பட்டான். கலகக்காரர்களின், தலைவனான சயோபியா சக்ரி சயாமில் புதியதோர் அரசமரபின் தலைவனாக நாட்டை

ஆளத் தொடங்கினான். அம்மரபில் கி.பி.1851-இல் மாங்கூத் (Monghut) என்பவன் ஆட்சிக்கு வந்தான். அவன் சயாமிய அரசர்களுள், தன்னிகரற்ற தனிப்பெரும் தலைவனாவான். அவ்வரசன் சயாமிய மக்களுடைய அறிவியல், சமூகவியல் மேம்பாட்டிற்காக அரும்பாடுபட்டான், அவனுடைய கால்வழியில் வந்தவர்களே, இன்றும் தாய்லாந்தின் அரசர்களாக ஆட்சி புரிந்து வருகின்றனர்.

அயூத்தியா அரசு அழிந்து பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு, பேங்காக்கில் புதிய அரசமரபு, கி.பி. 1782-இல் தலையெடுத்தது. இந்த மரபைத் தொடங்கிய அரசன் சக்ரி என்ற பெயருடையவன். எனவே, 'அவனுடைய அரசமரபு 'சக்ரிமரபு' என்னும் பெயர்பெற்றது. இன்றைக்குத் தாய்லாந்தை ஆளும் அரசர், இக்குடியில் தோன்றியவராவர். இம்மரபில் முதல் அரசர் சக்ரி. தம்முடைய பெயருடன் 'இராமா' என்னும் பட்டப் பெயரையும் சேர்த்துக்கொண்டார். அவருக்குப் பின்வந்தவர்களும், இம்முறையைப் பின்பற்றி வருகின்றனர். இப்பொழுது ஆட்சி புரிபவர் பத்தாவது இராமா. தாய்லாந்து ஒன்றில்தான், ஐரோப்பியர் ஆதிக்கம் கால்கொள்ளவில்லை.

முதலாம் இராமா (சக்ரி), அரசு கட்டில் ஏறியபொழுது, பர்மியப் போர்களின் விளைவாக நாடு சீர்கெட்டு, வளங்குன்றி இருந்தது. சிறந்த குறிக்கோள்களோடு திட்டமிட்டுச் செயலாற்றும் திறன் படைத்தவனாக, சக்ரி விளங்கினான். விரைவில் நாட்டிற்குப் புத்துயிர் அளிக்கும் பணியில், அவன் ஈடுபட்டான். அழிவுற்றிருந்த அயூத்தியா, அதன் பழைய பெருமையைத் திரும்பப்பெற்றது; நாடு செழிப்பும் சிறப்புமுற்றது. இருபத்தேழு ஆண்டுகள் ஆட்சிபுரிந்த முதலாவது இராமா, கி.பி. 1809-இல் இறந்தான். அப்பொழுது நாடு பல துறைகளிலும் முன்னேற்றத்தைக் காணும் நிலையை எய்தியிருந்தது.

சக்ரி அரசமரபில், முதலாவது இராமாவிற்குப் பிறகு, எட்டு அரசர்கள் ஆட்சிபுரிந்துள்ளனர். அவர்களுள், நாலாவது இராமாவான மாங்கூத்தும், ஐந்தாவது இராமாவான சூலாலங்காரனும் சிறப்புமிக்க அரசர்களாவர்.

இருபது வயதில் துறவிக்கோலம் பூண்டு, கோயிலில் தங்கி வாழ்ந்தவர் மாங்கூத். நாற்பத்தாறு வயது வரையில் துறவியாகப் புத்த மதத்திற்கு அவர் அரும் பணி புரிந்தார். பாலி மொழி, ஆங்கிலம், பிரெஞ்சு, இலத்தீன் ஆகிய மொழிகளில் அவர் சிறந்த புலமையும் பெற்றிருந்தார். அரச குடும்பத்தின்

கோயிலான வாட்போவாணிவாட்டில் தலைமைக் குருவாகவும் பணிபுரிந்தார்.

அவருடைய உடன்பிறந்தவன் மூன்றாவது இராமா (நாங்க்ளாவ்) என்பவர் கி. பி. 185ல் இறந்ததும், நாட்டு மக்களால், மாங்கூத் முடிசூட்டப்பெற்றார். நான்காவது இராமா என்றபட்டப்பெயருடன், மாங்கூத் அரியணை ஏறினார். அதன் பிறகு, பிரபுக்களின் வற்புறுத்தலினால், அந்நாட்டு வழக்கப்படி, பல மனைவியரை அவர் மணந்துகொண்டார்.

## சீர்திருத்தச் செம்மல்

அவர் நாட்டின் முன்னேற்றத்திற்கான நல்ல பல திட்டங்களை வகுத்தார். ‘தாய்’ மொழிக்கு அடுத்த நிலையில், ஆங்கிலக் கல்வியினைப் போற்றி, ஆதரித்தார். அறிவியல் கல்வி நாட்டில் நன்கு பரவ, திட்டங்கள் பலவற்றை அவர் செயல்படுத்தினார். கோயிலில் பல ஆண்டுகள் பணிபுரிந்த மாங்கூத், கோயில்கள், மடங்கள் ஆகியவற்றின் நிர்வாகத்தில் பல சீர்திருத்தங்களைச் செய்தார். சோம்பேறிகளாகச் சுற்றித் திரிந்த துறவிகளை ஆக்கப் பணிகளில் அவர் ஈடுபடுத்தினார்.

மாங்கூத் சமுதாயச் சீர்திருத்தங்கள் சிலவற்றைச் செய்யத் துடித்தார். அரசர் வெளியில் உலாவரும்போது, பொது மக்கள் அவரைப் பார்க்கக்கூடாது என்றும், கண்களை மூடிக்கொண்டு குப்புறப்படுத்துவிடவேண்டும் என்றும் இருந்து வந்த,நெடுங்கால வழக்கத்தை, அவர் அகற்றினார்; குடிமக்களைப் பொதுவிடங்களில் நேரில், அவர் சந்தித்தார்; அவர்கள் குறைகளைப் பரிவுடன் கேட்டு, அவர்கள் நலனைப் போற்றிக் காக்க, அவர் முயன்றார் இதைப் போன்றே, அரசன் முன்னிலையில், யர்ரும் மேலங்கி அணியக்கூடாது என்று இருந்து வந்த வழக்கத்தையும் ஒழித்து, அனைவரும் மேலாடை அணிவதற்கு மாங்கூத் அனுமதித்தார். அரண்மனை வாயிலில் பெரிய பேரிகை ஒன்றைக் கட்டித் தொங்கவிடுமாறு அவர் செய்தார். அரசரிடம் தங்கள் குறையைத் தெரிவிக்க விரும்புகிறவர்கள், அப்பேரிகையை அடித்து, அரசனை நேரில் சந்தித்துத் தங்கள் குறைகளைத் தெரிவிக்க அவர் ஏற்பாடு செய்தார். இது மனுநீதி சோழனுடைய ஆராய்ச்சி மணியைப் போன்ற ஒன்றாகும்.

வானநூலில் அரசர் பேரார்வம் கொண்டிருந்தார். வானவியல் ஆராய்ச்சிக்காகப் புதியதோர் இடத்திற்குச் சென்று, அவர் தங்கியிருந்தார். அங்கு மலேரியா காய்ச்சலால் தாக்குண்ட மன்னர், சிறிது காலத்திற்குள் இறந்துபோனார்.

## இங்கிலாந்தைக் கண்ட அரசர்

மாங்கூத்தின் மறைவுக்குப் பிறகு, அவருடைய மகன் சூலாலங்காரன், தாய்லாந்தின் அரியணையில் அமர்ந்தார். 1868-ஆம் ஆண்டு முதல், 1910-ஆம் ஆண்டு வரை, அவர் ஆட்சிபுரிந்தார். சக்ரி அரச மரபில் 42 ஆண்டுகள் ஆட்சிபுரிந்த சூலாலங்காரன், பல்லாற்றானும் சிறப்புமிக்கப் பேரரசராவர் தந்தையைப் போலவே அஞ்சா நெஞ்சமும், செயல்திறனும் அவர் வாய்க்கப் பெற்று இருந்தார். கி. பி. 1897-1899-ஆம் ஆண்டுகளில், அவர் இங்கிலாந்திற்குச் சென்று, திரும்பினார். தாய்நாட்டைவிட்டு, வெளியே சென்று வந்த முதல் சயாமிய அரசர், இவரே ஆவார்.

## இன்றைய தாய்லாந்தின் தந்தை

தாயகத்திற்குத் திரும்பிய பின்னர், இவர் செய்த சீர்திருத்தங்கள் பல. அரசருக்கு முன்னால் யாரும் நிமிர்ந்து நடக்கக் கூடாது என்று இருந்து வந்த பழக்கத்தை மாற்றினார்; அரசர் முன்னால் மண்டி இடுதலும் முழங்கால்களினாலேயே நகர்ந்து செல்லுதலும் தேவையற்றவை என்று இவர் நம்பினார். எனவே, யாரும் அவ்வாறு நடந்துகொள்ளக் கூடாது என்று இவர் ஆணை பிறப்பித்தார். அஞ்சா நெஞ்சத்தோடு பிரபுக்களை எதிர்த்து, இந்த உத்தரவினை அரசர் செயல்படுத்த நேர்ந்தது.

ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வதற்கு, வழிகள் பலவற்றை, இவர் வகுத்துத் தந்தார்; பெண் கல்விக்கு முக்கியத்துவம் கொடுத்தார்; எல்லாத் துறைகளிலும் அவர்கள் முன்னேற வாய்ப்பு அளித்தார். பொருளாதாரச் சீர்திருத்தங்களின் மூலம், நாட்டின் வருவாயைப் பெருக்கியதோடு, நாட்டின் ஆக்கப்பணிக்கு அப்பொருளைச் செலவழித்து, இவ்வரசர் பேரும் புகழும் பெற்றார். நீர்ப்பாசனத் திட்டங்கள், சாலை அமைப்பு, ஆறுகளில் போக்கு வரவினை விரிவுபடுத்தல் போன்ற பல, நல்வாழ்வுத் திட்டங்களால், நாட்டின் வருவாய் பெருகியது. தொழில்துறையில் பல வளர்ச்சிகள் உண்டாயின. இக்காரணங்களால் 'இன்றைய தாய்லாந்தின் தந்தை' என்று வரலாற்று அறிஞர்கள் இவ்வரசரைப் போற்றுகின்றனர்.

## தாய்லாந்து எனும் பெயர் சூட்டிய மன்னர்

சூலாலங்காரனின் மரபில் வந்தவரே, பூமிபோன் அடுல்டெஜ் என்பவர். 'ஒன்பதாவது இராமா' என்ற பட்டப் பெயருடன் அரசராக இவர் ஆட்சி புரிந்தார்.

1939-ஆம் ஆண்டு சயாம் என்னும் பெயரை மாற்றி, 'தாய் லாந்து' ('தாய்' இனமக்களின் தாய்த்திருநாடு) எனும் பெயரால், தம் நாட்டினை இவர் உலகிற்கு அறிமுகப்படுத்தியுள்ளார். இப்பொழுது தாய்லாந்தின் அரசராக இருப்பவர், பத்தாவது 'இராமா' என்பவராவார்.

## 4.5.

# பண்பாட்டுத் தாக்கம்

தாய்லாந்தின் வரலாற்றுக் காலம் நெடுக, இரண்டு நாகரிக அலைகள், அதை நோக்கி வீசிக்கொண்டிருந்தன. அவற்றுள் ஒன்று சீன நாகரிகம் என்னும் அலை; மற்றொன்று இந்திய நாகரிகம் என்னும் அலையாகும். சயாமிய மொழியில் சீன நாகரிகத்தின் செல்வாக்கு மிகுதி. பிற துறைகளில் இந்திய நாகரிகத்தின் பாதிப்பே பேரளவினதாகும். இந்திய நாகரிகத்தின் 'குடியேற்ற நாடு' என்ற வகையில் சயாம், இந்தியாவிலிருந்து பெற்ற நாகரிகப் பண்பாடெனும் ஒளிவிளக்கைத், தென்கிழக்கு ஆசிய நாடுகளில் இன்றும் ஒளிவிட்டுப் பிரகாசிக்குமாறு செய்து வருகிறது.

பௌத்த சமயத்தைத் தன்னுடைய தேசிய சமயமாகவும், அரசியல் சமயமாகவும் தாய்லாந்து ஏற்றுக்கொண்டு இருக்கிறது. அப் பௌத்த சமயம், இந்தியாவிலிருந்து இலங்கை வழியாகச் சயாமிற்குச் சென்று, பரவியதாகத் தெரிகிறது. பௌத்த சமயம் பரந்துபட்ட இலக்கியத்தைப் படைத்துக் கொள்ளுவதற்கும், ஆயிரக்கணக்கான மடாலயங்களை நிறுவுவதற்கும், எண்ணற்ற சிலைகளை அமைத்துக் கொள்ளுவதற்கும் பேருதவி புரிந்திருக்கிறது. அதனுடைய பழக்க வழக்கங்களும், இந்தியச் சார்புடையனவாக உள்ளன. ஒரே தொடரில் சொல்லுவது என்றால், 'அவர்களுடைய நாகரிகம் இந்தியாவிலிருந்து சென்றது' எனலாம்.

## அரசியலில் உண்டான தாக்கம்

இந்தியாவிலிருந்து புறப்பட்ட மக்கள் கூட்டத்தினர், சயாமிற்கு நேரடியாகச் சென்று குடியேறவில்லை. ஆனால், முழுவதும் இந்தியமயமாக்கப்பட்ட இந்திராதித்தனைப் போன்ற காம்போஜ அரசர்களால், இந்திய நாகரிகம் அந்நாட்டு மக்களுக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டது. எனவே, தாய் லாந்து, தன்னுடைய பண்பாட்டின் கூறுகள் அனைத்தையும் இந்தியாவிலிருந்து பெற்றதில் வியப்பிற்கு இடமில்லை. அவளுடைய சமயம், இந்திய நாட்டில் தோன்றியது. அவளுடைய இலக்கியம் பாலி மொழியில் அமைந்தது; அவளுடைய பழக்க வழக்கங்களும் இந்தியச் சார்புடையனவேயாகும். இக்காரணங் களால்தான், நாம் சயாமை ஓர் 'இந்தியக் குடியேற்ற நாடாக'க் கருதுகிறோம்.

தாய்லாந்தின் அரசர்கள், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரையில், பெரும்பாலும், பண்டைக்கால இந்திய அரசர்களைப் போலவே, வாழ்ந்து வந்தனர். இந்திய மன்னர் களைப் போன்றே, மிகவும் நீளமான (இருபது வரிகளுக்கு மேற் பட்ட) பட்டங்(விருது)களை, அவர்கள் பூண்டிருந்தனர்; குடை, செங்கோல், வாள், கவரி, மிதியடி, முடி முதலிய அரசச் சின்னங் களைக் கொண்டு இருந்தனர். யாராக இருந்தாலும், அரசரின் முன்னிலையில் நிலத்தில் வீழ்ந்து. வணங்கவேண்டும் என்ற பழக்கம் நடைமுறையில் இருந்துவந்தது. ஆண்டுதோறும் சயாமின் அரசர்கள் புனிதயாத்திரை செய்தனர்.

மந்திரிகளின் பதவிப் பெயர்கள் இந்தியப் பெயர்களாகவே இருந்துவந்தன. சயாமின் இளவரசர்கள் 'மகாயுவராசர்' என்று சூட்டப்பெற்றனர். அரசகுடிப் பெண்கள், அரசிகளாகப் பட்டம் சூட்டிக்கொண்டு நாடாளுவதை சயாமிய சமுதாயம் ஏற்றுக் கொள்ளவில்லை.

பண்டைக்காலத்தில் சயாமில் எழுதப்பட்ட நீதி சாத்திரங் களிலும், பின்பற்றப்பட்ட சட்டதிட்டங்களிலும் இந்திய நீதி சாத்திரத்தின் கருத்துகள் பொன்னேபோல் போற்றப்பட்டுள் ளன. 'முதலைக் காட்டிலும் அதிகமாக வட்டி வாங்கக்கூடாது' என்னும இந்திய நீதி, இன்றும் சயாமில் வழக்கிலிருந்து வருகிறது.[4]

## சமுதாயத்தில் உண்டான தாக்கம்

குழந்தை பிறந்தவுடன் தொட்டிலில் இட்டுத் தாலாட்டுவது, மொட்டையடிப்பது முதலிய விழாக்களும், ஈமச்சடங்குகளும்

4. P. N. Bose; Op. Cit.; p. 53

தமிழ்நாட்டு முறைகளைப் பின்பற்றியவையாகும். இந்தியப் பழக்க வழக்கங்களுக்கு மாறாகச் சயாமில் ஒரு வழக்கம் இருந்து வருகிறது. சீர்வரிசை கொண்டு வராத மனைவியைக், கணவன் விற்றுவிடலாம் என்னும் உரிமையைச் சயாம் நாட்டில் ஆண் மக்கள், அணிமைக் காலம்வரை பெற்றிருந்தனர்.

## பார்ப்பனர்

இன்றுவரை ஈனயான பௌத்த சமயம் தாய்லாந்தில் தொடர்ந்து செல்வாக்குடன் இருந்துவருகிறது. இந்திய நாகரிகம், சயாமில் நின்று நிலவுவதற்கு, இதை நாம் சிறந்த சான்றாகக் காட்டலாம். சயாமிய 'மோன்கள்', பர்மியர்களிடம் இருந்து தேரவாத புத்த சமயத்தைப் பின்பற்றினர். இதனால், சயாமின் பண்டை வரலாற்றுப் புகழ்மிக்க கெமர்களின் கலைகளும், சிற்பங்களும், சமயமும் சயாமில் நலிவுற்றன. எனினும், இன்றும் அங்கு பிராமணர்கள் 'பிராம்சு' (Phrams) என்னும் பெயர் உடையவர்களாக அரசனிடத்துச் செல்வாக்குடன் வாழ்ந்துவருகின்னர். கெமர்கள் போற்றிய 'ஸ்ரீகைவவ்யர்கள்' போன்ற சமய குருமார்கள், சயாமில் இருந்தது இல்லை.

சோதிடம், நாள்கோள் பார்த்துக் கூறுதல் முதலியவற்றில், தாய்லாந்து பார்ப்பனர் வல்லவர்களாக விளங்குகின்றனர். அரசனுடைய அவைக்களத்தில் நடக்கும் முடிசூட்டு விழாவினைப் போன்ற பலவகை விழாக்களைச் சிறப்பாக அவர்கள் நடத்தி வைப்பதில், பெரும்பங்கு கொண்டு உள்ளனர்.

மேலும், பண்டைக்காலத்தில் பௌத்த விகாரைகளிலும் இந்து சமயக் கோயில்களிலும் பிராமணர்கள், பூசைசெய்யும் பூசாரிகளாகவும் பணி ஆற்றியுள்ளனர். இன்றும் சயாமியர் குடும்பங்களில் நிகழும் வழிபாடுகளிலும் பார்ப்பனர்கள் புரோகிதர்களாகத் தலைமை தாங்கி, அவற்றை நடத்தி வைக்கின்றனர். தமிழ்நாட்டில் அணிமைக்காலம் வரையில், சமயச் சடங்குகள் செய்வதில் முக்கியப் பங்கினைப் பிராமண. புரோகிதர் ஏற்றிருந்ததைப் போன்றே, அங்கும் இருந்துவந்தனர். கி. பி. 1851ல் அரசு கட்டிலேறிய மாங்கூத் என்ற மன்னன், முதலில் பௌத்தத் துறவியாக இருந்தான்; நாட்டு ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்த தம்பி, திடீரென்று இறந்தமையால், மாங்கூத் நாடாளும் அரசனாகப் பதவி ஏற்றான் என்பதை முன்னரே கண்டோம். அவன் பௌத்த சமயத்தின் நன்மையை நாடிச் சில சீர்திருத்தங்களைச் செய்தான். அதுமுதல், பிராமணர்கள் பௌத்த சமய உண்மைகளையும் சடங்குகளையும் புறக்கணித்துவிடாமல் காப்பதற்காகப், பௌத்த சமயத் துறவிகளும்

பார்ப்பனர்களும் ஒன்றாகச் சேர்ந்தே, அரசவைச் சடங்குகளை நடத்தி வருமாறு அவன் செய்தான்.

இந்தியாவிலிருந்து, பிராமணர்கள் சயாம் நாட்டிற்குச் சென்று குடியேறியுள்ளனர். இதைப்பற்றிய பழங்கதைகளைக் கூறும் பனையோலைச் சுவடிகளைச் சயாமியர்கள், கண்ணும் கருத்துமாகக் காத்துவருகின்றனர். இவ்வோலைச் சுவடிகளின் காலத்தை வரையறுத்துக் கூற இயலவில்லை. எனினும், அவை 'தாய்கள்' சயாமில் சிறப்புற்று விளங்குவதற்கு முறபட்ட பண்டைக்கால மரபுகளை விளக்குகின்றன. கி. பி. எட்டாம் நூற்றாண்டில், வடஇந்தியாவில் உண்டான அரசியல் குழப்பத்தால், பெரும்பான்மையான பார்ப்பனர்கள்,இந்தியாவிலிருந்து சென்று அங்குக் குடியேறினர். மற்றவர்கள் பெகூவிலிருந்து தெனாசரித்துக்குச் சென்று குடியேறினர். மற்றும் சிலர், லகோனுக்குச் (Lakhon) சென்று அங்குக் கோயில்களில் பணிபுரித்து வந்தனர். தமிழ் நாட்டில் மாலிக்காபரின் படையெடுப்பால் உண்டான குழப்பத்தின் பொழுது (கி. பி. பதினான்காம் நூற்றாண்டு) சோழிய பிராமணர்களும் பாண்டிய நாட்டு புரோகிதர்களும் குடும்பம் குடும்பமாகச் சென்று, அங்குக் குடியேறியதை அவ்வோலைச் சுவடிகள் தெரிவிக்கின்றன.

தாய்லாந்து அரச குடும்பத்தினரின் புரோகிதர்களாகவும் அரச குருமார்களாகவும் அவர்கள் விளங்கினர். சிலர் சோதிடர்களாகவும் தொழில் செய்தனர். இத்தகைய குழுக்களுள், ஒரு குழுவைச் சேர்ந்தவர்களுக்குத் தலைவராக இருக்கும ஒருவர், "தாங்கள் சயாமில் குடியேறிய இந்தியர்களின் கால்வழியில் இருபத்து ஐந்தாவது தலைமுறையாகத் தோன்றியவர்கள் என்றும், தங்கள் முன்னோர் இராமேசுவரத்திலிருந்து சயாமிற்கு வந்தவர்கள்" என்றும் கூறியதாக ஆராய்ச்சியாளர் தெரிவித்துள்ளனர்.[5]

## பட்டாரகர்

தமிழ்நாட்டிலிருந்து கடல்கடந்த நாடுகளுக்குச் சென்ற தமிழ்ப் பார்ப்பனரோ, வணிகரோ, கலைஞரோ தங்கள் பெண்டிரை உடனழைத்துச் செல்லவில்லை; தங்களுடன் மந்திரங்களையும், தேவாரம், திருவாசகம், திருப்பாவைப் பாசுரங்களையும் உடன் எடுத்துச் சென்றனர்; அப்பிராமணர்கள் குடியேறிய நாடுகளின் மன்னர்களுக்கு, அரசகுரு பதவியில் அமர்ந்தனர்.

5. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், சயாமில் திருபபாவை திருவெம்பாவை,; ப. 36.

'பட்டாரகர்' என்ற பட்டத்தை அவர்கள் பெற்றனர்; தாங்கள் குடியேறிய நாடுகளைச் சேர்ந்த பெண்களை, அவர்கள் திருமணம் புரிந்துகொண்டனர். இன்று, அவர்கள் எல்லாரும் சயாமியராக மாறிவிட்டனர்.

## இன்றைய நிலை

தாய்லாந்தில் அரண்மனையச் சார்ந்து பார்ப்பனர் பலர் வாழந்தனர். இப்போது அங்குள்ள கோவில்களைச் சுற்றிப் பார்ப்பனக் குடும்பங்கள் எண்பது வாழ்ந்து வருகின்றன. அவர்களுடையநீண்ட குடுமியைக் கொண்டே, அவர்களை இனம் பிரித்து அறியலாம். அரசருடைய முடிசூட்டு விழாவில், அவர்களுக்கு முடிசூட்டும் உரிமை இருந்துவந்தது. அவர்களுடைய தலைவர் 'மகாராசகுரு' என்ற பட்டத்தோடு வாழ்ந்து வந்தார். முடிசூட்டு விழாவிற்குச் செல்லும்போது, அவர் யானையின் மீது அமர்ந்து, பெருமிதத்தோடு செல்வார். 'தாய்' மக்கள் சயாமை வென்றபோது, நாட்டின் பழைய பழக்க வழக்கங்களைக் காத்து, மக்களுடைய ஆதரவைப் பெற விரும்பினராம். அதற்காகப் பழைய சடங்குகளை இயற்றுவதற்குப் பார்ப்பனர்களைக் கொண்டுவந்து குடியேற்றினார்கள் என்று மரபு வழிச் செய்தி ஒன்று கூறுகிறது.

## தமிழ் மந்திரம்

இவர்கள் பல மந்திர மறை நூல்களைப் போற்றிக் காத்துவருகின்றனர். அந்நூல்களில் உளள மந்திரங்கள் எல்லாம், சமஸ்கிருதத்தில் உள்ளன. அதிலே ஒரு மந்திரம், தமிழ் மந்திரம் என்றும், அது இந்திய எழுத்துமுறை ஒன்றில் எழுதப்பட்டுள்ளது என்றும் டாக்டர் குவாரிட்ச் வேல்சு கூறுகிறார். சடங்குகளைச் செய்யும் நெறிமுறைகள் எல்லாம், சயாமிய மொழியில் உள்ளனவாம்[6]

## முடிசூட்டு விழாவில் தமிழ் மந்திரங்கள்

பண்டைக் காலத்தில், சயாமிய அரசர்களுடைய முடிசூட்டு விழாவில், தமிழ் மந்திரங்கள் ஓதப்பட்டன. ''எட்டுக் கோணங்களைக்கொண்ட அரியணையில் வெண்கொற்றக் குடையின்கீழ், அரசன் வீற்று இருப்பான். பாலிமொழியில், அரசரைப் பார்ப்பனர் முதலில் வாழ்த்துவர். அவர் கூற்றை ஏற்றுப் பதவி ஏற்பு உறுதிமொழியை, அரசரும் பாலிமொழியில் வழங்குவார். பின்னர், அரசர் பத்திரபீட அரசுகட்டிலில் அமருவார். அப்

6. Quaritch Wales, Siamese State Ceremonies, P.56.

பொழுது ஏழடுக்குக் வெண்கொற்றக் குடை சிம்மாசனத்திற்கு மேலிருக்கும். முடிசூட்டியவுடன், ஒன்பதடுக்குக் குடை அங்கே வைக்கப்பெறும். அரசர் இறைமைப் பண்பினை முழுமையாகப் பெற்றுவிட்டார் என்பதன் அறிகுறியாக அச்சின்னம் அமைக்கப் படும்.

பிறகு, சிவனை வழிபடும் தலைமைக் குரு, அரசர் அருகில் வந்து வணக்கம் செய்து. ''கயிலாசத்தின் திருக்கதவுகள் திறக் கட்டும்'' என்ற தமிழ் மந்திரத்தை ஓதுவார். அப்போது, அவர் திருநாவுக்கரசர் தேவாரத்திலிருந்து, ''கற்றாயினவாறு'' எனத் தொடங்கும் பாடலைப் பாடுவார். பின்னர், மாணிக்கவாசகரின் திருவெம்பாவைப் பாடல்களுள் ''ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ்சோதி'', ''பாசம் பரஞ்சோதிக்கு என்பாய்'' என்னும் முதலிரண்டு பாடல்களும் அவரால் ஓதப்பெறும். அரசகுரு, திருமுடியை எடுத்து அரசரிடம் கொடுப்பார். அரசர் அதனைத் தன் தலையில் சூட்டிக்கொள்வார். பின்னர், அக்குரு அரசருக்குரிய சின்னங்களை ஒவ்வொன்றாக அரசருக்குத் தரு வார். அவரும் அரசகுருவைப் போலவே, பாலிமொழியிலும், சயாமிய மொழியிலும் பேசுவார். இறுதியில் சிவன் கோவில் அரசகுரு, மண்டியிட்டு மன்னரை வாழ்த்துவார்.

''கயிலை கடை திறப்புப் பாடுவது சிவனாரை வழிபடுவதற் காக அழைப்பதாகும்.பட்டாபிடேகத்தன்று அதனைப் பாடுவது, அரசரைச் சிவனாகக் கொள்ளுவதற்குரிய அறிகுறியாகும். தாய் லாந்து அரசர் பட்டங்களில், 'திவ்விய தேவாவதாரம்' என்பதும் ஒன்று. இங்கே தமிழ்ப்பாட்டு ஒன்றை, 'மந்திரம்' என்று பாராட்டுவதைக் குறிப்பிடவேண்டும். சிவன் கோவில் பார்ப் பனருக்கு முதலிடம் தந்ததையும் மறந்து விடுதலாகாது. முற் காலத்தில் சைவமும் வைணவமும் நாட்டின் தலைமைபூண்ட தையும, அப்போது தமிழுக்கு இருந்த மந்திரச் சிறப்பையும் இவைகொண்டு உய்த்துணரலாம்''.[7]

## உழவர் திருநாள்

தாய்லாந்தின் கொண்டாடப்படும் ரேக்னா (Rekna) என்னும் உழவுத் தொழில் விழா, இந்தியாவில் பண்டைக்காலத்தில் நடை பெற்ற உழவர் திருநாளில் கொண்டாடப்பெற்ற சடங்குகளின் நினைவுச் சின்னமாகக் காணப்படுகிறது. புத்த சாதகக் கதை களில், சுத்தோதனர் நிலத்தை உழுது விழாச் செய்ததாகக்

7. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், மு.கு.நூல், ப. 41.

கூறப்பட்டுள்ளது. இராமாயணத்தில், சனகர் நிலத்தை உழுத போது, சீதை கிடைத்ததாகவும் சொல்லப்படுகிறது.

இவற்றைப் போன்று, சயாமில் பண்டைக்கால அரசர்கள் ஒரு நன்னாளில், தாங்களாகவே, ஒரு சிறு நிலத்தை உழுது, உழவுத்தொழில் விழாவைத் தொடங்கி வைத்தனர். இக்காலத்தில், அரசருடைய சார்பில் வேளாண்மைத் தொழில்துறை அமைச்சர், பேங்காக்கு நகரிலுள்ள அரசப் பூங்காவில், வெள்ளை எருதுகள் பூட்டிய ஏரினால், நிலத்தை உழுது, உழவுத்தொழில் விழாவினைத் தொடங்கி வைக்கின்றார். அதன் பிறகு, விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகிறது. இந்த கைய விழா சீனாவிலும் அரசாங்கச் சார்புடையதாக நடத்தப் பெற்று வந்தது. இவ்விழா, பொதுவாக 'உழவர் திருநாளாக' இன்றும் போற்றப்படுகிறது.

இடைக்காலத் தமிழகத்தில் பொங்கல் திருநாளை யொட்டி உழவர் திருநாள் கொண்டாடப்பட்டதைச் சோழர் காலத்தியக் கல்வெட்டுகளால் அறிகிறோம்.

## பழக்க வழக்கங்கள்

தாய்களின் அன்றாடக் குடும்ப வாழ்க்கையில், பார்ப்பனர் களால் பல சடங்குகள் செய்யப்படுகின்றன. அவற்றைச் "சம்ஸ் கராய்" என்று கூறுகின்றனர், இதனை வடமொழியில் "சமஸ் காரம்" என்பர். இந்தியாவில் இல்லறத்தில் ஈடுபட்டோர் செய்யும் சடங்குகள் பன்னிரண்டு. அவற்றுள் மூன்று அல்லது நான்கினைத் தாய்கள் செய்து வருகின்றனர். குழந்தை பிறந்த ஒரு மாதம் கழித்து, அதன் தலையின் முன்பக்க மயிரினைக் குறைத்தல், குழந்தைக்குப் பெயரிடுதல், காதுகுத்தல் முதலியவற்றைக் குறிப்பிடலாம். பதினொன்று, பன்னிரண்டு வயதுவரையில் சயாமியர், தங்கள் குழ்ந்தைகளுக்குக் குடுமி வளர்த்து வருகின்றனர். அதற்குப் பிறகு மொட்டை அடிக்கின்றனர். இச்சடங்கு ஆண், பெண் ஆகிய இருபால் குழந்தைகட்கும், அவர்களுடைய குடும்பங்களில் பெருஞ்சிறப்புடன் கொண்டாடப்படுகின்றது.

பேங்காக்கு கோவில் ஒன்றில் இவ்விழா, ஆண்டுதோறும் மிகச்சிறப்பாக நடத்தப்பெறுகிறது. அவ்விழாவின்பொழுது, ஏழைச் சிறுவர்களும் சிறுமியர்களும் ஆயிரக்கணக்காக அக்கோவிலில் கூடுகின்றனர். அவர்கட்கு மொட்டை அடிப்பதற்குரிய கூலிப்பணம, அரசரால் அன்பளிப்பாகக் கொடுக்கப்பெறுகிறது. மேலும், அவ்விழாவின் முடிவில் ஏழை, எளிய மக்கள் அரசரிடம் நன்கொடையாகப் பொன்னையும பொருளையும் பெற்றுச் செல்

லுவர். இத்தகைய சிறப்புமிக்க விழாக்களும் சடங்குகளும் தாய் மக்களுடைய குடும்ப வாழ்க்கையில் பௌத்த, இந்து சமயங்களுக்கு உரிய சடங்குகள் பெற்றுள்ள செல்வாக்கைத் தெளிவாக விளக்குகின்றன.

## வெள்ளை யானை

தாய்லாந்து, பண்டைக் காலத்தில் வெள்ளை யானைக்குப் பெயர்போன நாடாக விளங்கியது. 'வெள்ளையானை' என்பது உடல் முழுவதும் வெண்மையான நிறமுடைய யானை அன்று. காதுகளின் ஓரத்திலும், துதிக்கையின் மேற்புறத்திலும் வெண்மை நிறமுடைய யானைகளே, ''வெள்ளை யானைகள்'' என்று போற்றப்பட்டன. இத்தகைய யானைகள், 'அல்பைனோ' (Alfino) இனத்தைச் சேர்ந்தவை என்பது விலங்கு இயலார் கருத்து.

பண்டைக்காலத்தில், சயாமிய அரசாங்கத்தின் ஆதரவில், வெள்ளை யானைகள், அரசகுமாரர்களைப் போன்று சீராட்டி வளர்க்கப்பெற்றன. வெள்ளை யானைகள் இறந்துவிட்டால், அரசாங்க மரியாதையோடு அவை அடக்கம் செய்யப்பெற்றன. வெள்ளை யானைகளையும், அவற்றின் கன்றுகளையும் அரண்மனையில் மிகச் சிறப்பாக வளர்த்தனர். அவை வளர்க்கப்பட்ட விதம் நமக்கு வியப்பை அளிக்கிறது. பால்கொடுக்கத்தக்க நிலையில் இருந்த செவிலித் தாய்கள், வெள்ளை யானைக் கன்றுகளுக்குப் பாலூட்டித் தாலாட்டுப் பாடி, தூங்கவைத்தமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.[8] ''வெள்ளை யானைக்கு உணவூட்டுதல் பெருஞ் செலவினமாக அமையும்'' எனும் ஆங்கிலப் பழமொழி,[9] இங்குக் கருதத் தக்கதாகும்.

## விருந்தோம்பல்

விருந்து ஓம்புதல், புனிதமான ஒரு கடமையாகத் தாய்லாந்து மக்களால் கருதப்படுகிறது. முன்பின் அறியப்படாதவர்களை வரவேற்று, உபசரிப்பதில் பண்டைத் தமிழ்நாட்டு மக்களைப் போன்ற உணர்வும் உள்ளமும் உடையவர்களாகச் சயாமியர்கள் விளங்குகின்றனர்.

---

8. Quaritch Wales, Op. Cit.; p. 279.
9. ''To feed the White elephant''

## ஐயமிடுதல்

கோயில்களில் உள்ள பிச்சைக்காரர்கள் மதித்துப் போற்றப் படுகின்றனர். அவர்களுக்குப் பொருளுதவி செய்வது, ஒரு புண்ணியச் செயலாகக் கருதப்படுகிறது.

## அன்னமிடல்

விழாக்காலங்களில் பரதேசிகளுக்கும் துறவிகளுக்கும் அன்ன மிடுவதும் அங்குப் பெருவழக்காக உள்ளது.

தீர்த்த யாத்திரை செய்வதும், புனிதத் தலங்களுக்குக் குறிப் பிட்ட பருவங்களில் பயணம் செய்வதும் தாய்களின் புனிதக் கட மைகளாக இருந்து வருகின்றன.

இவை யாவும் இந்தியா முழுவதிலும் இன்றுவரையில் போற்றப்பட்டு வரும் பழக்க வழக்கங்களாகும்.

# 4. 6.

# சமயத் துறையில் தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகள்

சயாமியர்கள், கெமர்களிடமிருந்து தங்கள் நாகரிகப் பண்பாட்டைப் பெற்றனர். எனினும், காம்பூச்சியாவின் மக்களால் பெரிதும் வரவேற்கப்பட்ட ஈனயான பௌத்த சமயத்தை, அந்நாட்டில் புகுத்துவதற்குக் காரணமாக இருந்தவர்கள் சயாமியர்களேயாவர். தென்கிழக்கு ஆசிய வரலாற்றின் பிற்பகுதியில்; அவர்கள் அரசியலரங்கில் தோன்றினர். எனினும், புத்த சமயத்தின் பழம்பெருமையைப் போற்றுவதில், எவருக்கும் அவர்கள் பின் வாங்கியவர் அல்லர்.

## பௌத்த சமயம்

பதினான்காம் நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்றால்,இலங்கையிலிருந்து போதி மரக்கிளை ஒன்றும், பீகாரிலிருந்து புத்தரின் பழம்பொருள் சின்னம் ஒன்றும் தாய்லாந்திற்குக் கொண்டு வரப்பட்டதை முன்பே கண்டோம். சயாமியர்களில் சமய வெறி கொண்ட சிலர், புத்தர் சயாமிற்கு வந்ததாகவும், வந்தவிடத்தில் அவர் பரிநிர்வாணம் அடைந்ததாகவும் புராணக் கதைகள் சில புனைந்துள்ளனர்.

தாய்லாந்தில் புத்தரின் கோயில்கள் பல உள்ளன. அவற்றுள் தெய்வங்களின் சிலைகள் ஒன்றும் இல்லை. அங்குக் காணப்படுவது புத்தருடைய சிலையும், புத்தருடைய வாழ்க்கைச் சின்னங்களுமே யாகும். அங்குச் செல்லும் மக்களுக்கு, அந்த அறவோரின் அன்பொளி தவழும் திருமுகம் ஆறுதலும், அமைதியும் அளித்து, மனத்தைத் தூய்மைப்படுத்தும் ஆற்றல் வாய்ந்த

தாக உள்ளது. இந்தத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு, பௌத்தக் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. அக் கோயில்களுக்குத் 'தாய்' மொழியில் 'பிராசேடி' என்பது பெயர். 'பிரா' என்பதற்கு 'மேன்மை வாய்ந்த', 'மாண்புமிக்க' என்பன பொருள்களாகும். 'சேடி'என்னும் சொல் பாலிமொழிச் சொல்லான 'சேடியா'வின் திரிபாகும், இதற்குக் 'கல்லறை மீதுள்ள மண்மேடு' என்பது பொருள்.

மண்மேடு, கவிழ்க்கப்பட்ட ஒரு மணியைப்போல் உருவம் உடையது. அதே உருவத்தில், பெரியதாகக் கருங்கல்லினாலும், பளிங்கினாலும், சுண்ணாம்பினாலும் கட்டடங்கள் அமைக்கப் பட்டன. மணி வடிவம் கொண்ட பாகத்திலிருந்து நீண்டதோர் தூபியை வான்நோக்கி எழுப்பினார்கள். இதைப்போன்ற கோயில்கள் பல, தாய்லாந்தில் உள்ளன.

## புத்தரின் சிறப்புமிகு கோயில்கள்

அவற்றுள் வாட்பிராகியோ, வாட்போ, வாட்கடேப், வாட்அருண் வாட் பெஞ்மாபோபிட், வாட்நகார்ன்பட்டோம், வாட்காப் லூ வாங்கு வாய்டாய் சூடேப்பு என்பன முக்கியமானவை. 'வாட்' என்னும் தாய்மொழிச் சொல்லிற்குக் 'கோயில்' என்பது பொருள். 'பிரா' என்பது மேன்மை மிக்க கடவுளைக் குறிப்பதாகும். 'கியோ' என்றால் 'பச்சை நிறம்' என்பது பொருள். வாட்பிராகியோ கோயிலில் உள்ள புத்தர் சிலை, மரகதக் கல்லால் ஆனது. அது ஏறக்குறைய .7.7மீ உயரம் உடையது. பச்சை மரகதக் கல்லால் செய்யப்பட்ட புத்தரின் சிலை இருப்பதால், இதைப் 'பச்சைக் கடவுள் கோயில்' என்று தாய் மக்கள் சுட்டுகின்றனர். இது பேங்காக்கில் இருக்கிறது.

கோயிலுக்குள் பல தனிக்கட்டடங்கள் உள்ளன. அவை யெல்லாம் சுற்றாலையில் திறந்த வெளியில் உள்ளன. அவற்றின் உட்புறம் எங்கும் கண்ணைக் கவரும் ஓவியங்கள் தீட்டப் பெற்றுள்ளன. அவை புத்தர் பெருமானின் வாழ்க்கைச் சித்திரங் களாகும். வடக்கே, வடகிழக்குச் சுவர்களில் 'இராமகியான்' என்று தாய்மக்களால் போற்றப்பெறும் இராமாயணக்கதை முற்றும் சித்திரிக்கப்பெற்றுள்ளது.

கோயிலின் மூலத்தானம் படிமேடைகளைக் கொண்ட மண்டபமாகும். நடுவிலிருக்கும் உயர்ந்த மேடையின்மீது புத்தர் சிலை வைக்கப் பெற்றிருக்கிறது. ஒவ்வொரு படியிலும் தங்க ரேக்குகளால் போர்த்தப்பெற்ற பௌத்த சமயத் தெய்வங்கள் பலவற்றின் சிலைகள் வைக்கப்பெற்றுள்ளன.

அந்த மண்டபத்தின் கூரை, ஓடுகளால் அமைக்கப்பட்டது. ஒருவகை மண்ணால் செய்யப்பட்ட அவ்வோடுகள், பீங்கான் போல் வழவழப்பும் பளபளப்பும் உடையன; கூரை ஒரே சரிவு கொண்டிராமல் அடுக்கு வரிசைகளாக, ஒன்றன் மீதொன்று படிந்து, சாய்ந்து கொண்டிருக்கும். ஆங்காங்கே, முக்கோண வடிவச் சுவர்கள், கூரையின் விளிம்பிலும், மேற்சந்திப்பிலும் பொருத்தப்பட்டுள்ளன. அவற்றோடு ஒட்டி, நீண்ட நாகப் பாம்புகளின் உருவங்கள் கூரையின் விளிம்பை அழகு செய்யும். மண்டபத்தின் முன்புறத்தில் வாய் பெருத்து, அகன்றும், பின் புறத்தில் சிறுத்து கூர்மையான வால்களுடன் அழகாகத் தொங்கும். தாய்லாந்தின் பௌத்தக் கோயில்களில் எல்லாம், பாம்பு வடிவங்கள் அலங்காரச் சின்னங்களாக அமைக்கப் பெற்றிருக்கின்றன. அது அந்நாட்டின் கலைப்பாணியின் தனிச் சிறப்பு வாய்ந்த ஒரு பண்பாகும்.

'வாட்போ' என்னும் புத்தர் கோயிலும் பேங்காக்கில் இருக் கிறது. துயில்கொள்ளும் புத்தர் கோயில் என்பது இதற்குப் பொருளாகும். இக்கோயிலில், புத்தர் பெருமான் படுத்துறங்கும் நிலையில் காட்சி தருகிறார். அவருடைய திருமேனி 17.2மீ. நீள முடையது; 4.6மீ. உயரம் உடையது; வலது பக்கம் சாய்ந்து படுத்து, வலக்கையின் மேல், தம் தலையை வைத்து, இடக்கை முழுவதும் உடலுடன் சேர்ந்துள்ள இச்சிலை, பேரழகு வாய்ந்த தாகும். உடல் முழுவதும் பொன் இழை போர்த்தப்பட்டிருக் கிறது. கண்கள் முற்றும் மூடப் படவில்லை; கண் இமைகள் சிறிது மூடி, பாதிக் கண்கள் திறந்துள்ள தோற்றத்தோடு முகத் தில் புன்முறுவல் பூக்கிறது; அமைதியும் அருளும் தவழுகிறது; நீண்ட வனப்பான காதுகள்; ஒவ்வோர் உறுப்பும் உடலின் நீளத்திற்கு ஏற்றவாறு பொருத்தமான அமைப்பும் நேர்த்தியும் உடையதாகும். இச்சிலை புத்தரின் பரிநிர்வாணத்தைப் புலப் படுத்தும் அழகுமிக்க ஒன்றாகும்.

சலவைக்கற்களால் இழைக்கப்பட்ட புத்தரின் திருவடி களில், முத்துகள் பதிக்கப்பெற்றுள்ளன. காண்பவரின் கண்களை யும் கருத்தையும் இது கவர வல்ல எழில் மிக்கது. இதையொட்டி மருத்துவமனையும், நூலகமும் பண்டைக்காலம் முதல் இருந்து வருகின்றன. தமிழ்நாட்டில் சோழர் காலத்தில், இத்தகைய நிறுவனங்கள் கோயிலை ஒட்டி அமைக்கப்பட்டிருந்தமை நினைவுகூரத் தக்கது.

உடல் அமைப்பைச் சித்திரங்களோடு விளக்கும் மருத்துவ நூல்கள் இங்குள்ள நூல்களுள் தலைசிறந்தனவாகும். நெடுங்

காலமாக அக்கோயிலில் தங்கி வாழும் துறவிகள், மக்களுக்கு மருத்துவப் பணியும், கல்வித் தொண்டும் ஆற்றி வந்துள்ளனர். நூலகத்து ஏடுகள் எல்லாம் ஓலைச் சுவடிகளாகவும், மூங்கிலிலிருந்து தயாரித்த காகிதங்களாகவும் உள்ளன.

## பொன்வேய்ந்த கோபுரம்

இத்தகைய எழிலும் ஏற்றமும், சீரும், சிறப்பும் பெற்ற பௌத்தக் கோயில்கள் பேங்காக்கு நகருக்கு வெளியிலும் பல உள்ளன. அவற்றுள் வடக்குத் தாய்லாந்தில், 1800மீ. உயரத்தில் மலைமேல் இருக்கும் வாட்டாய் சூடப் தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். படிகள் ஏறினதும், ஒரு சமதளத்தில் கோயில் காணப்பெறுகிறது. உள்ளே ஒரு மண்டபத்தில் பெரியதோர் புத்த விக்கிரகமும், அருகில் பொன் ஒளி வீசும் பொன்னால் வேயப்பட்ட கோபுரமும் உள்ளன. தமிழ்நாட்டில் பன்னெடுங்காலமாகச் சிதம்பரம் நடராசர் திருக்கோயிலின் விமானம், பொன்னால் வேயப்பட்டிருப்பதும் இங்கு நினைவுகூரத் தக்கது. பண்டைக்கால சேடியின்மீது எழுப்பப்பெற்ற கோபுரம் இது. கோயிலினுள் புத்தர் பெருமானுடைய எலும்பு ஒன்று புதைக்கப்பட்டு இருப்பதாக நம்பப்படுகிறது. கோயிலின் மேல் எழுப்பப்பட்டுள்ள விமானம் சிற்ப வேலைப்பாடுகள் கொண்ட வியக்கத்தக்க படைப்பாகும்.

இவை அல்லாமல், சில சீனக்கோயில்களும் தாய்லாந்தில் உள்ளன. அவை பெரும்பாலும் வழிபாட்டுக் கூடங்களைக் கொண்ட மண்டபங்களாக உள்ளன.

## சைவ, வைணவ நெறிகள்

காம்பூச்சியாவின் மூலம் வைதிக இந்து சமயம், கி. பி. 422 அளவில் சயாமிற்குக் கொண்டு வரப்பட்டது. கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு அளவில், பிராமண சமயம் சயாமில் புகுந்தது. எனினும், அது செல்வாக்குப் பெற்று விளங்க, நெடுங்காலம் ஆயிற்று. இதற்கு இடையில், தமிழகத்திலிருந்து நேரடியாகச் சமய உறவு உண்டானமைக்குரிய சான்றுகள் சில இங்குக் கிடைத்துள்ளன.

## தமிழ்க் கல்வெட்டு

'பழைய தகுவா-பா நகரில், வாட்நா மியாங்கு (Wat Na Miang) கோயில் உட்புறத்தில், கல்லின்மீது, தமிழ்மொழியில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. ஹூல்ஷ் என்ற கல்வெட்டியல் ஆராய்ச்சியாளர், அக்கல்வெட்டு

பழைய தமிழ் எழுத்துகளில் பொறிக்கப்பட்டு இருப்பதாகக் கருதுகிறார். அக்கல்வெட்டு, விசயநந்தி விக்கிரமர்மனின் திருவல்லம் கல்வெட்டோடு ஒப்புமையுடையதாகக் காணப்படுகின்றது என்று அவர் கூறுகிறார். விசயநந்திவர்மன், பல்லவப் பேரரசர்களுள் இறுதியாகச் சிறப்புற்று விளங்கிய மூன்றாம் நந்திவர்மன் என்பதில் சிறிதும் ஐயமில்லை.[10] அவன் கி.பி. 846 முதல் 869 வரை ஆண்டான் என்பர். அக்கல்வெட்டின் வாசகம்:

> "......(5) வர்மன் கு(ணா)... மாந்தன்
> நாங்கூருள (யா)ன் தொட்ட குளம் பேர்சிரி
> அவனி நாரணம். மணிக்கிரா மத்தார்க் (கும்)
> சேனாமுகத்தார்க்கும் பதார்க்கம் அடைக்கலம்" [11]

இக்கல்வெட்டினால். சில உண்மைகள் தெரியவருகின்றன. 'அவனி நாரணன்' என்னும் பட்டப்பெயரையுடைய மூன்றாம் நந்திவர்மன் காலத்தில் அக்கல்வெட்டு பொறிக்கப்பட்டதாகும். தமிழகத்து, 'மணிக்கிராமம்' என்ற வாணிகக் குழுவினைச் சேர்ந்த வாணிகன் ஒருவன், சயாமில் உள்ள திருமால் கோயிலில் குளம் ஒன்றை வெட்டி. அதற்கு 'அவனி நாரணன் குளம்' என்று பெயரிட்டான் என்பது அறியப்படுகிறது. இதனால், கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில், தமிழ்நாட்டு வாணிகக் குழு ஒன்று, சயாமில் நிலையாகத் தங்கி இருந்தமையும், அவர்கள் அங்குத் திருமாலுக்குக் கோயில் அமைத்து, குளந்தொட்டு விழாவெடுத்தமையும் புலனாகின்றன. கி. பீ ஆறாம் நூற்றாண்டு முதல், ஒன்பதாம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் பெருக்கெடுத்து ஓடிய சைவ, வைணவ சமயங்களாலாகிய பக்தி வெள்ளத்தின் ஓர் அலை, அலைகடல்களுக்கு அப்பால், நெடுந் தொலைவில் உள்ள சயாம் நாட்டில் சென்று, வீசியதன் விளைவாக, அங்கு வைணவ சமயத்திற்குரிய திருமாலின் கோயில், தமிழ்நாட்டு வாணிகர்களாலேயே கட்டப்பட்டமை தெரியவருகிறது. அக்கல்வெட்டில், 'சேனாமுகம்' என்றொரு சொற்றொடர் காணப்படுகிறது.

'சேனாமுகம் என்பதற்கு ஒரு படையின் முன்னணி' என்பது பொதுவான பொருளாகும். எனினும், படைவீரர் தங்கியிருக்கும் இடத்திற்கு அப்பெயர் வழங்கப்பட்டது உண்டு. எனவே, வாணிகக் குழுக்கள் வெளிநாடு சென்றபொழுது, தற்

10. Journal fo Oriental Research, Vol.6; P.304
11. Hultzsch, J. R. A. S.. 1913, pp. 337; 1914; 1914-397 ff T. A, Gopinatha Rao, Epigraphia Indica, Vol. 18, PP,71-74.

காப்புப் படையின் துணையோடு, அவை சென்றிருக்க வேண்டும் என்பது இதனால் புலனாகின்றது.

## தமிழரின் குடியிருப்புகள்

பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார், இக்கல்வெட்டினை ஆராய்ந்துள்ளார். தகுவா-பா கல்வெட்டில் இருந்து, தமிழ் மக்கள் பலர் சயாமில் வாழ்ந்தமையும், அவர்களுள் வணிகரும் வீரர்களும் சிறப்புற்றிருந்தமையும் அறியப்படுகிறது. "இதனால், மூன்றாம் (பல்லவ) நந்திவர்மனின் அரசியல் ஆதிக்கம், சிறிது காலமேனும் மலேயா தீபகற்பத்தின் மேலைக் கடற்கரையின் பகுதிகள் சிலவற்றிலாகினும் சென்று பரவியிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது"[12] என்பது அவருடைய கருத்தாகும். இதனால், தமிழருடைய ஆதிக்கம் பல்லவர் காலத்தில் சயாமிற்குச் சென்று பரவக்கூடிய அளவிற்குச் சிறப்புற்று விளங்கியது எனலாம்.

## தெய்வச் சிலைகள்

வைதிக சமயம் சயாமில் செல்வாக்குப் பெற்றிருந்தது. இதற்குரிய சின்னங்கள் பல கிடைத்துள்ளன. சிவபெருமான், திருமால், இலக்குமி, கணேசர் முதலிய இந்து தெய்வங்களுடைய சிலைகள் பல இங்குக் கண்டெடுக்கப்பெற்றுள்ளன. சிவபெருமான் சிலை ஒன்றில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துகளிலிருந்து கி. பி. 1501ல் காம்பங்பெட் (Kamphengpet) அரசனான தருமகோசன், சிவ வழிபாட்டை முதன்முதல் சயாமிற்குக் கொண்டுவந்து புகுத்தியதை அறிகிறோம். அவன் சிவ நெறியையும் பௌத்த சமயத்தையும் ஒருங்கே போற்றி ஆதரித்தான் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

## புத்தரும் சிவனும்

பேங்காக்கிலுள்ள அரசருடைய கோயில் அழகு வாய்ந்தது. இதில் இராமாயணத்தில் இருந்து பல காட்சிகள் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இந்து சமயப் புராணக் கதைகள் சயாமிய ஓவியர்களுக்கும் சிற்பிகளுக்கும் எண்ணற்ற கருப்பொருள்களை எளிதில் கொடுத்துதவின. திருமால், கருடன்மீது அமர்ந்துள்ள கோலத்தில் பல சிற்பங்களும், சிலைகளும் அங்குக் கிடைத்துள்ளன. காளைமீது அமர்ந்து விளங்கும் சிவபெருமான், மற்றும் இந்திரன், யமன் முதலிய தெய்வங்களின் சிலைகளும்

---

12. K. A. Nilakanta Sastri; 'Takuapa and Its Tamil Inscription' JOR; Vol. 6, p p. 299-310.

கோயில்களை அணி செய்கின்றன. ஒருகாலத்தில் சிவபெருமானுக்கும் புத்தருக்கும் இடையே ''யார் பெரியவர் ?'' என்பது குறித்துப் போட்டி நடந்ததாகவும், அப் போட்டியில் புத்தரே வெற்றி பெற்றதாகவும் ஒரு கதை, தாய்லாந்து மக்களிடத்து வழங்கி வருகிறது. இக்கதை, சயாமின் கோயில்களுள் காணப்படும் புதுமையான சிலை ஒன்றினை விளக்குவதற்கு எழுந்ததாகும்.

சிவபெருமான் தோளின்மீது புத்தர் அமர்ந்து இருக்கும் கோலத்தில் அச்சிலை செதுக்கப்பட்டிருக்கிறது. இதனால், சயாமில் சிவ-புத்த வழிபாடு இருந்துவந்தது என்பதும், இறுதியில் புத்த சமயம் சைவசமயத்தைக் காட்டிலும் சிறந்த செல்வாக்கினை அடைந்தது என்பதும் தெரிகின்றன. சில பௌத்த சமயக் கோயில்களில், இன்றும் சிவலிங்கங்கள் காணப்படுகின்றன.

இதனால், இந்தியாவில் முரண்பட்டு விளங்கிய இவ்விரு சமயங்களும் இங்கு இணைந்ததோர் ஒருமைப்பாட்டை அடைந்தமை புலனாகிறது.

சயாமிய அரச குமாரர்களின் குடுமி மழிக்கப்படும் திருவிழாவின், ஒரு பகுதியாக விளங்கும் கயிலைக்காட்சி, சிறப்புமிக்கது. கயிலை மலையில் சிவபெருமான் அமர்ந்து இருப்பதைப் போன்று வேடம் அணிந்து, அரசன் அரியாசனத்தில் வீற்றிருப்பான். அந்நிலையில் மொட்டை அடிக்கப்பட்ட அரசகுமாரன், அரசன் அருகில் சென்று வணங்குவான். சிவபெருமான் கோலத்தில் உள்ள அரசன், அரசகுமாரனை மகிழ்ச்சியுடன் வரவேற்று, வாழ்த்துரை வழங்குவான். இது ஒரு புனிதமான சடங்காகப் போற்றப்படுகிறது.

## ஆகம நெறி

தாய்லாந்தில் நடைபெறும் கோயில் வழிபாடுகள், பெரும்பாலும் ஆகம நெறிப்படி நடைபெறுகின்றன. அவை தமிழகத்தின் திருக்கோயில்களுள் நடைபெறும் வழிபாட்டு முறைகளைப் பெரிதும் ஒத்திருக்கின்றன. அவற்றுள், சிற்சில மாற்றங்களும் திரிபுகளும் காலத்திற்கும், இடத்திற்கு மேற்ப உண்டாகியுள்ளன. காப்புக் கட்டுதல், நோன்பு இருத்தல், தீபதூப ஆராதனை செய்தல், பழங்களைப் படைத்தல், மலரினைத் தூவி வழிபடுதல், திருவிழா ஊர்வலம் போன்றவை சயாமிலுள்ள மூன்று இந்து சமயக் கோயில்களில் இன்றும் நடைபெற்று வருகின்றன. இவை தமிழ்நாட்டுக் கோயில் வழிபாட்டையும், விழாக்களை

யும் பெரிதும் ஒத்துள்ளன என்பது நேரில் கண்ட பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரின் முடிபாகும்.

## திருவூசல் திருவிழா

தாய்லாந்தில், ஆண்டுதோறும் இரண்டு நாள்கள் திருவூசல் (ஊஞ்சல்) திருவிழா கொண்டாடப்பட்டு வந்தது. அறுவடைக்குப் பின்னர், இயற்கை அன்னைக்கு நன்றி செலுத்தும் வகையில், திருவூசல் திருவிழா நடத்தப்பட்டது. அவ்விழாவினை ''லோ ஜின் ஜர்'' என்று சுட்டுகின்றனர். இதற்கு 'ஊஞ்சலை வலிப்பது' என்பது பொருளாகும். இத்திருவிழா சயாம் நாட்டின் தேசியத் திருவிழவாகக் கொண்டாடப்பெற்றது.

சயாமில் மூன்று இந்து சமயக் கோயில்கள் உள்ளன. வெளியிலிருந்து பார்த்தால், சயாம் நாட்டுக் கட்டடங்கள் போலவே அவற்றின் கூரைப்பகுதி காணப்படும். அம்மூன்று கோயில்களுள் வடபுறத்தில் இருப்பது திருமாலின் கோயிலாகும்; தென்புறத்தில் இருப்பது சிவன் கோயிலாகும்; இவற்றிடையே விநாயகருடைய கோயில் கட்டப்பெற்றிருக்கிறது. கட்டடத்தின் நடுவே, ஊசலாடுவதற்குரிய கம்பங்கள் இரண்டு நடப்பட்டுள்ளன. அந்தக் குறுக்குச் சட்டத்திலிருந்து திருவிழாவின் போது ஊஞ்சல் பலகையைத் தொங்கவிடுவார்கள். இந்தத் திருவிழாவின்போது, முதல் நாள் காலையில், ஓர் ஊர்வலம் புறப்பட்டு ஊஞ்சல் இருக்கும் இடத்திற்குச் செல்லும். ஊர்வலம் வந்தவுடன் சில சடங்குகளைப் பார்ப்பனப் புரோகிதர்கள் செய்வர். அவ்விழாவில் உயர்ந்த அரசாங்க அதிகாரி ஒருவர், கலந்துகொள்வார். அவருடைய தலைமையின்கீழ், நன்னான்கு பார்ப்பனர்கள், மூன்று குழுக்களாக வந்து பெரியதோர் ஊஞ்சலில் அமர்ந்து ஆடுவர். அவர்கள் தலையில், பாம்புமுடி அணிந்திருப்பார்கள்.

இந்த ஊஞ்சலுக்குச் சிறிது மேற்குப் பக்கத்தில், ஒரு மூங்கிற் கழி நடப்பட்டிருக்கும். ஒவ்வொரு குழுவும் ஊஞ்சலாடும் பொழுதும் அம்மூங்கில் கழியில் ஒரு பொற்கிழியைக் கட்டுவார்கள். ஊஞ்சலைக் கீழே இருந்து, இழுத்து ஆட்டுவார்கள். விரைவாக ஊஞ்சல் ஆடும்பொழுது, ஊஞ்சலில் உள்ளவர்கள் பொற்கிழியைப் பல்லால் கடித்து இழுத்திட முயலுவார்கள். இவ்வாறு ஆடும்பொழுது அப்பணமுடிப்பைத் தங்கள் பற்களால் பற்றுகின்றவருக்கு, அப்பொற்கிழி பரிசாக அளிக்கப்படும்.

இந்தச் சமய விளையாட்டு, தமிழ் நாட்டில் அணிமைக் காலம் வரையில், கிருஷ்ணஜயந்தியை முன்னிட்டுக் கொண்டாடப்பட்டு விளையாட்டுகளில் சிறந்ததான உரியடி விழாவைப்

போன்று காணப்படுகிறது. ஊஞ்சலுக்குப் பதிலாகத் தமிழ்நாட்டில் பொற்கிழியும் தின்பண்டங்களும் கட்டப்பட்டுள்ள உயர்ந்த மூங்கில் கம்பத்தின் உடலில் எண்ணெய்யைப் பூசி வழுக்குமாறு செய்வார்கள். இதனோடு, அவ்வுரியடி மரத்தில் ஏறுகிறவர்கள் மீது, கீழிருந்து, ஓயாமல் தண்ணீரை அடித்துக்கொண்டே இருப்பார்கள். இந்த இடர்ப்பாடுகளை எல்லாம் வென்று, கம்பத்தின் உச்சிக்குச் சென்றவன், வாயினாலேயே பொற்கிழியையும் தின்பண்டங்களையும் கவ்வ வேண்டும். அவனுடைய வாய்க்கு எளிதில் கிட்டாவண்ணம், அவற்றைக் கீழிருந்தபடியே, கயிறு ஒன்றினால் மேலும் கீழுமாக இழுத்தும், பக்கங்களில் சென்று வருமாறு ஆட்டியும் வேடிக்கை காட்டுவர். இந்தத் தடைகளை எல்லாம் பொருட்படுத்தாமல், யார் பொற்கிழியையும் தின்பண்டங்களையும் வாயினால் கவ்விப் பிடிக்கிறார்களோ அவரை அவ்விழாவின் வெற்றி வீரராகப் போற்றி, மாலை அணிவித்துக் கோயிலுக்குள் பூரண கும்ப மரியாதையோடு அழைத்துச் சென்று பாராட்டு எடுப்பர். 1950 வரையில் சென்னை நகரத்திலும் 'உரியடித் திருவிழா' சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இப்பொழுது திருமால் கோயில்களும், கிருஷ்ணன் கோயில்களும் உள்ள ஊர்களில், ஒரு சடங்கு என்னும் முறையில், ஆர்வமும் கோலாகலமும் இல்லாமல் கொண்டாடப்பட்டு வருகின்றது.

தாய்லாந்தில் நடைபெற்ற சடங்கு வழிப்பட்ட இத்திருவிழா விளையாட்டு, தமிழ்நாட்டின் உரியடித் திருவிழாவினையே பெரிதும் ஒத்திருப்பதனைக் காணலாம்.

திருவூசல் என்பது, தமிழ் நாட்டு வைணவத் திருக்கோயில்களில் வெள்ளிக் கிழமை தோறும் மாலையில் நடைபெற்று வரும் ஒரு வகை விளையாட்டு விழாவாகும்.

பெரும்பாலும் தாயார், சீதேவி, பூதேவி, ஆண்டாள் முதலிய பெண் தெய்வத் திருமேனிகளை ஊஞ்சலில் வைத்து, ஆட்டிப் பாட்டுப்பாடி, பிறகு தூபதீப ஆராதனை செய்வது வழக்கம்.

மங்களாசாசனம் பெற்ற திருமால் கோயில்களுள், வெள்ளிக் கிழமைகளில் மட்டும் அல்லாமல், ஆண்டுதோறும் நடைபெறும் பெரிய (பிரம) திருவிழாக்களின் (உற்சவம்) நிறைவு நாளை ஒட்டி, இரண்டு அல்லது மூன்று நாள்கள் மாலையில், திருவூ(ஞ்)சல் திருவிழா நடைபெறுவது உண்டு. அப்பொழுது திருமாலும் மகாலட்சுமியும் ஊஞ்சலில் அலங்காரமான கோலத்தோடு அமர்த்தப்படுவர்; ஊஞ்சலாட்டப்படும்; இனிய கீதங்கள் இசைக்கப்படும்.

இத்தகைய ஊஞ்சல் திருவிழா, திருவில்லிப்புத்தூர் திருக் கோயிலில் இன்றும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதைப் போன்ற ஒருவகை ஊஞ்சல் (டோலி) திருவிழாவே, தாய்லாந்து கோயில்களில் கொண்டாடப்பட்டதாகத் தெரிகிறது.

மார்கழி மாதத்தில் வரும் திருவாதிரைத் திருநாளில், தஞ்சை மாவட்டத்திலும், புதுக்கோட்டை மாவட்டத்திலும் உள்ள சிவன் கோயில்களில் 'திருவூசல்' திருவிழா நடைபெற்று வருகிறது. மாணிக்கவாசகரால் சிறப்பாகப் போற்றப்பட்ட திருப்பெருந்துறை எனும் ஆவுடையார் கோயிலில் திருவாதிரை அன்று மாலை, இறைவனையும் உமாமகேசுவரியையும் ஊஞ்சலில் அமர்த்தி திருவாசகத்தில் உள்ள 'திருப்பொன்னூ சல்' பகுதிப் பாடல்களைப் பாடி, ஊசலாட்டும் சடங்கு ஒன்று செய்யப்பட்டு வருகிறது.

மற்றும், கேரளாவில், திருவாதிரைத் திருநாளன்று, இள மங்கையர் சோலைகளிலும், வீட்டு முற்றங்களிலும் ஊஞ்சல் கட்டி விளையாடும் வழக்கம் இருந்துவருகிறது. இந்த விழாவைத் 'திருவாதிரைக் களி' எனும் பெயரால் கேரள மக்கள் சுட்டி வருகின்றனர். தமிழ்நாட்டில் 'திருவாதிரைக் களி' என்பது திருவாதிரை அன்று, சிறப்பாகப் பொரிமாவால் செய்யப்படும் ஒருவகைச் சர்க்கரைப் பொங்கலைக் குறிப்பிடும். கேரளாவில் களிப்புமிகு விளையாட்டு ஒன்றையே—ஊஞ்சல் விளையாட் டையே குறிப்பதாக இச்சொல் அமைந்துள்ளமை இங்குக் கருதத் தக்கது.

தாய்லாந்தின் பண்பாட்டை ஆராய்ந்த மேற்கு நாட்டு அறிஞர்கள், 'திருவூசல் திருவிழா' எந்த நாட்டில் இருந்து சயா மிற்கு வந்தது என்பதைத் துணிய இயலாது திகைப்புற்றுள்ளனர்.

மார்கழித் திருவாதிரைத் திருநாளில் பிறந்த முதலாம் இராசேந்திர சோழன், ஆட்சிக்கு (கி. பி. 1016) வந்த பிறகு, இந்தத் திருவிழாவைச் சிவன் கோயில்களில் பெருஞ்சிறப்பாகக் கொண்டாடும் வழக்கம் உண்டாயிற்று. அந்த விழாவின் ஒரு பகுதியே, மாணிக்கவாசகரின் திருவாசகத்தில் உள்ள 'திருப் பொன்னூசல்' பாடல்களைப் பாடி, ஆடவல்லானையும் சிவகாமி அம்மையையும் ஊஞ்சலில் வைத்து, ஊஞ்சலாட்டுவ தாகும். இந்தப் பழக்கம் தஞ்சை மாவட்டங்களில் பட்டிதொட்டி களில் எல்லாம், திருவாதிரை நாளில், முறைப் பெண்களை ஊஞ்சலில் இருத்தி, அவர்களை மணக்கப்போகும் முறை மாப்பிள்ளைகள் ஊஞ்சலாட்டும் வழக்கமாக மாறியதை அறிகிறோம்.

இந்த 'ஊஞ்சலாட்டுத்' திருவிழாவே தாய்லாந்தில் ஒரு வகைச் சமயத் திருவிழாவாகக் குடியேறி இருந்திருக்கிறது.

## பாவைப் பாட்டு

'பாவை நோன்பு' எனவும், 'தைந்நீராடல்' எனவும் 'மார்கழி நோன்பு' எனவும் சொல்லப்படும் திருவிழா, தமிழகத்தில் பெண்களால் பெரிதும் போற்றப்படும் விழாவாக இன்றும் நடைபெற்று வருவது யாவரும் அறிந்த செய்தி. இந்தத் திருவிழா, தாய்லாந்தில் பெருஞ்சிறப்புடன் கொண்டாடப்பட்டு வந்தது. 1939-க்குப் பிறகு இவ்விழா குறுகிய நிலையில், தாய்லாந்தில் உள்ள இந்து கோயில்களான சிவன், திருமால், கணேசர் ஆலயங்களில், தாய்லாந்து பிராமணர்களால், மிக முக்கியமான வைதிக விழாவாகக் கொண்டாடப்படுகிறது.

தாய்லாந்தில் நடைபெறும் இந்த விழாவில், பெண்கள் இடம்பெறுவதில்லை. தாய் மக்கள் இதனை ஒரு மழைத் திருவிழாவாகக் கொண்டாடினர்.

அவர்களுடைய பழைய மழைத் திருவிழாவில், அரசன் தலைமையேற்பான். அவன் முன்னிலையில் திருவிழா நடைபெறும். அந்த அரசனைத் திருவருள்புரியுமாறு வேண்டிக்கொள்வர். அவனை அன்றி வேறு யாரையும் அரசனாக ஏற்றுக் கொள்ளுவதில்லை எனும் சூளுரைத்து, அவனைப் போற்றி வழிபடுவர். இதற்கு ஏற்ற வகையில், கண்ணனை வழிபடும் ஆயர் மகளிர், 'அவனையன்றி வேறு எவருக்கும் வாழ்க்கைப்படோம்' எனும் உறுதிப்பாட்டை எடுத்துரைக்கும் ஆண்டாளின் 'திருப்பாவை'ப் பாசுரங்களைப் பாடுவர். இவ்வகையில் திருப்பாவை, தாய்களின் பழைய வழக்கமாய் அமைந்து அவர்களை வாழ்வித்தது.

## கடை திறப்பு

'கடைதிறப்பு' மந்திரம் என்று ஒரு தமிழ்ப்பாட்டினைத் தாய்லாந்து பிராமணர்கள் பாடுகின்றனர். கடைதிறப்புப் பாடல் ஆண்டாளின் திருப்பாவையிலும், மாணிக்கவாசகரின் திருவெம்பாவையிலும் வருகிறது.

பாவைப் பாடல்களில், கன்னியர் ஒருவரை யொருவர் எழுப்பிச் செல்லும் சமுதாயக் கூட்டுறவு வாழ்க்கையின் குழந்தையுள்ளம் வெளிப்படுவதைப் போல, தாய்லாந்தில் நடைபெறும் பாவைப்பாட்டுச் சடங்கில் வெளிப்படுவது இல்லை! எனினும் ஒருவகைச் சமுதாயத் திருவிழாவாகவே அது கொண்டாடப்

பட்டது. கன்னியர் பலர் பாடும் முறையில் அமைந்த பாவைப் பாட்டை அவர்கள் 'மந்திரப் பாடலாக'ப் போற்றிப் பாடுவது வியப்பிற்குரியதாகும்.[13] இந்த விழாவில், திருவெம்பாவையின் முதலிரண்டு பாடல்களான 'ஆதியும் அந்தமும் இல்லா' 'பாசம் பரஞ்சோதிக்கு' எனத் தொடங்குவன பாடப்பட்டன.

## பாவை விழா

இக்காலத்தில், பேங்காக்கு நகரில் உள்ள, மூன்று இந்து கோயில்களிலும் டிசம்பர் மாத இறுதியிலும் ஜனவரித் தொடக்கத்திலும் பதின்மூன்று நாட்கள் திருப்பாவை-திருவெம்பாவைத் திருவிழா ஆண்டுதோறும் கொண்டாடப்படுகிறது. ஏறக்குறைய மார்கழி மாதத்திலேயே இந்த விழா இன்றும் தாய்லாந்தில் நடத்தப்படுவது சிந்திக்கத் தக்கது.

தாய்லாந்து பிராமணர்களால், இந்து கோயில்களில் கொண்டாடப்படும் விழாவாக இன்று காணப்படுகிறது. ஆனால், சென்ற நூற்றாண்டுவரை சயாமின் தேசியத் திருவிழாவாகவே, இது போற்றப்பட்டது என்பதைக் காலவழிச் செய்திக் கோவைகளால் அறிகிறோம்.

இப்பொழுது பதின்மூன்று நாட்கள் இந்த விழா நடத்தப்படுகிறது. இந்த விழாவின்பொழுது. தாய்லாந்தில் உள்ள பிராமணர்கள் எல்லாரும், இக்கோயில்கள் உள்ள இடத்திற்கு வந்து சேருவர். இந்தப் பிராமணர்கள் எல்லாரும், தமிழ்நாட்டுப் பார்ப்பனர்களுக்கும் தாய் பெண்களுக்கும் பிறந்த ஒருவகைக் கலவைச் சாதியினர். எனினும், தங்களைப் 'பிராமணர்' எனக் கூறிக் கொள்ளுவதைப் பெருமையாக அவர்கள் கருதுகின்றனர். ஏறக்குறைய ஐம்பது தலைமுறைக்கு முற்பட்ட தமிழ்நாட்டுப் பிராமணர்களின் கால்வழியினராகத் தங்களை அவர்கள் கருதுகின்றனர்.

விழாவின் தொடக்க நாளில், கொடியேற்றுதல் நடைபெறுகிறது. அன்று, அங்கு வந்துள்ள பிராமணர்கள் அனைவரும் விழாவைச் சிறப்புற நடத்தும் நோன்பிற்கு அறிகுறியாகக் கையில், காப்புக் கட்டிக் கொள்ளுகின்றனர். அதன்பிறகு, அரசனுடைய அரண்மனையில் இருந்து, ஒரு பெரிய அதிகாரியின் தலைமையில் 'பிரமாவின்' சிலை, ஊர்வலமாக அங்குக் கொண்டுவரப்படுகிறது. அச்சிலையைப் பயபக்தியோடு பிராமணர்கள் வரவேற்று, கணேசர் கோயிலில் அந்தச் சிலையை எழுந்தருளச் செய்கின்றனர். பதின்மூன்றாம் நாள் விழா முடி

13. தெ. பொ. மீ.; மு. கு. நூ. ப. 55

வடைந்த பிறகு, அந்தச் சிலை மீண்டும் அரண்மனைக்கே எடுத்துச் செல்லப்படுகிறது. இந்த விழாக் காலத்தில், பிரமனுக்கும் தனி வழிபாடு நடத்தப்படுகிறது.

முதல் ஐந்து நாள்கள், சிவன் கோயிலில் விழா நடத்தப்படும். அடுத்து ஐந்து நாள்கள் திருமால் கோயிலில் விழா நடைபெறும். எஞ்சிய மூன்று நாள்களில் கணேசர் கோயிலில் இவ்விழா நடத்தப்படுகிறது.

திருவிழாவின் சிறப்புமிகு காட்சி, பிராமணர்கள் பல குழுக்களாக அமர்ந்து, வேதமந்திரம் ஓதுவதைப் போல திருப்பாவை, திருவெம்பாவைப் பாடல்களை ஓதுகின்றனர்; பாராயணம் செய்கின்றனர். அவர்களுடைய தலைமைக் குரு, முதலில் அடியெடுத்துக் கொடுப்பார். அதை யொட்டி, குழுக்களாக அமர்ந்துள்ளவர்கள், தொடர்ந்து ஓதுவார்கள். ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் 'லோராவாய்' எனும் தொடர் நீட்டி ஒலிக்கப்படும். அவர்களை, 'அத்தொடருக்கு என்ன பொருள்?' 'பாடும் பாட்டிற்கு என்ன பொருள்?' என்று கேட்டால், 'அது மந்திரம்; அதற்குப் பொருள் தெரியாது' என்று சொல்லுகிறார்கள். திருப்பாவை, திருவெம்பாவைப் பாடல்களில், 'ஆடேல் ஓர் எம்பாவாய்' என முடியும் தொடரையே, அவர்கள் 'லோரேவாய்' என்று திரித்து உச்சரிக்கின்றனர்போலும்.

நாள்தோறும், மாலை வேளையில் திருப்பாவை, திருவெம்பாவைப் பாராயணம் முடிந்தவுடன். கணேசர் கோயிலில் முதலில் பூசை தொடங்கும். தூபதீப, நைவேத்திய ஆராதனையைத் தலைமைக் குரு நடத்துவார். அடுத்துப் பூவினால் அருச்சனை செய்யப்படும். வழிபாட்டில் வெண்சங்கும், திருச்சங்கும் ஊதப்படும்; தப்பட்டை மேள தாளங்கள் முழங்கும்; தமிழ் மந்திரம் ஓதப்படும். தீபாராதனை, தமிழ்நாட்டுக் கோயில்களைப் போலவே பல தட்டுகளையும், பல கிளை விளக்குகளைக் கொண்டும் கற்பூரத்தை ஏற்றியும் செய்யப்படும். பிறகு ஒன்பது மெழுகுவர்த்திகள் பொருத்தப்பட்ட தட்டினால் தீபாரதனை செய்யப்படும். வழிபாட்டை நடத்தும் தலைமைக்குரு, இடது கையில் பிடித்த பூசை மணியை ஆட்டிக்கொண்டே, பூசை செய்வார். பூசை முடிந்தவுடன் 'நீர் வளாவி', நிலத்தில் அடிமுடி தோய எல்லாரும் வீழ்ந்து வணங்குவர். பிறகு, இறைவனுக்குப் படைக்கப்பட்ட சுண்டல், பொங்கல் போன்றவை தரப்படும். அவற்றை உண்டுவிட்டு, காப்புக் கட்டிக்கொண்ட பிராமணர் அனைவரும், கோயில்களைச் சூழ்ந்துள்ள முற்றத்திலேயே படுத்துறங்குவர்.

பத்தாம்நாள் திருவிழாவிலும், பன்னிரெண்டாம் நாள் திரு விழாவிலும் பௌத்தத் துறவிகள் இக்கோயில்களுக்கு வருவர் ; திருவிழாவில் பங்குபெறுவர். திருப்பாவை—திருவெம்பாவைப் பாடல்கள் ஓதப்பட்ட பிறகு, பாலிமொழித் திருப்பாடல்களை அவர்கள் பாடுவர். வழிபாடு முடிந்தவுடன், அவர்கள் திரும்பிச் செல்லுவர்.

விழாவின் நிறைவு நாளன்று, அரசனோ, அவருடைய அதிகாரிகளோ விழாவில் கலந்துகொள்ளுவர். திருப்பாவை-திருவெம்பாவை விழாவில் கலந்து கொண்ட பார்ப்பனர்களுக்கும், குருமார்களுக்கும், அவரவர்கள் தகுதிக்கேற்பப் பொன்னையும் பொருளையும் ஒடங்களையும் பரிசாக அளிப்பர். மகிழ்ச்சியுடன் அவற்றைப் பெற்றுக்கொண்டு, தொலை தூரத்திலுள்ள தம் இருப்பிடங்களுக்குப் பார்ப்பனர் பலர் திரும்பிச் செல்லுவர்.

பண்டைக்காலத்தில் திருவெம்பாவைத் திருவிழாவோடு இணைந்த ஒன்றாகவே திருவூசல் திருவிழா நடைபெற்று இருக்க வேண்டும் என அறிஞர்கள் கருதுகின்றனர். சிவன் கோயிலுக்கும் திருமால் கோயிலுக்கும் இடையே உள்ள இடைவெளியில், பெரிய ஊஞ்சல் கம்பங்கள் இன்றும் உள்ளன. அவற்றுக்கு இடையே குறுக்குச் சட்டம் பொருத்தப்பட்டுள்ளது. அச் சட்டத்தில் ஊஞ்சலை மாட்டுவதற்குரிய வளையங்கள் பொருத் தப்பட்டுள்ளன. இதனைப் பழைய திருவிழாவின் நினைவுச் சின்னமாகக் கருதுகின்றனர். திருவூசல் திருவிழாவில் அடிக்கடி கொடுமையான விபத்துகள் நேர்ந்தமையால், அவ்விழா நிறுத் தப்பட்டதாகத் தாய்லாந்து மக்கள் தெரிவிக்கின்றனர்.

## தமிழ் வேதம்

இன்று தாய்லாந்தில் வாழுகின்ற பெரும்பாலான குருமார் களுக்குத் தமிழும் தெரியாது; சமஸ்கிருதமும் புரியாது. ஆனால், பழங்காலத்தில் இவர்களுடைய மூதாதையர், இவ்விரு மொழி களிலும் பயிற்சி பெற்றிருந்தனர். தாய்லாந்தின் இக்காலத்தியப் பார்ப்பன குருமார்கள் வைத்துள்ள ஓலைச் சுவடிகள் யாவும், தமிழில் அல்லது சம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டுள்ளன. அன்றாட வழிபாட்டின் பொழுதும், சடங்குகளைச் செய்கின்ற பொழுதும் ஓதப்பட்டுவரும் தமிழ் மந்திரங்களை, தாய்மொழி எழுத்துகளில் அவர்கள் எழுதிவைத்துக்கொண்டு பாராயணம் செய்து வருகின்றனர் என்று குவாரிட்ச் வேல்ஸ் எனும் அறிஞர் தெரிவித்துள்ளார்.[14]

---

14. Quaritch Wales,; op. Cit., p. 63.

மேலும், அவர், கடைதிறப்பு மந்திரம், தமிழில் எழுதப்பட்டுள்ளது என்றும் குறிப்பிட்டுள்ளார். இந்து சமய மந்திரங்கள் எழுதப்பட்டுள்ள ஏடுகள், பேங்காங்கு தேசிய நூலகத்தில் போற்றிக் காக்கப்பட்டு வருவதாகவும் அவர் தெரிவித்துள்ளார்.[15]

பத்து ஆண்டுகளுக்கு முன்னர், புதுச்சேரியில் உள்ள பிரெஞ்சு நாட்டு இந்தியவியல் நிறுவனத்தின் தலைவரான பிலியோசா தலைமையின்கீழ், அந்த ஏட்டுச் சுவடிகள் யாவும் ஆராயப்பட்டன. அவை யாவும், சம்ஸ்கிருதத்தைத் தமிழ் நாட்டில் எழுதுவதற்குப் பயன்படுத்தப்பட்டு வந்த, 'கிரந்த' எழுத்தில் எழுதப்பட்டுள்ளமை கண்டறியப்பட்டது. அந்த எழுத்துகளின் வடிவிலே சில மாற்றங்களும் திரிபுகளும் உண்டாகியுள்ளன. ய, ல போன்ற எழுத்துகளின் வடிவம் முற்றிலும் மாறுபட்டுக் காணப்படுகின்றன.

அந்த ஏட்டுச் சுவடிகளில் சம்ஸ்கிருதம், தமிழ் எனும் இரண்டு பகுதிகள் உள்ளன. இடையிடையே தாய்மொழியில் குறிப்புரைகள் வரையப்பட்டுள்ளன. அவை எந்த மூலநூல்களில் இருந்து எடுக்கப்பட்டன என்பதைக் கண்டறிவதே அரிய முயற்சியாக இருந்துவந்தது. இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் இங்கிலாந்தைச் சேர்ந்த கீழ்த்திசைப் பண்பாட்டு ஆராய்ச்சியாளர் ஒருவர். அவ்வோலைச் சுவடி வாசகங்களை ரோமானிய எழுத்து முறையில் ஆங்கிலத்தில் எழுதி, நூல்களாகப் பதிப்பித்தார். அவருடைய அரிய முயற்சியாலும், 'அவை எந்த மொழியைச் சேர்ந்தவை? எதைப்பற்றிப் பேசுகின்றன?' என்பனவற்றைக் கண்டறிய இயலவில்லை.

அணிமைக் காலத்தில் நடைபெற்ற ஆராய்ச்சி, அவற்றின்மீது ஒளியைப் பாய்ச்சியுள்ளது. சம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டுள்ள ஓலைகளில் பெரும்பாலானவற்றில் வேதச் சார்பான மந்திரங்களும், வேதச்சார்பற்ற தாந்திரிக மந்திரங்களும் எழுதப்பட்டுள்ளன.

மற்றும், தமிழ்மொழியிலுள்ள தேவாரம், திருவாசகம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம் போன்ற புனித நூல்களில் இருந்தும், பல பதிகங்களும், பல பாசுரங்களும் அவற்றில் இடம்பெற்றுள்ளமை கண்டறியப்பட்டது.

அப்பர் பெருமான், முதன்முதல் பாடியருளிய 'கூற்றாயின வாறு விலக்ககலீர்' எனத் தொடங்கும் பதிகமும், திருஞானசம்பந்

15. Quaritch Wales, Op. Cit; Pp. 63-64.

தரின் முதற்பாடலான 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கும் பதிகமும், சுந்தரமூர்த்தி நாயனாரின் முதற் பாடலான 'பித்தா பிறைசூடி' எனத் தொடங்கும் பதிகமும் அவ்வேடுகளில் முதலிடம் பெற்றுள்ளன.

மேலும், திருவாய்மொழியின் முதல் பாசுரமான 'உயர்வற உயர்நலம்' எனத் தொடங்குவதும் சிதைந்த நிலையில் எழுதப் பட்டுள்ளது.

மாணிக்கவாசகரின் 'திருவாசகத்'தில் உள்ள 'திருச்சதகத்'தில் காணப்படும் சில பாடல்களும், திருவெம்பாவைப் பாடல்களும் சிற்சில மாற்றங்களோடு மந்திரங்களாக எழுதிப் போற்றப்பட்டுள்ளன.

இவற்றோடு சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாகிய ஆண்டாளின் திருப்பாவைப் பாடலகளும் அத்தமிழ் வேத ஏடுகளில் எழுதப்பட்டுள்ளன.

திருப்பாவை, திருவெம்பாவை எனும் பெயர்கள் தாய் மொழியில் 'த்ரீயம்பவாய்' எனவும் 'திரிபவாய்' எனவும் திரித்து வழங்கப்பட்டுள்ளன. 'லொரிபவாய்' எனச் சுருக்கத் திரிபும்[16] வழங்குகிறது. 'திரு' எனும் அடை 'திரி' எனத் திரிந்தும், 'பாவாய்' என்பது'பவாய்' எனச் சிதைந்தும் வழங்கி வருகின்றன.

ஐந்தாம் இராமா எனும் அரசர் எழுதிய நூலில் இருந்து, அறிஞர் குவாரிட்ச் வேல்ஸ் எடுத்துக் காட்டியுள்ள மேற்கோளில் கடைக்குறைந்த வடிவமான 'த்ரீயம்பாவாய்' என்பதே காணப் படுகிறது.[17]

## சிறுதெய்வ வழிபாடு

பர்மாவைப் போலவே, தாய்லாந்திலும் 'ஆவி' வழிபாடும், பேய்வழிபாடும் பேரளவிற்கு வழக்கில் இருந்துவருகின்றன. பௌத்த சமயக் கோயில்களில் பேய்களுக்கு என்றே தனிமாடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. 'மனையுறை தெய்வ வழிபாடு' ஒவ்வொருவீட்டிலும், தனி மாடங்களை அமைத்து செய்யப்படுகின்றன. பொது அமைப்புகளிலும் இத்தகைய வழிபாட்டு மாடங்கள் இன்றும் உள்ளன.

---

16. John Marr, 'Some manuscripts in Grantha Script in Bangkok' ; p. 310.
17. தெ. பொ. மீ.; மு. கு. நூல் ; பக். 92-93.

## மகாமாரியம்மன் கோயில்

தாய்லாந்தில் தமிழன் கட்டிய கோயில்கள் பல உள்ளன. அவை முன்னூறு ஆண்டுக் காலத்திற்குட்பட்டனவாகும். அவற்றுள், சில பெருஞ்சிறப்பும் பெருஞ்செல்வமும் வாய்ந்த கோயில்களாகும்.

பேங்காக்கு நகரில் உள்ள மக்கள் சமுதாயத்தில், தமிழர்கள் ஒரு முக்கியப் பிரிவினராக (எட்டாயிரம் பேர்) இன்றும் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் மொழிப்பற்றும், சமயப் பற்றும் மிக்கவர்களாக இருந்து வருகின்றனர்.

அரும் பொருளைத் திரட்டி, அவர்கள் மகாமாரியம்மன் கோயில் ஒன்றை நகரத்தின் ஒரு பகுதியில் அமைத்துள்ளனர்.

சமய நம்பிக்கையில் ஆழ்ந்த பற்றுடைய அவர்களுடைய முயற்சியால், ஒரு சமயப் பொதுமை வாய்ந்த கோயில் கட்டப்பட்டுள்ளது. அதில், இந்து தெய்வங்கள் காணப்படுகின்றன. புத்தரின் பெரியதொரு விக்கிரகம், நம்மை அக் கோயிலின் முக மண்டபத்தில் வரவேற்கிறது. இதனை அடுத்து உள்ளே, அன்னை பராசக்தியை, மாரியம்மன் கோலத்தில வழிபடுகின்றனர். இந்தக் கோயில், அமைதியும் தூய்மையும நிறைந்தது.

இக்கோயில் சியோன் சாலைப் பகுதியில் உள்ள தமிழர்களால் மட்டும் அல்லாமல், பௌத்த சமயத் தாய்களாலும், இசுலாமிய சமயத் தாய்களாலும், கிறிஸ்துவ சமயத் தாய்களாலும் பயபக்தியோடு வழிபடும் தலமாகத திகழ்கிறது.

''வேண்டுதல் கொண்டு கரகம் ஆடுவோரையும், மலர்கள் கொய்து மாலை கட்டுவோரையும், தேவாரம், திருவாசகம் ஓதுவோரையும், கருப்பூரம் கொளுத்தி மண்டியிட்டு வணங்குவோரையும் காணும்பொழுது, 'நாம் தமிழ் நாட்டில்தான் இருக்கிறோமா?' என்ற எண்ணம் உதிக்கும்'' என்பது அதனை நேரில் கண்ட தமிழர் ஒருவரின் உணர்ச்சிமிகு கருத்தாகும்.

இக்கோயிலில் நவராத்திரித் திருவிழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. விஜயதசமித் திருநாள் அன்று, அழகான பல்லக்கில் அம்மையின் திருமேனியை அலங்காரத்துடன வைத்து, பிறகு அதனைத் தேரில் பொருத்தி இழுத்துச் செல்லுகின்றனர்.

அன்று ஒரு நாளைக்கு மட்டும், விழாவிற்கு வருகிறவர்களுக்குத் தமிழ்நாட்டு உணவுப் பொருள்களாகிய இட்டலி,

வடை, பொங்கல், சுண்டல், தோசை முதலிய தின்பண்டங்கள் கிடைக்குமாறு, அங்குள்ள தமிழன்பர்கள் தருமகைங்கரியம் செய்து வருகின்றனர்.

அம்மன் திருவுலாவின் பொழுது, ஒவ்வொரு வீட்டு வாயிலிலும் வெற்றிலைப் பாக்கு, பழம், தேங்காய், நறும்புகைப் பொருள்களைத் தட்டினில் ஏந்திய வண்ணம் தமிழ்ப் பக்தர்கள், தங்கள் வாயிலில் காத்து நிற்பர்.

தாய் மக்கள் தத்தம் வீட்டின் முற்றத்தில் ஒரு சிறு மேசையைவைத்து, அதன் மீது தீபாராதனைப் பொருள்களைத் தட்டில் வைத்து, புதிய உடைகளை உடுத்தியவர்களாய், அம்மன் வருகையை ஆவலோடு எதிர்பார்த்து நிற்பர்.

கோயிலிலும், உற்சவ வீதிவுலாவிலும் தமிழிலேயே வழிபாட்டு மந்திரங்கள் ஓதப்படுகின்றன.

## 4.7.

# தாய்களின் பழக்கவழக்கங்கள்

மகாமாரியம்மன் கோயிலில் மண்டியிட்டு, தாய்கள் வணங்குகின்றனர். அவர்கள் புத்தர் பெருமானின் திருக்கோயில்களுக்குச் செல்லும்பொழுது இதே பக்தியுணர்வோடு தாமரைப் பூ, மெழுகுவர்த்தி, ஊதுவத்தி ஆகியவற்றோடு பிற மலர்களையும் தங்க ரேக்குகளையும் எடுத்துக் கொண்டு செல்வர். போதி மாதவரின் திருமேனியில் அல்லது திருவடிகளில் மலர்களைத் தூவி, அருச்சித்து, ஊதுவத்தியையும், மெழுகுவத்தியையும் ஏற்றிவைத்து, மண்டியிட்டு வணங்குவர். பிறகு சிறிது நேரம் தியானத்தில் அமர்வர்.

இக்கோயில்களுக்கு, எந்த மதத்தினரும் சென்று வழிபடுவதைக் காணலாம்.

### எருக்கம்பூப் பெற்ற பெரு வாழ்வு

'புல்லிலை எருக்கு' எவ்வாறு இறைவனால் மட்டும் (சிவன், விநாயகர்), தமிழ் நாட்டில் விரும்பப்படுகிறது என்பதை அறிவோம்.

ஆனால், தாய்லாந்தில் எருக்கம்பூ, தேசியத் திருமலராகும். கோயில் வழிபாட்டில் முதன்மை இடம் பெறுவது எருக்கம்பூ; மகளிரின் கூந்தலை அணிசெய்வது எருக்கம்பூ; நன்னிகழ்ச்சிகளிலும், திருமணச் சடங்குகளிலும் எருக்கம்பூச் செண்டுகளும் மாலைகளும் சிறப்பிடம் பெறுகின்றன. ஒரு வீட்டிற்கு மகளிர் வந்து இருந்து, விடை பெற்றுச் செல்லும்போது, திலகமும்

எருக்கம்பூங் கொத்தும் அளித்து, வழியனுப்புவது தாய்களின் அன்றாட வழக்கமாகும்.

எருக்கம்பூ, செவ்வரளி, மல்லிகை மலர்களை வளையமாகக் கோத்து, கைகளில் காப்பு, வளையல் போன்று ஆடவரும் மகளிரும் அணிந்து கொள்ளுவர்.

## துறவிகள்

ஒவ்வொரு பௌத்த கோயிலிலும் நூற்றுக் கணக்கான துறவிகள் உள்ளனர். ஒவ்வொரு கோயிலை அடுத்தும், துறவிகள் மடம் ஒன்று உண்டு. அவர்கள் பாலிமொழியையும் தாய்மொழியையும் நன்கு கற்றவராவர். சிலர் ஆங்கிலம் போன்ற ஐரோப்பிய மொழிகளிலும் சிறந்த பயிற்சியுடையவர்களாக உள்ளனர். அவர்களுக்கு எல்லாம், அரசவை போற்றும் தலைமைக்குரு ஒருவர் உண்டு. அவரே, நாட்டின் சமயச் சடங்குகளை நெறிப்படுத்துவார். எல்லாப் பௌத்தத் துறவிகளும், பௌத்த சமயத் தத்துவத்திலும் கலை ஞானங்களிலும் வல்லவர்களாக விளங்குகின்றனர். நாள்கோள் பார்த்தல், சாதகம் கணித்தல், குழந்தைகளுக்குப் பெயரிடுதல், திருமணத்தை நல்ல நாளில் நடத்திவைத்தல் போன்றவற்றைக் குருமார்கள் செய்வர்.

மடத்தில் உள்ள துறவிகள் சோம்பேறிகளாக இருக்க அனுமதிக்கப் படுவதில்லை; தச்சு வேலை, கட்டட வேலையாகிலும்செய்பவர்களாக இருப்பார்கள். துறவிகள் புகை பிடிப்பதை மட்டும் அங்குக் காணலாம்.

இத்துறவிகளுக்கு ஒரு நாளைக்கு, ஒரு வேளை உணவுதான் உண்டு. அது பகலுணவு. அதை, அவர்கள் பிச்சையெடுத்துத் தான் உண்ண வேண்டும். பிச்சைக்குக் கூட்டம், கூட்டமாக அவர்கள் செல்லுவார்கள்.

அந்நாட்டில், துறவிகளுக்குப் பிச்சை இடுவதை, நம் நாட்டைப் போலவே, ஒரு புண்ணியச் செயலாகக் கருதுகிறார்கள். காலை ஆறு,ஏழு மணிக்கு எல்லாம், இல்லறத்தாரின் வீட்டு வாயில்களில் துறவிகள் கூட்டம், கூட்டமாக வந்து நிற்பர். பழைய உணவுகளைப் பிச்சையிடக் கூடாது என்பது தாய்களின் நம்பிக்கை. எனவே, பொழுது விடிவதற்கு முன்பே, உணவைச் சமைத்து, அவற்றைத் தட்டில் ஏந்தியவண்ணம் வீட்டு முற்றத்தில் விளக்கேற்றி வைத்துப் பெண்கள் காத்துக் கொண்டு நிற்பர். துறவிகள், வாய்திறந்து ‘பிச்சை இடுக’ என்று கேட்கமாட்டார்

கள். அவர்கள் வந்து நின்றவுடனேயே, குடும்பப் பெண்கள் விரைந்து அப்பணியைச் செய்துவிடுவர்.

## பண்டிகைகள்

தாய்லாந்தின் சிறப்புமிக்கப் பண்டிகை, 'ஸோங்ரான்' எனும் அறுவடைத் திருநாளாகும். நம் பொங்கலைப் போன்றது. 'ஸோங்ரான்' எனும் பெயர், நம் 'சங்கராந்தி' எனும் சொல்லின் திரிபாகும். சித்திரையில், சூரியன் மேஷராசியில் புகுவதையே, தாய்கள் அறுவடைத் திருநாளாகக் கொண்டாடுகின்றனர். நாம், தை மாதத்தில், மகர ராசியில், கதிரவன் நுழையும் நாளையே பொங்கல் திருநாளாகக் கொண்டாடுகிறோம்.

ஸோங்ரானிற்குரிய தெய்வங்களாகிய, கன்னிகள் ஆண்டு தோறும், வெவ்வேறு வாகனத்தில் ஏறி வருவதை, முன்கூட்டியே கோயில் குருமார்கள் கணித்துக் கூறுவர்; சித்திரமாகத் தீட்டிக் கொடுப்பர்.

இது, நம் நாட்டுப் பஞ்சாங்கங்களில், சங்கராந்திக்குரிய தேவதை யானை, புலி, சிங்கம், பன்றி போன்ற வாகனங்களில் ஊர்ந்து வருவதாகப் படம் வரைந்து காட்டுவதைப் போன்றதாகும்.

ஸோங்ரான் பண்டிகை நான்கு நாட்களுக்குக் கொண்டாடப்படும். தொண்டை நாடாகிய சென்னை, வட, தென் ஆர்க்காடு மாவட்டங்களில் பொங்கலுக்கு முற்பட்ட நாளில், வேண்டப்படாத பொருள்களையும் கழிக்கப்பட்ட பொருள்களையும் வீட்டின் முன்னால் குவித்து, தீக்கு இரையாக்கி வருகிறோம். இதனைப் 'போகிக்' கொளுத்துதல் என்னும் பெயரால் குறிப்பிடுவது தமிழ் நாட்டு வழக்கு. இதைப் போன்றே, ஸோங்ரான் தொடங்குவதற்கு முன்பு, தேவையற்ற பொருள்களையும் தட்டுமுட்டுச் சாமான்களையும் விடியற் காலையில் வீட்டின், முன்னால் குவித்துத், தாய்கள் கொளுத்துகின்றனர்.

இப்பழக்கம், இன்றும் தமிழ் நாட்டிலும், ஆந்திரப் பிரதேசத்திலும் மட்டுமே வழக்கில் இருந்து வருகிறது.

## லாய்க்ராதாங்கு

இப்பண்டிகை, கார்த்திகை மாதம் பௌர்ணமி அன்று கொண்டாடப்படும். 'லா' என்பதற்கு 'மிதத்தல்' என்பது பொருள்; 'ராதாங்கு' என்பதற்கு இலைகளால் செய்யப்பட்ட

தட்டு என்பது பொருள். இதனால், இது ஒரு 'தெப்பத் திருவிழா' என்பது புலனாகிறது.

வாழைத் தண்டைக் குடைந்து படகுபோலச் செய்து, அதில் விளக்கை ஏற்றி வைத்து, நீரில் மிதக்குமாறு விடுவதுதான் இப் பண்டிகை. இப்பண்டிகை நம்முடைய கார்த்திகைத்தீபத் திருநாளன்று அங்குக் கொண்டாடப்படுகிறது.

இக்காலத்தில், அவரவர் சக்திக்கு ஏற்ப, காகிதப் படகுகள் வாங்கி, அதில் வெற்றிலைப்பாக்கு வைத்து, மெழுகுவர்த்தியைக் கொளுத்திப் பொருத்தி வைப்பர். இதன் பிறகு அதை நீரில் மிதக்க விடுவர்.

இது அரசர்களால் பெருஞ் சிறப்பாகக் கொண்டாடப்படும் திருவிழா. இக்காலத்தில் இத்திருவிழாவில் கப்பற்படையினர், பெரும்பங்கு கொள்ளுகின்றனர்.

### பியூட்மான்கோன் திருவிழா

இது ஒரு தேசியத் திருவிழா. தமிழ் நாட்டில், ஆடிப் பதினெட்டாம் நாளில் கொண்டாடப்படும் 'பதினெட்டாம்' பெருக்குப் போன்ற திருவிழா.

விவசாயம் செய்யத் தொடங்குவதற்குரிய பருவம் வந்து விட்டதை அறிவிக்கும் திருவிழா இது.

### மணவினை முறைகள்

மாப்பிள்ளை வீட்டார், பெண்களைத் தேடிச் சென்று கட்டித்தங்கம் அல்லது நகைகளைப் பரிசமாகக் கொடுத்து, மணமகளை உறுதிப்படுத்துவர்.

திருமண நாளைக் குறிப்பது ஊரின் மதக் குருவே. ஒற்றைப் படை மாதங்களே திருமணத்திற்குரிய நல்ல மாதங்களாகக் கருதப்படுகின்றன.

திருமண நாளன்று புத்த குருமார், வீட்டில் புனித நீர் தெளித்து, மந்திரமோதித் தூய்மைப்படுத்துவர். மணச்சடங்கு கள் என ஒன்றும் கிடையாது. பௌத்த குருமார்களுக்கு 'மண மகனும், மணமகளும்' மண்டியிட்டு வணங்கி, உணவு படைக்க வேண்டும். இவ்வாறு இருவரும் சேர்ந்து குருவிற்கு உணவு அளிப்பதே, அவர்கள் கணவன்—மனைவியர் ஆகிவிட்டனர் என்பதன் அடையாளச் சின்னமாகப் போற்றப்படுகிறது.

அந்நிலையில் மணமகன்—மணமகள் தலைகளைக் குருமார் களால் தயாரிக்கப்பட்ட நூல்வடங்கள் அலங்கரிக்கும். அதையே 'மங்கல நாண்' எனத் தாய்மக்கள் போற்றுகின்றனர்.

## உணவு முறை

தாய்களுக்கு அரிசியே முதன்மையான உணவுப் பொருளாகும். பலவகைப் பறவைகள், விலங்குகள் ஆகியவற்றின் இறைச்சியையும் அவர்கள் உண்டு வருகின்றனர். பன்றி இறைச்சியும், மீனும் அவர்களுடைய சிறப்புமிக்க உணவாகும். ஒரு நாளைக்கு மூன்று முறை, சாப்பிடுவர். ஆனால், ஆட்டு இறைச்சியை உண்பது இல்லை.

காய்கறிகளைப் பெரிதும் பச்சையாகவே உண்பர். சுத்தரி, முள்ளங்கி, வெள்ளரி, வெங்காயத்தாள், பசளைக்கீரை, பொதினா முதலியவற்றைப் பச்சையாகவே சாப்பிடுகின்றனர்.

இனிப்பும் புளிப்பும், தாய்களுக்கு மிகவும் பிடித்த சுவைகள். இவையிரண்டையும் கலந்து செய்யப்படும் உணவு வகை மிகப் பல. கனியாத அன்னாசிப் பழத்தைக் காய்கறிகளோடு சேர்த்து சமைப்பர். புட்டரிசி மாம்பழக் கிச்சடி சிறப்புமிகு சிற்றுண்டி.

பன்றிக் கொழுப்பே, முதன்மையான சமையல் எண்ணெயாகப் பயன்படுத்தப்படுகிறது. பால் என்பதை அவர்கள் அருந்துவது கிடையாது. பால், தயிர், மோர், நெய் ஆகியவை அவர்களால் உணவுப் பண்டங்களாகப் பயன்படுத்தப்படுவதில்லை.

பசு மாடுகளில் பால் கறக்கும் பழக்கம் அந்நாட்டில் கிடையாது. இறைச்சிக்காகவே, பசுவும் எருதுவும் அங்கு வளர்க்கப்படுகின்றன.

## ஈமச் சடங்குகள்

இறந்தோர் உடலை எரிப்பதே தாய்லாந்தில் பெரு வழக்கு. பௌத்த சமயத்தினர், இறந்தோரின் சாம்பரைப் பூமியில் அடக்கம் செய்து, சேடி கோபுரம் (சமாதி) என்பதை, அவற்றின் மீது எழுப்புகிறார்கள்.

சாம்பரைத் தாழிகளில் இட்டு, வீடுகளில் வைத்து வழிபடுவதும் உண்டு.

ஆன்மா, மறுபிறவி ஆகியவற்றில் தாய் மக்களுக்கு நம்பிக்கை உண்டு. இறப்பைக் கண்டு அஞ்சாதவர். இறப்பு நேர்ந்தால், இறைவன் திருவருளை நினைந்து, தியானித்து, மனவமைதி பெற அவர்கள் முயலுவர்.

# 4. 8.

# கலைச் செல்வங்கள்

தென்கிழக்காசிய நாடுகளுள் தாய்லாந்து, தனித்ததொரு சிறப்புடைய நாடு; வேளாண்மைப் பொருளாதாரத்தையே பெரிதும் நம்பி வாழும் நாடு. உலகில், தொல்பழங்காலத்திலேயே நெல்லினைப் பயிரிடக் கற்ற மூன்று நாடுகளுள், இது ஒன்று.

தாய் மக்கள் மிதவாதிகள்; எதிலும் இரு எல்லைகளுக்குப் போகாதவர்கள்; உணர்ச்சிக் கொந்தளிப்பால் உந்தப்படாதவர்கள்; துன்பத்தைத் தாங்கிக் கொண்டு, புன்முறுவல் பூக்கும் பண்பாடு வாய்க்கப்பெற்றவர்கள். இதனால், எளிமை, உழைப்பு, அன்பு, 'எதையும் தாங்கும் உறுதி' வாய்ந்த உள்ளம் உடையவர்களாகத் தாய்கள் இருந்து வருகின்றனர். இந்த இயல்புகள் யாவுமே, அவர்களால் படைக்கப்பட்ட கலைகளில் எதிரொலிக்கின்றன.

## கலை வளர்ச்சி

தனியுரிமை நாடான தாய்லாந்தில் கிடைத்துள்ள கலைப் பொருள்களை ஆராய்ந்த அறிஞர், அந்நாட்டின் கலை வளர்ச்சியை ஒன்பது நிலைகளாகப் பகுத்துள்ளனர். அவற்றுள் முதலாவது முழு இந்தியப் பண்புவாய்ந்த கலைப் பொருள்கள், இரண்டாவது மோன் இந்தியக் கலப்புடைய கலைப் பொருள்கள், மூன்றாவது இந்திய சாவகக் கலப்புடைய கலைப் பொருள்கள் எனும் முதல் மூன்று நிலைகள் நம் ஆய்விற்குரியன.

## கலைச் சின்னங்கள்

பேங்காக் நகரின் அரும் பொருள் காட்சியகத்தில், இந்திய முறையில் செய்யப்பட்ட ரோமாபுரிப் பாவை விளக்கு ஒன்று இருக்கிறது. அதனோடு, அமராவதியின் சிறப்புமிகு கலை முறையைத் தழுவி செய்யப்பட்ட புத்தர் பெருமானின் சிலை ஒன்றும் இருக்கிறது. இவற்றால் கி. பி. முதலிரு நூற்றாண்டுகள் அளவிலேயே, தென்னிந்திய மக்கள் சிலர், தாய்லாந்தில் குடியேறி இருக்க வேண்டும் என்பது புலனாகிறது. மேலும், இந்நாட்டில் கிடைத்துள்ள பல பழம் பொருள் சின்னங்களால், அந்நாட்டில் குடியேறி இருந்த தமிழக மக்களுக்கு, வட இந்தியாவோடு தொடர்பு இருந்தமை தெரிய வருகிறது.

பேங்காக்கிற்கு அருகில் கிடைத்துள்ள புத்தரின் சிறிய வடிவங்கள், அமராவதி சிற்ப முறையினைப் பின்பற்றிச் செய்யப்பட்டதாகச் சிற்ப நூல் வல்லார் கருதுகின்றனர்.

பிராபதோன் எனும் பௌத்த சமயங்களின் பழைய குடியேற்றம் ஒன்றின், இடிபாடுகளில் பல தருமசக்கரங்களும், வேறு பல பௌத்த சமய நினைவுச் சின்னங்களும் கிடைத்துள்ளன.

இவ்விடத்தில் 33மீ. உயரமுள்ள புத்தரின் பெருஞ்சிலை ஒன்று காணப்படுகிறது. கி. பி. ஆறாம், ஏழாம் நூற்றாண்டுகளில் நீலச் சுண்ணாம்புக் கற்களில், புத்தரின் சிலைகள் செய்யப்பட்டன. பதின்மூன்றாம், பதினான்காம் நூற்றாண்டுகளில் கெமர் கலைஞர்கள் மணற்கற்களினாலும், வெண்கலத்தினாலும் அழகிய புத்தரின் சிலைகளைச் செய்தனர்.

ஈனயானத்தோடு, மகாயான பௌத்த சமயமும் தாய்லாந்தில் தழைத்தோங்கியது. இந்த நாட்டின் தென்பகுதியில் கிடைத்துள்ள போதிசத்துவர், அவலோகித ஈசுவரரின் வெண்கலச் சிலைகள் இதை வலியுறுத்துகின்றன.

தாய்லாந்தின் கிழக்குப் பகுதியில் திருமாலின் சிலைகளும் அர்த்த நாரீசுவரரின் சிலைகளும், இயக்கர்-இயக்கிகளின் வடிவங்களும் கிடைத்துள்ளன. இவை யாவும் பியூணானோடு கொண்ட தொடர்பால் உண்டாகிய பயனாகும்.

கி.பி. பத்தாம் நூற்றாண்டு முதல், பதினான்காம் நூற்றாண்டு வரை, கெமர் கலைப்பண்பு மிகுந்த சிலைகள் தாய்லாந்தில் செய்யப்பட்டன. இதன் பிறகு, தாய்களின் கலைப் பண்பு, சயாமில் இடம் பெற்றன. அக்காலத்தில், கெமர்களின்

உடற் கூற்றியல்பு வாய்ந்த 'தன்மை நவிற்சி' (Realism) மரபு, தாய்லாந்தின் கலையுலகில் மறையத் தொடங்கியது. இதற்கு மாறாக, தாய்களின் 'பண்பியல் இலட்சிய' (Abstract Idealism) மரபு கலைத்துறையில் நுழையலாயிற்று.

கி.பி. 1350ல், கெமர்களின் தலைநகரான அயூத்தியாவின் சிற்பங்களில் பண்டைக் கலைப் பண்புகளும், முறைகளும் ஆற்றல்களும் தாய்களின் கலைப் பண்புகளோடு இரண்டறக் கலந்து, புதியதொரு தேசிய சிற்பக்கலையைத் தோற்றுவித்த தைக் காணலாம். நாளடைவில், சயாமியக் கலை, நிலையான மரபையும், குறியீட்டு முறைகளையும் பின்பற்றி வளர்ந்தன. இம்முறை, தாய்லாந்து கலைஞர்களுக்கும், கைவினைஞர்களுக்கும் அலங்காரக் கலைமரபைப் போற்றி வளர்க்கும் ஆற்றலை அளித்தது. தாய்களின் படைப்புகளான புத்தர் சிலைகளுள் பழைய கெமர் கலையின் நேர்த்தியைக் காண இயலவில்லை. எனினும், வியப்பிற்குரிய தெய்விகக் களைப் பொருந்திய, புத்தர் பெருமானுடைய சிலைகளைப் படைப்பதில் தாய்க்கலைஞர்கள், கைத் தேர்ந்தவர்களாக விளங்கினர்.

### கோயில்கள்

பெச்சபுரியில், பல இந்து சமயக் கோயில்களில் இடிபாடுகள் காணப்படுகின்றன. நகோர் பதோமில் உள்ள மிகப் பெரிய கோயிலான 'பதோம் சேதி' இந்திய ஸ்தூபங்கள் போன்று அழகுற அமைக்கப்பட்டுள்ளது.

அயூத்தியாவின் அரசு சிறப்புற்று விளங்கிய காலத்தில் (1350-1763), தாய்லாந்தின் கலைத்துறையில் சீனாவின் செல்வாக்கு மிகுதியாயிற்று. கட்டடங்கள் பல, அக்காலத்தின் கலைப் பண்புகளைப் புலப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன.

மிகப் பெரிய, திண்மையான ஸ்தூபிகள் மரத்தினால் செய்யப்பட்ட விகாரைகளின் அழகிய முகப்புகள், கதிரவன் ஒளியில் பிரகாசிக்கும் தோரணவாயிலின் மீதுள்ள கோபுரம், வியப்பூட்டும் வகையில் தாழ்ந்தும், வளைந்தும் குகை போன்றும் அமைக்கப்பட்டுள்ள கூரை முதலியன சீனக் கலைப் பண்பினைச் செம்மையாகச் சித்திரிக்கின்றன.

பேங்காக் நகரில் உள்ள 'வாட் அருண்' எனும் கோயில் ஐந்து பெரும் கோபுரங்களையுடையதாகக் கட்டப்பட்டு இருக்கிறது. நடுவில் உள்ள மூலத்தானத்தின் மீதுள்ள விமானம் மிகவும் உயரமானதாகக் காணப்படுகிறது. இந்தக் கரு

வறையைச் சுற்றிலும் உள்ள சுவர்களைப் புடைப்புச் சிற்பங்கள் அணி செய்கின்றன.

## இந்துத் தெய்வச் சிலைகள்

தாய்லாந்தின் கிழக்குப் பகுதியில் திருமாலின் நின்றகோலச் சிலை ஒன்று கிடைத்துள்ளது. அது, பல்லவர் காலத்தில் (கி.பி. 8-9 நூ. ஆ) காஞ்சியில் செய்யப்பட்ட திருமாலின் திருமேனியைப் பெரிதும் ஒத்துள்ளமை, ஆராய்ச்சியாளரின் கருத்தைக் கவர்ந்துள்ளது.

அங்குள்ள மற்றோர் இடிபாட்டின் தெற்குப் பகுதியில் புடைப்புச் சிற்பங்கள் சில கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. திருமாலின் கிடந்த கோலச் சிற்பமும், கண்ணன் கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடிக்கும் அற்புதக் காட்சிச் சிற்பமும், கவர்ச்சிமிகு புடைப்புச் சிற்பங்களாக விளங்குகின்றன. இவை, மாமல்லபுரத்துக் குடவரைக் கோயில் (மண்டபங்)களில் வீறுடன் விளங்கும் கல்லோவியங்களைப் பெரிதும் ஒத்துள்ளன. மாமல்லபுரத்துச் சிற்பங்கள் கி. பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. இவற்றையொட்டி, தாய்லாந்தின் சிற்பங்கள் அமைக்கப்பட்டிருக்கலாம் என்பது சிம்மரின் கருத்தாகும்.

## சிவதாண்டவம்

சிவபெருமானின் ஊர்த்துவத் தாண்டவம் கற்சிலையாகச் செதுக்கப்பட்டுள்ளது. இதனை முன்னரே கண்டோம்.

மற்றும் ஓலைச் சுவடிகளில் வரையப்பட்டுள்ள இந்துத் தெய்வங்களுள் நடராசரின் திருநடனம் வரையப்பட்டுள்ளது.

இந்த ஓவியத்தைப் 'பிராபரமேசுவரா' என்பர். பரமேசுவரன் முயலகனை அழிக்கும் நடனம்' எனும் பெயர் 'தாய்' மொழியில் எழுதப்பட்டு இருப்பது கருதத்தக்கது.

## இராமாயணச் சிற்பங்கள்

பதினோராம் நூற்றாண்டைச் சேர்ந்த லோபபுரிக் கோயில் சுவர்களில், இராமாயணச் சிற்பங்கள் அடுக்கடுக்காகச் செதுக்கப்பட்டுள்ளன. 'பிமாய்' எனும் பௌத்தக் கோயிலின் வடகிழக்குப் பகுதியில் நேர்த்திமிகு இராமாயணச் சிற்பங்கள் மேல் தட்டிலும், கீழ்த்தட்டிலும் மாறிமாறிச் செதுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் அனுமன் சஞ்சீவி மலையைக் கொண்டுவந்து நாகப்பாசத்தால் கட்டுண்ட இலக்குமன் முதலியோரை எழுப்பும் காட்சி, குரங்குகள் சேது அணையைக் கட்டும் காட்சி, சூர்ப்பனகையின் மூக்கு

அரியப்படும் காட்சி ஆகியவற்றை ஒப்பற்றனவாகக் கருது கின்றனர்.

அக்கோயிலின் கிழக்குப் பகுதியில், நந்தியின்மீது சிவனும், உமையும் அமர்ந்து இருக்கும் சிலைகள் பொலிவுடன் விளங்கு கின்றன. கிழக்கு வாயிலின் மேலே உள்ள போதகத்தில் 'வாலி வதம்' வீரவுணர்ச்சி பொங்கும் காட்சியாகத் தோன்றுகிறது. அடுத்துள்ள மேற்கட்டைகளில் அனுமன், கருடன் மீது அமர்ந்த திருமால் சிற்பங்கள் அணிசெய்கின்றன.

## வெண்கலச் சிலைகள்

தாய்லாந்தில் சிவன், திருமால், பிரம்மா, உமை, இலக்குமி முதலிய இந்து சமயத் தெய்வங்களின் வெண்கலச் சிலைகளும் கிடைத்துள்ளன. அவை நேர்த்தியும் சீர்த்தியும் வாய்ந்தவை. இவை, சோழர் காலத்திய (கி.பி. 10 நூ. ஆ.) கலைப்பாணிகள் நிறைந்தனவாக உள்ளன.

## ஓவியங்கள்

தாய்லாந்தில் பண்டைக்கால ஓவியங்கள் மிகக் குறை வாகவே உள்ளன. லோபபுரிக்கு அருகில் உள்ள பௌத்த மடம் ஒன்றின் சுவர்கள் அனைத்திலும், இராமாயணக் கதை நிகழ்ச்சி கள் தொடர் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. இவை பதினான்கு, பதினைந்தாம் நூற்றாண்டுகளில் தீட்டப்பட்டன வாகக் கருதப்படுகின்றன.

மரகத புத்தர் கோயிலின் சுற்றாலைச் சுவர்களில், இராமா யணக் கதை நிகழ்ச்சிகள் கவின்மிகு ஓவியங்களாகத் தீட்டப் பட்டுள்ளன.

அணிமைக் காலத்தில் கட்டப்பட்ட சலவைக் கல்லாலான அரண்மனையின் சுவர்களில், இராமாயணச் சிற்பங்கள் அணி செய்கின்றன. அவற்றுள் அசோக வனத்தில் சீதை, அனுமன் சீதையைச் சந்தித்தல் போன்ற காட்சிகள் கவர்ச்சிமிக்கன.[18]

பேங்காக் அரும்பொருள் காட்சியகத்தில் உள்ள ஒரு பழைய ஓலைச் சுவடியில் 75 இந்து தெய்வங்களுடைய வண்ண வண்ண ஓவியங்கள் அழகுறத் தீட்டப்பட்டுள்ளன.

---

18. M. C. Subhadradis Diskul, 'Ramayana in Scultpture and Paintings in Thailand' in THE RAMAYANA TRADITION IN ASIA, P. 6/5.

## பிற கலைகள்

தாய்லாந்து மக்கள் பொன், வெள்ளி, அரக்கு, மரம் முதலியவற்றில் அழகுமிகு கலைவடிவங்களைச் செதுக்கியும், வார்ப்பு முறையில் செய்தும், இழைத்தும், மெருகூட்டியும் உள்ளனர். இத்துறையிலும், அவர்கள் இந்தியக் கலைப் பாணியைப் பின்பற்றியுள்ளனர்.

காஞ்சிபுரப் பட்டுச் சேலைகளை முன்மாதிரியாகக் கொண்டு, தாய்லாந்தில் இன்னும் விலையுயர்ந்த பட்டு, நார்ப் பட்டுத் துணிகள் நெய்யப்பட்டு வருகின்றன.

## இலக்கியக் கலை

தாய்லாந்தின் இலக்கியத்தில், தமிழிலக்கியக் கதைக் கருக்களும், மரபுகளும் இலைமறை காய்போல் இலங்குகின்றன.

தாய்மொழியில் சிறப்புற்று விளங்கும் இலக்கியங்களுள் தலைசிறந்தது இராமாயணமாகும். காப்பியங்களாகவும் சிறு காப்பியங்களாகவும், நாடகமாகவும், கதைப்பாடலாகவும், இசைப்பாடலாகவும், நாட்டுப்புறப் பாடலாகவும், இராமாயணக் கதை, தாய்மொழியில் பல வடிவங்களில் வழங்கி வருகின்றது. தாய் மக்கள், இலக்குவனையே பெரிதும் போற்றுகின்றனர். அவனே மாபெரும் வீரன்; தியாகங்கள் பல செய்த தியாகசீலன் எனப் பாராட்டப்படுகிறான்.

இராமாயணக் கதை, 'இராமகீயான்' எனும் பெயரில் காப்பியமாகவும், இதிகாசமாகவும் தாய்லாந்தில் பெருவாழ்வு பெற்றுள்ளது. 'இராம(னின்) கீர்த்தி' எனும் பெயரே, திரிந்து, தாய்மொழியில், 'இராமகீயான்' எனும் பெயரில் வழங்குகிறது.

முதலாம் இராமா எனும் அரசர் முதல், இந்நூற்றாண்டுக்குரிய அரசர்கள் வரையில் பலர், இராமாயணத்தைச் செய்யுளில் காப்பியமாகவும், இசைப் பாடலாகவும், நாடகமாகவும் வசனமாகவும் படைத்துள்ளனர். ஒவ்வொருவரும், புதிய புதிய நிகழ்ச்சிகளைத் தத்தம் காலத்திற்கேற்பப் புகுத்தியுள்ளனர். எனினும், முதலாம் இராமாவின் 'இராம கீயாள்' எனும் ஏழு காண்டங்களைக் கொண்ட பெருங்காப்பியமே, கவி நயமும் கற்பனை வளமும் உடையதாகச் சிறந்து விளங்குகிறது.[19]

---

19. S. Singaravelu, The Ramayana and Its influence in the Literature, Drama and Art of South-East Asia; in TAMIL CULTURE; Vol. 12; No. 4; Pp. 303-313.

தாய்லாந்தில் பரவியுள்ள இராமகாதையில், சீதை-இராமன் காதல் நோக்கு, கல்லான அகலிகை, இரணியனின் வதை போன்ற நிகழ்ச்சிகள் இடம்பெற்றுள்ளன. இவை கம்பருடைய இராமகாதையில்தான் சிறப்பாக காணப்படுகின்றன. இவை அல்லாமல், இராவணனுடைய மகள் சீதை எனும் கதைக் குறிப்பும், இலக்குவனின் மகளே இந்திர சித்துவின் மனைவி எனும் கிளைக் கதைகளும் தாய்மொழியில் இடம்பெற்றுள்ளன. பின்னவை இரண்டும் தெலுங்கு மொழி இராமாயணங்களில் காணப்படுகின்றன. எனவே, தாய்லாந்தில் வழங்கும் இராமகாதை, தென்னிந்தியக் காப்பியங்களை மூலாதாரமாகக் கொண்டவை என்பது பெறப்படுகிறது.

இக்கருத்தினை இக்கால ஆராய்ச்சியாளர்களும் உடன்படுகின்றனர். "இராமாயணக் கதை தாய்லாந்திற்கு ஸ்ரீவிசய இராச்சியத்தில் (ஜாவா வழியாக) இருந்து கொண்டு வரப்பட்டது உண்மை. ஆனால், அக்கதையின் தலையூற்றுத் தென்னிந்திய மரபினைப் பின்பற்றியனவாகவே உள்ளன."[20] என்று அறுதியிட்டுக் கூறுகின்றனர்.

## இராமாயண நடனமும், நாடகமும்

தாய் மக்கள், இராம காதையில் தங்களுக்கு உள்ள ஈடுபாட்டை ஐந்து வகையாக வெளிப்படுத்தி வருகின்றனர். அவை : 1. திறந்தவெளிச் சிற்பங்கள் 2. நாட்டிய-நாடகம், 3. முகமூடி நாடகம் 4. அரசவை முகமூடி நாடகம், 5. இக்கால நாட்டிய நாடகம் என்பன. இவற்றோடு ஆறாவதாகப் பொம்மலாட்டம் எனப்படும் தோற்பாவைக் கூத்தினையும் சேர்த்துக்கொள்ளலாம்.

நடன, நாடக, கூத்துக் கலைகளின் கதைப்பொருள், தாய்லாந்தில் இராமாயணமாகவே இருந்துவருவது புலனாகிறது.

கோன் (Khon) எனும் நாட்டிய நாடகம், இராமாயணக் கதை நிகழ்ச்சிகளை, அடிப்படையாகக் கொண்டது. இந்நாடகம், தாய்லாந்தின் 'தேசிய நடனக் கலையாக, உலகப் புகழைப் பெற்றுள்ளது. இதில், பெண்கள் இடம்பெற்று நடிப்பது இல்லை. இந்நாடகத்திற்கு இசையே உயிராகக் கருதப்படுகிறது.

இந்த நாட்டிய நாடகத்தைத் தொடங்குவதற்கு முன்னர், அரங்கில் நடராசர் சிலையை வைத்து, தேங்காய் உடைத்துப்

20. M. C. Subhadradis Diskul, Op. Cit ; in THE RAMAYANA TRADITION IN ASIA, P. 677.

பூசை செய்வது, தாய்லாந்து நாடக அரங்குகளில், இன்றும் காணப்படும் காட்சியாகும்.

முகமூடி நாடகம், கேரளத்தின் கதகளியைப் போன்றது. முகத்தில் வண்ணப் பூச்சுகளும் முகமூடியும் அணிந்து, மேடை அதிர ஆடும் ஆட்டம். இந்தக் கூத்திற்கும் கதைப்பொருள் இராமகாதையே என்பது நினைவுகூரத் தக்கது.

## பொம்மலாட்டம்

தாய்லாந்து, பொம்மலாட்டக் கலையின் வளர்ப்புப் பண்ணை. அக்கலையிலும் இராமாயணக் கதை நிகழ்ச்சிகளே சிறப்பிடம் பெறுகின்றன.

## தாய்மொழியில் தமிழ்மொழிச் சொற்கள்

தமிழ் மக்களுடைய பண்பாட்டுத் தொடர்பால், தாய் மொழியில் பல தமிழ்ச் சொற்கள் இடம்பெற்றுள்ளன. தாய் மொழியில் 18 உயிரொலிகளும், 23 மெய்யொலிகளும் உள்ளன. அம்மொழி, தொனிக்கும் முறையால், எடுத்தல், படுத்தல், நலிதல் போன்ற முறைகளால் - வெவ்வேறு பொருளை உணர்த்துவ தாகும்.

அம்மொழியில் கிழமை, 'வாரம்' என வழங்கப்படுகிறது. இந்திய, தமிழ் முறைப்படியே, ஒரு வாரத்திற்குரிய ஏழு நாட் களின் பெயர்களும் வழங்கிவருகின்றன. தாய்மொழியில் வழங் கும் தனித் தமிழ்ச் சொற்கள் பல. அவற்றுள் வேளா (வேளை), பார்வே-(பார்வை), தூக்-(தூக்கு), மாங்க் (மாங்காய்) போன்ற சொற்கள் நம் கருத்தைக் கவருவனவாகும்.

மற்றும், இன்றைய பேச்சு வழக்கில் தமிழில் வழங்கும் சொற்கள் அம்மொழியில் ஏராளமாகத் திரிந்த நிலையில் வழங்கி வருகின்றன.[21]

| தாய்மொழி | | தமிழ்மொழி |
|---|---|---|
| காருணா | — | கருணை |
| நகான் | — | நகரம் |
| பட்டோம் | — | பட்டணம் |
| கோங்கா | — | கங்கை |
| சிந்தனா | — | சிந்தனை |
| ராஜ் | — | ராஜா |

21. Phya Anyuman Rajadhu, Thai Literature, Quoted in TAMIL CULTURE, Vol. V. No. 3; P. 213.

| | | |
|---|---|---|
| ராணி | — | ராணி |
| தம்மசாட் | — | தரும சத்திரம் |

இவ்வாராய்ச்சியைத் தனித்ததொரு, மொழியியல் ஆராய்ச்சியாகவே செய்யலாம்.

இவ்வாறு தாய்லாந்து, நெடுங்காலமாகத் தமிழக, இந்திய, சீன, காம்பூச்சிய நாகரிகங்கள் கலக்கும் இடமாக இருந்து வருகிறது. ஆசியாவின் கலைவளர்ச்சியில், தாய்லாந்தின் பங்கு போற்றுதற்குரியதாகும். ''பௌத்த சமயக் கலையின் பருவங் கடந்து மலர்ந்த, வண்ண நறுமலரே, சயாமியக் கலை. அதற்குச் சொந்தமான, மிகவுயர்ந்த நாகரிக நறுமணமும் மென்மைமிகு நெளிவும், குழைவும், நேர்த்தியும் வாய்ந்து விளங்கும் தாய்லாந்தின் கலை, யாவராலும் விரும்பிப் போற்றத் தக்கதாகும்''[22] எனும் அறிஞர் குரோசெட்டின் கருத்து, இங்கு நினைவு கூர்தற்குரியதாகும்.

22. Rene Grousset, The Civizliation of the East, Vol. II. India, P. 343.

# 5. 1.

# நாடும் மக்களும்

'மலேசியா' எனும் சொல்லிற்கு 'ஆசியாவில் உள்ள மலை நாடு' என்பது பொருள். 'ஆசியாவின் பிற நாடுகளில் மலைகளே இல்லையா?' எனும் ஐயம் எழலாம். மலேசிய தீபகற்பத்தில் உள்ளதைப் போன்று மலைகளும், அவற்றை அடுத்துப் பள்ளத் தாக்குகளும் ஆசியாவின் பிற பகுதிகளில் காணப்படவில்லை என அறிஞர் கூறுவர்.

## நாட்டு அமைப்பு

தென் கிழக்கு ஆசியாவின் தென் கோடியில் நீண்டு இருக்கும் நிலமுனையே, 'மலேசியா' தீபகற்பமாகும். இதனைச் சென்ற நூற்றாண்டு வரை 'மலாக்கா தீபகற்பம்' எனும் பெயரால் சுட்டிவந்தனர். இதனுடைய வடபகுதியில் தாய்லாந்தும், மற்ற மூன்று பகுதிகளில் கடலும் சூழ்ந்துள்ளன. கிழக்கில் சீனக் கடலும் சயாமியக் குடாவும், தெற்கில் சிங்கப்பூர்க் கடலும் இருக் கின்றன. மேற்கில் மலாக்கா கடலிடுக்குகளும் வங்காளக் கடலும் எல்லைகளாக உள்ளன.

இந்த மலேசியக் கூட்டரசு (Federation) ஏறக்குறைய 1, 30,000 சதுரக் கி. மீ. பரப்பளவு உடையதாகும். இதனுள் பதின்மூன்று மாநிலங்கள் உள்ளன.

இந்த நாட்டில், பேரளவிற்குப் பழங்குடி மக்களான மலாய் களும் கணிசமான அளவிற்குச் சீனர்களும், இலட்சக் கணக்கான இந்தியர்களும் வாழ்ந்து வருகின்றனர்.

இதனால், பௌத்த, இசுலாமிய சமய மக்களே அங்கு பேரெண்ணிக்கையில் உள்ளனர். இவற்றுக்கு அடுத்த நிலையில் இந்துக்கள் அங்கு வாழ்ந்து வருகின்றனர்.

பொதுவாக வெப்ப மண்டலத்தைச் சேர்ந்த நாடாக மலேசியா இருந்து வருகின்றமையால், பருவ மழையை எதிர் நோக்கி வாழும் நாடாகவே திகழ்கிறது.

ஆங்கிலேயரின் ஆட்சிற்கு உட்பட்டு இருந்த 'மலேயா' 31-8-1957ல் சுதந்திரத் திருநாடாயிற்று.

போர்னியோ, சிங்கப்பூர் முதலிய தீவுகள் இணைந்து 1-8-1962ல் மலேசியக் கூட்டாட்சி அமைப்பு உருவாயிற்று. ஆனால், சில ஆண்டுகளுக்குள் (7-8-65 ல்) சிங்கப்பூர், மலேசியக் கூட்டாட்சி அமைப்பில் இருந்து பிரிந்து, தனியுரிமை வாய்ந்த நாடாக வலிவும் பொலிவும் பெற்றது.

தொல்பழங்காலம் முதற்கொண்டு மலேயா, இந்தியக் கடலோடிகளால் நன்கு அறியப்பட்ட நாடாக இருந்து வருகிறது. இந்தியக் கடல் வாணிகர்கள், அடிக்கடி சென்று வந்த நாடுகளுள் ஒன்று இது. அங்கு இந்தியரின் குடியேற்றங்கள் கி.மு. 200 அளவிலேயே அமைக்கப்பட்டு இருந்ததாகச் சீனாவின் காலவழிச் செய்திக் கோவைகள் குறிப்பிடுகின்றன.

இதனுடைய நிலவியல் அமைப்பு சீனாவிற்கும் மேற்கு நாடுகளுக்கும் இடையே நடந்து வந்த கடல் வாணிகத்தில் மையமான இடத்தைப் பெற்று இருக்கிறது.

**பெயர்: விளக்கம்**

இந்நாட்டினை, கிறித்துவ நூற்றாண்டின் தொடக்கத்திற்கு முன்பே தமிழ் மக்களும், வடஇந்தியரும் நன்கு அறிந்து இருந்தனர். ஆனால், அக்காலத்தில்இந்த நாட்டிற்கு 'மலேயா' எனும் பெயர் வழங்கவில்லை.

பட்டினப் பாலை, எனும் சங்கப்பாடல், இந்நாட்டினைக் 'காழகம்' எனும் பெயரால் சுட்டுகிறது.

''கங்கை வாரியும் காவிரிப் பயனும்
காழகத்து ஆக்கமும்''

(பத்து : பட்டி. 190-191)

மேற்கண்ட அடியில் வரும் 'காழகம்' எனும் பெயரிற்கு, நச்சினார்க்கினியர் எனும் (15 நூ. ஆ.) உரையாசிரியர் 'கடாரம்' எனும் தேயம் என்று உரைவிளக்கம் எழுதியுள்ளார்.

அவருக்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னரே 'கடாரம்' எனும் தேயம் பற்றிய குறிப்பு, சேந்தன் திவாகரம் எனும் நிகண்டு நூலில்[1] காணப்பெறுவதும் இங்குக் கருதத்தக்கது.

கி. பி. பதினோராம் நூற்றாண்டில், சோழப் பேரரசன் இராசேந்திர சோழனுடைய கடாரப் படையெடுப்பைப் பற்றித் தமிழ்க் கல்வெட்டுகள் பல பேசுகின்றன.

> ''அலை கடல் நடுவுள்
> பலகலம் செலுத்திச்
> சங்கிராம விசயோத்
> துங்க வர்மன்
> ஆகிய கடாரத்(து)
> அரசனை வாகையும்[2]

எனும் இராஜேந்திரனின் மெய்க் கீர்த்தியால் இது உறுதிப்படுகிறது. இதே செய்தியைக் கலிங்கத்துப்பரணி,

> ''குளிறு தெண்டிரைக் குரைகடாரமுங்
> கொண்டு மண்டலங் குடையுள் வைத்ததும்[3]

என்று தெரிவிக்கிறது.

'கதாசரித்திர சாகரம்' எனும் சம்ஸ்கிருத நூலிலும், கி. பி நான்காம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட வாமன, கருட புராணங்களிலும் இந்நாடு 'கடாஹ' எனும் பெயரால் சுட்டப்படுகிறது. மற்றும் 'ஜம்பு தீபத்தின் (நாவலந்தீவின்) ஒன்பது தீவுகளுள் ஒன்றாகக் 'கடாஹ'ம் (கடாரம்) குறிப்பிடப்பட்டுள்ளமை நம் கருத்தைக் கவருவதாகும். இதனைக் 'கெட்டா' எனும் நகரமாகவும் குறிப்பிடுவது பண்டைக் கால வழக்கமாகும்.

'கெட்டா' (கடாரம்) என்பது அந்நாட்டின் பெயர் அன்று. அந்நாட்டின் தலைநகரமாகவும், துறைமுகமாகவும் விளங்கிய பட்டினத்தின் பெயரே 'கெட்டா' (கடாரம்) என்பதாகும். ஆனால், அத்தலை நகரத்தின் பெயராலேயே, அந்த நாடு (மலேயா) கி. பி. பதினேழாம் நூற்றாண்டு வரையில் குறிப்பிடப்பட்டு வந்தமை கருத்தில் கொள்ளத்தக்கதாகும். தலை நகரத்தின் பெயரால், சீரும் சிறப்பு பெற்று விளங்கிய நாடாகவே இதனைப் பண்டைய உலகம் போற்றியுள்ளது.

---

1. சேந்தன் திவாகரம், ப. 276
2. S. I. I. Ins. Vol. III; pt. 2; No. 84; Vol. V. 468.
3. கலிங்கத்துப் பரணி, 189

## மலேயா

இந்நாட்டில், 'மலாய்' எனப்படும் தொன்மைக் குடிமக்களே நெடுங்காலமாக வாழ்ந்து வருகின்றனர் 'மலாய் மக்கள் வாழு மின்ற நாடு' எனும் பொருளில் 'மலாய்' எனும் பெயர் இடைக் காலத்தில் வழங்கி வந்தது. இப்பெயரை உச்சரிக்க முயன்ற போர்ச்சுகீசியர், இடையிற் 'ஏகாரத்தையும், சொல்லின் இறுதி யில் 'ஆகாரத்தை'யும் சேர்த்து 'மலேயா' என்று உச்சரிக்க லாயினர். இவ்வாறு 'மலேயா' எனும் பெயர்வழக்குத் தோன் றியதாக ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

'மலாய்' எனும் குலப் பெயரினை ஆராய்வோமானால், அதன் வேர்ச்சொல் 'மலய் (மலை)' என அமைவதைக் காண லாம் 'மலைகளில் வாழ்ந்த மக்கள்' மலை வாழ்நர்—எனும் பொருளிலேயே 'மலாய்' எனும் இனக்குழுப் பெயர், தோன்றி இருத்தல் கூடும். வேறு வகையாகச் சொல்லுவதானால், மலை யும் மலைசார்ந்த பகுதிகளிலும் வாழ்ந்த குறிஞ்சி நிலமக்கள் என்பதே இச்சொல்லின் பொருளாகும்.

ஐரோப்பாவிற்கு, முதன் முதல் இந்நாடு 'மலேயா' எனும் பெயராலேயே, போர்ச்சுகீசியரால் அறிமுகப்படுத்தி வைக் கப்பட்டது. காலப்போக்கில், இப்பெயரே பெருவழக்கிற்கு வந்தது.

## மலேசியா

மலேயாவோடு சிங்கப்பூரையும் சேர்த்து, ஒரு கூட்டாட்சி அமைப்பை உருவாக்கிய காலத்தில் 'மலேசியா' எனும் பெயரினை இந்நாடு பெற்றது என்பதை முன்னரே கண்டோம். இக் கூட்டாட்சியை விட்டு, சிங்கப்பூர் விலகிக் கொண்ட பிறகு, மீண்டும் 'மலேயா' எனும் பெயரையே பயன்படுத்தலாயினர்.

வரலாற்று அடிப்படையிலும், மக்களின அடிப்படையிலும், மலேயா தீபகற்பம், கிழக்கு இந்தியத் (East Indies) தீவு களைச் சேர்ந்ததாகவே காணப்படுகிறது. கிழக்கிந்தியத் தீவு களை மலேயா தீபகற்பத்தோடு சேர்த்து 'மலேசியா' எறும் பெயரால் குறிப்பிடும் வழக்கம் தோன்றியுள்ளமை இங்கு நினைவுகூரத் தக்கதாகும்.

## பழங்குடி மக்கள்

இந்த நாட்டினைச் சேர்ந்த மக்களை மூவகையாகப் பாகு படுத்துவர். தொல்பழங்காலம் முதல் காடுகளிலும் மலை

களிலும் வாழ்ந்துவரும், நாகரிக வளர்ச்சியுறாதக் 'காட்டுவாழ் மக்களை'த் 'தொல் பழங்குடிகள்' எனலாம். இவர்கள் மலேயா தீபகற்பத்தில், 'செமாங்குகள்' (Semang) எனும் பெயர் பெற்றுள்ளனர். அவர்களுள் ஒரு சிறு பிரிவினருக்குச் 'சகய்' (Sakai) என்பது பெயராகும்.

இரண்டாவது பிரிவினர் தொன்மை-மலாய் (Proto-Malays) கள் எனும் பெயரால் அறியப்படுபவராவர் இவர்கள் மலேயா, கிழக்கிந்தியத் தீவுகள் அனைத்திலும் பரவியுள்ளனர்.

இவர்களுடைய மொழி. 'மலாய்' என்பதாகும். இவர்கள் அரைகுறையான நாகரிக வளர்ச்சியுள்ள மக்களாக உள்ளனர்.

மூன்றாவது பிரிவினர்'மலாய்கள்'எனப்படுபவராவர். இவர் கள். தொன்மை 'மலாய்'களின் வழித்தோன்றல்கள். இவர்கள், மலேயாவின் முதன்மையான குடிமக்களாவர். இவர்களுடைய இனத்தைச் சேர்ந்தவர்களே ஜாவா, சுமத்திரா, போர்னியோ முதலிய தீவுகளிலும் வாழுகின்றனர். ஆதியில், இவர்கள் சீனா விற்கு அருகில் வாழ்ந்தனர். சற்றேறக்குறைய கி. மு. 1000 அளவில், இவர்கள் மலேயாவில் குடியேறினர் என்பர். எனினும், இவர்கள் கி. பி. முதல் நூற்றாண்டில் இந்தியர்களோடு தொடர்பு கொள்ளும் வரையில், நாகரிகமற்ற பழங்குடி மக்களாகவே இருந்தனர். இன்றும், இவர்கள் நாகரிகத்தின் கொடுமுடியை எட்டிப் பிடிக்கவில்லை. இந்தியர்கள் இந் நாட்டில் குடியேறிய பின்னரே,இந்நாட்டின் வரலாறுதொடங்கு கிறது எனலாம்.

வரலாற்றுக் முற்பட்ட காலத்திய மலேசியப் பண்பாட்டின் கூறுகள் பல, தமிழகத்தின் பழங்கற்காலப் பண்பாடு, புதுக்கற் காலப் பண்பாடு பெருங்கற் (Megalithic) பண்பாடு ஆகியவற் றோடு பெரிதும் ஒத்தனவாய்த் தோன்றுகின்றன

தமிழகம், மலேசியா, பிலிப்பைன்ஸ். ஜாவா, வடபோர்னி யோப் பகுதிகளில் செய்யப்பட்ட தொல்லியல் ஆய்வினால் இரும்புப்பண்பாட்டுக் காலத்திய அரியசின்னங்கள் ஒரே மாதிரி யாக உள்ளமைப் புலப்படுகிறது. அவை கருவிகள், படைக்கருவி கள், வளையல்கள், மணிகள் முதலிய தொன்மைக்கால—கி. மு. ஆயிரம் ஆண்டுகாலத்தியனவாக மதிப்பிடப்பட்டுள்ளன.

கி. மு.ஏழாம் நூற்றாண்டில், இந்தியாவில் இருந்து வாணி கப் பொருள்கள் மலேசியாவிற்குக் கடல் வழியாக வந்ததைச் சீனாவின் காலவழிச் செய்திக் கோவைகள் தெரிவிக்கின்றன.

யவனரோடு கடல் வாணிகத்தில் ஈடுபட்டு இருந்த தமிழகம், தென்கிழக்கு ஆசிய நாடுகளில் இருந்து அகில், சந்தனம், கிராம்பு, ஏலக்காய் போன்ற நறுமணப் பொருள்களை வாங்கி வந்து, ரோமாபுரிக்கு ஏற்றுமதி செய்தது.

மலேயாவின் கற்பூரமும் தமிழ்நாட்டுக் கடல் வாணிகர் களால் கொண்டு செலலப்பட்டு இருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

நிலவளமும், இயற்கைப் பொருள் வளமும் நிறைந்த மலேசியா, இவ்வாறு கிறித்துவ நூற்றாண்டின் தொடக்கத்திற்கு முன்பே, வாணிக வளமிக்கதாக விளங்கியது.

## 5. 2.

# வரலாற்றின் தொடக்கம்

### புராண மரபு

மலேயா தீபகற்பத்தில், தென்னிந்தியக் குடியேறிகள் மிகப் பழங்காலத்திலேயே 'தனியரசுகள்' பலவற்றை நிறுவினர். அவ்வரசுகளின் தோற்றத்தைப் பற்றித் தெளிவாக அறிய இயல வில்லை. சீனாவின் காலவழிச் செய்திக் கோவைகள், அவ்வரசு களைப்பற்றிச் சில குறிப்புகளைத் தந்துதவுகின்றன. கி.பி இரண்டாம் நூற்றாண்டில் அமைக்கப்பட லாங்-கியா-சு(Lang Kiya Su) என்ற அரசைப் பற்றிய சீனவரலாற்றுக் குறிப்பேட்டில் சில குறிப்புகள் காணப்படுகின்றன.

''இந்நாட்டில் வாழும் மக்கள் தங்கள் நாட்டின் அரசு, நானூறு ஆண்டுகளுக்கு முன்னர் (கி. பி. 100) அமைக்கப் பட்டது எனறு கூறுகின்றனர். காலப்போக்கில், அது நலிவுற்றது. அப்பொழுது அரசனுடைய உறவினர்களுள் நல்ல மனிதன் ஒருவன் இருந்தான். மக்கள் எல்லாரும், அவனுடைய உதவியை நாடினர். இச்செய்தியை அறிந்த அரசன், அந்த நல்ல மனிதனைச் சிறையில் அடைத்தான். ஆனால், அவன் கையில் இடப்பட்ட விலங்காகிய சங்கிலிகள் தாமாகவே அறுந்து வீழ்ந் தன. இதைக் கண்டு, அரசன் அதிர்ச்சியுற்றான். அந்த மனிதன் தெய்விக ஆற்றல் வாய்க்கப் பெற்றவன் என்று அரசன் அஞ்சி னான். இதனால் அந்த மனிதனுக்குத் தீமை செய்வதற்கு அரசன் தயங்கினான். எனவே, அம்மனிதனை அந்த அரசன் நாடு கடத்தினான். அந்த நல்ல மனிதன் இந்தியாவிற்குச் சென்று, அங்கிருந்த அரசனிடம் அடைக்கலம் அடைந்தான்.

பின்னர், அந்த இந்திய அரசனுடைய் மூத்த மகளை, அவன் மணம் புரிந்து கொண்டான். இந்நிலையில், இத்த நாட்டின் அரசன், எதிர்பாரா வகையில் இறந்து விட்டான். உடனே மூத்த அதிகாரிகள், அந்த மனிதனைத் தாயகத்திற்குத் திரும்பி வருமாறு அழைப்பு விடுத்தனர். அவர்கள், அவனைத் தங்கள் நாட்டின் அரசனாக்கினர். இருபது ஆண்டுகள் அவன் ஆட்சி புரிந்தான். அவனுக்குப் பிறகு, அவனுடைய மகன் பகாதத்தோ ஆட்சிக்கு வந்தான். கி. பி. 515ல் ஆதித்தன் என்ற தூதன் மூலம் சீனப் பேரரசனுக்கு ஒரு கடிதத்தை அவன் அனுப்பி வைத்தான். மேலும், அவன் மூன்று தூதர் குழுக்களை முறையே கி.பி. 523, 531, 568 ஆம் ஆண்டுகளில் சீனாவிற்கு அனுப்பி வைத்தான்.

லாங்-கியா-சு எனும் இராச்சியத்துக்கு வடக்கே, சயாம் குடாவில் பான்- பன் (pan-pan) என்ற அரசு இருந்தது. கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில், அவ்வரசு சீனாவிற்கு ஒரு தூதர் குழுவை அனுப்பி வைத்தது. அந்நாட்டிற்குக் 'கவுண்டினியன்' எனும் இந்தியப் பண்பாட்டுத் தூதன் சென்று வந்ததாகத் தெரிகிறது.

பியூணானில் இருந்து வீசிய குடியேறிகளின் இரண்டாவது அலையோடு தொடர்புடையவனாகக் கூறப்படும் கவுண்டினியன் இவனாக இருக்கலாம்.

அங்கிருந்த மற்ற இந்து அரசர்களுள் காமலங்கம், கலசபுரம், கலாபகாங்கு (கெட்டா) என்பனவாகும். மலேயா தீபகற்பத்தில், ஆதிகாலத்தில் சிறப்புற்று விளங்கிய தமிழ நாகரிகத்தின் சின்னங்கள் ஓரளவிற்குக் கிடைத்துள்ளன.

## தொல்பொருள் சின்னங்கள்

கெட்டா சிகரப் பகுதியில் சில இந்துக் கோயில்களின் இடிபாடுகளும், கற்சிலைகளும் கிடைத்துள்ளன. அதற்குச் சிறிது தொலைவில், செங்கற்களால் கட்டப்பட்ட புத்தருடைய கோயிலின் இடிந்த பகுதிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அதில் பொறிக்கப்பட்டுள்ள சம்ஸ்கிருத மொழிக் கல்வெட்டை ஆராய்ந்த அறிஞர்கள், அக்கோயில், கி.பி. நான்கு அல்லது ஐந்தாம நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம் என்று கருதுகின்றனர். வெல்லஸ்லி மாவட்டத்தின் வடபகுதியில் இத்தகைய புத்தர் கோயிலின் சிதைந்தத் தூண்கள் சில கிடைத்துள்ளன. அவற்றின் மீதும் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அவற்றைக்கொண்டு, இத்தூண்களும், கி.பி. நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டினைச் சேர்ந்தவனாக இருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

பெராக்குப் பகுதியிலுள்ள செலின் சிங்கு என்னும் இடத்தில் ஒரு பொன்னாலான அணிகலன் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளது. அதில் திருமால் கருடவாகனத்தில் வீற்றிருக்கும் வடிவம் அழகுறச் செதுக்கப் பட்டிருக்கிறது. மேலும் அப்பகுதியில் கிடைத்த முத்திரை ஒன்றில் ஸ்ரீ விஷ்ணுவர்மன் என்ற ஓர் இந்து அரசனின் பெயர் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குரிய எழுத்து முறையில் பொறிக்கப்பட்டிருக்கிறது.

தகுவா-பா என்ற இடத்தைச் சுற்றிலும் உள்ள பரவலான பகுதியில் கோயில்களின் இடிபாடுகளும், அழகிய சிலைகளும் இன்றும் உள்ளன. தகுவா-பா என்பதைத் தக்கோலம் என்ற புகழ்மிக்க துறைமுகமாகத் தாலமி குறிப்பிட்டுள்ளான். பந்தன் குடாவினைச் சுற்றிலுமுள்ள கீழைக் கடற்கரைப் பகுதியில் பண்டைக் காலத்திய குடியிருப்புக்களின் சின்னங்கள் பல கிடைத்துள்ளன. அவற்றுள் சயாம், நகோம், ஸ்ரீதம்மரத், வியங்குசிரா என்னும் சின்னங்கள் குறிப்பிடத்தக்கன. இவ் வீடங்களில் காணப்படும் கோயில்களும், சிலைகளும் சிறிது காலத்தால் பிற்பட்டனவாக இருக்கலாம். ஆனால், விகோரிலும், தகுவா-பாவிலும் சயாவில் ஒரு தூணிலும் காணப்படும் கல்வெட்டுகள் இங்குள்ள குடியிருப்புகள் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டனவாக இருக்க முடியாது என்பதைத் தெரிவிக்கின்றன.

## தமிழகக் குடியேறிகள்

இந்நாட்டின் பல்வேறு பகுதிகளில் ஏராளமான கல்வெட்டு கள் கிடைத்துள்ளன. அவை சம்ஸ்கிருத மொழியில் கி. பி. நான்காம், ஐந்தாம் நூற்றாண்டுகளுக்குரிய கிரந்த எழுத்து களில் எழுதப்பட்டுள்ளன. அவற்றுள் இரண்டு சிறப்பாகப் புத்த சமயத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. எனவே, புத்த சமயம் அப்பகுதியில் பரவியிருந்தமைக்கு அவை சான்று பகரு கின்றன. கெட்டாவிற்கு அருகில் களிமண் பலகை ஒன்றில் சம்ஸ்கிருதத்தில் மூன்று செய்யுட்கள் வெட்டப்பட்டு இருக் கின்றன. அவை மகாயான சமயத்திற்குரிய மாத்யாமிகக் குழுவினரின் சூத்திரம் ஒன்றினுடைய ஒரு பகுதியாக இருக்க லாம் என்று கருதப்படுகிறது. இந்த மூன்று சுலோகங்களும், 'சாகரமதி பரிபிரிச்சா' எனப்படும் மகாயான பௌத்த சமய நூலின் சீனமொழிபெயர்ப்பில் இடம் பெற்றிருக்கின்றன. எனவே, மகாயான பௌத்த சமயத்தின் தத்துவக் கொள்கை கள் மலேசியாவில் பரவியிருந்தன என்பது தெரிய வருகிறது. இதனால் கி.பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முன்பிருந்தே மலேசியா

வில் மகாயான பௌத்த சமயம் பரவியிருக்க வேண்டும் என்பதும் புலனாகின்றது. மலேசியா தீபகற்பத்தில் கிடைத்துள்ள பல கல்வெட்டுகளினால் குறைந்தது கி. பி. நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டுகள் அளவிலாவது இந்தியர்கள் அங்குக் குடியேற்றங்களை அமைத்திருக்க வேண்டும் என்பது அறியப்படுகிறது. அக்குடியேற்றங்களை அமைத்தவர்கள் வட இந்தியர்களும் தென்னிந்தியர்களுமாவர் என்பது அவற்றால் தெரியவருகிறது.

அவற்றுள் ஒரு கல் வெட்டு 'மாபெரும் கப்பலோட்டி' ஒருவனைப் பற்றிக் குறிப்பிடுகிறது. அவனுடைய பெயர் புத்தகுப்தன் என்பது. அவன் வங்காளத்திலிருந்து வந்தவன் என்பதும் அதனால் அறியப்படுகிறது.

இலக்கியச் சான்றுகளிலிருந்து நாம் பொதுவாக உய்த்துணரக் கூடிய செய்திகளுக்கு மலேசியா தீபகற்பத்தில் கிடைத்துள்ள தொல்பொருள் சின்னங்கள் சான்று பகருகின்றன.

இந்திய வாணிகர்களும் குடியேறிகளும் முதலில் மலேசியாவினுள் காலெடுத்து வைத்த பகுதி இன்றைக்குத் தகுவா–பா எனப்படும் தக்கோலமாகும். இவ்விடத்திலிருந்து சிலர் மலைகளைக் கடந்து, அப்பாலுள்ள சமவெளிகளுக்குச் சென்றனர். இந்தப் பகுதியிலிருந்து அவர்கள் நிலவழியாகவும், கடல் வழியாகவும் தாய்லாந்து, கம்போடியா, அன்னாம் போன்ற நாடுகளுக்குச் செல்லுவது வசதியாக இருந்தது. இவ்வகையில் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் நிறுவப்பட்ட இந்தியக் குடியேற்றப் பேரரசின் முதன்மையான வாயிலாக மலேசியா தீபகற்பம் சிறப்புற்று விளங்கியது எனலாம்.

தமிழகக் குடியேறிகள் மலேசியாவில் குடியேறிய வரலாற்றைச் சுருக்கமாகக் காண்போம். தமிழகக் குடியேற்றங்கள் மிகப்பலவாக இருந்தன. அவை நெடுந்தொலைவிற்கு அப்பாலுள்ள மூலை முடுக்குகளில் எல்லாம் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றுள் சம்போன், சயா, பந்தன்ஆற்று வெளி, நகோன் ஸ்ரீதம்ம ரத்தம் (லிகோர்), யலா (பதனி அருகில்) செலின்சிங்கு (பஹாங்கில்) போன்றவை கிழைக் கடற்கரைப் பகுதியிலிருந்தனவாகும். மேற்குப் பகுதியில் மலாக்கா, வெல்லஸ்லி மாநிலம், தகுவா-பா, லனியா, தெனாசரின் ஆறுகளின் கழிமுகப் பகுதிகளில் அக்குடியிருப்புகள் நிறுவப்பட்டிருந்தன.

இவற்றுள் மிகவும் முக்கியமானது லிகோரில் இருந்த நகோன் ஸ்ரீதம்மரத் என்பதாகும். அது புத்த சமயத்தைச்

சேர்ந்தவர்களுடைய குடியேற்றமாக இருந்திருக்க வேண்டும். அக்குடியேற்றத்தைச் சேர்ந்தவர்களே நகோன் ஸ்ரீதம்மரத் என்றஸ்தூபியையும், அதைச் சுற்றிலும் உள்ள 50கோயில்களுள் சிலவற்றையும் கட்டியிருக்க வேண்டும். இதற்குச் சிறிது வடக்கே தான் 'சயா' என்ற குடியேற்றம் இருந்தது. அது முதலில் பிராமணச் சமயச் சார்புடையதாகவும், பின்னர் பௌத்த சமயச் சார்புடையதாகவும் இருந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. இவ்விரு குடியேற்றக் குழுக்களும் வேளாண்மைத் தொழில் செய்து வந்தவையாகும். மற்றவர்கள் தகரச் சுரங்கங்கள், பொன் சுரங்கங்களைக் கொண்டு பிழைத்து வந்தன.

நமக்குக் கிடைத்துள்ள சான்றுகள் அனைத்தும் பந்தன் வளைகுடா பகுதி, இந்தியப் பண்பாட்டின் வளர்ப்புப் பண்ணையாக இருந்தமையைத் தெரிவிக்கின்றன. இந்தியச் செல்வாக்கு என்ற அலைகள் வீசியதின் விளைவாக, இங்கு ஆர்வம் கொண்ட மக்கள் இந்திய நாகரிகத்தினைப் போற்றி வளர்க்கலாயினர். இந்தியர்கள் மிகப் பழங்காலத்திலேயே, மேற்கே இருந்து தங்கள் நாட்டிற்கு வந்து குடியேறியதைப் பற்றிய மரபு வழிச் செய்திகள் மலேசியாவில் இன்றும் வழங்கி வருகின்றன. மேற்குக் கடற்கரைப் பகுதியில் தகுவாபாவைச் சுற்றிலும் இந்தியரின் உடற் கூற்றுச் சாயலுடைய மக்கள் வாழ்ந்து வருகின்றனர். நகோம் ஸ்ரீதம்மரத்திலும், படேலிங்கு பகுதியிலும் பண்டை இந்தியப்பிராமணர்களின் வழியிலே வந்தவர்கள் இன்னும் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் இன்றும் தங்கள் மூதாதையர் தமிழகத்திலிருந்து மலேசியா தீபகற்பத்திற்குக் கடல்வழியாகவும் நில வழியாகவும் வந்தமைபற்றிய மரபு வழிச் செய்திகளை எடுத்தியம்புகின்றனர்.

## வல்லரசுகளின் தாக்குதல்கள்

பண்டைக் காலத்திய மலேசியாவின் இந்து அரசுகளைப் பற்றி இவற்றைத் தவிர வேறொன்றும் அறிய இயலவில்லை. கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் மலேசியா, சைலேந்திரப் பேரரசின் ஆதிக்கத்திற்கு அடிபணிந்திருந்தமை கல்வெட்டுகளால் புலனாகிறது. பின்னர், அது சயாமியர் தாக்குதலுக்கு இரையாகியது.

சைலேந்திரப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு ஜாவா, மலேசியாவின் மீது படையெடுத்ததை (பதின் மூன்றாம் நூற்றாண்டின் இறுதி) பின்னர்க் காண்போம். பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில், மலேசியாவின் பெரும்பகுதி மஜபாகிதப் பேரரசின் ஆட்சிக்குட்பட்டது. அடுத்த நூற்றாண்டின் தொடக்

கத்தில் மலேசியாவில் ஜாவாவின் ஆட்சி மறைந்து, சீனாவின் ஆதிக்கம் ஏற்பட்டது. ஆனால், அதே சமயத்தில், உள் நாட்டில் உரிமையுடன் ஆட்சி நடத்திய பல தனியரசுகள் தோன்றி யிருந்தன.

## வரலாற்றுக் காலத் தொடர்புகள்

மலேசியாவில் வரலாற்றுக் காலத் தொடக்கத்திலேயே, தமிழருடைய குடியேற்றங்கள் அமைக்கப்பட்டு இருந்ததை முன்னரே நாம் கண்டோம்.

சங்க காலத்தில், பண்டைத் தமிழர்கள் பலர், தென்கிழக்கு ஆசியநாடுகளோடு வாணிகத்தொடர்பு கொண்டு இருந்தனர். சங்கம் மருவிய காலத்திய மணிமேகலைக் காப்பியம் சாதுவன் எனும் காவிரிப்பூம்பட்டினத்து வணிகனைப்பற்றிக் குறிப்பிடும் கதை, இங்கு நினைவு கூரத்தக்கதாகும்.

## பல்லவர் கண்ட மலேயா

பல்லவ மன்னர்கள் ஆட்சிக் காலத்தில், மலேயாவோடு தமிழகம் நெருக்கமான தொடர்பு கொண்டு இருந்தது. பல்லவருடைய கப்பல்கள் தென்கிழக்காசிய நாடுகளுக்கு கடல் மல்லையில் இருந்து சென்று வந்தன என்று வால்டர் எலியட் குறிப்பிட்டுள்ளார். அக்கப்பல்கள் கெட்டாவைச் சுற்றி வந்ததாகவும் குறிப்பிடப்படுகிறது.

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் பாகியான் எனும் சீன யாத்திரிகர் இந்தியாவிற்கு வந்தார். அவர், பல்லவ மலேசியத் தொடர்புகளைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. ஆனால், கி. பி. ஏழாம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வந்த யுவான் சுவாங்கும், அவருக்குப் பின்னர் வந்த இட் - சிங் எனும் சீன யாத்திரிகரும் இதைப்பற்றிச் சில குறிப்புகளைத் தந்துள்ளனர் கெட்டாவில் இருந்து நாகப்பட்டினத்திற்கு முப்பது நாட்களிலும், அங்கிருந்து இலங்கைக்கு மேலும் இரண்டு நாட்களிலும் செல்ல இயலும் என்று இட்சிங் தெரிவித்துள்ளார்[4]

மலேயாவில் பேரா நதிச் சங்கமத்தில் இருந்து 10 கி. மீ. தொலைவில் உள்ள டிண்டிங்குக்கு அடுத்துள்ள கங்கா நகரினைத் தலை நகராகக் கொண்டு கங்க பல்லவன் ஆட்சி புரிந்தான் எனும் செய்தியை வின்ஸ்டெட் எனும் அறிஞர் தெரிவித்துள்ளார்.[5]

---

4. K. A. Nilakanta Sastri, Foreign Notices of South India PP. 106-112
5. H. Winstedt, A Cultural History of Malaysia, PP. 48-50.

## சோழரின் படையெடுப்பு

கி.பி. பதினோராம் நூற்றாண்டில், இராசேந்திர சோழனுடைய படையெடுப்பின் போது, இந்தக் கங்கா நகரம் தாக்கப்பட்டது; மண்மேடாக்கப்பட்டது. இந்தப் பல்லவர் ஆட்சி, கெட்டாவுக்கும் லீகோவுக்கும் இடைப்பட்டப் பகுதியில் நிலவியது. அதனைச் சோழரின் படை, அடியோடு அழித்து விட்டது. மலாய்ப் பெண்களை, மலேசியாவில் ஆட்சி புரிந்த கங்கப் பல்லவர்கள் திருமணம் செய்து கொண்டு, வாழ்ந்ததாகத் தெரிகிறது. இந்த அரச மரபில் வந்த பிற்கால அரசர்கள் இஸ்லாமிய சமயத்தைத் தழுவினர். எனினும், பழைய இந்து சமயப் பழக்க வழக்கங்களை, அவர்கள் போற்றிக் காத்தனர்.

பிற்காலத் தொடர்பினைச் சைலேந்திரர் வரலாற்றில் காண்போம்.

## 5.3.

# நாகரிகம்

### சமுதாய நிலை

தமிழ் நாட்டில், மன்னார் குடாப் பகுதியில் வாழும் லப்பைகளுக்கும், மலேசியாவில் வாழும் முஸ்லீம்களுக்கும் இடையே பேரளவில் ஒற்றுமைப் பண்புகள் காணப்படுகின்றன. அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தப்படும் பொருள்கள், சிறப்பாக அப் பொருள்களை அலங்கரிக்கும் முறைகள் ஆகியவற்றிலும் இவ்விரு நாட்டு மக்களிடையே, ஒற்றுமைகள் இருந்து வருகின்றன. தமிழகத்தில் தொன்று தொட்டுப் பயன்படுத்தப்படும் தண்ணீர்ப் பாத்திரத்திற்குக் 'கெண்டி' என்பது பெயர். மலேசியாவில் அத்தகைய பாத்திரம் புழக்கத்தில் இருப்பதுடன், இன்றும் 'கெண்டி' என்னும் பெயராலேயே அது வழங்கப்படுவது குறிப்பிடத்தக்கது.

மலேசியாவில் வாழும் பௌத்த, இஸ்லாமிய சமயத்தைத் தழுவிய மக்களும் இராமன், அனுமார் ஆகியோரின் கதைகளிலும், நாட்டுப் பாடல்களிலும் ஈடுபாடுடையவர்களாக இருக்கின்றனர். இதுமட்டுமல்லாமல் இலங்கைக்கு அணை (சேது) கட்டிய வானரங்களின் வழிவந்தோர் என்று தங்களைக் கூறிக் கொள்ளுவதிலும் அவர்கள் பெருமைப்படுகின்றனர். தமிழகத்தின்மேலைக் கடற்கரையைச் சார்ந்த லப்பைகளின் வாணிகத் தொடர்பினால்தான், மலேசியா மக்கள் முதலில் குருமார்கள் வழிபாட்டுச் சமய நெறியிலிருந்து இந்து சமயத்திற்கும், பின்னர் ஆகம இஸ்லாமிய சமயத்திற்கும் மாற்றப்பட்டதாக அன்னன்டலே கருதுகிறார்.[6]

---

6. Indian Historical Quarterly, Vol. VIII. Pp. 216-217.

## சமய நிலை

மலேசியாவின் வரலாறு தொடங்குகின்ற காலத்தில், இந்து சமயம் செல்வாக்குற்று விளங்கியதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. கி.பி. நான்காம், ஐந்தாம் நூற்றாண்டுகளில் சைவ வைணவ சமயம் செல்வாக்குறத் தொடங்கிப் பதிமூன்றாம் நூற்றாண்டில் சைலேந்திரப் பேரரசு வீழ்ச்சியுறும் காலம் வரையில், அவை சிறப்புற்று விளங்கியதைக் காணுகின்றோம்.

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் மகாயான பௌத்த சமயமும் இந்நாட்டில் பரவியமையும், ஸ்ரீவிசயப் பேரரசர் காலத்தில் அரசின் சமயமாகச் சீரும் சிறப்பும் பெற்றமையும் அங்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகளாலும், தொல் பொருள் சின்னங்களாலும் தெரிய வருகின்றன.

பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் உண்டான இஸ்லாமிய சமயத்தின் தாக்குதலால் பையப் பைய இந்து சமயமும் பௌத்த சமயமும் செல்வாக்கு இழந்து, இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து போயின. இன்றைக்கும் இஸ்லாமிய சமயமே மலேசியாவின் தேசிய சமயமாக இருந்து வருகிறது. இஸ்லாமியர் தங்கள் சமயத்தைப் பரப்பும் ஆர்வத்தில், பண்டை இந்தியச் சமயங்களின் நிலையங்களையெல்லாம் அழித்து விட்டனர். அதனால், மலேசியாவின் பண்டைக் காலத்திய சமய நிலையை விரிவாக நாம் அறிவதற்கு இயலவில்லை.

## கலை வளர்ச்சி

கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட காலத்துக்குரிய மலேசியாவின் கலைச்செல்வங்கள், அங்குச் சைவம், வைணவம், பௌத்தம் முதலிய சமயங்கள் சிறப்புற்றிருந்தன என்பதைக் காட்டுகின்றன. புத்தர் சிலையைத் தவிர, தென்னிந்திய பாணியில் அமைந்த நடராசர் வடிவமும், கணபதியின் சிற்பமும் குறிப்பிடத்தக்கன. சிவபெருமானின் (பாதி உருவ) சிலை ஒன்று பேங்காக்குப் பொருட்காட்சிச் சாலையில் வைக்கப் பட்டிருக்கிறது. "அருளொழுகும் முகமும், அமைதி நிலவும் முகமும், உயர்ந்த தோள்களின் பெருமித நிலையும், வனப்பு மிக்க உடையும், நேர்த்தி வாய்ந்த அணிகலன்களையும் உடைய இச்சிலை முடமாக்கப்பட்ட போதிலும், இந்தியச் சிற்பங்களின் தலைசிறந்த படைப்புகளோடு ஒத்த நிலையில் வைத்துப் போற்றத் தக்கதாகும்."

தகுவா – பாவில் கிடைத்துள்ள திருமாலின் சிலை பல்லவர் காலத்தில் செய்யப்பட்ட சிறந்த கலைப்படைப்பாகும்.

ஸ்ரீ விசயப் பேரரசின் தொடக்க காலத்திற்குரிய வெண்கலச் சிலைகள் சில, மலேசியாவில் கிடைத்துள்ளன. அவற்றுள் புத்தர் சிலை ஒன்று சிறப்பு மிக்கதாகக் காணப்படுகிறது. மிகச் சிறிய வடிவில் (8½ அங்குலம்) செய்யப்பட்டுள்ள இச்சிலையின் வலது கை வரதமுத்திரையுடன் உள்ளது; வலது தோள் மூடப் படவில்லை; இடது தோளின் மீது போர்த்தப்பட்டுள்ள சால்வையின் முனைப்பகுதியை இடது கையில் சேர்த்துப் பிடித்துக் கொண்டிருக்கிறது. அத்துடன் ஆடையின் மடிப்பு களும், தாழ்ந்து தொங்கலும், அச்சிலை அமராவதி கலைக் கூடத்தைச் சேர்ந்தது என்பதை எடுத்துரைக்கின்றன. மேற் கண்ட சிலையின் இப்பண்புகள் ''இங்குக் குடியேறிய மக்களின் தாயகம் கிருஷ்ணா கோதாவரி பள்ளத்தாக்குப் பகுதியாக இருக்க வேண்டும் என்ற கொள்கையை வலியுறுத்துகின்றன. அமராவதியின் செல்வாக்குடைய தென்கிழக்கு ஆசிய சிலை களுள் ஒன்றாகக் கலைப்பாணியின் அடிப்படையில் இந்த மலேசியாவின் சிலை அமைந்துள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கது.'' இச்சிலை சுமத்திராவில் கிடைத்துள்ள புத்தரின் கற் சிலையைக் காட்டிலும் காலத்தால் பிற்பட்டது. பெரும்பாலும் கி.பி. ஆறு அல்லது ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இச் சிலை இருக்கலாம் என்று கலைநூலார் கருதுகின்றனர்.

# 5. 4.

# இன்றைய மலேசியாவில் தமிழ்ப் பண்பாடு

மலேசியாவினை இக்காலத்திலே மக்கள் 'மலைநாடு' எனும் பெயரால் சுட்டுகின்றனர். தென் கிழக்கு ஆசிய நாடுகளில், மையமான இடத்தைப் பெற்றிருப்பது மலேசியா ஆகும். மலை வளம் காரணமாக மக்களின் பொருள் வளமும், மன வளமும் இந்த நாட்டில் உயர்ந்தும் சிறந்தும் விளங்குகின்றன.

கி.பி. 1860 ஆம் ஆண்டில் கோலாலம்பூர் மலேசியாவின் தலை நகரமாக்கப்பட்டது. கிளாங்நதியும் அதன்கிளைநதி ஆகிய கோம்பக் நதியும் கூடும் இடத்தில் கோலாலம்பூர் இருக்கிறது. மலேசிய, சீன, இந்திய, ஆங்கில நாகரிகங்கள் கோலாலம்பூரில் பின்னிப் பிணைந்து காட்சியளிக்கின்றன. இங்குள்ள மக்கள் தொகை பத்து இலட்சம் ஆகும்.

கோலாலம்பூரில் பல இந்து சமயத்தின் கோயில்களை அங்குக் குடியேறிய தமிழ் மக்கள் எழுப்பியுள்ளனர்.

## தண்டாயுதபாணி கோயில்

கோலாலம்பூரில் செந்நூல் என்னும் பகுதியில் தண்டாயுத பாணி கோயில் இருக்கிறது. நூற்றிருபது ஆண்டுகளுக்கு முன்னர், நகரத்துச் செட்டிமார்கள் கட்டியதாகும். வெள்ளிக் கிழமை தோறும் இக்கோயிலில் சிறப்பு வழிபாடு நடைபெறு கிறது. இக்கோயிலுக்கு வெள்ளித் தேர் ஒன்றைப் பக்தர்கள் கொடையாக அளித்துள்ளனர். இக்கோயிலுக்கு அழகிய வெள்ளி யாலான மயில் வாகனமும் கொடையாக வழங்கப்பட்டுள்ளது.

"விண்ணோங்கு மாடங்கள்
விரைந்தோங்கு செல்வத்தில்
வேலேந்தி நிற்கும் முருகா!
தண்டேந்தி நின்றாயோ?
தமிழேந்தி நின்றாயோ?"

எனும் பாடலில் தண்டாயுதபாணி சுவாமியின் திருக்கோலம் வருணிக்கப்பட்டுள்ளது.

## கந்தசாமிகோயில்

ஸ்காட் சாலையில் கந்தசாமி கோயில் இருக்கிறது. இதனை யாழ்ப்பாணத் தமிழர்கள் கட்டியுள்ளனர்.

## மகாமாரி அம்மன் கோயில்

ஹை தெருவில், மகாமாரியம்மன் கோயில் இருக்கிறது. கோலாலம்பூரில் உள்ள மிகப் பழைய கோயில்களுள் இது சிறப்பு மிக்கதாகும்.

இக்கோயிலில் கணேசர், முருகன், மகாமாரியம்மன் கருவறை, நவக்கிரகப் பகுதி, பேச்சியம்மன் சன்னதி ஆகியவை உள்ளன.

இக்கோயிலின் வளாகத்தின் உள்ளே தெய்வப் புலவர் திருவள்ளுவருக்கு ஒரு சிறு கோயில் அமைக்கப்பட்டிருக்கிறது. இக்கோயிலின் தரைப்பகுதியில், பளிங்கு கற்கள் பாவப் பெற்றுள்ளன.

மகாமாரியம்மன் கோயிலில், சமயச் சொற்பொழிவு, சமய வகுப்புகள். இசை நிகழ்ச்சிகள் நடத்தப்படுவதற்குரிய பெரும் மண்டபங்கள் உள்ளன.

## கோர்ட்டு மலை கணேசர்கோயில்

கோலாலம்பூரின் பாட்டாளி மக்களுடைய நன்கொடையில் இருந்து எழுப்பப்பட்டது இக்கோயில்.

## முத்து மாரியம்மன் கோயில்

பத்தாய் எனும் பகுதியில், வானொலி நிலையத்திற்கு அருகில் இருக்கும் கோயில் இது; மிகவும், சிறிய கோயில். 'மூர்த்தி சிறிதாயினும் கீர்த்தி பெரிது' என்பதற்கு இணங்க ஆயிரக் கணக்கான பாமர மக்களின் வழிபடு தெய்வமாக முத்து மாரியம்மன் கோயில் விளங்குகிறது.

## இராஜ ராஜேசுவரி கோயில்

கோலாலம்பூர் ஏரிக்கு எதிரில் ஒரு சிறிய குன்று இருக்கிறது. அதன்மீது இக்கோயில் எழுப்பப்பட்டுள்ளது. அழகு நிறைந்த திருக்கோயில் இது. கனிவுமிகுந்த முகத்தோற்றத்தோடு அம்மை இங்கு அருள் பாலிக்கின்றாள்.

இக்கோயில்கள் யாவும் கடந்த நூற்றைம்பது ஆண்டுகளில் கட்டப்பட்டவையாகும். தமிழகத்தின் பண்டைக் கோயிற்கலைப் பாணிகளைப் பின்பற்றிச் சிற்சில மாற்றங்களோடு அழகுற அமைக்கப்பட்டுள்ளன. அலை கடல்களுக்கு அப்பால், தமிழகத்தின் பண்பாட்டை இக்கோயில்கள் நினைவுபடுத்துகின்றன.

## பத்து மலைக் குகைக் கோயில்கள்

கோலாலம்பூரின் எல்லையில் 9 கி.மீ. தொலைவில், 'பத்து (பெரிய) மலை' என்பது இருக்கிறது. இது சுண்ணாம்புக் கற்களினால், அமைந்த மலையாகும். இதனைப் 'பூமலை' எனவும் குறிப்பிடுவர்.

மலையின் அடிவாரத்தில் இருந்து, மலை உச்சியில் உள்ள மாபெரும் குகைக்குச் செல்ல இரு வரிசைப் படிக்கட்டுகள் உள்ளன. 272 படிகளில் ஏறி, மேலே சென்றால் தலைமைக் குகை இருக்கின்றது. அடிவாரத்தில் இருந்து மின்னூர்தியின் (Wnch) மூலமும் செல்லலாம்.

தலைமைக் குகையின் நுழைவாயிலில், மயிலின் வடிவம் பொறிக்கப்பட்டுள்ளது. மலைப் பகுதியில் எங்கும் மயில்கள் ஆடி அசைவதைக் காணலாம். இங்குள்ள கோயில்களுள் பெரும் புகழ் வாய்ந்தது முருகனின் திருக்கோயிலும், திருவள்ளுவரின் கோட்டமுமாகும். ''பத்துமலை முருகன் விக்கிரகம் சிறியதாக இருந்தாலும், அருள் பொழியும் அழகன் நம்மை மெய் மறக்க செய்து விடுகிறது.''

இக்கோயிலில் தைப்பூசத் திருவிழா மாபெரும் சிறப்புடன் கொண்டாடப்படுகிறது. மலேசியாவில் உள்ள தமிழ் மக்கள் இவ்விழாவிற்கு இலட்சக் கணக்கில் திரண்டு வருகின்றனர்.

ஆயிரக்கணக்கான காவடிகள் தைப்பூச நாளன்று, பத்து மலை முருகனுக்குச் செலுத்தப்படுகின்றன. இவ்விழாவை, மலேசியாவின் தேசியத் 'திருவிழாவாகப்' போற்றுகின்றனர்.

## பத்துமலை ஒரு கலைக்கூடம்

மலேசியாவின் விடுதலைக்குப் பிறகு, பத்துமலையின் வளர்ச்சி பெருகிற்று. அங்கு ஒரு கலைக்கூடம் நிறுவப்பட்டுள்ளது.

'குளுகுளு' வசதியோடு கூடிய இக்கலை அரங்கில் ஏராளமான தெய்வச் சிலைகளும், பொம்மைகளும், புராணக் கதைகளின் காட்சிகளும் நம் கண்ணையும் கருத்தையும் கவரத்தக்க வகையில் அமைக்கப்பட்டுள்ளன.

கலைக் கூடத்தின் நுழைவு வாயிலில் விநாயகர் சிலையைக் காணலாம். அடுத்து உமாமகேசுவரியின் தவக்கோலம் கருத்திற்கினிய காட்சி நல்குகிறது. சரவணப் பொய்கையில் ஆறுமுகன் கார்த்திகைப் பெண்டிரால் பேணப்படும் காட்சியும், முருகப் பெருமானின் திருவிளையாடல்களையும், முருகனின் திருமணக் காட்சியும், முருகன் அவ்வையின் மூக்கை உடைக்கும் காட்சியும், திருச்செந்தூர் முருகனையும், வள்ளிமணாளனாகக் காட்சி தரும் திருமணக் கோலத்தையும், அழகிய சிற்பவடிவங்களிலே அங்குக் காணலாம். அடுத்து திருமாலின் பத்து அவதாரங்களும் நம் முன்னே தோன்றும். கண்ணன் கீதை உபதேசம் செய்யும் காட்சி, கண்கொள்ளாக் கவினுறு காட்சியாகும்.

முருகனுக்கு நேர்த்திக் கடன் செலுத்துவோர், பால்குடங்களைச் சுமந்து மலையேறுவதும், காவடி செலுத்துவோரைப் பற்றிய காட்சிகளும், முருக வழிபாட்டில் அந்நாட்டு மக்களுக்கு உள்ள முறுகிய ஈடுபாட்டைக் காட்டுகின்றன.

அம்பலவாணரின் ஆனந்த தாண்டவம், 'இருந்ததனை இருந்தபடி இருந்து.' சொல்லாமல் சொல்லும் தட்சணாமூர்த்தியின் குருதேவர் வடிவம், பாற்கடலைக் கடையும் காட்சி, பாம்பணையில் பள்ளிகொண்டுள்ள திருமாலின் திருக்கோலம், பசுக்களை மேய்க்கும் கண்ணன், இராமபிரானுடைய பட்டாபிசேகம் போன்ற காட்சிகளும் அங்கு நேர்த்தியுடையனவாக அமைக்கப்பட்டிருக்கின்றன.

மதுரை மீனாட்சி, இறைவன் ஆடிய திருவிளையாடல்களில் சிறப்பு வாய்ந்தவை, மகாமாரியம்மன் போன்ற 'சக்தி' வழிபாட்டு நெறிக்குரிய பல்வேறு சிலைகளும், சிற்பங்களும் அக்கலைக் கூடத்தை வலிவும் வனப்பும் உடையனவாகச் செய்துள்ளன.

இக்காட்சிகள் யாவும் உயிர்க்களை உடையனவாக உள்ளன.

## வள்ளுவர்கோட்டம்

தமிழ் நாட்டின் தலைநகரில் உள்ளதைப் போன்று, சிறிய வடிவில், கோலாலம்பூரின் பத்துமலையின் குகை ஒன்றில், திருவள்ளுவருக்குச் சிறப்புமிகு திருக்கோயில் எழுப்பப்

பட்டுள்ளது. கருவறையில் கவர்ச்சிமிகு திருவள்ளுவரின் சிலை, புன்முறுவல் பூத்த நிலையில் பொலிவுறுகிறது.

தமிழ்ச் சான்றோராகியத் தெய்வப் புலவர் திருவள்ளு வருக்குத் ஒரு நினைவாலயம் அங்கு எழுப்பப்பட்டுள்ளமை நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.

கி. பி. ஆறாம், ஏழாம் நூற்றாண்டுகளில், தமிழகத்துப் பல்லவ மன்னர்களும், பாண்டிய வேந்தர்களும் குகைக் கோயில்களை உருவாக்கினர். இருபதாம்நூற்றாண்டில், அலை கடல்களுக்கு அப்பால் சென்று குடியேறியுள்ள தமிழ் மக்கள், திருவள்ளுவருக்கும் பிறதெய்வங்களுக்கும் கோலாலம்பூர் பத்து மலையில் குகைக் கோயில்கள் சமைத்து விழா எடுப்பது விந்தை அதுவா?

பத்துமலை முருகன் கோயிலில் உள்ள இராசகோபுரமும், மகாமாரியம்மன் கோயிலில் உள்ள இராசகோபுரமும், பிற்காலப் பாண்டியர்கள் சிதம்பரம், திருவண்ணாமலை, திருவில்லிபுத்தூர் கோயில்களில் வானளாவ எழுப்பியுள்ள திருக்கோபுரங்களையே நினைவுபடுத்துகின்றன.

## இந்தியப் பண்பாட்டுத்துறை

தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்களுடைய அரிய முயற்சியால், கோலாலம்பூர்ப் பல்கலைக் கழகத்தில், 'இந்தியப் பண்பாட்டு ஆய்வுத்துறை', இருபது ஆண்டுகளுக்கு முன்னரே தொடங்கப்பெற்றது. அத்துறையில் 'தமிழ்மொழி, இலக்கியம், பண்பாடு' பற்றியப் படிப்பும் ஆய்வுமே முதன்மை இடம் பெற்றுள்ளன. தமிழில் 'புதிய சிந்தனை'யைக் கொண்டுவந்து சேர்ப்பதில் இத்துறை, பேரார்வத்தோடு ஈடுபட்டு இருக்கிறது.

## முதல் உலகத் தமிழ்மாநாடு

அறிஞர் சேவியர் தனி நாயக அடிகள், இத்துறையின் தலை வராகப் பணியாற்றிய காலத்தில், தமிழவேள் சாரங்கபாணியா ரின் அயரா உழைப்பால், உலகமே கண்டு வியக்கத்தக்க 'முதல் உலகத் தமிழ்மாநாடு', 16-4-1966 ஆம் நாள் முதல் ஒருவார காலத்திற்குச் சீரோடும் சிறப்போடும் மலேசியா நாட்டு வரலாறு காணாத வகையில் புதுமையாகக் கொண்டாடப்பட்டது.

நூற்றுக்கணக்கான உலகத் தமிழ் அறிஞர்களும், ஆயிரக் கணக்கான தமிழ் ஆர்வலர்களும் அம்மாநாட்டில் கலந்து கொண்டனர். அம்மாநாட்டின் பயனாக உலகத்தின் பல்வேறு

பகுதிகளிலும் வாழும் தமிழ் மக்கள், வீறார்ந்த தமிழ்த் தேசிய எழுச்சியைப் பெற்றனர். சிந்தனையுலகில், பல புதிய கிளையாறுகள் தமிழாராய்ச்சியின் வெள்ளப் பெருக்கை வளப்படுத்தின; உரமூட்டின; கலையூற்றைத் தேடிக் காண முனைந்தன. அந்த மாநாட்டிற்கு விடுக்கப்பட்ட அழைப்பிதழின் அமைப்பு நம் கருத்தைக் கவருவதாகும்.

அழைப்பிதழின் முகப்பில், மாமல்லபுரக் கடற்கரைக் கோயில் ஏரும் எழிலும் பெற்று விளங்கியது; காம்பூச்சியாவின் உலகப் பேரதிசயமான ஆங்கோர்வாட் கோயிலின் விமானம் வீறுடன் விளங்கியது. மற்றும்,மலேசியாவில் கடாரம்(கெட்டா) எனும் ஊரில் சேரன் கட்டிய கோயிலின் சிதைவுகளும் கருத்தைக் கவர்ந்தன. இவற்றின் அடியில் மலர்ந்த செந்தாமரை மலரினைச் சுற்றி 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனும் தமிழனின் அனைத்துலகச் சகோதரத்துவத்தைப் போற்றும் மணிமொழி ஒளிமயமாய் விளங்கியது.

இந்த அழைப்பிதழின் முகப்பு அமைப்பே, பண்டைத்தமிழ்ப் பண்பாடு தென்கிழக்காசிய நாடுகளில் நாகரிக ஒளியைப் பாய்ச்சிய காட்சியை நம் மனக்கண்முன் கொண்டுவந்து நிறுத்தும் ஆற்றலுடையதாகப் பொலிவுற்றது. தமிழன், ஒன்றுபட்ட நிலையில், முன்னேற்றப் பாதையில் ஓர் அடியை முன்னோக்கி எடுத்துவைக்குமாறு செய்தது கோலாலம்பூரில் நடைபெற்ற முதல் உலகத் தமிழ் மாநாடேயாகும்.

## 5.5.

# மலாக்கா

மலேசியாவின் மாநில அரசுகளுள் ஒன்று மலாக்கா. இது 50 கி. மீ. நீளமும் 6 முதல் 30 கி. மீ. அகலமும் உடையது. இந்த நாட்டின் தோற்றம் பற்றி உறுதியாக ஒன்றும் சொல்லுவதற்கு இல்லை. ஆனால், சீன, அராபிய காலவழிச் செய்திக் கோவை களில் இருந்து, மலேசியாவின் மிகப் பழைய நகர்களுள் ஒன்று மலாக்கா என்பது தெரியவருகிறது. மலாக்காவிற்கும் இந்தியா விற்கும் பழங்காலத்திலேயே தொடர்பு இருந்ததை மேற்கண்ட நூல்களால் அறிய முடிகிறது.

போர்ச்சுகீசியர்களின் குறிப்புகளினால், மலாக்கா அரசு, ஏறக்குறைய கி. பி. 1250 அளவில் தோன்றியதாகத் தெரிகிறது.

### பரமேசுவரன் தோற்றுவித்த அரசு

மலேயாவின் மரபுவழிச் செய்திக் கதைகளில் இருந்து, ஜாவாவில் வாழ்ந்த பரமேசுவரன் என்ற ஓர் இந்து அரசன் (கி. பி. 1414), சிங்கப்பூரில் இருந்து மலாக்காவிற்குக் குடியேறிய தாகச் சொல்லப்படுகிறது.

இவ்வாறு ஜாவாவில் இருந்து, பரமேசுவரன் வெளியேறக் காரணம் ஜாவாவில் உண்டான கலகங்களும் குழப்பங்களு மாகும். இவனுக்கு ஜாவாவில் 'பிரபு' எனும் பட்டப் பெயர் வழங்கியதாகத் தெரிகிறது. தன்னுடைய ஆதரவாளருடன் மூவார் ஆற்றங்கரைக்குச் சென்று சிறிது காலம் இவன் தங்கி இருந்தான். அப்பொழுது மலாக்காவில் இருந்த கடல் நாடோடி களான 'சிலட்டர்கள்', இவனை அன்போடு மலாக்காவிற்கு

அழைத்துச் சென்றனர். ஆர்வத்தோடு அங்குச் சென்ற பரமேசுவரனை அம்மக்கள், தங்கள் தலைவனாக ஏற்றுக் கொண்டு, 'அரசனாக' முடிசூட்டினர்.

## அரசின் வளர்ச்சி

சிறிது காலத்திற்குள், கடற் கொள்ளைக்காரர்கள் குடிநீருக்காக மலாக்காவிற்குள் நுழைந்தனர். அவர்களை, அரசன் இன்முகத்துடன் வரவேற்று, அவர்களுடைய தேவைகளை நிறைவு செய்தான். மலாக்கா அரசனுடைய ஆதரவில் அவர்கள் வாழத் துணிந்தனர். தாங்கள் கொண்டுவந்த கொள்ளைப் பொருள்களை எல்லாம், அவ்வரசனிடம் ஒப்படைத்து, அங்கேயே நிலைத்து வாழத் தலைப்பட்டனர். காலப்போக்கில், மலாக்கா பல்வேறு கடலோடிகளைக் கவர்ந்தது. வேறு பல மக்களும் அங்குக் குடியேறினர். இதன் விளைவாக, மக்கள் தொகை பெருகியது; வாணிகம் வளர்ந்தது; மலாக்காத் துறைமுகம் பெரியதாக வளர்ச்சியுற்றது. இந்தியா, சீனா, ஜப்பான், அரேபியா நாட்டுக் கப்பல்கள் மலாக்காவிற்கு வந்து போயின.

ஆற்றின் முகத்துவாரத்தில் இருப்பது மலாக்கா துறைமுகப் பட்டினம். அதற்கு அருகிலுள்ள மலையில், பல கட்டடங்களைக் கட்டி, தலைநகரை அரசன் அங்கு நிறுவினான். அவனுடைய ஆட்சி அங்கிருந்து, மலாக்கா முழுவதிலும் பரவியது.

## இராசதந்திர உறவு

கி. பி. 1406 ஆம் ஆண்டில், மிங் செங்கோ எனும் சீன மன்னர் ஹின்சிங் எனும் தூதர்மூலம், பொன் சரிகை இழைத்த பட்டாடையை அன்புப் பரிசாக அவனுக்கு அனுப்பி வைத்தார். அதன் மூலம், மலாக்கா அரசனுடைய நட்புறவைச் சீன அரசர் நாடினார். இதைப் போன்று பல நாட்டுத் தூதுவர்கள் வந்தனர். இதைக் கண்டு பொறாமையுற்ற தாய்லாந்து, மலாக்காவின் கடலாதிக்கத்தை ஒடுக்க முனைந்தது. வளரும் நிலையில் இருந்த மலாக்கா, சயாமை எதிர்த்துப் போரிட விரும்பாமல், கப்பம் கட்ட இசைந்தது. ஆண்டுதோறும் 40 தாஹில் (ரூ 4000) கப்பம் கட்டி வந்தது.

மலாக்கா அரசனான பரமேசுவரனுடைய பட்டத்து அரசிக்குப் பரமேசுவரி என்பது பெயர். கி. பி. 1414 ஆம் ஆண்டு பரமேசுவரன் காலமானான்.

## முஸ்லீமாக மாறுதல்

உடனே, அவனுடைய மகன், ஸ்ரீ மகாராஜா பேசார்மூடா என்பவன் பட்டத்திற்கு (1414-1474) வந்தான். இவனுடைய

காலத்தில், மலாக்கா அரசர் மரபு, இஸ்லாமிய மதத்தைத் தழுவியது. தம்முடைய பெயரை, ''சுல்தான் முகமது சிக்கந்தர் ஷா'' என்று மன்னன் மாற்றிக் கொண்டான். 'அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி' எனும் பழமொழிக்கு இணங்கக் குடிமக்களும் முஸ்லீம்களாக மாறினர். அதனால் மலை அடிவாரத்தில் ஒரு மசூதி கட்டப்பட்டது.

## சீனாவோடு திருமணவுறவு

கி. பி. 1420ல், சீன மன்னர், தம் மகள் 'ஹில்லிபோ' எனும் பெயருடைய இளவரசியையும், ஐந்நூறு பணிப்பெண்களையும், மலாக்கா மன்னருக்குப் பரிசாக அனுப்பி வைத்தார்; சிக்கந்தர் ஷா, சீன இளவரசியைத் திருமணம் செய்து கொண்டார். அவ்வரசியும், பணிப் பெண்களும் தங்கி வாழ்வதற்கு, அரசன் 'சீனக்குன்று' (புக்கிட் சைனா) என்னும் மலை மாளிகையை நிறுவினான்.

## சோழமாதேவி பட்டத்தரசி

கி. பி. 1422 அளவில் 'சோளமாத்வி' (சோழமாதேவி) எனும் சோழநாட்டு இளவரசியையும் மலாக்கா மன்னர் மணந்து கொண்டார். இவளுக்கே மகப்பேறு வாய்த்ததாகச் சொல்லப் படுகிறது.

இச்செய்திகளைச் சீன நாட்டு வரலாற்றுக் குறிப்பேடு கூறுகிறது. இதன் கருத்துகள் முற்றிலும் உண்மையாக இல்லா மல் இருக்கலாம். ஆனால், அடிப்படைச் செய்திகளை ஐயுறவு கொள்ளுவதற்கு இல்லை.

பதினைந்தாம் நூற்றாண்டில், தமிழக அரசியல் வானில், சோழப் பேரரசு எனும் சூரியன் மறைந்து விட்டான். எனவே, இங்குச் சுட்டப்படும் 'சோழமாதேவி,' சோழநாட்டுப் பெரு நிலக்கிழாரின் (பிரபுக்களின்) அல்லது சோழநாட்டு கடல் வாணிகச் செல்வரின் மகளாக இருந்திருக்கக் கூடும். பட்டத்து அரசியான இவளுக்கும், 'பரமேசுவரி' எனும் பட்டம் சூட்டப் பட்டு இருந்ததைக் காலவழிச் செய்திக் கோவையால் அறிகிறோம்.

## தாய்லாந்துடன் போர்

சயாமிற்குச் செலுத்தி வந்தத் திறைப் பொருளை மலாக்கா அரசர் நிறுத்திவிட்டார். சீற்றமுற்ற சயாம் இருமுறை மலாக் காவின் மீது படையெடுத்துச் சென்றது; தோல்வியே கண்டது.

மலாக்காவில் வாணிகம் மேன்மேலும் பெருகியது; செல்வம் கொழித்தது. உலகத்தின் பல்வேறு நாடுகளின் கப்பல்களும் மலாக்காத் துறைமுகத்திற்கு வந்தன. அக்காலத்தில்தான். இந் நாட்டைச் சூழ்ந்துள்ள கடலுக்கு 'மலாக்காக் கடல்' எனும் பெயர் உண்டாயிற்று.

## கோழிக்கோட்டோடு கொண்ட தொடர்பு

பண்டைத் தமிழகத்தின் மேற்குக் கரையில் உள்ள கோழிக் கோட்டை (கள்ளிக்கோட்டை) ஆண்ட 'சமோரின்' எனும் அரச குடியைச் சேர்ந்த அரசர் ஒருவர், 12 மீ. நீளமுடைய பீரங்கி ஒன்றை, மலாக்கா மன்னருக்கு அன்புப் பரிசாக அனுப்பி வைத்தார். அடுத்த நூற்றாண்டில், இந்தப் பீரங்கிதான், போர்ச்சுகீசியர்களால் கைப்பற்றப்பட்டது.

## ஆட்சியின் மறைவு

சுல்தான் முகமது இஸ்கந்தர் ஷா இறந்தவுடன், அவனுடைய மகன், ராஜா இப்றாகிம் அரசனானான். இவனுக் குப் பிறகு, இவனுடைய மகன், சுல்தான் முகமது ஷா பட்டத் துக்கு வந்தான். இவனுடைய காலத்தில், கி. பி. 1509ல் போர்ச்சு கீசியர், மலாக்காவிற்கு ஒரு போர்க் கப்பலை அனுப்பினர். சுல்தான் அக்கப்பலிலிருந்த போர்ச்சுகீசியரைச் சிறைப்படுத்தி னான். இதனால், பகைமை மூண்டது. இரண்டு ஆண்டிற்குப் பிறகு, போர்ச்சுகீசியரின் தலைவனாக இந்தியாவில் இருந்த ஆல்புகர்க், மலாக்காவை முற்றுகையிட்டுக் கைப்பற்றிக் கொண் டான். இதனால் மலாக்காவில் சுல்தான்களின் ஆட்சி அழிவுற்றது.

## மாட்சியும் வீழ்ச்சியும்

பதினைந்தாம் நூற்றாண்டில், அரசியலிலும், வாணிகத் திலும் மலாக்கா ஒப்பற்று விளங்கியது. கிழக்கிந்தியத் தீவுகளில், இஸ்லாமிய சமயம் பரவுவதற்கு இவ்வரசு ஆக்கமும் ஊக்கமும் அளித்தது. சுல்தான்களால் தோற்கடிக்கப்பட்ட அரசர்கள், இஸ்லாத்தைத் தழுவுமாறு கொடுமைப்படுத்தப்பட்டனர். இம்மத மாற்றம் சுமத்திரா, ஜாவா முதலிய தீவுகளிலும் பரவின.

கி. பி. 1430-ஆம் ஆண்டிலேயே, இஸ்லாமிய வாணிகர் 'மெலூக்கா' (மலாக்கா)வில் தங்கள் மதத்தைப் புகுத்தினர். மலாக்காவின் செழிப்பும், மிகுந்த பொருள்வளமும், இவற்றால் உண்டான அரசியல் ஆதிக்கமும் மலேசியாவில் இஸ்லாமிய சமயத்தைப் பரப்ப உறுதுணையாயின.

## இன்றைய மலேசிய சுல்தான்கள்

இந்நாளைய மலேசியாவில் வாழும் சுல்தான்களில் பெரும்பாலோர், தாங்கள் மலாக்காவின் இந்துவான பரமேசுவரன் வழித்தோன்றல்கள் என்று கூறிக்கொள்ளுவதில் பெருமைப் படுகின்றனர்.

## மலாக்காச் செட்டிமார்கள்

நானூறு ஆண்டுகளுக்கு முன்னர், தமிழ் நாட்டுக் கப்பல் ஒன்று, பெராக் அருகில் கடலில் மூழ்கிவிட்டது. அதில் இருந்த தமிழ் வாணிகர் சிலர், உயிர் தப்பிப் பிழைத்து, மலாக்கா கரையினுள் நுழைந்தனர். பல ஆண்டுகளாகத் தாயகம் திரும்புவதற்குத் தமிழ் நாட்டு மரக்கலங்கள் ஒன்றும் அங்கு வராததால், மலாக்காவில் நிலையாக வாழத் துணிந்தனர். அவர்களுள் செட்டியார், படையாச்சி, நாயக்கர், பிள்ளை எனும் சாதியினர் இருந்தனர். தங்களுக்குள் அவர்கள் ஒரு சூளுரை எடுத்துக் கொண்டனர். சீனர், மலாய், போர்ச்சுகீசியர் முதலிய சமூகத்தினரின் பெண்களை மணம் புரிந்து கொண்டாலும், சைவ சமயப் பண்பாட்டுப்படி வாழ்க்கை நடத்துவது என்று அவர்கள் உறுதிப்பாடு உடையவராக வாழ்ந்தனர். இதன்படி, அத்தமிழர்கள் உள்நாட்டு வகுப்பினரோடு திருமணவுறவு கொண்டனர். மணமகளையும் சைவ நெறிக்கு மாற்றினர். இவர்களுக்குப் பிறந்த மரபுவழியினருக்கு, 'மலாக்கா செட்டிமார்கள்' எனும் பெயர் உண்டாயிற்று.

டச்சுக்காரர்கள், மலாக்காவைக் கைப்பற்றிய பொழுது (350 ஆண்டுகளுக்கு முன்னர்), அவர்களிடம் நிலப்பகுதி ஒன்றை மானியமாகப் பெற்று, அதில் விநாயகர் கோயில் ஒன்றை இச் செட்டியார்கள் கட்டியுள்ளனர். அக்கோயிலுக்குப் 'பொய்யாத விநாயகர் கோயில்' எனும் பெயர் இன்றும் வழங்கிவருகிறது.

மலாக்கா செட்டிமார்கள் சிறந்த கடலோடிகள். பலர் 'காப்டன்' பட்டம் பெற்றுள்ளனர். கணேசன், அண்ணாமலை, லட்சுமணன், கனகசபை, மீனாட்சி, இலட்சுமி, பார்வதி, வள்ளியம்மை எனும் பெயர்கள் அவர்களுடைய குடும்பங்களில் இன்னும் பெருவழக்குடையனவாக விளங்குகின்றன.

திருமணம், இறப்பு, விழாக்கள், பண்டிகைகள் யாவும் சைவ சமய மரபுப்படியே, இன்றும் அவர்கள் செய்துவருகின்றனர்.

மலாக்காவில் ரப்பர் தோட்டங்கள் மிகுதி. இங்குத்தான் கி. பி. 1800 அளவில் தமிழ்நாட்டு நகரத்துச் செட்டிமார்கள் முதன் முதல் குடியேறினர்.

# 5. 6.

# மலாக்காவின் கோயில்கள்

இங்கு இந்து சமயத்தின் கோயில்கள் சில உள்ளன.

### பொய்யாத விநாயகர்

விநாயகர் கோயில் ஒன்று இங்கு இருக்கிறது. அதற்குப் பொய்யாத விநாயகர் கோயில் என்பது பெயர். அதில் கணேசர், சுப்பிரமணியர், மாரியம்மன், இராமர் முதலிய இந்து தெய்வங்களின் விக்கிரகங்கள் வழிபடு தெய்வங்களாக உள்ளன. நகரத்துச் செட்டிமார்கள் அக்கோயிலில் மீனாட்சி சுந்தரேசுவரரை எழுந்தருளச் செய்துள்ளனர். மூன்று பெருந்தேர்கள் இக்கோயிலில் உள்ளன. நவராத்திரி விழாவும், கந்தர்சஷ்டி விழாவும் மிகச் சிறப்பாக இங்குக் கொண்டாடப்படுகின்றன.

### சந்நாசி மலைக் கோயில்

மலாக்காவில் இருந்து 7 கி. மீ. தொலைவில், இக்கோயில் இருக்கிறது. இங்கு முருகன் லிங்க வடிவில் வழிபடப்படுகிறான்' தைப்பூசத் திருநாளும், மாசிமகத் திருவிழாவும் இங்குச் சிறப்பு மிகு திருவிழாக்களாகக் கொண்டாடப்படுகின்றன. பக்தர்கள் நூற்றுக்கணக்கான காவடிகளைக் காணிக்கையாகச் செலுத்துகின்றனர்.

கயிலாய நாதர் கோயில், ஐயனார் கோயில், திரௌபதி அம்மன் கோயில எனும் மூன்று கோயில்களும் இங்குள்ளன. திரௌபதி

அம்மன் கோயிலில் தீமிதித் திருவிழா பயபக்தியோடு கொண்டா டப்படுகிறது.

## சீனயாத்திரிகர் கண்ட மலாக்கா

சீனயாத்திரிகர், இட்சிங் கி. பி. 686ல், மலாக்காவிற்கு வந்ததாகத் தெரிகிறது. சீனக் குருமார்கள், சீனாவிலிருந்து இந்தியாவிற்குச் செல்லும் பயணத்தின் இடையே, இங்குத் தங்கிச் சென்றனர்.

## பழக்க வழக்கங்கள்

சுல்தான்களாக மாறிய, மலாக்கா அரசர்கள் 'மகாராஜா' எனும் இந்துப் பட்டப் பெயரைத் தொடர்ந்து சூட்டிக் கொண்டனர்.

சிக்கந்தர் ஷாவின் வழிவந்த முகமது ஷா, தமிழ்நாட்டுப் பெண் ஒருத்தியைத் திருமணம் செய்துகொண்டார். அவளுக்குச் 'சுல்தானா' எனும் பட்டத்தையும் வழங்கினார். மற்றும் 'பரமேசுவரி' எனும் பட்டம், பட்டத்தரசிக்கு வழங்கிவந்தமை இங்குக் கருதத் தக்கதாகும்.

மலேயாவின் பல பகுதிகளைச் சுல்தான்கள் பலர் ஆண்டு வந்தனர். பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில், ஆங்கிலேயர் கள் அவர்களுடைய இராச்சியங்களை எல்லாம் கைப்பற்றிக் கொண்டனர்.

## சோழப்பேரரசர் தொடர்பு

'செஜாரா மலேயா' எனும் மலாய் மொழிக் காலவழிச் செய்திக் கோவை, மலாக்காவின் முதல் அரசனான பரமேசு வரனைப் பற்றிச் சில புதிய செய்திகளைத் தெரிவிக்கின்றது. சோழ அரசர்களோடு பரமேசுவரனும், அவன் கால்வழியினரும் (இசுலாமியராக மாறிய பிறகும்) நெருக்கமான மணவுறவு கொண்டு இருந்தனர். முதலாம் இராசேந்திரசோழன், தம்மிடம் தோல்வியுற்ற மலாக்கா அரசனுடைய மகளை மணந்து கொண்டதாகவும், இதன் மூலம் தோன்றியதே பரமேசுவரனு டைய குடிமரபு என்று 'செஜாரா' எனும் மலேயாவின் கால வழிச் செய்திக் கோவை தெரிவிக்கிறது.

இதைத் தொடர்ந்து, பல தலைமுறைகள் இந்தத் திருமண வுறவு தொடர்ந்து நீடித்து வந்ததாகவும் அறிகிறோம்.[7]

---

7. Devahuti, Malaysia in Historical Perspective, Appdx No 1.

தமிழ் நாட்டின் கல்வெட்டுகளிலோ, செப்பேடுகளிலோ, இலக்கியங்களிலோ காணப்பெறாத புதிய செய்திகள் இவை. சோழப் படைத் தலைவராகிலும் அந்த நாட்டு அரச குடும்பத்தினரின் பெண்களை மணந்து கொண்டு இருக்கலாம். முற்காலத்தில் பௌத்தர்களாகவும், இந்துக்களாகவும் இருந்த அவ்வரசர்கள், பிற்காலத்தில் இஸ்லாமியர்களாக மாறி இருக்கலாம். ஆயினும், அவர்கள் தங்கள் மூதாதையர் சிக்கந்தர் ஷாவும், இராசேந்திர சோழனும் ஆவர் என்று கூறுவதில் பெருமிதம் அடைந்தனர் போலும்.

மலேசியாவில் சாதி வேறுபாட்டைக் காண முடியவில்லை. எல்லாரும் சரிநிகர்சமானமாகப் பரமேசுவரன் காலம் முதல் வாழ்ந்து வருவது வியப்பிற்குரிய செய்தியாகும்.

# 5. 7.

# தொல்பொருள் சின்னங்கள்

மலேசியாவின், பண்டைக் காலத்திய கலைச் செல்வங்கள், இன்றைக்குப் போதிய அளவிற்குக் கிடைக்கவில்லை.

பண்டை மலேயாவின் கலைச் செல்வங்கள் படையெடுப் பாளர்களின் தாக்குதல்களால் அழித்து ஒழிக்கப்பட்டன. ஆயினும், அவற்றின் இடிபாடுகளும், சிதைந்த சின்னங்களும் தொல்பொருள் ஆராய்ச்சியாளரின் அயரா உழைப்பால், வெளிப்பட்டுள்ளன.

வடமேற்கு எல்லைப் பகுதியில் உள்ள சபா (Sabah), வட போர்னியோ பகுதிகளில் வாழும் மக்கள் அல்லாமல், மலேசியா வின் பிற பகுதிகளில் வாழும் 'மலாய்' மக்கள் யாவரும் போலினீசிய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மெலினீசிய மொழி யைப் பேசும் மக்களாவர்.

## இரும்புக்கருவிக்காலப் பண்பாடு

தமிழ்நாட்டு இரும்புக் கருவிக் காலப் பண்பாட்டுச் சின்னங் களோடு, பெரிதும் ஒப்புமையுடைய கருவிகள், மலேசியத் தீவுகள் பலவற்றுள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இரும்புக்காலப் பெருங் கற்கருவி (Megalithic) மலேசியா, வடபோர்னியோ பகுதிகளில் ஏராளமாகக் கிடைத்துள்ளன. ஏறக்குறைய இதே வகையான கருவிகள், திருநெல்வேலி மாவட்டத்தின் ஆதிச்சநல்லூரிலும், கருநாடகத்தின் தார்வாரிலும் கிடைத்துள்ளன. இந்த இரும்புக்

காலக் கருவிகள் ஏறக்குறைய கி. மு. ஆயிரத்திற்கு முற்பட்டன வாக மதிப்பிடப்பட்டுள்ளன.

தமிழ்நாட்டின் அரிக்கமேட்டு அகழ்வாராய்ச்சியில் குவியல் குவியலாக கண்ணாடி மணிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இத்தகைய மணிகள் மலேசிய ஜோகர் மாவட்டத்தில் உள்ள 'கோடாடிங்கே' எனும் துறைமுகப் பட்டினத்தில் செய்யப்பட்ட அகழ்வாராய்ச்சியில் ஏராளமாகக் கிடைத்துள்ளன. இவை யல்லாமல், நூற்றுக்கணக்கான இந்தியாவின் கல்மணிகளும் இங்குக் கிடைத்துள்ளன.

இந்நாட்டில் வாழ்ந்த நீக்கிரிட்டோப் பழங்குடி மக்களும், ஆஸ்திரிக் பழங்குடி மக்களும், தமிழ் நாட்டில் கி. மு. 2000 அளவில் வாழ்ந்த அதே இனத்தைச் சேர்ந்த பழங்குடி மக்களோடு இனக்கலப்பு உடையவர்களாக இருந்திருக்க வேண்டும் என்று அறிஞர் கருதுகின்றனர்.

## வாணிகத் தொடர்பு

வரலாற்று நூலின் தொடக்க காலத்தில் கடற்கரை யோரங் களில், மலேசியாவில் மக்கள் நெருக்கமாக வாழத் தொடங்கினர். தமிழ்நாட்டின் கிழக்கு, மேற்குக் கடற்கரைகளில் இருந்து பல வகை வாணிகப் பொருள்கள் இங்கு இறக்குமதி செய்யப்பட் டன. பொன், மிளகு, நறுமணப் பொருள்கள், சந்தனமரம் முத லியன நேராக இங்கிருந்து மேற்கு நாடுகளுக்கு ஏற்றுமதி செய் யப்படவில்லை. மலேசியா, ஜாவா, சுமத்திரா முதலிய நாடுகளின் வாணிகப்பொருள்கள் தமிழகத்தின் சோழமண்டலக் கரையில் கொண்டு வந்து குவிக்கப்பட்டன. அங்கிருந்து அவை, தமிழ் நாட்டின் உள்நாட்டு வாணிகப் பெருவழிகளின் வாயிலாக மேலைக் கடற்கரைக்குக் கொண்டு செல்லப்பட்டன. மேலைக் கடற்கரையில் வந்து தங்கியிருந்த யவனருடைய கப்பல்களில் அவை ஏற்றுமதிச் செய்யப்பட்டன. கருப்பூரம் ஒன்றுதான் மலேசிய நாட்டிற்கேயுரிய சிறப்புப் பொருள். மற்றவை, பண்டைத் தமிழகத்திலும் கிடைத்தவையாகும். தமிழ் நாட்டு அகில், தேக்கு, சந்தனம், முத்து, பவழம், மிளகு, திப்பிலி, இஞ்சி முதலிய பொருள்களோடு மலேயா, சுமத்திரா, ஜாவா போன்ற நாடுகளில் இருந்து கொண்டுவரப்பட்ட கருங்காலி, அகரு, (அகில்) இலவங்கப்பட்டை, ஏலக்காய், கருப்பூரம், தகரம் முதலிய பொருள்களையும் ஒன்றாகச் சேர்த்து யவன நாட்டு வணிகர்கள், பொன்னும், இனியதேறலும் போன்ற தங்கள் நாட்டுப் பொருள்களைக் கொடுத்து, பண்டமாற்றாக

வும், தங்கள் நாட்டுக் காசுகளை விலைமதிப்பிற்குரிய தொகை யாகக் கொடுத்தும் வாங்கிச் சென்றனர்.

இவ்வாறு, கிறித்துவ நூற்றாண்டின் தொடக்க காலத்தி லேயே, இவ்விரு நாடுகளுக்கும் இடையே நெருக்கமாக வாணிகத் தொடர்பு இருந்து வந்தமை புலனாகிறது.

## பண்டைக் கல்வெட்டுகள்

மற்றும் தமிழகக் கருத்துகளும், சமூக நிறுவனங்களும் மலேசியாவில் பரவலாகப் பரவியிருந்ததைப் பல்வேறு தொல் பொருள் சின்னங்கள் புலப்படுத்துகின்றன.

கி. பி. 779 அளவில் லிகோரில் பொறிக்கப்பட்டுள்ள சமஸ் கிருதக் கல்வெட்டு ஒன்று, தமிழ்ப் பண்பாட்டுக் கலப்பு வட மொழி வாயிலாகப் பரவி இருந்ததைத் தெரிவிக்கிறது. மற்றும் தகுவா-பா எனும் இடத்தில் கிடைத்துள்ள தமிழ்மொழிக் கல்வெட்டும் தமிழரின் நேரடித் தொடர்பு இருந்துவந்ததை அறிவிக்கிறது.

முதலாம் குலோத்துங்க சோழனுடைய கி. பி. 1086-ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று கெடாபகுதியில் கண்டுபிடிக்கப் பட்டது. தமிழகத்தோடு மலேசியா கொண்டிருந்த வாணிகத் தொடர்பை அக்கல்வெட்டு தெரிவித்தது. கி. பி. 1868ல் ஆங்கிலேயருக்கும் டச்சுக்காரருக்கும் இடையே நடைபெற்ற போராட்டத்தின் பொழுது, இக்கல்வெட்டைக் கொண்ட கற்பாறை, பீரங்கியால் தகர்த்து எறியப்பட்டது.

## சிலைகள்

லிகோரில் அகழ்ந்து எடுக்கப்பட்ட விநாயகரின் வெண்கலச் சிலை, நேர்த்திமிக்கதாக இன்றும் விளங்குகிறது.

## வெண்கலமணி

சாவகப் பேரரசு காலத்தில்-மஜபாகித மன்னர்கள் காலத்தில் கடல் வாணிகம் மீண்டும் உச்சநிலையை அடைந்தது. மலேசிய கடற்கரைப் பகுதியில் கண்டுபிடிக்கப்பட்ட வெண்கல மணி ஒன்றில், தமிழ்மொழியில் பின்வரும் எழுத்துகள் பொறிக்கப் பட்டுள்ளன: அந்த எழுத்துகளாவன:

''ம-ஜக-பா-சி-டே-சா''

இதனைக் கல்வெட்டு ஆய்வாளர், ''மஜபாகிததேச'' என்று படித்துள்ளனர். இதனால், மஜபாகித பேரரசு கி. பி. பதின் மூன்றாம் நூற்றாண்டில் சிறப்புற்று விளங்கியமை புலனாகிறது.

## உடைந்த மரக்கலங்கள்

மலேசியத் தீபகற்பத்தினை யொட்டிப் பல்வேறு சிறு தீவுகளைச் சூழ்ந்துள்ள பாறைகள் நிறைந்த கடற்பகுதிகளில், தமிழ் நாட்டு மரக்கலங்கள் புயலில் சிக்கி, பாறைகளில் மோதி, உடைந்து, கடலினுள் மூழ்கிப்போனமைக்குரிய தடையங்கள் பல கிடைத்துள்ளன. மேற்கண்ட வெண்கல மணி, இத்தகைய மூழ்கிப்போன மரக்கலம் ஒன்றில் இருந்து, மீனவர்கள் மூழ்கி எடுத்ததேயாகும் என்பது நினைவுகூரத் தக்கது.

'குணயானி மரக்காயர்' எனும் பெயர் பொறித்த மணி ஒன்றும் இருபது ஆண்டுகளுக்கு முன்னர் கண்டுபிடிக்கப்பட்டமை இந்தக் கருத்தை வலியுறுத்துகிறது.

கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டு முதல், இஸ்லாமியராக மாறிவிட்ட தமிழ்மக்கள், கடல் வாணிகத்தில் பெரிதும் ஈடுபட்டு இருந்தனர். அவர்கள் பெரிதும் இன்றைய இராமநாதபுர மாவட்டக் கடற்கரைப் பகுதியில் கொற்கை, காயல்பட்டினங்களில் வாழ்ந்தவராவர். அவர்களுக்கு 'மரக்கல நாயகர்' எனும் பெயர் வழங்கியது.

'மரக்கல நாயகர்' எனும் தமிழ்ப் பெயர் அராபியர்களால், 'மரைக்காயர்' என்று திரித்தும் சிதைத்தும் வழங்கப்பட்டது. அந்தப் பட்டப் பெயரையுடைய ஒரு தமிழக வாணிகரே, மேலே கண்ட 'குணயானி மரைக்காயர்' என்பது இங்குக் கருதத் தக்கது.

## 5. 8.

## பழக்க வழக்கங்கள்

மலேசியாவில் வாழும் மலாய் மக்களின் வாழ்க்கையில், வேரூன்றிப்போய் இருக்கும் தமிழ் மக்களுடைய பழக்க வழக்கங் களைக் காண்போம். இருவேறு இனத்தைச் சேர்ந்த மக்கள், நெருங்கிவாழ நேரிடும் பொழுது, ஒரு சாராருடைய பழக்க வழக்கங்கள், மற்றொரு சாராரின் கருத்தைக் கவருவது இயற்கை. இந்த முறையில், மலாய்மக்களின் இன்றைய வாழ்க்கை யில், அந்நாட்டில் குடியேறிய தமிழ் மக்ளின் பழக்கவழக்கங் களுள் சிற்சில இரண்டறக் கலந்துவிட்டுள்ளன.

### திருமணமுறை

திருமணமுறை தாய்வழித் தாய முறையாகவே பெரிதும் இருக்கிறது. மணமகள் பெண் எனப்படுவதற்குப் பதிலாக பொன் எனப்படுகிறாள். மாப்பிள்ளையை, மலாய் மொழியிலும் அவ்வாறே சுட்டுகின்றனர்.

திருமணத்தில் அரிசியையும் மலரையும் தூவி வாழ்த்துதல் உண்டு. இசுலாமியப் பெண்கள் யாருமே முகமூடி அணியும் ('பர்தா') முறையை அங்குப் பின்பற்றுவது இல்லை.

திருமணச்சடங்கில், தாலிகட்டும் வழக்கம் மலாய்மக்களிடம் இருந்து வருகிறது. தாலிகட்டிய பின்னர், ஏழடி, மணமகனும், மணமகளும் கைக்கோத்தவண்ணம் நடந்து மணமேடையைச் சுற்றி வலம் வருகின்றனர். இந்தப் பழக்கம், இன்றும் தமிழகத் தின் வைதிகத் திருமண்த்தில், வழக்கில் இருந்துவருகின்றன.

திருமணச் சடங்கில் 'ஓம்' எனத் தொடங்கும் மந்திரம் ஒன்றை மலாய் சமூகத் தலைவர்கள் ஓதுகின்றனர். அம்மந்திரம் சிதைந்த நிலையில் ஓதப்படுவதால், அதனை இனம் கண்டு கொள்ள இயலவில்லை.

திருமணத்திற்கு முன்னர், மாப்பிள்ளை வீட்டார், 'பரிசப்' பொருளைப் பெண்வீட்டார்க்கு வழங்குகின்றனர்.

### உணவுமுறை

மலாய்மக்கள் அரிசிச் சாப்பாட்டையே தலையாய உணவாகக் கொண்டுள்ளனர். வெண்டை, கத்தரிக்காய் பெரிதும் அவர்கள் உணவில் பயன்படுத்துகின்றனர். ஊறுகாய் இல்லாது உணவை அவர்கள் சாப்பிடுவதே இல்லை.

தேங்காயைப் பெரிதும் பயன்படுத்துகின்றனர். தேங்காய்ப் பால் கலந்த உணவும், சிற்றுண்டிகளும் மிகுதி. படுக்கை அறையில் கட்டில் வடிவழகுடையது. பாய்களையும் அவர்கள் பயன்படுத்துகின்றனர். குடிக்கும் நீரை ஊற்றிவைக்கும் பாத்திரத்தை அவர்கள், நம்மைப்போல 'கெண்டி' எனும் பெயராலேயே சுட்டுகின்றனர்.

### மகளிர் 'முடி' ஒப்பனை

மகளிர் வாழைப்பூக் கொண்டையும், கூடைக் கொண்டையும், அள்ளிச் செருகும் 'செலந்தம்' எனும் முறையையும் பின்பற்றுகின்றனர்.

### பூவும் வெற்றிலையும்

அன்றாடம் வெற்றிலைப்பாக்குப் போட்டுக்கொள்ளும் பழக்கமும், நன்னிகழ்ச்சிகளில் வெற்றிலைப்பாக்கும், பூவும் கொடுத்து மகிழ்வதும் மலாய் மக்களின் வழக்கில் உள்ளன.[8]

இன்று மலேயாவில் பொற்கொல்லர் தெரு இருக்கிறது. 184 ஆண்டுகளுக்கு முன்னர் இக்கியாத் அப்துல்லா, தமிழ் கற்பிக்கத் தொடங்கினார். அவர் தொடங்கிய 'பள்ளி' பாளி என்று அழைக்கப்பட்டது.

---

8. F. R. J. Vernoeven; Some Notes on the History of Tamil Community in Dutch Malaya 1697-1828.

## 5. 9.

# கலைச் செல்வங்கள்

மலேசியாவின் பண்டைக் கலைச் செல்வங்கள், சயாமிய, காம்பூச்சிய, சீன, சைலேந்திரப் படையெடுப்பாளர்களால் அழித்து ஒழிக்கப்பட்டன. இதனால், அந்நாட்டில் முன்னூறு ஆண்டுக்கு முற்பட்ட கலைச் செல்வங்கள் ஒன்றுகூட காணக் கிடைத்தில.

ஆனால், குவாரிட்ச் வேல்சு போன்ற தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களின் அயராத உழைப்பினால், பல தொல் பொருள் சின்னங்கள், மீட்டுருவாக்கம் செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் சிலவற்றை இங்குக் காண்போம்.

### சிலைகள்

இங்குக் கிடைத்துள்ள வெண்கலச் சிலைகள் நம் கருத்தைக் கவருவன. அவை எழிலார்ந்த வேலைப்பாடுடையன.

### பௌத்த சமயச் சிலைகள்

பெராக் மாநிலத்தில் பௌத்த சமயக் கோயில்களின் இடிபாடு கள் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. கிழக்குப் பகுதியில் புத்தர், அவலோகித ஈசுவரர், தாரை முதலியோரின் வெண்கலச் சிலைகள் கிடைத்துள்ளன. மற்றும் பௌத்த தூபியின் சிதைந்த சின்னங்களும் அங்குக் காணப்படுகின்றன. இந்தச் சிலைகள் கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தனவாக இருத்தல் கூடும் என்பது அறிஞரின் நம்பிக்கையாகும். இச்சிலைகளின் செய்

முறையும், கலைப்பாணியும் தென்னாட்டு அமராவதி பௌத்த கலைவல்லாரின் கலைத்திறனை நினைவூட்டுகின்றன. எட்டுக் கைகளை உடைய போதிசத்துவரும், அவலோகித ஈசுவரரும் தாந்திரிக முத்திரைகளோடு படைக்கப்பட்டுள்ளனர்.

## அகத்தியர் சிலை

பெராக்கு மாநிலத்தில் ஒரு துறவியின் நின்ற கோல வெண்கலச் சிலை கிடைத்துள்ளது. அவர் தாடியும், ஒரு கையில் கமண்டலமும், மற்றொரு கையில் உருத்திராக்க மாலையும் பிடித்தவண்ணம், தியானம் செய்யும் நிலையில் காணப்படு கின்றார்; தொந்தி பெருத்தவராகவும் அந்த ஞானி காட்சி தருகிறார்.

இந்த வெண்கலச் சிலையைக் கூர்ந்து ஆராய்ந்த குவாரிட்ச் வேல்சு எனும் அறிஞர், தமிழகத்து ஞானியாகிய அகத்தியராக இவர் இருத்தல் கூடும் என்று தெரிவித்துள்ளார்.[9]

சிங்கிசிங்பூர் எனும் இடத்தில் பொன்னாலான கைக்காப்பு ஒன்று கிடைத்து இருக்கிறது. அதில், அவலோகித ஈசுவரரின் அழகுமிகு வடிவம், சிறிய வடிவில் பொறிக்கப்பட்டு இருக்கிறது.

## நான்கு கைகளும் எட்டுக்கைகளும் உடைய தெய்வத் திருமேனிகள்

கி. பி. எட்டாம் நூற்றாண்டு முதல் பதினைந்தாம் நூற்றாண்டுவரை, மலேசியாவில் சைவ சமயத் தொடர்பான தாந்திரிக சமயம் பெருஞ்செல்வாக்குடன் திகழ்ந்ததாகத் தெரிகிறது. நான்கு கைகளும், எட்டுக்கைகளும் உடைய காளியின் திருமேனிகள், பல்வேறு தாந்திரிக மறைக் குறிப்பு முத்திரைகளுடன் செய்யப்பட்டனவாக உள்ளன. பௌத்த சமயத் தாந்திரிக நெறி, சைவசமயத் தாந்திரிகமாக 'மாற்றுரு' கொண்டதை இந்தச் சிற்பங்கள் தெரிவிக்கின்றன. சோழர் காலக் கலைப்பாணியின் வீழ்ச்சி நிலையை, நாம் இவற்றில் காணுகின்றோம்.

கெடா, வெல்லஸ்லி மாநிலங்களில் நடைபெற்ற அகழ் வாராய்ச்சியில், முப்பது தொல்பொருள் சின்னங்கள் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன.

---

9. Quaritch Wales, Ruins of Malaysia; PP. 26-28.

## கற்சிலைகள்

இங்குக் கிடைத்துள்ள கற்சிலைகள் பலவாகும். அவற்றுள் துவாரபாலகரின் கற்சிலைகள் நேர்த்திவாய்ந்தவை. அவை, காஞ்சி, கயிலாசநாதர் கோயிலில் உள்ள துவாரபாலகரின் தோற்றத்தோடு, பல்லவர் காலத்திய சிற்ப வேலைப்பாடுடையனவாக உள்ளன.

பெருமிதத் தோற்றத்தோடு, நிற்கும் கோலத்தில், கல்லினாலேயே பலவகை அணிகலன்கள் இழைக்கப்பட்ட சிலை ஒன்று இங்குக் கிடைத்து இருக்கிறது. இதில் பெண்மையின் மென்மையோடு, சீற்றமும் வெளிப்படுகின்றன. இச்சிலையில் இடம் பெற்றுள்ள சில குறியீடுகள், இந்தச் சிலையும் தாந்தரிக நெறியினரின் வழிபாட்டுத் தெய்வம் என்பதை வெளிப்படுத்துகின்றன.

## கற்பேழைகள்

சந்தியுக்திக் பதுமாகத் என்னும் இடத்தில் கிடைத்துள்ள கோயில் ஒன்றின் இடிபாடுகளில், கண்டெடுக்கப்பட்ட கற்பேழைகளின் மேல், சக்தி வழிபாட்டுச் சின்னங்கள் சில சிற்றுருவங்களாக எழிலுறச் செதுக்கப்பட்டுள்ளன. ஆறுவகையான சிவனுடைய வடிவங்களும் அங்குக் கிடைத்துள்ளன. சில பௌத்த சமயத் தூபிகளும் அகழப்பட்டுள்ளன.

மலேயாவின் வடக்கேயுள்ள கெடா சிகரத்தில், சைவ, பௌத்த சமயச் சின்னங்கள் நிறைய காணப்படுகின்றன.

## சுலோகக் கல்வெட்டு

இங்கே தமிழ்நாட்டு கிரந்த எழுத்து வடிவில், கற்பாறை ஒன்றில் நான்கு வரிகளைக் கொண்ட செய்யுள் ஒன்று காணப்படுகிறது. அந்த வாசகம் 'தர்மஹேத பிரபாவா' எனும் பௌத்த சமய சுலோகத்தோடு முடிவடைகிறது. இக்கல்வெட்டு கி. பி. ஐந்து—ஆறாம் நூற்றாண்டு எழுத்து வடிவத்தில் உள்ளமை இங்குக் கருதக் கக்கது.

மற்றும், மூன்று களிமண் பலகைகளில், மூன்று கல்வெட்டுகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அவை சம்ஸ்கிருத மொழிச் சுலோகங்களாக உள்ளன. அவை 'மகாயான மந்திரங்கள்' என்பதை ஆராய்ச்சியாளர் கண்டு பிடித்துள்ளனர். அவை நிர்வாண நிலையை அடையும் பேற்றையும், அதன் பயனையும் தெரிவிக்கின்றன.

### சிவன் கோயில்

குவாரிட்ச் வேல்ஸ் அகழ்ந்து எடுத்த நான்காவது சின்னத்தில், கி. பி. ஆறாம் அல்லது ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த சிவன் கோயில் ஒன்று கிடைத்துள்ளது. இது மாமல்லபுரத்து ஒற்றைக்கல் (Monolithic) கோயில்களைப் போன்ற அமைப்பினை உடையது. இதனுள் மாபெரும் சிவலிங்கம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. ஆவுடையாரும் லிங்கமும் அழகுறப் பொருத்தப்பட்டுள்ளன. துர்க்கை, மகிஷாசூரமர்த்தினியின் சிலைகள் இக்கோயிலை அணிசெய்கின்றன.

இவை அல்லாமல் மிகச் சிறிய வடிவிலான விநாயகரின் சிலை, உடைந்துபோன வெண்கல மணியின் மடலும் நாக்கும், பொன்னாலும் கண்ணாடியாலும் செய்யப்பட்ட மணிகள் முதலியன இக்கோயிலை யொட்டிக் கிடைத்துள்ளன. இவை யாவும், ஒரு காலத்தில் அக்கோயில் வழிபாட்டுத் தலமாக விளங்கியதைத் தெரிவிக்கின்றன.

மற்றும், சிவன் கோயில் சின்னங்கள் சில, அந்தப் பகுதியில் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன

### இறந்தோர் அடக்கச் சின்னங்கள்

'சண்டி' எனும் பெயரால் எழுப்பப்பட்டுள்ள சமாதிக் கோயில்கள்—தமிழ் நாட்டுப் பள்ளிப் படையைப் போன்றவை-பல, மலேசியாவில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சியில் கிடைத்துள்ளன. பெரிதும், இறப்பதற்கு முன்பே, தங்களுக்காக அரசர்கள் அமைத்துக் கொண்ட கற்கோயில்களாக அவை உள்ளன.

இவற்றை அடுத்து அகழப்பட்ட சின்னங்களில் ரோமாபுரிக் காசுகளும் இந்தியக் காசுகளும் குவியல் குவியலாகக் கிடைத்துள்ளன.

### பிற சிலைகள்

இவை அல்லாமல், வேறுசில இடங்களில், செய்யப்பட்ட அகழ்வாராய்ச்சிகளினால், சில கலைப் பொருள்கள் வெளிப்பட்டுள்ளன. பல்வேறு பறவைகளின் வெண்கலச் சிலைகள், பொன்னால் செய்யப்பட்ட சிறிய நந்தி, வெள்ளியால் செய்யப்பட்ட நந்தி, செம்பால் செய்யப்பட்ட குதிரை முதலிய உலோக பொம்மைகளும் மலேசியாவில் கிடைத்துள்ளன.

சுட்ட மண்ணால் செய்யப்பட்ட கணேசர், காளி, சிவன், ஊர்க்காவல் தெய்வம் போன்றவற்றின் சிலைகளும் அப்பகுதிகளில் கிடைத்துள்ளன.

## அணிகலன்

தங்கத்தால் செய்யப்பட்ட ஒட்டியாணம் ஒன்று 'சிங்கமுக முகப்பு' உடையதாக மலேசியாவில் கிடைத்துள்ளது. இது அரசிகளின் இடையை அணி செய்த அணிகலனாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

## வழிப்பாட்டுப் பொருள்கள்

கெட்டாவில், கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த வெண்கலத்தால் செய்யப்பட்ட கோயில் (கண்டா) மணி ஒன்று கிடைத்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

சுட்ட மண்ணால் செய்யப்பட்ட வட்ட வடிவமும், சதுர வடிவமும் கொண்ட நேர்த்திக் கடன் செலுத்தும் படையல் தட்டுகளும், தாயத்துகளும் கெட்டாவில் பேரளவில் கிடைத்துள்ளன.

கெட்டாவின் தென்மேற்கேஉள்ள வெல்லஸ்லி மாவட்டத்தில் தமிழ்ப்பண்பாட்டுத் தாக்கத்திற்குள்ளான சின்னங்கள் பல கண்டெடுக்கப்பட்டுள்ளன.

## புத்தகுப்தர்

அவற்றில் ஏழு சம்ஸ்கிருத மொழிக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இக்கல்வெட்டுகள் கி.பி. நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்தன. புத்த ஜாதகக் கதை ஒன்றின் சிற்பமும், அதை விளக்கும் சம்ஸ்கிருத சுலோகமும் உள்ளன. 'மகாநாவிகா' (மாபெரும் நாவாய்த் தலைவன்) எனப்போற்றப்படும் கப்பலில் புத்தகுப்தர் மலேயாவிற்குக் கடல் வழிப் பயணம் செய்த காட்சி சித்திரிக்கப்பட்டுள்ளது.

பௌத்த சமயம் அலைகடல்களுக்கு அப்பால் சென்று பரவிய வரலாற்றின் ஒரு பகுதியாகும் இது. கி. பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். இதே காட்சியை அஜந்தா ஓவியங்களுள் ஒன்று சித்திரிக்கிறது. இவ்விரு சான்றுகளும், அக்காலத்திய இந்திய—மலேசியக் கடல் வாணிகத்தின் சிறப்பைப் புலப்படுத்துகின்றன.

மற்றொரு, சிறு கற்பலகையில், முன்றடுக்கு வெண்குடைகள் பொறிக்கப்பட்டுள்ளன. அதன் கீழே பௌத்த சமய மந்திரம் 'அஞ்ஞான' எனத் தொடங்குகிறது.

லிகோரில் 'தக்கோலா' எனும் பழைய பெயரும் 'டிராங்கு' எனும் புதிய பெயரும் உடைய இடத்தில் நடைபெற்ற

அகழ்வாராய்ச்சிகள், பல தொல் பொருள் சின்னங்களைத் தந்து உதவுகின்றன. அவை இந்தியாவிற்கும் மலேசியாவிற்கும் ஆயிரத்தைந்நூறு ஆண்டுகட்கு முன்னர் இருந்து வந்த பண்பாட்டு, வாணிகத் தொடர்புகளை அறிவிக்கின்றன.

## மண்பாண்டக் கலை

மலேசியாவின் பழைய மண்பாண்டங்களிலும், பாத்திரங்களிலும் இந்தியக் கதை நிகழ்ச்சிகளும், இதிகாசக் கதைத் தலைவர்களின் வடிவங்களும் பொறிக்கப்பட்டுள்ளன. அனுமான், கருடன், நாகதேவதை முதலியவற்றின் வடிவங்கள் அன்றாடப் புழக்கத்தில் உள்ள கெண்டி, குவளை, போகணி, வாளி போன்ற பாத்திரங்களில் இன்றும் காணலாம்.

## நெசவுத் தொழில்

பட்டாடை நெய்தல் முறையிலும், சேலைகளின் கரைகளிலும் தாமரை மலர்கள், அன்னம், கிளி, வானரங்கள், பருந்து போன்ற வடிவங்கள் நெய்யப்பட்டு வருகின்றன.

வெள்ளி, பொன் அணிகலன்களின் வேலைப்பாடுகளில், தாமரை மலரின் பலவகை வடிவங்களும், இலக்குமியின் நின்ற கோலமும், சக்தி வடிவமும் இடம்பெற்றுள்ளன.

அன்றாடப் புழக்கத்தில் உள்ள சீசாக்களிலும், குவளைகளிலும், தட்டுகளிலும், தாமரையும் மீனும், இலக்குமியும், சூரிய சந்திரரும் அணிசெய்கின்றனர்.

## மலேசிய நாடக அரங்குகளில் இராம காதையின் காட்சிகள்

மலேசியாவின் கலை அரங்குகள் மூவகைப்படும். நாடக நாட்டிய அரங்குகள் ஒருவகை; மற்றொன்று பொம்மலாட்ட அரங்கு; பிறிதொன்று தோற்பாவைக் கூத்து அரங்கு. இம் மூவகை அரங்குகளிலும் இராமாயணக் காட்சிகளும், பிற இந்திய புராணக் காட்சிகளுமே சிற்சில மாற்றங்களோடு நடத்தப்படுகின்றன.

பெருவாரியான மக்களின் கருத்துத் தெரிவிப்புக் கருவிகளாக உள்ள வானொலியிலும் தொலைக்காட்சியிலும் கூட, இந்தக் கதைக் காட்சிகளே இடம் பெறுகின்றன. பொம்மலாட்டம் ‘வயாங்கு’ எனும் பெயரால் சுட்டப்படுகிறது.

பண்டைக் காலத் தொல்பொருள் கலைச்சின்னங்கள் யாவும், தமிழ்நாட்டுடன் மலேசியா கொண்டிருந்த பண்பாட்டுத் தொடர்பிற்குச் சான்று பகருகின்றன. இன்று, கலை அரங்கு களில் இடம்பெறும் கதைகளும், காட்சிகளும் இராமாயணத் தொடர்புடையனவாகவே உள்ளன. இவை யாவும், தமிழ்ப் பண்பாடு மலேசியாவில் ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே பரவி இருந்ததை அறிவிக்கின்றன.

# 5. 10ஆ.

# இலக்கியம்

மலாய் மொழி பாலினீசிய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தது என்பதை முன்னரே கண்டோம். அம்மொழியில், பலவேறு மொழிகளின் சொற்களும், இலக்கிய மரபுகளும் கலந்தும், கரைந்தும் உள்ளன.

## இலக்கியம்

பல்வேறு மொழிகளைப் பேசும் மக்களோடு தொடர்பு கொண்ட மலாய் மக்களின் எண்ணப்போக்கில், பலவகைச் சிந்தனைகளின் தாக்கத்தை நாம் காண இயலுகிறது. அந்நாட்டில், இலக்கியம் படிப்படியாக வளர்ந்து சிறக்கவில்லை. தொடக்க காலத்தில் மலாய் இலக்கியம், தமிழ்ச்சார்புடையதாகக் காணப்படுகிறது. ஆனால், பையப் பையச் சம்ஸ்கிருதச் சார்புடைய வைதிக இலக்கியக் கதைகளையும் மரபுகளையும் பின்பற்றலாயிற்று.

இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு, கி.பி. பத்தாம் நூற்றாண்டில், மலேசிய மக்களின் இதழ்களில் எல்லாம் 'மணிமேகலை'க் கதைப்பாடல்கள் களிநடம்புரிந்தன. ஆனால், பதினைந்தாம் நூற்றாண்டை யொட்டி, மணிமேகலைக் கதைப்பாடல் புறக்கணிக்கப்பட்டு, இராமாயணக் கதைப் பாடல்கள் பயிலத் தொடங்கின.

## இராமாயணம்

தொடக்கத்தில் 'இராமகாதை' மலேசியாவில், தென்னிந்தியக் கதை முறையில் செல்வாக்குப் பெற்று இருந்தது.

மலாய்மொழியில் வழங்கும் இராமாயணங்களை இரண்டு அல்லது மூன்று வகையாகப் பிரிக்கலாம். முதல்வகை இலக்கியங்களாகப் போற்றத்தக்கவை; இரண்டாம்வகை 'வயாங்கு' எனும் பொம்மலாட்டம், தோற்பாவைக் கூத்துகளுக்குப் பயன்படுத்தப் படும் வாய்மொழிப் பாடல்களாக அமைந்தவை. இவற்றில், வட்டார இயலபுகளுக்கு ஏற்ப, பல புதிய கதைகளும், கிளைக் கதைகளும், நகைச்சுவைத் துணுக்குகளும் இடையிடையே சேர்க்கப்பட்டு இருக்கும்.

மூன்றாவது வகை இராமாயணம், நாட்டுப்புறக் கதைப் பாடல்கள். பெயர்த் திரிபுகளும், பாத்திரங்களின் உறவுமுறைகளும் தலைகீழாக மாற்றப்பட்டு இருக்கும். மேலும், மலேசிய 'மாவீரர்' சிலரின் வீரதீரச் செயல்களும் அவற்றில் இணைக்கப் பட்டு இருக்கும்.

மலாய் மொழியில் உள்ள மிகப் பழமையான இராமாயண ஓலைச் சுவடிக்கு ஹிகாயட் செரி ராமா என்பது பெயர். இதனை 'இதிகாச ஸ்ரீ இராமாயணம்' எனத் தமிழ்ப்படுத்துகின்றனர். இதனைப் பதிப்பித்த அறிஞர், அதனுடைய முன்னுரையில் 'தமிழ் நாட்டுப் பண்டை இராமாயணக் கதையின் தழுவலாக இது இருக்கிறது' என்று மொழிந்துள்ளார்.[10]

இந்த நூலில், பல பிற்காலத்திய கிளைக் கதைகள் சேர்க்கப் பட்டுள்ளன. மற்றும், இஸ்லாமிய சமயத்தின் செல்வாக்கு இதில் இடம் பெற்று இருக்கிறது.

ஹிக்கியாட் மகாபௌமா, ஹிக்கியாட்—ஹங்டுவா, சிஜாக் மலேயா எனும் பெயர்களிலும் இராமாயணக்கதை வழங்குகின்றது.

'ஹிக்காயத்தில், ராஜா பைசை' எனும் கதைப்பாத்திரம் சிறப்பிடம் பெறுகிறது.

நாட்டுப் பாடல்களில் காதற் பாடல் கடிதங்களும் பந்த் உந்தரா, ஜாதகா, கதா சரித்திர சாகரம், ஹிக்கியாட் கதைப் பாடல், பிக்நாமா சக்தி போன்றவற்றிலிருந்தும் தமிழ்க் காப்பியம் மணிமேகலை முதலியவற்றில் இருந்தும் மலாய் நாட்டுப்புறக் கதைகளுக்குரிய கருக்களும், கதைப்பின்னலும் பேரளவில் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

---

10. லண்டனில் உள்ள ராயல் ஏஷியாடிக் சொசைடியில் உள்ள சுவடியின் பதிப்பு முன்னுரை.

**பாரதம்**

மலேசியாவில் பாரதமும் ஓரளவிற்குச் செல்வாக்குப் பெற்று இருந்ததைக் காணுகின்றோம். பாரதக் கதைப் பாடல்கள் பல, மலாய் மொழியில் உள்ளன. 'பீமயுத்தம்' எனும் நாட்டிய நாடகக் கவிதை இன்றும் பெருஞ் செல்வாக்குடையதாக இருந்து வருகிறது. மலாய் பாரதக் காப்பியத்திற்கு, 'ஹிக்காயிட் பெக் மென் பாண்டவர்' என்பது பெயராகும். இன்னொரு நூலிற்கு 'ஹிக்காயிட் மகாராஜா பௌமா' எனும் பெயர் வழங்குகிறது.

'இராமகதை' மலேயாவில்நன்கு அறிமுகமான கதை. மேற்கு மலேயாவின் வடக்கே,இந்நாடகம் நடத்தப்படுகிறது. ஹிக்காயிட்டில், தமிழ்நாட்டுச் சிறப்புப் பெயர்களான இராமன், இராவணன், வீடணன், வாலி போன்றவை சிற்சில மாற்றங்களுடன் காணப்படுகின்றன.

பதின் மூன்றாம் நூற்றாண்டு முதல், பதினேழாம் நூற்றாண்டு முடிய இயற்றப்பட்ட வாய்மொழி இராமாயணக் கதைகள் யாவும், இஸ்லாமிய சமயக் கண்ணோட்டத்தில் விளக்கப் பட்டுள்ளன. வாய்மொழிப் பாடல்கள் பிரசங்கம் செய்பவராலும், பொம்மலாட்டக் காரர்களாலும் மாற்றியும்,திருத்தியும் அமைத்துக் கொள்ளப்பட்டன. இவற்றுக்கு எல்லாம் ஆசிரியர் பெயர் அறியப்படவில்லை. பயான், புலித்ரியோதரி, வயாங்கு சையாம், வயாங்கு-சாவகம் எனும் பெயர்களில் வழங்கும் இராமாயணக் கதைகள் பல, இங்கு வழக்கில் உள்ளன. இவற்றுள் சையாமிய, சாவக மரபில் வந்தவற்றை, அவ்வடைமொழிகள் கொடுத்து வேறுபடுத்திக் கூறுவர்.

தமிழ்ப் பெயர்கள், மலாய் மொழியில் திரித்து வழங்கப் படுகின்றன.

| | | |
|---|---|---|
| இராவணன் | — | மகாராஜாவாணா |
| இராமா | — | இரமகா |
| லட்சுமணன் | — | லக்குமா |
| அனுமன் | — | அரைமீன் |

வாய்மொழிக் கதைகள், இராமனை வெறும் தேவதைக் கதைகளில் வரும் தலைவனாகவே காட்டுகின்றன. ஆனால், இலக்குவனை மாபெரும் தியாகியாகவும், பெருவீரனாகவும் சித்திரிக்கின்றன. இராவணன் ஏழு அல்லது பன்னிரண்டு தலைகள் உடையவனாகச் சித்திரிக்கப்பட்டுள்ளான். மயில் இராவணன் கதை, இந்த நாட்டில் பெருஞ்செல்வாக்குடைய தாக விளங்குகிறது.

## கதைத்திரிபு

மலேசியாவின் பண்டை இலக்கியத்தில் தமிழ்ப் பண்பையும் இந்திய வைதீகப் பண்புகளையும் காணுகின்றோம். இராமாயண காப்பியம், அங்கே சில மாற்றங்களுடன் வழங்கி வருகிறது. அந்த இராமாயணத்தில் கைகேயி, இராமனின் உடன் பிறந்தவளாகவும், விபீடணனின் மனைவியாகவும் கருதப்படுகிறாள். மேலும், சீதாதேவி இராவணனின் உருவப்படத்தை வைத்திருந்ததாகவும், அதனால் இராமன் அவளைக் காட்டுக்கு அனுப்பி விட்டதாகவும், சீதை, கைகேயியின் பொருட்டே, அப்படத்தை வரைந்ததாகவும் கூறப்படுகிறது. மலேசியாவின் இராமாயணம் கூறும் கதைப் போக்கில், பல மாற்றங்கள் இருந்த போதிலும், கம்ப இராமாயணத்தின் சாயல் மலேசிய இராமாயணத்தில் பதிந்திருப்பதாக ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

மகாபாரதக் கதையும் பல மாறுபட்ட உருவங்களில் அங்கு வழங்கி வருகிறது. இந்தியக் கதைகளின் தொடர்பு மலேசியாவின் நீதிக் கதைகளிலும் காணப்படுகின்றது.

## 5. 11.

# மலாய் மொழி

மலாய்மொழி, பாலிசினிய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தது என்பதை முன்னரே கண்டோம். இம்மொழியில் கி. பி. 12ஆம் நூற்றாண்டில் இராமாயண, பாரதக் கதைகள் கிரந்த எழுத்து வடிவில் எழுதப்பட்டன. ஆனால், பிற்காலத்தில் சாவக எழுத்து முறை, மலேயாவில் செல்வாக்குப் பெற்றதைக் கெட்டா வரலாற்றுக் குறிப்பேடுகள் தெரிவிக்கின்றன.

### சாவகத்தின் தாக்கம்

சாவகக் கவி எழுத்துமுறை, பல்லவரின் கிரந்த எழுத்து வடிவில் இருந்து வளர்ந்ததாகும். அது வடக்கு மலேயாவிலும், தெற்குத் தாய்லாந்திலும் கி. பி. நான்காம் நூற்றாண்டில் இருந்து, ஒன்பதாம் நூற்றாண்டுவரை வளர்ந்து ஓங்கின.

பதினான்காம் நூற்றாண்டில் மலாய் - அராபிய எழுத்து முறை மலேசிய மக்களால் பின்பற்றப்பட்டது. இதனை தெலிகய்கா கல்வெட்டால் அறிகிறோம். முதல் மலாய்மொழிக் கவிதை சிதைந்த சொற்களால்-தமிழ்ச் சொல்லின் சிதைவுகளையும் சம்ஸ்கிருதச் சொற்களின் சிதைவுகளையும் கொண்டு இயற்றப்பட்டு இருக்கிறது. இதில் 'கட்டில்' எனும் தமிழ்ச் சொல் இடம் பெற்று இருக்கிறது.

### தமிழ்ச் சொற்கள்

மலாய்மொழியில், தமிழ் மொழிச் சொற்கள் பல கலந்துள்ளன. இதற்குக் காரணம் நெடுங்காலமாகத் தமிழகத்திற்கும்

மலேசியாவிற்கும் இடையே, நெருக்கமான அரசியல் பண் பாட்டுத் தொடர்புகள் நிலவி வந்தமையாகும்.

'மலாய்' என்னும் சொல் தமிழ்ப்பதமாகும். இந்தப் பெயர் எப்படி உண்டாயிற்று? பழைய காலத்திலே, முதன்முதலில் கிழக்கிந்திய நாடுகளுக்கு வந்து, ஆங்காங்கே இராச்சியங்களை நிறுவியவர்கள், தென்னிந்தியாவில் உள்ள கிழக்கு மலைத் தொடரைச் சார்ந்த பிரதேசங்களில் இருந்த தமிழர்களே. இவர்கள் மலைப்பிரதேசங்களில் இருந்து வந்த படியாலும் தாங்கள் நிறுவிய இராச்சியங்களுக்கு 'மலாயா' (மலை)என்னும் பெயரைச் சூட்டினார்கள். இதிலிருந்தே மலாயா், மலேஷியா என்னும் பெயர்கள் பிறந்தன. முதன் முதல் மலாயா ஜாதி யாருக்கு 'நாகரிகம்' அளித்தவர்கள் தமிழர்களே என்பது சுவாமி நித்தியானந்தா அவர்களின் கருத்தாகும்[11]

இதே கருத்தை மேற்கு நாட்டைச் சேர்ந்த ரோலண்டு பிராடெல்'' (Rolland Braddel) என்னும் அறிஞரும் வலியுறுத் திக் கூறியிள்ளார். ''மலாயாவுக்கு முதல் முதலாக நாகரிகத் தைக் கொண்டு வந்து அளித்தது இந்தியாவில், தென்னாட்டுத் தமிழர்களே; அவர்கள் தலை சிறந்த கடலோடிகளாக விளங்கினர்'' என்பது இவருடைய துணிவாகும்[12]

ரிச்சர்ட் (Richard) வின்ஸ்டெட் எனும் அறிஞர், 'இந்தியாவே, மலாயா மக்களின் உலகியல் வாழ்க்கையிலும் ஆன்மிக வாழ்க்கையிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை மிகுந்த செல்வாக்கைப் பெற்றிருந்தது என்பர்.'[13]

இதன் விளைவாக எழுத்து, சமயம், அரசியல் முறை, சட்டம், சோதிடம், மருத்துவம், இலக்கியம், சிற்பம், உலோக வேலை, பட்டு நெசவு ஆகிய துறைகள் அனைத்திலும், மலேயா மக்கள் இந்தியாவிற்கே பெரிதும் கடமைப்பட்டுள்ளார்கள். இவை மட்டும் அல்லாமல், மலேயா மொழியில் முதன் முதல் சிறந்த நூலை எழுதிய புலவனே, தமிழ்க் குருதிக் கலப்பு உடையனவாக இருக்கிறான் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.[14]

பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள், மலாய் மொழி யில் வழங்கும் நானூற்றுக்கு மேற்பட்ட இலக்கிய வழக்குச் சொற்களையும், பேச்சு வழக்குச் சொற்களையும், சிறந்த முறை

---

11. சுவாமி நித்தியானந்தா, மலாயா சரித்திரம், ப. 25
12. மேற்கோள், மலாயா சரித்திரம். ப. 28
13. Richard Winstedt, Malaya and Its History. PP.25-28
14. Encyclopaedia Britannica, Vol. 14; PP. 774, 775, 781-787

யில் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார். அவற்றுள் முதன்மையான சொற்கள்இருபதினைக் காண்போம்.

| | தமிழ் | மலாய் |
|---|---|---|
| 1. | அக்காள் | அகா(K) |
| 2. | அன்னம் | அங்கா |
| 3. | அடிகா | அதிகாரம் |
| 4. | திராஜா | ராஜா |
| 5. | அப்பா | (அ) பா |
| 6. | அரண்மனை | ஆண்டானா |
| 7 | உண்டியல் | உண்டி |
| 8. | கஞ்சி | கஞ்சி |
| 9. | கட்டில் | கட்டில் |
| 10. | கந்தை | கந்தா |
| 11. | கருடன் | கருடர் |
| 12. | திரி | திரி |
| 13. | கும்பல் | கும்பல் |
| 14. | கொண்டை | கொண்டய் |
| 15. | சத்தியவான் | சட்டியவான் |
| 16. | சாட்சி | சாக்ஸி |
| 17. | சூலம் | சூலம் |
| 18. | செட்டி | செட்டி |
| 19. | தருமம் | தெர்மா |
| 20. | பூசை | பூஜா[15] |

பொதுவாகப் பேராசிரியர் தந்துள்ள பட்டியலில். குடும்ப உறவுமுறைச் சொற்களும், அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தப்படும் சொற்களும், சில பண்புப் பெயர்களும் தனித்தமிழ்ச் சொற்களாகவே உள்ளன.

இந்தப் பரந்துபட்ட கண்ணோட்டத்தில் காணுகின்ற பொழுது, மலேசியாவின் பண்டைப் பண்பாட்டிலும் இக்கால வாழ்க்கையிலும் தமிழ்ப் பண்பாட்டின் தாக்கம் கணிசமான அளவிற்கு இருந்து வருவதைக் காணலாம்.

பாரதியாரின் 'தேமதுரத்தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்!' எனும் ஆணையை மலேசியத் தமிழ் மக்கள், செயற்படுத்தி வரும் பாங்கினைக் காண்கிறோம்.

---

15. ந. சஞ்சீவி, 'மலாய் மொழியில் தமிழ்வழக்குச் சொற்கள், ஆராய்ச்சிக்கட்டுரைகள், பக், 55-111

# 5. 12.

# தமிழ் மணக்கும் மலேசியா

## வரலாற்றுப் பின்னணி

மலேசியாவுக்கும், தமிழ் இனத்திற்கும் நீண்ட நெடுங்காலத் தொடர்புண்டு. பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதியில் இராசேந்திர சோழன் கடாரத்தின் மேல்படையெடுத்து வென்ற காலத்திற்கு முன்பிருந்தே, வாணிகத் தொடர்பு இருந்து வந்துள்ளது. அன்று 'கடாரம்' என்று வழங்கிய பெயர்தான், இன்று 'கெடா' என்று மருவி வழங்குகிறது. இடப்பெயர்கள் மட்டுமின்றி 'ராஜா சூலான்' முதலிய மலாய் மன்னர்களின்பெயர்களும், தமிழர் தொடர்பை உணர்த்தி நிற்கின்றன. மேலும், மலாய்க்காரர்களின் திருமணம் போன்ற சடங்குகளிலும், முடிசூட்டு விழா போன்ற அரச நிகழ்ச்சிகளிலும் தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகள் விளங்குவதை இன்றும் காணலாம். மலாய் மொழியில் வழங்கும் கப்பல், கடை, காவல், குறிஞ்சி, மூக்கா (முகம்) முதலிய ஆயிரக்கணக்கான தமிழ்ச் சொற்கள், நீண்ட நெடுந்தொடர்பை எடுத்தியம்புகின்றன. மலாய்க்காரர்களின் இசை, நடனம் போன்ற கலைத்துறைகளிலும் தமிழின் சாயலைக் காணலாம். ''மலேசியாவின் விடுதலைத்தந்தை'' யான துங்கு அப்துல் ரகுமான் புத்ரா அவர்களைச் சோழப்பரம்பரை யென்று மலேசியத் தமிழர்களின் மூத்தத் தலைவர் துன் சம்பந்தன் அவர்கள் குறிப்பிடுவது வழக்கம்.

## குடியேற்றம்

இராசேந்திர சோழன் காலந் தொட்டு வாணிகத்தை நாடி வந்த தமிழர்கள், மலேசியாவிலேயே தங்கி வாழவும் முற்பட்டனர். மலாய்ப்பெண்களை மணந்து, நிலையாகத் தங்கினார்கள். இவர்கள் காலப் போக்கில், தாய் மொழியை மறந்தார்கள். பழக்க வழக்கம், வழிபாடு முதலியவற்றால் மட்டும் தமிழர்களாக விளங்கும் இவர்கள், மொழியால் மட்டும் மாறுபடுகிறார்கள். மலாக்காவில் வாழும் இம்மலாய்த் தமிழர்கள் 'மலாக்கா செட்டிகள்' ஆவார்கள். மொழியை மறந்துவிட்டால் இனத்தின் நிலை என்னவாகும் என்பதற்கு இவர்கள் ஓர் எடுத்துக்காட்டு.

## சஞ்சிக் கூலிகள்

பதினெட்டாம் நூற்றாண்டில் வெள்ளைக்காரர்களின் காலனித்துவ ஆட்சியில், தமிழர்கள் பேரளவில் குடியேற்றப் பட்டனர். 1938-ஆம் ஆண்டில் குடியேற்றக் கட்டுப் பாட்டுச் சட்டம் உருவாகும் வரை இலட்சக்கணக்கானவர்கள் மலேசியாவில் குடியேற்றப்பட்டார்கள். இப்படிக் குடியேற்றப்பட்டவர்களைச் 'சஞ்சிக் கூலிகள்' என இகழ்ச்சியாகக் குறிப்பிட்டனர். இன்று விடுதலை பெற்ற உரிமை மிக்கக் குடி மக்களான பின்னரும், 'சஞ்சிக் கூலிகள்' அதாவது 'ஒப்பந்தத் தொழிலாளிகள்' என்ற அடைமொழியைச் சிலர் மறக்காமலிருப்பது மனத்திற்கு வருத்தத்தை ஏற்படுத்துகிறது.

## காலனி ஆட்சியின் கொடுமைகள்

காலனித்துவ ஆட்சியில் மலேசியத் தமிழர்களின் வாழ்வு பெரும்பாலும் ரப்பர்த் தோட்டங்களிலேயே உழன்றது. ஒரு நாளைக்குப் பத்துக்காசு சம்பளத்தில் குருதியை வியர்வையாக்கினர் தமிழர். வளமான சாலைகளை அமைக்கத் தமிழ் மக்கள் சிந்திய இரத்தத்திற்கு அளவே இல்லை. மலேசியாவின் வளத்திற்குத் தமிழ் மக்கள் ஆற்றிய பணிகளை வரலாறு மறக்க முடியாது.

> ''வயிரங்கள் ஆங்கே விளையாடும் கருவிகளாம்;
> வயிறென்ற ஒன்றை மறந்தவர்கள் வாழிடமாம்
> பஞ்ச மெனும்ஒரு பாவிக்கங் கிடமில்லை;
> கொஞ்சம் மிகைப்படுத்திக் கூறிடவே வேண்டுமென்றால்
> வாழக் கொடுத்துவைத்தோர் வாழ்கின்ற சீமையதாம்.''

என்று மலேசியாவின் செல்வ வளத்தைப் பாடியவர் கவிவாணர் உலகநாதன்.

"பாழுக்கு மரமெதற்குப் பார்க்கலாம் அங்கு வந்தால்
பாலுக்கு மரமிருக்கும் பாங்கான காட்சிகளை!
பாலென்றா சொன்னேன்? பாலில்லை! அம்மரங்கள்
பட்டையினைச் சீவிவிட்டால் கொட்டுவது தமிழ்க்குருதி"

என்று தமிழர் நிலைக்கு இரங்கிக் கண்ணீர் வடிக்கிறார் அக்கவிஞர்.

## இருண்டகாலம்

காலனித்துவ ஆட்சியை முறியடித்து, 1940-ல் ஜப்பானியர் மலேயாவைக் கைப்பற்றினர். 1945 வரை அவர்களின் கொடுங்கோல் ஆட்சி நடந்தது. அக்கால கட்டத்தில், மக்கள் பட்ட துன்பங்களை எழுத்தில் வடிக்க இயலாது. "மரண ரயில் பாதை" என்று வருணிக்கப்படும் தாய்லாந்திற்கும் பர்மாவிற்கும் இடையிலான புகை வண்டிப்பாதை அமைப்பிற்குத் தமிழர் சிந்திய செந்நீரை நினைக்க, நினைக்க நெஞ்சம் உருகும்; கண்ணீர் பெருகும். ஜப்பானியரின் கொடுங்கோல் ஆட்சி நடந்த இந்தக் கால கட்டத்தை, வரலாற்றாசிரியர்கள் 'இருண்ட காலம்' என்பார்கள். ஜப்பானியர்களின் ஆட்சி 1945-ஆம் ஆண்டோடு ஒரு முடிவுக்கு வர, மீண்டும் வெள்ளையர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றனர்.

## இளஞாயிற்றின் எழுச்சி

மலேசிய வரலாற்றில், இளஞாயிறு எழுந்த காலம் 1946-ஆம் ஆண்டாகும். இந்த ஆண்டில்தான், சமுதாய உணர்வும் ஒன்றித்துச் செயல்பட வேண்டுமென்ற ஒருமைப்பாட்டுணர்வும் கலைப் பண்பாடுகளைப் பேண வேண்டுமென்ற முற்போக்குணர்வும் மலேசிய மக்களிடையே ஏற்படத் தொடங்கின. இன்று நாட்டை ஆளும் தேசிய முன்னணியின் முதன்மை வாய்ந்த கட்சிகளான அம்னோ (United Malay National Organisation-UMNO), மலேசிய சீனர் சங்கம், மலேசிய இந்திய காங்கிரசு ஆகிய அரசியல் கட்சிகள் 1946-ஆம் ஆண்டில் தான் தோன்றின. ஜான் எ. திவி அவர்கள் மலேசிய இந்திய காங்கிரசுவின் முதல் தலைவர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. பாட்டாளித் தோழர்களுக்கு வழி காட்டவும், பாதுகாப்பு நல்கவும் தொழிற்சங்க அமைப்பும் 1946-இல் தான் ஏற்பட்டன. இன, மொழி, கலை, பண்பாட்டு உணர்வுகளை வளர்க்க மலேசியத் திராவிடர் கழகமும் 1946லே தான் நிறுவப்பட்டது. எல்லாவகையான எண்ண எழுச்சிகளுக்கும் மலேசியத் தமிழர்களுக்கு 1946-ஆம் ஆண்டே, அடித்தளம் அமைத்தது எனலாம்.

மேற்படி இயக்கங்கள் அமைந்த காலங்களில் அவற்றிற்கு ஏற்பட்ட முட்டுக்கட்டைகள் பெரியவை; மிகப் பெரியவை. எல்லா இடையூறுகளையும் வென்று, இன்று அவை பொலிவோடு நாட்டுக்கும், மக்களுக்கும் நற்பணிகள் ஆற்றுவதை எண்ணி யெண்ணி அந்நாட்டு மக்கள் மகிழ்கின்றனர்.

## மலேசியாவின் விடுதலை

1946-இல் எழுந்த புத்தொளி, நாட்டில் எழுச்சியுணர்வுகளை ஏற்படுத்தியது. அடிமைத்தளை அறுபட வேண்டுமென்ற உரிமை வேட்கை இந்தக் காலக் கட்டத்தில்தான் முகிழ்த்தது. நாட்டு விடுதலைக்கு முதல் குரல் கொடுத்தது, பேரளவு தமிழர்கள் நிறைந்த இயக்கமான மலேசிய இந்திய காங்கிரசே என்று எண்ணும் போது நம் நெஞ்சம் விம்முகிறது.

நாட்டு விடுதலைக்கு வித்திட்ட, மலாய்க்காரர்களின் அரசியல் இயக்கமான அம்னோவும், சீனர்களின் இயக்கமான மலேசிய சீனர் சங்கமும், இந்தியர்களின் இயக்கமான மலேசிய இந்திய காங்கிரசும் 1954-ல் கூட்டணியாக இணைந்தன. 1955-ல் நடந்த பொதுத்தேர்தலில், மலேசிய இந்திய காங்கிரசும் பங்குபற்றியது. முதன் முதலில் நாடாளுமன்ற உறுப்பினராகக் கட்சியின் அப்போதைய தேசியத் தலைவர் துன். வீ. தி. சம்பந்தன் தேர்ந்தெடுக்கப்பட்டார்; அமைச்சராகவும் பதவியேற்றார். தொடர்ந்து சுதந்திரத் தந்தை துங்கு அப்துல் ரகுமான் அவர்கள் தலைமையில், கூட்டணி ஆற்றிய உறுதிமிக்க பெரும்பணிகளால் 1957-ஆம் ஆண்டு நாடு விடுதலை பெற்றது.

## விடுதலைக்குப் பின்...

விடுதலைக்குப் பின், நாட்டில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்டன. ''பிழைக்க வந்தவர்கள்'' என்ற நிலை மாறி, அனைவரும் உரிமை மிக்கக் குடிமக்கள் என்ற நிலை மலரத் தொடங்கியது. குடிஉரிமை வழங்குவதில் அரசு பெரிதும் சலுகை காட்டியது. எதிலும் விழிப்பு மிக்க சீனமக்கள் விரைந்து குடி உரிமை பெற்றார்கள். இந்திய மக்கள்—தமிழ் மக்கள் தயக்கம் காட்டினர். மலேசிய இந்திய காங்கிரஸ் மேற்கொண்ட பெரு முயற்சியால், பட்டி தொட்டியெங்கும் குடியுரிமை பெறுவதன் தேவையை அது தக்க முறைகளில் உணர்த்தியதால் பெரும்பாலோர் குடியுரிமை பெற்றனர். அப்போது கிடைத்த அரிய வாய்ப்பை நழுவவிட்டவர்களில் பலர், இன்றும் கண் கலங்கி நிற்கிறார்கள்.

## ஆட்சித்துறையில் தமிழர்

1955-ல் தமிழர்களில் ஒருவர் மட்டுமே அமைச்சர் பொறுப்பில் இருந்தார். பின்னர் இரண்டு அமைச்சுகள் தரப்பட்டன. இப்போது மாண்மிகு டத்தோ சாமிவேலு மூத்த அமைச்சராகப் பணிபுரிகிறார். மாண்புமிகு சி. சுப்பிரமணியம், மாண்புமிகு கு. பத்மநாபன் ஆகியோர் அமைச்சர்களாகவும் பொறுப்பு வகிக்கின்றனர். இவற்றோடு மாநிலச் சட்ட மன்றங்களில் உறுப்பினர்களாகவும் சட்டமன்ற ஆட்சிக் குழுக்களில் உறுப்பினர்களாகவும் பன்னிருவர் பொறுப்பு வகிக்கின்றனர். நாடாளுமன்ற மேலவை (செனட்) உறுப்பினர்களாக எட்டு பேர் பதவி வகிக்கின்றனர்.

டான் திரு. டத்தோ எஸ். ஓ. கே. உபைதுல்லா அவர்கள் மேலவைத் துணைத்தலைவராக விளங்கினார்.

பதினைந்து இலட்சம் பேரைக் கொண்ட இந்திய சமூகத்திற்கு நாடாளுமன்றத்திலும், சட்ட மன்றங்களிலும் கிடைத்துள்ள இடங்கள் மிகவும் குறைவே. இக்குறையை நீக்க சமுதாயம் நீண்டகாலமாகவே குரல் எழுப்பி வருகிறது.

## எதிர்க் கட்சிகளின் எழுச்சி

ஆளுங்கட்சியில் இணைந்து பொறுப்பான பதவிகள் வகிப்பதோடு, எதிர்க்கட்சிகளிலும் தமிழர்கள் சிறப்பிடம் பெற்றுள்ளனர். மக்கள் முற்போக்குக் கட்சியின் நிறுவனர்களான வழக்கறிஞர்கள் டி. ஆர். சீனிவாசகம், எஸ். பி. சீனிவாசகம் சகோதரர்கள் இருவரும் மக்களின் பேராதரவைப் பெற்றவர்களாக விளங்கினார்கள். இவர்கள் இருவரும் அடுத்தடுத்துக் காலமானதால், கட்சியும் கட்டுடைந்து தளர்ந்தது.

எதிர்க் கட்சியில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்க மற்றொருவர் திரு. வி. டேவிட். இவர் நாடாளுமன்ற உறுப்பினராகவும், சட்டமன்ற உறுப்பினராகவும் பலமுறை தேர்ந்தெடுக்கப்பட்டார். நாடாளுமன்றத்தில் துணிந்து பேசக் கூடியவர். பெக்கெமாஸ் கட்சியின் வேட்பாளராக 1974-ல் நாடாளுமன்றத்திற்கும், சட்டமன்றத்திற்கும் போட்டியிட்டு இரண்டிலும் தோல்வி கண்டார். இப்பொழுது இரண்டிலும் உறுப்பினராக உள்ளார். கெராக்கான் கட்சியின் நாடாளுமன்ற உறுப்பினராக விளங்கி மறைந்த மாண்புமிகு வீரப்பனும, சனநாயகச் செயல் கட்சியின் நாடாளுமன்ற உறுப்பினராயிருந்த டாக்டர் சூரியனும் அடுத்துக் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். இந்த டேவிட்டே, ஆறாவது உலகத் தமிழ் மாநாட்டை இவ்வாண்டு நடத்த முன்வந்தவராவார்.

## அரசாங்கத் துறைகளில் தமிழர்

அரசாங்கத் துறைகளில் பெரும் பதவிகளில் அதிக அளவு தமிழர்கள் இல்லையென்றாலும், குறிப்பிட்டுச் சொல்லத்தக்க ஒரு சில பெரும் பதவிகளில் தமிழர்கள் பொறுப்பு வகிக்கவே செய்கின்றனர். காலஞ்சென்ற வழக்கறிஞர் திரு. ரமணி அவர்கள் ஐ. நா. அவையில் மலேசியாவின் பேராளராகப் பணியாற்றியுள்ளார். டத்தோ. தனபாலசிங்கம் அவர்கள் மலேசியக்கடற்படையின் தலைமைத் தளபதியாகப் பணியாற்றி, அண்மையில் ஓய்வு பெற்றார். சட்டத்துரையில் நல்லறிஞராக விளங்கிய காலஞ்சென்ற, டான் திரு. டத்தோ ஆதிநாகப்பன் அவர்கள் அமைச்சராகப் பொறுப்பு வகித்ததோடு அரசுத்துறைகளில் பல வகைப் பொறுப்புகள் வகித்திருக்கிறார். இப்போது தொழிலாளர் அமைச்சரான மாண்புமிகு கு. பத்மநாபன் அவர்கள் சிறந்த பொருளாதார வல்லுநராவார். இவர் பிரதமர் துறையின் தலைமைச் செயலாளராகப் பொறுப்பு வகித்துள்ளார். மலேசிய வானொலியின் முன்னாள் இந்தியப் பகுதித் தலைவரான திரு. இரா. பாலகிருஷ்ணன் அவர்கள், ஒலிபரப்புத் துறையின் இயக்குநராகப் பதவி வகித்தார். காவல் துறைகளில் தமிழர் மதிப்புமிக்க பொறுப்புகளில் உள்ளனர். காவல் துறையில் இன்று பெரும் பதவி வகிக்கும் தமிழர் திரு. அழகேந்திரா ஆவார். நாட்டுப் பாதுகாப்பிற்கும் கம்யூனிச ஒழிப்பிற்கும் குற்றச் செயல்களைத் தடுப்பதற்கும் பல வீரர்கள், தங்கள் உயிரையும் பணயம் வைத்திருக்கின்றனர். மற்றும் கல்வி ஆராய்ச்சி, தேசியக் கப்பல் நிறுவனம், விமானம், தேர்தல் கமிஷன், பொதுச் சேவை குழு (P.S.C.) முதலிய துறைகளிலும் தமிழர்கள் முக்கிய பொறுப்பு வகிக்கிறார்கள்.

## விளையாட்டுத் துறை

மலேசியாவில் மிகவும் வேகமாக முன்னேறிவரும் துறைகளில் விளையாட்டுத் துறையும் ஒன்று. விளையாட்டுத் துறையில் தமிழர்கள் பெருமைப்படத் தக்க சாதனைகளைப் புரிந்து வருகிறார்கள். 'ஆசியாவின் அதிவேகமனிதர்' என்ற சிறப்புப் பெற்ற டாக்டர் ஜெகதீசன் ஓட்டப்பந்தயத்தில் மலேசியாவின் முடிசூடா மன்னராக விளங்கியவர். காற்றெனப் பறந்து காண்போரை திகைக்க வைக்கும் வீராங்கனையான இராஜாமணி அம்மையார் ஓட்டப் பந்தயத்தில் பெருஞ் சாதனைகள் புரிந்தவர். இவர்களைத் தொடர்ந்து, பலர் இத்துறையில் வளர்ந்து வருகிறார்கள். அகில உலக அரங்குகளில் மலேசியாவின் புகழை இவர்கள் வளர்த்துவருகிறார்கள்.

காற்பந்து விளையாட்டுக் குழுத் தலைவராகப் பொறுப்பேற்று வெற்றிகள் ஈட்டிய திரு.சந்திரன், வளைமட்டைப்பந்து(ஹாக்கி) விளையாட்டுக குழுவின் தலைமைப் பொறுப்பேற்று உலக அரங்கில் மலேசியாவின் பெருமையை உயர்த்திய திரு. சண்முக நாதன் ஆகியோரின் தொண்டை, நாடு மறகக முடியாது. பூப் பந்தாட்டத்தில் தேசிய வீரனாகி மிகக் குறைந்த வேறுபாட்டில் உலக வீரனாகும் வாய்ப்பை இழந்த பூப்பந்து வீரர் திரு. குணாளன் இப்போது மலேசியாவின் பூப்பந்தாட்டப் பயிற்சி யாளராகப் பணி புரிந்து மலேசியாவின் செல்வாக்கை உயர்த்த முனைந்து வருகிறார். இத்துறையில் விரைந்து முன்னேறி வருகிறார் தேசிய வீரர் திரு. ஜேம்ஸ் செல்வராஜ்.

## பொருளாதாரத்துறை

எல்லாவற்றுக்கும் அடிப்படையான பொருளாதாரத் துறை யில், தமிழர்கள் மிகவும் பின் தங்கியே உள்ளார்கள். மலேசிய இந்தியர்களின் தேசியத் தலைவராக இருந்த அமைச்சர் மாண்பு மிகு டான்திரு. டத்தோ வெ. மாணிக்கவாசகம் அவர்கள், 'புதிய பொருளாதாரக் கொள்கையும் மலேசிய இந்தியர்களும்' என்ற திருத்தப்படாத அறிக்கைப் புத்தகத்தின் முன்னுரையில் பின்வருமாறு கூறுகிறார்.

"மலேசிய இந்திய சமுதாயத்தில் ஏறத்தாழப் பாதிப்பேர் தோட்டப் புறத்திலும் சிறு தோட்டங்களிலும் தனித்து விடப் பட்டு விட்டார்கள். இன்னும் ஒரு பெரும் பகுதியினர் நகர்ப்புற வாழ்க்கையின் ஒதுங்கிய பகுதிகளில் வாழ்ந்து வருகிறார்கள். இதனால், நாட்டின் முன்னேற்றத்திலும் மாற்றங்களிலும் அவர்கள் பங்கேற்பது பாதிக்கப்பட்டுள்ளது. இதற்கு மேலாக மலேசிய இந்தியர்களின் இளம் தலைமுறையினரின் திறன்கள், வாய்ப்புக்கள் ஆகியவற்றையும் அது பாதித்துள்ளது. இந்த நிலை தொடர அனுமதிக்கப்பட்டால், அஃது இச்சமுதாயத்தின் பெயர், மதிப்பு, நல்வாழ்வு ஆகியவற்றைக் கடுமையாகப் பாதித்துவிடும்."

இவ்வரிகள், மலேசிய இந்தியர்களின், சிறப்பாகத் தமிழர் களின் நிலையை விளக்கப் போதுமானவையாகும். தமிழர்கள் இந்நாட்டில் உழைப்பைக் கொட்டினார்களேயன்றித், தங்கள் உயர்வைப் பற்றி எண்ணவேயில்லை. 'கறப்பது உழக்குப் பால்; உதைப்பதில் பல்லும் வாயும் போகிறது' என்ற பழமொழிக் கொப்ப, மாடாக உழைத்துப் பெரும் பொருளையும் சிக்கன மாகச் சேமிக்காமல் ஊதாரித்தனமாகச் செலவிட்டு உருக் குலைந்து போகும் நிலையே தொடர்ந்தது. ஒவ்வோர் ஊரிலும் ஒரு கோயில் இருந்தது போலவே கள்ளுக் கடையும் இருந்தது.

## குடியால் உண்டான கேடு

கள்ளச் சாராயக் கடைகளும், இங்கு மூலை முடக்கெல்லாம் இருந்தன. தமிழர் வருவாய் முழுதும் குடியால் அழிந்ததோடு உடற்செல்வமும் உருகிக் கரைந்தது. எத்தனையோ உயிர்கள் கள்ளச் சாராயத்திற்கு இரையாயின. ஈட்டும் வருவாய் போதாமல், நாளும் கடன்சுமை ஏறியது. நலியும் நிலையை மாற்ற நீண்ட நெடுங்காலம் செயலளவில் யாராலும் முயற்சி மேற்கொள்ளப்படவில்லை.

இந்த நிலையில், தோட்டத்துண்டாடல் என்னும் காட்டுத்தீ பரவியது. 'இந்த வாழ்வு என்றும நிலையானது' என்று இறுமாந்திருந்த தமிழர் நெஞ்சில் இடி விழுந்தது. 'துண்டாடல்' என்னும் 'அணுக்குண்டு விழுந்த பின்னர் தான்' தமிழர் யார்?' அவர் நிலையெனன? அவர்களின் எதிர்காலம என்ன ஆகும்? என்ற சிந்தனை சமுதாயத்தில் எழுந்தது. சாறெடுக்கப்பட்ட சக்கையெனத் தோட்டப்புறத் தமிழர் புறக்கணிக்கப்பட்ட நிலையைக் கண்டு கலங்கிய உள்ளங்கள் பல. துண்டாடல் கொடுமையைக் கண்டு, மனம் உருகி மலேசியத் தமிழ்க் கவிஞர்கள் பாடிய பாடல்கள் பாடுவோரின், கண்களைக் குளமாக்கும்; நெஞ்சை நெக்குருகச் செய்யும். சமுதாயத் தலைவர்கள் பரிவோடு தோட்டத்துண்டாடலை ஒழிக்கப் பெருமுயற்சி மேற்கொண்டார்கள் என்றாலும், சட்டம் இடம் தராத நிலையில் அல்லல்படும் தமிழர்களின் கண்ணீரைத் துடைக்கும் வழியறியாது தவித்தனர்.

## தேசிய நில நிதிக் கூட்டுறவுச் சங்கம்

தமிழர் நெருப்பாற்றில் நீந்த வேண்டிய கொடுமையான நிலை உருவான இந்த நேரத்தில், மலேசிய இந்திய காங்கிரசின் அன்றைய தேசியத் தலைவராயிருந்த துன். சம்பந்தனார் அவர்கள் ஓர் அரிய பொருளாதார இயக்கத்தைத் தொடங்கினார்கள்.

1960-ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்ட தேசிய நிலநிதிக் கூட்டுறவுச் சங்கமே, மலேசிய நாட்டுத் தமிழர்களுக்கு முதன் முதலில் அமைந்த பொருளாதார நிறுவனமாகும். குறைந்த வருவாய் உடையவர்களுக்கேற்ற முறையில், 100 வெள்ளிக்கு ஒரு பங்கு என்ற முறையில், அதையும் மாதம் பத்துப் பத்து வெள்ளியாகச் செலுத்தலாம் என்ற சலுகை முறையை ஏற்படுத்தியதால், ஆயிரக்கணக்கானவர் சங்கத்தில் உறுப்பியம் பெற்றனர். எதுவும் செய்யமுடியாத ஏழைகள் என்று தாழ்வாகக் கருதப்பட்ட தோட்டப் புறத் தமிழர்களின் பத்து வெள்ளித் திட்டம் பல தோட்டங்களை வாங்க உதவியது.

## தே. தோ. ச. வின் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கம்

இன்று 20 தோட்டங்கள் சொந்தமாகியுள்ளன. இதனால, துண்டாடல் அரக்கனின் முதுகெலும்பு உடையத் தொடங்கியது. உலகளாவிய புகழ்பெற்ற தேசிய நிலநிதிக் கூட்டுறவுச் சங்கம் அமைந்தது. திரு. சம்பந்தன், கூட்டுறவுத் தந்தை என்ற சிறப்பைப் பெற்றார். கூட்டுறவுச் சங்கத்திற்கு அடுத்தபடியாகப் பாட்டாளிகளை வழிநடத்தும் உலகப் புகழ் பெற்ற மாபெரும் இயக்கமான 'தேசியத்தோட்டத் தொழிலாளர் சங்கம்' ''அலோனியர்னஸ்'' என்ற பொருளாதார நிறுவனத்தைத் தோற்றுவித்ததோடு, பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தையும் ஏற்படுத்தியது. தோட்டங்கள் வாங்கப்பட்டதோடு தொழிற்சாலைகளும் நிறுவப்பட்டன. இப்போது கரும்புத் தோட்டம் நிறுவும் திட்டமும் செயற்பட்டு முடிந்தது.

## நேசா பல நோக்குக் கூட்டுறவுச் சங்கம்

பொருளாதார உணர்வு பரவலாக ஏற்பட்ட நேரத்தில், 1974–ஆம் ஆண்டு இந்திய காங்கிரசின் தேசியத் தலைவரான டான் திரு. டத்தோ வெ. மாணிக்கவாசகம் அவர்களால் நேசா பல நோக்குக் கூட்டுறவுச் சங்கம் நிறுவப்பட்டது. தொழில் புரியக் கடன் வழங்கும் திட்டம், டேக்சி சேவை நடத்தும் திட்டம் போன்ற அரிய திட்டங்களை நேசா சிறப்பாகச் செயல்படுத்துகிறது. மேலும், மலேசிய இந்திய காங்கிரசின் உதவித் தலைவர்களில் ஒருவரும், மேலவைத் துணைத்தலைவராக இருந்தவருமான டான் திரு. டத்தோ எஸ். ஓ. கே. உபைதுல்லா அவர்களின் தலைமையில் சிறு தொழில் முதலீட்டு நிறுவனம் அண்மையில் அமைந்துள்ளது. குறைந்த வருவாய் உடையோரை முதலாளிகளாக்கும் இத்திட்டம், சிறப்பான அடிப்படைகளோடு செயல்படத் தொடங்கியுள்ளது.

## தொழிலாளர் மேம்பாட்டுக் கூட்டுறவுச் சங்கம்

இக்கழகம் பத்தாண்டுகளுக்கு முன்னர் மலேசிய இந்திய காங்கிரசின் துணைத் தலைவரும் நாடாளுமன்ற உறுப்பினருமான மாண்புமிகு ச. சாமிவேலு அவர்களால் எஸ். எம். எஸ். ஏ. எம். என். அமைக்கப்பட்டது. இக்கழகம் வீடு கட்டும் திட்டத்தை நாடெங்கும் செயற்படுத்தவுள்ளது. ஏழைத்

தமிழர்களுக்குக் குறைந்தவிலையில் தரமான வீடுகள் கிடைக்கக் கூட்டுறவு முறையில் முனைப்போடு செயல்படத் தொடங்கினர்; ஓரளவு வெற்றியும் பெற்றுள்ளனர்.

### மாஜூ ஜெயா

நாடெங்கும் 'தமிழ் இளைஞர் பணி மன்றம்' என்ற பெயரில் தனித்தனியே செயல்பட்டு வந்த மன்றங்களை ஒன்றிணைத்து 1964-இல் பினாங்கில் அமைந்த தமிழ் இளைஞர் பணி மன்றங் களின் பேரவை, மொழி, கலை, பண்பாட்டுத்துறை வளர்ச்சிக் குப் பெரிதும் தொண்டாற்றிவருகிறது. தமிழர் பொருளாதாரத் துறையில் மேம்பாடு காணவேண்டுமென்ற நோக்கில் இப்பொழுது 'மாஜூ ஜெயா' என்ற பெயரில் அது ஒரு கூட்டுறவுச் சங்கத் தைக் கண்டுள்ளது.

### தோட்டப்புற மக்களுக்கு வீடு கட்டித் தரும் திட்டம்

அரசாங்கமும், தோட்டப்புற மக்களுக்குச் சொந்த வீடு உருவாக்கித் தரும்திட்டத்தைச் செயல்படுத்த முன் வந்துள்ளது. தோட்டப்புறத்தில் முதலாளிக்குச் சொந்தமான வீட்டிலேயே் காலமெல்லாம் வாழாமல் சொந்த வீட்டில் உரிமையோடு வாழ வாய்ப்பளிக்கும் இத்திட்டத்திற்கு, அரசாங்கம் ஒரு கோடி வெள்ளி சுழல் நிதி ஏற்படுத்தியுள்ளது.

இப்படிப் பல்லாற்றானும் தமிழர்களின் நிலையை உயர்த்த முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. கடந்த பத்தாண்டு களுக்கு முன்பிருந்த நிலையை எண்ணும்போது இன்றைய தமிழர் களின் எண்ணத்தில் பொருளாதாரச் சிந்தனை பூத்துள்ளதை உணர முடிகிறது. எனினும், இன்னும் எதிர் பார்க்கும் அளவு வேரோடவில்லையென்றே சொல்ல வேண்டியுள்ளது. அடுத்த பத்தாண்டுகளில் நிலைமை சற்று மேம்பாடு காணுமென்று உறுதியாக நம்பலாம்.

### கல்வி நிலை

'கண்களுக்கு ஒளி வழங்குவது கல்வி;
செல்வங்களிலே அழியாத பெருமை கொண்டது கல்வி'

ஆனால் மலேசியத் தமிழர்களுக்கு குறிப்பாகத் தோட்டப்புறத் தமிழர்களுக்குத்தொடக்கத்தில் காலனித்துவ ஆட்சியில், ஏதோ சில சொற்கள் எழுதப் படிக்கத் தெரிந்தால் போதுமென்ற அடிப் படையிலேயே 'கல்வி' வழங்கப்பட்டது. கோயில்களிலும்,

குழந்தைப் பாதுகாப்பு நிலையங்களிலும் (ஆயாக் கொட்டகை) மாட்டுத் தொழுவத்திலும் கூட வகுப்புகள் நடத்தப்பட்டுள்ளன. விடுதலைக்குப் பின் கல்வித்துறை மறுமலர்ச்சி யடைந்தது. இரசாக் கல்வித் திட்டம் நடைமுறைக்கு வந்தது. தேசிய அளவில் அனைத்துக் குழந்தைகளும் ஒரே வகையான பாடத்தைப் பயிலும் வாய்ப்புக் கனிந்தது. தமிழ், சீனம் முதலிய தாய்மொழிப் பள்ளிகளும், தேசிய உணர்வோடு சீராக இயங்கத் தொடங்கின.

தமிழர்கள், பெரும்பாலும் தோட்டப் புறங்களில் வாழ்ந்த தால், வசதிகள் நிறைந்த பள்ளிக் கட்டடங்களைத் தமிழ்ப் பள்ளிகளில் பெற இயலவில்லை. சிற்சில இடங்களில் மட்டுமே ஒழுங்கான புதிய கட்டடங்கள் எழுந்தன. கூட்டுப் பள்ளிகள் மூலம், சில பள்ளிகள் சீர்திருத்தப்பட்டன. தமிழர்களின் பொரு ளாதார நிலை பிள்ளைகளுக்குச் சிறப்பாகக் கல்வியை வழங்க இயலவில்லை. மேலும், சில பெற்றோர். ரப்பர் காடுகளுக்கும், செம்பனைத் தோட்டங்களுக்கும் தங்களுக்கு உதவியாகப் பிள்ளைகளை அழைத்துச் செல்வதாலும், பல குழந்தைகள் கல்வி பெறும் வாய்ப்பை இழந்தனர். குழந்தைகள் வளரும் சூழ் நிலை, பெற்றோர்களின் கண்காணிப்பின்மை, ஊட்டச்சத்தின் மையால் உடல் வளம் குன்றிய பிள்ளைகளின் இரங்கத்தக்க நிலை, மேலும் எழுத்தில் வடித்துக்காட்ட இயலாத வேறு சில முட்டுக்கட்டைகளும் தமிழ்க் குழந்தைகளின் கல்வியைப் பாதிக் கின்றன. தமிழ்ப் பள்ளிகளில் பயிலும் குழந்தைகளுக்கு மட்டுமின் றித்தேசியப் பள்ளிகளில் பயிலும் பிள்ளைகளுக்கும் மேற்காணும் இடையூறுகள் உண்டு. இன்று மலேசியாவில் அறுநூற்றுக்கு மேற்பட்ட குழந்தைகள் தமிழ்ப் பள்ளிகளில் பயில்கின்றனர். ஏறக்குறைய இதே எண்ணிக்கையுடைய பிள்ளைகள் தேசியப் பள்ளிகளில் பயில்கிறார்கள். தேசியப் பள்ளிகளில் பயிலும் குழந்தைகளுக்கும் தாய்மொழியைப் பயில வாய்ப்புண்டு. 15 குழந் தைகள் விரும்பிக் கேட்டால், தாய்மொழிப் பயிற்சிக்கு வழிவகை செய்யப்படுகிறது. பல பள்ளிகளில் பெற்றோரின் விருப்பத்தைக் கேட்பதில்லை. பெற்றோர்களில் சிலர் தாய்மொழிப் பயிற்சியைப் பற்றிக் கவலைப்படுவதுமில்லை.

## இடைநிலைப் பள்ளிகளில் தமிழ்

தாய்மொழிப் பள்ளிகள் 6-ஆம் வகுப்புடன் நிறைவுறுகின் றன. பின்னர், இடைநிலைப் பள்ளிகளில் ஆங்கிலமொழி தவிர்த்த அனைத்துப் பாடங்களும் தேசிய மொழியிலேயே நடத்தப்படு கின்றன. இங்கும் பதினைந்து மாணவர்கள் விரும்பினால், தமிழ் பயிலலாம். எனினும், பெரும்பாலான பள்ளிகளில் தமிழ்ப்

பாடம் ஒழுங்காக நடத்தப்படுவதில்லை. இதனால், பல்கலைக் கழகம் செல்லும் மாணவர்கள் அங்குத் தமிழ்ப்பாடம் எடுத்துப் படிப்பதில் பெரிதும் துன்புறுகின்றனர்.

## கல்வியும் மொழியும்

''கல்வி எந்த மொழியிலும் இருக்கலாம்; தாய்மொழியில் தான், பெறவேண்டு மென்பதில்லை; தாய்மொழிப் பள்ளிகளில் மொழிப் பாடத்தைத் தவிர, மற்றெல்லாப் பாடங்களும் தேசிய மொழியிலேயே இருந்தால், நம் மாணவர்கள் விரைந்து முன்னேறி விடுவார்கள்'' என்று ஒரு சாரார் கூறுகின்றனர். ''தொடக்கக் கல்வி தாய்மொழியில் பெறுவதே இயற்கையானது; தாய் மொழிப் பள்ளிகளில் தேசியமொழி, ஆங்கிலம் தவிர்த்த அனைத்துப் பாடங்களும் தாய்மொழியிலேயே நடைபெற வேண்டு மென்றும், இப்போதுள்ள முட்டுக்கட்டைகளை அகற்றினால், தாய்மொழிப் பள்ளிகளில் பயிலும் குழந்தைகள் முன்னேற்றம் அடைவதில் எந்தத்தடையும் இருக்க முடியாது'' என்றும் மற்றொருசாரார் வாதிடுகின்றனர். ''சொந்த மொழி, கலை, நாகரிகம் பண்பாடு முதலியவை அழியாமல் காக்க—தமிழர் என்ற மரபுணர்வு, மாறாமல் வாழத் தாய்மொழிப்பள்ளிகளில், தாய்மொழியே, பயிற்று மொழியாகத் தொடரவேண்டு'' மென்று மற்றொரு சாரார் வாதிடுகின்றனர். முயற்சி இன்னும் வெற்றி பெறவில்லை.

## தமிழ் இலக்கியக் கழகம்

தமிழ்ப் பள்ளிகள் நிலைத்து இயங்க வேண்டுமென்பதில் தமிழ்த்திரு இர. ந. வீரப்பன் அவர்களின் உறுதிமிக்கத் தலைமையில் இயங்கும், 'தமிழ் இலக்கியக் கழகம்' பெரிதும் ஆர்வங் கொண்டு பாடுபட்டு வருகிறது. கல்விவளர்ச்சி மாநாடுகள் கூட்டி சமுதாயத்தின் உணர்வுகளை அரசுக்கு உணர்த்தி வருகிறது. மலேசிய அரசாங்கத்திற்குத் தாய்மொழிப் பள்ளிகளைத் தேசியப் பள்ளிகளாக மாற்றும் எண்ணம் இல்லை. முப்பதுக்கு மேற்பட்ட தமிழ்ச்சங்கங்கள், மலேசியாவில் தமிழ்ப்பணி ஆற்றி வருகின்றன.

## கல்விக்கு உதவி நிதிகள்

உயர் கல்வி பெற விரும்பும் அனைத்து ஏழை மாணவர்களுக்கும், நிதி உதவி கிடைக்க வாய்ப்பில்லை. என்றாலும், தென்னிந்திய தொழிலாளர் நிதி, மலேசிய இந்தியர் காங்கிரசின் கல்வி நிதி, டாக்டர் இராம சுப்பையா கல்விநிதி முதலியவற்றின் மூலமும், தேசிய நில நிதிக் கூட்டுறவுச் சங்கம், அருள்மிகு மகா

மாரியம்மன் கோயில் தேவஸ்தானம், தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கம் முதலியவை வழங்கும் கல்வி உதவி நிதிகளின் மூலம், ஆண்டுதோறும் பல மாணவர்கள் உயர் கல்வி பெற்று வருகிறார்கள். உயர் கல்வி நிலையங்களில் தமிழ் மாணவர்களுக்குப் போதிய இடங்கள் தரப்படுவதில்லை என்ற மனக்குறை தொடர்ந்து இருந்து வருகிறது. இந்நிலை மாறத் தமிழ்ச் சமுதாயம் குரல் எழுப்பி வருகிறது.

## இலக்கிய வளர்ச்சி

மலேசியாவில் தமிழ் இலக்கிய வளர்ச்சி, நெடுங்காலத்திற்கு முன்பே அரும்பத் தொடங்கியது. 1880-க்கு முன்பே, இங்கு நூற்கள் வெளியிடப்பட்டுள்ளன. இதுவரை ஏறக்குறைய ஐந்நூறு நூற்கள் வெளிவந்துள்ளன. நூறு ஆண்டுகளுக்கு முன்பே, இங்கு இலக்கியம் அரும்பத் தொடங்கியதென்றாலும், கடந்த கால் நூற்றாண்டுக்கால வளர்ச்சியே, சிறப்பாகக் கொள்ளத்தக்கதாகும்.

மலேசிய இலக்கிய வளர்ச்சிக்குப் பத்திரிகைகள் பேரளவு, துணை புரிந்துள்ளன என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. பொன் விழாவைத் தாண்டி, மணிவிழாவை நோக்கி நடைபோட்டுக் கொண்டிருக்கும் 'தமிழ் நேசனும்' இடைவிடாது, எழுச்சிக்கு முரசொலிக்கும் 'தமிழ் முரசும்' உலகிலேயே மாற்றச்சு (ஆஃப் செட்) வசதியோடு வெளிவரும் ஒரே தமிழ் ஏடான 'தமிழ் மலரும்', சில காலம் சீரான பணியாற்றி மறைந்த 'மலைநாடும்,' மாலைப்பதிப்பாக வந்த தேச தூதனும் நாளிதழ்கள் என்றாலும் இலக்கிய வளர்ச்சிக்கு மையமாக விளங்கின என்பதை இங்கு நன்றி உணர்வோடு குறிப்பிடவேண்டும். நாளிதழ்களில் தமிழ் நேசனும், தமிழ் முரசும் மலேசியத் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு ஆற்றிய பணிகள் என்றும் நின்று நிலைக்கத்தக்க பணியாகும். மலேசியத் தமிழ் எழுத்தாளர்களுள் பெரும்பாலானவரை உருவாக்கிய பெருமை இவற்றைச் சேரும்.

நாளிதழ்களோடு வார, மாத இதழ்களும் இலக்கிய வளர்ச்சிக்குப் பணிபுரிந்துள்ளன. மாதவி, பொன்னி, திருமுகம், நவரசம், மலைமகள், புதியசமுதாயம் முதலிய இதழ்களின் பணிகளையும், உலகப் புகழ் பெற்ற தொழிற்சங்கத்தலைவரான டாக்டர் பி. பி. நாராயணன் அவர்களைப் பொதுச் செயலாளராகக் கொண்ட தே.தோ.தொ. சங்கத்தால் தொழிலாளர்களின் குரலாக வாரம் இருமுறை வெளியிடப்படும் 'சங்கமணி'யின் தொண்டுகளையும் இங்குச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும்.

இதழ் வெளியீட்டைப் பொறுத்த வரை, இங்குத் தோன்றித் தோன்றி மறையும் நிலையே உள்ளது. இதற்குக் காரணம் அடிப்படையில்லாமல், முயற்சி, ஆர்வம் ஆகியவற்றை மட்டுமே முதலீடாகக் கொண்டு இதழ் தொடங்குவதும், சீராக நிருவகிக்காமையுமே. முதன்மையான காரணங்கள் என்று சொல்வது தவறாகாது. இலக்கிய வளர்ச்சியைத் தூண்ட ஒரு வார இதழ் இல்லையே என்ற குறையைப்போக்க இப்போது ''வானம் பாடி'' என்ற இதழ், நல்ல அடிப்படையோடு தொடங்கப் பட்டுள்ளது என்பது நமக்கு மகிழ்ச்சியளிக்கிறது. குழந்தைகளுக்கான இதழ் இல்லையே என்னும் குறையைப் போக்க முன்பு மாணவர் பூங்கா என்ற இதழ்வெளி வந்தது. கடந்த பதினாறு ஆண்டுகளுக்கு மேலாகத் 'திருமகள்' மாத இதழ் வெளி வருகிறது.

## அரசின் தமிழ் வெளியீடு

மலேசிய அரசாங்கம் தொடக்க காலம் முதல்,தமிழ் ஏடுகளை நிறைய வெளியிட்டு வருகின்றது. 'ஜனோபகாரி' என்ற இதழ் நீண்டநெடுங்காலம் நடைபோட்டது. பின் 'வெற்றி',' வளர்ச்சி', என்று அதன் பெயர் மாறியது. இப்போது 'உதயம்' என்ற பெயரில் 'கண்ணைக் கவரும்' இதழ் ஒன்று கவர்ச்சியோடு வெளி வந்து பல்லாயிரக்கணக்கான தமிழ் நெஞ்சங்களுக்குக் குளிர்ச்சி சேர்க்கிறது. மலேசிய அரசு வெளியீட்டுத் துறையில், பன்னெடுங் காலம் உழைத்து இயற்கையெய்தி விட்ட பெருமகன் திரு சி. வி. குப்புசாமி அவர்களை இங்கு நன்றியோடு நினைவு கூர வேண்டும். மலேசியாவில் தமிழ் வளர்ச்சிக்கும் தமிழ் இனஎழுச்சிக்கும் இவர் ஆற்றியுள்ள தொண்டுகள் என்றும் நிலைக்கத் தக்கவை.

## நூல் வெளியீட்டு நிலை

மலேசியாவில் முறையான தமிழ் இலக்கிய வளர்ச்சி, கால் நூற்றாண்டுக்கு முன்புதான் தொடங்கியதென்றாலும் கடந்த பத்துப் பதினைந்து ஆண்டுகளில்தான் எழுத்துகள் நூல்வடிவம் பெறத் தொடங்கின. இதழ்களில், காலையில் வெளிவந்து மாலையில் குப்பைத் தொட்டிகளில் விழும் நிலை மாறி, நூலாக்க முயற்சிகள் அரும்பியுள்ள இன்றைய கால கட்டத்தை மலேசியத் தமிழ் இலக்கிய உலகின் பொற்காலம் எனலாம்.

தமிழ் எழுத்துத்துறை வளர்ச்சிக்குத் தொலைக்காட்சித் துறையில் வாய்ப்பில்லை. ஊதியம் ஏதுமின்றி எழுத்துகளை இதழ்களுக்குச் சொந்தச் செலவில் அனுப்பி அதுவே தமிழ்ப்பணி

என்று நிறைவுறும் எழுத்தாளர்களுக்கு, வானொலி ஓரளவு ஊதியம் தந்து, ஊக்கி வருகிறது. அரசு வெளியீடான உதயமும் மன நிறைவடையத்தக்க ஊதியத்தை எழுத்தாளர்களுக்கு வழங்குகிறது.

பன்னெடுங்காலம் ஊதியம் எதையும் எதிர்பார்க்காமல் எழுதிக் கொண்டிருந்த எழுத்தாளர்களுக்கு, பத்திரிகைகள் அவ்வப்போது சிறு சிறு அளவில் பரிசுகள் வழங்கின. தொடர்ந்து முறையான ஓர் ஊதியத் திட்டத்தை எந்த இதழும் மேற் கொள்ளவில்லை. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், மாதாந்தரச் சிறுகதைக் கருத்தரங்குகள் நடத்தித் தேர்ந் தெடுக்கப்படும் ஒரு சிறு கதைக்கு, ஐம்பது வெள்ளி பரிசளித்து வருகிறது.

## இலக்கியப் பரிசுத் திட்டங்கள்

இப்போது மலேசிய இந்தியர்களைப் பேராளர்களாகக் கொண்ட அரசியல் கட்சியான மலேசிய இந்தியர் காங்கிரசு மிகப் பெரிய அளவிலான பரிசுத் திட்டம் ஒன்றை, அறிவித் துள்ளது. பண்பாட்டுப் பகுதியின் தலைவராக பொறுப் பேற்றுள்ள திரு வ. கோவிந்தராஜ் ஏ. எம். என்., பி. ஜே கே. அவர்களின் அறிக்கையின்படி, ஆண்டுதோறும் வெளி வரும் சிறந்த ஒன்றுக்கு ஆயிரம் வெள்ளியும், இரண்டாம் நிலை பெறும் நூலுக்கு ஐந்நூறு வெள்ளியும் பரிசு அளிப்பதே அத்திட்ட மாகும். இதுநாள்வரை மலேசியாவில் எந்த அமைப்பும் மேற் கொள்ளாத மாபெரும் திட்டம் இது. எழுத்தாளர்களுக்குப் பேருக்கம் தரும் இப்பரிசுத் திட்டம், தொடர்ந்து உறுதியாகச் செயல்பட வேண்டுமென்று இலக்கிய உலகம், ஆர்வமுடன் எதிர் பார்க்கிறது.

## மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம்

மலேசியாவில் தமிழ் இலக்கிய வளர்ச்சியைப் பற்றிக் குறிப்பிடும் போது, எழுத்தாளர் சங்கம் பற்றிக் குறிப்பிட வேண்டுவது கடமையாகும். எழுத்தாளர்களை ஒன்று சேர்க்கவும், அவர்களின் இலக்கிய முயற்சிகளைத் தூண்டவும், சங்கம்தொடக்கம் முதல் பாடுபட்டு வருகிறது.பல நூற்களையும் சங்கம்வெளியிட்டு வருகிறது. தேசிய மொழி எழுத்தாளர்களுக்கு ஆண்டுதோறும் பரிசு தந்து ஊக்குவது போல், தாய்மொழி எழுத்தாளர்களுக்கும் இலக்கியப் பரிசுகள் தரவேண்டுமென்று சங்கம் வேண்டுகோள் விடுத்து வருகிறது. இப்பணியில் தமிழ் இலக்கியக் கழகம் மேற்கொள்ளும் முயற்சிகளும் குறிப்பிடத்

தக்கவை. தேசியமொழியான மலேசிய மொழியில் அமைவதே தேசிய இலக்கியம். ஆதலால், அம்மொழியில் எழுதப்படும் நூற்களையே பரிசு திட்டத்தில் சேர்க்க முடியும் என்ற நிலையுள்ளது. ''தாய்மொழிகளில் எழுதப்படும் இலக்கியங்களும் தேசிய உணர்வு உடையவை. அவற்றிற்கும் பரிசு தரப்பட வேண்டு'' மென்ற கோரிக்கை தொடர்ந்து எழுப்பப்பட்டு வருகிறது. எழுத்தாளர் சங்கத்தை எண்ணும்போது, காலஞ் சென்றபெருமகன் திரு சி. வி. குப்புசாமி, கவிஞர் சி. வேலுசாமி, சிறுகதைச் செல்வர் திரு. சி. வடிவேல், முத்தமிழ் வித்தகர் திருமுருகு சுப்பிரமணியன் முதலியோர் ஆற்றியுள்ள பணிகள் நம் நினைவுக்கு வருகின்றன.

## செந்தமிழ்க் கலா நிலையம்

தமிழ் இலக்கிய வளர்ச்சியைப் பற்றிக் குறிப்பிடும்போது, பினாங்கில் பல்கலைச் செல்வரான முதுபெரும் தமிழ்ப்புலவர் சுவாமி இராமதாசர் அவர்கள் தலைமையில் கடந்த 40 ஆண்டுகளுக்கு மேலாக இயங்கிவரும் செந்தமிழ்க் கலா நிலையத்தை மறக்க இயலாது. தரமான புலவர் பலரை இந்நிலையம் உருவாக்கியுள்ளது.

## வளர்ச்சி கண்டுள்ள இலக்கியத் துறைகள்

மலேசியத் தமிழ் இலக்கியத் துறையில், குறிப்பிட்டுச் சொல்லத்தக்க அளவு வளர்ந்துள்ள துறைகள் சிறுகதையும் கவிதையும் ஆகும். புதினத்துறை வளர்கிறது என்றாலும், இன்னும் முழுமையான வளர்ச்சி பெறவில்லை. கட்டுரைத்துறை மந்த நிலையிலேயே உள்ளது என்றுதான் சொல்ல வேண்டும். சிறுவர் இலக்கியத்தைப் பொறுத்தவரை கவிதைத்துறை வளர்ச்சி கண்டுள்ளது. கதை, நாடகம், புதினத்துறைகள் நிறைவு கொள்ளத் தக்க அளவு வளர்ச்சி காணவில்லையென்றே, சொல்ல வேண்டும். நம் இலக்கிய வடிவங்கள் இப்போது தேசிய மொழியான மலேசிய மொழியிலும், வெளிவரத் தொடங்கியுள்ளன. நூற்றுக்கணக்கான கதைகளையும், கவிதைகளையும் மொழி பெயர்த்துள்ள மலேசிய மொழிப் புலவர் திரு. ஜி. சூசை அவர்கள் 'உலக மறையான' திருக்குறளை, மலேசிய மொழியில் பெயர்த்துள்ளார்.

## கலை, பண்பாட்டுத்துறை

மேலை நாட்டுப் பண்பும், கீழை நாட்டுப் பண்பும் கைகோத்து நடம்புரியும் பச்சைப் பசுங்கோயிலான பண்டை

மலேசியத் திருநாட்டில், ஈழை நாட்டுப் பண்பே தலை நிமிர்ந்து அரசோச்சுகிறது. மலாய்க்காரர்களின் பண்பாடு, பழக்க வழக்கங்கள், நம்முறைக்கு அதிக வேறுபாடுகள் கொண்டவை அல்ல. ஆதலால், நம் 'பண்பாடு' ஒன்றிக்கட்டை நிலையில் ஒதுங்கித் தனிமைப்பட வேண்டிய நிலையில்லை. புதிதாக வீசுகின்ற நாகரீகக் காற்று, நம் பண்பாட்டை அழித்துவிடுமோ என்று அஞ்சத் தேவையுமில்லை. நம்முடைய பாரம்பரியப் பண்பாடுகள், உணர்வுகளோடு ஒன்றி ஒளி விட்டே வருகின்றன. மலேசியாவில இயங்கும் ஒவ்வொரு தமிழர் அமைப்பும் கலை, பண்பாட்டு வளர்ச்சியில் நாட்டம் கொண்டு உழைத்து வருகின்றன. கலையைப் பொறுத்தவரை இங்கு பேரார்வம் கரை புரண்ட நிலையில் இருக்கிறதென்றாலும், எப்படி இங்கு ஒருவர் எழுத்தையே தொழிலாகக் கொண்டு வாழ முடியாதோ- அதே போல் கலையைத் தொழிலாகக் கொண்டும் வாழ முடியாது. தொலைக்காட்சி, வானொலித் துறைகளைச் சேர்ந்த கலைஞர்களும், நடன—இசையாசிரியர்களும் விரல் விட்டு எண்ணத் தக்கவர்களே, கலையைத் தொழிலாகக் கொண்டு வாழ்கிறார்கள். கலை நிகழ்ச்சிகள் இங்கு அடிக்கடி நடைபெற்றே வருகின்றன. தனி கருநாடக (பழந்தமிழ் இசை)இசையரங்கு, தனி பரத நாட்டிய இசையரங்கு போன்ற ஆழமான கலைப் படைப்புகள் இங்கு நடப்பது அருமையாகவே உள்ளன. தமிழகத்திலிருந்து வரும் பெருங்கலைஞர்களின் படைப்புகள் இங்கு இடம் பெறுவதுண்டு. சிறந்த முழு நேர நாடகங்கள் அவ்வப்போது நடப்பதுண்டு. காலஞ்சென்ற நாடகத்தந்தை ஆழி-அருள் தாசன் அவர்கள் ஆண்டுக்கொரு புது நாடகம் என்ற முறையில், பல அரிய நாடகங்களை அரங்கேற்றிப் பெரும் வெற்றிகளை ஈட்டியுள்ளார். அவர் மறைவு, மலேசியக் கலை உலகிற்குப் பேரிழப்பாகும். திரு. வ. கோவிந்தராஜ் அவர்கள் தலைமையில் உள்ள கோலாலம்பூர் வளரும் கலைஞர்கள் நாடக மன்றமும் '1941' போன்ற அரிய வரலாற்று நாடகங்களை நட்த்தி வெற்றி கண்டுள்ளது. குறிப்பிட்டுச் சொல்லத் தக்க வேறு சில மன்றங்களும் அவ்வப்போது நாடகங்களை நடத்தி வருகின்றன.

இசை, நடனம் முதலிய கலைகளை முறையாகப் பயிற்றுவிக்கப் பெரிய அளவில் இங்கு நிலையங்கள் இல்லை. சிறு சிறு அளவில், ஆங்காங்கே, சிலர் இத்துறைகளில் தொண்டாற்றி வருகிறார்கள்.

## தேசியப் பண்பாட்டை உருவாக்கும் முயற்சி

பல இனத்தினர் வாழும் மலேசிய நாட்டில் இப்போது தேசியப் பண்பாடு ஒன்று உருவாக்கப்பட வேண்டுமென்ற

விரைவு அரும்பியுள்ளது. அதற்காக அமைக்கப்பட்டுள்ள குழுவில் மலேசிய இந்தியர் காங்கிரசின் தேசியத் தலைவர் மாண்புமிகு ச. சாமிவேலு அவர்களும், தமிழ் இளைஞர் பணி மன்றங்களின் தேசியப் பேரவைத் தலைவர் திரு. க. கிருஷ்ணசாமி அவர்களும் இடம் பெற்றுள்ளனர். தேசியப் பண்பாடு உருவாக வேண்டுமென்ற ஆர்வம் முகிழ்த்துள்ளதே யன்றி, அது எப்படி அமைய வேண்டுமென்ற வரையறை இன்னும் ஏற்படவில்லை. காலமே இதற்கு ஒரு நல்ல வடிவைத் தரமுடியும்.

## வழிபாட்டுரிமை

மலேசியாவில் வாழும் அனைவர்க்கும் வழிபாட்டுரிமை குறை வின்றி, வழங்கப்பட்டுள்ளது. தமிழர், பல சமயங்களைத் தழுவியவர்களாக இருந்தாலும் 'இந்து' மதத்தைத்தழுவுவோரே மிக அதிகம். இங்கு, இந்து சமயச் சங்கம் ஒன்று வலிமையோடு இயங்குகிறது. கோலாலம்பூர் அருள்மிகு மகாமாரியம்மன்கோயில் தேவஸ்தானமும் சீரிய முறையில் சமயத் தொண்டாற்றுகின்றது. ஆண்டு தோறும், 'பத்து' மலையில் தைப்பூச விழா மிகப் பெரிய அளவில் கொண்டாடப்படுகிறது. இந்த விழாவில் நாடெங்கிலு மிருந்து இலட்சக்கணக்கான தமிழர்கள் ஒரே நேரத்தில் ஒன்று கூடுவதை முன்னரே கண்டோம். இங்கு ஒவ்வொரு சமய விழாவும்,வேறுபாடுகள் இல்லாமல்,தேசிய விழாவைப் போலவே நடைபெறும். சமய வேறுபாடுகளை யாரும் போற்றுவதில்லை. தமிழர் வாழும் ஊர்தோறும்,கோயில்கள் உண்டு. கோயில் கட்ட அரசுமானியம் வழங்குகிறது.

## மறைந்தும் மறையாத மாமணி

மலேசியாவில் தமிழ், தமிழ்உணர்ச்சி, தமிழ்வளர்ச்சி இலக்கிய எழுச்சி என்று எண்ணும் போது நம், நினைவில் எழும் பேருருவம் தமிழவேள் கோ. சாரங்கபாணியாவார். தமிழர்க்கு விழிப்பூட்டி, பட்டி தொட்டியெங்கும் தமிழ் முழக்கம் செய்த அரிமாவான அவர். தமிழ் முரசு மூலம் ஆற்றிய பணிகள் வரலாற்றில் நின்று நிலைக்கத்தக்கவை. 'தமிழர் திருநாள்' மூலம்,அவர் ஏற்றியதமிழ் உணர்வும், பண்பாட்டுணர்வும் தமிழ்த் தேசிய எழுச்சியும், தமிழர் தலை நிமிர, பல்கலைக் கழகத்தில் தமிழ் ஒலிக்க வழி வகைகள் செய்ததென்றால் மிகையாகாது.

## தேசியக் கோட்பாடுகள்:

1. இறைவன் மீது நம்பிக்கை வைத்தல்
2. பேரரசுக்கும் நாட்டுக்கும் விசுவாசம் செலுத்துதல்.

3. அரசியல் அமைப்புச் சட்டத்தை உறுதியாகக் கடைப் பிடித்தல்.

4. சட்ட முறைப்படி ஆட்சி நடத்துதல்

5. நன்னடத்தையும் ஒழுக்கத்தையும் பேணுதல்.

இந்த ஐந்து கோட்பாடுகளே மலேசியத் திருநாட்டின் உயிர் மூச்சாகும். நாட்டின் ஒவ்வொரு குடிமகனும் ஏற்றுக்கொண்ட இக்கொள்கைகளே, நாட்டிற்கு உரமூட்டுகின்றன; உறுதி ஏற்று கின்றன; ஒளிவழங்குகின்றன; நம்பிக்கையை ஏற்படுத்துகின்றன.

நாட்டுப்பற்றும், வேற்றுமையில் ஒற்றுமை காணும் ஒருமைப் பாட்டுணர்வும், நாட்டிற்காகத் தன்னையே ஒப்படைக்கத் தயங்காத தியாக மனப்பான்மையும் கொண்டு, நம்பிக்கைக்குரிய இனமாகத் தமிழ்இனம் மலேசியாவில் வாழ்கிறது. உலகின் மற்ற எந்த நாட்டுத் தமிழர்களையும் விட, மகிழ்ச்சியோடும் நலத் தோடும் வாழ்வோர் மலேசியத் தமிழர்களே என்று கூறலாம்.

# 6.1

# நாடும் மக்களும்

இன்றைய சிங்கப்பூரை, நாம், ''சிங்கா வண்புகழ்ச் சிங்கபுரம்''[1] எனும் இளங்கோவடிகளின் வாக்காலேயே சுட்டலாம். ஏனெனில்,இன்றைய சிங்கப்பூரும், 'அழியாத வளமார்ந்த புகழை'யுடையதாக விளங்குவதனால், இளங்கோவடிகளின், சொற்சித்திரம், இன்றைய தென்கிழக்கு ஆசியாவில் உள்ள சிங்கப்பூருக்கும் பொருந்துவதாகும்.

சிங்கப்பூர் ஒரு பெரிய தீவாகும். இதன் நீளம் 30 கி. மீ.(26 மைல்); அகலம் 16 கி. மீ (14 மைல்); சுற்றளவு 250 கி. மீ. (210 மைல்) பரப்பளவு 480 ச.கி. மீ (370 சதுர மைல்). இத் தீவோடு நாற்பது சிறு சிறு தீவுகளும் அதைச் சுற்றியுள்ளன. அவையாவும் சிங்கப்பூருக்கே உரிமையுடையன. அச்சிறு தீவுகளில் முக்கியமானவை புலவ்டேகாங், புலவ்யூபின், சந்தோஷா புலவ்பூகாம் முதலியனவாகும். இச்சிறு தீவுகளில் பதினைந்து ஆயிரத்திற்குக் குறைவான மக்களே வாழ்கின்றனர். ஆனால், சிங்கப்பூரின் மக்கள் தொகை இருபத்தைந்து இலட்சத்திற்கும் மேற்பட்டதாகும்.

---

1. சிலப். 'கட்டுரை' 149 இளங்கோவடிகள் சுட்டும் 'சிங்கபுரம்' கிழக்கு இந்தியாவில் உத்கல (ஒரியா) நாட்டில் இருந்ததாகக் கூறுவர்.

இத்தீவுகளில் தென்னை மரமும்,(செம்)பனைமரமும் மிகுதி. இச்சிறு தீவுகளில் வாழ்வோர், மீன்பிடிப்பதையே முக்கியத் தொழிலாகக் கொண்டுள்ளனர்.

சிங்கப்பூர்த் தீவு, மலேசியத் தீபகற்பத்திற்குத் தெற்கே, நிலவுருண்டையின் நடுக்கோட்டிற்கு வடக்கில் அமைந்துள்ள தீவாகும். சுமத்திரா, போர்னியோ தீவுகளுக்கு இடையில் சிங்கப்பூர்த் தீவு அமைந்து இருக்கிறது. மாபெரும் ஆசியாக் கண்டத்தின் தென்கோடி முனையாகச் சிங்கப்பூர் அமைந்து இருக்கிறது. இந்திய மாக்கடலுக்கும், சீனக்கடலுக்கும் நடுமைய மான நிலப்பகுதியாகச் சிங்கப்பூர் திகழ்கிறது. இதனால், அப் பக்கம் போகும் எல்லாக் கப்பல்களும் சிங்கப்பூர்த் துறைமுகத் திற்குச் செல்லாமல் போக இயலா.

சிங்கப்பூர்த்தீவு,சுங்கவரி விதிக்கப்படாத(Duty Free)த்துறை முகம் (Free Port) ஆகும். இதனால், கிழக்கத்திய நாடுகளுக்கும் மேற்கத்திய நாடுகளுக்கும் இது ஒரு பாலமாக அமைந்து இருக் கிறது எனலாம். இங்கு நடைபெறும் முக்கியத் தொழில் வாணிகப் பொருள்களின் ஏற்றுமதி, இறக்குமதியும், இவற்றிற்கு உதவும் 'இடைத்தரகர்' தொழிலுமாகும்.

உலக விமான, கப்பல் போக்குவரத்துகளின் நடுநாயகமாக இயற்கையாக இதன் அமைப்பு இருக்கிறது. உலகத்தின் ஐந் தாவது பெரிய துறைமுகமாகச் சிங்கப்பூர் போற்றப்படுகிறது.

இதனை ரப்பர், ஈயம் (தகரம்), மிளகு முதலியனவற்றின் 'உலகச்சந்தை' யாகக் கூறுவர். உலகின் எப்பகுதியில் உற்பத்தி செய்யப்படும் எந்தப் பொருளும், சுங்கவரி இல்லாமல் மலிவான விலையில் விற்கப்படுவது சிங்கப்பூரிலே தான்.

சிங்கப்பூரின் பழைய பெயர் 'தாமசிகம்' என்பதாகும். அங்குக் கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டிற்கு முன்னர், வாழ்ந்த மக்கள் பண்டை மலாய்களாகவே இருந்தனர்.

இப்பொழுது, சீனர்களே சிங்கப்பூரில் வாழும் பெருந் திரளான மக்களாவர். இவர்களுக்கு அடுத்த நிலையிலேயே, மலாய் மக்கள் கணிசமான எண்ணிக்கையுடையவராய் உள்ள னர். மூன்றாவதாக உள்ள குடிமக்கள் நம் தமிழர்களேயாவர். இங்குள்ள தமிழர்களின் எண்ணிக்கை, ஏறக்குறைய இரண்டு இலட்சமாகும்.

இவர்கள் அல்லாமல், பாகிஸ்தானியர், அராபியர், ஆப்பிரிக்கர், ஐரோப்பியர் முதலிய மக்களும் சிறுபான்மையராக வாழ்ந்து வருகின்றனர்.

சிங்கப்பூர்த் தீவில், உழவுத்தொழில் செய்வதற்கு நிலமே கிடையாது. அதைச் சுற்றியுள்ள தீவுகள் சிலவற்றில், மிகக் குறைந்த அளவிற்கே வேளாண்மைத் தொழில் செய்யப்படுகிறது.

சிங்கப்பூரையும், மலேசியாவையும் ஜோகூர்பாரு கடற்பாலம் இணைக்கிறது. இதில் புகைவண்டித் தடமும், பேருந்துத் தடமும் உள்ளன.

## 6. 2.

# பெயர் விளக்கமும் பண்டை வரலாறும்

### வரலாற்று நூலின் தொடக்கத்திற்கு முன்னர்

ஏறக்குறைய எண்ணாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், ஆஸ்திரேலியப் பழங்குடி மக்கள் கண்டப்பெயர்வின் விளைவாக, தமது நாட்டைவிட்டு வேறுநாடுகளுக்குக் குடியேறத் தொடங்கினர். அப்பொழுது சிங்கப்பூர் வழியாகச் சென்றார்களாம். இதைப்பற்றிச் சீனாவின் காலவழிச் செய்திக் கோவை ஒன்றில், சில குறிப்புகள் காணப்படுகின்றன. அப்பொழுது, 'தாமசிகம்' எனும் பெயரால் அத்தீவு வழங்கப்பட்டமை தெரிய வருகிறது.

இப்பெயராலேயே, கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டு வரையில் சிங்கப்பூர் குறிப்பிடப்பட்டு வந்தது. வரலாற்றுக் காலத்தின் தொடக்க முதலே, அத்தீவு ஒரு கடற்கரைப் பட்டினமாக இருந்ததாகத் தெரிகிறது.

### பெயர் விளக்கம்

சிங்கம், புரம் எனும் இருவடமொழிச் சொற்களால், இத்தீவின் பெயர் வழங்கி வருகிறது. இவ்விரு சொற்களும் கி. பி. மூன்றாம் நூற்றாண்டு அளவிலேயே, தமிழில் புகுந்துவிட்டன. எனவே, தமிழ்ச் சொற்களாகக் கருதிய தமிழர்களே, இத்தீவிற்கு இந்தப் பெயரைச் சூட்டியதாகக் கூறுவர்.[2]

---

2. சுவாமி சத்தியானந்தர், மலாயாச் சரித்திரம் பக். 16-18

இப்பெயரை விளக்கும் கதையொன்று, மலேசியாவில் கி. பி. 14ஆம் நூற்றாண்டில் வழங்கி வந்ததை ஒரு காலவழிச் செய்திக் கோவை தெரிவிக்கிறது.

ஸ்ரீ விசயப் பேரரச மரபினுள் வந்த ஓர் இளவரசன், நீலோத்தமன் என்பவனாவான். தனக்கென ஓர் இராச்சியத்தை நிறுவ விரும்பிய அவ்விளவரசன், புதியதொரு நிலப்பரப்பைத் தேடிஅலைந்து கொண்டிருந்தான். அப்பொழுது அலைகடலுக்கு நடுவே, ஒரு தீவைக் கண்டான். அங்குச் சென்றான்; அங்கு வாழ்ந்த பழங்குடி மக்கள், அவனை ஆர்வத்தோடு வரவேற்றனர். அக்காலத்தில், அவர்கள் வாழ்ந்த தீவிற்குத் 'தேம்செக்கு' எனும் பெயர் வழங்கியதாகத் தெரிவித்தனர்.

அந்த இளவரசன், அத்தீவினுள் காலை எடுத்து வைத்தவுடன், ஒரு புதுமையான விலங்கைக் கண்டான். அவ்விலங்கின் பெயரை, அப்பழங்குடி மக்களிடத்து அவன் விசாரித்தான். அவர்கள், அந்த விலங்கைச் 'சிங்கம்' என்று சொன்னார்கள்.

அந்த விலங்கு ஓடிய வழியைக் கண்ட அவ்விளவரசன், அந்த நிலப்பகுதிக்குச் 'சிங்கபுரம்' எனும் பெயரிட்டு, அதனையே தன்னுடைய இராச்சியமாக அமைத்துக் கொண்டான். நாளடைவில், 'சிங்கபுரம்' எனும் பெயர், 'சிங்கப்பூர்' என்று திரிந்து வழங்கியதாகக் கூறுவர்[3]

கி. பி. பதின் மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிறகு சீனரும், அராபியரும் இந்தத் தீவைச் 'சிம்மபுரம்' எனும் பெயராலேயே சுட்டியுள்ளனர்.

இந்த இந்து மன்னன் வழி வந்த அரசர், பலர் தொடர்ந்து அங்கு ஆண்டதாகத் தெரிகிறது.

ஆனால், இந்த மரபு வழிக் கதையை மறுப்பவரும் உண்டு, ''சிங்கப்பூரில் 'சிங்கம்' எனும் விலங்கு இருந்ததற்கு யாதொரு சான்றும் இல்லை. எனவே, கி. பி. 15-ஆம் நூற்றாண்டு அளவில், சிக்கந்தர் என்ற மலாக்கா மன்னன் இந்த நாட்டைக் கைப்பற்றி, இந்திய மரபுப்படி சிம்மாசனம் அமைத்து, அதில் அமர்ந்து, முடிசூட்டிக் கொண்டான். அவன், தன் இராச்சியத்திற்குச் 'சிங்கப்பூர்' எனும் பெயரைச்

---

3. Sejarah Malayu or the Annals of Malay, (Tr.) C. G. Brown, introd.

சூட்டினான் என்று இக்கால வரலாற்று ஆசிரியர்கள் கருது கின்றனர்.[4]

'இந்தக் கருத்து உண்மையாக இருக்க இயலுமா?' எனும் ஐயத்தை இக்காலத்திலும் சிங்கப்பூரில் நடத்தப்படும் நடனம் ஒன்று எழுப்புகிறது.

சிங்கப்பூர் அரசமரபினர், முஸ்லீம்களாக (மலாக்கா சுல்தான்களால்) மாற்றப்பட்ட பிறகும், தங்கள் பிறந்தநாள் விழா ஊர்வலத்திலும்,தேசியத் திருநாள் அணிவகுப்பிலும் சீனச் சகோதரர்கள் 'சிங்க நடனம்' ஆடிவருவது, முதல் இடம் பெற்று இருந்ததாக மேற்கு நாட்டு வாணிகப் பார்வையாளர் வியப்புடன் குறிப்பிட்டுள்ளனர்.

இன்று, விடுதலைத் திருநாள் அணிவகுப்பில், 'சிங்க நடனம்' முதன்மை இடம் பெற்று இருப்பதும், ஆழ்ந்து சிந்திக்கத் தக்கதாகும்.

கி. பி. 1252ஆம் ஆண்டுத் தொடங்கி, ஜாவானியரின் படையெடுப்பால் சிங்கப்பூர், பேரழிவுற்றது. தொடர்ந்து நடைபெற்று வந்த வெளிநாட்டவரின் தாக்குதலால், சிங்கை நகர அரசு நலிவுற்றது. நாளடைவில், மலேசியாவில் உள்ள ஜோகூர் சுல்தான்களின் ஆட்சிக்கு அடிமையாயிற்று. அது முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை, அந்தச் சுல்தான்களின் ஆட்சியின் பிடியிலேயே இத்தீவு இருந்து வந்தது. இதனாலேயே, சிங்கப்பூர் மக்களுள் நாற்பது விழுக்காட்டினர், இஸ்லாமியர் களாகவே உள்ளனர்.

---

4. Richard Winsted, The Malayas: A Cultural History PP. 181-182

# 6. 3.

# வெளிநாட்டார் கண்ட சிங்கப்பூர்

ஜாவானியர் படையெடுப்பை ஒட்டி, சிங்கப்பூர் அரசு நலிவுற்றதைக் கண்டோம். இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, ஆற்றல்மிக்கக் கடற் கொள்ளைக்காரர்களின் புகலிடமாக இது, சிறிது காலம் விளங்கியது. சீன வாணிகர்களுக்கும், இந்தியக் கப்பல்களுக்கும், அராபிய வாணிகர்களுக்கும் இந்தக் கொள்ளைக்காரர்கள் கொடுத்து வந்தத் தொல்லைகளை, உயிர் தப்பிச்சென்ற சீன, அராபிய வாணிகர்கள், தத்தம் அரசர்களிடம் முறையிட்ட செய்திகளை, அந்நாடுகளின் காலவழிச் செய்திக் கோவைகளால் அறிய இயலுகிறது.

அராபிய வாணிகர், தங்கள் குறிப்புகளில், இத்தீவினை 'மெய்ட்' (Mait) என்று குறிப்பிட்டு இருப்பதாகக் கூறுவர்.

## மார்க்கோபோலோ கண்ட சிங்கபுரம்

கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில், வெனிஸ் நகர வாணிக யாத்திரிகர், இந்தத் தீவிற்குவந்துள்ளார். ''மலையூர் தீவில் அழகிய நகர் ஒன்று இருக்கிறது. அந்த நகருக்குத் தனிப்பட்ட அரசனும், அந்நகர் மக்கள் பேசும் தனிப்பட்ட மொழி ஒன்றும் உள்ளன'' என்று மார்க்கோபோலோ குறிப்பிட்டுள்ளமை, சிங்கப்பூரைப் பற்றிய செய்தியாக இருக்கக்கூடும் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

# 6. 4.

# அடிமை விலங்கும் விடுதலையும்

கி. பி. 1511ஆம் ஆண்டில், போர்ச்சுகீசியர் மலாக்காவைக் கைப்பற்றினர். மலாக்காவின் சுல்தான் ஜோகூருக்கு ஓடி, அங்குத் தம்முடைய புதிய தலைநகரை அமைத்து, அரசாட்சி செய்யத் தொடங்கினான். அப்பொழுது, அச்சுல்தான் துறை முகமாக விளங்கிய சிங்கப்பூரை நிருவகிக்க, ஒரு தனி அதிகாரியை அமர்த்தியதாகத் தெரிகிறது.

கி. பி. 1819ஆம் ஆண்டில் சிங்கப்பூர், ஜோகூர் சுல்தானுக்கு உரியதாக இருந்தது. அப்பொழுது இத்தீவில் 1000 மக்கள், மீன் பிடித்து வாழ்ந்து வந்தனர்.

1819-ஆம் ஆண்டு, சனவரி 28ஆம் நாள், சிங்கப்பூரின் வரலாற்றில் ஒரு திருப்பு மையமாகும். சர் ஸ்டாம் போர்டு ராபின்ஸ் (Sir Stam Ford Robins) எனும் ஆங்கிலேயர், சிங்கபுரி ஆற்றின் வழியாகச் சிறு கப்பலில் சிங்கப்பூர்த் தீவிற்குள் நுழைந்து, ஆற்றின் கிழ்க்கரையில் இறங்கினார். அச்சமயம் ஏறக்குறைய ஆயிரம் மக்களே, சிறு குடிசைகளில் சிங்கப்பூரின் கடற்கரை ஓரங்களிலும், ஆற்றங்கரையிலும் வாழ்ந்து வந்தனர். மீன்கள், கிழங்குகள், காட்டில் கிடைத்த பழங்கள், கடற் கொள்ளையில் கிடைத்த பொருள்கள் முதலியவற்றை நம்பியே அவர்கள் வாழ்க்கை நடத்தி வந்தனர். நெல்லைப் பயிரிடுதல் சிங்கப்பூரில் அன்றும் இருந்ததாகத் தெரியவில்லை; இன்றும் இருப்பதாகத் தெரியவில்லை.

இந்த ராபின்ஸ், ஜாவாவிலும், பினாங்கிலும் பலவகை நிருவாகப் பொறுப்புகளில் இருந்து, பணியாற்றியுள்ளார். டச்சுக்காரரின் ஆதிக்கத்திற்குட்பட்டு இருந்த ஜாவாவையும், சுமத்திராவையும் எதிர்த்துப் போரிட்டு, அவற்றைப் பிரிட்டிஷாரின் கையகப்படுத்தினான் ராபின்ஸ்.

இந்தக் காலக் கூட்டத்தில், ஜோகூர் சுல்தானின் இரு ஆண்மக்களும் பதவிப் போராட்டத்தில் ஈடுபட்டு இருந்தனர். பிரிட்டிஷாருக்கேயுரிய 'பிரித்தாளும் சூழ்ச்சி' முறையால், சகோதரர்களை மோதவிட்டு, பையப்பைய, அவர்களுடைய இராச்சியத்தைத் தன் கையகப்படுத்தினான் பிரிட்டிஷ் மரபைச் சேர்ந்த ராபின்ஸ்.

இவ்வாறு கி. பி. 1819 முதல், சிங்கப்பூர், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் நேரடி ஆட்சிக்கு மெல்ல, மெல்ல கொண்டுவரப் பட்டது. 1821ல் சிங்கப்பூர், சுங்கவரி விதிக்கப்படாதத் துறைமுகமாக்கப்பட்டது. இதனால், பல நாட்டு வாணிகக் கப்பல்கள் சிங்கப்பூருக்குச் சென்று வந்தன.

காலப்போக்கில், சிங்கப்பூர் துறைமுகம் வளரத்தொடங்கியது. பேரளவில் மலாய் மக்களும், சீனர்களும் அங்குச் சென்று குடியேறத் தொடங்கினர். கி. பி. 1850 அளவில் இந்தியர்கள்—சிறப்பாகத் தமிழர்களும் சிங்கப்பூருக்குச் சென்று குடியேறினர். வளர்ச்சிமிகு துறைமுகமாகப் பிரிட்டிஷார் அதனை மாற்றினர். இதன் விளைவாகக் கீழைத் தேயத்தின் மாபெரும் 'வாணிக நகரமாக'ச் சிங்கப்பூர் செழித்து வளர்ந்தது.

கி.பி. 1828-ஆம் ஆண்டு, சிங்கப்பூர்த் தீவைப் பினாங்கோடும் மலாக்காவோடும் இணைத்து 'பினாங்கு மாநிலம்' என்பதை ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனி உருவாக்கியது. இதனால், 'பினாங்கே' தலைநகரமாயிற்று. ராபர்ட் புல்டன் என்பவன் பினாங்கின் ஆளுநராக அமர்த்தப்பட்டான். இவன், இந்தியாவின் கவர்னர் ஜெனரலின் தலைமையின் கீழ்ப்பணியாற்ற வேண்டியவனாக விளங்கினான். இந்திய அரசின் மேற்பார்வையிலேயே, பினாங்கு மாநில ஆட்சி நடைபெற்று வந்தது.

கி. பி. 1836ஆம் ஆண்டில், சிங்கப்பூருக்கு ஓர் ஆளுநர் அமர்த்தப்பட்டார். 1867ல் இந்திய கவர்னர் ஜெனரலின் மேலாதிக்கம் நீக்கப்பட்டது. இதனால், சிங்கப்பூர் நிருவாகம். பிரிட்டிஷ் அரசின் நேர் மேற்பார்வைக்கு வந்தது. கடல் வாணிகச் செழிப்பால், சிங்கப்பூர் பொன்கொழிக்கும் செல்வத் திருநகராக மாறியது. உலக வாணிகச் சந்தைகளில் ஒன்றாக அது பொன்றாப் புகழைப் பெற்றது.

இரண்டாவது உலகப்போரில் அது ஜப்பானியரின் ஆட்சிக்குட்பட்டது. சிங்கப்பூர் சரணடைந்தது குறித்து, அன்றைய பிரிட்டிஷ் பிரதமர் சர்ச்சில் ''பிரிட்டானியப் பேரரசின் வரலாற்றில், சிங்கப்பூரின் சரணாகதி மாபெரும் மானக்கேடான செயல்'' என்று பிரிட்டிஷ் வானொலியில் ஓலமிட்டார்.

நேத்தாஜியின் மேற்பார்வையில், ''இந்தியாவை மீட்க'' சிங்கப்பூரில் இந்திய தேசியப் படை (I. N. A.) திரட்டப்பட்டது.

1945-ஆம் ஆண்டு, ஆகஸ்டு பத்தாம் நாள், ஹிரோஷிமா, நாகசகி அணுக்குண்டு வீச்சின் விளைவாக ஜப்பான் தோல்வியுற நேர்ந்தது. 5-9-1945இல் மவுண்ட் பேட்டன் பிரபுவின் தலைமையில், பிரிட்டிஷ் படை சிங்கப்பூரைத் திரும்பக் கைப்பற்றியது. 12-9-1945இல் ஜப்பானிய தளபதி சரணடைந்தார். மீண்டும், சிங்கப்பூரில் பிரிட்டிஷாரின் யூனியன் ஜாக் கொடி, பறக்கவிடப்பட்டது.

இந்தியாவின் விடுதலையை யொட்டி, ஆசிய நாடுகள் பல சுதந்திரம் பெறத் தொடங்கின. இதன் விளைவாக 15-8-1949 அன்று, சிங்கப்பூரும் மலேசியாவும் விடுதலை பெற்றன.

மலேசியா கூட்டாட்சி அமைப்பு 31-8-1957 அன்று உருவாயிற்று. அதில் சிங்கப்பூரும், பினாங்கு தீவுகளும் சேர்ந்து ஓரரசு நாடாயிற்று.

மலேசியா கூட்டாட்சிக்கு எதிராக இந்தோனேசிய அதிபர் டாக்டர் சுகர்னோ அச்சுறுத்தத் தொடங்கினார்; படையெடுக்கவும் செய்தார். 1963 செப்டம்பர் முதல் 1965 மே மாதத்திற்குள், சிங்கப்பூரில் இந்தோனேசிய கலகக்காரர்களான பயங்கரவாதிகள், பல குண்டுவீச்சு நிகழ்ச்சிகளைத் தலைமறைவாகச் செய்தனர்.

கருத்து வேற்றுமை காரணமாக, மலேசியா கூட்டரசில் இருந்து, சிங்கப்பூர், 1965ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதம் ஒன்பதாம் நாள், தனியரசு நாடாகப் பிரிந்து போயிற்று. இப்பொழுது, சிங்கப்பூரில் பாராளுமன்ற சனநாயக ஆட்சி நடைபெற்று வருகிறது.

அதன் பாராளுமன்றத்தில், ஆங்கிலம், மலாய், சீனம், தமிழ் எனும் ஐந்து மொழிகளும் ஆட்சி மொழிகளாக உள்ளன. பாராளுமன்றக் கட்டடத்தின் முகப்பு வாயிலில் ''பாராளுமன்றம்'' எனும் தமிழ்ப் பெயரும் கவர்ச்சிமிகு எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளமை இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

## 6. 5.

## பினாங்கு

பினாங்கு (panang) எனும் சிறு தீவு, சிங்கப்பூரை யொட்டி உள்ளதாகும். பினாங்கின் நீளம் 18 கி. மீ; அகலம் 12 கி. மீ.; இதன் பரப்பளவு 216 ச. கி. மீ. எனவே, இது மிகச் சிறிய தீவு என்பது தெளிவாகிறது.

'பினாங்கு' எனும் மலாய் மொழிச் சொல்லிற்குப் 'பாக்கு' என்பது பொருள். பாக்குமரங்கள் நிறைந்த தீவே, 'பினாங்கு' எனும் பெயருக்குப் பொருளாகும். இதனுடைய பண்டை வரலாறு ஒன்றும் நமக்குத் தெரியவில்லை.

மலேசியாவின் முக்கிய துறைமுகமான பினாங்கு, ஒரு சிறிய தீவாகும். இதனுடைய வரலாற்றோடு, சிங்கப்பூரின் வரலாறும் பின்னிப் பிணைந்து உள்ளதால், சிங்கப்பூருக்கு அடுத்த நிலையில், இதன் வரலாற்றைக் காண்போம்.

கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டு அளவில் இத்தீவு கெ(ட்)டா சுல்தானுக்கு உரியதாக இருந்தது என்பதை அராபிய வாணிகரின் குறிப்பேடுகளால் அறிகிறோம்.

இதனை ஆங்கிலேயருக்காக, அந்தச் சுல்தானிடம் இருந்து விலை கொடுத்து, பிரான்சிஸ் லைட் என்பவர் 1763ல் வாங்கினார்.

'கெ(ட்)டா' எனும் இடத்தில், அவர் ஓர் ஆலையைத் தொடங்கினார்; கி. பி. 1771-ஆம் ஆண்டில், பினாங்கை, ஆங்கிலேயருக்குரிய சிறப்புமிகு துறைமுகமாக்கினார். பிறகு, அவர், இத்துறைமுகப் பட்டினத்திற்குத் தலைவராக இந்திய

கவர்னர் ஜெனரலால் நியமிக்கப்பட்டார். அப்பொழுது இந்திய வீரர் 300 பேருடன், அவர் பினாங்கிற்கு வந்ததாகத் தெரிகிறது. கி. பி. 1786ல், ஆங்கிலேயர்க்குப் பினாங்கு குத்தகைக்கு கெ(ட்)டா சுல்தானால் விடப்பட்டது.

## மக்கள்

பினாங்குத் தீவு, காடுகெடுத்து நாடாக்கப்பட்டவுடன், சோலியா (சோழியா) முஸ்லீம்கள் பேரெண்ணிக்கையில் குடியேறினர். பின்னர் சீனர்களும், ஐரோப்பியர்களும் வந்தேறினர். 'சோலியா' என்பது சோழமண்டலக் கடற்கரைக்கு வழங்கிய பெயர்.

தமிழ் நாட்டில் நாகப்பட்டினம் முதல் கீழ்க்கரை வரையிலும் முசிறி, தொண்டி ஆகிய பகுதிகளிலும் வாழ்ந்து வந்த தமிழக முஸ்லீம்களே, முதலில் பினாங்கில் குடியேறினர். அவர்களையே 'சோலிய முஸ்லீம்கள்' என்று அராபியரும் சீனரும் சுட்டினர்.

## விளை பொருள்கள்

இங்கு மிளகு, ஜாதிக்காய், இலவங்கம் முதலியவற்றை அம் மக்கள் பயிரிட்டனர். பிரம்பு, அபின் முதலியனவும் இங்குப் பேரளவில் பயிரிடப்பட்டன. இதன் விளைவாகச் செல்வச் செழிப்பு உண்டாயிற்று. இதைக் கண்டு பொறாமை கொண்ட கெ(ட்)டா சுல்தான், டச்சுக்காரர்களின் தூண்டுதலால், விளை பொருள்களில் பாதிப் பங்கினைத் தனக்குக் கொடுக்க வேண்டும் என்று கேட்டான். அதற்கு ஆங்கிலேயர் இணங்கவில்லை. மேலும் வற்புறுத்தினால் ஆங்கிலேயர்கள் தாக்குவார்களே, என்று அஞ்சி சுல்தான் 'சும்மா' இருந்து விட்டான்.

கி. பி. 1796ல் அந்தமான் கைதிகள் 700 பேர், இங்கு அடிமைகளாகக் குடியேற்றப்பட்டனர்; தோட்டப்பயிர்த் தொழிலாளிகளாக மாற்றப்பட்டனர். கி.பி. 1805ல், இத்தீவு, ஒரு மாநிலமாக மாற்றப்பட்டது. கி. பி. 1826-ஆம் ஆண்டு சிங்கப்பூருக்கும், மலாக்காவுக்கும் பினாங்கே, தலைநகரமாக்கப்பட்டதை முன்னரே கண்டோம். 1867 முதல், இந்திய கவர்னர் ஜெனரல் ஆட்சியிலிருந்து, பிரிக்கப்பட்டு, பினாங்கு தனி நிருவாகத்தின் கீழ்க் கொண்டுவரப்பட்டது.

காப்டன் லைட், பினாங்குத் தீவில் கரை இறங்கிய பகுதிக்கு 'எஸ்பிளனேட்' என்பது பெயர். அப்பகுதியில் பண்டைக்காலக்

கோட்டைக் கொத்தளங்களையும், கொடி மரத்தையும், பண்ட சாலையையும் இன்றும் காணலாம்.

மலேசியரோடு, இந்தியரும், சீனரும், பினாங்குத் தீவில் குடியேறினர். இந்தியர் சிறப்பாகத் தமிழர், வாணிகத்திலும் வட்டிக் கடையிலும் ஈடுபட்டனர். ஏழை எளியவராக இருந்த தமிழ்மக்கள்,தோட்டத் தொழில் கூலிகளாக வேலை செய்தனர்.

தஞ்சையில் இருந்தும், இராமநாதபுரம், செட்டிநாட்டுப் பகுதிகளில் இருந்தும், பினாங்கில் குடியேறியவர், அத்தீவின் வளர்ச்சிக்காகவும், மேம்பாட்டிற்காகவும் அரும்பாடுபட்டனர். 1934ல், பினாங்கில் 'இந்தியச் சங்கம்', 'செந்தமிழ்ச் சங்கம்" முதலிய அமைப்புகளைத் தோற்றுவித்து, அவற்றின் வளர்ச்சிக்காக வே. நடேசபிள்ளை என்பவர் அரும்பாடுபட்டார். ஏறக்குறைய, இதே ஆண்டில், நாட்டுக் கொட்டைச் செட்டியார் சங்கமும் இங்குத் தொடங்கப்பட்டது.

இத்தகைய அமைப்புகள்,தமிழருடைய நலத்தைப் போற்றிக் காக்கவும், தமிழ்ப் பண்பாட்டைப் பேணி வளர்க்கவும் சிறப்பு மிகு பணிகள், பலவற்றைச் செய்து வருகின்றன.

# 6. 6.

# சிங்கப்பூர்க் கோயில்கள்

தமிழர்கள் குடியேறி வாழும் சிங்கப்பூர், பினாங்கு பகுதிகளில், பல இந்துசமயத் தெய்வங்களுக்குக் கோயில்கள் எழுப்பப் பட்டன. அவற்றுள் முதன்மையானவை சித்திவிநாயகர்கோயில், தண்டாயுதபாணி கோயில், நரசிம்மப் பெருமாள் கோயில், மாரியம்மன் கோயில் முதலியனவாகும்.

## விநாயகர் கோயில்

சித்திவிநாயகர் கோயில், பொன்னம்பல சுவாமிகள் எனும் சான்றோரின் முயற்சியால் கட்டப்பட்டது. நகரத்துச் செட்டிமார்களின் திருப்பணியால், இக்கோயில் இன்று சிறப்புற்று விளங்குகிறது.

## முருகன் கோயில்

சிங்கப்பூரில் உள்ள கோயில்களுள் பெரும்புகழ் வாய்ந்தது தண்டாயுதப்பாணியின் திருக்கோயிலாகும். இக்கோயில் நூற்று முப்பது ஆண்டுகளுக்கு முன்னர்,நகரத்தாரால் எழுப்பப்பட்டது. இக்கோயிலில் பரிவார தேவதைகளான விநாயகர், மீனாட்சி சுந்தரேசுவரர், நவகிரகங்கள், வைரவர் முதலிய தெய்வங்களின் சன்னதிகளும் உள்ளன.

பலவகைச் சமயத்தினரும், நாள்தோறும் இக்கோயிலுக்கு வந்து வழிபாடு செய்கின்றனர்.

தைப்பூசத் திருநாளும், கார்த்திகைத் திருநாளும் பங்குனி யுத்திரமும் கோலாகலமாக இக்கோயிலில் கொண்டாடப்படு கின்றன. ஆயிரக்கணக்கான காவடிகள், தைப்பூசத் திருநாளில் பக்தர்கள் கொண்டுவந்து முருகனுக்குச் செலுத்துகின்றனர்.

நவராத்திரியின் பொழுது, இம் முருகன் கோயிலில், கலை விழா சிறப்புடன் கொண்டாடப்படுகிறது.

## திருமால் கோயில்

தமிழ் நாட்டு வைணவர்கள் சிங்கப்பூரில் நரசிம்மப் பெருமாள் கோயிலை நூற்றுப்பத்து ஆண்டுகட்கு முன்னர் எடுப்பித்துள்ளனர். இது சிங்கப்பூரில், சிராங்கூன் சாலையில் காணப்படுகிறது. அக்கோயிலில் உள்ள திருமாலின் திருமேனி, பழைய காலத்துச் சிலை; பல்லவர் கலைப்பாணியின் சாயலை அதில் காணுகின்றோம். வீடுகட்டுவதற்கு வீட்டுமனை ஒன்றைத் தோண்டியபோது கிடைத்த சிலை இது. சிங்கை வாழ் தமிழ் மக்கள், கிருஷ்ண ஜெயந்தியையும், ஏகாதசியையும் மிகச் சிறப்பாக இக்கோயிலில் கொண்டாடி வருகின்றனர். புரட்டாசி மாதம், திருப்பதி வேங்கடேசப் பெருமாளுக்கு நடத்தப்படும் விழாக்கள் யாவும், இங்குப் பெரும் பக்தியுணர்வோடு நடத்தப் படுகின்றன.

## மாரியம்மன் கோயில்

தமிழ் மக்களுள் பெருவாரியாக இங்கு வாழும் தொழிலாளர் கள். மாரியம்மனுக்கு ஒரு பெரிய கோயிலைக் கட்டி யுள்ளனர். இது கி.பி. 1828ல், அரசாங்கத்தின் உதவியோடு கட்டப்பட்டது. அன்னை பராசக்தியை, 'மாரியம்மன்' எனும் திருப்பெயரால் இக்கோயிலில், மக்கள் வழிபடுகின்றனர். இக் கோயிலில் தலைமைத் தெய்வமாகிய சக்தியோடு, விநாயகர், முருகன், திரௌபதி அம்மன் முதலிய பரிவாரத் தெய்வங்களுக் குச் சிறு சிறு சன்னதிகளும் உள்ளன.

## தீமிதிப்பு

திரௌபதி அம்மன் திருவிழா ஆண்டுதோறும், ஆடிமாதத் தில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. அவ்விழாவில், 'தீமிதித்தல்' விழா, மிகச் சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது. தீமிதித்தல் திருவிழா, சிங்கை வாழ் தமிழ் மக்களின் தேசியத் திருவிழாவாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. எல்லாச் சமயத்தவரும் இவ்விழாவில் பங்குபற்றுகின்றனர். ஏராளமான வெளிநாட்டார், இக்கவின்மிகு காட்சியைக் கண்டு, களிக்கின்

றனர். இம்மாரியம்மன் கோயிலின் தலைவாயிலைச் சிற்பக் கலை நயம் வாய்ந்த ஓர் இராசகோபுரம் அணிசெய்கிறது.

## இராமகிருஷ்ண மடம்

சிங்கப்பூரில், நாரிஸ் சாலையில் மாபெரும் மண்டபத்தோடு கூடிய இராமகிருஷ்ண மடம் ஒன்று வீறுடன் விளங்குகிறது. கலை, கல்வி, பண்பாடு, சமூகசேவை முதலிய துறைகளில் இம்மடம் அரிய பணியாற்றிவருகிறது. சாரதாதேவி தமிழ்ப் பள்ளிக்கூடம் ஒன்று இங்கு, இந்த மடத்தால் நடத்தப்பட்டு வருகிறது. இதே, மடம், வேறோர் இடத்தில் கலைமகள் பள்ளி யையும் நடத்தி வருகிறது. இவ்விரு கல்விக்கூடங்களும், சிங்கை வாழ் தமிழ் மக்களின்—இந்திய மக்களின் தொடக்கக் கல்விக்குப் பேருதவியாக உள்ளன.

## பினாங்கு தண்ணீர்மலை ஆண்டவர் கோயில்

சிங்கப்பூரோடு தொடர்புடைய பினாங்கு, தண்ணீர் மலை எனும் இடத்தில், அடிவாரத்தில் ஒரு கோயில் இருக்கிறது. அக் கோயில் 1857ஆம் ஆண்டு, நகரத்துச் செட்டிமார்களால் நிறுவப் பட்டது. இக்கோயில் தமிழகத்துப் பழனி மலையில் இருப்பதைப் போன்ற அமைப்பினை உடையது. இந்தக் கோயிலும் முருக னுடைய—தண்டாயுதபாணியினுடைய திருக்கோயிலேயாகும். இக்கோயிலிலும் வேறு சில தெய்வச் சன்னதிகள் உள்ளன.

இங்கும் தைப்பூசத் திருவிழா மிகச் சிறப்பாகப் பேரார்வத் துடன் நான்கு நாட்கள் கொண்டாடப்படுகிறது. இக்கோயிலின் உற்சவமூர்த்திக்கு, வைரக்கவசம் போன்ற விலைமதிப்புமிக்க அணிகலன்கள் பல உள்ளன. இத்திருவிழாவில், தமிழ இந்துக்கள் மட்டும் அல்லாமல், பிற மொழி பேசும் இந்துக்களும், அந்நாட் டுப் பழங்குடி மக்களும் கலந்து கொள்ளுகின்றனர்.

இக்கோயில்கள் யாவும், தமிழ்ப் பண்பாட்டை, சிறப்பாகச் சமயவழிப்பட்ட பண்பாட்டைப் போற்றிவளர்த்து வருகின்றன. கோயில்கள், திராவிடச் சிற்பக் கலையின் மாட்சியை அலைகடல் களுக்கு அப்பாலுள்ள நாட்டு மக்களுக்குப் புலப்படுத்திய வண்ணம் வீறுடன் விளங்குகின்றன. மற்றும், தமிழகக் கலைகள் இக்கோயில்களின் மூலம் போற்றி வளர்க்கப்படுகின்றன.

## 6. 7.

# சிங்கப்பூரில் தமிழும் தமிழரும்

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில், மலேயாவின் வரலாற்றுக் குறிப்பேடுகள், சிங்கப்பூரைத் 'தாமசகம்' எனும் பெயரால் சுட்டியுள்ளன. மலாக்காவில் பரமேசுவரன் எனும் இந்திய (தமிழ) அரசன் ஆளத் தொடங்கிய கால முதல் சிங்கப்பூரிலும் தமிழ்ப்பண்பாட்டின் ஊடுருவலைக் காண முடிகிறது. இஸ்லாமிய சமயத்தைத் தழுவிய பிறகும், இந்நாட்டு அரசர்கள் இந்திய (தமிழ)ப் பண்பாட்டு இயல்புகளைப் புறக்கணிக்கவில்லை.

இந்த நாட்டில் மலாய்மொழி, தேசிய மொழியாக இருந்து வருகிறது; அம்மொழி பேசும் மக்கள் இஸ்லாமிய சமயத்தைத் தழுவியவர்களாக உள்ளனர். எனினும், அவர்களுடைய பழக்க வழக்கங்கள், அரசமரியாதைகள், மரபுவழிப்பட்ட சடங்குகள் எல்லாம், பண்டைக்காலத் தமிழர் மரபில் வந்த அந்நாட்டு அரசர்கள் கடைப்பிடித்த நெறிமுறைகளாகவே உள்ளன.

### அரசவைப் பழக்க வழக்கம்

பெரிய அரசியல் தலைவரிடம் (முற்காலத்தில் அரசரிடம்) யாதாவது செய்தி சொல்லுவதற்குச் சென்றால், முதலில் பணிவுடன் வணங்கி, ''அம்போ துவான்கோ'' என்று அதிகாரிகளும், ஊழியர்களும் விளிப்பர், செய்தியைச் சொல்லிவிட்டு, ஏழு அடி, பின்னால் நடந்து சென்று, திரும்புவர்.

'அம்போ துவாங் கோ, என்பதற்கு 'மதிப்பிற்குரிய மன்னவர் வாழ்க!' என்பது பொருளாகும். இதனைச் சிலப்பதிகாரத்தில்

வரும் மாடல மறையோன், செங்குட்டுவனை நோக்கி, ''வாழ்க! எங்கோ மன்னவர் பெருந்தகை'' என்று வாழ்த்திய பகுதியோடு இதனை ஒப்பிட்டுப் பார்த்தால், உண்மை புலனாகும்!

தலைவனை—அரசனை நெருங்கிப் பேச முனைகிறவர்கள், அரசனை, முதலில் வாழ்த்த வேண்டும் என்பது பண்டைத்தமிழ் மரபு. அம்மரபு இன்றும் சிங்கப்பூர், மலாக்கா நாடுகளில் போற்றிப் பின்பற்றப்பட்டு வருகிறது.

விருந்தினரோடு ஏழடி பின் சென்று வழிவிடுவதும், அரசவையில் அரசனுக்கு முன்னர் ஏழடிப் பின் சென்று திரும்புவதும் பண்டைய இந்திய மரபு. இந்தப் பழக்கமும் அங்கு வழக்கில் உள்ளமை, நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.

இந்நாடுகளில் யார் பேரரசனாகப் பட்டத்திற்கு வந்தாலும், அவனுடைய பட்டத்து அரசியைப் 'பரமேசுவரி' எனும் பெயரால் குறிப்பிடும் வழக்கம் இருந்து வந்திருக்கிறது.

### தமிழகத்து முஸ்லீம் பெண்மணி அரசியாதல்

கி. பி. 1400 அளவில், பினாங்கை ஆண்ட முதல் அரசன் ஸ்ரீ பரமேசுவரன் என்பவனாவான் என்பதை முன்னரே கண்டோம். இந்தப் பரமேசுவரவர்மனின் மகன், இசுலாமிய சமயத்தைத் தழுவினான்.

### தமிழரின் செல்வாக்கு

அவன் 'இஸ்கந்தர் ஷா' எனும் புதிய பெயருடன் நாட்டை ஆண்டான். இஸ்கந்தர் ஷாவின் மகன் 'ஸ்ரீமகாராஜா' எனப் பட்டம் சூட்டிக் கொண்டான். அவனுடைய முதல் மனைவி, துன் அலி எனும் தமிழ் நாட்டு வாணிகரின் மகளாவாள். இவளுடைய மகன் முஜாபர்ஷா, 1446 முதல் 1456 வரை மலாக்காவை ஆண்டான். இவனே, முதன் முதல் 'சுல்தான்' எனும் பட்டம் பெற்ற அரசனாவான். இவனுடைய தாயார், ஒரு தமிழ்ப் பெண்மணி என்பது கருதத்தக்கதாகும்.

சிங்கப்பூரில் வாழும் தமிழ் மக்கள் வாழ்க்கையில், பல்வேறு வாய்ப்பும் வசதியும் பெற்றுள்ளனர்; தொழிலில் பேரும் புகழும் பெற்றுள்ளனர். இதற்கு அடிப்படையாக இருப்பது, உந்துதல் சக்தியாக அமைந்து இருப்பது மொழியின் சார்பில்—இனத்தின் சார்பில் பெற்ற உணர்வெனக் கொள்ளுவதே பொருந்தும். ''இந்த உணர்வுகள் அழிந்தால், தமிழனுக்குரிய இச்சிறிய வாழ்வும் அழியும்; முற்றிலும் அழியும். ஏனெனில், ஓர் இனத்தின் வலிமை

அதன் கலை, பண்பாடு, நாகரிகம், ஒற்றுமை ஆகியவற்றிலும், தாய்மொழியிலும்தான் அடங்கியுள்ளது.''[5] தமிழின் வளர்ச்சி குன்றினால், அங்குத் தமிழரின் வாழ்வும் வளமும் குன்றுவது உறுதி.

## தமிழ் முழக்கம்

சிங்கப்பூர் வானொலியிலும், தொலைக்காட்சியிலும் தமிழ் ஒலி பரப்பிற்குத் தனித்தனியான, வசதிமிகு வழித்துறைகள் செய்யப்பட்டுள்ளன.

பல்வேறு கலைக் கருவூலங்களைக் கொண்ட திருநாடு சிங்கப்பூர். அங்கு வாழும் தமிழர்கள்,

''எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காதத் தமிழ் என்று சங்கே முழங்கு''

எனும் முழக்கத்தை, பல்வேறு அமைப்புகள், பத்திரிகைகள், விழாக்கள் மூலம் ஒல்லும் வகையெல்லாம் ஓயாமல் முழங்கி வருகின்றனர்.

## தமிழ்ப் பள்ளிகள்

சிங்கப்பூரின் நான்கு ஆட்சி மொழிகளில், தமிழும் ஒன்று. சிங்கப்பூரில் பல தமிழ்ப் பள்ளிகள் உள்ளன. அவற்றுள் 'உமறுப் புலவர்' உயர்நிலைப் பள்ளியும், 'கலை மகள்' உயர்நிலைப் பள்ளியும் பேரும் புகழும் வாய்ந்தவை.

## தமிழ்ச் சங்கங்கள்

தமிழ் மொழியைப் பேணி வளர்க்கவும், தமிழரிடையே ஒற்றுமை நிலவுமாறு செய்வதற்கும், தமிழோடு தொடர்புடைய பல்வேறு அமைப்புகள் அங்குச் செயல்பட்டு வருகின்றன.

'தமிழர் ஐக்கியச் சங்கம்' என்பது தமிழரின் மேம்பாட்டிற் கும், தமிழைப் பேச்சு, எழுத்து மூலம் வளர்ப்பதற்கும் அரும்பாடு பட்டு வருகிறது.

## சிங்கப்பூர் தமிழ் எழுத்தாளர் சங்கம்

ஏறக்குறைய நூறு எழுத்தாளர்களைக் கொண்டது இச் சங்கம். இளம் எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் வகையில், ஆண்டுதோறும் பொங்கல் திருநாளை யொட்டிப் பலவகைப்

---

5. சோலை இருசன், கிழக்காசிய நாடுகளில் தமிழ் மணக்கிறது, ப. 125

போட்டிகள் நடத்தப்படுகின்றன. இச்சங்கம் வெற்றி பெற்றோருக்குப் பரிசளித்துப் பாராட்டுவதோடு, அப்படைப்புகளை நூல்களாக வெளியிடவும் செய்கிறது.

புத்தக வெளியீட்டகங்கள் சில, அங்கு நல்ல முறையில் பணியாற்றி வருகின்றன. மனோன்மணியம் புத்தக நிலையம், திருவள்ளுவர் புத்தக நிலையம், கலைமகள் புத்தகக் கம்பெனி எனும் மூன்று அமைப்புகளும் தமிழ் நூல்களை வெளியிடுவதிலும், விற்பனையிலும் தலை சிறந்து விளங்குகின்றன.

### நாடக அரங்குகள்

சிறப்புமிகு விடுமுறை நாள்களிலும், தமிழரின் திருநாள்களிலும் புத்தம் புதிய நாடகங்கள் பல, சிங்கப்பூரில் அரங்கேற்றம் செய்யப்படுகின்றன. இந்தியாவில் இருந்து வரும் கலைஞர்களுக்கும், நாடகக் குழுக்களுக்கும் அங்குச் சிறந்த முறையில் வரவேற்பு அளிக்கப்படுகிறது.

### தமிழ் இதழ்கள்

சிங்கப்பூரில், தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்களால் தொடங்கப்பெற்று, ஐம்பது ஆண்டுகளாக நாளிதழாக வெளி வந்து கொண்டு இருக்கும் 'தமிழ் முரசு' ஒல்லும் வகையெல்லாம் ஓயாமல் தமிழ்ப் பணியாற்றி வருகிறது. அது வெறும் நாளிதழ்ச் செய்தித்தாளாக அமையாமல், தமிழுணர்வை ஊட்டும் 'பிரசார பீரங்கி'யாகவும் விளங்குகிறது. வாரந்தோறும், புதிய படைப்பு இலக்கியங்களையும், சிந்தனைக் கட்டுரைகளையும், பட்டி மண்டபப் பகுதிகளையும் தாங்கிவரும் சிறப்பு இதழாக இது திகழ்கிறது. திரு. முரசு பரசுராமன், இவ்விதழின் துணையாசிரியராகப் பணியாற்றிச் சிறப்புற்றவரே ஆவார். மற்றொரு நாளிதழ் 'தமிழ் மலர்' என்பதாகும். இதனை மலேசியத் தமிழ் வள்ளல், திரு. ஆறுமுகம் பிள்ளை தொடங்கி வைத்தார். இவ்விரு இதழ்களும் சிறந்த முறையில் தமிழ்ப் பணியாற்றிவருகின்றன. மலேசியாவில் மட்டும் அல்லாமல், தமிழர் வாழும் ஜப்பான், ஹாங்காங், ஜாவா, சுமத்திரா, தாய்லாந்து, காம்பூச்சியா, வியட்நாம், பர்மா முதலிய நாடுகளிலும் இப்பத்திரிகைகள் ஆர்வத்தோடு, வாங்கிப் படிக்கப்படுகின்றன.

### தமிழர் திருநாள்

1935 முதல், தமிழ் நாட்டில், பல்வேறு சமயங்களைச் சேர்ந்த தமிழ் மக்கள், ஒன்றாக இணைந்து கொண்டாடுவதற்

குரிய திருநாளாக, அறுவடைத் திருநாளான பொங்கலை மாபெரும் விழாவாகக் கொண்டாட வேண்டும் எனும் வேண்டு கோளை விடுத்து வந்ததோடு, அதனை இயன்ற வரையில் 'நான்கு நாள்' திருவிழாவாகவும் தமிழறிஞர்கள் கொண்டாடி வந்தனர்.

1948ஐயொட்டி, தமிழக மறுமலர்ச்சி இயக்கமான திராவிட முன்னேற்றக் கழகம், பொங்கல் திருநாளைத் தமிழர் திருநாளாகக் கொண்டாடத் தொடங்கியதோடு, நாட்டு மக்கள் இடையே, அதை ஓர் இயக்கமாக மலரச் செய்வதற்கு, மக்களை எழுச்சி பெறச் செய்வதறகுப் பலவகை 'பிரசார' முறைகளைக் கையாண்டு வந்தது.

அறிஞர் அண்ணா அவர்களின் எழுத்திலும், இனிய மேடைப் பேச்சிலும் 'தமிழர் திருநாள்' இயக்கம் வீறு கொண்டு எழுந்தது. 'ஒன்றே குலம்! ஒருவனே தேவன்!' எனும் விழுமிய கோட்பாட் டின் அடிப்படையில், தமிழ்த்தேசிய எழுச்சிக்குத் 'தமிழர் திரு நாள்' இயக்கத்தின் மூலம், தமிழ்நாட்டில் பேரறிஞர் அண்ணா வித்திட்டார்.

''ஆரிய கலாச்சார (வருணாசிர தருமம்), முறைப்படி அமைந்த ஆபாச பண்டிகை அல்ல இது! சூதும் சூழ்ச்சியும், வீரத்தை வாட்டி வதைத்ததை விளக்கும் பண்டிகை யல்ல இது! தமிழர் திருநாள், 'பாடுபட்டால் பலன் உண்டு; உழைத்தால் வாழ்வு உண்டு' என்ற வாழ்வியல் கொள்கைக்கு இடமளிக்கும் நாள்! காட்டைத் திருத்திக் கழனியாக்கி, நெற்றி வியர்வை நிலத்தில் சிந்த உழைத்தால், காடுகளை வாய்க்கால்களாக்கி, வயல்கள் அமைத்து, வரம்பிட்டுத் தொகுத்து, உழுது நீர்ப் பாய்ச்சி, களை எடுத்துக் காப்பாற்றி, முதிர்ந்த கதிரை அறுத் தெடுத்து, முற்றத்தில் கொட்டி அளந்து பார்த்து, ஆனந்திக்கும் நாள்! உழைப்பின் பலன் இதுவென உணர்ந்து, மகிழ்ந்து, பொங்கும் மகிழ்ச்சியை எடுத்துக் கூறுவது போல, 'பொங்கலோ பொங்கல்!' என்று தீந்தமிழில் கூவி, தித்திக்கும் பண்டங்க ளுண்டு, பிறருக்கும் பகிர்ந்து கொடுத்து மகிழும் இன்பத் திருநாளே, பொங்கல் திருநாள்!

பொங்கற் புதுநாள், தமிழரின் தனிப்பெருந் திருநாள்! அன்று தமிழர் விழாக் கொண்டாடுவது மட்டும் அல்ல! தமிழகத் தின் நிலைமை பற்றியும் கூடிப் பேசி, மகிழ்ச்சியும் எழுச்சியும் கொண்டாட வேண்டிய நாள்''[6] எனும் அறிஞர் அண்ணாவின்

6. அண்ணாவின் வர்ணனைகள், தொகுத்தவர் 'ஊடுருவி' வள்ளுவர் பதிப்பகம், சென்னை, 1950, பக். 28-30

சொல்லோவியம் 'தமிழர் திருநாளி'ன் மாட்சியைப் புலப்படுத்துவதாகும்.

இந்த எழுச்சிமிக தமிழ்த் தேசிய உணர்வினைச் சிங்கப்பூரிலும் மலேசியாவிலும் பரப்பிய பெருமைக்குரியவர் மூவர். அவர்களுள் முதன்மையானவர் தமிழவேள் கோ. சாரங்கபாணி எனும் தமிழின் மறுமலர்ச்சி இயக்கத் தொண்டராவார். வீடு தோறும் மகிழ்ச்சிப் பொங்க, வீதிதோறும் கலையின் சிறப்பு ஒளிர, ஊர்தோறும் தமிழின எழுச்சி பொங்க அந்தத் திருநாட்டில் 'தமிழர் திருநாள்' இயக்கத்தைத் திட்டமிட்டுத் தொடங்கி வைத்தவர் நம் தமிழவேளேயாவர்.

இன்று, மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் இஸ்லாமியத் தோழரும், கிறித்துவ அன்பர்களும், இந்து சமயத்தவரும் பொங்கல் திருநாள் வருவதற்குப் பல நாட்களுக்கு முன்பே, திட்டமிட்டு, விழாக் குழுக்கள் அமைத்து, பேச்சுப் போட்டியும், எழுத்துப் போட்டியும், இசைப் போட்டியும் நடத்துகின்றனர்.

தமிழர் திருநாளை, நான்கு நாட்கள், தமிழச் சகோதரர்களும், சகோதரிகளும் கைக்கோத்து நின்று, தமிழ்த் தேசியத் திருநாளாகக் கொண்டாடி வருவது வியப்பிற்குரிய செய்தியாகும். மகளிர் சமயவேறுபாடு கருதாது, நாட்டிய நாடகங்கள் எழுதியும், அரங்கேற்றியும், கலை நிகழ்ச்சிகளை நடத்தியும் தமிழரை மட்டும் அல்லாமல், அந்நாட்டு மக்கள் அனைவரையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்துகின்றனர்; அன்பொழுகும் புன்னகை பூத்த மலர் முகத்தோடு விருந்தினரை வரவேற்று, பொங்கல் வழங்கி, 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்,' 'யாதும் ஊரே யாவரும் கேளிர்!' எனும் பொங்கல் திருநாளின் 'நற்செய்தியை' நாடெங்கும் அங்குள்ள தமிழ்ப் பெண்களும் பரப்பி வருகின்றனர். இந்த உணர்வு, தமிழர் வாழும் உலகின் பல்வேறு பகுதிகளிலும் பரவி வருகிறது.

இந்த இயக்கத்தை மலேசியாவில் தொடர்ந்து வளர்த்தவர், 'தமிழ் நேசன்' ஆசிரியரான முருகு. சுப்பிரமணியன் ஆவார். 'முத்தமிழ் வித்தகரான' முருகு சுப்பிரமணியனார், தமிழின மறுமலர்ச்சி இயக்க உணர்வை, அந்நாட்டில் அயராது பரப்பி வரும் 'பெருந்தமிழர்' ஆவார்.

மலை நாட்டில் தமிழ்த்தொண்டுடன், சமயத் தொண்டும், சமூகத் தொண்டும் ஆற்றிவரும் சான்றோர் 'மகாகவி' இராமதாசர் என்பவராவர். இயலும் வழிகளில் எல்லாம், ஓயாது தமிழுணர்வைப் போற்றி வளர்த்தும், தமிழ்ப் பண்பாட்டைப்

பேணி காத்தும் வருகின்ற பெரியார் இராமதாசரின் திருப்பணி, ஒப்புயர்வற்றதாகும்.

மலேசியாவிலும், சிங்கப்பூரிலும் தமிழ் வாழ்கிறது; வளர்கிறது; எங்கும், எதிலும் தமிழ்மணம் வீசுகிறது! அங்கு வாழும் தமிழ் மக்களின் எண்ணத்தில் எழுச்சியையும், இதயத்தில் மலர்ச்சியையும் உண்டாக்குவது தமிழுணர்வேயாகும்.

# 7, 1, இந்தோனேசியாவின் அமைப்பு

தென்கிழக்கு ஆசிய நாடுகளுள், முதலில் பர்மாவிலும், அடுத்துத் தாய்லாந்திலும் தமிழ்ப்பண்பாடு பெற்ற செல்வாக்கைக் கண்டோம். அடுத்து, 'இந்தோசீனா' எனும் தொகுதிப் பெயரைக் கொண்ட பகுதியில் உள்ள சில நாடுகளில் இடம் பெற்றுள்ள தமிழ்ப் பண்பாட்டின் தாக்கம் ஒரு பறவைக் கண்ணோட்டத்தில், முந்தைய இயல்களில் விளக்கப்பட்டது. பின்னர், மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் தமிழ்ப் பண்பாட்டின் செல்வாக்கைக் கண்டோம்.

அடுத்து, இந்தோனேசியாவின் நாகரிக வளர்ச்சியில், தமிழ்ப் பண்பாட்டின் தலைமைக் கூறுகள், எவ்வாறு உந்துதல் சக்திகளாக அமைந்தன என்பதைப் புரிந்துகொள்ள முயலுவோம்.

இந்தோனேசியா ஒரு நாடு அன்று. அது பல தீவுகளின் தொகுதி. அதில் ஆயிரக்கணக்கான, தீவுகள் அடங்கியுள்ளன. நிலமும் நீரும் கலந்த ஒரு புதுவகையான நாட்டமைப்பு எனக் கூறினால், அது தவறாகாது.

## இந்தோனேசியாவில் உள்ள தீவுகள்

பொதுப்பெயரால் 'இந்தோனேசியா' எனச் சுட்டப்படும் நாட்டில், ஏழுவகை நிலப்பரப்புத் தொகுதிகள் உள்ளன. அவை:

(1) ஜாவா (சாவகம்), சுமத்திரா, போர்னியோ, செலிபசு, பெரிய சுந்தா என்பன முதல் தொகுதி.

(2) சிறிய சுந்தா,

(3) மொலூக்கஸ்,

(4) நியூகினி அல்லது இரியன்

(5) கலிமெண்டான்

(6) பாலேம்பேங்கு, 'ஹோலிங்' எனப்படும் கலிங்க இராச்சியம், ஜங்கள கேதிரி

இவற்றுக்கெல்லாம் தென்கிழக்குப் பகுதியில் உள்ள

(7) பிலிப்பைன் தீவுகள். இவை ஏறக்குறைய மூவாயிரம் கி. மீ. அளவிற்குப் பரந்துபட்டுள்ளன.

இப்பகுதிகளில் வெவ்வேறு காலக்கட்டத்தில் தமிழ்ப் பண்பாட்டின் பல்வேறு கூறுகள், செல்வாக்குப் பெற்றுள்ளன.

## நில்வமைப்பு

தென்கிழக்காசியாவின் தென்கோடியிலுள்ள ஒரு குடியரசு நாடு இந்தோனேசியா. முன்பு டச்சுக்காரர்களுடைய ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. அப்பொழுது 'டச்சு இந்தியத் தீவுகள்' என்பது பெயராகும். இரண்டாவது உலகப்போரின்போது ஜப்பானியரால் இந்நாடு கைப்பற்றப்பட்டது; போருக்குபின்னர் (1945-ல்) இந்நாடு வெளிநாட்டவரின் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றது; 1951ல் குடியரசு நாடாகியது.

ஆசியாவின் தென்கோடியையும், கீழ்க்கோடியையும் இது தழுவிநிற்கிறது. ஒரு பக்கம் ஆஸ்திரேலியாவின் மாவடை, (Fauna), மரவடை (Floar)களையும் மற்றொரு பக்கம் ஆசிய இயற்கை அமைப்பையும், மாவடை, மரவடைகளையும் கொண்டதாக இந்தோனேஷியா விளங்குகிறது.

இது மலேயா தீவுக்கூட்டத்தின் ஒருபகுதி. ஜாவா(சாவகம்), சுமத்திரா, மதுரா, போர்னியோ, டைமோர், பாப்புவா, செலிபஸ்,மோலக்கல், பாலி, விஹோரில், லாம்போக்கு முதலிய பெரியதும் சிறியதுமான இரண்டாயிரம் தீவுகள் சேர்ந்து, இத்தீவுக் கூட்டம் அமைந்துள்ளது. இவற்றை இந்தியத் தீவுக்குழு (Indian Archipelago). மலேயாத் தீவுக்குழு (Malay Archipelago), கிழக்கிந்தியத் தீவுகள் (East Indies) என்பன போன்ற, பல பெயர்களால் அறிஞர்கள் குறிப்பிட்டு வந்தனர்.

## பெயர் விளக்கம்

உலக நடுக்கோட்டின் வட்டத்தில் பூவுலக வெப்ப மண்டலத்தில், ஆசிய, ஆஸ்திரேலியாக் கண்டங்களின் சிறப்புமிக்க நிலப்

பகுதிகளுக்கு இடையே, படர்ந்து பரவிக் கிடக்கும் தீவுகளின் கூட்டம் இது; வளமிக்கது மட்டும் அன்று; அதிகமான வெப்பம் உடைய எரிமலைகள் நிறைந்த நாடாகத் திகழ்வது இந்தோனேசியா.

ஜெர்மானியரே, நான்கு நூற்றாண்டுகளுக்கு முன்பு, இந்த நாட்டை, 'இந்தோனேசியா' எனும் பெயரால் சுட்டினர். இந்தச் சொல்லிற்கு 'இந்தியத் தீவுகள்' என்பது பொருளாகும். யாதோ ஒருவகையில் இந்தியாவோடு தொடர்புடையதாக, இந் நாட்டை, அவர்கள் கருதினர்.

ஆனால், இந்தோனேசியர்கள், தங்கள் நாட்டை, 'நுசான்டரா எனும்பெயராலேயே குறிப்பிட்டு வருகின்றனர். இப்பெயருக்குத் 'தீவுக்கூட்டம்' என்பதே பொருள். இந்தத் தீவுகளில் மிகப் பெரியது 'கலிமண்டான்' என இப்பொழுது பெயர்பெற்றுள்ளது. இதனுடைய பழைய பெயர் 'செலிபஸ்' (Celebes) என்பதாகும்.

## நாடும் மக்களினமும்

இந்தோனேசியா, ஆசியாவீன் தென்கோடியையும் தழுவி நிற்கிறது. தென்கிழக்கு ஆகியாவின் செழிப்புமிக்க நாடுகளுள், முதன்மையானது இந்தோனேசியா, மலேயா தீபகற்பத்தின் மேற்கேயுள்ள சுமத்திராவில் இந்நாடு தொடங்குகிறது. சுமத்திராவை, மலாக்கா நில இடுக்கு மலேயாவிலிருந்து பிரிக்கிறது. சுமத்திராவை அடுத்துள்ள ஜாவாவினை, சுந்தா நில இடுக்கு இருவேறு தீவுகளாகப் பிரிக்கிறது. கிழக்கு மேற்காக வளையம் கோத்ததைப்போன்று அமைந்துள்ள பல தீவுகளில் சங்கிலித் தொடரில் முதலாவதாக இருப்பது ஜாவா. அத் தொடரில் பாலி, லாம்போக்கு, சும்பாலா, பிளோர்ஸ் போன்ற தீவுகளும், மற்றும் பல சிறிய தீவுகளும் உள்ளன. அவை இரியன் எனப்படும் நியூகினியா (New- guinea) தீவுகள் வரை நீண்டு இருக்கின்றன. இந்தச் சங்கிலி வரிசைக்குச் சிறிது தெற்குப்புறத்தில் சும்பா, லிமோர் என்ற இரு முக்கிய தீவுகள் உள்ளன.

இதைப்போன்றே, வடக்கிலும் தொடர்ச்சியாகத் தீவுகள்பல உள்ளன. சுமத்திராவின் நடுப்பகுதி வழியாகக் கிழக்கு நோக்கி ஒரு கோடு வரைந்தால் அதற்குச் சற்று வடக்கே, இத்தீவுத் தொடர்கள் அமைந்திருப்பதைக் காணலாம். இத்தொடர் அத்தீவுக் கூட்டத்தின் மிகப் பெரியதான போர்னியோவில் தொடங்கி செலிபசைக் கடந்து மோலுக்கஸ் அல்லது நறுமணப் பொருள் தீவுகள் (Spice-Islands) எனப்படும் சின்னஞ்சிறிய தீவுக் கூட்டங்களோடு முடிவுறுகிறது.

இத்தீவுக் கூட்டங்களுக்கு அப்பால், கிழக்கில் இரியன் எனப்படும் நியூகினியா என்ற பெரிய தீவும், வடக்கில் பிலிப்பைன் தீவுகளும் உள்ளன.

வடக்கேயுள்ள இந்தோசீனாவிலிருந்து இத்தீவுக் கூட்டங்களைத் தென்சீனக்கடல் பிரிக்கிறது. தெற்கே ஆஸ்திரேயாவிலிருந்து தீமோர்கடல், இந்தோனேசியாவை வேறுபடுத்தி விளங்குமாறு செய்கிறது. மேற்கே இந்தியா, ஆப்பிரிக்கா போன்ற நாடுகளின், நிலத்தை அடைகின்ற வரையில் பெரிய நாடுகள் ஒன்றும் கிடையாது. இவற்றுக்கு இடையில், சிறு புள்ளிகளைப்போன்று பல தீவுகள், இங்கும் அங்கும் சிதறுண்டு காணப்படுகின்றன. அவற்றுள் முக்கியமானவை முறையே கிழக்கிலிருந்து அந்தமான், நிக்கோபார், ஸ்ரீலங்கா, மாலத்தீவுகள் இலட்சத்தீவுகள், மடகாஸ்கர் என்பனவாகும்.

இந்தோனேசியாவில் எரிமலைகள் மிகுதி. இந்நாட்டின் பரப்பு இரியன் எனப்படும் டச்சு நியூகினியா உட்பட 7.45, 267 சதுர கி.மீ. களாகும். இதனுடைய மக்கள் தொகை சற்றேறக் குறைய 10 கோடியாகும். இந்தோனேசியப் பகுதி, உலகின் நடுக்கோட்டுப் பகுதியில் அமைந்திருப்பதால், வளமும் கடுமையான வெப்பமும் உடையதாக இருக்கிறது.

மலைப்பகுதிகளில் தொல்பழங்குடி மக்களினத்தைச் சேர்ந்த பழங்குடிகள் (Tribes) வாழ்ந்து வருகின்றனர். நாகரிகத்தில் சிறப்புற்ற மக்களும் இத்தீவுகளில் உள்ளனர். ஆடையின்றிக் காட்டில் திரியும் பழங்குடி மக்கள் முதல், மேலை நாட்டு நாகரிகத்தின் உச்சநிலையை அடைந்து விட்ட 'புதுமை நாகரிக அடிமைகள்' வரையில், பலதிறப்பட்டவர்களாக அவர்கள் வாழ்கின்றனர். ஆனால், அவர்கள் அனைவரும் இக்காலத்தில் இஸ்லாமிய சமயத்தைச் சார்ந்தவர்களாக உள்ளனர். பாலித்தீவின் மக்கள் மட்டும் இந்து சமயத்தைச் சேர்ந்தவர்களாக உள்ளனர்.

## வந்தேறிகள்

இவர்களுள், பெரும்பாலோர், கிறிஸ்துவ நூற்றாண்டின் தொடக்கக்காலத்தில், இந்தியாவிலிருந்து இந்தோனேசியாவிற்கு வந்திருக்கலாம் என்று மானிடவியல் நூலார் (Anthropologists) கருதுகின்றனர். இந்தோனேசிய மக்கள் பேசும் மொழிகள், ஆஸ்திரிக் (Austoric) மொழிக்குடும்பத்தைச் சேர்ந்தவை எனக் கூறுகின்றனர். இந்தியாவின் நடுப்பகுதியில் வாழும் பழங்குடி மக்களான முண்டர்களும் (Mundas) வடகிழக்கு அஸாமைச்

சேர்ந்த காசிகளும் (Khasis) இந்த இனத்தைச் சேர்ந்த மொழிகளைப் பேசுகின்றனர். எனவே, இவர்கள் எல்லோரும் தொல் பழங்காலத்தில் ஓரினத்தைச் சேர்ந்தவர்களாக இருந்திருக்க வேண்டுமென்று ஸ்கிமித் (Schmith) என்ற மானிட இயல் வல்லார் கருதுகிறார். அம்மக்களுடைய தாயகம், இந்தியாவாகவே இருந்திருக்க வேண்டும் என்பதை அவர், தக்க சான்றுகள் காட்டி நிறுவியுள்ளார்.

இந்தத் தொல்பழங்கால வரலாற்றுப் பின்னணியில் இந்தோனேசிய நாடுகளான சுமத்திரா, ஜாவா, போர்னியோ செலீபசு, பாலி போன்றே தீவுகளில் தமிழகப் பண்பாட்டின் தாக்கத்தை அறிய முயலுவோம்.

## பழங்குடிமக்கள்

ஓரளவிற்கு நாசரிகம் பெற்ற பழங்குடி மக்களும். இப்பகுதிகளில் கூட்டம் கூட்டமாக உள்ளனர். சுமத்திராவில் உள்ள படாக்குகள், ஏகினீசியர், கயோக்கள், லாம்போங்குகள் ஆகியோரும், யோர்னியோவில் உள்ள டயக்குகளும், மற்றத் தீவுகளில் உள்ள பழங்குடி மக்களும் இப்பிரிவினைச் சேர்ந்தவர்களாவர். இவர்களையெல்லாம் பழைய மலாய்கள் (Proto-Maloys) என்று மக்கள் இனமரபு நூலார் (Ethnologists) கூறுகின்றனர்.

சுமத்திரா, போர்னியோ ஆகிய தீவுகளின் கடற்கரைப் பகுதிகளில் வாழுகின்ற மலாய்களும், ஜாவாவில் வாழும் ஜாவானியர், மதுரை, பாலி, லம்போக்கு, சுமத்திரா பகுதிகளில் வாழும் மலாய்களும், மலாய் இனத்தைச் சேர்ந்தவர்களேயாவர். செலிபசில் உள்ள பூசிகளும் பிலிப்பைன்சில் உள்ள தகவர்களும் மலாய் இனத்தைச் சேர்ந்தவர்களே யாவர். இவர்கள், எல்லோரும் கி. மு. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, இந்தோனேசியாவில் குடியேறினர். அவர்கள் சீனமக்கள் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பது இங்கு நினைவுகூர்தற்குரியது.

## இயற்கைவளம்

இந்தோனேசியா, நீர்வளமும், நிலவளமும், கடல்வளமும், கனிவளமும் நிறைந்த நாடாகும். ஏலக்காய் முதலிய நறுமணப் பொருள்கள், பவழம், முத்து, ரப்பர், தேயிலை, தகரம், மைக்கா, கல்லெண்ணெய் (பெட்ரோல்) போன்ற பலவகை இயற்கைப் பொருள்கள் இந்நாட்டினை உலகப் புகழ்வாய்ந்த வாணிகத் தலமாகச்செய்துள்ளன.

# 7. 2. 1

## நாடும் மக்களினமும்

சுமத்திரா, மலேயா தீபகற்பத்தின் தென்கோடியிலுள்ள தீவு. போர்னியோவிற்கு அடுத்தபடியாகப் பெரிய தீவு சுமத்திரா. சுமத்திராவின் மக்கள் தொகை, மற்றத் தென்கிழக்காசிய தீவுகளைக் காட்டிலும் மிகக் குறைவு. இது, இந்தோனேசிய நாட்டிலுள்ள ஐந்து பெரிய தீவுகளுள் ஒன்று. இந்தியப் பெருங்கடலில், மலாயா தீபகற்பத்திற்குத் தென்மேற்கில் இத்தீவு இருக்கிறது.

### நிலவமைப்பு

இது மலைப்பாங்கான ஒரு தீவு. மேற்குக் கரை ஓரத்தில் உயரமான எரிமலைகள் பல இருக்கின்றன. தெற்கிலும் பல விழிகளை உடைய எரிமலைகள் உள்ளன. கிழக்கு, தென்கிழக்குப் பகுதிகளில் காடுகள் நிறைந்துள்ளன. பல பெரிய ஆறுகளும் இந்நாட்டில் ஓடுகின்றன. நிலவுலகின் நடுக்கோடு இத்தீவின் நடுவே செல்கின்றது. எனவே, இதனால் இங்கு வெப்பமண்டலத் தட்பவெப்ப நிலை நிலவுகிறது.

இந்தோனேசியாவில் தொடக்ககாலத்தில், இந்தியக் குடியேற்றங்கள் எளிதில் அமைக்கப்படுவதற்குரிய வசதியும், வாய்ப்பும் உடையதாக இருந்தது சுமத்திரா. அதனுடைய நில வியல் அமைப்பு, அதற்கு ஏற்றதாக அமைந்துள்ளமை முதன்மை யான காரணமாகும். சீனாவிற்கும் இந்தியாவுற்குமிடையே யுள்ள கடல்வழியின் மையப் பகுதியில் சுமத்திரா அமைந்து இருப்பதால், அது ஒருவாணிகத் தலமாக வளர்ச்சியுற்றது. அதனுடைய கிழைக்கடற்கரைப் பகுதியில் பண்டைக்காலம்

முதலே துறைமுகங்களும் வாணிகத் தலங்களும் செழித்து வளர்ச்சியுற்றன. பேலம்பாங்குப் பகுதியில், அமராவதிச் சிற்பக்கலை முறையில் செய்யப்பட்ட புத்தர் சிலை ஒன்று கிடைத்திருக்கிறது. அதனால் கி. மு. முதல் நூற்றாண்டு அளவிலேயே, இந்தியக் குடியேறிகள் இந்நாட்டில் குடியேறத் தொடங்கியிருக்க வேண்டும் என்று நாம் கருதஇடமுண்டு.

## இந்தியக் குடியேற்றம்

கி. மு. முதல் நூற்றாண்டில் இந்தியர்கள் சுமத்திராவில் குடியேறியது முதல், அந்நாட்டின் வரலாறு தொடங்குகிறது. பண்டை இந்தியமக்கள் மலாயாத் தீபகற்பத்தைப் பொதுவாகச் 'சொர்ணபூமி' என்று குறிப்பிட்டு வந்தனர். எனினும், பண்டை இந்திய இலக்கியங்கள் பொன்கொழிக்கும் நாடாகிய சுமத்திராவை, 'சொர்ணதீபம்' என்று குறிப்பிடலாயின. பண்டைக்காலத்தில் ஆசிய-ஆப்பிரிக்க நாட்டு மக்கள், இந்நாட்டினைப் பொன்விளையும் நாடாகக் கருதியமை, அராபியருடைய குறிப்புகளாலும், இந்திய இலக்கியங்களாலும் இனிதே புலனாகிறது.

## தமிழன் கண்ட சுமத்திரா

இத்தீவினைப் பண்டைத் தமிழ்மக்கள் நன்கு அறிந்திருந் தனர். எனினும், அவர்கள் 'சுமத்திரா' என்ற பெயரால் அத் தீவினைக் குறிப்பிடவில்லை. சுமத்திரா தீவில் பாலம்பாங்கு என்னும் இடத்தில் சிறப்புற்று விளங்கிய 'ஸ்ரீவிசயம்' என்ற அரசின் பெயரினையே, அந்நாட்டிற்குரிய பெயராகக் கொண்டு போற்றிவந்தனர். அவ்வரசு கி. பி. எட்டாம் நூற்றாண்டு முதல் பதினாறாம் நூற்றாண்டு வரையில் சிறந்து விளங்கியதாகும். இந்த நாட்டினைக் 'கடாரம்' எனச் சுட்டுவது இடைக்காலத் தமிழரின் வழக்கமாகும்.

## பழங்குடி மக்கள்

சுமத்திராவின் பழங்குடி மக்கள், புதிய கற்கால நாகரிகத்தின் தொடக்க நிலையிலேயே இருந்துவந்தனர். அவர்களுடைய மரபிலே வந்தவர்கள், இன்றும் படாக்குகள், எகினீசியர், காயோக்கள், லாம்போக்கள் என்னும் பல பெயர்களையுடைய பழங்குடி மக்களினங்களாக வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் இன்னும் நாகரிக வளர்ச்சி அடையாத பழங்குடி மக்களாகவே இருந்து வருகின்றனர். எனவே, தொல் பழங்காலம் முதல், அந்நாட்டில் குடியேறிய இந்தியர்கள்-சிறப்பாகத் தமிழர்கள் நாகரிகத்திலும் வேறுபல துறைகளிலும் சிறப்புற்று விளங்கி வந்தனர்.

## 7. 2. 2.

## பண்டை வரலாறு

வடக்குச் சுமத்திராவில் சோழர், பாண்டியர், பல்லவர், சேரர் எனும் பெயர்களையுடைய பழங்குடிமக்கள் வாழ்ந்து வருகின்றனர். இவர்களுடைய மூதாதையர் சோழ, பாண்டிய, பல்லவ, நாடுகளில் இருந்து வந்தவராகக் கருதப்படுகின்றனர்.

சுமத்திராவினை ஆண்ட அரசர்கள் சீன நாட்டோடு கி. பி. 450 முதல் 562 வரை நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர், என்று சீனாவின் காலவழிச் செய்திக் கோவைகள் குறிப்பிடுகின்றன. சீனக் குறிப்பேடுகள் அறிவிக்கும், அக்கால அரசர்களின் பெயர்கள் யாவும் இந்திய மன்னர்களின் பெயர்களையே பெரிதும் ஒத்திருக்கின்றன.

கி. பி. 634, 684, 686-ஆம் ஆண்டுகளில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளினால், ஸ்ரீசெயநாகன் என்ற பௌத்த அரசனின் ஆட்சியின் கீழ் ஸ்ரீவிசயம் சீரும் சிறப்புமுற்று விளங்கத் தொடங்கியது. அவ்வமயம் மலாய் (ஜாம்பி, சுமத்திரா) என்ற இடத்தையும், வங்கா (Bangka) என்ற ஊரையும். அணிமையில் இருந்த தீவையும் அந்நாடு தன்னுடன் இணைத்துக் கொண்டது. மேலும், சாவகத்தின் (ஜாவாவின்) மீது படையெடுக்கவும் (கி. பி. 685) அது முயற்சி செய்தது. ஸ்ரீவிசய அரசு பேலம் பாங்கு, தென்கிழக்கு சுமத்திரா முதலிய பகுதிகளைத் தன்னகத்தே கொண்டு பெரும்பாலும் கி. பி. நான்காம் நூற்றாண்டிலிருந்து தனியரசாகவே விளங்கிய போதிலும், ஏழாம் நூற்றாண்டில்தான், அது ஆற்றல்மிக்க வல்லரசாகச் சிறப்புற்றது.

அதனுடைய அரசியல் பெருமை, வாணிகச் சிறப்பு, அங்குக் காணப்பட்ட புத்தசமயக் கல்வியின் செழிப்பு முதலியன வற்றைப்பற்றி அந்நாட்டுக்குச் சென்று சீன யாத்திரிகன் இட்சிங் (Itsing) விரிவாகத் தம் பயணக்குறிப்பேட்டில் எழுதிப் போந்தான். அங்கு கி. பி. ஏழாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் அவன் ஆறு மாதங்கள் தங்கியிருந்தான். அப்பொழுது, அவன் சம்ஸ்கிருத மொழியின் இலக்கணத்தைக் கற்றுக்கொண்டான். ''ஆயிரத்துக்கும் மேற்பட்ட பௌத்த (மகாயான) குருமார்கள் அங்கு வாழுகின்றனர். அவர்தம் உள்ளம் நற்பழக்கங்களையும் கல்வியையுமே நாடுகிறது. மத்திய அரசில் (இந்தியாவில்) உள்ளதைப்போல் அவர்கள் நிலைபேறுடைய பல நூல்களையும் ஆராய்ந்து வருகின்றனர்'' என்று அவன் சுமத்திராவைப் பற்றிக் கூறுகிறான். நாளந்தாப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தரும், காஞ்சிமா நகரில் பௌத்த சமய தத்துவங்களைக் கற்றுத் துறைபோகியவருமான தருமபாலர் சுமத்திராவிற்குச் சென்று வந்ததாகத் தெரிகிறது. கி. பி. 695-க்கும் 742-க்கும் இடைப்பட்ட காலத்தில், ஸ்ரீவிசயம் சீனாவுடன் அரசியல் தொடர்பு கொண்டிருந்ததுடன், 775-இல் மலேயாவையும் வென்று பேரரசை நிறுவியது.

## 7. 2. 3.

## சைலேந்திரப் பேரரசு

சுமத்திரா, ஜாவா முதலிய இந்தோனேசியப் பகுதியில் கி. பி. எட்டாம நூற்றாண்டில், தென்கிழக்கு ஆசியாவின் அரசியல் வானில் புதியதொரு பேரரசு தோன்றியது. அதுவரை இருந்துவந்த பல்வேறு சிற்றரசுகள் மறைந்தன. பல்வேறு தீவு களையும் ஒன்றாகச் சேர்த்து ஒன்றுபட்ட பெரியதொரு பேரரசு நிறுவப்பட்டது.

### தோற்றமும் வளர்ச்சியும்

இவ்வாறு தோன்றிய சைலேந்திரப் பேரரசின் ஆதிக்கத்தில் சுமத்திரா, ஜாவா, போர்னியோ மற்றுமுள்ள பல தீவுகள் உட்பட்டிருந்தன. அப்பேரரசைச் சேர்ந்த மன்னர்கள் மலேசியா விலும் சீனாவின் பேராதிக்கத்தைத் தகர்த்து எறிந்தனர். கி. பி. 770-ஆம் ஆண்டிற்கு முன்பே, மேற்கு ஜாவாவையும் கிழக்கு ஜாவாவையும் அவர்கள் வென்றுகைப்பற்றி இருந்தனர். சைலேந்திரர்கள் சுமத்திராவில் உள்ள பேலம்பாங்கு பகுதியை ஆட்சிபுரிந்து வந்தார்கள் என்றும், பின்னர், பையப்பைய அவர் கள் ஜாவா, மலேசியா பகுதிகளைக் கைப்பற்றி, ஆட்சிபுரியத் தொடங்கினர். என்றும் ஒருசில அறிஞர்கள் கூறுகின்றனர். ஆனால், இக்கருத்து அவ்வளவு வலிவு உடையதாகத் தோன்ற வில்லை. சைலேந்திரர் முதன்முதலாக ஜாவாவிலோ, மலேசியா விலோ ஆட்சிக்கு வந்திருக்கலாம் என்று கருத இடமுண்டு.

### தோற்றம்: ஒரு புதிர்

கி. பி, 775, 778, 782ஆம் ஆண்டுகளுக்குரிய மூன்று மலேசியக் கல்வெட்டுகளும், இரண்டு சாவகக் கல்வெட்டுகளும்

கிடைத்துள்ளன. அவை பௌத்த சமயத்தைத் தழுவிய சைலேந்திர அரச மரபினரால், மலேயா, ஜாவா, சுமத்திரா ஆகிய நாடுகளை ஒரு குடைக்கீழ்க் கொண்டுவரப்பட்டதைக் குறிப்பிடுகின்றன. இறுதியாகக் குறிப்பிடப்பட்ட கல்வெட்டில் 'இந்திர சைலேந்திரன்' என்ற பெயர் காணப்படுகிறது. இதனால் எட்டாம் நூற்றாண்டின் இறுதியில், சைலேந்திரப் பேரரசு நிலைபெற்றிருந்தது என்பது புலனாகின்றது. ஆனால், அதன் தோற்றத்தைப் பற்றியும் தலைநகரைப்பற்றியும் தெளிவாக அறிய இயலவில்லை. சைலேந்திரரின் தாயகம் கலிங்க நாடாக இருக்கலாம் என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர்.[1] ஆகவே, இந்தோனேசியா அயலார் ஆட்சிக்கு அடிமையாயிற்று என்று கருதப்படுகிறது. இதனால் சைலேந்திர அரச மரபின் ஆதிமரபு இந்தியரின்-சிறப்பாகத் தென்னிந்தியரின் வழி வந்தது என்பது புலனாகிறது.

சீனாவின் காலவழிச் செய்திக் கோவைகளில், சைலேந்திரப் பேரரசைப் (சான்-போ-டிசி) பற்றிய குறிப்புகள் பல காணப்படுகின்றன. சைலேந்திரப் பேரரசு கி. பி. 905, 960, 961, 962, 971, 972, 974, 978, 980, 983-ஆம் ஆண்டுகளில் சீனாவிற்கு, நல்லெண்ண,தூதர் குழுவை அனுப்பியதாக அந்த நூல் தெரிவிக்கிறது. சீனாவோடு வாணிகத்தொடர்பு பத்தாம் நூற்றாண்டில் வளர்ச்சியுற்றது. கி. பி. 971-இல் கேண்டனில் (Canton) ஏற்றுமதித் தளம் சீனரால் அமைக்கப்பட்டது. அவ்விடத்தில், சைலேந்திரப் பேரரசின் ஆட்சிக்குட்பட்ட நாடுகளைச் சேர்ந்த வணிகர்கள் சென்று தங்கினர்.

சைலேந்திரப் பேரரசின் மாபெரும் நினைவுச்சின்னம் போராபுதூரில் (ஜாவாவில்) நிறுவப்பட்டதைக்கொண்டு, அதனுடைய தலைநகரும் ஜாவாவிலேயே இருந்திருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. இப்பேரரசு, மலேயாவில் தோன்றியிருக்க வேண்டுமென்று கருதுவாரும் உளர். ஆனால், பெரும்பான்மையான அறிஞர்கள், ஸ்ரீவிசயம் என்ற சுமத்திராவின் அரசே, சைலேந்திரப் பேரரசாக வளர்ந்தது என்று நம்புகின்றனர்.

### பேரரசு எனல் பொருந்துமா?

அணிமைக் காலத்திய ஆராய்ச்சியாளர்கள், ஸ்ரீவிசயாவை ஒரு பேரரசு எனக் குறிப்பிடுவது பொருத்தம் இல்லை எனக் கூறுகின்றனர். பேலம்பாங்கு (palembang) எனும் கடற்கரைப்

---

1. Swami Sadanand, Hindu Culture in Indonesia, PP. 42-44.

பட்டினத்தையே ஸ்ரீவிசய அரசின் தலைநகரமாகக் கோயிடஸ் (coedes) தக்க சான்றுகளோடு நிறுவியுள்ளார்.[2]

அத்துறைமுகம் மலாக்காநில இடுக்கிற்குத் தென்கோடியில் இருப்பதாகும். இந்தப் பட்டினம் சீனாவோடு பேரளவிற்குக் கடல் வாணிகம் செய்துவந்தது. அதனால், செழிப்பும் சிறப்பும் பெற்றது. இவற்றோடு வேறு பல துறைமுகப் பட்டினங்களை யும் வாணிக வசதிக்காக, பேலம்பாங்கில் தோன்றிய ஸ்ரீவிசய அரசு, தன்னுடைய ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவந்தது. எனவே, ஸ்ரீவிசய பேரரசு என்பது, நாம் அறிந்த ரோமானியப் பேரரசைப் போன்ற பரந்துபட்ட அமைப்பு அன்று. அது சில துறைமுகப் பட்டினங்களைப் பாதுகாத்த ஒரு வாணிகத் தற்காப்புக் கழகம் போன்றதேயாகும்.[3]

ஸ்ரீவிசயப் பேரரசின் சமகாலத்தில், சோழப் பேரரசு, தமிழ் நாட்டில் வீறுடன் விளங்கியது. ஆனைமங்கலச் செப்பேடும், திருவாலங்காட்டுச் செப்பேடும் ஸ்ரீவிசய அரசினை, ஒரு கடற் பேரரசாகவே குறிப்பிடுகின்றன.

ஆயிரக்கணக்கான தீவுகளைக் கொண்ட இந்தோனேசி யாவில், ஒரு வல்லரசு நிறுவப்பட்டால், அது பல்வேறு துறை முகங்களை மையமாகக் கொண்டே இயங்க வேண்டிய இயற்கை யின் நெருக்கடியில் இருந்து வருவதை நாம் மறத்தலாகாது.

முதலாம் இராசேந்திரனுடைய கடாரப் படையெடுப்பைத் தெரிவிக்கும் கல்வெட்டுகளும் செப்பேடுகளும் அந்தமான், நிக்கோபார் தீவுகளுக்கு நேர்-கிழக்காகச் சென்றால் 'கெட்டா' என இக்காலத்தில் வழங்கப்படும் கடாரம் இருந்ததாகத் தெரிவிக்கின்றன.

இப்பேரரசு, இந்தோனேசியாவில் மட்டுமன்றி, மலேயா, கம்பூச்சியா சிறிது காலம் சம்பா ஆகிய நாடுகளையும் தன் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வந்திருந்தது.

## வெளிநாட்டார் கண்ட சைலேந்திரப் பேரரசு

அராபிய நாட்டு எழுத்தாளர்களுள் அபுசயத் ஹுஸ்ஸெயின் என்பவரும் கி. பி. 916 முதல் 946 வரை நடு ஆசியாவின்

---

2. G. Coedes, The Making of South East Asia, Part V PP. 72-74
3. G. W. Spencer, The Politics of ExPansion-The Chola Conquest of Sri Lanka and Sri Lanka Vijaya, P. 106.

நல்லறிஞர் அல்புருனி (கி. பி, 1030) என்பவரும் சைலேந்திரப் பேரரசு பரந்துபட்டதாகவும் பேராற்றல் வாய்ந்ததாகவும்இருந்த தாகக் குறிப்பிட்டுள்ளனர். மேலும், 'சுவர்ணதீபம்' எனப்படும் மலேயா தீபகற்பம் அனைத்தையும், அப்பேரரசு தன்னுடைய ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவந்திருந்தது என்றும் அவர்கள் கூறுகின்றனர். அவர்கள் இப்பேரரசினை 'ஸ்பாக்' என்ற பெய ரால் குறிப்பிட்டு வந்தனர். இபின் கோர்டாட்ஸ்பேக் (844-848) என்ற அராபிய யாத்திரிகர் ஸ்பாக்கின் அரசர், 'மகாராஜா' என்று அழைக்கப்பட்டதாகச் சொல்லுகின்றார். அவ்வரசரின் அன்றாட வருவாய் இருநூறு மணங்கு (Mans) பொன் என்றும், அப்பொன்னை அவ்வரசர் இறுகிய கற்களாகச் (பொன் கட்டி களாகச்) செய்து நீருக்கு அடியில் போட்டு வைக்கிறார் என்றும், அங்குத்தான் தன்னுடைய கருவூலம் இருப்பதாக அவ்வரசர் குறிப்பிடுகிறார் என்றும், இந்த அராபியர் எழுதியுள்ளார். அன்றாட வருவாயில், சேவல் போரிலிருந்து மட்டும் 50 மணங்கு பொன் அரசருக்குக் கிடைக்கிறது என்றும், வெற்றி பெறும் சேவலின் கால் ஒன்று அரசனுக்கு உரிமையுடையதாகக் கருதப் பட்டது என்றும், அதனைத் திரும்பிப்பெற வெற்றிபெற்றவன் அதன் மதிப்பிற்குப் பொன்னை அரசருக்குத் திறையாகச் செலுத்திப் பெற்றுச் சென்றான் என்றும் அவர் குறிப்பிடுவதி னால், அக்காலத்தில் பொழுதுபோக்கு விளையாட்டுகளிலிருந்து கணிசமான அளவிற்கு அரசிற்கு வரிப்பொருள் வந்தமை அறியப்படுகிறது.

'ஸ்பாக்கு' அரசைப்பற்றி இன்னும் சிறப்பாக அபுசயாத் ஹசான் என்பவர், கி. பி. 916-இல் சுலைமானின் (கி. பி.851) குறிப்புகளோடு அரியபல செய்திகளையும் தன்னுடைய விளக்கக் குறிப்புகளையும் சேர்த்து நூல் ஒன்று வெளியிட்டுள்ளார். அவர் சைலேந்திரப் பேரரசையும், அதன் தலைநகரையும் 'ஸ்பாக்கு' என்னும் பெயராலேயே சுட்டியுள்ளார். ''ஸ்பாக்கி லிருந்து ஒருமாதகாலம் கடற்பயணம் செய்தால், நாம் சீனாவை அடையலாம்; பருவக்காற்று உதவிபுரியுமானால், ஒரு மாதத் திற்கும் குறைந்த காலத்திலேயே, நாம் சீனாவிற்குச் செல்ல முடியும்'' என்பன போன்ற பல செய்திகளை அவர் தெரிவித்துள் ளார்.

இந்த நகரத்தின் அரசர் 'மகாராஜா' என்று அழைக்கப்படு கிறார். அப்பேரரசு 900 சதுரபரசாங்குகள் (Parsangs; 760 கி. மீ) பரப்புடையது. "1000 பரசாங்குகளுக்கு (850 கி. மீ.) மேற்பட்ட பரப்பில் உள்ள எண்ணற்ற தீவுகளில்இவ்வரசனே, மேலாதிக்கம் செலுத்தும் பெருந்தலைவனாக விளங்குகிறான்'' எனும்

மற்றொரு குறிப்பு, சைலேந்திரப் பேரரசின் பரப்பளவினை அறிய உதவுகிறது. அவன் ஆதிக்கம் செலுத்தும் தீவுகளுள் ஸ்ரீபுஸா (ஸ்ரீவிசயம்) என்பது 400 சதுர பரசாங்குகள் (380 கி. மீ.) பரப்புடையது; ரமி என்னும் தீவு 800 சதுர பரசாங்குகள் 760 கி. மீ.) பரப்புடையது. அரேபியாவிற்கும் சீனாவிற்கும் இடையே செப்பாதித் தொலைவிலுள்ள கடல் வாணிக நாடான களா (Kalah) வும் மகாராஜாவின் ஆட்சிக்கு உட்பட்டிருக்கிறது. களாவின் பரப்பு 80 சதுர பரசாங்குகளாகும் (65 கி. மீ). அந்நாட்டின் நகரமான களா, கடல்வாணிகத்தின் முக்கியமானதலமாகும். ''அங்குக் கிடைத்த கற்றாழை, கற்பூரம், சந்தனமரம், யானைமருப்பு, தகரம், கருங்காலிமரம், ஏலக்காய் முதலிய நறுமணப் பொருள்கள் வாணிபப் பொருள்களாகப் பயன்பட்டன. இத்துறைமுகத்திற்கும் ஓமனுக்கும் (Oman) இடையே, இடையறாத வாணிகப் போக்குவரத்து கடல்வழியாக நடந்து கொண்டிருந்தது'' எனும் குறிப்புகள் சைலேந்திரரின் கடல் வாணிக வளத்தினைத் தெரிவிக்கின்றன.

''இத்தீவுகள் அனைத்திலும் மகாராசாவின் ஆணைச்சக்கரம் சென்று சுழல்கிறது. அவர் வாழும் பகுதி மக்கள் தொகை மிகுதியாகவுள்ள நெருக்கமான தீவாகும்.'' இதனால் பேரரசரின் தலை நகரைப்பற்றி அறிகிறோம்.

ஸ்பாக்கில் தனிச்சிறப்பு வாய்ந்த ஒரு வழக்கம் காணப்படுகிறது. அரசரின் அரண்மனை ஆழமில்லாத ஏரி ஒன்றினால் கடலுடன் தொடர்பு படுத்தப்பட்டுள்ளது அதனுள் நாள்தோறும், காலையில் செங்கற்களைப் போன்று செய்யப்பட்ட பொன் கட்டியொன்றை அரசர் வீசி எரிகின்றார்.இக்கற்கள் அலைகளின் நீர்ப்பெருக்கால் மறைக்கப்பட்டுள்ளன. எனினும், அலை குறையும் போது அவை கண்ணுக்குப் புலனாகின்றன. அரசர் இறந்தவுடன் இந்தக்கற்கள் எல்லாம் ஒன்றாகத் தேடி எடுக்கப்படுகின்றன. அவற்றை எண்ணிப் பார்த்தும் எடைபோட்டும் மதிப்பிடப்படுகின்றன. பிறகு அரசாங்கப் பதிவேட்டில், கணக்குப் பதிவு செய்யப்படுகிறது. பின்னர், அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கும், படைத்தலைவர்களுக்கும், அரசாங்க அடிமைகளுக்கும், அவரவர் தகுதிக்கேற்ப அப்பொன் பங்கிட்டு வழங்கப்படுகிறது. எஞ்சியபொன் ஏழைகளுக்குத் தானமாகக் கொடுக்கப்படுகிறது'' இந்தக் குறிப்புகளில் உயர்வுநவிற்சி காணப்படுகிறது. எனினும், அக்கால அரசின் கருவூல நிருவாகம் பற்றி ஓரளவிற்கு அறிய முடிகிறது.

மசூதி (கி. பி. 943) என்பர், ''தீவுகளின் அரசரான மகாராஜாவின் பேரரசி சம்பாவின் விரிகுடாவில் இருக்கிறது. அப்

பேரரசின் வரம்பற்ற உரிமையுடன், பெரும்படையின் உதவியோடு அவர் ஆட்சி புரிந்து வருகிறார். அவருடைய ஆட்சிக் குட்பட்ட தீவுகளை, மிக விரைவில் செல்லக்கூடிய கப்பல்களால்கூட இரண்டு ஆண்டுகளுக்குள் போய் சுற்றி வரமுடியாத அளவிற்கு விரிந்தும் பரந்தும் உள்ளன. இந்த அரசருடைய ஆதிக்கத்திற்குட்பட்ட நாடுகள், பல திறப்பட்ட நறுமணப் பொருட்களையும், சொகுசுமிகு வாழ்க்கைக்குரிய பொருள்களையும் உற்பத்தி செய்கின்றன. வேறெந்த அரசனும் நிலத்தின் மூலம் இத்தகைய பெரும் செல்வத்தைப் பெறுவது இல்லை எனக் கூறலாம்'' என்று ஸ்ரீவிசயப் பேரரசைப்பற்றிக் குறிப்பிடுகிறார்.

அன்புருனி (சற்றேறக்குறைய கி. பி. 1030) என்னும் நடு ஆசியாவில் நல்லறிஞர்,

''இப்பெருங்கடலிலுள்ள கீழைத் தீவுகள் இந்தியாவைக் காட்டிலும் சீனாவிற்கு மிக அருகிலுள்ளன. அவற்றுள் 'ஸபாஜ்' என்னும் தீவுக்கூட்டம் சிறப்புடையது. அதனை இந்துக்கள் 'சொர்ணதீபம்' எனச் சுட்டுவர். இதற்குப் 'பொன் விளையும் நாடு' என்று பெயர் வந்தமைக்கு ஒரு காரணம் உண்டு. இந்த நாட்டின் மண்ணைச் சிறிதளவு கிளறினாலே அதிக அளவிற்குப் பொன் கிடைக்கிறது. இதனால் இத்தீவுக்கூட்டம் 'சொர்ண தீபம்' என்று அழைக்கப்படுகிறது'' என்று குறிப்பிட்டுள்ளமை இங்குக்கருதத் தக்கதாகும்.

மேற்கண்ட அராபிய, நடுஆசிய எழுத்தாளர்களின் கருத்துகள் அனைத்தும்,ஓர் உண்மையைப் பொதுவாகஅறிவிக்கின்றன. கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி முதல் பதினோராம் நூற்றாண்டின் தொடக்கம் வரையிலும் சொர்ணதீபம் எனப்படும் மலேயாத் தீபகற்பம், மலேயாத் தீவுக்கூட்டம் ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்ட ஆற்றல்மிக்க ஒருபேரரசாசாகச் சிறப்புற்று விளங்கியதை அவர்கள் வியந்து பாராட்டியுள்ளனர். எனவே, சைலேந்திரப் பேரரசு சாவகத்தையும், காம்பூச்சியாவையும் இழந்த பிறகும், தொடர்ந்து ஒரு நூற்றாண்டுக்கு மேல், சீரும் சிறப்பும் பெற்றுத் தழைத்தோங்கியது என்பதும் அதன் முக்கிய இடத்தை ஸ்ரீவிசயம் பெற்றிருந்தது என்பதும் புலனாகின்றன.

### சீனர்கள் கண்ட இந்தோனேசியா

சீனாவின் காலவழிச் செய்திக் கோவைகள் 'சான்-போ-சி' என்ற அரசைப்பற்றிப் பல செய்திகளைத் தெரிவிக்கின்றன.

அந்த அரசு, சைலேந்திரப் பேரரசு என்பதில் சிறிதும் ஐய மில்லை. பத்தாம் நூற்றாண்டில் சைலேந்திரப் பேரரசிலிருந்து பல தூதர் குழுக்குள் சீனாவிற்கு அனுப்பப்பட்டதாக அவ்வர லாற்று ஏடுகள் எடுத்தியம்புகின்றன.

சீன வரலாற்று ஏடுகள், சைலேந்திரப் பேரரசின் அரசியல், சமூகம், பொருளாதார நிலைகளை அறிவதற்குரிய அரிய பல செய்திகளை விரிவாகவும் நுணுக்கமாகவும் குறித்து வைத் துள்ளன. ஆனால், அவை சைலேந்திரரின் அரசியல் ஆதிக்க மேம்பாட்டையும், வாணிகப் பெருவளத்தையும் சிறப்பாகப் போற்றிப் பாராட்டுகின்றன. இவற்றால், கி. பி. பத்தாம் நூற்றாண்டு வரையில் சைலேந்திரப் பேரரசு அடைந்திருந்த வளர்ச்சியை நாம் நன்கறிய இயலுகிறது. இதனால், சைலேந் திரப் பேரரசு இந்தோனேசியாவில் மட்டுமன்றி மலேயா, காம் பூச்சியா, சம்பா ஆகிய நாடுகளையும், தன்னுள் அடக்கியிருந் தமை அறியப்படுகிறது. கடலாதிக்கத்தினால், அவர்கள் மிகப் பெரிய பேரரசை நிறுவியதோடு, தங்கள் செல்வாக்கினைச் சீனப் பேரரசின் எல்லைப் பகுதியாகிய இந்தோசீனாவின் கீழைக் கரைவரையில் சென்று பரவுமாறு செய்தனர்.

### சீனாவும் சைலேந்திரரும்

இக்கடலாதிக்கம், சீனாவிற்கும் மேலைநாடுகளுக்கும் இடையே நடைபெற்று வந்த கடல்வாணிகத்தைக் கட்டுப் படுத்தும் ஆற்றலைச் சைலேந்திரருக்கு அளித்தது. மசூதி என்ற அராபிய வழிபோக்கர் ''முன்பெல்லாம் சீனாவிற்கும் சிராப், ஓமன் துறைமுகங்களுக்கும் நேரடியான கடல் வாணிகம் நடை பெற்றுவந்தது; பின்னர் தன்னுடைய காலத்தில் மலேசியாவி லிருந்த களா துறைமுகம் (சைலேந்திரருடையது). சீனாவும் அரேபியாவும் சந்திக்கும் இடை நிலமாகவும் வாணிகத்தலமாக வும் விளங்கலாயிற்று'' என்று இயமபுகிறார். இவ்வணிக வளத் தினால் சைலேந்திரப் பேரரசு, செல்வச் செழிப்புற்று விளங்க லாயிற்று.

கி பி. 845- ஆம் ஆண்டுக்குரிய கல்வெட்டு ஒன்று. இந்தியா விலுள்ள நாளந்தாவில் காணப்படுகிறது. அக்கல்வெட்டு தேவ பால அரசனுடையது. அதில் பாலபுத்திரதேவன், சமரக்கரவீரன் எனும் இரண்டு சைலேந்திர அரசர்களைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. பரப்பிலும், செழிப்பிலும் சிறப்பு மிகுந்ததும், கடற்படை வலிமை கொண்டதுமான சைலேந்திரப் பேரரசு, ஒன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை சிதைவுறாமல் நிலைத்திருந்தது. ஆனால், கி. பி. 869-க்கும் 870-க்கும் இடைப்

பட்டகாலத்தில், காம்பூச்சியாவும், சாவகமும் தன்னுரிமைத் தனியரசுகளாயின. ஆயினும், பத்தாம் நூற்றாண்டின் முடிவு வரை சைலேந்திரரின் சிறப்பு மறையவில்லை. கி. பி. 990 அளவில் சாவகம் சைலேந்திரரைத் தாக்கி, வெற்றி பெற்றது. ஆனால்கி. பி. 1003-இல் சாவகம் படுதோல்வி அடைந்தது.

கி. பி. பதினோராம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியில் இந்நாட்டினைச் சூளாமணிவர்மதேவன் ஆண்டு வந்தான். கி. பி. 1003-இல் அவன் சீனாவிற்கு இரண்டு தூதர் குழுவினை அனுப்பினான். அக்குழுவினர் சீனப் பேரரசனைச் சந்தித்துத் தங்கள் அரசனுடைய நல்வாழ்த்துகளைத் தெரிவித்தனர். சீனப் பேரரசனின் நீண்ட நல்வாழ்வை விரும்பித் தங்கள் அரசனால், புத்தர் பெருமானுக்குக் கோயில் கட்டப்பட்டிருப்பதாகவும் அவர்கள் அறிவித்தனர். இதனால், இவ்விரு நாடுகளுக்குமிடையே, நெருங்கிய தொடர்பும் நட்புறவும் நிலவியமை புலனாகிறது.

## 7. 2. 4

# பல்லவ மன்னன் இராசசிம்மனும் சைலேந்திரரும்

இரண்டாம் நரசிம்மன் எனும் புகழ்வாய்ந்த இராசசிம்மன், காஞ்சியில் கயிலாசநாதர் கோயிலை எடுப்பித்தவனாவான். அக்கோயிலின் வெளிப்புற மதிலுக்கு அடுத்துத் தெற்குப் பக்கத்தில் பல சிறுகோயில்கள் உள்ளன. அவற்றுள் மூன்றாவதாக உள்ள கோயிலை, இராசசிம்மனுடைய மனைவியருள் ரங்கபதாகை என்னும் அரசி, தம் சொந்த செலவில் கட்டியுள்ளாள்.

இதை, அக்கோயிலில் உள்ள மூன்று சம்ஸ்கிருத சுலோகங்களைக்கொண்ட ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது. அதில் ரங்கபதாகையின் தந்தையாருடைய பெயர் குறிப்பிடப் பட்டுள்ளது. 'சைல அதிராஜா' என்பது ரங்கபதாகையினுடைய தகப்பனாரின் பெயர் எனத் தெரிகிறது. 'சைல அதிராஜா' என்பது இயற்பெயராகத் தோன்றவில்லை; சிறப்புப் பெயராக இருத்தல் வேண்டும்.

இப்பெயருடைய அரசன், அக்காலத்தில் தென்னிந்தியா விலோ வட இந்தியாவிலோ வாழ்ந்ததற்குரிய ஆதாரங்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. எனவே, வரலாற்று ஆசிரியர்கள், இப்பெயரைப் பொருத்தமாகப் பெற்ற அரசர்கள், 'அலைகடல்களுக்கு அப்பாலுள்ள தீவாந்திர நாடுகளில் இருந்தனரா?" என்பதைக் கண்டறிய சிறப்புநிலை ஆராய்ச்சியை மேற்கொண்டுள்ளனர்.

இந்தப் பெயர் சைலேந்திர அரசனையே சுட்டுவதாகக். கொள்ளுவது பொருத்தமாக அமைகிறது என்று தி. நா. சுப்பிரமணியன் அவர்கள் கருதுகிறார்.[4]

பொதுவாகப் பல்லவர்களுக்கும் தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கும் நெருக்கமான தொடர்பு இருந்ததைப் பல்லவமல்லன் இரண்டாம் நந்திவர்மனின் வரலாறு புலப்படுத்துகிறது. எனவே அவ்வுறவு, அவனுக்கு முற்பட்ட காலத்திலேயே, வலிவும் பொலிவும் அடைந்திருக்க வேண்டும் எனக் கருதலாம்.

சைலேந்திரர் (சைல+இந்திரர்) எனும் பெயர், மலைக்கு-மலைநாட்டிற்கு அரசன்' எனும்பொருள் பயப்பதாகும். இந்தப் பொருளையே பெரிதும் ஒத்ததாக 'சைல அதிராஜா' எனும் சம்ஸ்கிருதத் தொடர் அமைந்துள்ளமை நினைவுகூரத் தக்கதாகும்.

இவ்வகையில் நோக்குகின்றபொழுது, தமிழ்நாட்டுப் பல்லவ அரசமரபிற்கும் இந்தோனேசியாவின் சைலேந்திர அரசமரபிற்கும் மணவுறவு இருந்திருக்க வேண்டும் என்பது புலனாகிறது.

சைலேந்திரருடைய ஆட்சியின் தொடக்ககாலகட்டமே பல்லவருடைய ஆட்சிக் காலமாகும். கி. பி. பத்தாம்நூற்றாண்டு முதலே, சைலேந்திரர், பேரரசை நிறுவிப் பெருவாழ்வு பெற்றனர்.

ஓர் அரசமரபு, தோன்றும்பொழுது, அக்கம்பக்கத்திலுள்ள அரசுகளோடு திருமணஉறவு கொண்டு, தங்கள் நிலையை வலுப்படுத்திக்கொள்ள முயலுவது இயற்கை.

மேலும், காம்பூச்சியாவின் ஒரு பகுதியைத் தென்னிந்திய பல்லவ அரசமரபின் கிளைக்குடி ஆட்சி செய்ததை நாம் முன்னரே கண்டாம். இவற்றை எல்லாம் கருத்தில் கொண்டு பார்க்கும்பொழுது இராசசிம்மன், சைலேந்திர இளவரசியான் ரங்கபதாகையைத் திருமணம் செய்துகொண்டதில் வியப்பில்லை.

இக்கருதுகோள், உண்மையாகுமானல், கி. பி. எட்டாம் நூற்றாண்டுத் தமிழகத்திற்கும் இந்தோனேசியாவிற்கும் நேரடியான உறவுமுறை நிலவியது எனக் கருதலாம்.

---

4 T. N. Subramaniyan, The Pallavas of Kanchi in the S. E. Asia, P. 43.

# 7. 2. 5.

# சோழப் பெருவேந்தரும் சைலேந்திரரும்

தமிழகத்தில் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு முதல், சோழப் பேரரசு சிறப்புற்று விளங்கத் தொடங்கியது. அப்பேரரசினை நிறுவிய தனிப் பெருந்தலைவனான முதலாம் இராசராச சோழனோடு, ஸ்ரீவிசயப் பேரரசனான சூளாமணி வர்மதேவன் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டிருந்தான்.

## சூளாமணி விகாரம்

இந்நட்புறவைப்பற்றிச் சுவைமிக்க வரலாற்றுக் குறிப்பு ஒன்று கிடைத்திருக்கிறது. கடாரத்தினை ஆண்ட சூளாமணி வர்மன் தமிழகத்திலுள்ள நாகப்பட்டினத்தில், புத்தவிகாரை ஒன்றைச் சோழமன்னனின் இசைவைப் பெற்றுக் கட்டத் தொடங்கினான். அக்கோயிலுக்கு இராசராச சோழனின் இருபதாம் ஆட்சியாண்டில், ஆனைமங்கலம் என்ற ஊரைப் பள்ளிச்சந்தமாக அளித்தான்.

ஆனைமங்கலம் என்ற ஊர் 8943 கலம் நெல் வருவாயுள்ள 9 வேலி நிலத்தைத் தன்னகத்தே கொண்டிருந்தது. அவ்விகாரை சூளாமணிவர்மனுடைய மகனான விஜயோத்துங்கவர்மனால் கட்டிமுடிக்கப்பெற்றது. அதற்குச் சூளாமணி விகாரம், இராசராசப் பெரும்பள்ளி என்னும் பெயர்கள் இடப்பெற்றிருந்தன. இதனால்

அவ்வரசர்கள் இடையே நிலவிய நட்புறவு புலனாகிறது. இராசராசனும் இப்புத்தவிகாரைக் கட்டி முடிப்பதற்குள்ளாகவே மறைந்திருக்க வேண்டும் என்பது, இராசேந்திர சோழனால் வழங்கப்பட்ட லெய்டன் செப்பேடுகளால் அறியப்படுகிறது.

ஸ்ரீமாற விசயதுங்கவர்மன், கி. பி. 1008 -க்கு முன்பு அரசு கட்டிலேறியதாகத் தெரிகிறது. அவன் கி. பி. 1008 - இல் சீனாவிற்குத் தூதர் குழுக்களை அனுப்பியுள்ளான். சைலேந்திரப் பேரரசுக்கும் சோழருக்குமிடையே சிறந்தநட்புறவு இருந்துவந்தமை, அக்காலத்திய தமிழ் இலக்கியத்தாலும் தெரிய வருகிறது.

## நட்புறவு முறிவு

இராசராச சோழனுடைய ஆட்சியின் பிற்பகுதியிலும், இராசேந்திர சோழனுடைய ஆட்சியின் முற்பகுதியிலும் சோழப் பேரரசும் கடார ஸ்ரீ விசய அரசும் தம்முள் நட்புக் கொண்டிருந் தன என்பதும் முன்னர்க் குறிபபிடப்பட்ட ஆனைமங்கலச் செப் பேடுகளால் அறிகிறோம், அத்தகைய நிலையிலிருந்த அவ்விரு அரசுகளும் சில ஆண்டுகளில் பகைமை கொண்டமைக்கும் சோழர் படையெடுத்துச் சென்றமைக்கும் உரிய காரணம் நன்கு புலப்படவில்லை. ''ஒருகால் வாணிகம் காரணமாக அந்நாட்டில் தங்கியிருந்த தமிழ் மக்களின் உரிமைகளைக் காப்பாற்றும் பொருட்டு இராசேந்திர சோழன் கடாரப் படை யெடுப்பை மேற்கொண்டிருக்கவேண்டும்'' என்று கொள்ளுவது பொருத்தம் உடையதாகும். ஸ்ரீவிசய நாட்டைச் சோழப் பேரரசோடு இணைத்து, அந்நாட்டு மன்னனைத் தனக்குத் திறைசெலுத்தும் சிற்றரசனாகச் செய்யவேண்டும் என்ற எண்ணம் இராசேந்திரனுக்கு இருந்ததா என்பது தெரியவில்லை.

கிழக்கு நாடுகளில் நெருக்கமான நட்புறவும், வாணிகத் தொடர்பும் உடையனவாகச் சோழப் பேரரசும், ஸ்ரீவிசயப் பேரரசும் விளங்கின. ஆனால், பேரரசன் இராசராசன் மறைவிற்குப்பிறகு, அந்த நட்புறவு நீடிக்கவில்லை. அதற்குப பல காரணங்கள் கூறப்படுகின்றன.

## கடாரப் படையெடுப்பு

இராசேந்திரன், தன்னுடைய ஆற்றல்மிக்க கடற்படையைக் கொண்டு, கடல் நடுவில் உள்ள கடாரத்தரசனாகிய சங்கிராம விசயோத்துங்கவர்மனைப் போரில் புறமுதுகிடச் செய்து, அவனது பட்டத்து யானையையும், பெரும் பொருளையும்,

வித்தியாதரத் தோரணத்தையும் கவர்ந்து கொண்டான். 'ஸ்ரீவிசயம்' பண்ணை, மலையூர், மாயிருடிங்கம், இலங்கா சோகம், பப்பாளம், இளம்பங்கம், வளைப்பந்தூர், தக்கோலம், தமாலிங்கம், இலாமுரி தேசம், நக்காவரம், கடாரம் ஆகிய இடங்களையும் கைப்பற்றினான் என்பது இவன் மெய்க்கீர்த்தியினால் அறியப்படுகிறது.

அவற்றுள் கடாரம் என்பது 'பரக்கும் ஓதக் கடாரம்' என்றும் 'களிறு தெண்டிரைக் கடாரம்' என்றும் கலிங்கத்துப்பரணியில் கூறப்பட்டிருத்தலால், அது கடற்கரையில் அமைந்திருந்த ஒரு நகரம் என்பது தெளிவாகின்றது. செப்பேடுகளில் வரையப் பட்டுள்ள வடமொழிப் பகுதியில் அது 'கடாகம்' என்று குறிக்கப்பட்டுள்ளது. பண்டைத் தமிழ் இலக்கியமான பட்டினப் பாலையில், 'காழகம் எனப்படுவது, இக்கடாரத்தையே குறிப்ப தாகும் என்று, அதற்கு உரைவிளக்கம் எழுதிய நச்சினார்க்கினியர் கருதுகிறார். அத்தகைய சிறப்பு வாய்ந்த கடாரம், மலேயாவின் மேல்கரையில் தென்பக்கத்தில் 'கெடா' எனும் பெயருடைய நகரமாக இக்காலத்தில் விளங்கிவருகிறது.

## இராசேந்திரன் வென்ற இடங்கள்

ஸ்ரீவிசயம் என்பது சுமத்திரா என்று இக்காலத்தில் வழங்கும் சொர்ணத்தீவிலுள்ள பேலம்பாங்கு என்னும் அரசாகும். பண்ணை என்பது சுமத்திராவின் கீழ்க்கரையில் உள்ள ஊராகும். அதனை இக்காலத்தில் பனி, பனோய் (Pani or Panei) என்று அழைக்கின்றனர். மலையூர் என்பது சுமத்திராவின் கீழ்க் கரையிலிருந்தது என்று ஒரு சாராரும், மேல்கரையிலிருந்தது என்று மற்றொரு சாராரும் கூறுகின்றனர். எனவே, அவ்வூர் எங்கிருந்தது என்பதை அறுதியிட்டுக் கூறுவதற்கில்லை. ஆனால் அந்நாட்டில்தான் மலையூ என்ற ஆறு ஓடியது என்பது ஆராய்ச்சியாளரின் முடிவாகும். அதுபேலம்பாங்கு அரசிற்கு அண்மையில் இருந்திருக்க வேண்டுமெனச் சிலர் கருதுகின்றனர். ஹாலந்து நாட்டு அறிஞர் ஒருவர், அது ஜம்பி (Jambi) என்னும் நாடாகும் என்பதற்கான சான்றுகள் தந்து விளக்கியுள்ளார்.

மாயிருடிங்கம் என்பது மலேயாவின் நடுவில் இருந்தது என்பர். சீனமக்கள் அதனை ஜிலோடிங் (Ji-lo-ting) என்று வழங்கியுள்ளனர். இலங்காசோகம் என்பது மலேயாவிலுள்ள 'கெடா' விற்குத் தெற்கே இருந்தது என்று தெரிகிறது. அது சீன மக்களால் 'லிங்-யா-சென்-கியா' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இலாமுரி தேசம் என்பது சுமத்திராவின் வடபகுதியில் இருந்த நாடாகும். அதனை இத்தாலிய நாட்டு யாத்திரிகரான மார்கோ

போலோ'என்பார், 'லம்பிரி' என்றும், அராபியர்கள் அதனை 'இலாமுரி' என்றும் வழங்கியுள்ளனர். சீன தேயத்தினர் அதனை லான்வூலி என்று குறிப்பிட்டுள்ளனர்.

எனவே, கடாரப்படையெடுப்பில் இராசேந்திரன் கைப் பற்றியனவாக மெய்க்கீர்த்தியில் சொல்லப்படும் நாடுகளும் ஊர் களும் சுமத்திராவிலும், மலேயாவிலும் அவற்றைச் சூழ்ந்தும் இருந்தனவாதல் வேண்டும். அவை அனைத்தும் சுமத்திராவில், அக்காலத்தில் நிலைபெற்றிருந்த ஸ்ரீவிசயப் பேரரசிற்கு உட் பட்டிருந்தன. கடாரப்படையெழுச்சியைக் கூறும் இராசேந் திரனுடைய மெய்க்கீர்த்தியைக், கூர்ந்து நோக்குமிடத்து, ''அங்கே இவன் பெற்ற வெற்றிகள் அனைத்தும் ஒரு படை யெடுப்பில் பெற்றவை என்பதும், அதில் குறிப்பிடபெற்ற நாடு களும் ஊர்களும் ஓர் அரசன் ஆளுகைக்கே உட்பட்டிருந்தன என்பதும் நன்கு புலனாகின்றன. ஸ்ரீவிசய இராச்சியத்திற்குட் பட்டிருந்தனவாகச் சீன தேயத்து நூல்களில் கூறப்பட்டுள்ள இடங்களும், இராசேந்திரன் கடாரப்படையெடுப்பில் கைப் பற்றியனவாக மெய்க்கீர்த்தியில் குறிக்கப்பெற்றுள்ள இடங் களும் பெரும்பாலும் ஒத்திருத்தல் ஈண்டு உணரற்பாலது'' என்பர் வரலாற்றறிஞர்.[5]

## படையெடுப்பிற்குக் காரணம்

இராசேந்திரனிடத்துத் தோல்வியுற்று ஓடிய கடார அரசன் சங்கிராம விஜயத்துங்க வர்மன் (கி. பி. 1025) என்பவனா வான். இவன் சூளாமணிவர்மனுக்குப் பேரனும், மாறவிசயோத் துங்கவர்மனுக்கு மகனுமாவான். இராசேந்திரனுடைய கடாரப் படையெடுப்பு, புலவர்களின் கற்பனையில் அரும்பிய கட்டுக் கதையன்று. உண்மை நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டே, தமிழ்ப் புலவர்கள் இராசேந்திரனின் வெற்றி யினைப் போற்றிப் பாடியுள்ளனர். இராசேந்திரனுடைய மெய்க்கீர்த்திகளில் குறிப்பிடப்படும் நாடுகள் பெரும்பாலும் ஸ்ரீவிசயப் பேரரசின் ஆதிக்கத்திற்குட்பட்ட குறுநில மன்னர் களின் அரசுகளாக இருந்தன என்பதைச் சீனர்களின் வரலாற்றுக் குறிப்பேடுகள் தெரிவிக்கின்றன.

சோழப் பேரரசுக்கும் சைலேந்திரருக்கும் இடையே பகைமை உண்டானமைக்குரிய காரணத்தைத் தெளிவாக அறிய இயலவில்லை. சோழர்களுடைய கல்வெட்டுகளும் செப்

---

5. தி. வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் சரித்திரம்-பகுதி-1, பக். 181-182

பேடுகளும் ஓர் உண்மையை உணர்த்துகின்றன. கலிங்கத்தையும் கங்கைச் சமவெளியையும் கைப்பற்றிக்கொண்ட பிறகுதான், சோழவேந்தன் கடாரத்தின்மீது படையெடுத்து இருக்கிறான் என்பதே அந்த உண்மை. குமரிமுதல் கங்கைக் கழிமுகம் வரையிலுள்ள கீழைக்கடற்கரைப் பகுதி முழுவதையும் தன்னுடைய ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவந்த இராசேந்திரன், கடற்படை ஆற்றல்மிக்கவனாக விளங்கினான். அந்நிலையில், தன்னுடைய கடற்படை அனைத்தையும் ஒருங்கு திரட்டிப் பொன்றாப் புகழ் பெற விரும்பி, அவன் கடாரப் படையெடுப்பில் இறங்கியிருக்க வேண்டும் எனக் கருத இடமுண்டு.

மேலும், கீழை ஆசியாவிற்கும் மேலை நாடுகளுக்குமிடையே நடந்துவந்த கடல் வாணிகத்தின் முதன்மையான இடத்தைச் சைலேந்திரப் பேரரசு பெற்றிருந்தது. அதனைக் கைப்பற்றினால் தனக்குப் புகழ் மட்டுமல்லாமல், பெரும் செல்வமும், பொன்னும் பொருளும் கிடைக்குமென்ற ஆவல் காரணமாக இராசேந்திரன் போருக்குச் சென்றிருக்கலாம் அல்லது தமிழகத்து வாணிகர்களுக்குக் கீழை நாடுகளில் உண்டான இன்னல்களையும் இடையூறுகளையும் போக்கி, தமிழ்நாட்டு வாணிகத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்க விரும்பியதன் பயனாகச் சைலேந்திரருக்கும் சோழருக்கும் பகைமை உண்டாகியிருக்கலாம். அப்பகைமை காரணமாகத் தமிழகத்து வாணிகர்கள் கீழைநாடுகளில் துன்புறுத்தப்பட்டும் இருக்கலாம்; இதனால், சிற்றமுற்ற இராசேந்திரன் தன்னுடைய பெரும்படையைச் சைலேந்திரர்களுக்கு எதிராக அனுப்பி, அப்பேரரசினை அழித்திருக்கலாம். இதன் விளைவாகச் சோழப் பேரரசு, கடல்கடந்த நெடுந்தொலைவிலுள்ள நாடுகளில் சென்று பரவியதோடு அமையாமல், கீழ்நாடுகளின் கடல்வாணிகத்தில் தமிழகம் தனிப்பெரும் செல்வாக்கினைப் பெற்றதாகத் தெரிகிறது. இம்மாபெரும் கடற்போர் வெற்றிக்கு முதன்மையான காரணம் சிறந்ததொரு கப்பற்படையைச் சோழர்கள் போற்றிக் காத்துவந்தமையே யாகும். இந்தியாவின் பண்டை அரசர்களுள் வேறு யாரும் காணாத 'கடற் பேரரசினை நிறுவும்' கனவினை, இராசேந்திரன் கண்டதோடு, அதை நினைவாக்கியமையால், இந்திய வரலாற்றில் தன்னிகரற்ற தனிப்பேரரசனாக அவன் விளங்குகிறான்.

## இரண்டாவது படையெடுப்பு

கங்கைகொண்ட சோழனின் மகனான வீரராசேந்திரன் (1063-1070) ஒருமுறை கடாரத்தின்மீது படையெடுத்துச்

சென்றமை தெரியவருகிறது. அவனுடைய ஆட்சியின் ஏழாம் ஆண்டுக் கல்வெட்டு, அவன், தன் 'கழலடைந்த மன்னவர்க்குக் கடாரம் எறிந்து கொடுத்தருளினான்' என ஒரு வரலாற்றுச் சிறப்புமிகு செய்தியைத் தெரிவிக்கிறது. கி. பி. 1068-ஆம் ஆண்டில், தன்பால் அடைக்கலம் புகுந்த கடாரத்து அரசன் பொருட்டு, வீரராசேந்திரன் அந்நாட்டின்மீது படையெடுத்துச் சென்று, அதனைக் கைப்பற்றி, அவ்வரசனுக்கு அளித்தான். தன் நாட்டை இழந்து. சோழ நாட்டிற்கு வந்து அடைக்கலம் புகுந்த கடார மன்னன் யார் என்பதும், அவன் எவ்வாறு தன்னுடைய அரசினை இழந்தான் என்பதும் புலனாகவில்லை.

ஆயினும், வீரராசேந்திரன் பேருதவியினால், அவன் தனக்குரிய நாட்டை மீண்டும் பெற்றமை சிறப்புமிக்க வரலாற்றுச் செய்தியாகும். இக்கடாரப்படையெடுப்பு நடைபெற்றபோது, வீரராசேந்திரன் நேரில் அந்நாட்டிற்குச் செல்லவில்லை. ஆனால், அவன் சோழநாட்டுப் படைத்தலைவர் சிலரை அனுப்பிப் போரிட்டிருக்க வேண்டும் என்று கருத கல்வெட்டுகள் இடந் தருகின்றன. அவனுடைய தங்கையின் மகனான முதல் குலோத் துங்கன் இப்படையெடுப்பில் கலந்துகொண்டு, கடாரம் சென்று அவ்வரசனுக்கு உதவிபுரிந்தான் என்று தெரிகிறது. மிகவும் கடின மான செயலாக இருந்தாலும், அச்செயலின் மூலம் சோழ வேந்தன் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தன்னுடைய ஆதிக்கத் தைத் தொடர்ந்து நிலைநாட்டுவதில் வெற்றி பெற்றான்.

## மீண்டும் நட்புறவு

குலோத்துங்கனின் ஆட்சிக்காலத்தில் (1090—க்கு முன்னர் சோழப் பேரரசுக்கும் சைலேந்திரப் பேரரசுக்கும் இடையே மீண்டும் நட்புறவு உண்டாயிற்று. கி. பி. 1090-ஆம் ஆண்டு சைலேந்திரப் பேரரசன், தன்னுடைய தூதர்களான இராஜ வித்தியாதர சாமந்தன், அபிமனோதுங்க சாமந்தன் ஆகிய இருவர் மூலம் சூளாமணி விகாரைக்கு,முன்னர் பள்ளிச்சந்தமாக அளிக்கப்பட்ட ஊரிலிருந்து (ஆனைமங்கலம்) சோழ பேரரசு வரிதண்ட வேண்டா என்ற வேண்டுகோளை விடுத்தான்.

குலோத்துங்கன் இதற்கு இசைந்து, இராசராசன் மானிய மாக வழங்கிய ஊரோடு வேறுபல ஊர்களையும் இறையிலியாக வழங்கினான். இதனை லெய்டன் சிறிய செப்பேடு தெரிவிக்கிறது) இதனால், கடாரத்து மன்னனுக்கும் சோழப் பேரரசனுக்கும் போருண்டான பிறகு, வரி தண்டப்பட்டது என்பதும், அதனைக் குலோத்துங்கன் மீண்டும் இறையிலியாக்கியதோடு வேறுபல

ஊர்களையும் மானியமாகக் கொடுத்தான் என்பதும் புலனாகின்றன. இச்சமயம் சூளாமணி விகாரம் எனப்படும் இராசராசப் பெரும்பள்ளியோடு இராசேந்திர சோழப் பெரும்பள்ளி என்பதும் நாகப்பட்டினத்தின் கட்டப்பட்டமை குறிப்பிடத் தக்கது. இவ்வாறு, இருபெரும் பேரரசுகளும் தங்களுடைய முறிந்த நட்பினைத் திரும்பப் புதுப்பித்துக் கொண்டன.

முதற்குலோத்துங்க சோழனுக்குப் (கி.பி.1070—1118) பிறகு, அரசு கட்டில் ஏறிய சோழமன்னர்கள் யாரும் கடாரத்தோடு தொடர்பு கொண்டிருந்ததாகத் தெரியவில்லை. இக்காலத்தில் சோழருடைய அரச குடியில் உண்டான போரும் பூசலும், கடல்கடந்த பேரரசைக் கட்டிக்காக்க இயலாது, அதனைக் கைவிடச் செய்தது போலும். இவ்வாறு இந்தியாவில் ஆண்ட ஓர் இந்தியப் பேரரசு - தமிழ்நாட்டில் கால்கொண்ட ஒரு பேரரசு கடல் கடந்த நெடுந்தொலைவிலுள்ள அயல்நாடுகளில் தன் மேலாண்மையை நிலைநாட்ட முயன்ற முதன் முயற்சியும், இறுதி முயற்சியும் ஒரு நூற்றாண்டிற்குள் ஒடுங்கிவிட்டது.

## கொள்ளையடிப்பதற்கா படையெடுப்பு?

இக்காலத்திய அமெரிக்க அறிஞர் ஸ்பென்சர் என்பவர், முதலாம் இராசேந்திரனுடைய படையெடுப்பு, வளமிக்க அந் நாட்டைக் கொள்ளையடித்துச் சூறையாடுவதற்காகவே நடத்தப்பட்டது எனக் கூறுவதோடு, தமிழகத்துப் பெருவேந்தர்களான முதலாம் இராசராசன், அவன் மகன் இராசேந்திரன் ஆகிய இருவரும் நடத்திய படையெடுப்புகளைக் கொள்ளையடிக்கும் அரசியல் நோக்கத்தோடுதான் செய்துள்ளனர் என்னும் அவருடைய எண்ணத்தை உண்மையென நிலைநாட்ட, ஒரு நூலையே எழுதியுள்ளார்.[6]

எல்லா நாடுகளிலும், எல்லாக் காலங்களிலும் அயலாரின் படையெடுப்பு நடைபெற்ற பொழுது, சூறையாடுதலும் தீக்கு இரையாக்குதலும் தவிர்க்கப்படவில்லை. கௌடில்யரின் அர்த்தசாஸ்திரத்திலும், சுக்கிர நீதியிலும் போரின் தொடக்க நிலை நிகழ்ச்சிகளாக இவைக் குறிப்பிட்டுள்ளன. அக்கால அரசியல் சிந்தனையில், கொள்ளையும் தீயிடுதலும் பாவச் செயல்களாகக் கருதப்படவில்லை.

பண்டைத் தமிழகம் போர் முறையைக் கூறும் தொல்காப்பியத்தின் புறத்திணை இயலுள் மழபுலவஞ்சி, உழபுலவஞ்சி எனும்

---

6. George W. Spencer, Op. Cit.; PP. 32-73; 140-162.

இருவகை நிகழ்ச்சிகள் படையெடுப்பின்போது நடைபெறுவன வாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. பகைவரின் ஊர்களைக் கொள்ளை அடித்தலையும், தீயிட்டுக் கொளுத்துவதையுமே 'மழபுலவஞ்சி', 'உழபுலவஞ்சி' எனும் போர்ச் செயல்களாகப் போற்றியுள்ளனர்.

எனவே, இத்தகைய கொடுஞ்செயல்களை அன்றைய சமுதாயம் 'அரச நீதியாகவே' கருதியதைக் காணலாம்.

'சக்கரவர்த்தி' எனும் பெயரைப் பெறுவது ஆற்றல்மிக்க அரசர்களின் இலட்சியமாக இருந்து வந்தது.

உள்நாட்டில் உண்டான குழப்பத்தைச் சமாளிக்க, வெளி நாட்டுப் படையெடுப்பை ஒரு கருவியாகச் சோழ மாமன்னர்கள் பயன்படுத்தினர் எனக் கூறுவதும் பொருந்தாது.

சோழப் பேரரசில், வீரராசேந்திரன் மறைவிற்குப் பிறகே, குழப்பமும் கொந்தளிப்பும் உண்டாயின என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

நாட்டிலே வறுமையின் கோர தாண்டவத்தைக் கட்டுப் படுத்தவே, வெளிநாடுகளின்மீது படையெடுத்துச் சென்றனர் என்பதும் பொருந்தாது. நாட்டிலே பஞ்சமும் பட்டினியும் பவனி வரும்பொழுது, எந்த அரசனாலும் மக்கள் சக்தியை ஒன்றாகத் திரட்டி, கொள்ளையடிப்பதற்காக வெளிநாடுகளின் மீது படையெடுப்பதும், வெற்றி பெறுவதும் இயலாத செயல் களாகும்.

தங்கள் மேலாண்மையை (ஆதிபத்தியம்) நிலை நாட்ட வேண்டும் எனும் ஆர்வமும், தம் நாட்டு வாணிகருக்குப் பாது காப்பு அளிக்க வேண்டும் எனும் கடமை உணர்வும் சோழப்பெரு வேந்தர்களுக்கு உந்துதல் சக்திகளாக அமைந்து இருககலாம்.

வீரராசேந்திரனுடைய கடாரப் படையெடுப்பு, முடியிழந்த இளவரசனை, அவனுக்குரிய அரியாசனத்தில் அமர்த்துவதற் காக மேற்கொள்ளப்பட்டதாகும்.

எனவே, சோழப் பேரரசின் வெளிநாட்டுப் படையெடுப்பு கள் 'கொள்ளை அடிக்கும்' அரசியல் உள்நோக்கத்தோடு நடை பெற்றனவாகக் கூறுவது அறிவுடைமையாகாது.

## 7. 2. 6.

# சைலேந்திரரின் வீழ்ச்சி

### பேரரசின் சிதைவு

சோழரின் பிடியிலிருந்து தப்பிய கடாரம், விரைவில் மீண்டும் வல்லரசாகத் திகழ்ந்தமை, சீனாவின் வரலாற்றுக் குறிப்பேடுகளால் புலனாகின்றது. பன்னிரண்டாம் நூற்றாண்டில் சைலேந்திரப் பேரரசு, பதினைந்து நாடுகளைத் தன்னுடைய ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவந்தமைக்குச் சீனரின் குறிப்புகள் சான்று பகருகின்றன. இதற்குமேல், மூன்று நூற்றாண்டுகள் வரை இந்த அரசைப்பற்றி நாம் சீனர்களின் குறிப்புகளால் அறிய முடிந்தாலும், சைலேந்திர அரச மரபினரின் குறிப்புகள் ஒன்றும் கிடைக்கவில்லை.

ஆயினும், கி. பி. பதினான்காம் நூற்றாண்டுவரை, ஏதோ ஓர் அரசமரபு அந்நாட்டை ஆண்டுவந்ததாகத் தெரிகிறது. கி. பி. 1183-இல் பொறிக்கப்பட்டதும், சையாவில் (Chaiya) கிடைத்துள்ளதுமான கல்வெட்டொன்று 'மகா ராஜ ஸ்ரீமத் திரிலோகராச மௌலிவிபூஷண வர்மதேவன்' என்னும் அரசனைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. கி. பி. 1230-ஆம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டொன்றால், சந்திரபானு என்ற அரசனைப் பற்றித் தெரிய வருகிறது.

சூளவமிசம் எனும் இலங்கையின் வரலாற்றுஏடு, 'சுமத்தி ராவை' ஆண்ட சந்திரபானு என்ற அரசன் கி. பி. 1236-க்கும் 1256-க்கும் இடையே, இரண்டுமுறை பெரும்படையை அனுப்பி,

இலங்கையை முற்றுகையிட்டான் என்று கூறுகிறது. முதன்முறை அவன், இலங்கைத்தீவு முழுவதையும் மண்மேடாகச் செய்தும், இலங்கையிலிருந்து விரட்டப்பட்டான். இரண்டாம் முறை, சோழர், பாண்டியர் படைகளைத் துணையாகக் கொண்டு சந்திரபானு படையெடுத்து வந்தான். முதலில் அவன், பெரு வெற்றி பெற்றபோதிலும், இறுதியில் அவன் உயிர்தப்பிச் செல்வதே அரிதாயிற்று என்றும் அவ்வரலாற்று ஏடு அறிவிக்கிறது. இதனால், கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில், சிறிதுகாலம் இலங்கையும் சைலேந்திரரின் ஆதிக்கத்துக்குட்பட்டு இருந்தமை புலனாகிறது.

## பாண்டியரும் சைலேந்திரரும்

சந்திரபானுவின் அறியாமையால் உண்டான தோல்வி, சைலேந்திரப் பேரரசிற்குச் சாவுமணி அடித்திருக்க வேண்டும். ஜடாவர்மன் சுந்தரபாண்டியன், சுமத்திரா மன்னனை எதிர்த்துப் போரிட்டுக் கொன்றதாகவும், அதனால் கடாரம் பாண்டியனால் கைப்பற்றப்பட்டதாகவும், கி. பி. 1264-இல் பொறிக்கப்பட்ட கல்வெட்டொன்றின் மூலம் பாண்டியன் பெருமிதப்படுவதை அறிகிறோம். இக்கல்வெட்டில் குறிப்பிடப் பட்ட அரசன் சந்திரபானுவாகவோ அவனுக்குப் பின் அரசுரிமை பெற்றவனாகவோ இருக்க வேண்டும்.

## உள்நாட்டுக் குழப்பம்

சந்திரபானுவின் காலத்திலேயே, அவனுடைய நாட்டில் குழப்பங்களும், கலகங்களும் உண்டாயின. அவனுக்குக் கீழ்ப் படிந்திருந்த வீரன் ஒருவன், அந்நாட்டின் ஒருபகுதிக்குத் தன்னை அரசன் என்று அறிவித்ததோடு, அப்பகுதியைத் தனது ஆட்சிக் குட்பட்ட நாடாக ஆளவும் தொடங்கினான். இவ்வாறு நாடு சிதறுண்டு, சீர்குலையத் தொடங்கியது. சந்திரபானு இலங்கையில் அடைந்த மாபெரும் தோல்வி, நாட்டில் 'பல்குழுவையும் பாழ் செய்யும் உட்பகையையும்' தோற்றுவித்து, சைலேந்திரப் பேரரசின் அழிவிற்கு வழிவகுத்தது.

இச்சீர்கேடான நிலையினைச் சயாமிலிருந்த தாய்களும், மலேயா அரசும் நன்முறையில் பயன்படுத்திக் கொண்டனர். வடக்கிலும், தெற்கிலும் வல்லமை வாய்ந்த அரசுகளுக்கு இடையே சிக்கிச் சிதைந்தமையால், 'சுமத்திரா' தன்னுடைய ஆதிக்கத்தை இழந்து, சிறு சிற்றரசின் நிலையை அடைந்தது. இத்தகைய இழிநிலையில், கி. பி. 1377-இல் ஜாவா கைப் பற்றும் வரையில் சைலேந்திரப் பேரரசின் உயிர் ஊசலாடிக்

கொண்டிருந்தது. பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சைலேந்திரப் பேரரசு இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயிற்று. ஐந்து நூற்றாண்டுகள் தன்னிகரற்ற கடல் வல்லரசாகக் கீழைநாடுகளில் விளங்கிய தமிழ்நாட்டவரால் நிறுவப் பெற்ற பேரரசு, கால வெள்ளத்தினால் மோதப்பட்ட மணற் கோட்டையாயிற்று.

## விடுதலை பெற்ற மலேசியா

சைலேந்திரப் பேரரசு சிதறுண்டபொழுது, ஜாவாவைச் சேர்ந்த கிருதநாகரன், கி.பி. 1275-இல் மலேயாவை வென்றான். ஆனால், 1292-இல் அவன் இறந்தவுடன் மலேயா விடுதலை அடைந்தது. அக்காலத்தில், அந்நாடு வாணிகத்தில் செழிப்புற்று விளங்கியது. இதனை, மார்கோபோலோ சிறப்பாகக் குறிப்பிடுகின்றார். மேலும், சுமத்திரா, எட்டு சிற்றரசுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்றும், அவற்றுள் ஒன்று சுல்தானியர் ஆட்சிக்குட்பட்டிருந்தது என்றும், மற்ற அரசுகள் பெயரளவில் சீனாவின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தன என்றும் அவர் அறிவித்துள்ளார்.

சுமத்திராவுக்கும் இந்தியாவுக்குமிடையே, குறிப்பாகக் குஜராத்துடன் வாணிக உறவு நிலவியதன் காரணமாக அத்தீவிற்கும், மலேசியாவின் மற்றப் பகுதிக்கும் இஸ்லாமிய சமயம் பரவியது. தமிழகத்தின் மேலைக்கடற்கரைப் பகுதியில் வாழ்ந்த 'மாப்பிள்ளைகள்' என்றஇஸ்லாமியர், வாணிகத்தின் பொருட்டுக் கீழை நாடுகளுக்குச் சென்று வந்தனர். அவர்களுள் சிலர், தனித் தனி குழுக்களாகச் சென்று, தென்கிழக்கு ஆசிய நாடுகளில் குடியேறினர். அக்குழுக்களுள் சிலர் சுமத்திராவிலும் நிலைத்து வாழத் தொடங்கினர். அதன் விளைவாக, இஸ்லாமிய சமயம் கீழைநாடுகளில் நன்கு பரவியது. சற்றேறக், குறைய 1345-இல் வட சுமத்திராவில் இஸ்லாமிய சமயம் சிறந்த நிலையில் இருந்ததாக இபின் படூடா (Ibin Batuta) குறிப்பிடுகிறார்.

தாந்திரிகப் பௌத்த சமயத்தைச் சேர்ந்த ஆதித்திய வர்மனின் (1347-75) கீழ், மலேயா மிகச்சிறந்த நிலையை அடைந்தது. அத்தலைவர் பெயரளவிற்கு மட்டும் சாவகத்திற்கு அடங்கி, மத்திய சுமத்திராவில் ஆதிக்கம் செலுத்தி வந்தார். 1365-இல் சுமத்திராவின் மற்றச் சிற்றரசுகளும், சாவகத்தின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டன. சாவகத்தில் அப்பொழுது மஜபாகிதப் பேரரசு சிறப்புற்று விளங்கியது. அப்பேரரசினுடைய வீழ்ச்சியின் விளைவாகப் பதினைந்தாம் நூற்றாண்டின் தொடககத்தில், வடசுமத்திரா, சீனாவின் அரசியலாதிக்கத்திற்கு ஆட்பட்டது. சிறிது சிறிதாக, இஸ்லாமிய சமயம், அப்பகுதியில் பரவியது.

பதினாறாம் நூற்றாண்டில் சுமத்திராவிலிருந்து போர்னியோ, செலிபசு தீவுகட்கு இஸ்லாமிய சமயம் பரவியது.

## இஸ்லாமியத்தின் நுழைவு

எனினும், ஒன்று குறிப்பிடத்தக்கது. இஸ்லாமிய சமயம் இந்தோனேசியாவிற்குப் போர்க்கோலம் பூண்டு வரவில்லை. மேலும் வாள்முனையில் அச்சமயம் மக்களிடம் பரப்பப்படவும் இல்லை. அரேபியாவிலிருந்தும் பாரசீகத்திலிருந்தும் வணிகர்களாலும், சமயத் தொண்டர்களாலும் கொண்டுவரப்பட்டதைக் காட்டிலும், குஜராத்திலிருந்தும் தென்னிந்தியாவிலிருந்தும் குடியேறிய முஸ்லிம்களாலுமே, தென்கிழக்கு ஆசிய நாடுகளில் இஸ்லாமிய சமயம் பரப்பப்பட்டது.

ஒருகால் சமயச் சடங்குகளும் சிக்கலான பழக்கவழக்கங்களும் நிறைந்த இந்தியச் சமயங்களினால் உண்டான பெரும் சுமையைப் பொறுத்துக் கொள்ள முடியாது, தவித்துக் கொண்டிருந்த இந்தோனேசிய மக்களுக்கு, எளிமையும், மக்களாட்சிப் பண்பும் மிக்க இஸ்லாம் கவர்ச்சிமிக்கதாகத் தோன்றி இருக்கலாம். அதனால், அவர்கள் அதை ஆர்வத்தோடு வரவேற்றுப் போற்றிப் பின்பற்றியிருக்கலாம். காம்பூச்சியா மக்களுக்கு ஈனயான பௌத்த சமயம் எவ்வாறு புதுமையும் கவர்ச்சியும் உடையதாகத் தோன்றியதோ, அதைப்போன்று இந்தோனேசிய மக்களுக்கு, இஸ்லாமிய சமயம் காட்சி அளித்திருக்க வேண்டும். இதனால், அமைதியான முறையில் எத்தகைய அழிவுச் செயல்களிலும் ஈடுபடாத நிலையில், இஸ்லாமிய சமயம் இந்தோனேசியாவில் பரவியது எனலாம்.

# 7. 2. 7

# நாகரிகம்

சுமத்திராவில் செய்யப்பட்ட தொல்பொருள் ஆராய்ச்சியின் விளைவாகப் பண்டைக் காலத்தில் அங்கு வாழ்ந்த மக்கள், புதிய கற்கால நாகரிகத்தினைத் தழுவியவர்களாக இருக்கவேண்டும் என்பது தெரியவருகிறது. அந்நிலையில்தான், அவர்கள் இந்திய நாகரிகத்தோடு தொடர்புகொண்டனர். அதனால், அவர்கள் நாகரிக வளர்ச்சியில் விரைந்து முன்னேறவில்லை. எனினும், படிப்படியான வளர்ச்சியை அடைந்து சிறந்தனர் எனலாம்.

## சமுதாய நிலை

சுமத்திராவின் சமுதாயத்தில், இரண்டுவகை அமைப்புகள் உண்டாயின. பழங்குடி மக்கள் தொன்றுதொட்டுத் தங்கள் குலமரபுகளைப் போற்றி ஆதரிக்கும் சிறு சிறு இனக்குழுவினராக வாழ்ந்து வந்தனர். அயல்நாட்டு நாகரிகத்தையும், சமயத்தையும் செல்வாக்கையும் ஏற்றுக்கொண்ட மேட்டுக்குடி மக்களிடத்து, இந்திய சாதிப் பாகுபாடு, பையப்பையப் பரவலாயிற்று. இந்தியாவைப்போன்று, இங்குச் சாதிப்பாகுபாடு கடுமையான தாகவும் நெகிழ்ச்சியற்றதாகவும் ஆகிவிடவில்லை. எனினும், உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற வேறுபாடு செல்வாக்குற்ற தோடு, உயர்ந்த சாதியினர் சமுதாயத்தில் பெருமைக்குரியவர் களாகவும், சிறப்புமிக்கவர்களாகவும் கருதப்பட்டனர் என்பது மறுக்க முடியாத உண்மை.

சுமத்திராவில் வாழும் மக்களிடையே, வழங்கும் குடிப்பெயர்கள் (சாதிப் பெயர்கள்) தென்னிந்தியாவினைச் சிறப்பாகத் தமிழகத்தினைப் பின்பற்றியனவாகும். சோழியன்,

பாண்டியன், மலையாளன், பல்லவன், தக்கன் (தக்கணம்) முதலிய பெயர்கள் இங்குக் குறிப்பிடத் தக்கன.

## சோழர் பாண்டியர் - சாதிப்பெயர்கள்

"இப்பழங்குடி மக்களின் சமுதாய அமைப்பு தொல்பழங் காலம் முதல் நின்று நிலவி வருவதாகும். இப்பெயர்களைக் கொண்டோர், தென்னிந்தியாவில் பேராற்றலும் பெருமதிப்பும் உடையவர்களாக விளங்கிய காலத்தில், இந்நாட்டு மக்களால் விருப்பத்தோடு கொண்டுவரப்பட்டவையாக இருக்கவேண்டும்"[7] என்பர் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார். வடசுமத்திராவில் வாழும் 'படாக்கு' ப் பழங்குடி மக்களிடத்து, இன்றும் சோழ, பாண்டிய, சேர, பல்லவ எனும் தமிழ்க் குடிப்பெயர்கள் வழங்கப்படுகின்றன.

## சமயநிலை

ஸ்ரீவிசயத்தின் அரசியல் பெருமை, வாணிகச்சிறப்பு, அங்குக் காணப்பெற்ற பௌத்த சமயக் கல்வியின் செழிப்பு முதலியவற்றைப் பற்றி, அந்நாட்டிற்குச் சென்ற சீன யாத்திரி கனான 'இட்சிங்' குறிப்பிடுகின்றான். அவன் சம்ஸ்கிருத மொழியின் இலக்கணத்தைக் கற்றுக்கொள்ள அங்கு ஆறுதிங்கள் (கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முடிவில்) தங்கியிருந்தான்.

"ஆயிரத்திற்கு மேற்பட்ட பௌத்த குருமார்கள் அங்குக் காணப்படுகின்றனர். அவர்தம் உள்ளம் நற்பழக்கங்களிலும் கல்வியிலுமே செல்லுகிறது" எனவும், "மத்திய அரசில் (இந்தியா) உள்ளது போலவே, அவர்கள் நிலைபேறுடைய பல நூற்களையும் ஆராய்ந்து கற்கின்றனர்" எனவும் அவன் கூறுகிறான்.

சோழர், பாலர் ஆகிய அரசமரபினரின் கல்வெட்டுகளிலிருந்து சைலேந்திரரைப் பற்றிய செய்திகள் சில அறியப்படுகின்றன. எட்டாம் நூற்றாண்டிலிருந்து பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை, சீரும், சிறப்பும் பெற்றுத் திகழ்ந்த அந்த இந்தோனேசியப் பேரரசைப் பற்றிய உண்மை செய்திகளைவிட, மிகுதியாக மனப்பதிவு வழிப்பட்ட செய்திகளே எடுத்துரைக்கப்படுகின்றன. சைலேந்திரர் மகாயான பௌத்த சமயத்தவராவர். நாளந்தா வுடனும் நாகப்பட்டினத்தோடும் அவர்கள் கொண்ட தொடர்பும், அவர்தம் சமயப்பற்றையும், கல்வியைப் போற்றி ஆதரிக்கும் பண்பையும் புலப்படுத்துகின்றது.

---

7. Nilakanta Sastri, K. A., South Indian Influences in the Far East, P. 134.

மகாயான பௌத்த சமயம் வங்காளத்திலிருந்து சுமத்திரா விற்குச் சென்றிருக்க வேண்டும். கி. பி. 782-இல் சைலேந்திரப் பேரரசனாகச் சிறப்புற்று விளங்கிய தாரணி இந்திரவர்மனுக்குக் குலகுருவாக இருந்தவர் குமாரகோசர் என்பவராவார். அவர் கௌட (வங்காள) தேசத்திலிருந்து வந்தவர் என்று சொல்லப்படுகிறது.

ஒன்பதாம் நூற்றாண்டில், சைலேந்திரர் அரசமரபைச் சேர்ந்த பாலபுத்திரதேவர், நாளந்தாவில் ஒரு பௌத்தமடத்தைக் கட்டி, வங்காளத்தை ஆண்ட பால அரசனான தேவபாலனை, அதைப் பராமரிப்பதற்கு ஐந்து ஊர்களை மானியமாக வழங்குமாறு வேண்டிக்கொண்டார். அவ்வேண்டுகோளுக்கு இணங்கிய தேவபாலன் ஒரு செப்பேட்டின் மூலம் அம்மடத்திற்கு மானியம் வழங்கியுள்ளான். அச்செய்பேட்டில் சைலேந்திர மன்னனைப்பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

மேலும், இந்தியாவில் விக்கிரமசிலப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த அதீசன் என்றபௌத்த துறவி, சுமத்திராவிற்குச் சென்று பத்து ஆண்டுகள் அங்குத் தங்கி, தருமகிர்த்தி என்ற குருநாதரிடம் புத்தசமயக் கலைஞானங்களைக் கற்றறிந்தான் என்பது இங்குக் குறிப்பிடத்தக்க சிறப்புமிக்க செய்தியாகும்.

ஸ்ரீவிசயத்தில் பரவியிருந்த பௌத்த சமயம், மகாயான பௌத்த சமயம் என்பதற்குப் பல சான்றுகள் கிடைத்துள்ளன. அங்குப் போதிசத்துவரின் சிலைகள் பல கண்டெடுக்கப்பட்டுள்ளன. எட்டாம் நூற்றாண்டு முதல் தென்கிழக்காசிய நாடுகளில்மகாயான பௌத்த சமயத்தினைப்பரப்பிய பெருமை, சைலேந்திர மன்னர்க்கே உரியதாகும். இஸ்லாமிய சமயம் பதினாறாம் நூற்றாண்டில் செல்வாக்குப் பெறத் தொடங்கிய காலம் வரையில், மகாயான பௌத்த சமயமே, அதனுடைய பல்வேறு பிரிவுகளுடன் சுமத்திராவில் சிறப்புற்று விளங்கியது.

## வாணிகநிலை

இந்தியாவுக்கும் சுமத்திராவுக்கும் இடையே, நெருங்கிய வாணிகத் தொடர்பு இருந்து வந்ததை அங்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. சிறப்பாக, பரோங் பகுதியில் லோபொல்தொல்வா (Lobol Tolwa) என்னும்இடத்தில் கிடைத்துள்ள தமிழ்க் கல்வெட்டு ஒன்று, தமிழகத்தின் வாணிகக் குழுவைப் பற்றிக்குறிப்பிடுகின்றது. சகவருடம் 1010 (கி.பி. 1088) ஆண்டில், திசையாயிரத்து ஐந்நூற்றுவர் என்னும் வணிகக் குழுவினர் அளித்த ஒரு தானத்தை அது தெரிவிக்கிறது.

## 7. 2. 8.

## கலைச் செல்வம்

ஸ்ரீவிசயப் பேரரசின் காலத்தில், இந்தியாவிற்கும் சுமத்திராவிற்கும் மிக நெருங்கிய கலைத்தொடர்பு இருந்துவந்தமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். ''இந்து- சாவகக் கலைக்கும், இந்து-சுமத்திராவின் கலைக்கும் இடையே காணப்படும் வேறுபாடுகள் கட்டடக்கலையில் முதலிடம் பெற்றுள்ளன. ஒன்று செங்கற்களால் கட்டப்பட்ட கட்டடங்களைக் கொண்டு விளங்குகின்றது. மற்றொன்று, கருங்கற்களால் அமைக்கப்பட்ட கட்டடங்களை உடையது. பௌத்த ஸ்தூபிகளின் ஒரு பகுதி எடுப்பானதாகச் செங்கற்களால் சுமத்திராவில் கட்டப்பட்டுள்ளன''. இவையே இவ்விரு கலைகளுக்கும் இடையே காணப்படும் முதன்மையான வேறுபாடுகள் எனலாம்.

புகித் செகுந்தாங்கில் உள்ள கருங்கல்லினால் மிகப்பெரிய வடிவில் கட்டப்பட்ட புத்தரின் சிலையே, சுமத்திராவில் கிடைத்துள்ள கலைச்சின்னங்களுள், மிகப் பழமையானதும், மிகச் சிறப்பு வாய்ந்ததுமாகும். அந்தச்சிலை, பல துண்டுகளாக உடைந்துபோயிருந்தன. அவற்றை ஒன்றாகப் பொருத்தி அழகு வாய்ந்த சிலையினை பி. ஜே. பெர்குலின் மறுவடிவம் தந்துள்ளார். அது பெருமிதத் தோற்றத்தோடு, நேர்த்தியுடையதாகக் காணப்படுகிறது. அச்சிலை காந்தாரக் கலைப்பாணியைப் பின்பற்றிச் செய்யப்பெற்றதாகும்.

### கற்சிலைகள்

அதற்கு அருகில், தென்னிந்திய எழுத்துகளில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகள் காணப்படுகின்றன. (ஜகார்த்தா) படேவியா

பழம் பொருள் காட்சிச்சாலையில் காணப்படும் புத்தர் சிலையின் தலைப்பகுதி மேற்கண்ட சிலைக்குரியது என்று அறிஞர்கள், அதை அச்சிலையில் பொருத்தி, அதற்கு ஒரு முழு வடிவம் கொடுத்துள்ளனர். அச்சிலை முதற் பார்வைக்கு காந்தாரக் கலைப் பாணியைப் பின்பற்றிச் செய்யப்பட்டதைப்போல் தோன்றும். ஆனால், கூர்ந்து நோக்குவோமானால், அது அமராவதியில் செய்யப்பட்டதாக இருக்க வேண்டும் என்று கலையியல் அறிஞர்கள் கருதுகின்றனர். அதனுடைய காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டாக இருக்கலாம் என்பது அவர்களுடைய துணிவாகும். 'வெங்கியிலிருந்து கடல் கடந்த கீழை நாடுகளுக்கு பௌத்த சமயச் சிற்பங்களை ஏற்றுமதி செய்வது கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன்பே, தொடங்கியிருக்க வேண்டும். போங்குதுக்கில் (p' ong Tuk) கிடைத்துள்ள புத்தரின் சிறிய வெண்கலச்சிலையும், செகுந்தாங்கில் கிடைத்துள்ள மாபெரும் புத்தர் சிலையும் கி. பி. 150-இல் முடிவுற்ற தென்னிந்திய சிற்பக்கலை வளர்ச்சியின் காலகட்டத்தைச் சேர்ந்தனவாகும்' என்பது பக்கோபர் (Bachhober) என்ற தொல்பொருள் ஆராய்ச்சியாளரின் முடிவாகும். இக் கருத்தினை நாம் முற்றிலும் ஒப்புக்கொள்ள முடியாது. சிறிய உலோகச் சிலைகள் வேண்டுமானால் தென்னிந்தியாவிலிருந்து சுமத்திராவில் இறக்குமதி செய்யப்பட்டிருக்கலாம். ஆனால், மிகப்பெரிய கற்சிலைகள் இறக்குமதி செய்யப்பட்டன என்பது பொருந்தாது. அதற்கு மாறாக, அமராவதிக் கலைஞர்கள் சுமத்திராவில் குடியேற்றப்பட்டு இருக்கலாம். அவர்கள், தங்கள் பண்டைக் கலை மரபைப் பின்பற்றிப் புதிய நாட்டில் வியக்கத் தக்க வகையில் சிறந்த கலைச் செல்வங்களைப் படைத்து அளித்திருக்கலாம் என்று பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கருதுகின்றார்.[8]

உருளை வடிவமான தலையணியோடு கூடிய கற்சிலையொன்று பங்கா தீவிலுள்ள கோதாகபூரில் கண்டெடுக்கப்பட்டுள்ளது. அதனை ஆராய்ந்த டாக்டர் ஸ்டட்டர்ஹைம், அது சாவகப் பண்போ, காம்பூச்சியப் பண்போ கலக்காத விஷ்ணுவின் சிலை என்று கூறுகிறார். இச்சிலை பல்லவ- இந்து சமய செல்வாக்கினை உணர்த்துகிறது என்பர்.

## வெண்கலச் சிலைகள்

வெண்கலத்தாலான புத்தரின் சிலையினுடைய தலையொன்று அழகும் நேர்த்தியும் வாய்ந்ததாக விளங்குகிறது.

---

8. Nilakanta Sastri, K. A., History of Sri Vijaya, P. p. 102-103.

அதன் கழுத்தைச் சுற்றிலும் அழகிய மாலையொன்று அணியப் பெற்றிருக்கிறது. கலைப்பாணி அடிப்படையிலும், படிமக்கலை நோக்கிலும் இச்சிலையினை ஆராய்கின்றபொழுது, அது ஈடு இணையற்ற கலைப்படைப்பாக உள்ளமை புலனாகின்றது. அதில் சாவகக் கலைப்பாணியின் செல்வாக்கோ, தென்னிந்தியக் கலை முறையின் ஆதிக்கமோ சிறிதும் இடம்பெறவில்லை. அதனால், முற்றிலும் தனிப்பண்பு வாய்ந்த சுமத்திராவின் ஒப்பற்ற கலைச்செல்வமாக அது விளங்குகிறது என்றுகூறினால், அது மிகையாகாது.

அவலோகிதரின் சிலையொன்று சாவகக் கலைப்பாணியின் சாயல் உடையதாகக் கிடைத்துள்ளது. இச்சிலை புத்தருடைய சிலைகளின் வடிவ அமைப்பிலும், பாணியிலும் பெரிதும் வேறு பட்டதாக உள்ளமை இங்குக்கருதத்தக்கது. இந்தச் சிலை (அவலோகித ஈசுவரர்) மிகப்பருத்ததாகவும், எளிமையும் வழ வழப்புமிக்க அழகுடன் விளங்குகிறது. இப்பண்புகள் பல்லவர் காலத்திய அரசரின் உருவச்சிலைகளை நம்முடைய நினைவிற்குக் கொண்டு வருகின்றன. அவை கி. பி. ஏழாம், எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. ஹெய்னே கெல்டர்ன் (Heine Geldern) எனும் அறிஞர் சுமத்திராவின் இச்சிலை கி.பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த பல்லவர் காலத்திய கலைப்பாணி யோடு தொடர்புடையன என்று அறுதியிட்டுக் கூறியுள்ளார்.[9]

மேற்கண்ட சிலைகள் அனைத்தும், ஸ்ரீவிசயப் பேரரசின் தொடக்க காலத்தில், சுமத்திராவின் கலைகள் தென்னிந்திய கலைப்பாணியின் அடிச்சுவட்டைப் பின்பற்றி, போற்றி வளர்க்கப்பட்டமை புலனாகிறது. பின்னர், சுமத்திராவின் கலை வளர்ச்சியில் உண்டான மாற்றங்களை அறிவதற்குப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை.

பண்ணையில் பத்மாசனத்தில் வீற்றிருக்கும் போதிசத்து வரின் சிலை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அது தென்னிந்தியக் கலைப்பாணியில் செய்யப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கது. அச்சிலை கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் செய்யப்பட்டதாக இருக்கலாம்.

பெராக்கு மாநிலத்தில், கண்டெடுக்கப்பட்ட புத்தர் சிலைகள் வெண்கலத்தில் செய்யப்பட்டனவாகும். அவை குப்தர் காலத்திய கலை மரபினைப் பின்பற்றிச் செய்யப்பட்டுள்ளன என்பதில் யாருக்கும் கருத்து வேற்றுமை இல்லை. பெராக்கு அரும்பொருள்

---

9. Ibid. P. 105.

காட்சியகத்தில் உள்ள அவலோகித ஈசுவரின்சிலை, சிறந்த கலைப்படைப்பாகும். அது எளிமை நிறைந்த அழகுடன் எட்டுக் கைகளை உடையதாக இருக்கிறது. அதனுடைய தோற்றத்தில் அது தென்னிந்திய பாணியைப் பின்பற்றிச் செய்யப்பட்டது என்பதற்குரிய சான்றுகள் காணபடுகின்றன. பேலம்பாங்கில் கிடைத்த புத்தர் சிலையைக் காட்டிலும் இச்சிலை, அழகிய வேலைப்பாடுகள் கொண்டதாகும்.

கி. பி. எட்டு அல்லது ஒன்பதாம் நூற்றாண்டுகளில் வெண்கலத்தால் செய்யப்பட்ட அவலோகித ஈசுவரரின் சிலைகள் இரண்டு இங்குக் குறிப்பிடத்தக்கன. அவை பாலருடைய கலை மரபினைப் பின்பற்றியவையாகத் தோன்றுகின்றன. அவற்றுள் ஒன்று 21 செ. மீ. உயரம் உடையது; தாமரை பீடத்தில் வீற்றிருக்கும் கோலத்தில் அமைக்கப்பட்டது. மற்றொன்று 24 செ. மீ. உயரம் உடையது; நின்ற கோலத்தில் நான்கு கைகளையுடையது. அதனுடைய பீடமும், பின் ஆதாரமும் தனித்தனியே செய்யப்பட்டுச் சிலையுடன் பொருத்தப்பட்டுள்ளன.

சாவகத்தின் தனிப்பேரரசர்களாக விளங்கிய சைலேந்திரர், தம்முடைய ஆதிக்கத்தைச் சுமத்திராவில் நிலைநாட்டிய காலத்தில், படைக்கப்பட்ட கலைப்பொருள்களில் சாவகக் கலைப் பாணியின் செல்வாக்குப் பெயரளவிற்கு இடம்பெற்றுள்ளதைக் காணுகிறோம. சாவகக் கலைப்பாணி நாளந்தா, பாலர் கலை மரபுகளைப் (வட இந்தியக் கலைப்பாணியை) பின்பற்றியவை என்பது பின்னர் விளக்கப்படும். பேலம்பாங்கிற்கு அருகில் மூன்று வெண்கலச் சிலைகள் கிடைத்துள்ளன. அவற்றுள் ஒன்று மைத்திரேயி; மற்றொன்று அவலோகித ஈசுவரர்; பிறிதொன்று புத்தரின் சிலையாகும். அவை சாவகக் கலைப்பாணியின் பண்புகள் நிறைந்தனவாக உள்ளன.

ஜம்பி என்னும் இடத்தில் கிடைத்த இரு புத்தர் சிலைகள், குப்தர் கலை முறையைப் பின்பற்றி கி. பி. ஏழாம் நூற்றாண்டில் செய்யப்பட்டனவாகும். ஜெய்யா பகுதியில் கிடைத்த உடைந்த சிலைகள் அடுத்து நம்முடைய கருத்தைக் கவர்வனவாகும். அவை இரண்டும் கரிய வெண்கலத்தால், செய்யப்பட்டு உள்ளன. அவற்றுள் ஒன்று 34 செ. மீ. உயரம் உடையது. அச்சிலையின் கால்பகுதி கிடைக்கவில்லை; தலையும் உடலும் கிடைத்துள்ளன. பெரிதும் அவலோகித ஈசுவரரின் சிலையாக அது இருக்கலாம். அமைதி பொலியும அழகிய முகமும், தோள்களின் பெருமிதத் தோற்றமும், மாண்புமிக்க அணிகலன்களின் அழகிய வேலைப் பாடுகளும் இச்சிலையினை இந்திய—இந்தோசீனத்தின் தலை

சிறந்த வெண்கலச் சிலைகளுள் ஒன்றாகக் கருதிப் போற்றுமாறு தூண்டியுள்ளது எனலாம். இரண்டாவது சிலையும் உடைந்த நிலையில் கைகள் அற்றுக் காணப்படுகிறது. அச்சிலையும் அவலோகித ஈசுவரருடையதாகும்; கலையழகில் மேற்கண்ட சிலையைக் காட்டிலும் தரம் குறைந்ததாக இச்சிலை உள்ளமை குறிப்பிடத்தக்கது. தியானபுத்தரின் சிலையொன்று இந்திய-சாவகக் கலைப்பாணியில் செய்யப்பட்டு உள்ளதைச் சின்னனில் நாம் காணுகிறோம். அது எட்டுக் கைகளையுடைய சிலையாகும்.

சுமத்திராவின் கலைவளர்ச்சியின் பிற்பகுதியில், சாவகக் கலையின் செல்வாக்கு முனைப்பாக உள்ளமை மேற்கண்ட சிலைகளினால் தெரியவருகிறது. அப்பாணியில் சிற்சில வட்டார மாற்றங்களும் திரிபுகளும் இடம்பெற்றுள்ளன. அத்துடன் வெளிநாட்டிற்குரிய (தென்னிந்திய) கலைமரபுகளும் அவற்றில் பதிந்து கிடக்கின்றன.

நான்கு கைகளுடன் நின்ற கோலத்தில் உள்ள அவலோகித ஈசுவரரின் சிலைஒன்று, சுமத்திராவில் கிடைத்துள்ளது. அச்சிலை இரண்டு தாரைகளுக்கு இடையே நின்ற வண்ணம் அமைக்கப் பட்டுள்ளது. அதனுடைய பீடத்தில் ஒரு சாசனம் பொறிக்கப் பட்டுள்ளது. அச்சிலை பதார போக நாதரின் சிலையென்றும், சூரியன் என்ற தலைமைச் சிற்பியால், சகம் 946 (கி. பி. 1024) இல் செய்யப்பட்டது என்றும் அக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. அதில் காணப்படும் மலாய் மொழிக்குரிய சொல் ஒன்று, அது சுமத்திராவில் செய்யப்பட்டது என்பதற்குச் சான்றாக விளங்கு கிறது. சிலைகளைச் செய்த சிற்பியின் பெயர்களை அறிவது மிகவும் அரிய செயலாகும். இச்சிலையைச் செய்த சிற்பியின் பெயர் 'சூரியன்' என்று பொறிக்கப்பட்டுள்ளமை கருதத்தக்க தாகும். ஸ்ரீவிசயபுரத்தின் உலகப் புகழ் வாய்ந்த போகநாதரின் தத்துவம் பற்றி அக்காலத்தைச் சேர்ந்த நேப்பாளத்திய ஏட்டுச் சுவடி ஒன்று சிறப்பாக விளங்கி வருவதும் இங்கு நினைவுகூர்தற் குரியதாகும்.

அமோகபாசரின் சிலைக்குழு அடுத்து ஆராயத்தக்கதாகும். அதன் பின்புறத்தில் பொறிக்கப்பட்டுள்ள சாசனத்தில், கி பி. 1347 என்ற ஆண்டிற்குச் சமமான சக ஆண்டு காணப்படுகிறது. இச்சிலை 'கீழைச் சாவகத்தின் சிங்கசாரி கலைமரபின் அழகிய படைப்பாகும். அதன் தலையைச் சுற்றி ஒளிவட்டமும், இடப் பக்கத்தில் சூரியனும், வலப்பக்கத்தில் சந்திரனும் அமைக்கப் பட்டுள்ளனர். அதனுடைய தோள்களில் மகரங்களின் தலைகள் வட்டமான கண்களோடு செதுக்கப்பட்டுள்ளன. அத்தெய்வம்

எட்டுக் கைகளையுடையதாக இருந்தது. அதன் இடப்பக்கத்தில், ஹயக்கிரிவனும், வலப்பக்கத்தில் சுதனகுமாரனும, சியாமதாராவும் நிறுத்தப்பட்டுள்ளனர். சுற்றிலும் தாமரை மலரின்மீது எட்டு புத்தரின் நிலைகளும் தாரையின் சிலைகளும் பொருத்தப் பட்டுள்ளன. மூலவிக்கிரகத்தின் அடிகளுக்குக் கீழே அழிந்து போன எழுத்துகள் காணப்படுகின்றன. அதற்குக் கீழே செங்குத்தான பட்டடைக்கரை ஒன்று இருக்கிறது. அதன்மீது புகழ்மிக்க 'ஏழு மணிகள்' (சப்த ரத்தினங்கள்) காணப்படுகின்றன அவை குதிரை, சக்கரம், அரசி, மணி, அமைச்சர், படைத்தலைவர், யானை எனபனவாகும். இந்த வடிவங்கள் பேரரசன் விஷ்ணு வர்த்தனரையும், அவருடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்களையும் குறிப்பதாகும். அக்கல்வெட்டும் சிலைகளும் சுமத்திராவின் சமயநிலையை நமக்குத் தெரிவிக்கின்றன.

பைரவரின் சிலையொன்று மேற்குச் சுமத்திராவில் கிடைத்திருக்கிறது. அச்சத்தை உண்டாக்கும் தோற்றமும், அருவருக்கத்தக்க இயல்புகளுமுடைய இச்சிலை, மிகப்பெரிய வடிவில் செய்யப் பட்டிருக்கிறது. உயிர்க்களையற்று வெறும் சடப்பொருளாகத் தோன்றும் இச்சிலை, அக்காலத்திய சமயக் கொள்கையின் காட்டுவாழ் மக்கள் இயல்புகளை நினைவூட்டுகிறது. இச்சிலை பதினான்காம் நூற்றாண்டின் இடைப்பகுதியில், காலசக்கர புத்தசமயத்தவனாக விளங்கிய ஆதித்தியவர்மன் என்ற அரசனுடைய சிலையாகும் என்பது அறிஞர்களுடைய கருத்தாகும்.

## கோயில்

சுமத்திராவில் கட்டடக்கலையின் நிலைக்களனாகிய 'கோயில்கள்' என்று சொல்லத்தக்கவை ஒன்றும் காணப்படவில்லை. பேலம்பாங்கிற்கு மேற்கில், லாமதங்கு ஆற்றின் கரைப் பகுதியிலும், சிமங்கம்பத்து என்னும் இடத்திலும், அழிந்துபோன கோயில்களின் சின்னங்கள் உள்ளன. அவை சிவன் கோயிலாக இருந்திருக்கவேண்டும் என நாம் துணிவதற்குரிய சான்றுகள் அவ்விடிபாடுகளில் காணப்படுகின்றன. கல் கட்டுமானத்தின் சிதைவுகள் சில அங்கு அழியாமல் உள்ளன. மேலும், தூண்கள் உத்தரங்கள், மேல்தளங்கள் ஆகியவற்றின் சிதைவுகள் காணப் படுகின்றன. அவை அழகிய சிற்பவேலைப்பாடுகளோடு, கருத்தைக் கவரும் வகையில் கலையழகு வாய்ந்தனவாக உள்ளன. அவை சைலேந்திரருடைய ஆட்சிக்காலத்தில், சாவகக் கலைப்பாணியைப் பின்பற்றி, அமைக்கப்பட்டன என்பதில் சிறிதும் ஐயமில்லை. இவற்றைத் தவிர, சுமத்திராவில் கோயில்கள் இருந்தமைக்குரிய தடயங்கள் கிடைக்கவில்லை.

ஸ்ரீவிசயப் பேரரசின் காலத்தில், இந்தியாவுக்கும் சுமத்திராவுக்கும இடையே நிலவிய நேர்முகத் தொடர்பு காரணமாகச் சுமத்திராவின் வெண்கலச் சிலைகளிலும் கற்சிலைகளிலும் அமராவதி சிற்பமரபு, பல்லவர் கலைப்பாணி, குப்தர் கலைமுறை, பாலர் கலைப்பாணி ஆகியவற்றோடு சோழரின் வெண்கலச் சிலைகளின் பாணியும் பொலிவுற்று விளங்குவதை யாரும்எளிதில் புறக்கணித்துவிடவோ, குறைவாக மதிப்பிடவோ முடியாது.

# 7. 2. 9.

# சுமத்திராவில் தமிழர்

பண்டைக் காலத்திய சுமத்திராவில், தமிழ்நாட்டில் இருந்து, ஆயிரக்கணக்கான தமிழர்கள் குடியேறியதை முன்னரே கண்டோம்.

வட சுமத்திராவில், சுமத்திரா நாட்டுக்குடி மக்களோடு ஒன்றாகச் சேர்ந்து சுமத்திரா மக்களாக மாறிவிட்ட தமிழர்கள் பலராவர். ஆனாலும், பல்லவர், சோழர், பாண்டியர், சேரர் எனும் தங்கள் மூதாதையரின் குடிப்பெயர்களைத் தங்கள் சாதிப் பெயர்களாகக் கொண்டு இன்றும் அவர்கள் வாழ்ந்து வரு கின்றனர்.

## குடியேறிகள்

இவர்கள் அல்லாமல், காலனி ஆதிக்க காலமான கடந்த நானூறு ஆண்டுகளில் ஆயிரக்கணக்கான தமிழர்கள், வேலை வாய்ப்புகளைக் கருத்தில் கொண்டு, சுமத்திராவில் குடியேறியுள் ளனர். அவர்கள் வழிவந்தோர் இக்காலத்தில், சுமத்திராவின் மக்களாக மாறிவிட்டனர். தோற்றத்தாலும், வீட்டினுள் பேசிக் கொள்ளும் மொழியாலும், வழிபடும் தெய்வங்களாலும், அவற் றிற்குக் கட்டியுள்ள திருக்கோயில்களாலும், கொண்டாடும் பண்டிகைகளாலும் அவர்கள் எல்லாரும், தமிழர்களாகக்காட்சி தருகின்றனர். மற்றவகையில், அவர்கள் யாவரும் சுமத்திராவின் தேசிய நீரோட்டத்தில் கலந்துவிட்டனர் எனச் சொன்னால் மிகையாகாது.

## மேடானில் தமிழர்

சுமத்திராவின் தலைநகரான மேடான் நகரில் மட்டும் ஏறக்குறைய 15,000 தமிழ் மக்கள் வாழ்கின்றனர். அவர்கள் இருநூறறைம்பது ஆண்டுகளுக்கு முன்பு, அங்குக் குடியேறிய தமிழ் மக்களின் கால்வழியினராவர்.

## இந்தியப் பெயர்கள்

உணவாலும் உடையாலும் இந்தோனேசியர்களாக அவர்கள் மாறிவிட்டனர். ஆனால், வீட்டில் பேசும் மொழி, தமிழாகவே இருக்கிறது. மக்களுக்கு இடப்பெறும பெயர்கள், பெரிதும் தமிழ்ப்பெயர்களாகவே உள்ளன. கேசவன், தருமராசன், முனிசாமி, சுந்தரம், நித்தியானந்தம், முருகன், இராமன் எனும் ஆண்களின் பெயர்கள், பெருவழக்காக உள்ளன.

பெண்களுக்கு ராஜலட்சுமி, லட்சுமி, சரசுவதி, மீனா, பாக்கியவதி, ரத்தினாவதி, பத்மாவதி போன்ற பெயர்களும் வழங்குகின்றன.

இந்தோனேசியாவிற்கேயுரிய தேசிய மக்களுக்கும் இராமன், கிருஷ்ணன, இந்திரன், இலக்குமணன், இராவணன், துரியோதனன, தரும(வா)ன், அருச்சுனன் எனும பெயர்கள் வழங்கப் பட்டு வருகின்றன.

இவற்றைப் போன்றே, லட்சுமி, பத்மாவதி, சுசிலா, ரத்னாவதி, திரௌபதி எனும் பெயர்கள் இன்றும் அவர்கள் இடையே வழக்கில் உள்ளன.

இந்தோனேசியாவின் விடுதலைக்குக் காரணமாக இருந்தவரும், இந்தோனேசியக் குடியரசின் முதல் தலைவருமான சுகர்ணோவின் முதல் மனைவி—காதலி—எழுத்தாளரும் கதையாசிரியரும், பத்திரிகையாளருமாவர். அந்த அம்மையாரின் பெயர், பத்மாவதி தேவ் என்பதாகும். தலைவர் சுகர்ணோவின் இரண்டாவது காதலியாகவும் நாட்டியப் பேரழகியாகவும் மனைவியாகவும் விளங்கிய அம்மையாருக்கு ரத்னாவதி என்பது பெயர்.

## கோயில்கள்

மேடாவில் இந்துசமயத் தெய்வங்களின் கோயில்கள் பல உள்ளன. அவற்றுள் தண்டாயுதபாணி கோயில், மாரியம்மன் கோயில, பிள்ளையார் கோயில்கள் சிறப்பு மிக்கன.

ஆண்டுதோறும் தண்டாயுதபாணி கோயிலில், தைப்பூசத் திருவிழா மிகச் சிறப்பாக மூன்று நாட்கள் நடைபெறுகிறது. நூற்றுக்கணக்கான காவடிகள் அவ்விழாவின் பொழுது முருகனுக்குச் செலுத்தப்படுகின்றன. அவற்றுள் பால்காவடியும், சருக்கரைக் காவடியும் மிகப்பலவாக உள்ளன.

ஆடிமாதத்தில் மாரியம்மன் திருவிழா, சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. தீமிதித்தல், தீச்சட்டி ஏந்துதல், கரக ஆட்டம், அலகு குத்திக் கொள்ளுதல் போன்ற பண்டைத் தமிழகப் பழக்க வழக்கங்கள் அங்குப் பின்பற்றப்படுகின்றன.

விழாக்களின் பொழுது, அந்நாட்டு அரசு தமிழர்களுக்கு மட்டும் விடுப்பு அளிக்கிறது. விழாவிற்கு வரும், இந்தோனேசியாவின் பல்வேறு பகுதி மக்களுக்கும், இலவச உணவளிக்கப் படுகிறது.

## தெருப்பெயர்கள்

'மேடான்' எனும் நகரப் பெயரே, 'மேடான மைதானம்' எனும் பெயரின் திரிபாகும். தமிழர்கள் தாங்கள் குடியேறிய நாடுகளில், தங்கள் ஊர்ப்பெயர்களையே, தெருப்பெயர்களாகச் சூட்டியுள்ளார்.

மேடானில் காவிரிப்பூம்பட்டினத்துத் தெரு, மதுரைத்தெரு, மதராஸ் தெரு முதலியவற்றைக் காணலாம்.

## தமிழ்ப் பள்ளிகள்

மேடானில் வாழும் தமிழ் மக்களுடைய குழந்தைகள், தமிழைப் பயில வாய்ப்பு இல்லை. ஆனால், அங்குள்ள கோயில்கள் எல்லாம் மாலை வேளைகளிலும், விடுமுறை நாட்களிலும் தமிழ்ப் பள்ளிகளாக மாற்றப்படுகின்றன.

மேடான் தமிழ்ச் சங்கத்தின் முயற்சியால், கோயில்களில் எட்டாம் வகுப்பு வரையிலான தமிழ்ப் பாடங்களும், பிறகலைகளும் பயிற்றுவிக்கப்படுகின்றன.

## தமிழ் நாடகங்கள்

நவராத்திரி, தீபாவளி, பொங்கல் ஆகிய பண்டிகைகளின் பொழுது புதிய, புதிய தமிழ் நாட்டிய நாடகங்களும், மேடை நாடகங்களும் அரங்கேற்றம் செய்யப்படுகின்றன.

அங்குள்ள தமிழ் இளைஞர் நாடகம் படைக்கும் பணியில் ஈடுபட்டு வருகின்றனர். அவர்களுள் நித்தியானந்தம், 'தமிழ்நேசன்' என்போர் முதன்மையானவர்களாவர்.

தமிழ்த் திரைப்படங்களுக்குப் பேராதரவு, இந்தோனேசியா முழுவதிலுமே தரப்படுகிறது.

மேடானின் தலைவர் (சிற்றரசர்) சுல்தான் எனப்படுபவ ரவார். அவருடைய மூதாதையர்கள், தமிழ் நாட்டில் இருந்து வந்தவர்கள் என்று அவர் கூறுகிறார்.

**கற்பு**

இந்தோனேசியாவில், பொதுமகளிருக்குத் தனிப்பட்ட 'சொர்க்கபூமிகள்' ஒதுக்கப்பட்டுள்ளன. எனினும், பொது நிலையில், சீதையின் மாட்சியைப் போற்றும் நாடானமையால் அங்கு 'கற்பு நெறி' கண்டிப்பாக வலியுறுத்தப்படுகிறது.

தலைவர் சுகர்ணோவின் பட்டத்தரசி பத்மாவதிதேவி அவர்கள், ''ஆண்களும் ஒருமுறைக்கு மேல், வேறு எந்தப் பெண்ணையும் காதலிக்கக் கூடாது. இந்த நெறியைத் தமிழ் நாட்டவர்களும் போற்றிப் பின்பற்ற வேண்டும்'' என்று ஒரு தமிழரிடம் தெரிவித்துள்ளமை, இங்குச் சிந்திக்கத்தக்கதாகும்.

''வேற்றுமையிலே ஒற்றுமை காண்பதை''யே, இலட்சிய மாகக் கொண்டு ஆட்சி நடத்தும் இந்தோனேசியக் குடியரசில், இத்தகைய தமிழ்ப் பண்பாட்டின் கூறுகள் சில ஆழவேரூன்றி யுள்ளமையால் வியப்பு உண்டாக வில்லை.

## 7. 3. 1.
## ஜாவாவின் பண்டை வரலாறு

### நாட்டின் அமைப்பு

இந்தோனேசியாவில் உள்ள தீவுகளுள், ஜாவா நீர்வளமும் நிலவளமும் மிக்கது. மலேயா தீவுக் குழுவினுள், சுந்தா தீவுகள் என்று அழைக்கப்படுவனவற்றுள், ஜாவா ஒரு பெரிய தீவாகும். 520 கி. மீ. நீளமும், 46 முதல் 103 கி. மீ. அகலமும் உடையது இத்தீவு. ஜாவாவின் வடக்கே ஆழமற்ற சாவகக்கடல் இருக்கிறது. அது ஜாவாவைப் போர்னியோவிலிருந்து பிரிக்கிறது. தெற்கே மிகவும் ஆழமான இந்தியப் பெருங்கடல் ஒரு சிறு தீவுகூட இல்லாமல், அண்டார்ட்டிக்கு துருவமுனை வரையில் பரந்து கிடக்கிறது. கிழக்கில், உள்ளே குறுகிய இடைகழி ஜாவாவைப் பாலித்தீவிலிருந்து பிரித்து விடுகிறது. வடமேற்கே உள்ள சுந்தா இடைகழி ஜாவாவையும், சுமத்திராவையும் வேறு வேறாகப் பிரித்துவிடுகின்றது. இந்த இடைகழி 11 கி. மீ. முதல் 43 கி. மீ. அகலம் உடையதாக இருக்கிறது. ஜாவாவீற்கு வடக்கே பல தீவுகள் உள்ளன. அவற்றுள் முக்கியமானது மத்ரா (மதுரை) எனப் படும் தீவாகும். அதனுடைய வரலாறு ஜாவாவின் வரலாற்றோடு ஒன்றாகக் கலந்து காணப்படுகிறது. எல்லா வகையான செயல்முறைகளுக்கும் மதுரை, ஜாவாவின் ஒரு பகுதியாகவே கருதப்பட்டு வருகிறது. இவ்விரு தீவுகளையும் ஒரு சிறு இடைகழி பிரிக்கிறது.

ஜாவாவின் நடுப்பகுதியில், இடையறவு இல்லாத மலைத் தொடர் ஒன்று செல்லுகிறது. அது எரிமலையின் பண்பு உடையதாகும். பல ஆறுகள் ஜாவாவில் ஓடுகின்றன. அவற்றுள் இரண்

டொன்றைத் தவிர, மற்றவை எல்லாம் மிகச் சிறியவை. எனவே, அவை வாணிகத்திற்கோ, கப்பல் போக்குவரத்திற்கோ நெடுந் தொலைவு செல்லுவதற்குப் பயனற்றவையாக உள்ளன. ஆனால், அவை உழவுத் தொழிலுக்குப் பெரிதும் பயன்பட்டு வருகின்றன. உலகில் மிகவும் செழிப்புமிக்க நாடுகளில் ஜாவா ஒன்று. இந்நாட்டில் மக்கள் நெருக்கம் அதிகம். இந்தத் தீவில் மட்டும் ஏறக்குறைய எட்டுக் கோடி மக்கள் வாழுகின்றனர்.

## இந்திய இலக்கியங்களில் ஜாவா

வான்மீகி இராமாயணத்தில், வானரப்படைகள் சீதையைத் தேடிச்சென்ற நாடுகளுள் ஒன்றாக, 'யவத்தீவம்' குறிப்பிடப் பட்டுள்ளது. 'யவத்தீவம்' (வால் கோதுமைத் தீவு) என்பதே பண்டைக் காலத்தில், இந்தியர்கள் ஜாவாவிற்கு வழங்கிய பெயராகும். யவத்தீவம். சுவர்ண தீவத்திற்கு (சுமத்திராவிற்கு) அருகில் இருப்பதாக வான்மீகி இராமாயணம் தெரிவிக்கிறது.

பண்டைத் தமிழ் இலக்கியத்தில் 'சாவகம்' என்ற பெயரால் ஜாவா குறிப்பிட்டுள்ளதை நாம் காண்கிறோம். மணிமேகலை என்னும் செந்தமிழ்க் காப்பியத்தின் தலைவியாகிய 'மணிமேகலை', சாவக நாட்டிற்குச் சென்று, அங்குச் சிறப்புற்று விளங்கிய 'தருமசாவகன்' என்ற பௌத்த சமயத் துறவியை வணங்கியதாக அக்காப்பியம் கூறுகிறது. மணிமேகலையின் ஆசிரியர் சாவக நாடு, நாகபுரத்தைத் தலைநகரமாகக் கொண்டுள்ள கடல் சூழ்ந்த ஒரு தீவு என்று கூறுகிறார். அத் தீவிற்கு மணிமேகலை சென்ற பொழுது, புண்ணியராசன் என்பவன் ஆட்சிபுரிந்து வந்தான். இத்தீவைச் சேர்ந்த மற்றோர் அரசனான பூமிசந்திரனைப் பற்றிய குறிப்பும் மணிமேகலையில் காணப்படுகிறது.

> ''மாநீர் வங்கம் வந்தோர் வணங்கிச்
> சாவக நன்னாட்டுத் தண்பெயல் மறுத்தலின்
> ஊனுயிர் மடிந்த துரவோ யென்றலும்''
>
> (மணி. 14:73—75)

மேலும் தமிழகத்திற்கும் சாவகத்திற்கும் நீர்வழிப் போக்கு வரவு இருந்துவந்தமையும் இதனால் தெரியவருகிறது.

தாலமி என்ற யவன நூலாசிரியன், ''பார்லி செழிப்புற்று வளரும் தீவு'' என்றும், ''செழிப்புமிக்க பொன்விளையும் நாடு'' என்றும் சாவகத்தைக் குறிப்பிட்டுள்ளான். இதனால், ''யவத் தீவம்'' என்னும் சம்ஸ்கிருதச் சொல்லின் பொருளைத் தாலமி

(Ptolemy) நன்கறிந்திருந்தான் என்பது புலனாகின்றது. இவற்றிலிருந்து கி. பி. முதலிரண்டு நூற்றாண்டுகளிலேயே, இந்தியாவிற்கும் சாவகத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருந்து வந்தமை அறியப்படுகிறது.

கி. பி. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த பௌத்த சமயத்தின் திருநூலான 'நிதேசா' (Niddesa) என்ற பாலிமொழி நூலின் விளக்க உரை ஒன்றில், கடலோடிகள் தவறாமல் சென்று காணவேண்டிய நாடுகளைப் பற்றிய விளக்கம் தரப்பட்டுள்ளது. அவற்றுள் ஜாவாவும், சுமத்திராவும் இடம்பெற்றுள்ளன.

இவற்றால் நெடுங்காலத்திற்கு முன்பு இருந்தே, இந்தியாவிற்கும் ஜாவாவிற்கும் இடையே நெருங்கிய வாணிகப் பண்பாட்டுத் தொடர்பு இருந்து வந்தமை உறுதிப்படுகிறது.

## புராண மரபு

சாவகத்தின் வரலாற்றில் இந்தியக் குடியேறிகள் அந்நாட்டினுள் காலெடுத்துவைத்தமை வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்ச்சியாகும். சாவகத்திற்கு முதன்முதல் வந்து குடியேறிய இந்தியர்களைப் பற்றிச் சுவையான பல புராணக் கதைகள் வழங்கி வருகின்றன. அஜி சாகன் என்பவன் தலைமையின்கீழ், பாரதப் புகழ் வாய்ந்த அஸ்தினாபுரத்திலிருந்து, உள்ளவுரம் வாய்ந்த வீரர்கள் குழுவுடன் சாவகத்திற்கு வந்து சேர்ந்தான் என்பது முதல், வேறுபல கதைகள் வழங்கி வருகின்றன. இரண்டாவது இந்தியக் குடியேறிகள் ஜாவாவிற்கு வந்ததைப் பற்றியும் ஒரு பழங்கதை சொல்லப்படுகிறது. குஜராத் நாட்டு இளவரசன், தன்னுடைய தோழர்களோடு ஜாவாவிற்கு வந்து குடியேறியதாகக் கூறுவர். இந்நிகழ்ச்சி, காலத்தால் சிறிது பிற்பட்டதாக இருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

மற்றொரு பழங்கதை மரபு, ஜாவாவிற்கு முதன்முதல் சென்று குடியேறியவர்கள் கலிங்க நாட்டினைச் சேர்ந்தவர்கள் என்று அறிவிக்கிறது. "கலிங்க நாட்டு அரசன் 20,000 குடும்பங்களைச் சாவக நாட்டிற்கு அனுப்பிவைத்தான். இவர்கள் நாளடைவில் வாழ்வில், செழிப்பும், சிறப்பும் பெற்று விளங்கினர். அதனால் அவர்களுடைய மக்கள் தொகை பன்மடங்காகப் பெருகியது. எனினும், அவர்கள் சக ஆண்டு 289 (கி. பி. 377) வரை நாகரிகம் அற்ற நிலையிலேயே இருந்து வந்தனர். இறைவன் அவர்களிடம் இரக்கம் கொண்டு, 'கனோ' என்ற அரசனை அவர்களுக்கு அளித்தான். பின்னர், நானூறு ஆண்டுகள் ஆட்சிபுரிந்த மூன்று

தலைமுறையைச் சேர்ந்த அரசர்களைப் பற்றி விளக்கியபின், அக்கதை பின்வருமாறு தொடருகிறது. ''இக்காலத்தில் அஸ்தினா என்ற பெயருடைய மற்றோர் அரசு தோன்றியது. அதனைப் புலசரன் என்ற அரசன் ஆட்சி புரிந்தான். அவனுக்குப் பின் அவனுடைய மகன் அபியாசனும், பின்னர், அவன் மகன் பாண்டு தேவநாதனும் ஆட்சி புரிந்தனர்.'' இக்கதையின் இறுதிப் பகுதி மகாபாரதக் காப்பியத்தின் பாத்திரங்களான பராசரர் (புலசரன்), வியாசர் (அபியாசர்), பாண்டு போன்றவர்களைக் குறிப்பிடுகிறது என்பது தெளிவாகிறது.

ஜாவாவின் கிழக்குக் கோடியில் உள்ள மாவட்டம் ஒன்று 'பெசுகி' என்று அழைக்கப்படுகிறது. வடக்குக் கரையோரத்தில் இதே பெயரில், சிறப்புற்று விளங்கிய ஒரு தலைநகரத்தின் பெயராலேயே அம்மாவட்டம் அழைக்கப்படுகிறது என்பது குறிப்பிடத் தக்கது. வாசுகி என்ற இந்தியப் பெயரின் திரிந்த ஜாவானிய மொழி வடிவமே, 'பெசுகி' என்பதாக ஆராய்ச்சியாளர்கள் துணிந்துள்ளனர்.

## அகத்தியரின் வருகை

பன்னெடுங்காலத்திற்கு முன்பு, இந்தியாவிலிருந்து அகத்திய முனிவர் ஜாவாவிற்கு வந்து குடியேறியதாக ஒரு கதை வழங்கி வருகிறது. கல்வெட்டுகள் பொறிக்கப்பட்ட அகத்தியமுனிவரின் சிலைகள் பல, ஜாவாவில் கிடைத்துள்ளன. இதனால், கி. பி. எட்டாம், ஒன்பதாம் நூற்றாண்டுகளில், ஜாவாவில் அகத்தியரின் வழிபாட்டு நெறி செல்வாக்குற்றிருந்தமை தெரியவருகின்றது.

அகத்தியரைப்பற்றி வழங்கும் கதைகள் அனைத்தும், ஆரியர்கள் தமிழகத்தில் நுழைந்து, மெல்ல மெல்ல தமிழகத்தை ஆரிய மயமாக்கியதை உருவகப்படுத்தி உரைப்பதேயாகும்[1] என்பது அறிஞர் துணிவு.

தமிழகத்திற்கு அகத்தியர் வந்ததாகச் சொல்லப்படும் கதையின் உட்பொருள், தமிழ்நாட்டின் ஆரிய நாகரிகம் பரவிய கதையை எடுத்துரைப்பதாகும். அதைப் போன்றே. ஜாவாவிற்கு அகத்தியர்சென்றார் என்று வழங்கும் கதையும், தென் கிழக்கு ஆசிய நாடுகளுக்கு ஆரிய நாகரிகம் சென்று பரவிய வரலாற்றைச் சொல்லுகிறது என்றும் அறிஞர்கள் நம்புகின்றனர்.

1. Sivaraja Pillai, K. N., Agasthya in the Tamil Land, p. 63.

## பாண்டியரின் அரசகுரு

"ஜாவாவில் கிடைத்துள்ள சிலைகளுள் அகத்தியருடைய சிலைகள் சிறப்பிடத்தைப் பெற்றுள்ளன. பாண்டிய அரச மரபோடு நெருக்கமான தொடர்பு உடையவராக : தென்னிந்தியாவில் அகத்தியர் போற்றப்படுகிறார். இதைப்போன்று சம்பா, காம்போஜம் போன்ற அரசுகளை நிறுவுவதில் அகத்தியர் முக்கியமான பங்கினைப் பெற்றவர் என்ற நம்பிக்கை கி. பி. பத்தாம், பதினோராம் நூற்றாண்டுகள் வரையில், அந்நாடுகளில் இருந்து வந்ததை முன்னரே கண்டோம்.

மாண்புமிகு கிரேக்க நாட்டில், கிரேக்கர்கள் தங்கள் தாயகத்திலிருந்து புதிய நாடுகளுக்குச் சென்று குடியேறிய பொழுது, தங்கள் நகரிலுள்ள புனிதமான நெருப்புக் குண்டத்திலிருந்து தீயினைத் தங்களுடன் எடுத்துச் சென்றனர். தங்கள் தாயகத்தோடு கொண்டிருக்கும் பாரம்பரியத் தொடர்பினை நினைவூட்டும் அறிகுறியாக அவர்கள், தீச்சுடரைக் கொண்டு சென்றனர். அதைப்போன்று, இந்தியக் குடியேறிகள், தங்களுடன் சிவ வழிபாட்டு நெறிகளை உடன் கொண்டு சென்றனர். அவ்வழிபாட்டு நெறியின் தலைவராகிய சிவன், நாட்டைக் காக்கும் காவல் தெய்வமாகவும் போற்றப்பட்டார். அவ்வழிபாட்டு நெறியைக் கீழை நாடுகளுக்குக் கொண்டு சென்றவர், சிவபெருமானின் முதன்மையான பக்தனும், பாண்டிய அரசர்களின் அரச குருவுமாக விளங்கிய அகத்தியரேயாவார். அவருக்கு நாம் நன்றி செலுத்தும் கடப்பாடுடையவர்களாவோம்"[2] என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் மொழிந்துள்ளமை இங்குக் கருதத்தக்கது.

இதனால், தமிழகத்திலிருந்து பலர், சிவ வழிபாட்டோடு அகத்தியர் நெறியையும் உடன்கொண்டு சென்றிருக்க வேண்டும் என்பது புலனாகின்றது. இந்தியாவின் ஏனைய பகுதிகளிலிருந்து மக்கள் சாவகத் தீவில் குடியேறினராயினும், தமிழ்நாட்டினரே பெரும்பாலும் அங்குக் குடியேறியிருந்தனர் என்பது பலர் கருத்தாகும். சாவக நாட்டிற் காணப்படும், இந்து நாகரிகத்தின் தோற்றம், தமிழ்நாட்டின் கடலோரங்களிலேயன்றிக் கலிங்க நாட்டில் காணப்படுவது அன்று[3] என்றும் டாக்டர் பர்ணலின் (Burnell) கருத்து மேற்கண்ட கொள்கையை அரண் செய்வதாக அமைந்திருக்கிறது.

---

2. Nilakanta Sastri K. A., History of Sri Vijaya, pp. 6-7
3. Burnell, A.C., Elements of South Indian Palaeography, p, 132.

## மாறன் -பாண்டியர் குடிப்பெயர்

மேலும் ஜாவாவின் முதல் அரசன், ஸ்ரீமாறன் என்ற பெயருடையவனாவான். இப்பெயர் ஜாவா நாட்டின் அரச மரபு, தமிழ் நாட்டு அரச மரபின் வழிவந்தது அல்லது தொடர்புடையது என்பதை அறிவுறுத்துகிறது. ஜாவாவில் உள்ள பழங்குடி மக்களிடத்து, தமிழகப் படகர்களுக்குரிய (Badagas) திராவிடப் பழங்குடி மக்கள் கூட்டத்தினரின் பெயர்கள் வழங்கி வருகின்றன. நெடுங்காலத்திற்கு முன்பே, குரோம் (Krom) என்ற அறிஞர் ஜாவா, சுமத்திரா நாடுகளில் இந்தியக் குடியேற்றங்களை அமைத்தவர்கள் திராவிடர்களின் வழி வந்தவர்களாக இருக்கவேண்டும் என்பதைத்தக்க காரணங்கள் காட்டி நிறுவியுள்ளார்.[4] இவற்றால், தென்னிந்திய மக்கள், சிறப்பாகத் தமிழ் நாட்டு மக்கள் முதன்முதலில் ஜாவா, சுமத்திரா போன்ற நாடுகளில், இந்தியக் குடியேற்றங்களை அமைத்திருக்கலாம் என்று கருதுவது தவறாகாது.

## வரலாற்றின் தொடக்கம்

சீனாவின் காலவழிச் செய்திக் கோவைகள், சாவக நாட்டு அரசன் ஒருவனைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. அவ்வரசனுடைய பெயர் 'தேவவர்மன்' என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். அவ்வரசன் கி. பி. 132-இல் சீனப் பேரரசனுக்கு, ஒரு தூதர் குழுவை அனுப்பினான். அக்குழுவை அன்போடு வரவேற்றுப் பாராட்டிய சீன அரசன், ஜாவாவின் அரசனுக்குத் தனது நல்லெண்ணத்தின் அறிகுறியாகப் பொன்னாலாகிய முத்திரை ஒன்றையும், அழகிய பட்டாடை ஒன்றையும் கொடுத்து அனுப்பியதாகத் தெரிகிறது. 'தேவவர்மன்' என்னும் பெயரே, இரண்டாம் நூற்றாண்டில், இந்தியர் அத்தீவில் குடியேறியிருந்தனர் என்பதற்குத் தக்க சான்றாகும்.

## கல்வெட்டு காட்டும சாவகம்

ஜாவாவில் இன்றுவரை கிடைத்துள்ள கல்வெட்டுகள் எல்லாம் போர்னியோவில் கிடைத்துள்ள கல்வெட்டுகளைக் காட்டிலும் காலத்தால் பிற்பட்டனவாகும். ஜாவாவில் கிடைத்துள்ள மிகப் பழைய கல்வெட்டு, மேற்கு ஜாவாவில் உள்ளதாகும். அது கி. பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று தொல்பொருள் ஆராய்ச்சியாளர் மதிப்பிட்டுள்ளனர். அது

4. Krom, J., 'A History of Netherland's India' in the Bulletin of the Colonial Institute, Amsterdam. 1938-39 PP. 52-54.

பல்லவர் காலத்திய கிரந்த எழுத்துகளில் பொறிக்கப் பட்டுள்ளது. அச்சம்ஸ்கிருத மொழிக் கல்வெட்டு 'தரும நகரத்தை ஆண்ட 'பூரணவர்மன்' என்ற அரசனைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. தருமநகர் என்பது மேற்கு ஜாவாவில் படேவியாவிற்கு (ஜகார்த்தா) அருகிலிருந்த ஊராகும். தரும (Taruma) என்பது அந்நாட்டு மொழியில் நீலிச் சாயத்தைக் (Indigo) குறிப்பதாகும்.

### வைணவ சமய அரசன்

அக்கல்வெட்டு, பூரணவர்மன் வைணவ சமயத்தைப் பின் பற்றியவன் என்பதையும், அவனுடைய இருபத்திரண்டாவது ஆட்சியாண்டில் சந்திரபாகை, கோமதி என்ற இரண்டு கால் வாய்களை வெட்டினான் என்பதையும் குறிப்பிடுகிறது. மேலும், அவன் பிராமணர்களுக்கு ஆயிரம் பசுக்களைத் தான மாக வழங்கினான் என்பதும் அக்கல்வெட்டால் தெரியவரு கின்றது. இதனால், மேற்கு ஜாவாவில், அக்காலத்தில் இந்து அரசு எழுச்சியுற்றிருந்தமை புலனாகின்றது.

### வர்மன்' எனும் சிறப்புப்பெயர்

ஜாவாவின் ஆதிகாலத்திய கல்வெட்டுகளில், 'வர்மன்' என்ற அரசருக்குரிய பட்டப்பெயர் குறிப்பிடப்பட்டுள்ளமை யும், தென்னிந்தியாவில் வழக்கிலிருந்த சகஊழியே (Saka Era) ஜாவாவின் கல்வெட்டுகளில் மட்டும் அல்லாமல், தென்கிழக்கு ஆசிய நாடுகள் அனைத்திலும் பயன்படுத்தப்பட்டுள்ளமையும் தென்னிந்திய நாகரிகமும் பண்பாடும், அந்நாடுகளில் பரவியிருந் தமைக்குரிய சான்றுகளாகும்.

சங்கல் (Changal), தினயா (Dinaya), என்னும் இடங்களில் கிடைத்துள்ள ஜாவாவின் கல்வெட்டுகளே ஆண்டுக் குறிப்புடன் காணப்படுகின்றன. சங்கலில் காணப்படும் கல்வெட்டு, சம்ஸ் கிருத மொழியில் பல்லவர் கிரந்த எழுத்தின் பிற்கால வடிவில் எழுதப்பட்டுள்ளது. அக்கல்வெட்டு, தென்னிந்தியாவில், குஞ்சர குஞ்சம்' என்னும் இடத்திலிருந்து வந்து, குடியேறிய அரசனின் மரபிலே வந்த ஓர் அரசன், ஜாவாவின் நடுப்பகுதியில் சிவலிங்கம் ஒன்றை நிறுவிய செய்தியைச் செப்புகின்றது.

### அகத்தியர் சிலை

தினயா கல்வெட்டு சக ஊழிய 682-ல் (கி. பி. 760), பொதிய மலையில் யோகத்தில் ஈடுபட்டிருந்ததாகக் கருதப்பட்ட அகத்திய முனிவருக்கு, சிலையொன்று நிறுவப்பட்டதைக் குறிப்பிடுகிறது. இதனால் அகத்தியர் முனிவராக மட்டும்

அல்லாமல், தெய்வமாகவும் போற்றி, வழிபாடு செய்யப்பட்டமை தெரிகிறது.

'திரிதிரதயா' என்னும் பிராமணன் காம்பூச்சியாவிலிருந்து, 800 கெளிங்கு அல்லது கிளிங்கு குடும்பங்களோடு ஜாவாவிற்கு வந்து, 'பிரமாரிகாளி' என்ற ஜாவாவின் பெண்ணை மணந்து அந்நாட்டிற்கு அரசனானான் என்று அந்நாட்டுப் பழங்கதை ஒன்று கூறுகிறது. இதில் குறிப்பிடப்படும் 'கெளிங்கு அல்லது கிளிங்கு' என்னும் பெயர், இந்தியாவின் கீழைக் கடற்கரைப் பகுதியில் மகாநதிக்கும் கோதாவரிக்கும் இடைப்பட்ட பகுதிக்கு வழங்கிய 'கலிங்கம்' என்ற பெயரின் திரிபு என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இவை அனைத்தும் இந்திய-சாவகப் பண்பாட்டின் தாயகம் தென்னிந்தியாவாகத்தான் இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றன. இங்குக் குறிப்பிடப்பட்ட கல்வெட்டுகள் அனைத்தும் பிராமணச் சமயச் சார்புடையன என்பதும் இங்குக் கருதத்தக்கது.[5]

### பாகியான் கண்ட சாவகம்

கி. பி. 414-இல் இலங்கையிலிருந்து சீனாவிற்குத் திரும்பிச் சென்ற பாகியான் என்ற சீன யாத்திரிகன், தனது பயணத்தின் இடையே, ஐந்து மாதங்கள் சாவகத்தில் தங்கினான். சாவகத்தில் பிராமணர்கள் மிகுதியாகவும் பௌத்தர்கள் மிகச் சிலராகவும் இருந்ததையும், பிராமண சமயம் சீரும் சிறப்பும் பெற்று விளங்கியதையும், பௌத்த சமயம் ஒளி குன்றியிருந்ததையும் அந்தச் சீன யாத்திரிகன் வருத்தத்தோடு குறிப்பிடுகிறான்.

### குணவர்மன் கண்ட சாவகம்

இதையடுத்து, கி. பி. 524-இல் பௌத்த சமயத்தைத் தழுவிய 'குணவர்மன்' என்ற காஷ்மீர் நாட்டு இளவரசனாகிய துறவி, சீனாவிற்குப் போகும் வழியில், சாவகத்தில் இறங்கி, அந்நாட்டில் பௌத்த சமயப் பிரசாரம் செய்து, அந்நாட்டு வேந்தனையும், அவன் தாயையும் பௌத்தர்களாக மாற்றி விட்டுச் சீனாவிற்குச் சென்றனன். குணவர்மன், சீன மொழியில் எழுதிய ஏடுகள் பல கிடைத்துள்ளன. பாகியானும், குணவர்மனும் இந்து வாணிகர்களைக் கொண்ட வாணிகக் கப்பல்கள் சாவகத்திற்கும் சீனாவிற்கும் இடையே, பேரளவில் சென்று வந்ததைக் குறிப்பிடுகின்றனர்.

---

5. Vogel, A M., The Relation Between the Art of India and Java, P. 53.

## சாவக அரசின் தலைநகர் இடமாற்றம்

மேற்கு ஜாவா, கி. பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில், எரிமலையின் கொடுமையால் பாழடைந்து போயிற்று. இதனால், சாவகத்தின் மையப் பகுதி சிறப்புறத் தொடங்கியது. சீனமொழியில் 'ஹோ-லோ-தான்' என்ற பெயருடைய அரசு, நடு ஜாவாவில் ஐந்தாம் நூற்றாண்டில், எழுச்சியுற்று விளங்கியது. அது கி. பி. 430, கி. பி. 452-ஆம் ஆண்டுகளில், சீனப் பேரரசருக்கு, இரண்டு தூதர் குழுவினை அனுப்பி வைத்தது. சீனாவின் காலவழிச் செய்திக் கோவைகளில் மற்றொரு சிறப்பு மிக்க, மத்திய ஜாவாவின் அரசொன்று குறிப்பிடப்படுகிறது. அதற்கு 'ஹோ-லிங்' (கலிங்கம்) என்ற பெயர் வழங்கியதாகத் தெரிகிறது! இங்குக் குடியேறிய இந்தியர்கள் கலிங்க நாட்டிலிருந்து வந்திருக்க வேண்டும் என்பது புலனாகிறது. இவ்வரசு கி.பி. ஏழாம் நூற்றாண்டில், பௌத்த சமயத்தின் கோட்டையாக சாவகத்தில் விளங்கத் தொடங்கியது.

## வைதிகச் சமயச் செல்வாக்கு

கி. பி. ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்த வடமொழிக் கல்வெட்டு ஒன்றில், சிவபெருமானும் திருமாலும் குறிப்பிடப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. சாவகத்தின் நடுப்பகுதியில் இந்து சமயம் பரவியிருந்தமைக்கு ஈதொரு சான்றாகும். இங்கு முதன் முதல், நாளினையும், ஆண்டினையும் குறிக்கும் கல்வெட்டு ஒன்று கிடைத்திருக்கிறது. அதில் சகம் 654 (கி. பி. 732) என்று தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது வடமொழியில் எழுதப்பட்டுள்ளது. அக்கல்வெட்டினால், சஞ்சயன் என்ற மன்னன் ஒருவன், மாபெரும் வீரனாக விளங்கினான் என்பது அறியப்படுகிறது. அவன் சைவ சமயத்தைத் தழுவியவன் என்பதும், சிவலிங்கம் ஒன்றை நிறுவி, அவன் வழிபாடு செய்து வந்தான் என்பதும், அதனால் புலனாகின்றன. அவனுடைய கல்வெட்டில் சிவபெருமான், திருமால், பிரமன் ஆகிய மும் மூர்த்திகளுக்கும் கடவுள் வாழ்த்து வழங்கப்பட்டிருக்கிறது. மேலும், தென்னிந்தியாவிலிருந்த 'குஞ்சர குஞ்சம்', 'அகத்திய ஆசிரமம்' ஆகிய இரு இடங்களும் குறிப்பிடப்படுகின்றன. இவை யாவும் ஜாவாவின் நடுப்பகுதியில், தமிழக நாகரிகம் தழைத்தோங்கியதைத் தெளிவாக அறிவுறுத்துகின்றன. அவ்வரசனுடைய கல்வெட்டினால், அவனுடைய மூதாதையர், தென்னிந்தியராக இருக்க வேண்டும் என்பதை நாம் உய்த்துணரலாம். ஆராய்ச்சியாளர்களுள் சிலர், இச்சஞ்சயனே,

சைலேந்திர அரச மரபைத் தோற்றுவித்திருக்க வேண்டும் என்று கூறுகின்றனர்.[6]

எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில், 'சன்னாக' என்ற அரசன் மத்திய ஜாவாவில், ஆற்றல்மிக்க ஓர் அரசினை நிறுவினான். அவனுக்குபிறகு சஞ்சயன் என்ற ஓர் அரசன் ஆட்சி புரியத் தொடங்கினான். கி. பி. 732-இல் அவன் பல்வேறு நாடுகளை வென்று ஒரு பேரரசை நிறுவினான். பிற்காலத்திய கல்வெட்டுகள் அனைத்தும் அவனை மாபெரும் வீரனாகப் போற்றுகின்றன. அவனுடைய தலைநகரம் மத்திய ஜாவாவில் உலகப் புகழ்மிக்க கோயில்களைக் கொண்ட பிராம்பணத்திற்கு அருகில் இருந்திருக்க வேண்டும். சஞ்சயன் இறந்த சிறிது காலத்திற்கெல்லாம், சைலேந்திரர்கள் கி. பி. 742-755க்கும் இடைப்பட்ட காலத்தில், ஜாவாவின் நடுப்பகுதியைக் கைப்பற்றிக் கொண்டனர். அதனால் சஞ்சயனின் வழித்தோன்றல்கள், தங்கள் தலைநகரை ஒரு நூற்றாண்டு காலத்திற்குக் கீழைச் சாவகத்திற்கு மாற்றிக் கொண்டனர். இந்தச் செய்திகளினால், சஞ்சயன் சைலேந்திர மரபைச் சேர்ந்தவன் அல்லன் என்பது புலப்படுகிறது. அங்கு இவர்கள் குறுநில மன்னர்களாக இருந்து வந்தனர். இவர்கள் வழியே மத்ரா (Mataram) எனப்படும் 'மதுரா' அரசு தோன்றியதாகத் தெரிகிறது.

6. Nilakanta Sastri, K. A., Op. cit., P. 24.

## 7. 3. 2.
## சைலேந்திரப் பேரரசு

கி. பி. எட்டாம் நூற்றாண்டில், தென்கிழக்கு ஆசியாவின் சிறு தீவுகள் எல்லாம் ஒன்றாக இணைக்கப்பட்டு, ஆற்றல் வாய்ந்த பேரரசு ஒன்று அமைக்கப்பட்டது. இந்தப் பேரரசை ஆண்ட அரசர், முதல் நான்கு நூற்றாண்டுகள் வரையில் சைலேந்திர அரச மரபைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். எனவே, நாம் அவர்கள் நிறுவிய பேரரசினைச் 'சைலேந்திரப் பேரரசு' எனச் சுட்டுவது தவறாகாது. கி. பி. எட்டாம் நூற்றாண்டு அளவிலேயே, அவர்கள் மலேயா தீபகற்பம் முழுவதிலும் தங்கள் ஆதிக்கத்தினை நிலைநாட்டி விட்டனர். கி. பி. 775-க்குப் பிறகு அவர்கள் லிகோரைக் (ஸ்ரீவிசய அரசை) கைப்பற்றி, 782-இல், ஜாவாவில் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்தலாயினர்.

### பேரரசின் எழுச்சி

இவ்வாறு எட்டாம் நூற்றாண்டின் இறுதியில், சுமத்திரா, ஜாவா, மலேயா நாடுகளில் இருந்து வந்த இந்து அரசுகள் இந்தப் புதிய அரசியல் சக்திக்கு அடிமையாக நேரிட்டது. பல துறைகளில், சைலேந்திரர்கள் புதியதொரு சகாப்தத்தை உருவாக்கினர். வரலாற்றுக் காலத்திலேயே, முதன்முதலாகத் தென்கிழக்கு ஆசியாவின் பெரும்பகுதி ஒன்றுபட்ட ஒரு பேரரசாக அரசியல் வானில் ஒளிவிட்டுத் திகழலாயிற்று. அதன் ஆதிக்கத்திற்குட்பட்ட சிறு நாடுகளாக—மாநிலங்களாகவே அத்தீவுகள் எல்லாம் விளங்கலாயின. இதற்கு முன்பு, எந்த அரசும் தென்கிழக்கு ஆசியாவில் பெறாதப் புகழையும், சிறப்பை

யும் இப்பேரரசு பெற்றுப் பொன்றாப் புகழ்பெற்றது. சைலேந்திரர்கள் பேரரசை நிறுவியதோடு அமையாமல், நிலைத்த பயன்தரத்தக்க ஆக்கப்பணிகள் பலவற்றில் கருத்தைச் செலுத்தினர். அவர்கள் புதியதொரு பண்பாட்டைப் புகுத்தி னர். மகாயான பௌத்த சமயம் புதியதோர் ஆற்றலோடு செயல்பட்டதாலும், கலைத்துறையில் மிகச்சிறந்த முன்னேற்றம் அடைந்திருந்தமையாலும் ஜாவாவில் வியக்கத்தக்க சண்டி கலசன், போராபுதூர் போன்ற மாபெரும் நினைவுச் சின்னங்களை எழுப்ப முடிந்தது. அதற்குச் சைலேந்திரர் அளித்த ஆக்கமும் ஊக்கமுமே காரணமாகும். புதியதோர் எழுத்து முறையை நாகரிக வளர்ச்சிக்கு முற்பட்ட எழுத்து முறையை, முதன் முதலாக இங்குப் புகுத்தியவர்களும் சைலேந்திரர்களேயாவர். அயல்நாட்டவர்களால் மலேசியாவிற்கு 'கலிங்கம்' என்ற பெயர் வழங்கத் தலைப்பட்டமைக்கு அவர்களே காரணமாவார்.

எனினும், சைலேந்திரரின் பண்டை வரலாறு ஒன்றும் நமக்குத் தெளிவாகத் தெரியவில்லை. அவர்கள் எந்நாட்டில் முதலில் அரசர்களாக இருந்தனர் என்பதும் நமக்குப் புதிராகவே இருக்கிறது. பேராசிரியர் ஆர்.சி. மஜூம்தார் அவர்கள் சைலேந் திரர்கள் இந்தியாவிலிருந்து நேரடியாக ஜாவாவிற்குச் சென்று குடியேறியவர்கள் என்றும், அவர்கள் கலிங்க நாட்டை ஆட்சி புரிந்த 'சைலோத்பவ' அரச மரபினரோடு தொடர்பு உடையவர் களாக இருந்திருக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளார்.[7] ஆனால், இக்கருத்து பிற்காலத்திய ஆராய்ச்சியால் வெளியான உண்மைகளினால், பொருத்தமற்றதாகக் கருதப்படுகிறது.

## சைலேந்திரர் மலையத் துவச பாண்டியன் வழியினர்

பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள், 'மலையரசன்' (கிரீசசன்) என்றபெயர் பெரிதும் சிவபெருமானுக் குரிய பெயராகப் பேசப்படுகிறது என்பர். இந்தோனேசிய மக்களின் நம்பிக்கைகளை ஏற்றுக்கொண்ட இந்துக்கள், அதைத் தங்களுக்கு ஏற்றவகையில் மாற்றியும் திருத்தியும் அமைத்துக் கொண்டு இருக்கலாம். தமிழகத்தைச் சேர்ந்த பாண்டிய மன்னர் கள் சிவபெருமானுடைய மரபிலே வந்தவர்கள் என்று உரிமை கொண்டாடியவர்களாவர். சாவக அரசர்கள் 'மீனாங்கித சைலேந்திரர்' என்ற பட்டப் பெயரை சூட்டிக் கொண்டு இருந் தனர் என்பதை அவர்களுடைய கல்வெட்டுகளால் அறிகிறோம் 'சைலம்' என்ற வடசொல்லிற்கு 'மலை' என்பது பொருள்.

---

7. Majumder R. C., Swarnadwipa, Vol. I, PP. 226-227

'இந்திரர்' என்ற சொல்லிற்குத் 'தலைவர்' அல்லது 'அரசர்' என்பது பொருள். 'மீனாங்கித' என்பதற்கு 'மீனினை இலச்சினையாக உடைய' என்பது பொருளாகும். எனவே, அத்தொடருக்கு 'மீனினை இலச்சினையாக உடைய மலைகளின் தலைவர்' என்பது பொருளாக இருக்கவேண்டும். பாண்டியருடைய கொடியில் எப்பொழுதும் இரட்டை கயல்மீன் பொறிக்கப்பட்டிருந்தமை யாவரும் அறிந்த செய்தியாகும். தென்கிழக்கு ஆசியாவை ஆட்சிபுரிந்த சைலேந்திரர்களுக்கும் கயல்மீன் சின்னமாக இருந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கது. எனவே, சைலேந்திரர்கள தமிழகத்தில் தோன்றியவர்களாக இருக்க வேண்டும். இவர்கள் திருவிளையாடல் புராணத்தில் குறிப்பிடும் மலையத்துவச பாண்டியன் வழி வந்தவராக இருக்கலாம்.[8]

ஆனால் பிரான்ஸ் நாட்டுஆராய்ச்சியாளரான ஜே. பிரசிலஸ்கி ஹாலந்து நாட்டு அறிஞர் ஜி. கோயிடஸ் போன்றோர், சைலேந்திரர்கள் ஜாவாவின் பழங்குடி மக்களாக இருக்கவேண்டும் என்று கருதுகின்றனர். கோயிடஸ் என்றஅறிஞர் 'சைலேந்திரர்' என்பது பியூணான் அரசர் என்ற பட்டபெயரின் புத்தாக்கமாக இருக்க வேண்டும் என்பர். ஏனெனில், பனன் அல்லது பியூணன் என்ற கெமர் மொழி சொல்லிற்கு'மலை' என்பது பொருள். பியூணான் அரசமரபினரோடு குருதிக்கலப்பு உடையவர்களாகவும் அவர்கள் ஆண்ட பகுதிகளை எல்லாம்,தங்கள் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வந்தமையாலும், ஜாவாவின் புதிய அரச மரபினர் தங்களை 'மலையரசர்கள்' என்ற பொருளில்'சைலேந்திரர்' என்ற பட்டப் பெயரைச் சூட்டிக்கொண்டிருக்கலாம் அல்லது குடிப்பெயராகவும் அதைக் கொண்டிருக்கலாம் என்பது கோயிடசின்[9] கருத்தாகும். எனினும், அந்த அரச மரபினை பியூணானிலிருந்து தோன்றியது என்பதற்குரியநேர்முகமான சான்றுகள்ஒன்றும் கிடைக்கவில்லை. ஆகவே, சைலேந்திர அரசமரபு ஜாவாவில்தான் தோன்றியது என்று நாம் அறுதியிட்டு உறுதியாகக்கூறுவதும் இயலாத ஒன்றாகவே இருக்கிறது என்பது ஹால்(D. G. E. Hall)என்ற அறிஞரின் கருத்தாகும்.[10]

---

8. Nilakanta Sastri, K.A., Op. Cit., PP. 46-47.

9. Coedes, G., 'On the origin of the Sailendras of Indonesia' in the Journal of Greater India Society (1934), P. 66.

10. Hall, D.G.E., A History of South-East Asia, p. 41.

பாண்டிய மரபினரா?

இக்கருத்துகளை ஒவ்வொன்றாக ஆராய்ந்து பார்ப்போமானால், இன்றைக்கு ஜாவாவில் கிடைத்துள்ள தொல்பொருள் சின்னங்கள், சைலேந்திரர்கள் பாண்டியர்களோடு தொடர்புடையவர்கள் என்னும் கருத்தினை அரண் செய்வதாக உள்ளதை எளிதில் உணரலாம்.

## சைலேந்திரரின் கடலாதிக்கம்

சைலேந்திரர் தோற்றம்பற்றிக் கருத்து வேற்றுமை இருந்தாலும், அவர்கள் கி. பி. எட்டாம் நூற்றாண்டு முதல் ஆற்றல்மிக்க அரசியல் ஆதிக்கம் உடையவர்களாகத் தென்கிழக்கு ஆசியாவில் சிறப்புற்று விளங்கியதை அனைவரும் ஒப்புக்கொள்ளுகின்றனர். அராபிய நாட்டு எழுத்தாளர்கள் சைலேந்திரப் பேரரசினை 'ஜாபாக்' 'ஜாபாஸ்' அல்லது 'மகாராஜாவின் பேரரசு' என்றெல்லாம் பலவாறாகப் போற்றிக் குறித்துள்ளனர். அவர்களுடைய குறிப்பேடுகளிலிருந்து சைலேந்திரப் பேரரசு ஜாவா, சுமத்திரா முதல் காம்பூச்சியா, வியட்நாம் முதலிய பகுதிகளிலும் பரவியிருந்தமை தெரிகிறது.

எட்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில், ஜாவாவின் கப்பற்படை சம்பாவின் கடற்கரையைச் சூறையாடி வந்தது. தொடர்ந்து பலமுறை நடைப்பெற்றகடல் தாக்குதல்களாலேயே சம்பாவின் அரசு வீழ்ச்சியுற்றது. நிலையான பயனைச் சாவகத்தின் கடற்படையெடுப்பு அளிக்கவில்லை. எனினும், அதன் மூலம் சாவகம் தன்னுடைய ஆற்றலையும், பெருமிதத்தையும், துணிச்சல் உள்ளத்தையும் உலகறியச் செய்தது.

இந்தோனேசியாவில் சைலேந்திரர்கள் ஒப்பற்ற கடலாதிக்கத்தை நிலைநாட்டியமை அனைத்துலகமுக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாயிற்று. அராபிய வாணிகன் சுலைமான் 'காம்போஜத்தின்மீது சைலேந்திரர்கள் படையெடுத்துச்சென்று, பெற்ற வெற்றியால், அவர்களுடைய ஆற்றலும் பெருமையும் இந்தியாவிலும் சீனாவிலும் விழிப்பினை உண்டாக்கியது என்று குறிப்பிட்டுள்ளான்.

எட்டாம் நூற்றாண்டில் சைலேந்திரப் பேரரசு பேரும் புகழும் பெற்று ஒப்பற்ற மாபெரும் பேரரசாக விளங்கியது. அடுத்த நூற்றாண்டில் தவிர்க்க முடியாத நலிவு அப்பேரரசிற்கு உண்டாயிற்று. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சைலேந்திரருடைய பேராதிக்கத்திற்குப் போட்டியாகத் தோன்றிய

காம்பூச்சியா, மத்ரா அரசுகள் வெற்றிநடை போடலாயின. காம்போஜத்தின் அரசனான இரண்டாம் ஜெயவர்மன் (கி. பி. 902-950), சைலேந்திரப் பேரரசின் மேலாண்மையை உதறித் தள்ளினான். அதே சமயத்தில், ஜாவாவில் சைலேந்திரரின் ஆதிக்கம் நலியத் தொடங்கியது. கி. பி. 879-க்குப் பிறகு சைலேந்திரப் பேரரசு என்னவாயிற்று என்பதே தெரியவில்லை.

## குமாரகோசரும் சைலேந்திரரும்

வங்காளத்தை ஆண்ட பாலர்களோடு சைலேந்திரர்கள் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். கி. பி. 782-இல் வங்காளத்தைச் சேர்ந்த குமாரகோசர், சைலேந்திரப் பேரரசர்களின் குலகுருவாக விளங்கினார். சைலேந்திரர் மகாயான பௌத்த சமயத்தை போற்றியவர்களாவர். எனவே, அவர்கள் மகாயானப் பௌத்த சமயத்தவரான குமாரகோசரைக் குருவாக ஏற்றுக் கொண்டதில் வியப்பிலலை. ஒன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியைச் சேர்ந்த செப்பேட்டுச் சாசனம் ஒன்று நாளந்தாவில் கிடைத்திருக்கிறது. அது சைலேந்திர அரசர்களைப்பற்றிக் குறிப்பிடுகிறது.

## பேரரசின் வீழ்ச்சி

சைலேந்திரப் பேரரசின் வீழ்ச்சி, ஜாவாவில் பண்டை அரசமரபின் எழுச்சிக்கு வித்திட்டது. சஞ்சயனின் பண்டைச் சைவ சமயஅரச குடும்பம், மீண்டும் புத்துயிர் பெற்றது. கி. பி. 927வரை சாவகத்தின் நடுப்பகுதியிலும் கிழைப்பகுதியிலும் தொடர்ந்து அது ஆட்சிப்புரிந்தது. வீழ்ச்சியுற்றிருந்த அவ்வரசுக்கு'பலிதுங்கு' எனப்படும் தருமோதய மகாசம்பு புத்துயிர் கொடுத்தான். அவன் கி.பி.898 முதல் 910 வரை ஆண்டதாகத் தெரிகிறது. அவனுக்குப் பிறகு தக்ஷோத்தமன் 915 அளவில் ஆட்சிக்கு வந்தான். அவன் கிழக்குச் சாவத்தையும், நடுச்சாவகத்தையும் ஆட்சிபுரிந்தான். பின்னர் இருவர் அரசு கட்டில் ஏறினர். அதன் இறுதி அரசன் உவாவா என்பவனாவான். அவ்வரசு கி. பி. 928-இல் அழிந்தது. எனவே, சைலேந்திரரின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த காலப்பகுதியையும் சேர்த்து, சறறேறக்குறைய இரு நூற்றாண்டுகள் (கி. பி. 732-927) வரை, அவ்வரச மரபு சாவகத்தின் நடுப்பகுதியில் நிலைபெற்றிருந்தது.

அவ்வரச மரபு மீண்டும் எழுச்சியுற்ற காலத்து (கி. பி. 879 927), பல இந்து சமயக் கோயில்கள் கட்டப்பட்டன.

## 7. 3. 3.
## கீழைச் சாவகம்

### தனியரசு

கி. பி. 927 அளவில், கீழைச் சாவகம் சிந்தோக்கு (Sindhok) என்ற மன்னனின் ஆட்சியின்கீழ் வந்தது. சாவகத்தின் வரலாற்றில் இம்மன்னனுடைய பெயர், சிறப்புமிக்கதாகப் போற்றப்படுகிறது. பிற்காலத்தில் தோன்றிய அரசர்கள் எல்லாரும் இவனுடைய மரபில் வந்தவர்கள் என்று கூறிக்கொள்ளுவதில், பெருமையுற்றனர். இவ்வரசனுடைய ஆட்சி பிரண்டாஸ் (Brantas) சமவெளியில் சிறப்புற்று விளங்கியது. சிந்தோக்குச் சைவசமயத்தைச் சேர்ந்தவன். இவ்வரசன் காலத்திற்குப் பிறகு தாந்திரிகப் பௌத்த சமயம் செல்வாக்குற்றது. சிந்தோக்கின் மகள் புத்த சமயத்தைப் பின்பற்றத் தொடங்கினாள். தருமவமிசன் என்ற அரசன் பாலித்தீவைத் தன் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தான். அவன் சைலேந்திரப் பேரரசு சாவகத்தில் மீண்டும் தலையெடுக்காவண்ணம் பன்முறை எதிர்த்துத் தாக்கி, வந்தான். அவன் கி. பி. 990-இல் வெற்றிபெற்ற போதிலும், 1003-இல் தோல்வியுற்றான். கி. பி. 1008-இல் அவனுடைய ஆட்சி அவல முடிவை அடைந்தது.

காலஞ்சென்ற தருமவமிசனின் மருமகனான ஏரலங்கன் (Airlangga) எனப்பட்ட ஸ்ரீலோகபாலனின் பெருமுயற்சியினால்,சாவகத்திற்கு உண்டாகவிருந்த பேரழிவிலிருந்து, சாவகம் காப்பாற்றப்பட்டது. அக்காலத்தில் ஏரலங்கன் பதினாறு வயது இளைஞனாக இருந்தான். அவனும், அவனுக்குத் துணையாக இருந்த சிலரும் மூன்றாண்டுகள் ஒரு மடத்தில் தலைமறைவாக வாழ்ந்து வந்தனர். கி. பி. 1010 அளவில், தருமவமிசனின்

ஆதரவாளர்கள், அவனை ஒரு மடத்தில் அடையாளங் கண்டு கொண்டனர். அவன்தான், தங்களுடைய உண்மையான அரசன் என்று அவர்கள் போற்றி வாழ்த்தினர்.

## ஏரலங்கனின் எழுச்சியும் வீழ்ச்சியும்

அவன் கி. பி. 1019-இல் சாவகத்தின் ஒருசிறு பகுதிக்கு அரசனானான். பத்து ஆண்டுகளுக்குள் இழந்த பேரரசை மீட் பதற்குரிய ஆற்றலும், திறமையும் உடைய பேரரசனாக அவன் விளங்கினான். நாட்டின் பல பகுதிகளில் தனியாட்சி நடத்திய சிற்றரசர்கள் பலரோடு அவன் போர்புரிய நேர்ந்தது. ஏழாண்டு கள் தொடர்ந்து போர் புரிந்ததன் விளைவாகச் சாவகம் முழுவதிலும், ஏரலங்கன் தன்னுடைய ஆதிக்கத்தை (1035-இல்) மீண்டும் நிலைநாட்டினான்.

பின்னர் நாட்டின் வளத்தைப் பெருக்குவதில் அவன் கருத் தைச் செலுத்தினான். அவன் வாணிகத்தை வளமுறச் செய் தான்; உழவுத் தொழிலைச் சிறப்புறச் செய்தான். கடல்கடந்து நெடுந்தொலைவிலுள்ள நாடுகளோடு அவன் வாணிகத் தொடர்பு கொண்டான். ஏரலங்கன் புலவர்களைப் போற்றும் புரவலனாகவும், இலக்கியங்களைப் படித்து இன்புறும் சுவைஞ னாகவும் விளங்கினான். தனது தள்ளாத வயதில் அரசினைத் துறந்து, அவன் துறவியானான். அவனுடைய வாழ்க்கையைப் பற்றி விரிவாகக் கூறும் கல்வெட்டு ஒன்று கல்கத்தாவில் உள்ள அரும்பொருள் காட்சியகத்தில் காணப்படுகிறது.

ஏரலங்கன் இறப்பதற்கு முன்பு, தன்னுடைய அரசினை இரண்டாகப் பிரித்துத் தன் இரண்டு ஆண்பிள்ளைகளிடம் ஒப்படைத்தான். அவற்றுள் மேற்குப் பகுதியிலிருந்த கதிரி அரசு நாளடைவில் பெரும் பேரரசாக மாறி, வடபகுதியைத் தன் ஆட்சிக்குக் கொண்டுவந்தது.

## கதிரி அரசு

கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் கதிரியை ஆண்ட அரசர்கள் பலரைப் பற்றி, நாம் அறிய முடிகின்றது. அவர்களுள் ஜெயவர்ஷன் (1103), முதல் காமேசுவரன் (1115-1135), இரண் டாம் காமேசுவரன் (1185), போன்ற அரசர்களைப் பற்றிய குறிப்புகள் கிடைத்துள்ளன. அவ்வரசர்களுடைய அவைக்களப் புலவர்களால் பொன்றாப் புகழை அவர்கள் பெற்றனர். ஆனால், அவர்களுடைய ஆட்சியைப் பற்றியோ, வேறு பிற செய்திகளைப் பற்றியோ நாம், ஒன்றும் அறிய முடியவில்லை. கதிரியர் ஆட்சிக்

காலம், சாவகப் பேரரசின் எழுச்சிக்குச் சிறந்ததொரு அடிப்படையை அமைத்துத் தந்தது. அப் 'பொற்காலத்தில்' கலைகளும் இலக்கியமும் மிகச் சிறந்த நிலையில் வளர்ச்சியுற்றன. இவ்வாறு ஜாவாவின் அரசியலிலும், பண்பாட்டிலும் பொன்னெழுத்துகளால் பொறிக்கத்தக்க சிறப்பிடத்தை அவ்வரசு பெற்றமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

கதிரியின் இறுதி அரசனான இருதசெயன், தம்மையே கடவுளாக வணங்குமாறு சமயத்தலைவர்களுக்கு ஆணையிட்டான். அச்சமயத் தலைவர்கள், ஒரு பெருங் கூட்டமாக நாட்டை விட்டு வெளியேறினர். துமாபால் மாநிலத்தை ஆண்டுவந்த அங்குரோக்கு என்னும் அரசனிடம் அவர்கள் அடைக்கலம் புகுந்தனர். கதிரி நாட்டு அரசனுக்கும் சமயத் தலைவர்களுக்கும் இடையே உண்டான பூசலைப் பயன்படுத்திக் கொண்டு, துமாபாலை ஆண்ட அங்குரோக்கு என்ற மன்னன் இருமுறை, கதிரியின்மீது படையெடுத்துச் சென்றான். கி. பி. 1222-இல், நடந்த போரில், கிருதசெயன் தோற்கடிக்கப்பட்டான். அங்குரோக்கு கதிரியைத் தன்னுடைய நாட்டோடு இணைத்துக் கொண்டான். இப்புதிய அரசு கீழைச் சாவகம் முழுவதையும் ஒரு குடைக்கீழ்க் கொண்டு வந்தது. அதன் தலைநகரான சிங்கசாரியின் பெயரே, அவ்வரசின் பெயராக மாறியது.

கதிரி அரசு, அதன் இறுதிகாலத்திய ஐம்பதாண்டுகளில் சாவகத்தில் மிகவும் ஆற்றல்மிக்க நாடாக விளங்கியது. பாலித்தீவு, போர்னியோ, மற்றுமுள்ள கிழக்கிந்தியத் தீவுகள் யாவும், அதன் ஆட்சிக்குக் கீழ்ப்பட்டிருந்தன. கதிரி அரசிடத்துப் பேராற்றல் வாய்ந்த கடற்படை ஒன்று இருந்தது. வாணிகத் துறையில் அது மேற்கொண்ட சிறப்புமிக்க செயல்கள் போற்றத் தக்கனவாகும். பதினான்காம் நூற்றாண்டில் கதிரிக்கு அருகில் தோன்றிய மஜபாகிதப் பேரரசின் முன்னோடியாக இவ்வரசு அமைந்தது எனலாம்.

### பண்பாட்டுநிலை

சாவகத்தின் வரலாற்றில் பன்னிரெண்டாம் நூற்றாண்டு மாண்புமிக்க காலமாகும். பிற்காலத்திய (பதினான்காம் நூற்றாண்டின்) ''பொற்காலத்திற்குரிய'' இன்றியமையாத முன்னேற்பாடுகள் இக்காலத்தில் செய்யப்பட்டனவாக நாம் கூறலாம். ''பண்டை இந்திய மரபை அடிப்படையாகக் கொண்ட சாவகத்தின் தேசியக்கலை, இந்தோனேசியப் பண்புகளுடனும், தனக்கே உரிய சிறப்புகளுடனும் இக்காலத்தில்

வளர்ச்சியுற்றது. சாவக மொழியில் சிறந்த காப்பியங்கள் இயற்றுவதற்குரிய சிறந்த கருவியாக வளர்ச்சியுற்றிருந்தது.''[11]

ஆனால், கலைத்துறையில் பன்னிரண்டாம் நூற்றாண்டில் கீழைச் சாவகத்தில் குறிப்பிடத்தக்க அரிய சாதனைகள் ஒன்றும் இடம்பெறவில்லை. சாவக மங்கையர் சமுதாய வாழ்வில், இந்திய மகளிரைவிட மிக உயர்ந்த நிலையில் இருந்தனர் என்பது சிறப்புமிக்க செய்தியாகும்.

கதிரியை ஆண்ட பழைய மத்ரா குடிவழி வந்த அரச மரபு அழிவுற்றமையால், மத்திய ஜாவாவோடும், பழங்காலப் பழக்க வழக்கங்களோடும் இவ்வரசு கொண்டிருந்த தொடர்பு முறிந்தது. சிங்கசாரி அரசு தோன்றியவுடன், பழைய இந்தியப் பண்பாடும், நாகரிகமும் படிப்படியாக அழிந்தொழிந்தமைக்கும், கலப்பற்ற சாவகத்துப் பண்பாட்டின் கூறுகள் சிறப்புற்று விளங்கத் தொடங்கியமைக்கும் ஈதொரு காரணமாகும்.

## சிங்கசாரி அரசு (1222-92)

சாவகத்தின் கீழைப் பகுதியின் கதிரி அரசு வீழ்ச்சிக்குப் பிறகு, இராஜசன் என்னும் அரசனால் ஒன்றுபடுத்தப்பெற்றது. அவன் சிங்கசாரியைத் தலைநகராகக் கொண்டு, புதிய அரசு ஒன்றினை நிறுவினான். அவனுக்குப் பிறகு, அவனுடைய மக்கள் இருவர், ஆட்சிக்கு வந்தனர். ஆனால், அவர்கள் அடுத் தடுத்துக் கொலை செய்யப்பட்டனர்.

அவர்களை அடுத்து விஷ்ணுவர்த்தனன் (1248-1268) ஆட்சிக்கு வந்தான். அவனும் 1268-இல் இறந்துவிட்டான். அவனுக்குப் பிறகு. அவனுடைய மகன் கிருதநாகரன் (1268-1292) அரசு கட்டிலேறினான். அவன் தன்னுடைய தகப்பனார் காலத்திலேயே, இளவரசு பட்டம் கட்டப்பெற்று, நாடாளும் ஆட்சிக் கலையில் பயிற்சிதரப் பெற்றவனாவான். பல துறைகளில் அவன் சிறப்புமிக்க அரசனாக விளங்கினான். உள்நாட்டின் அமைதியை நிலைநாட்டியதோடு, அயல்நாடுகளில் தன் ஆதிக்கத்தைப் பரப்ப பலமுறை படையெடுத்துச் சென்றான். அவன் ஜாவாவின் மேலாண்மையை மீண்டும் பாலித்தீவில் நிலை நாட்டினான். அவன் மத்திய சுமத்திரா, தென்மேற்குப் போர்னியோ, மேற்குச் சாவகம் முதலிய நாடுகளைத் தன் ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்தான். அவன் சீனாவின் மங்கோலியப் பேரரசரான கூப்ளாய்கானை எதிர்த்துப் போரிட்டான்.

---

11. Ananda K. Coomaraswami's 'History of Indian and Indonesian Art', p. 207.

சீன அரசியல் தூதுவர் 1289-இல் அவனால் முடமாக்கப்பட்ட செய்தி குறிப்பிடத்தக்கது. அம்மன்னன் தாந்திரிகப் பௌத்த சமயத்தைச் சார்ந்திருந்தான்.

### தாந்திரிகம்

அப்பிரிவினரின் கொள்கைப்படி குடி முதலிய ஐவகை இன்பங்கள் ஏற்றுக்கொள்ளத் தக்கன.

### மார்கோபோலோ கண்ட சாவகம்

அக்காலத்தில் அவன் நாட்டினைக் கண்ட இத்தாலிய நாட்டுக் கடலோடியான மார்கோபோலோ, சாவகம் ஒரு பேரரசன் ஆட்சியில் செழிப்புடன், வாணிகத்தில் சிறந்து செல்வம் கொழிக்கும் நாடாக விளங்கியதென்று குறிப்பிட்டுள்ளான்.

மலேயாமீது முதன்முதலாகக் கி. பி. 1275-இல் படையெடுத்துச் சென்று, கிருதநாகரன் வெற்றி பெற்றான். மேலும், சாவகத்தின் ஆதிக்கத்தைச் சுமத்திராவில் நிலைநாட்டியதன் மூலம், சாவகம் அந்தத் தீவு முழுவதிலும், தன் ஆட்சியை நிறுவியது. இத்தகைய அரும்பெருஞ் சாதனையைச் சாதித்த பெருமை கிருதநாகரனையே சாரும். இப்படையெடுப்பே, அவனுடைய வீழ்ச்சிக்குக் காரணமாக அமைந்தது. சாவகம் சுமத்திராவின் மீது பெரும் படையை அனுப்பியிருந்த சமயத்தில், கதிரியை ஆண்ட அரசப் பிரதிநிதியாகிய ஜெயகத்வாங்கு (Jayakatwang) புரட்சி செய்ததோடு, தலைநகரைத் தாக்கப் பெரும் படையோடு சென்றான். அந்நிலையில் கிருதநாகரன் தனது இரு மருமகப் பிள்ளைகளின் தலைமையின்கீழ், தன்னுடைய படைகளைத் திரட்டி வடதிசையில் புரட்சிக்காரனை எதிர்த்துத் தாக்குமாறு அனுப்பினான். கதிரியின் அரசப் பிரதிநிதி தோற்கடிக்கப்பட்டு, விரட்டப்பட்டான். ஆனால், அதே சமயத்தில் கலகக்காரர்களின் திறமை மிக்க படையொன்று தென்திசை வழியாகச் சென்று தலைநகரைத் தாக்கியது. அச்சமயத்தில் மன்னனும், அமைச்சர்களும் மது அருந்திக் கொண்டிருந்தனர். அதே இடத்தில் அவர்கள் கொலை செய்யப்பட்டனர். ஜெயகத்வாங்கு சாவகத்தில், மீண்டும் கதிரியர்களின் ஆட்சியை நிலைநாட்டினான்.

### ஆட்சிச்சிறப்பு

கிருதநாகரன் தாந்திரிகப் பௌத்த சமயத்தைத் தழுவியொழுகினான். அவன் சிறந்த நூலாசிரியனாக விளங்கியதுடன் பௌத்த சமயத் தத்துவங்கள், இலக்கணம், இலக்கியம் முதலிய

வற்றை நன்கு கற்றவனாகவும் இருந்தான். அவனுடைய ஆட்சிக் காலத்தில் சாவகம் பல துறைகளில் சிறப்புற்று விளங்கியது.

## மஜபாகிதப் பேரரசு (1294-1478)

ஜெயகத்வாங்கின் இவ்வெற்றி, நெடுநாட்கள் நிலைத்து நிற்கவும் இல்லை. கிருதநாகரனின் இரு மருமகப்பிள்ளைகளுள் ஒருவனான விசயன் (கிருதராாசசன்) மஜபாகிதம் என்னும் இடத்தில் ஒரு சிற்றரசை நிறுவினான். மஜபாகித் எனும் பெயருக்கு 'வில்வ மரங்கள் நிறைந்தகாடு' என்பதுபொருள். அவன் மத்ராவின் தலைவனோடு சதித்திட்டம் ஒன்றில் உடன்படிக்கை செய்துகொண்டான். இந்நிலையில்கி.பி.1281-இல், மங்கோலியப் பேரரசனான கூப்ளாய்கான் சாவாவின் அரசனைத் தன் அரச வைக்கு வந்து, திறை செலுத்துமாறு அழைத்தான். இவ் வழைப்பை ஏற்காது மறுத்ததோடு, ஜெயகத்வாங்கு சீனத் தூதரின் முகத்தைப் பாழ்படுத்தி அனுப்பினான். இதைக்கண்டு பெருஞ்சீற்றம் கொண்ட கூப்ளாய்கான், கி.பி. 1292-இல் சாவ கத்தின்மீது, ஒரு படையைத் திரட்டி அனுப்பினான். இப்படை யெடுப்பைத் தனக்கு நன்மைப் பயக்கத்தக்கதாக மாற்றிக் கொள்ள விரும்பிய விசயன், மங்கோலியரின் அடிகளைப் பணிந்து, மங்கோலியப் படைகளுடன் சேர்ந்துகொண்டு, ஜெயகத்வாங்கின் படைகளைத் தாக்கினான். ஜெயகத்வாங்கின் படைகள் தோற்கடிக்கப்பட்டன; தலைநகர் கொள்ளையடிக் கப்பட்டது. அவன் சிறைப்படுத்தப்பட்டு, பின்னர் கொலை செய்யப்பட்டான்.

விசயன் இந்நிலையில், சீனர்களை விட்டுப் பிரிந்து, தனிப்பட்ட முறையில் ஒரு பெரும் படையைத் திரட்டினான். கதிரியிலிருந்து சீனப் படைகள் திரும்பிப் போகும்போது, அதை வழிமறித்துத் தாக்கினான். விசயன் புறமுதுகிட்டு ஓடும் நிலை வந்தது. ஆயினும், சீனப்படைத் தலைவர்கள், தங்களுக் குள்ளே உண்டான கருத்து வேற்றுமை காரணமாக, மேற் கொண்டு செய்யவேண்டியதைப் பற்றிச் சிந்திக்காது, படைகளைக் கப்பல்களில் ஏற்றிக்கொண்டு சீனாவிற்குத் திரும்பிச் சென்றனர்.

ஜெயகத்வாங்கு இறந்தபிறகு, கதிரிய அரசு அழிந்தது. மஜபாகிதத்தைத் தலைநகராககொண்டு ஜாவா முழுவதற்கும், விசயன் தனிப் பெருந்தலைவனாக ஆட்சிபுரியத் தொடங்கினான். மீண்டும், சீனப்படை விசயனைத் தண்டிப்பதற்காகச் சாவகத் திற்கு வந்து அது கிருதநாகரனின் பகைவராக இருந்தவர்களை வென்று, அவனுடைய மருமகனான விசயனை மீண்

பேரரசை நிறுவுமாறு உதவிபுரிந்து சென்றமை கேலிக்கூத்தாகக் காணப்படுகிறது. சீனப்படைக்குத் துரோகம் செய்த விசயன் பேரரசனாகிய பிறகு, சீனப் பேரரசனுக்கு, நான்கு முறை நல்லெண்ணத் தூதர் குழுவை அனுப்பியமை வியப்பூட்டும் செய்தியாகும்.

## பாண்டிய விக்கிரமோதுங்கன்

கிருதராசன் என்ற அபிடேகப் பெயர் கொண்ட விசயன், புத்தருக்கும் சிவபெருமானுக்கும் கோயில்கள் எடுத்துப் புகழ் பெற்று, தாம் இறக்கும்வரை அமைதியுடன் ஆட்சிபுரிந்தான். அவனுக்குப் பின்னர் வந்த அவனுடைய மகன் ஜெயநாகரன் (1309- 1328), நாட்டில் உண்டான கலகங்களை அடக்கிப் புகழ்பெற்றான். கி. பி. 1323-ஆம் ஆண்டில், வெளியிடப்பெற்ற கல்வெட்டு ஒன்று, அவ்வரசனின் அதிகாரத் துறைச் சார்பான பெயர் "சுந்தர பாண்டிய விக்கிரமோத்துங்க தேவர்" என்று அறிவிக்கிறது. அவர்தம் முத்திரையில் இரண்டு மீன்கள் (கயல்) இலச்சினையாகப் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இது பாண்டிய மன்னரின் முத்திரைகளை நினைவுபடுத்துகிறது. மேலும், பாண்டிய அரசர் குடியைச் சேர்ந்தவர்களே 'சுந்தரபாண்டியன்' என்ற பெயரைப் பூண்டிருந்தனர். அப்பெயரினைச் சாவகத்தின் அரசன் சிறப்புப் பெயராகப் பூண்டிருந்தமை நமக்கு வியப்பை அளிக்கிறது. இதனால் சாவகத்திற்கும் தமிழகத்திற்கும் இடையே இருந்து வந்த நெருங்கியத் தொடர்பும், அரச மரபுகளுக்கு இடையே நிலவிவந்த உறவுமுறையும் புலனாகின்றன.[12]

சுந்தரபாண்டிய விக்கிரமோத்துங்க தேவன் மத்ராத்தீவு, போர்னியோ முதலியவற்றுடன் ஜாவா முழுவதையும் ஒரு குடைக்குக் கீழ்க்கொண்டு வந்து செங்கோலோச்சினான். அவன் சீனாவுடன் நட்புறவு கொண்டிருந்தான். அவ்வரசனின் முடிவு மிகவும் இரங்கத்தக்கதாகும். ஓர் அறுவை மருத்துவரின் மனைவியை அவ்வரசன் கற்பழித்த காரணத்தால், அவ்வரசரின் மீது அம்மருத்துவன் கடுஞ்சீற்றம் கொண்டிருந்தான். ஒருமுறை அரண்மனைக்கு அம்மருத்துவன், மருத்துவ உதவிக்காக அழைக்கப்பட்டான். அச்சமயத்தில், அந்த அறுவை மருத்துவன் அரசரைக் கொன்றுவிட்டதாகத் தெரிகிறது. அரசன் இறந்த பின்னர் அவனுடைய மனைவி 'காயத்திரிதேவி' துறவுபூண்டு, புத்த சமய பிக்குணியாகச் சமயத்தொண்டு புரிய முன்வந்தாள்.

---

12. Nilakanta Sastri, K. A., South Indian Influences in the Far East, P. 37.

## பேரரசி

அந்நிலையில், அவர்களுடைய மூத்தமகள் 'திரிபுவனதுங்க தேவி ஜெய விஷ்ணுவர்த்தினி' என்பவள் தன்னுடைய தாயின் சார்பில், 1328 முதல் 1350 வரை நாட்டை ஆட்சிபுரிந்தாள். அவளை ஜீவன இளவரசி என்ற பெயரால் அவள் அரசு கட்டிலேறுவதற்கு முன்பும், அரசினைத் துறந்த பின்னரும் நாட்டு மக்கள் அழைத்தனர். அவள் ஆட்சிக்காலத்தில் மஜபாகிதத்தின் பேரரசி என்றே போற்றப்பட்டாள். அவளுடைய இயற்பெயர் 'கீதாரிஜி' என்பதாகும். அவளுடைய மகன் இளவரசுப் பட்டம் சூட்டப்பெற்றான். அவனை 'ஜீவனத்தின் இளவரசன்' என்ற பட்டப்பெயரால் நாட்டிற்கு அவள் அறிமுகப்படுத்திவைத்தாள்.

இந்த அரசமரபினர், 'பாண்டிய' எனும் சிறப்புப்பெயர் பெற்றிருந்தமையும், 'சுந்தரபாண்டியன்' எனும் பட்டத்தைப் பயன்படுத்தியமையும், 'திரிபுவன சக்கரவர்த்தி' எனும் அடைமொழியோடு ஆட்சி செய்தமையும், 'மத்ரா' எனும் பெயர் தலைநகரிற்கு வழங்கியமையும் சாவக அரசகுடிப் பாண்டியரோடு திருமணவுறவாகிலும் கொண்டதாக இருந்திருக்க வேண்டும் எனும் எண்ணத்தை எழச்செய்கிறது.

கி. பி. 1331-இல் கஜஹமாடன், அவளுடைய முதல் அமைச்சனாக்கப்பட்டான். கஜஹமாடன் சிறந்த கல்விமான்; இராச தந்திரி; கை தேர்ந்த நிருவாகி. அவன் மனுதரும சாத்திரத்தைத் தழுவி ஜாவானியமொழியில் குடார மானவம் எனும் நீதி சாத்திரத்தை எழுதியுள்ளான். இவையல்லாமல், "வேற்றுமைகளினிடையே ஒற்றுமை காணல்" (பின்னேகா துங்க்கால் ஐகா) எனும் கொள்கையை ஜாவாவிற்கு வழங்கியவனாவான். இன்றைய ஜாவாவில் கஜஹமாடன் பெயரால் ஒரு பல்கலைக் கழகம் நிறுவப்பட்டுள்ளமை அவனுடைய பெருமையைப்புலப்படுத்துகிறது. அவன் இதற்கு முன்புதாகாவின் ஆளுநராக இருந்துவந்தான். அவன் அமைச்சன் ஆனது முதல், அரசின் சிறப்பினை மேன்மேலும் உயர்த்தப் பாடுபட்டான். அவன் மலேயா, பாலித்தீவுகளை வென்று, அரசினை விரிவுபடுத்தினான். பாலித்தீவினைச் சாவகப் பண்பாட்டிற்கு அடிமையாக்கும் முயற்சி தொடங்கியது. அடுத்து வந்த அரசர்களின் காலத்தில் அப்பணி முழுநிறைவு அடைந்தது.

## பேரரசின் விரிவாக்கம்

கி. பி. 1350-இல் பேரரசியின் தாயாரான காயத்திரிதேவி காலமானாள். தாயின் சார்பில் ஆட்சிபுரிந்து வந்த திரிபுவனத்

துங்க தேவியின் மகனான ஹயாம் உருக்கு (இளஞ்சேவல்) இராஜசனாகரன் என்ற அபிடேகப் பெயருடன், 1350-இல் ஆட்சிக் கட்டில் ஏறினான். அவன் 1365-இல் ஜாவாவின் ஆதிக்கத்தை மலேயாத் தீவுக் குழுவின் பெரும்பகுதியில் நிலைநிறுத்தினான். மேற்கு ஜாவாவில் உள்ள சுந்தாவும், பிலிப்பைன்சு தீவுகளும் அப்பேரரசுக்கு உட்படவில்லை. பேரரசின் ஆதிக்கத்திற்குட்பட்டு திறை செலுத்திவந்த நாடுகளின் உள்நாட்டு ஆட்சியுரிமை பேரரசினால் கட்டுப்படுத்தப்படவில்லை. அவ்வரசரின் ஆட்சிக் காலத்தில் இந்தியாவோடும் சீனாவோடும் நட்புறவு கொண்டிருந்தது ஜாவா. இராஜசனாகரின் ஆட்சிக்காலத்தில், நாட்டில் அமைதி நிலவியது; போரும் பூசலும் தலைவிரித்தாடவில்லை; நாட்டில் வறுமை மக்களை வாட்டவில்லை. சட்டங்கள் சிறிதும் தயக்கம் இன்றி உறுதியாகச் செயற்படுத்தப்பட்டன. உடலைத் துன்புறுத்தும் தண்டனைகள் அளிக்கப்படவில்லை. ஆனால், சிறு குற்றங்களுக்குக்கூட உயிரைப்பறிக்கும் தண்டனை விதிக்கப் பட்டது. தீயோர் எவ்விடத்தில் இருந்தாலும் தேடிக் கண்டு பிடிக்கப்பட்டனர். நாட்டின் பட்டிதொட்டிகளில் எல்லாம், மக்களும் அவர்தம் உடமைகளும் நன்கு காக்கப்பெற்றன. மக்கள் தொகை மிகுதியாக இருந்தபோதிலும், திருட்டுத் தொழில் பேரரசில் இல்லை என்று ஒரு சீன வரலாற்றுக் குறிப் பேடு அறிவிக்கிறது.[13]

இவ்வாறு இராஜசனாகரனுடைய ஆட்சிக்காலம் ஆற்றலிலும், வளத்திலும், புகழிலும் உச்சநிலையை அடைந்தது. பேரரசின் அதிகாரத்தில் உண்டான வளர்ச்சியினாலும், மிகுதிப்பட்ட பொறுப்புகளினாலும் ஆட்சிமுறை அமைப்பு புதியதும் அமைதியானதுமான பணியினைச் செம்மையாகச் செயவதற்கு ஏற்ற வகையில் மாற்றியும், திருத்தியும் அமைக்கப்பட்டது. ஆட்சிமுறை அமைப்பிற்குரிய சிறப்பும், பெருமையும் கஜஹ மாடன் என்ற முதல் அமைச்சருக்கு உரியனவாகும்.

### பட்டத்து அரசி பரமேசுவரி

இராஜசனாகரன் இறப்பதற்கு முன்பு, உள்நாட்டுப் போருக் கான வித்துவிதைக்கப்பட்டுவிட்டது. அவனுக்குப் பட்டத்தர சியான பரமேசுவரியிடம், குசுமவர்த்தினி என்ற பெண் பிறந்திருந்தாள். அரசியின் தங்கை ஈசுவரிக்கு நாகரவர்த்தினி என்ற மகளும், விக்கிரம வர்த்தனன் (மத்ராவின் இளவரசன்) என்ற மகனும் இருந்தனர். விக்கிரமவர்த்தனனுக்கும் பட்டத்து

13. De Kleeck, History of Netherland's East India, Vol. I, P. 142.

அரசியின் மகள் குசுமவர்த்தினிக்கும் திருமணம் செய்யப்பட்டது. இதன் மூலம், விஷ்ணுவர்த்தனன் அரசு கட்டில் ஏறத் தகுதியும உரிமையும் உடையவன் ஆனான். ஆனால், அரசனுக்குக் காதற் கிழத்தி ஒருத்தியிடம் பிறந்த மகன் ஒருவன் இருந்தான். அவனுக்கு நாகரவர்த்தினியை மணம் செய்துவைத்தான் அரசன். அத்துடன் அவனைக் கீழைச் சாவகத்திற்கு ஆளுநரா கவும் அரசன் பதவியில் அமர்த்தினான். இதன் விளைவாகப் பின்னால், உள்நாட்டுப் போர்கள் மூண்டன.

## பேரரசின் வீழ்ச்சி

இராஜசனாகரன் கி. பி. 1389-இல் இறந்தான். உடனே, விக்கிரமவர்த்தனன் எனப்பட்ட ஹயாங்கு விசேன் மஜபாகிதத் தின் அரசனாக முடிசூட்டிக் கொண்டான். அதே சமயத்தில் இராஜசனாகரனுடைய காதற் கிழத்தியின் மகன் தன்னைப் பேரரசன் என்று அறிவித்துக் கொண்டான். இவ்வாறு இராஜச னாகரனுக்குப் பிறகு, அவனுடைய மகனுக்கும் மருமகனுக்கும் போட்டிஉண்டாயிற்று. இதனால், நாடுஇரண்டாகத்துண்டாடப் பட்டது. அவ்வுள்நாட்டுப் போர், பேரரசின் நிலைகுலைவிற்குக் காரணமாயிற்று. பலமுறை நடைபெற்ற போர்களுக்குப் பிறகு வீரபூமியின அரசனும் இராஜசனாகரனுடைய மகனுமான இளவரசன் 1406-இல் தோற்கடிக்கப்பட்டுக கொலை செய்யப் பட்டான்.

அவனுடைய மறைவு, மீண்டும் ஜாவாவினை ஒன்றுபடுத் தியது. ஆனால், தொடர்ந்து நடைபெற்று வந்த உள்நாட்டுப் போர்களாலும், கலகங்களாலும், குழப்பங்களாலும் நாட்டின் படைகள் சீரழிந்து போயின; நிதிநிலை மிகவும் மோசமாகி விட்டது. எங்கும்பசியும், பிணியும், பற்றாக்குறையும், நம்பிக்கை யின்மையும், சோர்வும் களிநடம் புரிந்தன. அதன் விளைவாக அரசியல் ஆதிக்கம் சீனாவின் கைக்கு மாறியது. கி. பி. 1411-ஆம் ஆண்டில் ஜாவாவில், கொடியதொரு எரிமலைப் பொங்கி எழுந்தது. மக்கள் அல்லற்பட்டு, ஆற்றாது அழுது அரற்றினர். கனகன் என்ற முதல் அமைச்சன், எவ்வாறோ நாட்டைக் கட்டிக் காக்க 1413 முதல் 1430 வரை முயன்று வந்தான். இதற்கிடையில் 1426-இல், ஒரு கொடிய பஞ்சம் ஜாவாவில் உண்டாயிற்று. மக்கள் கண்ணீரும் கம்பலையுமாகச் சொல்லொணாத் துன்பத் திற்கு ஆளாயினர். 1429 அளவில் அரசன் இறந்தான்.

அவனுக்குப் பிறகு அவனுடைய மகள் சுகிதா, அரசு கட்டி லேறினாள். அவளுடைய ஆட்சி எப்படியோ கழிந்தது. அவளுக்கு மகப்பேறில்லை. அவள் 1447-இல் இறந்தவுடன்

அவனுடைய தம்பி ஸ்ரீகீர்த்தவிஜயன் ஆட்சிக்கு வந்தான். அவனும் நான்கு ஆண்டுகளுக்குள் மறைந்து போனான்.

நாம் அறிந்தவரைக் கீழைச் சாவகத்தில் இறுதியாக ஆண்ட இந்து அரசர், கதிரி பகுதியைச் சேர்ந்த 'இரணவிசயர்' என்பவராவர். சாவகத்திலிருந்து சீனாவிற்கு கி. பி. 1499-இல் இறுதியாக, ஒரு தூதர் குழு அனுப்பப்பட்டதாகத் தெரிகிறது.

## இஸ்லாமியரின் செல்வாக்கு

பதினாறாம் நூற்றாண்டின் முற்பகுதியில், ஜாவாவின் கடலோரத்திலிருந்த இஸ்லாமிய தலைவர்கள், அப்பகுதியில் நிலவிய இந்து ஆட்சியை முடிவுறச் செய்தனர். இதைத் தொடர்ந்து விரைவில், மத்ராசத்தீவும் இஸ்லாமியர் வயப்பட்டது. அங்கு வெற்றிபெற்ற இஸ்லாமிய வீரர்கள், மலபாரிலிருந்தும், சோழ மண்டலக்கடற்கரைப்பகுதியிலிருந்தும் சென்ற, இஸ்லாமியராக்கப்பட்ட தமிழர்கள்தாம் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. பதினேழாவது நூற்றாண்டில்தான், அரேபியாவிலிருந்து நேரான முஸ்லீம் செல்வாக்குத் தென்கிழக்கு ஆசியாவில் பரவியது. அதுவரையில் மலேயா தீவுக் கூட்டத்தில் "இந்திய இஸ்லாம்" தான் பரவி இருந்தது.

## பாலித்தீவில் சாவா அரசன்

இஸ்லாமியர்களை எதிர்த்துப் போரிட இயலாத மஜபாகிதத்தின் இறுதியரசன், பாலியிலிருந்தத் தன் குடிமக்களிடத்து அடைக்கலம் அடைந்தான். அவனைத் தொடர்ந்து, தங்கள் பழைய சமயத்தையும் பண்பாட்டையும் காக்க விரும்பிய சாவகப் பெருங்குடி மக்களும், செல்வர்களும் பாலியில் குடிபுகுந்தனர். இவ்வாறு சாவகத்தின் மாண்பு மிக்க வரலாறு, தனியுரிமை வாய்ந்த அரசாக விளங்கிய பாலித்தீவின் வரலாற்றோடு இணைந்தது இரங்கத் தக்கதாகும்.

## 7. 3. 4.
## நாகரிகம்

### அரசியல் நிலை

ஜாவாவில் தொன்றுதொட்டு முடியாட்சி முறையே சிறப்புற்று விளங்கியது. அரசன் தெய்விகத் தன்மை வாய்ந்தவன் என்று கருதப்பட்டான்.

### தேவராச வழிபாடு

அரசன் இறந்த பின்னர், தெய்வமாகவே போற்றப்பட்டான். 'தேவராஜ' வழிபாட்டுநெறி, சாவகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தது.

அரசனுக்குப் பிறகு அவனுடைய மகன் அரசனாவது பொது வழக்காக இருந்தது. சிற்சில சமயங்களில், மருமகன் அரசுரிமை எய்தியதும் உண்டு. இளவரசன் சிறு குழந்தையாக இருந்தால், அரசியோ, மூத்த மகளோ பிரதிநிதி ஆட்சியாளராக ஆட்சிபுரிவதுண்டு. மகப்பேறில்லாத அரசிகள் கணவனுக்குப் பிறகு, ஆட்சிப்பொறுப்பை ஏற்றுக் கொள்ளுவதும் இங்கு இயல்பாகும்.

### அமைச்சர்

அரசனுடைய வரம்பில்லா அதிகாரம், அரசினுடைய அடிப்படை ஆற்றலாக அமைந்து இருந்தது. அரசனுடைய வரம்பற்ற அதிகாரத்தைக் கட்டுப்படுத்தும் நிறுவனங்களோ, அமைப்புகளோ இருந்ததாகத் தெரியவில்லை. எனினும், அமைச்சர்களும், முதல் அமைச்சரும் இருந்ததாகக் கல்வெட்டுகளால் அறியப்படுகின்றமையால், அவர்கள் அரசனை நெறிப்படுத்திச் செங்கோலோச்சுமாறு செய்திருக்கலாம்.

## ஆட்சி முறையில் இந்திய மரபு

அந்நாட்டின் ஆட்சிமுறை குறிப்பிடத்தக்க அளவிற்கு இந்திய ஆட்சிக் கலையினைப் பின்பற்றியே அமைந்திருந்தது எனலாம். நாட்டாட்சியின் தனிப்பெருந்தலைவனாகத் தலைமை யிடத்தை அணி செய்தவன் அரசனாவான்.

## நாட்டுப் பிரிவுகள்

நாடு முழுவதும் பல சிறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஆளுநர் ஒருவர் அமர்த்தப்பட்டி ருந்தார். மிகச் சிறிய நாட்டுப் பிரிவு ஊராக அமைந்திருந்தது. ஊருக்கு ஓர் ஊர்த்தலைவன் இருந்தான். அவன தலைமையின் கீழ் ஒருவகையான நாட்டாட்சி நடைபெற்று வந்தது.

## அதிகாரிகள்

அரசனைச் சுற்றிலும் ஏராளமான அதிகாரிகள் இருந்தனர். ஒவ்வொரு காலத்திலும் அவர்களுடைய எண்ணிக்கையும், பதவிப் பெயர்களும் மாறிக் கொண்டே இருந்தன. கீழைச் சாவகத்தின் கல்வெட்டுகள் பலதிறப்பட்ட அதிகாரிகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. அமைச்சர்களோடு, சேனாபதி, சேனாபதி—சர்வ—ஜலம் (கடற்படைத் தலைவன்) என்போர் இருந்தனர். நன்கு முறைப்படுத்தப்பட்ட ஆட்சி இயந்திரம் சிற் சில மாறுதல்களோடு இந்துக்களுடைய ஆட்சிக் காலம் முழுவ திலும் நின்று நிலவியது.

முப்பெரும் அமைச்சர்களுக்கு அடுத்து, இராக்கிரியன் மாபதி, இராக்கிரியன் டெமுங்கு, இராக்கிரியன் கனுரகன் எனப் பட்ட ஆட்சித் துறைத் தலைமை அதிகாரிகள் மூவர் இருந்தனர். காலப்போக்கில், அமைச்சர்கள் செல்வாக்கினை இழந்தனர். இராக்கிரியர் என்ற அதிகாரிகளே ,பேராற்றலும் பெருந்திறனும் உடையவர்களாகவும் அரசர்கள் கண்டு அஞ்சத்தக்க அளவிற்குச் செல்வாக்குப் பெற்றவர்களாகவும் ஆயினர்.

மேற்கண்ட தலைமை அதிகாரிகளைத் தவிர, முக்கியமான இருவகை அரசியல் அதிகாரிகள் பணிபுரிந்து வந்தனர்.

## குவிமுக ஆட்சிமுறை

தருமாதிகரணர், தரும அத்தியட்சர் என்ற பதவிகளை அவர்கள் வகித்தனர். இந்தியாவைப் போன்றே, தருமாதி கரணர் என்பவர்கள் நீதி மன்றத்தின் தலைவர்களாக விளங் கினர். சிவன் கோயிலையும், புத்தர் கோயிலையும் மடங்களை

யும் பல்வேறு அற நிலையங்களையும் கண்காணித்து வந்தவர்கள், தரும அத்தியட்சகர் எனப்பட்டனர். வரம்பற்ற அதிகாரங்களையுடைய முடியாட்சியின் கீழ், குவிமுக ஆட்சி முறை செம்மையாகவும், சிறப்பாகவும் ஜாவாவில் நடைபெற்று வந்தது.

## ஆதிபத்தியக் கோட்பாட்டு

### நடுவண் அரசு

ஜாவாவில், மத்திய அரசின் நேர்முக ஆட்சி நடைபெற்றதற்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை. குறுநில மன்னர்களும் சிற்றரசர்களும் மத்திய அரசின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டு, திறை செலுத்தினால் போதும் என்ற நிலை இருந்து வந்தது. ஆனால், சிற்றரசுகள் ஆற்றல்மிக்க மத்திய அரசு நலிவுறும்பொழுது, தனியுரிமை வாய்ந்த அரசுகளாகத் தங்களை அறிவித்துக் கொண்டன. இவ்வாறு உரிமையை நிலைநாட்ட அவை முயன்ற பொழுது எல்லாம், கலகங்களும், உள்நாட்டுப் போர்களும் மூண்டன. இறுதியில் பேரரசு சிதைந்து போவதற்குச் சிற்றரசுகள் மூலகாரணமாக அமைந்தன. இத்தகைய ஆட்சி முறையை இந்தியப் பொருள் நூல்கள் 'ஆதிபத்தியக் கோட்பாட்டு' முறை எனக் கூறுகின்றன.

ஜாவாவின் அறிஞர்கள், ஆட்சிக்கலைப் பற்றிய அரசியல் தத்துவ நூற்கள் சிலவற்றை எழுதியுள்ளனர். அவை இந்திய 'அருத்த சாத்திரத்தை' யும், சுக்கர நீதி, காமாந்தகரின் நீதி எனும் நூல்களையும் பின்பற்றி இயற்றப்பட்டுள்ளன. அவை உயர்ந்த அரசியல் இலட்சியங்களையும், சிறந்த ஆட்சி முறைக் கொள்கைகளையும் எடுத்துரைக்கின்றன. இத்தகைய நூற்கள் ஜாவாவில் இயற்றப்பட்டதிலிருந்து, அந்நாட்டு மக்களும், சிறப்பாக மன்னர்களும் 'இராசநீதி' பற்றிய அறிவினை, நன்கு பெற்றவர்களாக இருந்திருக்க வேண்டும் என்பது புலனாகின்றது.

### சாதிமுறை

இந்து சமுதாயத்திற்கே உரிய தனிச் சிறப்பு சாதிப் பாகுபாட்டு முறை ஆகும். இந்தியாவில் உள்ளதைப் போன்றே ஜாவாவிலும், சாதிப்பாகுபாடு இருந்து வந்ததைச், 'சதுர்வாணம்' (நால்வகைச் சாதி), எனும் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் ஆகிய பாகுபாடு இருந்ததாகக் கல்வெட்டுகளும், இலக்கியங்களும் குறிப்பிடுகின்றன. இன்றைய இந்து சமுதாயத்தை அரித்துத் தின்ற சாதிப்பாகுபாட்டு முறைக்கும் இதற்கும் சிறிது வேறுபாடு உண்டு. மனுதரும சாத்திரத்தில்

கூறப்பட்ட வகையில், இச்சாதிப்பாகுபாடு ஜாவாவில் நிலவவில்லை எனலாம்.

நால்வகைச் சாதியினருக்கு இடையே, திருமண உறவு இருந்துவந்தது. உயர்ந்த சாதி ஆண், தன் சாதியைக் காட்டிலும் தாழ்ந்த சாதியைச் சேர்ந்த பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளலாம். ஆனால், ஒரு பெண் தன் சாதியைச் சேர்ந்த ஆடவனைத்தான் திருமணம் செய்து கொள்ளவேண்டும் என்ற கட்டாயம் இருந்து வந்தது. உயர்ந்த சாதிப்பெண், இழிந்த சாதி ஆடவனைத் திருமணம் செய்து கொண்டால், அதற்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. கலப்புத் திருமணங்களின் மூலம் பிறக்கும் குழந்தைகள், தந்தை எந்த சாதிக்கு உரியவரோ, அந்தச் சாதியையே அவர்களும் சேர்ந்தவர்களாகக் கருதப்பட்டனர்.

பிராமணர்கள், வழிபட்ட தெய்வத்தைக் கொண்டு, இரு வகைப்பட்ட பிரிவினராக இருந்துவந்தனர். சிவனை வழிபட்டவர்கள் 'சிவபிராமணர்' என்றும், புத்தரை வழிபட்டவர்கள் 'பௌத்த பிராமணர்' என்றும் இருபெரும் பிரிவுகளாக அவர்கள் வாழ்ந்து வந்தனர். சிவபிராமணருள் ஐந்து பிரிவுகள் இருந்தன. இப்பிரிவுகளில் சில இழிந்த சாதிப் பெண்களைத் திருமணம் செய்து கொண்டதால் உண்டானவையாக இருக்க வேண்டும்.

க்ஷத்திரியர்களும் ஐந்து குழுவினராகப் பிரிக்கப்பட்டிருந்தனர். அவர்களுள் ஆண்களுக்குத் 'தேவர்' என்ற பட்டப் பெயரும், பெண்களுக்குத் 'தேசகி' என்ற பட்டப் பெயரும் வழங்கின.

### தீண்டாமையை அறியாதவர்கள்

சூத்திரர்கள் 'கௌலர்' எனப்பட்டனர். ஆனால், அவர்களைத் தீண்டத் தகாதவர்கள் என்றோ, ஒதுக்கி வைக்கத் தக்கவர்கள் என்றோ அந்நாட்டு மக்கள் கருதியதாகத் தெரியவில்லை.

குறிப்பிட்ட சாதியினர், குறிப்பிட்ட தொழிலினைச் செய்ய வேண்டும் என்ற கட்டாயம் அங்கு இருந்தது இல்லை. எல்லாச் சாதியினரும் உழவுத் தொழிலைச் செய்தனர். சூத்திரர் உழவுத் தொழிலோடு பல்வேறு கைத்தொழில்களையும் செய்துவந்தனர்.

### அரச குடியினரே உயர்ந்தவர்

பிராமணர்களைக் காட்டிலும், நாடாளும் அரசர் குடியில் பிறந்தவர்கள், உயர்ந்தவர்களாகவும் சிறந்தவர்களாகவும் கருதப்

பட்டனர். அரசர்கள், 'தெய்வத்தின் பிரதிநிதிகள்' என்ற கொள்கையினால் இத்தகைய நம்பிக்கை நிலவியது.

## மகளிர் நிலை

ஆடவர் பலபெண்களை மணந்துகொள்ளும் பன்மண முறை ஜாவாவில் பெருவழக்காக இருந்தது. அதைப்போன்றே கைம்பெண் மணமுறையும் அங்கு வழக்கிலிருந்து வந்தது. மகளிர் முகமூடி அணியும் வழக்கம் இல்லை. பெரும்பாலும் மிகநெருங்கிய உறவினரிடை மணம்புரிந்துகொள்ளும் முறை தடைசெய்யப்பட வில்லை. ஒருவன் தன் மாற்றாந்தாய் மகளை, மணம் புரிந்து கொண்டதைப் பற்றிய குறிப்பு ஒன்று கல்வெட்டில் காணப்படு கிறது. ஆடவன், தான் மணம் செய்துகொள்ளும் பெண்ணுக்குப் 'பரிசம்' கொடுக்கும் முறை சாவகத்தில் சிறப்புற்று விளங்கியது.

பெண்டிர் தம் கணவரை வேண்டாம் என்று ஒதுக்கி விடுவதற்குரிய 'மணமுறிவு' உரிமையினைப் பெற்றிருந்தனர். ஆனால், இல்லறத்திற் ஈடுபடுங்கால், அவர்கள் தங்கள் கணவருக்குப் பணிந்து நடந்தனர். ஆடவருள் சிலர், தம் மனைவி யரைக் கோலினால் அடித்து, அச்சுறுத்தியதாகவும் அறிகின் றோம். கணவன், தன் மனைவியின் தலையில் மட்டும் அடிக்கக் கூடாது என்று விதியிருந்ததாகத் தெரிகிறது. இவை மனுவின் தரும சாத்திரம் சாவகத்தில் நடைமுறையில் இருந்து வந்தமைக்குச் சிறந்த சான்றுகளாகும். 'பிறன் மனைவியை விழையும் ஒழுக்கக்கேடு' ஆதரிக்கப்படவில்லை. ஆனால், அக்குற்றத்திற்குரிய தண்டனை மனுதரும சாத்திரம்விதிப்பதைப் போன்று அவ்வளவு கடுமையானதாகவும் இல்லை. அத்தகைய குற்றவாளிகளின்மீது, அரசன் நாய்களை ஏவி கடிக்கச் செய்து கொல்லவேண்டும் என்று அந்நீதி நூல் கூறுவது இங்குக் குறிப் பிடத்தக்கது. தன்னுடைய மருத்துவனின் மனைவியைக் கற்பழித்த ஓர் அரசனை, அப்பெண்ணின் கணவனே கொலை செய்துவிட்டான் என்பதைக் கண்டோம். இதனால் பிறன் மனைவியை விழைவது பெருவழக்காக இருந்தது என்னும் எண்ணம் எழுகிறது.

## பெண்ணுரிமை

அக்காலத்திய இந்தியாவிலிருந்த பெண்கள் பெற்றிருந்த உரிமைகளைக் காட்டிலும், சாவகப் பெண்கள் மிகுதியான உரிமைகளைப் பெற்றிருந்தார்கள். அரசியல் உரிமைகள் சிறப் புடையன. பெண்கள் ஆட்சிக்கு வருவது அக்காலத்திய வழக்க மாக இருந்தது. குணப்பிரியைத் தன்னுடைய அரசுரிமையை

விட்டுக் கொடுக்கவில்லை. அவள் சிறிது காலம் ஆட்சிபுரிந்த பின்னரே, அவளுடைய கணவன் பேரரசனாகப் பதவிக்கு வந்தான்.

## பெண் அதிகாரிகள்

பெண்கள் பலர் உயர்ந்த பதவிகள் பலவற்றை வகித்து வந்தனர். பெண்கள் எல்லாரிடத்தும் நன்றாகப் பழகினார்கள். அதிகாரிகளுடைய மனைவியர் அவைக்களத்திற்குத், தம் கணவரோடு விழாக்காலத்தில் வந்தனர். அரசரால் பரிசுகள் கொடுக்கப்பட்டு, அவர்கள் பாராட்டப்பட்டனர்.

## உடன்கட்டை ஏறுதல்

உடன்கட்டை ஏறும் வழக்கம் இந்தியா, ஜாவா ஆகிய இரு நாடுகளிலும் இருந்தது. எனினும் பெரும்பான்மையும் இந்தியப் பெண்டிரைவிட, சாவக மகளிர் சிறந்த நிலையில் இருந்தனர். அத்தீவில் கணவன் இறந்தபொழுது மகளிரின் தலை மயிர் வெட்டப்பட்டது. ஆனால், முழுவதும் மழிக்கப் படவில்லை. சாவக மக்கள் கற்பின் சிறப்பைப் பெரிதும் போற்றினர்.

## குற்றமும் தண்டனையும்

அங்கு அடிமைமுறை சட்டங்களால் ஒழுங்கு செய்யப் பட்டிருந்தது. குற்ற இயல் சட்டம் (Criminal Code) மனுவின் தரும சாத்திரத்தை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப் பட்டிருந்தது. ஆனால், திருட்டுத்தொழில், கொள்ளை, கொலை முதலியவற்றைப் பற்றி விளக்கமான குறிப்புகள் உள்ளன. இந்தியச் சட்ட அறிஞர் (மனு) குற்றம் செய்தவர்களின் குறிப்பிட்ட உறுப்புகளை வெட்ட வேண்டும என்று கூறியுள்ளதைச் சாவக மக்கள் ஏற்றுக் கொண்டனர். ஆனால், குற்றவாளிகள், அவரவர் சாதிக்குத் தக்கவாறு தண்டனை பெறும் மனுவின் முறையை அவர்கள் பின்பற்றவில்லை. எனினும், பொதுவாகச் சாதி வேறுபாடுகள் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தன.

## குடியிருப்புகள்

அரசர், செல்வர் ஆகியோருடைய மாளிகைகள் செங்கற்களாலும், மரத்தினாலும் கட்டப்பட்டிருந்தன. சிலசமயங்களில் அவற்றிற்குச் சீன ஓடுகள் வேயப்பட்டிருந்தன. ஏழை எளிய மக்களின் குடியிருப்புகள், பெரிதும மூங்கிலால் கடடப்பட்ட குடிசைகளாக இருந்தன. அவற்றின்மீது வைக்கோல் கூரை

இடப்பட்டிருந்தன. அவற்றின்மீது இலைகள் தென்னங்கீற்று களைப்போல நிறைக்கப்பட்டிருந்தன.

## உணவும் உடையும்

பொதுவகையான உணவுப் பொருள் அரிசியாக இருந்தது. வெற்றிலைப் பாக்கினைப் பயன்படுத்துவது அங்கு வழக்கத்தில் இருந்தது. வெறியூட்டும் குடிவகைகளை மக்கள் அருந்தி மகிழ்ந் தனர்.

எளிய உடைகளை மக்கள் அணிந்தனர். மகளிர், இடுப்புக்கு மேல் ஆடை அணியும் வழக்கம் இல்லை. சேலையைப் போன்ற வகையில் இடுப்பிலிருந்து கால்கள்வரை மூடிமறைக்கும் ஆடையையே பெண்கள் அணிந்திருந்தனர். ஆடவர்கள் இடுப் பில் ஒரு துண்டும், மேலே ஒரு துண்டும் அணிந்தனர். சில சமயங் களில், தலைப்பாகைப் போன்ற ஓர் ஆடையையும் அவர்கள் அணிந்து கொண்டனர்.

## ஒப்பனை

மகளிர் தங்கள் கூந்தலைப் பலவகையில் ஏரும் எழிலும் மிக்க வகையில் சீவி முடித்தனர். அவற்றில் அணிகலன்களைச் சூடி மகிழ்ந்தனர். சாவகமகளிர், தங்களை ஒப்பனைசெய்து கொள்ளு வதற்கு அணிகலன்கள் பலவற்றைப் பயன்படுத்தினர். அவை அழகும், நேர்த்தியும் வாய்ந்தன. இவ்வாறு சாவக மக்களின் உணவு, உடை, அணிகலன்கள் ஆகிய அனைத்தும் மிக எளிமை யானவையாக இருந்தன.

## பொழுதுபோக்கு

வாழ்க்கையைச் சுவைப்பதற்கும், இன்பமாகக் கழிப்ப தற்கும் சாவகத்தின் மக்கள் பலவகையான விளையாட்டுக் களிலும், கேளிக்கைகளிலும் ஈடுபட்டிருந்தனர். சூதாட்டம் முதன்மையான இடத்தைப் பெற்றது. வாட்போர், வல்லமைப் போட்டி, சேவல் போட்டி, இசை, நடனம் முதலியன மக்களு டைய பொழுது போக்குகளாகும். பொம்மலாட்டத்தின் ஒரு வகையான 'நிழலாட்டம்' சாவக மக்களால் பெரிதும் போற்றப் பட்டது. அவ்வாட்டம் இந்திய நாடகத் (Chhaya - Nataka) திலிருந்து தோன்றியதென்ற கருத்தைப் பல அறிஞர்கள் மறுக் கின்றனர். மலபாரின் ''பாவைக்கூத்து'' சாவாவின் நிழலாட் டத்தை ஒத்திருப்பது நோக்கற்பாலதாகும். சதுரங்கம் சாவாவில் பெருவழக்கில் இருந்தது. விண்ணைத் தீண்டித் தழுவும் நீல மலைகளைக் கண்டு களித்தலும், புதிய நீர்ப்பெருக்குடன்

பொங்கி ஓடும் ஆற்றில் மூழ்கி நீர்விளையாடுதலும் சாவக மக்களுக்கு மிகச்சிறந்த பொழுது போக்குகளாகும். படகுகளிலும், தெப்பங்களிலும் காதல் மகளிரோடு, ஆடவர் புனல் விளையாட்டில் கலந்துகொள்ளுவதைப் பெருமையாகக்கருதினர். பௌர்ணமி அன்று, மகளிர் குரவைக் கூத்தாடி மகிழ்வர். இதனை, 'நிலவுப் பயன் கொள்ளுதல்' எனப்பண்டைத் தமிழ்ப் பாடலான பட்டினப்பாலை கூறும்.

## இறுதிச் சடங்கு

இறந்தோரை அடக்கம் செய்யும் முறை, ஒவ்வொரு சமுதாயத்திற்கும் தனிச்சிறப்பு வாய்ந்த பண்பாக இருந்து வருகிறது. இறந்தோரை எரித்தல், நீரில் போட்டுவிடுதல், பறவைகளும், விலங்குகளும் தின்னுமாறு திறந்த வெளியில் இடுதல்ஆகிய மூன்றுவகையான வழக்கங்கள் நடைமுறையில் இருந்தன. எரிக்கப்பட்ட உடல்களின் எலும்புகளை எடுத்து சடங்குகள் செய்து காசுகளோடு அவற்றைக் கடலில் கலந்து விடுவர்.

சுருங்கக்கூறின், சமயத்துறையில் உள்ளதைக் காட்டிலும் சிறிது குறைவாகவே, சமூகத்துறையில் தமிழகக் கருத்துகள் சாவகத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்ததை அறிகிறோம.

## 7. 3. 5.
## சமயம்

கிறித்துவ நூற்றாண்டின் தொடக்க காலத்திலேயே, இந்திய சமயங்கள் ஜாவாவில் பரவின. சாவகத்தின் மக்கள் இந்து சமயத்தின் செல்வாக்கிற்கு ஆளான காலத்தில், அவர்கள் புதிய கற்கால நாகரிக நிலையில் இருந்து வந்தனர் என்பதைத் தொல்பொருள் ஆராய்ச்சி அறிவிக்கிறது. வளர்ச்சி யுறாத நாகரிகம் ஒன்று, முதிர்ச்சியுற்ற நாகரிகத்தோடு தொடர்பு கொள்ளுகின்ற பொழுது, இழிந்த நிலையில் உள்ள நாகரிகம் பையப்பைய உயர்ந்த நிலையில் உள்ள நாகரிகத்தில் ஒன்றாகக் கலந்துவிடுவது எல்லா நாடுகளிலும் காணப்படும் பொதுப் பண்பாகும். இரண்டறக் கலக்கும் தன்மை யும், அளவும் அவற்றின் தன்மயமாக்கும் பண்பினையும், கவர்ந்து கொள்ளும் ஆற்றலையும் பொறுத்து அமைகின்றன.

### பண்பாட்டுக் கலப்பு

இந்தியர்கள் முதன்முதலாகச் சாவகத்தில் குடியேறிய பொழுது, அந்நாட்டுப் பழங்குடிமக்களோடு அவர்கள் நெருங்கிய தொடர்பினைக் கொண்டார்கள். அதன் விளைவாக உடனடி யாக இரண்டறக் கலக்கும் நிலை உருவாயிற்று. காலப்போக்கில் இந்திய நாட்டுச் சமயங்களுக்குள்ளே சாவக மக்களின் சமயக் கொள்கைகளும் கோட்பாடுகளும், நம்பிக்கைகளும், பழக்க வழக்கங்களும் வழிபாட்டு நெறிகளும் சிற்சில மாற்றமும் திருத்தமும் பெற்று ஒன்றாகக் கலந்து விட்டன.

ஜாவாவில் கிடைத்துள்ள சம்ஸ்கிருத மொழிக் கல்வெட்டு கள், நெடுந் தொலைவிலுள்ள இந்நாடுகளில் இந்திய மொழி,

இலக்கியம், சமயம், அரசியல் நிலையங்கள், சமூக அமைப்புகள் ஆகிய அனைத்தும் பெருவெற்றி பெற்றதைத் தெரிவிக்கின்றன. அந்நாடுகளின் தேசியக் கூறுகளைப் பேரளவிற்கு ஒதுக்கிவிட்டு அல்லது தன்மயமாக்கிக் கொண்டு, இவை அனைத்தும் புதிய நாட்டில் செழித்தோங்கின.

தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பரவிய சமயங்கள், கொள்கைகள், கோட்பாடுகள், சமயச் சடங்குகள், பழக்க வழக்கங்கள் முதலிய அனைத்தும், அவை எந்தத் தாயகத்தி லிருந்து வந்தனவோ, அந்தத் தாயகத்தின் மறுபசர்ப்புக்களாக விளங்கின.

## சைவ சமயம்

சாவகத்தில் சைவசமயம் செல்வாக்குற்றிருந்தது. கி. பி. எட்டாம் நூற்றாண்டு அளவிலேயே இந்நாட்டில் பிராமண சமயத்தின் பிற்கால வடிவமான 'புராண சமயம்' நன்கு பரவி இருந்தது. பொதுவாக 'மும்மூர்த்தி' வழிபாடு பேசப்பட்டாலும், சிவவழிபாடும், திருமால் வழிபாடுமே சிறப்புற்று விளங்கின. இந்தியாவைப் போலவே சாவகத்திலும் நான்முகன் வழிபாடு அருகிக் காணப்படுகிறது.

## சிவ வழிபாடு

சிவபெருமானுக்கே சாவகத்தின் வழிபாட்டில் முதலிடம் கொடுக்கப்பட்டது. மகேசுவர வடிவில் சிவபெருமான் வணங்கப் பட்டார். அவருடைய பல்வேறு வடிவங்கள் வழிபாட்டுக்குரிய தெய்வங்களாகப் பயன்படுத்தப்பட்டன. அவற்றுள் 'பத்திரகுரு' வடிவம், பெருவழக்காக விளங்கியது. சிவனைச் சாவக மக்கள் அழித்தற் கடவுளாக மட்டும் கருதவில்லை; உலகைப் புதுப் பித்து புதுவாழ்வு அளிக்கும் புனிதனாகவும் அவனைக் கருதினர். இதனால், இறைவனுடைய இருவேறு இயல்புகளைச் சித்திரிக் கும் இருவகை தெய்வத் திருமேனிகள் ஜாவாவில் செய்யப் பட்டன. இறைவனின் அருள்நிறைந்த வடிவமாகிய மகேசுவரன் அல்லது மகாதேவன் வடிவமும், அழித்தலை அல்லது சீற்றத்தைச் சித்திரிக்கும் மகாகாலன் அல்லது பைரவன் வடிவமும் ஜாவா மக்களால் போற்றி வணங்கப்பட்டன. இவற்றோடு நடராசரின்வழிபாடு சிறப்புற்று விளங்கியது.

## அகத்தியர் வழிபாடு

மேலும், ஒரு துறவிக் கோலத்தில் தாடியும். தடித்த உடலும் கையில் கமண்டலமும் ஜபமாலையும் ஏந்தியவண்ணம்சித்திரிக்கப்

பட்ட சிவபெருமானின் சிலைகள் ஜாவாவில் பெருவழக்காகக் காணப்படுகின்றன. தென்கிழக்கு ஆசிய நாடுகளில் காணப்படும் சைவசமயத்தின் தனிச்சிறப்பு வாய்ந்த சிவபெருமானின் திருக் கோலமாக இவ்வடிவம் காணப்படுகிறது. இதனை அகத்தியர் வடிவம் என்பர். சிவபெருமானின் தலைமைச் சீடரான அகத்தியரை வழிபடும் வழக்குச் சிவ வழிபாட்டில் இடம் பெற்ற தாகக் கூறுவர்.

சிவவழிபாட்டிற்குச் சிவலிங்கங்களும் பயன்படுத்தப்பட்டன, தொல் பொருள் ஆராய்ச்சியாளர் பலவகையான சிவலிங்கங் களைக் கண்டெடுத்துள்ளனர். சாவக மக்கள் ஞாயிற்றையும். சிவனாகவேகருதி வழிப்பட்டனர் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது.

## சக்தி வழிபாடு

மகேசுவர வடிவில் வணங்கப்பெற்ற சிவபெருமானின் சக்தி யாக, மலையரசன் மகளான உமாதேவி, மகாதேவியாகவும், பார்வதியாகவும் வழிபாடு செய்யப்பட்டாள். மகாகாலன், அல்லது பைரவன் வடிவில் வணங்கப்பட்ட சிவ பெருமானின் தேவியாக மகாகாளி, பைரவிவணங்கப்பட்டாள். இவ்விருவகைச் சிவசக்தியர் அல்லாமல், மகிஷாசூரமர்த்தினி அல்லது துர்க்கை வழிபாடும் சிறப்புற்று விளங்கியது.

## விநாயகர் வழிபாடு

சிவபெருமானின் மகனான கணேசருடைய வழிபாடு சாவகத்தில் எங்கும் பரவி இருந்தது. இந்திய உருவச்சிலை அமைப்பினைப் பின்பற்றியே சாவகத்தில், விநாயகருடைய உருவச்சிலைகள் பலவகையாகச் செய்யப்பட்டுள்ளன.

## முருக வழிபாடு

முருகன் வழிபாடும் இந்நாட்டில் செல்வாக்குற்றிருந்தது. போர்க்கடவுள் கார்த்திகேயனாக, முருகன் வழிபடப்பட்டான். ஜாவாவில் மகாதேவர், பைரவர், கணேசர், முருகன், பார்வதி, மாகாளி, அர்த்தநாரி முதலிய தெய்வங்களின் சிலைகள் ஏராள மாகக் கிடைத்துள்ளன.

## வைணவ சமயம்

இந்து சமயத்தின் இரண்டாவது பெரும் தெய்வமான திருமாலின் வழிபாடு சாவகத்தில் சிவ வழிபாட்டிற்கு ஈடான நிலையை என்றுமே அடையவில்லை. சில அரசர்கள் அல்லது

அரச மரபுகளின் ஆட்சிக்காலத்தில் வைணவ சமயம் சிறிது செல்வாக்குப் பெற்று இருந்தது. திருமாலின் சக்தியாகிய திருமகள் நான்கு கைகளையுடைய அழகிய வடிவில் சாவகத்தில் வழிபாடு செய்யப்பட்டதாகத் தெரிகிறது.

## அவதாரங்கள்

திருமாலின் அவதாரங்களுள், இராம, கிருஷ்ண, மத்சய, வராக, நரசிம்ம அவதாரங்கள் சிலை வடிவில் செய்யப்பட்டு, வழிபடு மூர்த்திகளாகவும் பயன்படுத்தப்பட்டன. திருமாலின் வாகனமான கருடனின் சிலைகளும கண்டெடுக்கப்பட்டுள்ளன. எனினும், சைவ, பௌத்த சமயங்களுக்கு அடுத்த நிலையிலேயே திருமால் வழிபாடு சாவகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதை அந்நாட்டின் கட்டடக் கலையும் தொல்பொருள் சின்னங்களும் தெரிவிக்கின்றன.

## பிறஇந்துத் தெய்வங்கள்

நான்முகன், கலைமகள் ஆகியோரின் சிலைகள் இரண்டொன்றே சாவகத்தில் கிடைத்துள்ளன. திரிமூர்த்தி வடிவங்கள் சிலவும் கிடைத்துள்ளன. இவை அவ்வழிபாடுகள் மிக அருகிய வழக்காக இருந்தன என்பதை அறிவிக்கின்றன.

சிவபெருமானின் யோக நிலையைச் சித்திரிக்கும் 'பத்தர குருவின்' சிலைகள் பல கிடைத்துள்ளன. அவை இந்தோனேசியப் பழங்குடி மக்களின் தெய்வமாக இருக்க வேண்டும் என்பர் சிலர், ஆனால், அச்சிலைகள் அகத்தியருடைய வடிவைச் சித்திரிக்கின்றன என்பது பல அறிஞர்களுடைய கருத்து. ஜாவாவில் அகத்தியரிடத்து அரசர்களும், மக்களும் பெருமதிப்பு வைத்திருந்ததையும், அகத்தியர் வழிபாடு செய்யப்பட்டதையும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இக்காரணங்களால் அச்சிலைகள், அகத்தியருடைய சிலைகள் எனக் கொள்ளுவதே சாலவும் பொருத்தம் உடையதாகும்.

கல்லிலும் வெண்கலத்திலும் ஜாவாவில் கிடைத்துள்ள எண்ணற்ற சிலைகளைக் காணுகின்றபொழுது, ஜாவாவில் இந்துசமயத் தெய்வங்கள் அனைத்துமே போற்றி வழிபாடு செய்யப்பட்டன எனும் முடிவிற்கு வரலாம்.

## சாத்திர நூல்கள்

சமயச் சார்பான பலதிறப்பட்ட தத்துவ நூற்களும், சாத்திர நூற்களும் இந்திய நாட்டிலிருந்து, கொண்டுவரப்

பட்டன அல்லது அவற்றைத் தழுவி சாவகத்தில் பல புதிய நூற்கள் எழுதப்பட்டன. இவற்றால், இந்து சமயம் சாவக மக்களுடைய வாழ்க்கையில் பெற்றிருந்த இடத்தினை நாம் உய்த்துணரலாம்.

## பௌத்த சமயம்

சைவ சமயத்திற்கு அடுத்த நிலையில், பௌத்த சமயம் ஜாவாவில் சீரும் சிறப்பும் பெற்று விளங்கியது. பாகியான் காலத்தில் பௌத்த சமயம் சாவாவில் செல்வாக்கற்ற நிலையில இருந்தது. இந்து சமயமே சிறப்புற்றிருந்ததாக அவர் குறிப்பிட்டுள்ளதை முன்னரே கண்டோம்.

ஆனால் கி. பி. 519-இல் தொகுக்கப்பட்ட சீனாவின் கால வழிச் செய்திக்கோவை ஒன்றில், குணவர்மன் என்ற காஷ்மீர அரசனுடைய வரலாறு கூறப்பட்டுள்ளது. அவன் சிறுபிள்ளையாக இருந்த காலம் முதல், சமயப்பற்று உடையவனாக இருந்து வந்தான். தந்தை இறந்ததும் அவனை அரசனாகுமாறு மக்கள் வேண்டினர். ஆனால் அவன் அரசினை வேண்டா என்று மறுத்து விட்டு, பௌத்த துறவியானான். பின்னர், இலங்கைக்கும் ஜாவாவிற்கும் சென்றான். ஜாவாவை ஆட்சி செய்த அரசனையும் அவனுடைய தாயையும் பௌத்த சமயத்திற்கு குணவர்மன் மாற்றினான் அதன் பிறகு, அரசனும் புத்தர் பெருமானின் சீடனாக மாறினான். இவ்வாறு பௌத்த சமயம் சாவகத்தில் பரவியது என்று சீன வரலாற்றுக் குறிப்பேடு கூறுகிறது.

குணவர்மனின் பெயரும் புகழும் நாடு எங்கும் பரவலாயிற்று. சீனாவின் துறவிகள், தங்கள் பேரரசரின் மூலம் குணவர்மனைத் தங்கள் நாட்டிற்கு வருமாறு அழைத்தனர். அவ்வழைப்பினை ஏற்று, 'நந்தி' என்ற இந்திய வாணிகன் ஒருவனுடைய கப்பலில் குணவர்மன் சீனாவிற்குப் புறப்பட்டுச் சென்று நாங்கினை அடைந்தான். சில மாதங்களுக்கு எல்லாம், அவனுடைய அறுபத்தைந்தாவது வயதில் காலமானான்.

குணவர்மனின் இக்கதை கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில், ஜாவாவில் பௌத்த சமயம் புகுத்தப்பட்டது என்பதையும், பின்னர் அது எவ்வாறு வேரூன்றித் தழைக்கலாயிற்று என்பதையும் தெரிவிக்கிறது.

ஏழாம் நூற்றாண்டு இறுதியில் 'இட்சிங்கு' என்ற சீன யாத்திரிகன் ஜாவாவீற்கு வந்தான். அவன் இந்நாட்டைப் பற்றிக் கூறியிருக்கின்ற கருத்துகளினால், ஏழாம் நூற்றாண்டு

இறுதியில், ஜாவாவின் பிற பகுதிகளிலும் பௌத்த சமயம் நன்கு பரவியிருந்ததை நாம் அறிகிறோம்.

### காஞ்சியின் போதிதருமர்

காஞ்சியைச் சேர்ந்த போதிதருமர் எனும் பௌத்த குரு கி. பி. ஆறாம் நூற்றாண்டின் இடையில் ஜாவா வழியாகச் சீனாவை அடைந்ததாகத் தெரிகிறது. இவரே 'தியான பௌத்த சமயத்தைச்' சீனாவிலும் ஜப்பானிலும் பரப்பியவராவர்.

### காஞ்சியின் தருமபாலர்

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் காஞ்சிமா நகரைச் சேர்ந்த 'தருமபாலர்' என்ற பௌத்த துறவி, நாளந்தாப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகவும், துணைவேந்தராகவும் பணிபுரிந்தார். பின்னர் அவர் சொர்ணத்தீவிற்குச் சென்று பௌத்த சமயத்தைப் பரப்பும் அருந்தொண்டாற்றினார்.

### தாந்திரிக பௌத்த சமயம்

கி. பி. எட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தென்னிந்தியாவைச் சேர்ந்த வச்சிரபோதி என்ற பௌத்தத் துறவி, இலங்கையிலிருந்து சீனாவிற்குச் சென்றார். வழியில், அவர் ஸ்ரீவிசயப் பேரரசில் ஐந்து மாதங்கள் தங்கியிருந்தார். அவருடைய மாணவன் அமோகவச்சிரன் அவருடன் சீனாவிற்கு வந்திருந்தான். அவர்களிருவரும் முதன்முதலாகச் சீனாவில் தாந்திரிகப் பௌத்த சமயத்தைப் புகுத்தியவர்கள் என்று பாராட்டப்படுகின்றனர். இவற்றிலிருந்து இந்தியாவிற்கும் சாவகத்திற்கும் நெருங்கிய சமயத் தொடர்பும், இடையறாத வாணிபப் போக்குவரத்தும், பண்பாட்டுப் பரிமாற்றமும் இருந்து வந்தமை புலனாகின்றன.

### மகாயானம்

கி. பி. ஏழாம், எட்டாம் நூற்றாண்டுகள் வரை சாவகத்தில், ஈனயான பௌத்த சமயம் பரவியிருந்ததைக் கண்டோம். அடுத்த நூற்றாண்டுகளில் பெரும் மாறுதல் உண்டாகியது. சைலேந்திரப் பேரரசின் ஆதிக்கம் ஜாவாவில் பரவியதன் விளைவாக ஈனயான பௌத்த சமயம் இருந்த இடம் தெரியவில்லை. அதற்கு மாற்றாக மகாயான பௌத்தசமயம், விரைவில் செல்வாக்குற்றது. அதன்சிறப்புமிக்க வெற்றியைப் போராபுதூரில் உள்ள கோயிலி

லும் வேறு பல மாண்புமிக்க கோயில்களிலும் காணலாம். பாமர மக்களிடையே, மகாயானப் பௌதத சமயம் ஆற்றலும், கவர்ச்சி மிக்கதுமாக விளங்கியது. அதன் விளைவாகப் பௌத்த சமயத்தில் சிறப்புமிக்க கோட்டையாக ஜாவா பொன்றாப் புகழபெற்றது.

அனைத்துலகச் சிறப்பினைப் பெற்றதனாலும், இந்தியாவோடு நெருக்கமான தொடர்பினைக் கொண்டதனாலும் சாவகத்தின் பௌத்த சமயம் முதன்மையும முக்கியத்துவமும் பெறறது. வங்காளத்திலிருந்து வந்த பௌத்தத் துறவிகளினால், சாவகத்தில் பௌத்த சமயம் ஆக்கமும் ஊக்கமும் பெற்றது. பதினோராம் நூற்றாண்டில் அதீச தீபாங்கரர் வங்காளத்திலிருந்து ஜாவாவிற்கு வந்தார். இவரைப்போன்று, பல துறவிகள் சாவகத்திற்கு வந்து சமயப்பணிகள் புரிந்தனர். இதனால், பௌத்த சமயத்தின் கலைஞானக்கூடமாகச் சாவகம் சிறப்புற்றது. பல பௌத்தசமய ஏடுகள், சாவகத்தில் கிடைத்துள்ளன. மேலும், போராபுதூரில் உள்ள சிற்பங்களும், வேறு பல சமயச் சின்னங்களும பௌத்த சமயத் தத்துவத்தின் பரந்துபட்ட நிலையையும், பல்வேறு கிளைகளையும பற்றிப் பல அரிய செய்திகளைத் தெரிவிக்கின்றன.

இந்திய மகாயான சமயத்தின் வளர்ச்சிக் கூறுகளின் தடயத்தினைச், சாவக வரலாற்றில் கி பி. 1200முதல 1500வரை உள்ள காலக்கட்டததில் காண இயலுகிறது. சிவபெருமான், அயக்ரீவன் முதலிய இந்து சமயத் தெய்வங்கள் மகாயானத் தெய்வத் தொகுதியில் சேர்க்கப்பட்டதும், தவறான வகையில் மாற்றியமைக்கப்பட்ட தாந்திரிக முறைகளும், ஆடவரும் மகளிரும் சேர்ந்து மறைவாகப் புரியும் சாதனச் சக்கரம் முதலிய சில சடங்குகளும் சாவகத்தில் செல்வாக்குற்றமை இங்குக் குறிப்பிடத் தக்கன. சிவபெருமானையும் புத்தரையும் இணைத்து ஒன்றாகக் கருதுதல், அரியரன் தத்துவம் முதலியன சாவகத்தில் நிலை பெறலாயின.

## தாந்திரிகம்

அதே சமயத்தில் புத்த சமயத்தின் இருள் சூழ்ந்த பகுதியொன்று இந்நாட்டில் தலையெடுத்தது. மகாயான பௌதத சமயததிலிருந்து மிகவும் இழிந்த முறையில் அமைந்த தாந்திரிகம், சாவக மண்ணில் ஆழ வேரூன்றியது. இப்புதிய நெறி, சாவகத்திலும் சுமத்திராவிலும் நன்கு தழைத்தோங்கியது. ஏரலங்கன், ஜெயவர்ஷன் முதலிய அரசர்கள் காலத்தில் தாந்

திரிகச் சமயத்தைச் சேர்ந்த குருமார்கள் வாழ்ந்த முறை அருவருக்கத்தக்கதாகும். இதன் மூலம் அக்காலத்தில் தாந்திரிகச் சமயம் பெற்றிருந்த செல்வாக்கினை உய்த்துணரலாம் மேலும், தவறான வழியில் செல்லத் தொடங்கிய இச்சமய நெறி, கிருத நாகரனின் காலத்தில் அடைந்த முன்னேற்றத்தை அவ்வரசனே விளக்கியுள்ளான்.

அம்மாபெரும் மன்னன் பேராற்றலும் பெருந்திறமையும் உடையவனாக விளங்கினான். அவன் நாகார்ஜுனரின் திருவவதாரமாகக் கருதப்பட்டான். ஆயினும், அவன் வெறுக்கத்தக்க கொடுமை வாய்ந்த 'பஞ்சமாகாரச்' சாதன சக்கரம் முதலிய சமயப் பழக்கங்களில் ஈடுபட்டிருந்தான். அச்சாசனங்கள தற் சமயம் லெய்டன் மாநகரில் உள்ளன. அச்சமும் வெறுப்பும் உண்டாக்கும் பைரவன் சிலை, இவ்வரசனுடைய உருவச்சிலையாக இருக்கலாம் என்று சில ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். உண்மை எவ்வாறாயினும், கொழுத்துக் கோரமான நிர்வாண நிலையில், மனித மண்டை ஓடுகளுக்கு இடையே காணப்படும் இந்தச்சிலை, அக்காலத்திய வெறுக்கத்தக்க சமய நம்பிக்கையைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

வங்காளத்தில் பால மன்னர்களின் ஆட்சியின் பிற்பகுதியில், இத்தகைய இழிநிலை அடைந்த பௌத்த சமயம் செல்வாக்குப் பெற்றிருந்ததாகத் தெரிகிறது. அத்துடன் சாவகத்தில் மகாயானமும் தாந்திரிகமும் வளர்ச்சியுற்ற முறை நலிந்துவிட்டது. "நம்பிக்கைகள், சமயப் பழக்கவழக்கங்கள் முதலியவற்றைப் பொறுத்த வரை தாய்நாட்டிற்குத் தொலைவிலுள்ள கிழக்குக் குடியேற்ற நாடுகளுக்கு பெரும்பான்மையும் ஒற்றுமையிருந்ததால், இத்தாந்திரிக பௌத்த சமயம் அந்நாட்டில் நலிவுற்றிருக்கலாம் என்பது வரலாற்று அறிஞர்களின் கணிப்பு-

## காஞ்சித் துறவியின் சாவகப் பாடல்கள்

சாவக மக்கள் இந்திய நாட்டிடத்துப் பெருமதிப்பு வைத்திருந்தனர். நாகர கிருதாகமம் என்ற நூலில். சாகவமும், ஜம்பு தீபமும் மிகச் சிறந்த நாடுகள் என்று ஒரு பாடல் (83. 2) குறிப்பிடுகிறது. இரு நாடுகளுக்கும் இடையே மிக நெருங்கிய தொடர்பு சமயத்துறையிலும் வாணிகத்துறையிலும். பண்பாட்டுத்துறையிலும் நிலவிவந்தமைக்கு இந்நூலில் பல சான்றுகள் உள்ளன. இராஜசனாகரனுடைய வீரதீரச் செயல்களைப் புகழ்ந்து பாராட்டும் வகையில், காஞ்சியைச் சேர்ந்த புத்தாதித்தியன் என்ற துறவி, பல பாடல்கள் பாடி

யுள்ளான். அவனுடன் பெரும்பாலும் தமிழகத்துப் பிராமண னான முதலி சகரிதாயனும் அவ்வரசனைப் போற்றிப் பாடி யுள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கது. இவ்வாறு சமயத் துறையைச் சேர்ந்த துறவிகளும் சான்றோர்களும்கூட சாவகத் தின் பொது வாழ்க்கையில் ஆர்வமும், ஈடுபாடும் கொண் டிருந்தமை, அந்நாட்டு மன்னர்களின் சமயப் பொறையுடை மைக்குச் சிறந்த சான்றாகத் திகழ்கிறது.

## 7 3. 6.

## கலைச் செல்வம்

ஒரு நாட்டில் போற்றி வளர்க்கப்படும் கலைகள், அந்நாட்டின் உண்மையான நாகரிக வளர்ச்சியைக் கண்டறிவதற்குரிய உரைகற்களாகும். சாவகத்தின் தொல் குடிமக்கள், கலையுணர்வு உடையவர்களாக இருந்தனர். தொல் பழங்காலத்தில், அவர்கள் கட்டிய கட்டடங்களும், செதுக்கிய சிலைகளும், சிற்பங்களும முழு வளர்ச்சியுறாத நிலையில் கலைநயம் குறைந்தனவாக இருந்தன. இந்தியாவிலிருந்து குடியேறிய இந்தியர்களும, சிறப்பாகத் தமிழர்களும் தங்கள் கலைகளையும். நாகரிகத்தையும், பண்பாட்டையும், கொண்டு சென்றனர். புதிய சூழ்நிலைகளுக்கும், மக்கள் மனநிலைக்கும் ஏற்ப, சிற்சில மாற்றங்களோடு அவை அவ்விடத்தில் தழைத்தோங்கின. இந்தியாவிலிருந்து சைவசமயமும், பௌத்த சமயமும் சாவகத்திற்குச் சென்றபொழுது, அங்கிருந்த மக்களிடத்து அவை விரைவில் செல்வாக்குப் பெற்றதைக் கண்டோம். கலை என்பது சமயத்திற்குக் குற்றேவல்புரியும் பணிப்பெண்ணாக இந்தியாவில் விளங்கியதைப் போன்றும், வேறு பிற நாடுகளில் திகழ்ந்ததைப் போன்றும் சாவகத்தின் சமயத்தை ஒட்டியே, கலை வளர்ச்சியுற்றது. சமயத்தின் ஆதரவிலேயே சாவகக் கலை சிறப்புறத் தொடங்கியது.

மலேயா தீபகற்பத்தில் ஒரு காலத்தில் ஏராளமான கோயில்களும் தொல் பொருள் சின்னங்களும் நிறைந்து காணப்பட்டன. ஆனால், இன்று அவற்றுள் பெரும்பாலானவையும் அழிந்தும் சிதைந்தும் போய் உள்ளன. ஜாவாவில் மட்டும் பல பழம பொருள் சின்னங்கள் சிறப்பாக சிதைவுறாமல், போற்றிக்

காக்கப்பட்டுள்ளன. இந்தியாவிலிருந்து பெறப்பட்ட கலை, இந்நாட்டில்,எத்துணை அளவிற்குச் சீரும் சிறப்பும் உடையதாய், கண்டார் வியக்கத்தக்கவகையில் போற்றி வளர்க்கப்பட்டுள்ளன என்பதை இவை நமக்கு எடுத்தியம்புகின்றன. தமிழக—சாவகக் கலையும், தமிழக—சாவக இலக்கியமும் மறைந்துபோன தமிழ் நாகரிகத்தின் அழியாப் பெருஞ் சின்னங்களாக உள்ளன.

## புத்துருவாக்கம்

தமிழகச் சாவகக் கலை, கட்டடக்கலை முறையிலும்,சிற்பக் கலை பாணியிலும் ஒப்புயர்வு அற்றனவாக விளங்குகின்றன. ஜாவாவில் ''மறுமலர்ச்சி பெற்றுள்ள நமது கலை தமிழகத்தில் துளிர்த்து நிற்கும் திராவிடக் கலையைவிடச் சிறந்தது என்று உலகக் கலை மேதைகள் பலர் ஒருமித்து முடிவாகக் கூறியுள்ளார்கள். சாவகத்தில் நமது கட்டடக் கலையும், படிமக்கலையுந் தான் புத்துருப் பெற்று எழுந்தது என்று எண்ணுவது தவறாகும். நமது சைவசமயமே அங்குப் புத்துருப்பெற்றுப் புகழ்நிலையில் உள்ளது. அங்கு நமது நாட்டியக் கலையும், இசைக் கலையும், நாடகக்கலையும், பாவைக்கூத்தும், நம்முடைய வரிவடிவங் களும், இதிகாசங்களும், பழங்கதைகளும், ஆடைகளும்,அணிகளும் அலங்காரங்களும் புத்துருப் பெற்று சிறந்து விளங்குகின்றன.[14]

## கட்டடக்கலை

ஜாவாவில் கட்டப்பட்ட சமயத் தொடர்பான கட்டடங்கள் அனைத்தும், பொதுவாக 'சாண்டி' என்ற அடைமொழியால் குறிப்பிடப்படுகின்றன. இதற்கு விதிவிலக்காக இரண்டொரு சின்னங்களே, இருக்கலாம். 'சாண்டிகள்' பெரும்பாலும் கோயில்களாகவே உள்ளன. கோயில்களின் அமைப்புத்திட்டம் பெரும்பாலும் சிற்சில வேறுபாடுகளுடன் ஒரேவகையாக அமைந்துள்ளன. ஒவ்வொரு கோயிலுக்கும் மூன்று உறுப்புகள் உள்ளன. உயர்ந்த சிற்ப வேலைப்பாடுடைய அடித்தளம், சதுர வடிவமான கோயிலின் உடலும் முன்னிலையில் ஒரு கூடமும், மற்றப் பகுதிகளில் பிதுக்கங்களும் கொண்ட இரண்டாம் பகுதி, கூரை ஆகிய மூன்று உறுப்புகளைக் கொண்டன அக்கோயில்கள். கூரையில் குறுகிக் கொண்டே செல்லும் மாடங்கள், மூலக் கோயிலின் சிறுவடிவங்களாக அமைக்கப்பட்டுள்ளன. கோயிலின் புறத்தே, நான்கு மூலைகளிலும் சிறு சிறு கோபுரங்கள் கட்டப் பட்டுள்ளன. அவை யாவும், மூலக்கோயிலின் சிறிய வடிவங்

---

14. இராகவன், அ; தமிழக சாவகக் கலைத் தொடர்புகள், ப. 36.

களாகவே உள்ளன. மாபெரும் கட்டடங்களாக இருந்தால், அவற்றின் கூரையின் மேல் தளங்கள் எண்கோண வடிவில் அமைக்கப்பட்டுள்ளன. பெரும்பாலும் நீண்ட சதுர வடிவில் உள்ள மேல் தளங்களினால் கவர்ச்சி குன்றாமல் இருப்பதற் காகவே, அவற்றிற்கு மேல் எண்கோண வடிவில் தளங்களை அமைத்துக் கோபுரத்தை அழகுடன் அமைத்துள்ளனர்.

## தமிழகக் கலைப்பாணி

கோயிலின் உட்புறம் சதுர வடிவில் வேலைப்பாடுகள் யாது மின்றி, அமைந்த அறையாகும். அவற்றின் சுவர்கள் செங்குத் தாகக் குறிப்பிட்ட ஓர் அளவு வரையில், கட்டப்பட்டுள்ளன. அதற்கு மேல், வரிசை, வரிசையாகத் தளமட்டமாக இடப் பட்டுள்ள கற்களை அச்சுவர்கள் தாங்கிக் கொள்ளுகின்றன. அக் கற்கள் ஒவ்வொன்றும், மற்றொன்றைக் காட்டிலும் சிறிது பிதுக்கம் உடையனவாக உள்ளன. அதனால் உட்குழிவு உடைய தாகத் தலைகீழாக அமைந்த 'பிரமிட்டி'னைப்போன்று தோன்று கிறது. அதன் உச்சியில், உயர்ந்ததும் உள்வீடு இல்லாதது மான கூருருளை வடிவம் அமைக்கப்பட்டிருக்கின்றது. இவ்வாறு விமானத்தின் உட்பகுதி பிரமிட்டு போன்ற வெளிப்புறத் தோற்றத்திற்கேற்ற வகையில் அழகுற அமைக்கப்பட்டுள்ளது. அவற்றில் பயன்படுத்தப்பட்டுள்ள அலங்கார வேலைப்பாடுகள் யாவும், இந்தியக் கலையின் தலைமைக் கருத்தினைத் தன்னகத்தே கொண்டுள்ளன. அவற்றுள் வன மல்லிகை போன்ற அணி, மாலை, செடி, கொடி போன்ற சுருள்களை யுடைய ஒப்பனை வேலைப்பாடு, கயிறுகள் பின்னிப் பிணைந்து காணப்படும் அலங்கார வேலைப்பாடு, பலதிறப்பட்ட இயற்கை யோடு இயைந்த வடிவங்கள், கோண முறைகள், இந்தியச் சார்புடையன. இவற்றுள் சாவக நாட்டிற்குரிய செடி கொடி களையோ, விலங்குகளையோ நாம் காண முடியவில்லை.

## கால மகரச் சின்னம்

அடிக்கடிப் பயன்படுத்தப்படும் இந்திய வேலைப்பாட்டுச் சின்னம் 'காலமகரம்' என்பதாகும். அவற்றுள் தனித்தனியான காலன், மகரம் என்ற இரண்டு சின்னங்கள் உள்ளன. சில சமயங் களில் அவை இரண்டும் ஒன்றாக இணைந்தும் காணப்படு கின்றன. 'காலன்' தலை வியத்தகு விலங்கொன்றின் தலை யினைப் போன்று அமைக்கப்பட்டுள்ளது. பொதுவாக அத்தலை 'காலன்' எனப்படும் தெய்வத்தின் பொம்மையாகக் கருதப் படுகிறது. ஆனால், அது இந்தியத் தலைமைக் கருத்தான

சிம்மத்தின் தலையிலிருந்து மாற்றியும், திருத்தியும் அமைக்கப் பட்ட, புதியதொரு வடிவமாகும். ஆனந்த குமாரசாமி அவர்கள் இதனை 'விசித்திரமான கீர்த்தி முகங்கள்' என்று குறிப்பிடு கிறார். அது தொன்றுதொட்டுப் பின்பற்றப்பட்டுவரும் சிங்கத் தின் தலையில் பிதுங்கிய கண்களும், அகன்ற மூக்கும், தடித்த மேல் உதடும் இரண்டு கோரைப் பற்களும் (தந்தங்களும்) கொண்டு விளங்கும் கொடிய காட்சியாகும்.

மாபெரும் வாயில்களிலும், மாளிகைகளின் முன்புறங்களி லும் செடிகளாலும், கொடிகளாலும் கலந்து செய்யப்பட்ட விசித்திர விலங்கின் வடிவமாகிய 'காலமகரம்' ஓர் அழகிய தோரணமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. அத்தோரணம் மாடங்களின் மீதும் பெரிய வாயில் வளைவுகளின் நடுப்பகுதி யிலும், காலனுடைய தலை செதுக்கப்படும். மகரத்தின் தலைகள், வளைவுகளின் இரண்டு எல்லைப்புற முனைகளிலும், கதவுகளின் இடுக்குகளிலும் அமைக்கப்பட்டுள்ளன. இந்தக் கால மகரச்சின்னம் காணப்படாத இடமே சாவகக் கட்டடங்களில் இல்லை எனலாம். இந்திய—ஜாவானிய அலங்காரச் சிற்பங்களில், 'காலமகரம்' பெரிதும் விருப்பத்தோடு பயன்படுத்தப்பட் டுள்ள சின்னமாகும்.

## இரு கலைக் கூறுகள்

சாவகக் கோயில்களில் காணப்படும் இரண்டு சிறப்பியல்புகள் இங்குக் குறிப்பிடத்தக்கன. முதலாவதாகத் தூண்களும், பட்டைத் தூண்களும் சாவாவில் எங்கும் காண்பது அரிது. அடுத்துத் தளமட்ட அடிப்படையில் வளைவுகள் கட்டப்பட்டுள் ளன. இது பண்டை இந்திய மரபாகும். உண்மையான அல்லது வட்டமாகப் பரவிய வளைவுகளோ, தோரண வாயில்களோ ஓரிடத்தில்கூட சாவகத்தில் காணப்படவில்லை.

இத்தகைய அமைப்பினையும், வேலைப்பாடுகளையும் உடைய சாவகத்தின் கோயில்கள் அனைத்தையும் இங்கு ஒவ்வொன்றாக விளக்குவது தேவை இல்லை. ஒன்று அல்லது இரண்டு பெரிய கோயில்களை மையமாகக் கொண்டு, பல சிறிய கோயில்கள் அதைச் சுற்றிலும் கட்டுப்பட்டுள்ளன. இவ்வாறு அக்கோயில்கள் குழுக்குழுவாக அமைக்கப்பட்டுள்ளன. இவை, தமிழ் நாட்டில் தலைமைக்கோயிலைச் சுற்றி அமைக்கப்பட்டுள்ள பரிவார தேவதைகளின் கோயில்களை நினைவுபடுத்துகின்றன. எனவே, பெரும்பாலும் இரண்டொன்றைத் தவிர மிகப்பெரிய பரப்பு அளவினையுடைய கோயில்கள், சாவகத்தில் கிடையாது. ஒரே மதில் சுவருக்குள் எண்ணற்ற கோயில்களை அடக்கி

வைப்பது கோயிலின் முழு அமைப்பிற்கு மிகப் பெரியதொரு தோற்றப் பொலிவை அளிக்கிறது.

சாவகம் கி. பி. 778 முதல் 879 வரை சைலேந்திரப் பேரரசுக்கு உட்பட்டிருந்ததை முன்னரே கண்டோம். அக்காலம் முதல் பதினோராம் நூற்றாண்டு வரையில், கட்டப்பட்ட பண்டைக் கால இந்து, பௌத்த சமயக் கோயில்கள் மத்திய சாவகத்தில் மிகப்பலவாக உள்ளன.

இரண்டாயிரத்து நூற்று இருபத்தைந்து மீட்டருக்குக் கடல் மட்டத்திற்கு மேல், உயர்ந்து விளங்கும் டையங்கு(Dieng)மேட்டு நிலத்தில் பல கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. அங்குச் சிவன் கோயில்கள் உள்ளன. அவை குப்தர் காலத்திய கோயில்களோடு பெரிதும் ஒப்புமையுடையனவாக உள்ளன.[15] கடல் மட்டத்தினின்று 2125 மீட்டர் உயரத்தில், கைபுனைந்து இயற்றாக் கவின் பெறு வனப்பின் நிலைக்களனாக விளங்கும் டையங்கு மேட்டு நிலத்தில், அயல் நாட்டினருக்குச் சிறிதும் பயனில்லாமல் தனித்துப், பரந்து கிடக்கும் இந்தக் கோயில் தொகுதிகள், நமது உள்ளத்தைக் கவரக்கூடிய, சிறந்த இன்பந்தரும் இடமாகும். சமய உட்பொருள் உணர்த்தும் ஐந்து வேறுபட்ட கோயில் தொகுதிகள் இங்கு உள்ளன. அவற்றுள் சில நன்கு பாதுகாக்கப் பட்டுள்ளன. மற்றவை, வெறும் கற்குவியல்களாகக் காணப் படுகின்றன.

### பாண்டவர்க்குக் கோயில்கள்

பஞ்சபாண்டவர்களின் புகழ்மிக்க பரம்பரையினரைப் போற்றும் முறையில் இந்தியாவில் காணப்படும் கற்கோயில் களைப் போன்றே, இங்குப் பல கோயில்கள் பாண்டவர்களுக் காகக் கட்டப்பட்டுள்ளன. இவற்றிற்கு நல்ல எடுத்துக் காட்டாக வும் முன்னோடியாகவும் விளங்குவது மாமல்லபுர கடற்கரையில் எடுப்பிக்கப்பெற்ற ஒற்றைக் கல் கோயில் தொகுதியாகும். அவை தருமர், முதலிய பாண்டவர்களின் கோயில்களாகும். அவை கிறித்துவ சகாப்தத்தின் ஏழாவது நூற்றாண்டைச் சார்ந் தவை[16] என்பதை நாம் அறிவோம்.

இந்த அடிப்படையில், அமைக்கப்பட்டுள்ள கோயில்கள், ஜாவாவில் மிகவும் காலத்தால் பழமையானவை என்று கருதப்

15. Majumdar, R. C., Swarnadipa, part-II; p. 176
16. Fergusson, J., History of Indian and Eastern Architecture Vol. I pp. 327-328.

படுகின்றன. அவை மாமல்லபுரத்து பஞ்சபாண்டவர் தேர்களின் அமைப்பில், அமைக்கப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. பாரதக் கதையினைப் போற்றித் தழுவியதோடு, அமையாது, பாரதக் கதைத் தலைவர்களுக்குத் தனித்தனியே கோயில்கள் அமைத்துள்ளனர் சாவக மக்கள். அவற்றில் 'சாண்டி பாண்ட தேவ', 'சாண்டிபீம', 'சாண்டி அர்ச்சுனா' என்பன போன்ற பெயருள்ள கோயில்கள் பல கட்டப்பட்டுள்ளன. முற்காலத்தில் இவை சிவன் கோயில்களாக இருந்தன என்றும், பிறகு பாண்டவர் கோயில்களாக இவை மாற்றப்பட்டன என்றும் அறிஞர் சிலர் கருதுகின்றனர்.

## மாமல்லபுரத்து வேலைப்பாடு

அவை அனைத்தும் அளவில் சிறியனவாக இருந்தாலும் அவை எளிமையும் தெளிவும் வாய்ந்த வடிவழகு உடையன. மேலும் அவை அடக்கமாகவும் நன்முறையில் அலங்கரிக்கப் பட்டும் இருப்பதால் அவற்றிற்கு ஒரு தனிப்பொலிவு உண்டாகி யிருக்கின்றன. அவற்றில் செதுக்கப்பட்டுள்ள சிற்பங்கள் எளிமைப் பண்பும் ஏற்றமும் உடையனவாக இருப்பதோடு, அவை இடம் பெற்றிருக்கும் கோயில்களின் பெருமிதத் திற்குச் சிறப்பளிக்கும் வகையில், நேர்த்தி வாய்ந்தனவாக உள்ளன. டையங்கு மேட்டில் உள்ள கலைப்பொருள்கள் அனைத்தும் சிறந்த கலைநயமும், அமைதி தவழும் அழகும் நிறைந்து விளங்குகின்றன. இவ்வகையில் அவை அனைத்தும் தமிழ்நாட்டின், பல்லவர் காலத்திய ஒற்றைக்கல் கோயில்களின் (Monolithic temples) சாயலுடையன எனக் கூறினால் அது மிகையாகாது.

## சாண்டிக் கலசான்

கி. பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதியில், கிரேக்கப் பாணியில் கட்டப்பட்ட கோயில் சாண்டிக் கலசான் என்பது. அது பிராம்பனன் சமவெளியில், அமைக்கப்பட்டிருக்கிறது. அங்குப் பெரியதொரு இடிபாடு காணப்படுகிறது. அதன் மத்தி யில் உள்ள அழகிய கோயிலே. 'சாண்டிக் கலசான்' என்பு தாகும். போராபுதூர் கோயில் கட்டப்படுவதற்குச் சிறிது காலத் திற்கு முன்பு, இக்கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும். ஜாவா வில் இந்திய நாட்டுச் சிற்பிகள் கட்டிய கோயில்களில் நேர்த்தி வாய்ந்தனவற்றுள் ஒன்றாக இது காட்சி தருகிறது.

இக்கோயிலின் அமைப்பு, கிரேக்கப் பாணியில் அமைந்திருக் கிறது. அதன் முன் பகுதி பிதுக்கம் உடைய கோணங்களை

உடையதாக இருக்கிறது. நடுவில், ஒரு மண்டபமும் நான்கு சிறிய அறைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவை அனைத்தும் மூலக்கோயில் மண்டபத்தோடு கிழக்குப்பக்கம் இணைக்கப் பட்டிருக்கின்றன. அந்த நான்கு அறைகளுள் எந்த அறையிலும் தெய்வத் திருமேனிகளைக் காணமுடியவில்லை.

இக்கோயில் ஒரு துணை அடித்தளத்தின்மீது கட்டப் பட்டிருக்கிறது. அவ்வடிப்பகுதி உயர்ந்ததொரு மேடாகவே இருக்கிறது. இந்தத் துணை அடித்தளத்தின் நான்கு பக்கங்களிலும் படிக்கட்டுகள் இருக்கின்றன. இதன் மீது கட்டப் பட்டுள்ள கோயில், நான்கு வாயில்களையுடையதாகவும் மாடிக்குச் செல்லும் படிகளைக் கொண்டதாகவும் காணப்படு கிறது. அதன் வாயில் ஒவ்வொன்றும் பக்கத்திலுள்ள மண்டபத்தி னோடு தொடர்புபடுத்தப்பட்டுள்ளது. கோயிலின் தெற்கு முகப்பில் சிற்ப வேலைப்பாடுகள் இன்றும் அழியாது காணப்படு கின்றன. இரண்டு சிறிய மாடங்கள் வாயிற்பகுதியில் உள்ளன. அவற்றுள் போதிசத்துவரின் திருவுருவம் செதுக்கப்பட்டிருக் கிறது. இதிலிருந்து அக்கோயில் பௌத்த சமயத்தைச் சார்ந்தது என்பது புலனாகிறது. இருபக்கங்களிலும் உள்ள பெரிய மாடங் களில், போதிசத்துவரின் பெரிய சிலைகள் உள்ளன.

சாண்டிக் கலசான் கோபுரம் அழகுற அலங்கரிக்கப்பட் டிருக்கிறது. அக்கோயிலின் மேல் விட்டப் பகுதியில் சிற்ப வேலைப்பாடுகள், அணி செய்கின்றன. அக்கோயிலின் கூரை பல மாடங்களை உடையது. அம்மாடங்கள் ஸ்தூபிகளைப் போன்ற சிகரத்தோடு அமைக்கப்பட்டுள்ளன. அம்மாடங்களின் புறப் பகுதிகளில் உள்ளகுழிவுகளில் தியானபுத்தரின் சிலைகள் உள்ளன புத்தர் சிலைகள் தாமரை இலையின்மீது அமர்ந்திருக்கும் திருக் கோலத்தில் செதுக்கப்பட்டுள்ளன.

இக் கோயிலைப் பற்றி அறிவிக்கும் கல்வெட்டுகள் சில கிடைத்துள்ளன. அவை நாகரி எழுத்தின் தொன்மை வடிவத் தில் பொறிக்கப்பட்டுள்ளன. கி. பி. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளால் அக்கோயில் ‘தாரா’ எனப்படும் பௌத்த சமயத்தின் ‘சக்தி’ கோயிலாக இருக்க வேண்டும் என்பது புலனாகிறது.

சாவகத்தின் கீழைப்பகுதியில் பெரும் நினைவுச் சின்னங்கள் பல கட்டப்பட்டுள்ளன. அவற்றுள் ‘சாண்டி கிடல்’, ‘சாண்டி சிங்கசாரி’, ‘சாண்டி ஜாகோ’ முதலிய விமானங்களுடன் கூடிய கோயில்கள் ஆகும். இவை கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் கட்டப்பட்டவையாகும்.

## சாண்டிகிடல்

சாண்டிகிடல் என்னும் கோயில், 'அனுஷபதி' என்ற அரசரின் சமாதிக் கோயிலாகும். இதில் பல புதிய கட்டடக்கலை இயல்புகள் காணப்படுகின்றன. இது காலத்தால் முற்பட்டது என்பர். இதன் கூரை தளமட்டமாக அமைக்கப்பட்டிருக்கிறது. ஆனால், அதன் பட்டைக் கோபுர வடிவம் அதற்குத் தனிச் சிறப்பை அளிக்கிறது. மேலும், பல புதிய முறைகளைப் புகுத்தி, கட்டடக் கலைக்குப் புதியதொரு பொலிவினைச் சாவகக் கலைஞர்கள் கொடுத்துள்ளனர். இதிலிருந்து அந்நாட்டுக் கலைக் கூறுகள் இந்தியக் கட்டடக் கலைப்பாணியினை வென்று, முன்னேற்றம் அடைந்துள்ளதைக் கலைஞர்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.

## சாண்டி சிங்கசாரி

சிங்கசாரி என்ற பண்டைத் தலைநகருக்கு வடமேற்கே, 'சாண்டி சிங்கசாரி' திருக்கோயில் இருக்கிறது. இக்கோயிலில் இரண்டு புதிய முறைகள் காணப்படுகின்றன. அடித்தளம் முதல் எழுதகம் வரையிலுள்ள பகுதி முழுவதும் பிதுக்கங்களைக் கொண்டனவாக உள்ளன. அவை மூலக் கோயிலில் உள்ள பிதுக்கங்களோடு எவ்வகையிலும் ஒத்திருக்கவில்லை. அவை தனிப்பட்ட தொழுகை இடங்களைப் போன்று அமைக்கப்பட்டுள்ளன. அவை வேறுபட்ட பக்கத் தோற்றம் உடையனவாக இருக்கின்றன. அதனால், மூலக்கோயிலினைச் சுற்றி நான்கு கட்டடங்கள் கூடுதலாகச் சேர்க்கப்பட்டுள்ளதைப் போன்று காட்சி அளிக்கின்றன. உள்ளே உள்ள அறையின் அடித்தளத்தின் உட்புறம் பரந்ததாக இருக்கிறது. அதனுடைய மேற்குப் பக்கத்தில் உள்ள தொழுகை இடம் முன்கூடமாகப் பயன்படுகிறது. இவ்வாறு வெளிப்புறத்தில் கோயில் போன்று தோன்றுவது கருவறையின் மேலே கூரையைப் போன்று அமைந்துள்ள விமானமே என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

இக்கோயிலில் விநாயகர், துர்க்கை, பிரமன் முதலிய தெய்வங்களின் சிலைகள் உள்ளன. அவை மத்திய சாவகக் கலை மரபிலிருந்து, வேறுபட்டுள்ளமை தெளிவாகத் தோன்றுகிறது. சிற்பக் கலையிலும் பெரும்பாலும் இவ்வியல்பு தோய்ந்துள்ளதைக் காணலாம். அவை மிகத் தாழ்ந்த நிலைக்கு விரைந்து செல்லுவதை வெளிப்படுத்தும் வகையில் உள்ளமை குறிப்பிடத் தக்கதாகும். வாயில்களில் எல்லாம் காலமகர வேலைப்பாடு நேர்த்தியுடையதாக விளங்குகிறது.

## சாண்டி ஜாகோ

சிங்கசாரி பேரரசு காலத்திய கோயில்களுள், சாண்டி ஜாகோ முக்கியமானது. விஷ்ணுவர்த்தனனை அடக்கம் செய்த இடத்தில் இக்கோயில் கட்டப்பட்டுள்ளதாகத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். இதனுள் விஷ்ணுவர்த்தனின் சிலை, ஒரு பௌத்தக் கடவுளின் திருவுருவமாக அமைக்கப் பட்டிருக்கிறது.

இக்கோயில் மிகவும் பாழடைந்த நிலையில் இருக்கிறது. இது மூன்று மேடைகளின்மீது அமைக்கப்பட்டிருக்கிறது. அம்மேடைகள் ஒன்றைக் காட்டிலும் மற்றொன்று சிறியதாகவும் ஒன்றன் பின் மற்றொன்றாகவும் அமைந்துள்ளன. உயர்ந்த அடித்தளத்தையுடைய கோயிலின் பிற்பகுதியில் விமானம் வீறுடன் விளங்குகிறது. இதனால், அக்கோயில் ஒரு புதுமையான தோற்றத்தையுடையதாகத் தோன்றுகிறது.

## பனாதரன் கோயில்கள்

கீழைச் சாவகத்தில் 'மிகப் பெரியதும் புகழ்மிக்கதுமாய் விளங்கும் கோயில்கள் பனாதரனில் உள்ளன. இந்த இடம் பண்டைக்காலம் முதற்கொண்டு புனிதமான இடமாகக் கருதப் பட்டு வந்த காரணத்தினால், இங்குப் பல கோயில்கள் நெறி முறையின்றிக் கட்டப்பட்டுள்ளன. இங்குள்ள கோயில்கள் அனைத்தும் பதின்மூன்றாம், பதினான்காம் நூற்றாண்டுகளில் கட்டப்பட்டனவாகும். இவை கீழைச் சாவகத்தின் பொற் காலத்தில் எழுந்தனவாகும். இவற்றுள் முதன்மையான கோயில் சிவன் கோயில் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. மிகப் பரந்த அளவில் அமைக்கப்பட்டுள்ள இக்கோயிலின் தலைவாயில், மேற்குப் பக்கம் இருக்கிறது. இதைச்சுற்றி நான்கு பக்கமும் மதில் சுவர் கட்டப்பட்டிருக்கிறது. மதில் சுவருக்கு உள்ளேயுள்ள நிலப்பரப்பு மூன்று பகுதிகளாகக் குறுக்குச் சுவரினால் பிரிக்கப் பட்டிருக்கிறது. மூலக் கோயில் கிழக்குப் பகுதியில் இருக்கிறது. மூலக் கோயிலைச் சார்ந்து, ஒன்றைக் காட்டிலும் மற்றொன்று சிறியதாக உள்ள மூன்று மாடங்கள் உள்ளன. கோயில் மறைந்து விட்டது. ஆனால், அந்த மாடங்களே இன்று உள்ளன. அந்தக் கோயிலின் அடித்தளம் அழியாது நிற்கிறது. அணி செய்யப்பட்ட சுவர் கடந்து நிற்கும் கட்டைகள் மூலைகளில் ஏற்றமும் எழிலும் பெற்று விளங்குகின்றன. அவை முகப்பில் துருத்திக்கொண்டு மாடத்தின் மீதுள்ள சிறு கோயிலைத் தாங்கிய வண்ணம் உள்ளன. இக்கோயிலின் மேற்றளத்தின் (மாடத்தின்) கீழே

இராமகாதை சித்திரிக்கப்பட்டுள்ளது. ஆனால், உலகப் புகழ் பெற்றதாய் விளங்கும் பிராம்பனனில் காணப்படும் சிற்பங்களுக்கு இவை இணையானவை அல்ல. இந்த இராமாயணச் சிற்பத்தின் நடுவில் சிதைந்த அல்லது உருதிரிந்த வடிவமுள்ள சிற்பங்களும் செதுக்கப்பட்டுள்ளன. இரண்டாவது மாடத்தில் கிருஷ்ணாயணம் தொடர் சிற்பங்களாக அழகுற அமைக்கப் பட்டுள்ளது. இக்கோயிலின் சிற்பங்களில் காதலும் வீரமும் களிநடம் புரிகின்றன. இங்கு வயாங்கு (Wayang) நாட்டிய அரங்கம் போன்ற இயற்கைக்கு முரணான பல வடிவங்களும் உருவாக்கப்பட்டுள்ளன. அழகுமிக்க அணிகள் எல்லாம், சிற்ப நூல் விதிகளுக்கு இயைந்த பண்புடன் வியக்கத்தக்க வகையில் செதுக்கப்பட்டுள்ளன. இங்குக் கோயில் காவலர்களான துவார பாலர்களுடைய சிலைகள் நேர்த்தி வாய்ந்தனவாகச் செய்யப் பட்டுள்ளன. பொதுவாக குப்தர் காலத்திய சிற்பங்களின் கலைத் திறன் இவற்றில் படிந்துள்ளன என்று வரலாற்றாசிரியர் கூறுவர்.

கிழைச் சாவகத்தில் இறுதியாகத் தோன்றிய பெரிய பழம் பொருள் சின்னம் பனாதரனில் உள்ள இடிந்துபோன இக்கோயிலாகும். அங்குள்ள கட்டடங்கள் ஒருமைப்பட்ட கருத்துணர்வின் அடிப்படையில் அமையவில்லை; உறுப்புகளுக்கும் உயிரியத்திற்கும் இடையே, இயல்பான தொடர்பும் அமைந்திருப்பதாகத் தெரியவில்லை.[17]

## சாண்டி செவோ

பிராம்பனன் சமவெளியில் மத்திய சாவகத்தின் கலைச் செல்வங்கள் நிறைந்து உள்ளன. அங்கு, பௌத்த சமயச் சார்புடைய கோயில்களின் உலகப் புகழ்மிக்க குழு ஒன்று இருக்கிறது. அப்பகுதியில் பல நகரங்களும், தலைநகரும் இருந்திருக்க வேண்டும். அப்பகுதியில் புகழ்மிக்கு விளங்கும் சாண்டிக் கலாசனும், சாண்டி சாரி, சாண்டி செவோ என்னும் கோயில்கள் குறிப்பிடத்தக்கன. சாண்டி செவோ, போராபுதூருக்கு அடுத்து மிகப் பெரிய பௌத்த சமயக் கோயிலாகும். நீண்ட சதுர வடிவில் கல்பாவப்பட்ட முற்றத்தையுடையது இக்கோயில். இதனுடைய நான்கு பக்கங்களிலும் இரண்டு வரிசைகளில் கோயில்கள் உள்ளன. இங்கு 168 கோயில்கள் உள்ளன என்று கணக்கிட்டுள்ளனர். முற்றத்தின் மத்தியில் மூலக்கோயில் அமைக்கப்பட்டிருக்கிறது. இதைச் சுற்றியும் கோயில்கள் இரண்டு வரிசைகளாக உள்ளன. இவை சதுர வடிவில் அமைக்கப்பட்டுள்ளன.

---

17. Ananda K. Coomaraswamy, Op. Cit., p. 209

மூலக்கோயில் மேட்டுப் பகுதியில் கட்டப்பட்டிருக்கிறது. அதைச் சுற்றிலும் உள்ள கோயில்கள் தாழ்ந்த படிமேடைகளின் மீது அமைக்கப்பட்டவைப் போன்று தோன்றுகின்றன. அதைச் சுற்றிலும், மேல் மாடத்திற்குச் செல்ல உதவும் படிக்கட்டுகளை யுடைய பாதைகள் உள்ளன. இக்கோயிலில், கோணங்கள் முன்னே துருத்திக் கொண்டிருப்பதைப் போன்று காணப்படு கின்றன. நீண்ட சதுரவடிவில் ஒன்றன்பின் ஒன்றாக, அறைகள் உள்ளன. கிழக்கிலுள்ள மண்டபத்திலிருந்து புறப்படும் பாதை, நடுவில் உள்ள அறைக்குச் செல்லுகிறது. இந்நடுவறை கருவறையாக, இருந்திருக்க வேண்டும். ஆனால், இன்றைக்கு நெடுங்காலமாக அங்குச் சிலைகள் இருந்ததற்குரிய தடயங்கள் காணப்படவில்லை.

இந்த நடுவறையிலிருந்து, கோயிலின் உட்புறத்திற்குச் சென்றால், மேலே கண்ட அறைகளுக்கு (கோயில்களுக்கு) எதிராக நீண்ட சதுர வடிவமான கட்டடங்கள் கட்டப்பட்டுள் ளன. அவற்றின்மீது, தாழ்வான கூரை வேயப்பட்டிருக்கிறது. அக்கூரை நடுவில் உள்ள கட்டடத்திற்கும், அதனுடைய கூரைக் கும் மேல் உயரமாக நீண்டுகொண்டிருக்கிறது. அதைச் சுற்றிலும் ஒரு குறுகிய கலைக்கூடம் அமைக்கப்பட்டிருக்கிறது. அதற்குக் கோயிலின் பக்கத்தே உள்ள சிறிய நுழைவாயில் வழியாகச் செல்லலாம். அந்தக் கலைக்கூடத்தைத் தாழ்ந்த சுவர் ஒன்று, வெளியே உள்ள மாடத்திலிருந்து அதைப் பிரிக்கிறது. இதற்கு வெளியே உள்ள கட்டடம் சிறந்த முறையில் அலங்கரிக்கப்பட்டுள்ளது. இங்குள்ள கோயில் ஒவ்வொன்றிலும் ஓர் அழகிய தலைவாயிலும் முகமண்டபமும் உள்ளன.

இவை அனைத்தையும் உள்ளே அடக்கியவண்ணம் ஒரு மதில் சுவர் நான்கு பக்கங்களிலும் கட்டப்பட்டிருக்கிறது. நான்கு பக்கங்களிலும் நான்கு வாயில்கள் உள்ளன. அவ்வாயிலில் துவார பாலகர் இருவர் பெருமிதத்தோடு காவல் புரிகின்றனர். அவர்கள் கையிலே போர்க்கருவிகளைக் கொண்டுள்ளனர். அவர்களின் அஞ்சத்தக்க தோற்றத்தைக் கண்டுமக்கள், அவர்களை அரக்கர்கள் என்று கூறி வருகின்றனர்.

டையங்கு மேட்டு நிலத்திற்கு வடமேற்குத் திசையிலும், பிராம்பனன் சமவெளிக்குத் தென்கிழக்கிலும் கெடு (Kedu) வெளி உள்ளது. அங்கு இந்திய சாவகக் கட்டடக் கலையின் தலைசிறந்த சின்னங்கள் சில உள்ளன. அவை யாவும் மேலே கண்ட காலகட்டத்தைச் சேர்ந்தனவாகவே தோன்றுகின்றன. அங்கு எண்ணற்ற பௌத்த, இந்துக் கோயில்களின் சின்னங்கள்

பரந்து கிடக்கின்றன. அவற்றுள் நேர்த்திவாய்ந்த சாண்டி மெண்டுட், சாண்டி பவன் என்பன நன்கு பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இந்திய சாவகக் கலைக்கு அவை சிறப்புமிக்க எடுத்துக்காட்டாக உள்ளன. ஆனால், போராபுதூரின் ஏற்றமும் எழிலும் இவற்றின் புகழை மங்கச் செய்துவிட்டன.

## பிராம்பனன்

'பிரமவனம்' என்ற பழைய பெயரையுடைய ஊர் சாவகத்தின் நடுப்பகுதியில் உள்ளதாகும். அப்பெயரே இவ்வாறு திரிந்துவிட்டது. இங்குச் சைலேந்திரரின் வீழ்ச்சிக்குப் பின்னர், எழுச்சி பெற்ற பண்டைச் சாவக அரச மரபினர் (கி. பி. 879-927) இந்து சமயகோயில்கள் பலவற்றைக் கட்டியுள்ளனர். பெரும்பாலும் இங்கே சிவன் கோயில்களே உள்ளன. அவை சைவ ஆகம விதிப்படி அமைக்கப்பட்டுள்ளன என்பர்.

## மும்மூர்த்திகளின் கோயில்கள்

அங்கு லோரா ஜோங்குராங் (Lora Jongrang) பகுதியில், கட்டப்பட்டுள்ள எட்டுக் கோயில்கள் மிகச் சிறப்புடையன வாகும். இவற்றில் நடுநாயகமாக விளங்குவது சிவபெருமானின் திருக்கோயிலாகும். மற்ற இரு பக்கங்களிலும் பிரமன், திருமால் கோயில்கள் உள்ளன. குன்றின்மீதுள்ள இம்மாபெரும் கோயில்கள், போராபுதூரை நினைவுபடுத்துகின்றன.

ஜகார்த்தா அரும் பொருள் காட்சியகத்தில் நூற்றுக் கணக்கான நந்தியின் கற்சிலைகளும் லிங்கங்களும் உளளன. மற்றும் இருபதிற்கும் மேற்பட்ட அகத்தியர் சிலைகள் அங்கு இடம் பெற்றுள்ளன. இவையாவும் ஜாவானிய சிற்பக்கலையின் நேர்த்தியைப் புலப்படுத்துகின்றன.

## இராமாயணச் சிற்பங்கள்

இச்சின்னங்களில் காணப்படும் சிற்பங்கள் 'இராமாயணக் கதையை விளக்குகின்றன. "பிராம்பனத்துக் கல்லோவியங்கள், போராபுதூர் சிறபங்களைக் காட்டிலும் எவ்வகையிலாகிலும் சிறப்புடையனவாக உள்ளனவா என்று கேட்டால், நாம் அது உண்மையில், நாடகப் பண்பு வாய்ந்ததாகவும், பேரளவில் கோயில்கள் சிற்பங்களால் அழகு செய்யப்பட்டிருந்தாலும் அவை பெரிதும் ஆண்மை வீறுமிக்கூடையதாக இருப்பதைச் சுட்டிக்காட்டலாம்."[18]

18. Ananda K. Coomaraswamy, Op. Cit., p. 216

இங்கு உள்ள இடிபாடுகளுள் புத்தர் கோயில்கள் அகழ்ந் தெடுக்கப்பட்டுள்ளன. அவற்றுள், சிவனை வழிபடும் இடங்களும் இருந்திருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். அங்குத் திரிமூர்த்தியின் சிலையும், துர்க்கையின் சிலையும் கணேசரின் சிலையும் கிடைத்திருக்கின்றன. பிராம்பனன் கோயில்கள் திட்ட மிட்டு, எளிமையும் எழிலும் இயைந்து விளங்குமாறு அரிய கலைஞர்களால் படைக்கப்பட்டுள்ளன.

## போராபுதூர்

இந்நகரின் பழைய பெயர் 'தருமபுரம்' அல்லது 'அறநெறி வழங்கும் அரண்மனை' எனும் பெயர் இருக்கலாம் என்பது அறிஞர்களுள் ஒரு சாராரின் கருத்தாகும். மற்றொரு சாரார், 'பலவகைப் புத்தர்களின் திருக்கோயில்' எனும் பொருளில், போராபுதூர் எனும் பெயர் வழங்கி இருக்கலாம் என்பர்.

சாவகம் கி. பி. 778 முதல் 879 வரை சைலேந்திரப் பேரரசின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. அவர்களுடைய ஆட்சியின்கீழ்,சாவகம் கலைத்துறையில் பொன்றாப் புகழ்பெறத் தொடங்கியது. உலகப் புகழ்பெற்று விளங்கும் சாவகத்தின் கலைக் கருவூலம், ஒரு பெரிய மலைமுகடு, ஒன்பது கல் மாடங்களாகச் செதுக்கப் பட்டுள்ளதுதான். ஒவ்வொன்றும் படிப்படியாக உயரச் செல்லும் பண்பும், பரப்பு அளவில் குறுகிச் செல்லும் வடிவமும் உடையன. எண்கோண வடிவில் ஒடுங்கிய கோபுர உச்சியில் எளிய தோற்றம் வாய்ந்த ஒரு ஸ்தூபி கட்டப்பட்டுள்ளது. மாபெரும் வடிவத்தை யுடைய போராபுதூர் கோயில், உலகின் பேர் அதிசயங்களுள் ஒன்றாகவே கருதப்படுகிறது. அதனுடைய பருமையான அளவைத் திட்டமும், விரிவாகவும் ஆழமாகவும் அலங்கரிக்கப் பட்டுள்ள நேர்த்தியான சிற்ப வேலைப்பாடுகளும் அதற்கு ஒப்பற்ற அழகினையும் சிறப்பையும் அளிக்கின்றன. அதற்கு ஒப்பாகக் காம்பூச்சியாவிலுள்ள ஆங்கோர்வாட் திருக்கோயி லைத் தவிர, வேறொன்றையும் நாம் கூறமுடியாது.

இம்மாபெரும் திருக்கோயில் கி. பி. 750-க்கும் 850-க்கும் இடையே கட்டப்பட்டதாகக் கல்வெட்டுகளால் தெரிகிறது. இதனை உலகிற்கு அளித்த பெருமை சைலேந்திரப் பேரரசர் களையே சாரும். போராபுதூர் பௌத்த ஸ்தூபி சிறு குன்றின் மீது கட்டப்பட்டுள்ளது. அதைச் சுற்றிலும் தாழ்ந்த கெடு (Kedu) வெளி இருப்பதால், அதற்குத் தனிப்பட்டதொரு கவர்ச்சி யும், அழகும் இயல்பாகவே அமைந்திருக்கிறது. அக்குன்றின்மீது இருந்த பெரியதொரு பாறையைச் செதுக்கியே இக்கோயிலை அமைத்துள்ளனர்.

மாண்புமிக்க இக்கட்டடம், வரிசையாகத் தொடர்ந்து செல்லும் ஒன்பது மாடங்களையுடையதாக இருக்கிறது. ஒன்றைக் காட்டிலும் மற்றொன்று அகன்றும், பின்வாங்கியும் அமைக்கப்பட்டிருக்கிறது. அவை அனைத்திற்கும் நடுவில், மிகவும் உயர்ந்ததாக உள்ள மாடத்தின்மீது, கோயில் மணி வடிவில் பெரியதொரு ஸ்தூபி, மகுடம் போன்று கட்டப்பட்டிருக்கிறது. ஒன்பது மாடங்களுள், ஆறு கீழ்மட்டத்தில் உள்ளன. அவை சதுர வடிவில் அமைக்கப்பட்டுள்ளன. மேல்மட்டத்திலுள்ள மூன்று மாடங்கள், வட்ட வடிவமானவை. அடிமட்டத்தில் உள்ள கீழ்மாடம் பிதுக்கங்களோடு சேர்ந்து 127 மீ. நீளமுள்ளதாகும். மிக உயரத்தில் உள்ள மாடம் 27 மீ. விட்டத்தை உடையதாகும். கீழ்மட்டத்தில் உள்ள ஐந்து மாடங்களும் கைப்பிடி மேடையைத் தாங்கும் சுவரினால் உள் பக்கமாக அடைக்கப்பட்டுள்ளன. இதனால், ஒரு மாடத்தின் கைப்பிடி சுவரின் பின்புறத்திற்கும், மற்றொரு உயர்மட்டத்தில் உள்ள மாடத்தின் பின்புறச் சுவருக்கும் இடையே தொடர்ச்சியான நான்கு படி மேடைகள் அமைந்துள்ளன. மிக உயர்ந்த மேல் மட்டத்தில் உள்ள மூன்று மாடங்களையும் ஸ்தூபிகள் சங்கிலித் தொடர்போல் வளைத்துக் கொண்டுள்ளன. ஒவ்வொரு ஸ்தூபியிலும் துளையிடப்பட்ட சட்டகத்திற்குள் புத்தருடைய சிலை ஒன்று இடம்பெற்றிருக்கிறது. ஒன்பதாவது மாடத்திலிருந்து வரிசை வரிசையாக வட்டவடிவமான படிக்கட்டுகளையுடைய பாதையொன்று உச்சியில் உள்ள ஸ்தூபிக்குச் செல்லுகிறது. ஒவ்வொரு மாடத்திலும் உள்ள கைப்பிடிச் சுவரிலும், வரிசை வரிசையாக வளைவுகளைக் கொண்ட மாடங்கள் உள்ளன. இம்மாடங்களுக்கு இடையில் சிற்ப வேலைப்பாடுகளையுடைய சட்டங்கள் பொருத்தப்பட்டு இருக்கின்றன. கோயிலின் கூரையைப்போன்று தோன்றும் ஒரு கட்டட அமைப்பினை எல்லா மாடங்களும் தாங்கிக் கொண்டிருக்கின்றன. அவற்றின் மூலைகளின் நடுவிலும் கோயில் மணியைப் போன்ற ஸ்தூபிகளும் உள்ளே தியான புத்தரின் சிலைகளும் உள்ளன. அந்தச் சிலைகள் 432-க்குக் குறையாது அக்கட்டடம் முழுவதிலும் காணப்படுகின்றன. இதனால் போராபுதூர் கோயிலைப் 'பல்வகையான புத்தர்களின் நிலையம்' எனக் குறிப்பிடுவது உண்டு.

ஒவ்வொரு படி மேடையின் நடுவிலும் மாடிப்படிகளோடு கூடிய நுழைவு வாயில் ஒன்று இருக்கிறது. வாயிற்கதவின் தலைப்பகுதி கோயில் கூரையைப் போன்ற சிற்ப வேலைப்பாடு அணிசெய்கிறது. வாயிற் கதவுகள் மிக அழகாக அலங்-

கரிக்கப்பட்டுள்ளன. தரை மட்டம் உள்ள முதற் வாயிற்படியி லிருந்து குறிப்பிட்ட ஒரு கோணத்தில் நோக்கினால், கீழ்மட்டம் மேல்மட்டம் வரையிலுள்ள நுழைவு வாயில்களும் மாடிப்படி களும் நேராகத் தெரியுமாறு திட்டமிட்டு மிக அழகாகக் கட்டப் பட்டுள்ளன. அதனால் சொற்களால் எடுத்துரைக்க முடியாத கவின்பெறு வனப்புடையதாகவும், அக்கட்டடத்தின் முழு அமைப்போடு பேரளவிற்கு அவை முக்கியத்துவம் உடையதாக வும் விளங்குகின்றன. பௌத்த சமயத்தினரின் பக்திப் பெருக்கிற்கு அழியாச் சின்னமாக இது விளங்குகிறது.

போராபுதூரின் வடிவ அமைப்பும் உந்துதல் சக்தியும் ஒப்புயர்வற்றன. இந்தப் பெருங்கோயில் அமைப்பில் காணப் படும் புதுமையும் முன்மைத்திறனும், புரட்சிகரமான மாற்றங் களைக் கட்டடக் கலையில் புகுத்தியமையால் தோன்றியவை அல்ல. புதிய வடிவக்கூறுகள் கொண்ட சிறுசிறுவடிவ மாற்றங் களோடு, பண்டைச் செம்மைச் சிறப்பு வாய்ந்த பௌத்த தலை முறைக் கூறுகளை, புதிய நோக்கில் பயன்படுத்தியமையால் தோன்றியனவாகும். இவ்வியல்புகள் இந்திய நாட்டில் முன்னரே மலர்ந்து இருந்த கூறுகளாகும். தொடக்க காலத்திய சோழர் கலைப்பாணியின் தெளிவான எதிரொலியை இங்கு நாம் கேட்கிறோம்.[19]

## சிற்பக் கலைக்கூடம்

படிமேடைகளின் பக்கச் சுவர்களில் வரிசை வரிசையாக அமைக்கப்பட்டுள்ள சிற்பங்கள் போராபுதூர் கோயிலினை மாபெரும் கலைக்கூடமாக மாற்றிவிடுகின்றன. அக்கோயிலில் மொத்தம் பதினொரு வரிசைகளைக் கொண்ட சிற்பத் தளங் கள் உள்ளன. இங்குள்ள சிற்பங்கள் 1500-க்கு மேற்பட்டன. ஒவ்வொரு மாடத்தின் நிலையிலும் உலகம் என்றுமே கண்டிராத அளவிற்குத் தேர்ச்சிபெற்ற சிற்பக் கலைஞர்கள் செதுக்கியுள்ள வியப்பூட்டும் சிற்பங்கள் ஒவ்வொன்றும் அழ கோவியங்களாவும், உயிர்த் துடிப்பு வாய்ந்த உயிர் ஓவியங் களாகவும் விளங்குகின்றன.

## சிற்பக்கலை

சாவகக் கலைஞர்கள் தங்கள் கைவண்ணத்தைக் கட்டடக் கலையில் சிறப்புற்று விளங்குமாறு செய்ததற்கு உறுதுணை யாக, அமைந்தவை சிற்பங்களேயாகும். சாவகக் கலைஞர்கள் குழைமக்கலையில் (Plastic Art) கைத் தேர்ந்தவர். அக்கலையில்

19. H. Zimmer, The Art of Indian Asia; P. 301

அவர்கள் இந்தியக் கலைமரபின் இயல்புகளோடு சாவகத்தின் தேசியப் பண்புகளைக் குழைத்துக், காண்பவர் கண்ணையும் கருத்தையும் கவரத்தக்க வகையில் கல்லோவியங்கள் பலவற்றை இழைத்துள்ளனர்.

## போராபுதூர் கலைக்களஞ்சியம்

புத்தருடைய வாழ்க்கைக் காட்சிகளைச் சித்திரிக்கும் சிற்பங்களும்,புத்த சாதகக் கதைகளைச் சித்திரிக்கும் சிற்பங்களும் போராபுதூர் படிமேடைகளிலுள்ள சுவர்களை அணிசெய்கின்றன. அடிப்பகுதியில் வானுலகக் காட்சிகளும், நாகலோகக் காட்சிகளும் திட்டமிட்டு செதுக்கப்பட்டுள்ளன. சுதனசுகுமாரன் போதி ஞானத்தைத் தேடிய கதையும், வருங்காலத்தில் தோன்றப்போகும் புத்தராக மைத்திரேயரின் கதையும் சிற்பமாக மேல்வரிசைகளில் செதுக்கப்பட்டுள்ளன. இத்தூபியில் உள்ள சிற்பக் காட்சிகளை, ஒரே ஒழுங்கில், வரிசையாக அடுக்கிக் கொண்டு போனால், 2.75 கி. மீ. நீளம் உடையனவாக இருக்கும் என்று கலைநூல் வல்லார் கூறுகின்றனர்.[20]

போராபுதூர் கோயிலின் சுவர்களில் திறந்த வெளிகளில் குடைப் பகர்வு சிற்பங்கள் பல உள்ளன. அவற்றுள், போதி சத்துவரின் வடிவைச் சித்திரிக்கும் சிற்பம், மனிதவுணர்வுடன், மனித வடிவிலேயே காணப்படுகிறது. அங்குள்ள வேறுபல போதிசத்துவச் சிலைகளில், நேர்த்திமிக்கதாக இது விளங்குகிறது. 'தியான முத்திரையுடன்' அமைக்கப்பட்டுள்ள இச்சிற்பம், தலை சிறந்த கலைப்படைப்பாகும்.

இங்குள்ள சிற்பங்கள் வடமொழியில் உள்ள 'லலித விஸ்தாரம்' என்ற நூலில் சிறப்பிக்கப்பட்டுள்ள புத்தரின் வாழ்க்கையை விளக்குகின்றன. அக்கோயிலில் நுழைந்து மூலத்தானத்தை நோக்கிப் படி மேடைகளில் ஏறிச்செல்லும் யாத்திரிகனுக்கு, ஆன்மிகப் பயணத்தில், பையப் பைய முன்னேறிச் செல்லும் உணர்வு, உண்டாகிறது. அதன் அடிப் பகுதிகள், பலவகையாக அலங்கரிக்கப்பட்டுள்ளன. ஆனால், மேற்புரங்கள் அழகு செய்யப்படாமல், வெட்ட வெளியாக வெறுமனே விடப்பட்டுள்ளன. அவை மகாயான பௌத்த சமயத்தின் தத்துவமான ''வெறும்பாழ்'' அல்லது, ''மாண்புமிக்க பாழ் வெளியை''க் (Great Nothingness) குறிப்பாகப் புலப்படுத்துகின்றன.

---

20. Smith, V. A., A History of Fine Arts in India and Ceylon, PP. 159 - 160.

### பல்லவரின் சிற்பக்கலை சாயல்

இப்பௌத்தக் கலை, ஜாவாவின் இந்தியக் கலை வளர்ச்சியின் இடைநிலையாக உள்ளது என்பது நினைவுகூர்தற்குரியதாகும். சாவகத்தினுடைய வரலாற்றின் தொடக்க நிலையிலும் இறுதி நிலையிலும் இந்து சமயத்தின கலையே அந்நாட்டில் சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்ந்தமை கருதத்தக்கது. எனவே, கலையின் மூலமே சித்திரிக்கப்படும் பொருள், பௌத்த சமயத்துக் கருத்துகளின் விளக்கங்களாக இருந்த போதிலும், அதன் முழுத் தோற்றத்தைக் கூர்ந்து நோக்கினால், "பல்லவர் சோழருடைய சிற்பங்கள் சாவகப் கலைப் படைப்புகளோடு பெரிதும் ஒத்துள்ளமை நன்கு புலனாகும்" என்று கலைநூல் வல்லார் கூறுகின்றனர். ஆசியாவின் கலைப் பண்பை மேனாட்டவர் அறிந்து போற்றும்படிச் செய்த டாக்டர் ஆனந்த குமாரசாமி அவர்கள் "இக்கல்லோவியங்களுள் மாண்புமிக்க அழகிய உருவங்கள் ஆழ்ந்த சமய வொழுக்கத்தையோ, ஆன்மீக நிலையையோ ஆற்றல்மிக்க அனுபவத்தையோ எடுத்தியம்பவில்லை. எல்லையற்ற பேரின்ப வாழ்வின் பெற்றியை இம்மண்ணுலகில் முன்கூட்டியே அவை நமக்குத் தெரிவிக்கின்றன. ஆங்கோர்வாட் அழகுக் கோயிலைக் கண்டவர்கள், அடையும் உள்ளத்தைப் பறிகொடுக்கும் நிலையையோ இக்கோயிலைக் காண்பவர்கள் அடைய இயலாது.

போராபுதூர் கோயில், உயிரற்ற காற்று மண்டலத்தில் முதிர்ந்து கனிந்த தித்திக்கும் திங்கனியைப் போன்றது. அக்கல்லோவியங்களின் எழில்நிறைந்த தோற்றம், இயங்காத செல்வத்தின்வெளிப்பாடேயாகும். அவை பேரளவில் காணப்படுவது, அவற்றின் ஆற்றல் புறத்தே சுடர்விட்டு ஒளிர்வதை நினைவூட்டுகின்றது. போராபுதூர் புத்த சமயத்தில் சாவக மக்கள் கொண்ட ஈடுபாட்டை எடுத்துரைக்கிறது என்று கூறுவதைவிட, சைலேந்திரப் பண்பாட்டின் மாண்புமிகு தொல்பொருள் சின்னமாக விளங்குகிறது எனலாம்"[21] என்று கருதுகிறார்.

இங்குள்ள சிற்பங்களில் காணப்படும் பெண்களின்வடிவங்கள் இயற்கை எழிலும் கவர்ச்சியும் உடையன. அவை மானிடப் பெண்கள் பேரழகு வாய்ந்த தேவ மகளிரைப்போன்று பொலிவு பெற்று விளங்குவதைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. காந்தார நாட்டுக் கலைப்படைப்புகள் சிலவற்றில் காணப்படுவதைப் போன்று ஒரே சீரான பெண்மை இயல்பு இக்கல்லோவியங்களுக்குத் தனிச் சிறப்பைத் தருகின்றது.

---

21. Ananda. K. Coomara swamy, OP. cit., P.20 7.

இராமாயணச் சிற்பங்களுள், இராமன் மிதிலை மன்னனுடைய வில்லை வளைத்தல், அருகில் இலக்குமணன் நிற்றல், இராமன் ஜனகனை விட்டு இலக்குமணன், விசுவாமித்திரன் முதலியோரைப் பார்த்தல், அப்பொழுது வலது பக்கம் சீதைதன் தோழியருடனும் நிற்றல் ஆகியவற்றைச் சித்திரிக்கும் காட்சிகள் ஒப்புயர்வற்றனவாகும். இராமனுடைய பெருமிதத் தோற்றமும் வெற்றிப்புன்னகை தவழும் இதழ்களும் உள்ளத்தைக் கவருவனவாகும். அண்ணனின் அருகில் ஆவலோடு ஆனால், உள்ள உரத்துடன் நிற்கும் இலக்குமணனின் சிற்பம் ஒரு சிறந்த வீரனின் கல்லோவியமாகும். அதே சமயத்தில், ஆர்வமும் ஏக்கமும் கலந்த மனநிலையோடு பொறுமையின் நிலைக்களனாய், எழிலரசி சீதை தோழியரைப் பார்ப்பதைப் போன்று இராமனைக் கடைக்கண்ணால் நோக்குதல், பெண்மையின் இயல்பினை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது.

மற்றொரு சிறந்த காட்சி, சீதையையும் காகத்தையும் சித்திரிப்பதாகும். சீதை பர்ணசாலைக்கு வெளியே, மான் இறைச்சித் துண்டுகள் சிலவற்றைக் காயவைத்துக் கொண்டிருக்கிறாள். இறைச்சித்துண்டுகள் மரக்கிளைகளில் தொங்கவிடப்பட்டிருக்கின்றன. அக்கிளைகளில் இரண்டு மூக்குகளை உடைய காக்கைகள் உள்ளன. ஒருகாக்கை, அந்த இறைச்சித் துண்டுகளில் ஒன்றை கவ்விச் செல்லுகிறது. அப்பொழுது சீதை அதை விரட்டுகிறாள். சீற்றமடைந்த காக்கை, அவளைக் கொத்தி விட்டுப் பறந்தோடி விடுகிறது. அவள் இராமனிடம்போய், முறையிடுகிறாள். அவன் நான்முகன்கணையைக் காக்கைமீது விடுகிறான். பறவை பறந்தோடுகிறது. இறுதியில் காக்கை இராமனிடமே அடைக்கலம் அடைகிறது. அம்பு காகத்தின்மீது அடையாளமிட விரும்புகிறது. இராமன் அதற்கு இசைகிறான். அவ்வம்பு காக்கையின் கண்களில் ஒன்றைப் பறிக்கிறது.

இக்காட்சிகள் கல்லிலே, உயிர்பெற்று விளங்குகின்றன. காக்கையின் இயல்பான வேட்கையுள்ளமும், சீதையின் பெண்மைப் பண்பும் சிறப்பாகத் தோன்றுகின்றன. இக்காட்சிகளைக் கண்டு இன்புற்ற ஹாவல் (Havell), "இராமரின் வீர வரலாற்றைச் சித்திரிக்கும் கற்பனை நயமிக்க கதை நிகழ்ச்சிகள் இங்குப் பேசும் பொற்சித்திரங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இராமனின் நேசப் படைகளான வானரங்களின் செயல்கள் முற்றிலும் நகைத்திறன் வாய்ந்தனவாகக் காட்டப்பட்டுள்ளன. வழிதுறையற்ற காடுகளின் கொடுமையினையும், அதில் வாழும் அரக்கர்களின் கொடுஞ்செயல்களையும் சித்திரிக்க முயல்வதில், சிலவிடங்களில் கற்பனைக் கட்டுக்கடங்காது வெறி

பிடித்து அலைகிறது"[22] என்று மொழிந்துள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கது.

## பனாதரனின் சிற்பங்கள்

பதினான்காம் நூற்றாண்டில், பனாதரனில் கட்டப்பட்ட சிவன் கோயில்களின் புடைப்புச் சிற்பங்கள் பல செதுக்கப் பட்டுள்ளன. கீழைச் சாவகத்தில் இறுதியாகத் தோன்றிய இப்பழம்பெரும் சின்னத்தில் உள்ள சிற்பங்கள், சாவகக் கலையின் வளர்ச்சியையும் தெரிவிக்கின்றன.

இக்கோயிலின் மேல்தளத்தின் கீழ்ப்பகுதியில், இராமாயணக் கதை நிகழ்ச்சிகள் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. அதற்கு மேலே கிருஷ்ணாயணச் சிற்பங்களும் அழகுற அமைக்கப்பட்டுள்ளன. இவை ஓடும் திரைப்படச் சுருள் போன்று, கல்லோவியங்களாகக் கவின்மிகு காட்சி வழங்கு கின்றன. கல்லிலே காணப்படும் காப்பியமாக இவை, வீரத்தின் விளைவையும், காதலின் கனிவையும் கவிபாடுகின்றன. இவற்றோடு, அலங்கார அணிகளும், செடிகொடிச் சுருள்களும் நுண்ணயத்துடன் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றைப் படைத்த சிற்பிகள், சிற்ப நூல் விதிகளை நன்குணர்ந்து, சிறிதும் அவ் விதிகளிலிருந்து பிறழாது, கருத்துடன் தங்கள் கைவண்ணத் தைக் காட்டியுள்ளனர். இக்கோயிலில் உள்ள துவாரபாலகரின் சிலைகளும், செம்மையாகச் செய்யப்பட்டுள்ளன.

போராபுதூரைக் காட்டிலும் இங்குள்ள சிற்பங்கள் இயற்கைத்திறன் உடையனவாக உள்ளன. நெகிழ்ச்சியும் இயக்க மும் மனித உணர்ச்சிகளும் இங்குப் பேரளவில் பொங்கி வழி கின்றன. மனித வாழ்க்கையும், அதன் செயல்முறைகளையும் பெரிதும் சிற்பங்களாகச் சித்திரிப்பதில், பனாதரனின் கலைஞர் கள் கருத்தைச்செலுத்தியுள்ளனர். எனினும், கவர்ச்சிமிக்க கருத் துக்கொள்கையாகிய இலட்சிய நோக்கு, இச்சிற்பங்களில் இங்கு மங்கும் இலைமறை காய்போல் இழைந்து காணப்படுகின்றன. இலட்சியக் கொள்கையின் தெய்விகப் பேரொளியை விண்ணுலகி லிருந்து மண்ணுலகிற்குக் கொண்டுவர இச்சிற்பங்கள், மனித இயல்புகளுக்கு உகந்த வண்ணம் வெளிப்படுத்துகின்றன. ஆனால், போராபுதூரில் உள்ள கலைச்செல்வங்கள், மண்ணு லகில் கால்களை ஊன்றாத நுண்பொருள் சார்புடையனவாக உள்ளன. பனாதரன் நாடகப் பாங்கும் நெகிழ்ச்சியும் உடைய தாக இருக்கிறது என்றால், போராபுதூர் சிற்பங்கள் முனைப்

22. E. B. Havell, Indian Sculpture and painting, P. 133.

பற்றனவாகவும் இயக்கமற்றனவாகவும் உள்ளன எனலாம். வேறுவகையாகச் சொல்லுவதென்றால், இந்திய சாவகக் கலையின் தொன்மைக்கலை இயல்பினைப் போராபுதூரும், புதுமைக் கலைப்பண்பின் இயல்பினைப் பனாதரனும் வெளிப்படுத்துகின்றன எனக் கூறலாம்.

தொழில்நுட்ப நோக்கில், இவ்விரு கோயில்களின் சிற்பங்களையும் ஒப்பிட்டுப் பார்ப்போமானால், போராபுதூரில் உள்ளவை முழுமையான கலைநயம் வாய்ந்தனவாக உள்ளன. அவை தேர்ச்சிமிக்க கலைஞர்களின் நேர்த்திமிக்க படைப்புக்களாகத் தோன்றுகின்றன. பனாதரனில் உள்ள சிற்பங்கள் கலையழகின் முழுநிறைவை எட்டிப்பிடிக்க முயலுகின்றன. ஆயினும், அதனுடைய கலைஞர்கள் மனித வடிவங்களை மட்டும் அல்லாமல், குரங்குகள், நீர்வாழ் விலங்குகள், செடிகொடிகள் முதலியவற்றைச் சித்திரிப்பதில் மிகச் சிறந்த திறனுடையவர்களாக இருந்தனர் என்பதை அக்கல்லோவியங்கள் சொல்லாமல் சொல்லுகின்றன.

பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப் பிறகு "பண்டை இந்திய மரபை அடிப்படையாகக் கொண்டு வளர்ந்த சாவகக் கலை இந்தோனேசியப் பண்புகளுடன், தனக்கேயுரிய சிறப்பியல்புகளைப் பெற்று ஒரு தேசியக் கலையாக வளர்ச்சியடைந்ததைச் இச்சிற்பங்கள் நமக்கு எடுத்துரைக்கின்றன.

கீழைச் சாவகத்தின் கலைகள், மத்திய சாவகத்தினின்று பெறப்பட்ட போதிலும், இவையிரண்டிற்கும் இடையே வேற்றுமைகள் காணப்படுகின்றன. மத்திய சாவகத்தில் காணப்பட்ட கலைச்சிறப்பினைக் கீழைச் சாவகத்தில் காணமுடியவில்லை. இந்தியத் தொடர்பு குறையக் குறைய அந்நாட்டுக் கலைகளில் சாவகப் பண்பு மிகுதியாக இடம்பெற்றது. ஆனால், இந்தியர்களோடு கொண்ட தொடர்பு அறுந்த பிறகும், இந்தியப் பண்பு சாவகக் கலைகளில் எஞ்சியிருந்தமை குறிப்பிடத்தக்கது.

சாவகத்தின் நடுப்பகுதியில் காணப்படுவதைவிடக் குறைந்த அளவிற்கே கீழைச் சாவகத்தில் இந்து சமயப் பண்புகள் காணப்படுகின்றன. ஒரே தீவில், இத்தகைய வேறுபாடுகள் இருப்பதை நோக்கும்பொழுது, அங்கு இந்தியர் சாவக மக்களை நாகரிகம் பெறச் செய்வதற்கு மேற்கொண்ட பணியின் இடர்ப்பாடுகளை நாம் ஒருவாறு உணர்கிறோம்.

## கற்சிலைகள்

பௌத்த, சைவ சமயங்களுக்குரிய தெய்வத் திருமேனிகள் பல சாவகத்தில் கிடைத்துள்ளன. டையங்கு மேட்டு நிலத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ள சிலைகள் அனைத்தும் சைவசமயச் சார்புடையன. சிவபெருமான், துர்க்கை, விநாயகர், பிரமன், திருமால் முதலியோருடைய சிலைகள் இங்குக் கிடைத்துள்ளன.

## விநாயகர் சிலை

சிங்கசாரியில் கிடைத்துள்ள விநாயகர் சிலை, தனிச்சிறப்பு வாய்ந்தது. அவர் முக்கண்களையுடைய கபால கணபதியாவார். மனித உடலும், யானைத்தலையும், உடையவராக இருப்ப தோடு, சிவபெருமானின் மகன் என்பதை நினைவுபடுத்தும் வகையில் முக்கண்ணினை உடையவராகவும் விளங்குகிறார். மேலும், கபாலமும் குழவித்திங்களையும் அவர் அணிந்திருக் கிறார். பைரவரின் மகனாகக் கருதும் நிலையில் விநாயகர் கபாலங்களின் மீது அமர்ந்து, கபாலங்களையே பல்வகை அணி களாக அணிந்துள்ளார். அச்சிலை 2. 25 மீட்டர் உயரம் உடையது. இன்று அது லெய்டன் மாநகரின் தொல்பொருள் காட்சி சாலையில் உள்ளது என்பர்.

## துர்க்கையின் சிலை

சிங்கசாரியில் கிடைத்துள்ள துர்க்கையின் சிலை, அவளுடைய அழித்தல் தொழிலை அழகுறச் சித்திரிக்கிறது. ஆடையும் அணிகளும் அழகாகவும், அடக்கமாகவும் அமைக்கப் பட்டுள்ளன. எட்டுக் கைகளும், அவை ஒவ்வொன்றிலும் உள்ள கருவிகளும் அவளுடைய போர்க் கோலத்தை நம் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்துகின்றது. அச்சிலை வீராங் கனை ஒருத்தி உணர்ச்சித் துடிப்புடன் வீறுபெற்று விளங்குவதை நினைவூட்டுகிறது. அச்சிலை ஏறக்குறைய ஆறு மீட்டர் உயரம் உடையது.

## சிவபெருமானின் சிலை

சிவபெருமானின் சிலைகளுள் பிராம்பனில் உள்ள கோயிலில் காணப்படும் சிலை நேர்த்திவாய்ந்தது. நான்கு கைகளுடன் மார்பில் பூணூலும் உதரபந்தமும், கைகால், காது கழுத்துகளில் சில அணிகலன்களும் அணியப்பட்டுள்ளன. கைகளில்கருவிகளும், தலையில் சடா மகுடமும், கபாலமும் செம்மையாகச் செதுக்கப் பட்டுள்ளன. இடுப்பில் ஆடை அழகுற உடுத்தப்பட்டிருக்கிறது. இறைவன் நிற்கும்பீடம் தமிழகத்தின் கலைமுறையைப்பின்பற்றி அமைக்கப்பட்டுள்ளமை இங்கு குறிப்பிடத் தக்கது.

கி. பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த சிவபெருமானின் சிலை ஒன்று சாவகத்தின் நடுப்பகுதியில் செபாங்கு என்னும் கோயிலின் வடக்குப் பக்கத்தில் உள்ள மாடத்தில் இருக்கிறது. அது ஒரு வகையான வெள்ளைக்கல்லினால் செய்யப்பட்டிருப்பது அதற்குரிய ஒரு சிறப்பியல்பாகும். அச்சிலையில் சிறிது பழுதுண்டாகியிருக்கிறது எனினும், அதனால், அதனுடைய கலையழகு சிறிதும் குன்றிவிடவில்லை. அச்சிலை இரண்டு கைகளுள் ஒன்றை மட்டும் உடையதாகவும், இரத்தின மகுடமும், காதில் குண்டலங்களும், சில அணிகலன்களை மட்டும் அணியப்பெற்றதாகவும் காட்சி வழங்குகிறது. தலைக்குப்பின்னால் திருவாசி போன்ற வடிவம் ஒன்று இருக்கிறது. பொதுவாக இவ்வடிவம் சிவபெருமானின் சந்திரசேகரர் மூர்த்தத்தை ஒத்திருக்கிறது, எனலாம்.

சாண்டி சிங்கசாரி கோயிலில் கணேசர், துர்க்கை, பிரமன் முதலிய கடவுளர் வடிவங்கள் காணப்படுகின்றன. அவை மத்திய சாவகக் கலை மரபிலிருந்து வேறுபட்டுள்ளமை தெளிவாகத் தோன்றுகிறது. சிற்பக்கலையிலும் பெரும்பாலும் இத்தன்மை தோய்ந்துள்ளதைக் காணலாம். ஆயினும், அவை மத்திய சாவகச் சிற்பக் கலையினின்று வேறுபட்ட பாணியில் அவை அமைந்திருந்தாலும், அவை மிகவும் இழிந்த நிலைக்கு விரைந்து செல்லுவதை வெளிப்படுத்தும் வகையில் உள்ளமை குறிப்பிடத் தக்கது. தெய்வத்தின் திருவுருவங்கள் மட்டும் பழைய கலை மரபைத் தொடர்ந்து பின்பற்றிச் செல்வதோடு நேர்த்தியும் சீரிய பண்பும் உடையனவாக விளங்குகின்றன. பெல்லகனில் கிடைத்த திருமால் சிலையும், சிம்பங்கில் கிடைத்த அரியரன் சிலையும் அரசமரபினரின் முகத் தோற்றமும் வனப்பும் உடையனவாக உள்ளன.

## திருமால் சிலை

திருமால் வழிபாடு சாவகத்தில் சிறப்புற்று விளங்கவில்லை. எனினும், அச்சமயம் ஓரளவிற்குச் செல்வாக்குப் பெற்றிருந்ததை பழம் பொருட்சின்னங்கள் எடுத்தியம்புகின்றன.

திருமால் சிலைகளில், கருட வாகனத்தின்மீது அவர் வீற்றிருக்கும் கோலத்தில் கிடைத்துள்ளன. ஒரு சிலை, மனித வடிவில் உள்ள கருடன் மீது திருமால் அமர்ந்திருப்பதைச் சித்திரிக்கிறது. தொடக்க காலத்தில் தமிழகத்தில், கருடன் பறவை வடிவிலேயே வாகனமாகக் கொள்ளப்பட்டது. ஆழ்வார்கள் காலத்திற்குப் பின்னர் (9 ஆம். நூ. ஆ.) கருடன் மனித வடிவில் சித்திரிக்கப்பட்டது. அம்முறையைச் சாவகக் கலைஞர்களும் பின்பற்றி, மனித உடலும், பறவையின்

சிறகுகளும், அலகும், நகங்களும் கொண்டவடிவில் கருடனை உருவாக்கியுள்ளனர்.

பெலகான் என்னும் இடத்தில் கிடைத்துள்ள திருமாலின் சிலை, தனிச் சிறப்பு வாய்ந்தது. திருமாலின் மிகச் சிறந்த திருவுருவம், மிகவும் கொடுமையும் அச்சமூட்டும் பண்பும் வாய்ந்த கருட வாகனத்தின்மீது, அமர்ந்துள்ள நிலையில் கிடைத்திருக்கிறது. கீழைச் சாவகத்தில், கிடைத்துள்ள சிலைகளுள் இதனை மிகவும் தொன்மையும் சிறப்பும் வாய்ந்ததாகக் கருதுகின்றனர். இதை, அமைத்த சிற்பி, மிகக் கவர்ச்சியான முறையில், அருவருக்கத்தக்க தோற்றத்தோடு கூடிய கருடனைப், புதிய முறையில் படைத்துள்ளான். அக்கருடனுடைய தலை, பன்றியின் தலையைப் போன்று இருக்கிறது. அத்தலையினை அசைத்து நாகப்பாம்பினை அச்சுறுத்திய வண்ணம், தன்னுடைய கூரிய நகங்களால், இறுகப் பிடித்துக் கொண்டிருக்கும்படி அமைத்துள்ளான். காத்தல் கடவுளாகச் சிறப்பித்துப் போற்றப்படும் திருமால், தம்முடைய இருப்பிடமாகிய பாற்கடலில் அமைதியாக அறிதுயில் கொள்ளுவதை விட்டு, இந்தக் கருடன் மீது அமர்ந்துள்ளதாகச் சாவகச் சிற்பி சித்திரித்து இருப்பதில் ஓர் உட்பொருள் இருக்கவேண்டும் என்று வோகல் (J. Ph. Vogel) என்ற அறிஞர் கருதுகிறார்.

அல்லற்பட்டு ஆற்றாது அழுது கண்ணீர் வடிக்கும் உலக மக்களினுடைய துன்பத்தைத் துடைத்தும் காத்தலை - அருள் புரிதலைச் செய்யும் திருமால், இழிந்த உண்ர்வுகளை யெல்லாம் வென்று சாத்வீகப் பண்புடையராகக் காட்சி வழங்குகிறார். ஜாவாவின் சிற்பிகளுடைய உள்ளத்தில், எவ்வித சிந்தனை அரும்பி, இத்தகைய உயர்ந்த சிலையினைப் படைத்தார்கள் என்பதைச் சிந்திக்கின்றபொழுது, இத்தகைய நேர்த்தி வாய்ந்த இரு மனைவியரோடு கூடிய திருமாலின் சிலையினை இந்தியாவில் எங்கும் காண்பது அரிது என்று அறிஞர் வோகல் போற்றியுள்ளார்.

பெலகனில் காணப்படும் இத்திருமாலின் சிலை, கிழக்குச் சாவகத்தை ஆண்ட பேரரசன் முதலாவது ஏரலங்கனின் திருவுருவமாகவோ இருக்கவேண்டும் என்று குரோம் (Krom) என்று தொல்பொருள் ஆராய்ச்சியாளர் கருதுகின்றார். இதைப் போன்றே சாண்டி ஜாகோ கோயிலில் பேரரசர் விஷ்ணு வர்த்தனரின் திருவுருவம், ஒரு பௌத்தக் கடவுளாக அமைக்கப் பட்டிருப்பது இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும்.

## புத்தரின் சிலைகள்

சைவ சமயத்தை அடுத்து, பௌத்தம் ஜாவாவில், சீரும், சிறப்பும் பெற்றுத் திகழ்ந்ததை நாம் முன்பு கண்டோம். போராபுதூரில் உள்ள புத்தரின் சிலைகளும், மெண்டூட்டில் உள்ள போதிசத்துவரின் சிலையும் இந்திய - சாவகச் சிற்பக் கலையின் தலைசிறந்த படைப்புகளாகும். அழகான வடிவ அமைதியுடன், தசைநார்கள் புடைத்துக்கொண்டு வெளியில் தோன்றாமல், அருளொழுகும் முகத்தோற்றத்துடன் தெய்வீகத் தன்மை வாய்ந்த ஆன்மிகப் பேரொளியுடன் கவர்ச்சிமிக்க கோலத்தில் இச்சிலைகள் காணப்படுகின்றன. இச்சீரிய சிற்பக்கலை மரபு, குப்தர் காலத்திய பாணியைப் பின்பற்றி செய்யப்பட்டனவாக இருக்க வேண்டும்.

சாண்டி மெண்டூட்டில் உள்ள புத்தரின் சிலையும், அவலோகிதஈசுவரரின் சிலையும் மிகச் செம்மையாகவும் சிறப்பாகவும் செய்யப்பட்டுள்ளன. அவை சாவகத்தின் தொன்மைக்கலை மரபு செழித்துவிளங்கிய காலத்தில் படைக்கப் பட்டனவாகும். போராபுதூர் சிலைகளைப் போன்றே இச்சிலை களும் உள்ளன. அவற்றைக் காட்டிலும் இவை மிகுதியான கலை நயமும் மென்மை எழிலும் வாய்ந்தனவாக இருக்கலாம்.

## பிரக்ஞ பாரமிதையின் சிலை

சிங்கசாரி கோயிலில்கண்டெடுக்கப்பட்ட பிரக்ஞ பாரமிதையின் சிலை மிக நேர்த்தியானது. மகாயானப் பௌத்த சமயத்தின் பெண் தெய்வமான பாரமிதை, சாவகத்தில் பெரும் சிறப்போடு போற்றி வணங்கப்பட்டிருக்கிறாள். சிவனுடைய சக்தியாகிய உமாதேவியைப் போன்று, போதிசத்துவரின் சக்தியாக பிரக்ஞபாரமிதை போற்றப்படுகிறார். அப்பெண் தெய்வத்தின் சிலை, கண்கவர் வனப்பும், அமைதி ததும்பும் தெய்விகத் தோற்றமும் வாய்ந்தது. இச்சிலை .51 மீ. அகலமும் 2. 6 மீட்டர் உயரமும் உடையது. இன்று, இச்சிலை லெய்டன் அரும்பொருள் காட்சி சாலையில் இருக்கிறது. இதனைக் கூர்ந்து ஆராய்ந்த ஹாவல் என்ற அறிஞர், ''இச்சிலை கீழ்த்திசைக் கலைகளிலும், மேலைநாட்டுக் கலைகளிலும் ஒரு சிறந்த ஆன்மீகப் படைப்பாகத் தோன்றுகிறது'' என்று மொழிந்துள்ளமை இங்கு நினைவுகூர்தற்குரிய தாகும்.

இவை அல்லாமல், உமாதேவி, இலக்குமி, பத்திரகுரு, அகத்திய முனிவர், துவாரபாலகர் முதலியோருடைய சிலைகள் கலைநயம் குன்றா வகையில் இந்திய கலைப்பாணியை

அடிப்படையாகக் கொண்டு, படைக்கப்பட்டுள்ளமை வியப்பும் விம்மிதமும் அளிப்பனவாகும்.

## படிமக்கலை

ஜாவாவில் இந்து, பௌத்த சமயங்களுக்குரிய தெய்வங்களின் வெண்கலச் சிலைகள் பல கிடைத்துள்ளன. அவற்றில் உ சோழர் காலத்திய படிமக்கலைப் பண்பு முதன்மையான இடத்தைப் பெற்றிருக்கிறது. பிற்காலத்தில், சாவகத்தில் செய்யப்பட்ட சிலைகளில் ஓரளவு வங்காளத்தினையாண்ட பால மன்னர்களுடைய கலைப்பாணியும் இடம் பெற்றுள்ளதை நாம் காணுகின்றோம்.

டெகால் என்னும் இடத்திற்கு அருகில் உள்ள ஆற்றில் கண்டெடுக்கப்பட்ட சிவபெருமான் சிலை சிறப்புமிக்கது. அது செப்புத் திருமேனியாகும். அதனுடைய கீழ் உதடும், மூன்று கண்களும் பொன்னாலானவை. அச்சிலை ஒரு மீட்டருக்குமேல் உயரம் உடையதாகக் கூறுவர். சிவபெருமான் நின்ற கோலத்தில் நான்கு கைகளுடன் காட்சி வழங்குகிறார்.

சிவபெருமான் சடைமுடியற்றவராகத் தோன்றுகிறார். மார்பில் பூணூலும் கழுத்திலும் காதிலும் அழகிய அணிகலன்களும் அணியப்பட்டுள்ளன. இடது பக்கம் பின்புறத்தில் உள்ள கையில் தீக்கொழுந்து விட்டு எரிகிறது. முன்புறக் கையில் கமண்டலம் காணப்படுகிறது. வலது பக்கம் பின்புறத்தில் உள்ள கையில் உடுக்கை காணப்படுகிறது. அதன் முன்பக்கம் உள்ள கையில் இருக்கும் பொருள் தெளிவாகத் தோன்றவில்லை. இடுப்பிலிருந்து ஆடை, கணுக்கால்வரை தொங்கிக் கொண்டிருக்கிறது. இறைவனுடைய திருவடிகள் மிதியடிகளையுடையனவாக உள்ளன. தோளிற்குக் கீழ், கைகளில் அணிகள் அணியப்பெற்றுள்ளன. அவர் எழுந்தருளியிருக்கும் பீடம் நீண்ட சதுர வடிவமானது. இச்சிலை கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று கலைநூல் வல்லார் கருதுகின்றனர். இச்சிலையின் அமைப்பும் அழகும் சோழர் காலத்திய வெண்கலச் சிலைகளின் வடிவ அமைதியுடன் பெரிதும் ஒப்புமை உடையனவாக இருக்கின்றன.

சிங்கசாரிப் பகுதியில் தாண்டவமாடும் பைரவர் சிலையும், ஊழிக் கூத்தினை ஆடும்நடராசர் சிலையும் முருகனுடைய நடன கோலசிலையும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவை மூன்றுமே நடராசர் சிலையின் அமைப்பையும் தோற்றப் பொலிவையும் உடையனவாக உள்ளன.

## இலக்கியக்கலை

சாவகத்தின் வரலாற்றுக் காலத்தில் இந்தியப் பண்பாட்டின் செல்வாக்கு மேம்பட்டு விளங்கிய நாள்வரையில் இந்திய இலக்கியங்கள் சாவக மக்களுக்கு நிலையாக ஆர்வத்தை ஊட்டி வந்தன. தொடக்க காலத்தில் இந்தியாவிலிருந்து தமிழ் இலக்கியங்களும் சம்ஸ்கிருத இலக்கியங்களும் ஜாவாவிற்கு இறக்குமதி செய்யப்பட்டன. இன்று ஆதி காலத்திய இந்திய இலக்கிய ஏடுகள் சாவகத்தில் கிடைக்கவில்லை. எனினும், அங்குள்ள கோயில் சிற்பங்கள், இந்திய இலக்கியங்களின் உள்ளுறைகளைச் சாவகத்து மக்கள் நன்கு அறிந்தி ருந்தனர் என்பதற்குப் போதிய சான்றுகளாகும்.

இந்திய இலக்கியங்களை விரும்பிப் படிக்கும் பழக்கம் பெரும் பாலான கிழக்காசிய நாடுகளில் இருந்து வந்தது. சாவகத்தில் மட்டும் அயல்நாட்டு இலக்கியங்கள் மிகச் சிறப்பாகப் போற்றி வளர்க்கப்பட்டன. சாவகத்தின் இலக்கிய வளர்ச்சி மூன்று நிலைகளையுடையதாகும். அதன்தொடக்க நிலை பொதுவாகப் "பழைய சாவக இலக்கியக் காலம்" எனப்படும். அக்காலத்தில் சாவக இலக்கியம் பல துறைகளில் செழித்தோங்கியது. இந்த இலக்கிய வளர்ச்சி சாவகத்தில் இந்துக்களுடைய ஆட்சி அழிந்த தோடு முடிவுற்றது. இதை அடுத்துப் புதிய சாவக இலக்கிய காலம் அரும்பியது. முஸ்லீம்கள் படையெடுப்பிற்குப் பிறகு, பாலியில் குடியேறிய சாவக மக்கள்பாலி இலக்கியக் கூறுகளைக் கொண்டு வந்து புகுத்தியதன் விளைவாகத் தோன்றிய இலக்கிய வளர்ச்சிக் காலத்தைச் "சாவக இலக்கியத்தின் இடைக் காலம்" என்பர்.

'பழைய சாவக இலக்கியங்கள்' பெரும்பாலும் அவற்றிற்குத் தேவையான கருத்துகளை இந்திய இலக்கியங்களிலிருந்தே எடுத்துக் கொண்டுள்ளன, ஆயினும், அவை வடமொழி நூல் களிலிருந்து பெரிதும் வேறுபட்ட முறையில் அமைந்துள்ளன. பழைய சாவக இலக்கியச் செய்யுட்கள் சம்ஸ்கிருத யாப்பு முறையைப் பின்பற்றியே பாடப்பட்டுள்ளன. இன்று பழைய சாவக இலக்கிய காலத்தைச் சேர்ந்தனவாகக் கிடைத்துள்ள நூல்கள் இரண்டு. 'அமரமாலா' என்ற நிகண்டு, வடமொழியி லுள்ள அமரகோசத்தைத் தழுவி எழுதப்பட்டதாகத் தெரிகிறது. சைலேந்திர அரசன் ஜிதேந்திரனைப் பற்றி இந்நூல் குறிப்பிடு கிறது. அவனுடைய ஆதரவிலேயே இந்நூல் இயற்றப்பட்டது. இந்நூலினுள்தான் ஜிதேந்திரன் என்ற அரசன் இருந்தமை அறியப்படுகிறது.

இலக்கியத்தைக் 'கவி' என்று கூறுவது சாவகத்து இலக்கிய மரபாகும். இக்காலத்தில் எழுதப்பட்ட மற்றொரு சிறந்த நூல் இராமாயணமாகும். அது பழைய சாவக மொழியில் எழுதப் பட்டிருக்கிறது. அதனைக் கி. பி. 1094-இல் யோகீசுவரர், என்பவர் எழுதி முடித்ததாக ஒரு சில ஆராய்ச்சியாளர்கள் கருது கின்றனர். வேறு சிலர் அக்காப்பியம் கி. பி. 12 அல்லது 13-ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாக இருக்கலாம் என்று கூறு கின்றனர். எவ்வாறாயினும், அது வான்மீகி இராமாயணத்தின் மொழி பெயர்ப்பு அன்று. வான்மீகியின் ஆதிகாப்பியத்தைத் தழுவியும், பல இடங்களில் மாறுபட்டும் இந்நூல் செல்வதால், ஒருகால் கம்பருடைய இராம அவதாரத்தை அடியொற்றி இந் நூல் இயற்றப்பட்டிருக்கலாம்.

வடமொழியிலுள்ள வியாச பாரதத்தினை முற்றிலும் பின் பற்றி உரைநடையில் மிகச் சுருக்கமாக எழுதப்பட்ட மகா பாரதம் இக்காலத்தில் சாவக மொழியில் தோன்றியதாகத் தெரி கிறது. அதன் மூன்று பகுதிகளான ஆதி, விராட, வீட்டுமபருவங் கள் பதினோராம் நூற்றாண்டில் ஏரலங்கன் ஆதரவில் எழுதப் பட்டன. மற்றப் பகுதிகள் பிற்காலத்தில் எழுதிச் சேர்க்கப் பட்டன. ஏரலங்கனால் ஆதரிக்கப் பெற்ற கண்வன் என்ற புலவன், கி. பி. 1035 அளவில் அருச்சுன விவாகம்' என்ற பண்டைய சாவானிய நூலை எழுதினான்.

ஜெயவர்ஷன் என்ற மன்னனின் ஆதரவில், திரிகுணன் என்ற அறிஞன் 'கிருஷ்ணாயனம்' என்றநூலினை கி. பி. 1104-இல் இயற்றினான். அந்நூல் கண்ணன் ருக்குமணியைத் தூக்கிச் சென்று, மணம்புரிந்து கொண்ட கதையைக் கூறுவதாகும். காமேசுவரன் என்ற கதிரி அரசன் காலத்தில் (1185) ''மாரதகனம்'' என்ற செய்யுள் நூல், தருமையன் என்பவனால் செய்யப்பட்டது. இவை இரண்டும் 'அவைக்களப்பாடல்' (Court Poetry) வகையைச் சேர்ந்தன. புலவர்கள் தங்களைப் போற்றி ஆதரித்த புலவரையே இந்நூல்களில் மறைமுகத் தலைவர்களாகக் கொண்டு அவர்களுடைய அறிவையும் ஆற்றலையும், சீரையும் சிறப்பையும் போற்றிப் புகழ்ந்து பாடி யுள்ளார்.

ஜெய அபயன் (1135–1157) என்ற அரசனால் ஆதரிக்கப் பட்ட சேடன் கி. பி. 1157 இல் ''பாதைப்போர்' என்ற நெடுங் கதைப் பாடலைப் பாடினான். பாணுலு என்பவன் அதை முற்றுப் பெறச் செய்தான்.

இவையல்லாமல் 'காகாவின்' எனப்படும் (Kakawin) காப்பியம், அரசியல் தொடர்பான வீரகாப்பியங்கள் பல தோன்றின. அவை அருச்சுன விவாகம், கிருஷ்ணாயணம் முதலியனவாகும். கதிரி அரசனான ஜெயவர்மன் காலத்தில் 'ஹரிவமிசம்' இயற்றப்பட்டதாகத் தெரிகிறது. மேலும், இக் காலத்தில் இயற்றப்பட்ட 'சமரதகனம்' என்ற நூல் திரிபுரத கனத்தை எடுத்தியம்புகிறது. இது காளிதாசரின் 'குமார சம்பவத்தைப் பின்பற்றி இயற்றப்பட்டது. சிவராத்திரியின் மகிமையைக் கூறும் 'லூபதகம்' என்ற நூலும், நரகாசுரனின் வீழ்ச்சியை விளக்கும் 'பொம்ம காப்பியம்' என்ற நூலும் கதிரி அரசர்கள் காலத்தில் இயற்றப்பட்டன. நரகனுக்குப் 'பொம்ம' என்ற பெயர் வழங்கப்பட்டுள்ளமை கருதத் தக்கது.

மஜபாகிதப்பேரரசு மாண்புற்று விளங்கிய காலத்தில் (14-ஆம் நூற்றாண்டில்) பிரபஞ்சா என்பவரால் கி. பி. 1365 இல் 'நாகரகிருதாகமர்' என்ற ஒப்பற்ற பாடல் பாடப்பட்டது. பிற காப்பியங்கள் எல்லாம் இந்தியக் கதையினைக் கருவாகக் கொண்டு இயற்றப்பட்டனவாகும். ஆனால், இக்காப்பியம் மஜபாகிதப் பேரரசன் ஹயாம் உருக்கிள் வாழ்க்கையையும் காலத்தையும் கருவாகக் கொண்டு இயற்றப்பட்டது. இக் காப்பியம் அப்பேரரசனைப் பற்றியும், விரிவாகப் பல செய்தி களைத் தந்து உதவுவதோடு சிறந்த இலக்கிய நயம் வாய்ந்த படைப்பாகவும் விளங்குகிறது.

நீதி சாத்திர காவின் என்ற ஓர் இலக்கியம் மஜபாகிதப் பேரரசின் இறுதிக் காலத்தில் இயற்றப்பட்டது. அந்நூல், அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய பேறுகளைப் பற்றிய முதுமொழிகள், அறவுரைகள், வாய்மொழிகள் முதலியவற்றைச் 'சுலோகங்'களாகக் கொண்டுள்ளது. பெரிதும் வடமொழியி லுள்ள நீதிசாரம், பஞ்சதந்திரம், சாணக்கிய சதகம் போன்ற நீதி நூற்களை இந்நூல் ஒத்திருக்கிறது எனலாம்.

பண்டைச் சாவானிய இலக்கியத்தில் மூன்று பகுதிகளுள் முதல் பகுதி காப்பியங்களாகும். இரண்டாம் பகுதி சமய, தத்துவ நூற்களாகும். சூரிய சேவனா, கருடேய மந்திரம் போன்றவை இவ்வகையைச் சேர்ந்தனவாகும். மூன்றாம் பிரிவு உரைநடை நூற்களாகும்.

பழைய சாவக இலக்கிய காலத்தில் பல உரைநடை நூற்கள் இயற்றப்பட்டுள்ளன. இவற்றுள் சில இதிகாசங்களைப் பொருளாகக் கொண்டு எழுதப்பெற்றன. அவற்றுள் மிகச் சிறந்தது 'பிரமாண்ட புராணமாகும். ஆதிபுராணம், புவன

புராணம் எனப்படும் நூற்கள் தென்னிந்திய சமய குரவர்களான ஆழ்வார்கள், நாயன்மார்கள் கதைகளைப் பின்பற்றி எழுந்தன வாகும். 'அகஸ்திய புராணம்' என்பது அகத்தியர் தன்னுடைய மகனான திரிஷ்டங்யுவிற்கு உலகத்தின் தோற்றம் பற்றிக் கூறுவதாகக் காணப்படுகிறது.

பதின்மூன்றாம் நூற்றாண்டிலிருந்து பதினைந்தாம் நூற்றாண்டுவரை சாவகத்தில் நிலவிய இந்து அரசினைப்பற்றிய ''அரசரின் நூல்'' என்ற பொருள் வாய்ந்த 'பரதன்' கி. பி. 1613-இல் எழுதப்பெற்றது. அதிலுள்ள செய்திகள் சில நம்பத் தக்கனவாக இல்லை. எனினும், அந்நூல் பெரும்பான்மையும் பயனுள்ள ஒரு வரலாற்று ஏடாகும். பாஞ்சி புராணம் பாக்களில், அடிப்படை வரலாற்று உண்மை உண்டு என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். கதைத் தலைவனான பாஞ்சி, கதிரியன் முதலாம் காமேசுவரன்தான் என்று கருதப்படுகிறான். இறுதியாகத் 'தந்திரி' எனப்படும் சாவக நீதிக்கதைகள் இந்தியாவிலிருந்து பஞ்சதந்திரம் என்ற நூல் அங்குப் பரவியதைக் காட்டுகின்றன.

இவை 'அல்லாமல்' அரசியல் தொடர்பான சில அருத்த சாத்திர நூற்களும் சாவகத்தில் இயற்றப்பட்டன. 'காமாந்தகம்' என்ற பழைய சாவக நூலில், அரசன் எவ்வாறு ஒழுக வேண்டும் என்பதைக் காமாந்தகர் தன்னுடைய மாணவர்களுக்கு விளக்கி யுரைக்கிறார். இதற்கு 'இராசநீதி' என்ற மற்றொரு பெயரும் உண்டு. இது சம்ஸ்கிருதத்தில் உள்ள காமாந்தக நீதி சாஸ்திரத்தை அடிபொற்றியதாகும். அரசியல் தத்துவங்களை விளக்குவதற்கு இந்திய இதிகாசங்களிலிருந்து பல பகுதிகள் மேற்கோளாகக் காட்டப்படுகின்றன.

'இந்திரலோகம்' என்ற நூலில், இந்திரலோகன் என்ற ஆசிரியன் தன் மாணவனாகிய குமாரயக்ஞன் என்பவனுக்கு அரசியல் கலையைப் பற்றிய பல செய்திகளை முறைப்படுத்தி யுரைத்துள்ளான்.

'நீதி பிராயா' என்னும் நூல் பகைவனுக்கு எதிராக அரசன் செய்யவேண்டிய கடமைகள் என்னவென்பதைத் தெளிவுறுத்து கிறது.

இவை யாவும் குடியேற்ற நாடுகளின் கலை வளர்ச்சியிலும் இலக்கிய வளர்ச்சியிலும் இந்தியப் பண்பாட்டிற்கு இருந்த செல்வாக்கினைத் தெளிவாக விளக்குகின்றன.

## ஆடற்கலை

சாவகத்தில் இசை, நாட்டியம், கூத்து போன்ற கலைகள் போற்றி வளர்க்கப்பட்டன. அவற்றுள் பொம்மலாட்டம், நிழலாட்டம் என்ற கூத்து வகைகள் மத்திய சாவகத்தில் சிறப்புற்று விளங்குகின்றன. தமிழகத்தில் ஓரளவிற்குச் சிறப்புற்று விளங்கிய பொம்மலாட்டம், ஆந்திர நாட்டில் அண்மைக்காலம் வரையில் மிகச் சிறப்புடன் நடத்தப்பட்டதை அறிகிறோம். இதனைச் சாவக மக்கள் 'வயாங், ஓராங்கு' எனும் பெயர்களால் சுட்டுகின்றனர். இவற்றுக்கு ''மனிதர்கள் பொம்மைகளின் பாத்திரத்தில் நடிக்கும் பொம்மை நாடகம்'' என்று பெயர்.

இந்த ஆடல் நாடகம் பண்டை இந்து சாவகக் கதைகளை எடுத்துக் காட்டுகிறது. இப்போது வரவரக் குடியேற்ற ஆட்சிக் கால நிகழ்ச்சிகளையும், விடுதலைப் போராட்டக் கால நிகழ்ச்சிகளையும் விளக்கும் கதைகள்கூடப் 'பொம்மலாட்டமாக' நடத்தபபடுகின்றன.

இந்த ஆடல் நாடக வகையைச் சேர்ந்த 'வேயாங் குவிட்' எனப்படும் நிழல் நாடகமும் மிகவும் புகழ்பெற்றது. திருவிழாக் காலங்களில் இந்தோனேசியா முழுமையும் ஊர் ஊராக இதைப் போன்ற நிழல் நாடகங்கள் நடைபெறுவதைக் காணலாம். தற்காலிகமாக ஒரு மேடை. அதில் ஒரு வெள்ளைத்திரை தொங்கவிடப்பட்டிருக்கும். பின்னால் ஒரு விளக்கு பொருத்தி வைக்கப்பட்டு, திரை ஒளி மயமாக இருக்கும். பொம்மலாட்டக் காரர்கள் தோலினால் செய்யப்பட்ட பொம்மைகளின் கால், கைகளைக் குச்சிகளில் கட்டிக்கொண்டு, மேடையில் இருமருங்கிலும் நின்று திரைக்குப் பின்னால் அவற்றை இயக்குவார்கள். அப்போது இந்தப் பொம்மைகளின் நிழல் ஒளிமிக்க திரைகளில் விழுந்து தொன்மை வாய்ந்த புராணக் கதைகளை விளக்கும் முறையில் நடித்துக் காட்டும். இந்த நடிப்புக்கேற்றவாறு மேடைக்குப் பின்னாலிருந்து இருவர் உரையாடல் நடத்துவார்கள். சுருங்கச் சொல்லுவதென்றால் சாவகத்தின் ஆடல்கலை அரசர் வழி முறையைச் சார்ந்தது.

## 7. 3. 7.
## இன்றைய ஜாவாவில் தமிழர் நிலை

இந்தோனேசியாவில், சுமத்திரா தீவிலேயே, தமிழர் பேரளவிற்கு வாழுகின்றனர் என்பதைக் கண்டோம். ஜாவாவில் 1.2 விழுக்காட்டு அளவிற்குத் தமிழ் மக்கள் வாழ்ந்து வருகின்றனர். கடந்த இரு நூற்றாண்டுகளில் அங்குக் குடியேறிய தமிழ் மக்களின் வழிவந்தோரே, இப்பொழுது அங்கு வாழ்ந்து வருகின்றனர். நடையுடை பாவனையால், அவர்கள் இந்தோனேசியராக மாறிவிட்டனர். ஆயினும், வீட்டில் பேசும் மொழி மட்டும் தமிழாகவே இருந்து வருகிறது. அது கொச்சைத் தமிழாக, ஜாவானிய மொழிச் சொற்கள் பல கலந்துவிட்ட மொழியாகக் காணப்படுகிறது. தமிழை எழுதத் தெரியாவிட்டாலும், பேசுவதிலே அங்குள்ள தமிழர் பலர் ஆர்வம் காட்டி வருகின்றனர்.

பெரும்பாலான தமிழ் மக்கள் முருக வழிபாட்டையும் சக்தி வழிபாட்டையும் போற்றிப் பின்பற்றிவருகின்றனர். இத் தெய்வங்களுக்குச் சிறு கோயில்களும் எழுப்பப்பட்டுள்ளன. இவற்றில் விழாக்கள் நடத்தப்படுகின்றன; பண்டிகைகள் பல கொண்டாடப்படுகின்றன.

மக்களுக்கு இடப்படும் பெயர்கள் யாவும் தமிழின் வழிவந்த இந்து சமயத் தெய்வங்களின் பெயர்களாக இருந்து வருகின்றன.

இராமன், லட்சுமணன், முனிசாமி, வாசு போன்ற ஆடவர் பெயர்களும், லட்சுமி, பத்மா, ரத்தினா, நிர்மலா, பாஞ்சாலி போன்ற பெண்பாற் பெயர்களும் வழக்கில் உள்ளன.

ஆண்களும், பெண்களும் சமநிலையில் கல்வி கற்கின்றனர். தமிழ் மக்களுள் பெரும்பாலோர் வாணிகம் செய்துவருகின்றனர். அவர்களுள் இராமநாதபுரத்தைச் சேர்ந்த தமிழக இஸ்லாமியர் சள் மிகப் பலராக உள்ளனர்.

தமிழருள் சிலர் அலுவலகப் பணிபுரிகின்றனர். அரசு பணியில் பொறுப்பான பதவிகளை வகிக்கும் பெரிய அதிகாரிகள் சிலர் தமிழராக உள்ளனர்.

இங்குத் தமிழைப் பயில்வதற்குப் போதிய வசதிகள் இல்லை. வருங்காலத்தில் இங்குள்ள தமிழ் மக்கள், தங்கள் தாய்மொழி யாகிய தமிழை மறந்துவிடக் கூடிய அவல நிலை இருந்து வருகிறது.

பஞ்சசீலக் கொள்கையைப் போற்றிப் பின்பற்றும் இந்தோ னேசிய அரசு, தமிழ்க் கல்வி பயில, வாய்ப்பு அளிக்க முன்வரும் என அங்கு வாழும் மக்கள் நம்பிக்கையுடன் வாழ்ந்து வருகின்றனர்.

# 7. 4. 0.

# நிலவியல் அமைப்பு

தென்கிழக்கு ஆசியாவில் 'நாற்பெருந் தீவுகள்' எனச் சிறப்பித்துப் பேசப்படுவன பாலி, போர்னியோ, செலிபஸ், பிலிப்பைன்ஸ் என்பனவாகும். சிறியனவும் பெரியனவுமாக ஆயிரக்கணக்கான தீவுகள், இந்தோனேசியாவைச் சேர்ந்தவையாகும். அவற்றுள் மேலே கண்ட நான்குமே பண்டைக்காலம் முதல், நாகரிகப் பண்பாட்டு மரபுவழி உடையனவாக இருந்து வருகின்றன. மற்றவை எல்லாம், தனியரசும், தனிப்பட்ட வரலாறும் உடையன அல்ல. அவற்றின் வரலாறு, இந்தோனேசியாவின் வரலாற்றோடு பின்னிப் பிணைந்துள்ளன.

இரண்டாவது உலகப்போரில் ஜப்பானியரின் எழுச்சிக்காலத்தில், இத்தீவுகள் கடற்போர் மையங்களாகப் பயன்பட்டன. இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு, இத்தீவுகள் புதுவாழ்வைப் பெற்றன. இதனால், உலக நாகரிக நீரோட்டத்தில் கலக்கும் வாய்ப்பு இவற்றிற்குக் கிடைத்தன.

ஆனால், நாற்பெருந்தீவுகள் இதற்கு விதிவிலக்காக விளங்குகின்றன. பன்னெடுங்காலமாக சீனாவோடும், இந்தியாவோடும் அவை தொடர்புடையனவாக இருந்து வருகின்றன.

ஆயினும், இவற்றின் வரலாற்றை முழுமையாக அறிவதற்கு இயலவில்லை. இத்தீவுகளில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சிகள், சில, தொல்பொருள் சின்னங்களை வெளிப்படுத்தியுள்ளன. சீனாவின் காலவழிச் செய்திக்கோவைகள், அரசியல் உறவுகளைப் பற்றியும் இராசதந்திரச் சார்பான தூதர் குழுக்களைப் பற்றியும் வாணிகத் தொடர்புகளைப் பற்றியும் பல அரிய செய்திகளைத் தெரிவிக்கின்றன.

## 7. 4. 1.
## பாலித்தீவு

### அமைப்பு

இந்தியாவில் இருந்து 3500 கி. மீ. தொலைவுக்கு அப்பால் தென்கிழக்கே உள்ள தீவு, பாலி என்பதாகும். பாலி, ஜாவாவின் கிழக்கிலுள்ள தீவு. சற்றேறக்குறைய இரண்டு கிலோ மீட்டர் அகலமும் ஆறு கி. மீ. நீளமும் உடைய நிலப்பகுதி பாலி; இரண்டு கி. மீ. அகலமுடைய கடல்பகுதி போர்னியோ தீவுகளை இதிலிருந்து பிரிக்கிறது. மிகக் குறுகிய பரப்பளவைக் கொண்ட இத்தீவு நெருக்கமான மக்கள் தொகையை உடையதாகும். இத்தீவின் நடுவே,மேற்கிலிருந்து கிழக்கு நோக்கிச் சங்கிலித் தொடர்போல, எரிமலைகள் அமைந்துள்ளன. அவற்றின் இருபக்கத்திலும் செழிப்புமிக்க பள்ளத்தாக்குகளும் சமவெளிகளும் சிறப்புற்று விளங்குகின்றன. மகாபலி எனும் அசுரனுடைய பெயரால் 'பாலி' என்னும் இத்தீவு வழங்குவதாகக் கூறுவர்.

பல்வேறு நாடுகளைக் கைப்பற்றிய இஸ்லாமியர் பாலியில் வெற்றி பெறவில்லை. பண்டை இந்துக்களின் குடியேற்றங்களுள் இன்றும் இஸ்லாமிய சமயத்திற்கு இரையாகாமல், தனித்தியங்குவது பாலி. அங்குக் கணிசமான அளவிற்கு இந்துப் பண்பாடும் நாகரிகமும் இன்றும், நின்று நிலவி வருகின்றன. அங்கு இஸ்லாமியர் வெற்றி பெறாமைக்குக் காரணம் அத்தீவில் வாழும் மக்களுடையஉள்ள உறுதியும், வீரவுணர்வுமேயாகும். பாலிப் பெண்கள் அழகில் சிறந்தவர்கள். இன்றும் இந்துப் பண்பாட்டைப் பற்றி அறிவதற்கும், ஆராய்வதற்கும் உரிய நிலைக்களனாகப் பாலி இருந்து வருகிறது. இக்காலத்தில்இருபத்திரண்டு இலட்சம்

மக்கள் இங்கு வாழ்கின்றனர். அவர்களுள் தொண்ணூறு விழுக்காட்டினர் இந்துக்கள். நான்கு விழுக்காட்டினர் பௌத்தர்கள். மற்றமதத்தினர் ஆறு விழுக்காட்டினர் ஆவர்.

## அரசியல் வரலாறு

பாலியின் பண்டை வரலாறு, அறியப்படவில்லை. கி. பி. ஆறாம், ஏழாம் நூற்றாண்டுகளில் வரையப் பெற்ற சீன வரலாற்றுக் குறிப்பேடுகளில், 'போலி' என்றத் தீவைப்பற்றிப் பேசப்படுகிறது. அது பாலியாகஇருக்குமென்றுஅறிஞர்கள் கருதுகின்றனர். அத்தீவில் ஆட்சிபுரிந்ததாகக் கூறப்படும் கவுண்டினியனின் குலத்தினர் கி. பி. 518-இல் சீனாவிற்கு தூதர் குழு ஒன்றை அனுப்பியதாக தெரிகிறது. அக்காலத்தில் பாலியில் நாகரிகச்சிறப்பு வாய்ந்த ஓர் அரசன், பௌத்த சமயத்தைச் சேர்ந்தவனாக இருந்தான் என்பது குறிப்பிடத்தக்கது. கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முன்பிருந்தே ஓர் இந்து அரசு, ஆற்றல் மிக்கதாக அங்குவிளங்கியமை, சீன வரலாற்றுக் குறிப்பேடுகளால் புலனாகிறது.

'மூலசர்வாஸ்திவாத நிகயம்' எனும் பௌத்தசமயத் திருமறை பரவியிருந்த தென்கடல் தீவுகளுள்,ஒன்றாகப் பாலியை இட்சிங்கு குறிப்பிடுகிறான். இதனால், கி. பி. ஆறாம் நூற்றாண்டு அளவிலேயே, பாலியில் பௌத்த சமயம் நன்கு வேரூன்றி யிருந்தமை அறியப்படுகிறது.

அணிமைக் காலத்தில் பாலியில் நடைபெற்றதொல்பொருள் ஆராய்ச்சியில் கிடைத்துள்ள பழம்பொருள் சின்னங்கள்,பாலி ஓர் இந்துக் குடியேற்ற நாடு என்பதையும், அது இந்திய-சாவகக் குடியேற்றத்தின் அல்லது நாகரிகப்பண்பாட்டின் கிளையன்று என்பதையும் மெய்ப்பித்துள்ளன. பழைய கல்வெட்டுகளில் பயன்படுத்தப்பட்டுள்ள மொழி, பழைய பாலி மொழியேயாகும். இது வரை அதைப் பழைய சாவகமொழி என்று ஆராய்ச்சியாளர்கள் தவறாகக் கருதிவந்தனர். ஆனால், அந்த எழுத்துகள் கிரந்த எழுத்து வடிவங்களாக உள்ளன.இவற்றால் பாலித்தீவில்தனித்ததோர் இந்துக்குடி அமைக்கப்பட்டு,இந்தியப் பண்பாடும் நாகரிகமும் போற்றி வளர்க்கப்பட்டது என்று கொள்ளுதலே சாலவும் பொருத்தம் உடையதாகும். சாவகம் அடிக்கடி தன்னுடைய ஆதிக்கத்தைப் பாலியில் நிலைநாட்டியது உண்மை. கி. பி. எட்டாம் நூற்றாண்டில் சஞ்சயன், பாலியைக் கைப்பற்றியதாகக் குறிப்பிடுகிறான். இதைப்போன்று, பிற்காலத்திய அரசர்களுக்கும், சாவகத்தோடு பாலிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டாயிற்று. பெரும்பாலும் அதன் ஆட்சிக்குட்பட்ட நாடாகவே பாலி இருந்து வந்தது. ஆயினும், இந்தியாவிலிருந்து நேரடியாக

இந்தியப் பண்பாட்டையும், நாகரிகத்தையும் பாலி பெற்றுள்ளது என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## அரசின் தோற்றம்

பாலியை ஆண்ட வரலாற்றுப் புகழ் வாய்ந்த முதல் அரசன் என்று நாம் உறுதியாக அறிவது கேசரிவர்மதேவன் என்பவனா வான். அவன் கி. பி. 914-இல் பாலியினை ஆண்டான் என்பது கல்வெட்டொன்றால் தெரியவருகின்றது. அவனுக்குப் பிறகு உக் கிரசேனன் (கி. பி. 915-942) என்பவன் ஆட்சிபுரிந்தான். பின்னர் தபேனேந்திர வர்மதேவன், சந்திர அபய சிங்கவர்மதேவன் என்ற அரசர் ஆண்டனர். கி. பி. 975-இல் ஜனசாதுவர்மதேவனும், 984-இல் அவனுடைய அரசி ஸ்ரீவிசய மகாதேவியும் பாலியை ஆண்டதாக அறிகிறோம். இவர்களுக்கு இடையே இருந்த உறவு முறையையும், ஆட்சியைப் பற்றிய வேறு பிற செய்திகளையும் அறிய இயலவில்லை.

ஜாவாவின் ஆதிக்கத்திற்கு அடிமையாவதற்கு முற்பட்ட காலத்திய பாலி அரசர்களின் ஆடம்பர வாழ்க்கையைப்பற்றிச் சீனக் காலவழிச்செய்திக்கோவை ஒன்று பின்வருமாறு பதிவுசெய் துள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

பூவேலைப்பாடு செய்யப்பட்ட பட்டாடைகளை அவ்வரசர் உடுத்திக்கொள்வராம்; நவரத்தினங்கள் இழைக்கப்பட்ட மணி மகுடத்தைச் சூடிக்கொண்டு இருப்பராம். அவர்களுடையசிம்மா சனம் பொன்னால் செய்யப்பட்டு கண்களைக் கவரும் கவர்ச்சி யுடையதாக இருக்குமாம். அரசர் சிம்மாசனத்தில் அமர்ந்த வுடன், அவனுக்கு இரண்டு பக்கமும் இளம் பெண்கள் நின்ற வண்ணம் வெண்சாமரம் வீசுவராம். மற்றும், அழகிய மங்கையர் பலர், பல்வேறு பணிவிடைகள் செய்வராம்.

பாலியின் மன்னன், சந்தன மரத்தினால் செய்யப்பட்டதேரில் ஏறி, உலா வருவானாம். அப்பொழுது, ஊர்வலத்திற்கு முன்னால் சங்குகள் முழங்க முரசுகள் கொட்டப்படுமாம். இக்காட்சியைக் காணும் மக்கள் பேரார்வம் செய்வராம்.

இந்தக் குறிப்பு அக்காலத்திய பாலித்தீவின் செல்வச் செழிப்பைப் புரிந்துக்கொள்ள உதவுகிறது.

பத்தாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் பாலியை ஜாவா கைப்பற்றியது. தருமவம்சன் என்ற அரசன், பாலியைக்கைப் பற்றினான். பின்னர் உதயணன் என்ற அரசனும், அவனுடைய மனைவி மகேந்திரதத்தை என்ற 'குணப்பிரியை, தர்மபத்தினி'

என்ற அரசியும்ஜாவாவை ஆண்டுவந்தனர். அவர்களுக்குப் பிறகு ஏரலங்கன், பாலியில் தனது ஆதிக்கத்தை நிலைநாட்டினான். இதனால் பாலியின் பண்பாட்டு வரலாற்றில், புதியதொரு சகாப்தம் தொடங்கியது. இதுமுதல், பாலியில் இந்திய—சாவகப்பண்பாடு, தன்னுடைய முத்திரையை ஆழமாகப் பொறித்தது. இதனால், கி. பி. 1022-க்கு பிறகு, பாலியின் பண்பாடுபண்டைச் சாவகப் பண்பாடாகக் கருதும் நிலை உண்டாயிற்று.

கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டில், பாலி முற்றிலும் விடுதலை பெற்ற தனி நாடாகியது. இந்நூற்றாண்டில் தருமவமிச வர்த்தனன் எனப்படும் மரகதபங்கஜ ஸ்தனோதுங்க தேவன்(1022-26), அனக் உங்குசு (1050-78) சகலேந்திர கிரானன் (1098) என்னும் அரசர்கள் ஆண்டனர். சகலேந்திரன் பின்னர் சூராதீபன் என்ற பெயரோடு 1115 முதல் 1119வரை ஆண்டதாக அறிகிறோம். அவர்கள் அனைவரும் ஏரலங்கனுடைய மரபில் வந்தவர்களாக இருக்கலாம். மற்றும் ஜயசக்தி (1146-1150), ஜெய பங்கன்(1178-1181)போன்ற மன்னர்களும் பாலியை ஆண்டனர்.

பதின்மூன்றாம் நூற்றாண்டில் சகலேந்து (1201), அதிகுந்தி கேதனன், பிறகு அவனுடைய மகன் பரமேசுவர ஸ்ரீவீராமன் (1204) பரமேசுவர ஸ்ரீஹயாங்கு (1250) போன்ற மன்னர்கள் பாலியை ஆட்சிபுரிந்தனர். அவர்களுக்குப் பிறகு, பாலி மீண்டும் சாவாவினால் கைப்பற்றப்பட்டது. கிருதநாகரன் கி. பி. 1284 இல் பாலியின் மீதுபெரும் படையொன்றை அனுப்பி, அரசனை, சிறைப்படுத்திக் கொண்டு வருமாறு செய்தான். கிருதநாகரனின் இரங்கத்தக்க முடிவிற்குப் பிறகு, பாலி மீண்டும் சாவகத்தின் பிடியிலிருந்து விலகி, விடுதலை பெற்றது. ஐம்பதாண்டுகளுக்குப் பாலி தனியரசாகச் சிறப்புற்று விளங்கியது. சாவகப் படையெடுப்பிலிருந்து திரும்பிய கூப்ளாய்கானுடைய படைத் தலைவர்கள், பாலி அரசனிடமிருந்து பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பட்ட கடிதத்தையும், விலைமதிக்க முடியாத சிறந்த பொருள்களையும் பரிசாகப் பெற்றுச் சென்றனர்.

## மஜபாகிதத்தின் மேலாதிக்கம்

மஜபாகிதத்தில் தோன்றி வளர்ந்த பேரரசு, மீண்டும் பாலியில் தன் ஆதிக்கத்தை நிலைநாட்ட முயன்றது. தன்னுடைய நாட்டை அயலார் படையெடுப்பிலிருந்து காப்பாற்ற, பாலியின் அரசன் கடுமையாகப் போர்புரிந்தான். கி. பி. 1343-இல் ஜாவாவில் இருந்து அனுப்பப்பட்ட பெரும்படையை எதிர்க்க முடியாமல், பாலி சரணடைந்தது.

அன்று முதல் ஒன்றரை நூற்றாண்டு வரை, மஜபாகிதப் பேரரசின் ஓர் உட்பிரிவாகவே பாலி இருக்க நேர்ந்தது. கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில், மஜபாகித அரசன் இஸ்லாமியர்களை எதிர்த்துப் போரிட இயலாது, பாலியி லிருந்து தன் குடிமக்களிடத்து அடைக்கலம் புகுந்தான். அவ னோடு, தங்கள் பழைய சமயத்தையும் பண்பாட்டையும் காக்க விரும்பிய சாவக மக்கள் பலர், பாலியில் குடிபுகுந்தனர். இவ் வாறு சாவகத்தின் சரித்திரம், தனியரசாக விளங்கிய பாலியின் வரலாற்றோடு இணைந்தது. பாலி, சாவகப் பண்பாட்டின் வளர்ப்புப் பண்ணையாக மாறியது. சாவக இலக்கிய வாழ்க் கையின் மையமாகப் பாலி விளங்கலாயிற்று. இவ்வாறு பாலி, இந்திய-சாவகப் பண்பாட்டின் இறுதிக் கோட்டையாகத் திகழத் தொடங்கியது. இன்றும், அது அந்நிலையில் சீரும் சிறப்பும் பெற்று விளங்குவது குறிப்பிடத் தக்கதாகும். இந்திய-சாவகப் பண்பாடும், நாகரிகமும் மேலும், வளர்ச்சியுறுவதற்கு அது உதவிய தோடு அமையாமல், சாவகம் இஸ்லாமிய நாடாக மாறியத னால், இழந்துவிட்ட இந்துப் பண்பாட்டின் பல்வேறு இயல்பு களையும், கூறுகளையும் பாலி, போற்றிக் காத்து வருகிறது எனலாம்.

## தனியுரிமை அரசு

பாலியின் பிற்கால வரலாறு, மஜபாகிதப் பேரரசினுடைய வரலாற்றின் தொடர்ச்சியாகவே காணப்படுகிறது. மஜபாகித அரச மரபைச் சேர்ந்த ஓர் அரசன், பாலியின் தனிப்பெரும் தலைவனாக முடிசூட்டிக் கொண்டான். அவன் 'தேவா அகுங் கெடுட்' என்ற பட்டப்பெயரைச் சூட்டிக்கொண்டான். அவனு டைய ஆட்சிக் காலத்தில், நாட்டிலே அமைதியும் ஒழுங்கும் மீண்டும் நிலை நாட்டப்பட்டன. அவன் ஜெல்ஜலைத் (Gelgel) தலைநகராகக் கொண்டு, ஆட்சிபுரிந்தான். அவனுடைய மரபில் வந்தவர்கள், கி.பி. பதினேழாம் நூற்றாண்டின் இறுதிவரையில், அங்குத் தொடர்ந்து ஆட்சிபுரிந்து வந்தனர். பதினேழாம் நூற் றாண்டின் இறுதியில், அத்தலைநகரம் 'காராங்கிசமர்களால் அழிக்கப்பட்டது. பின்னர் தலைநகரம் குலுங்குங் (Klung-kung) கிற்கு மாற்றப்பட்டது.

ஜெல்ஜலை ஆண்ட மன்னர்களுள், படுரெங்காங்கு முதன் மையான இடத்தைப் பெறுகிறார். அவர் பதினாறாம் நூற் றாண்டின் பிற்பகுதியின் தொடக்கத்தில், பாலியை ஆட்சிபுரிந்து வந்தார். அவர் பாலி முழுவதையும் ஆண்டதோடு, சசாக்கு,

சம்பாவா, பேலம்பாங்கனின் பெரும்பகுதி ஆகிய தீவுகளிலும் தம்முடைய ஆட்சியைப் பரப்பியிருந்தார்.

படுரெங்காங்கு இறப்பினைத் தொடர்ந்து, பாலியில் குழப்பமும் கொந்தளிப்பும் உண்டாயின. அதற்கிடையே பாலி, தன்னுடைய பேரரசின் தீவுப்பகுதிகளை இழக்க நேர்ந்தது. பேலம்பாங்கு பாலிக்கு உரியதா, மத்ராவிற்கு உரியதா என்பது குறித்துப் போரும் பூசலும் உண்டாயின. இதன் விளைவாக மத்ராவின் மன்னர் கி. பி. 1639-இல் பாலியின்மீது படையெடுத்து வந்தார். படையெடுப்பு மத்ராவிற்குத் தோல்வியை அளித்தது. இதனால், பாலி தன்னுடைய உரிமையை இழக்காது பேலம்பாங்கினைப் பதினெட்டாம் நூற்றாண்டில் டச்சுக்காரர்கள் கைப்பற்றும் வரையில், தன்னுடைய ஆதிக்கத்திற்குட்பட்டதாக இருக்குமாறு, அதைப் பாலி, அடக்கி ஆண்டு வந்தது.

## அரசின் சிதைவு

பாலி பண்டைக்காலம் முதலே, பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு மாநிலமும் ஓர் ஆளுநருடைய தலைமையின்கீழ் ஆளப்பட்டு வந்தது. அவர்கள் பையப்பையத் தனியுரிமை வாய்ந்த அரசர்களாக மாறினர். அதன் விளைவாகப் பதினெட்டாம் நூற்றாண்டில், பாலித்தீவு ஒன்பது தனியரசுகளைக் கொண்ட நாடாக விளங்கலாயிற்று. டச்சுக்காரர்கள் அவற்றைக் கைப்பற்றுகின்ற வரையில், இந்நிலை நீடித்தது. டச்சுக்காரர்களால் அவ்வளவு எளிதில் பாலியின் அரசுகளைக் கைப்பற்ற முடியவில்லை. 1839-இல் முதன்முதலாகப் பாலி மக்கள் டச்சுக்காரர்களுடைய மேலாண்மையை ஏற்றுக்கொண்டனர். அதனுடைய குறுநில மன்னர்களின் விடுதலை வேட்கையை அடக்கியொடுக்குவதற்காகப் பலமுறை டச்சுகாரர்கள் படையெடுக்க வேண்டியதாயிற்று. மஜபாகித அரச மரபில் வந்த அரசர்களுள், இறுதியரசனாக விளங்கிய குலுங்குங்கை ஆண்ட 'தேவாகுங்கன்' 1908-ஆம் ஆண்டில் அயலாரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறுவதற்கு இறுதியாக அரும்பெரும் முயற்சி செய்தான். இந்து அரச மரபைச் சேர்ந்த அவ்விளவரசன், தன்னுரிமையைக் காப்பாற்றுவதற்கு உரிமைப்போர் தொடுத்துத் தோல்வியுற்றான். ஆயினும், பகைவராகிய டச்சுக்காரரிடம் அடைக்கலம் புக மறுத்து, வாளேந்திய கையுடன், தன் குடும்பத்தினரோடு அவன் உயிர்நீத்தான்.

கி. பி. 1911-இல், பாலியை டச்சுக்காரர்கள் தங்கள் பேரரசின் ஒரு பகுதியாகச் சேர்த்துக் கொண்டனர். இந்தியப்

பண்பாட்டின் நிலைக்களனாக விளங்கிய பாலியின் வீழ்ச்சிக்குப் பன்னெடுங்காலத்திற்கு முன்பே இந்தியா ஆங்கிலேயருக்கு அடிமையாகி அல்லற்பட்டது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். எனினும் பாலி அன்றுபோல் இன்றும் இந்திய-சாவக நாகரிகப் பண்பாட்டின் கோட்டையாகச் சிறப்புற்று விளங்குவது வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த செய்தியாகும்.

## 7. 4. 2.

## நாகரிகம்

### சமுதாய நிலை

பாலித்தீவின் மக்கள், இன்றுவரை இந்துக்களாகவே வாழ்ந்து வருகின்றனர். அத்தீவின் சமுதாய அமைப்புப் பெரிதும் இந்தியாவின் சமுதாய அமைப்பினைப் பின்பற்றியதாகவே காணப்படுகிறது. நால்வகை சாதிப்பிரிவு இன்றும், அங்கு நிலை பெற்றிருக்கின்றது. அங்குள்ள பார்ப்பனர் இருவகையினராக உள்ளனர். அவர்கள் 'சைவப் பார்ப்பனர்' என்றும், 'பௌத்தப் பார்ப்பனர்' என்றும் அழைக்கப்படுகின்றனர். முன்னவர் சிவனை வழிபடுவராவர்; புத்தரை வணங்குகின்றவர் பௌத்த பார்ப்பனராவர். இந்திய நாட்டில் இருப்பதைப் போன்றச் சாதிக்கட்டுப்பாடும், வெறியும் அந்நாட்டில் அவ்வளவு கடுமையாக இல்லை. பார்ப்பன இனத்தார், பிற இனத்துப் பெண்களைத் தங்கு தடையின்றி நெடுங்காலமாகத் தொடர்ந்து திருமணம் செய்துகொண்டு வந்தனர். இதன் விளைவாகப் பாலியின் சைவப் பார்ப்பனரிடை ஐந்துவகைப் பிரிவினர் நாளடைவில் தோன்றினர். கலப்பு மணத்தின் பயனாகப் பிறக்கும் குழந்தைகள், அவர்தம் தந்தையின் சாதியைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். சத்திரியரில் ஐந்து பிரிவுகளும் வாணிகரில் மூன்று பிரிவுகளும் இருந்து வருகின்றன. பாலியின் சமுதாயத்தில், கடைநிலையில் உள்ளவர் சூத்திரர்களாவர். தீண்டத் தகாதோர் என்ற வகுப்பு, பாலியின் சமுதாய அமைப்பில் இன்றுவரை இல்லை. ஆனால், அடிமைகள் உண்டு. அவர்கள் பெரும்பாலும் அன்புடன் நடத்தப்பெறுகின்றனர்.

பாலியின் அரச மரபைச் சேர்ந்தவர்கள், இன்றும்கூட சத்திரியராகவோ, வைசியராகவோ இருந்தாலும், அவர்கள் பிராமணர்களைவிட, உயர்ந்தவர்களாகவே போற்றப்படுகின்றனர். பிராமணப்பெண்ணைச் சத்திரியன் திருமணம் செய்துகொள்ளக் கூடாது என்ற விதி இன்றும் கொள்கை அளவில இருந்து வருகிறது. எனினும், நடைமுறையில், அரசிளங்குமரர் விரும்பும் பார்ப்பனப் பெண்ணைச் சாதியிலிருந்து வெளியேற்றிப் பின்னர் திருமணம் செய்துகொள்ளுவது பெருவழக்காகக் காணப்படுகிறது.

பாலியில் தொழில்களை அடிப்படையாகக் கொண்ட சாதிப்பாகுபாடு இல்லை. அந்நாட்டில் பயிர்த்தொழில் புரிவோர், பல சாதியினராகக் காணப்படுகின்றனர். ஆயினும், குற்றவாளிகளுக்கு அவரவர் சாதிக்குத் தக்கவாறு, தண்டனை அளிக்கப்படுகின்றது. அந்நாட்டின் திருமண முறையில் கீழ்ச்சாதிப் பெண் மேல்சாதி ஆடவனை மணந்துகொள்ளலாம். மனு முதலிய வடமொழி தரும சாத்திர நூலார் இதனைப் 'பிரதிலோமம்' என்பர். ஆனால், மேல் சாதிப்பெண், கீழ்ச்சாதி ஆடவனை மணம்புரிந்து கொள்ளுவது தவறு என்று கருதப்பட்டது. இதனை 'அனுலோமம்' என்பர். எனினும், நடைமுறையில் இச்சட்டம் அல்லது வழக்காறு இங்குப் புறக்கணிக்கப்படுவதுமுண்டு.

கணவன் இறந்துவிட்டால், மகளிர் உடன்கட்டை ஏறும் வழக்கமும் பாலியில் பழக்கத்தில் இருந்து வந்தது. ஒவ்வொரு சாதிக்குமேற்ப இழவு காக்கும் நாட்களின் எண்ணிக்கை பாலி மக்களிடையே வேறுபடுகிறது. விரிவான சடங்கு முறைகளுடன் இறந்தோரின் உடல்கள், எரிக்கப்பட்டன. பின்னர் எலும்புகளைக் கடலில் விடும் வழக்கமும், அந்நாட்டில் இருந்து வருகிறது.

பாலித்தீவில் வாழும் இக்கால இந்துக்கள், "சாவக மக்களைவிட மிகுந்த ஆற்றலும், உயரமும், உள்ளவுரனும் வாய்ந்தவர்கள்; கரவு அற்றவர்கள்; நேர்மையைக் கடைப்பிடித்து ஒழுகுபவர்; புலனுகர் இன்ப வாழ்க்கையில் நாட்டம் பெரிதும் உடையவர்கள்; நல்ல உள்ளம் படைத்தவர்கள்; உழைப்பாளிகள்; ஒழுங்கை நாடுபவர்கள்; மரணத்தைப் பொருட்படுத்தாத, கரும வீரர்கள்; சேவல் போர், ஆட்டுக்கிடாப்போர் முதலிய பந்தய விளையாட்டுகளில் ஆர்வம் கொண்டவர்களாவர்"[1]

---

1. E. S. DE. KLERK; History of the Netherlands East Indies, Vol. I (1938), P. 119.

### சமய நிலை

பாலியின் சமய வரலாற்றை இருபிரிவுகளாகப் பிரித்துக் கூறலாம். கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டு வரை, பாலியின் சமயத்தில் இந்தியாவின் செல்வாக்கைக் காணுகிறோம். இதனைச் சமய வரலாற்றின் முற்காலம் எனலாம். இதன் பிறகு, சாவகத்தின் செல்வாக்குப் பாலியின் சமய வரலாற்றில் சிறப்பிடம் பெறுகிறது. இதைப் பிற்காலம் எனலாம். ஆயினும், இந்து சமயமே, பாலியின் சமயமாக இருந்து வருகிறது.

பாலியின் இலக்கியத்திலிருந்தும், தொல்பொருள் சின்னங்களிலிருந்தும் அறியப்படுகின்ற சமயத்தைப் பற்றிய செய்திகள் இன்றைய பாலியின் சமய நம்பிக்கைகளோடும், பழக்க வழக்கங்களோடும் பெரிதும் ஒத்திருக்கின்றன. பாலியின் மக்களுடைய வாழ்க்கையில், சமயம் முதன்மையான இடத்தைப் பெற்றிருக்கிறது. வீட்டு வழிபாடு, பொதுமன்ற வழிபாடு என்ற இரண்டு பிரிவுகளைச் சமய வழிபாடு கொண்டுள்ளது. வீட்டு வழிபாடு குடும்ப வழிபாடாகவும், பொது மன்ற வழிபாடு கூட்டு வழிபாடாகவும் இருந்து வருகிறது எனலாம். ஒவ்வொரு வீட்டிலும், வழிபடு தெய்வத்திற்கு உரிய திருவிடங்களாகிய பூசை அறையோ, மாடங்களோ உள்ளன. வழிபடு தெய்வத்திற்கு மலர்தூவி, தூபதீப ஆராதனை செய்து குடும்பத்தைச் சேர்ந்த மக்கள் வழிபாடு செய்கின்றனர். தெய்வத்திற்குப் படைக்கும் உணவுப் பொருள்களை ஒவ்வாரு குடும்பத்தையும் சேர்ந்த பெண்கள் தூய்மையாகச் செய்து கொண்டு வந்து அளிக்கின்றனர்.

பொதுமன்ற வழிபாட்டிற்கு ஒவ்வொரு மாவட்டத்திலும் மூன்று அல்லது நான்கு திருக்கோயில்கள் உள்ளன. நாள் வழிபாட்டோடு, ஆண்டில் குறிப்பிட்ட பருவங்களிலும், நாட்களிலும் சிறப்புமிக்க திருவிழாக்கள் நடத்தப்படுகின்றன. பௌர்ணமித் திருநாள் 'மெஞ்சபி' என்ற பெயரால் கொண்டாடப்படுகிறது. தீய சக்திகளை விரட்டுவதற்கு இவ்விழா எடுக்கப்படுகின்றது. உழவுத் தொழிலுக்கு உரியவளாகக் கருதப்படும் திருமகளுக்குச் செய்யும் திருவிழா 'உசபா' (உற்சவம்) என்று கூறப்படுகிறது. புத்தகங்களையும் நூற்களையும் போற்றிச் செய்யப்படும் திருவிழாவிற்கு 'சரசேவதி (சரசுவதி பூஜை) என்ற பெயர் வழங்குகிறது. ஆயுதபூஜைக்குத் (தும்பக்-லண்டப்) என்ற பெயரும் வழங்கிவருகிறது. இவை அல்லாமல், தெய்வங்களின் பிறந்த நாட்களும், ஆண்டு விழாக்களும் நாட்டில் பசியும், பகையும் நீங்கி, வசியும் வளனும் சுரக்க சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன.

பாலித்தீவின் மக்கள் தெய்வங்களையும், இறந்துவிட்ட தங்கள் மூதாதையரையும், பூதங்கள், பேய்கள் போன்ற தீய சக்திகளையும் போற்றி வழிபடுகின்றனர். இவற்றின் அருளைப் பெறப் பல சடங்குகளை மக்கள் செய்ய வேண்டும் என்பது பாலித் தீவினரின் சமயக் கொள்கையாகும். வீட்டிலே நடை பெறும் வழிபாட்டு முறையில் 'சூரிய சேவனம்' சிறப்பாகப் போற்றப்படுகிறது. 'சூரிய சேவனம்' என்பதற்குச் 'சிவனாகக் கருதப்படும் சூரியனை வணங்குதல்' என்பது பொருளாகும்; சிவ வழிபாடு சிறப்பாகப் போற்றப்படுகிறது.

இந்தியத் தெய்வங்களான விநாயகர், இந்திரன், திருமால், கண்ணன், சூரியன், கருடன், சிவபெருமான் (சிறப்பாக லிங்க வடிவம்), துர்க்கை போன்றவர்கள் பாலியில் வழிபடப்பட்டு வருகின்றனர். அவர்களோடு இராமாயண, மகாபாரத வீரர் களும் போற்றப்படுகின்றனர். இத்தெய்வங்களுக்குப் பல விழாக்கள் எடுக்கப்படுகின்றன. துர்க்கை கோயில்களில், துர்க்கையின் சிலையோடு, அவளுடைய வாயில் காவலனான 'கல்கி'யின் சிலையும் வழிபாடு செய்யப்படுகின்றன. இக்கோயில் கள் சிலவற்றில் 'பூசன்' எனப்படும் தெய்வத்தின் சிலைகள் உள்ளன. 'பூசன்' என்பது 'போதிசத்துவர்' என்ற சொல்லின் சீனமொழித் திரிபாகும். இதனால், சீனாவின் செல்வாக்குப் பாலியில் இடம்பெற்றுள்ளமை புலனாகிறது.

பாலியில் சைவ சமயத்தோடு, பௌத்த சமயமும் ஒன்றாக இணைக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. சிவபெருமானின் இளவலாகத் - தம்பியாகப் புத்தர் அங்குப் போற்றப்படுகிறார். திருமால், பிரமன் ஆகிய இருவரும் சிவபெருமானின் வேறுபட்ட மூர்த்தங்களாகவே கருதப்படுகின்றனர்.

ஒருவன் பிறந்தது முதல், இறக்கும் வரையில் செய்ய வேண்டிய செயல் முறைகளையும், ஒழுகவேண்டிய ஒழுகலாறு களையும் பற்றி இந்து கிருகய சூத்திரங்கள் விதித்துள்ள நெறி முறைகள்யாவும், பாலியில் பின்பற்றப்படுகின்றன. வேதத்தின் மொழி பெயர்ப்பு பாலித்தீவின் மக்களால் போற்றப்பட்டு வருகிறது. ஆனால், உண்மையில் அவை தாந்திரிகச் சார்புடைய மந்திரங்களாக உள்ளன. காயத்திரி மந்திரத்தின் சிதைந்த வடிவமே, பாலியில் போற்றப்படும் வேதத்தின் உண்மையான பகுதியாகும்.

பாலியில் எச்சாதியினரும், மகளிரும் குருமார்களாக முடியும். ஆனால், சம்ஸ்கிருதத்திலும், பழைய பாலி மொழி

யிலும் உள்ள சமய நூற்களை, ஓர் ஆசிரியரின் கீழ், அவர்கள் பயின்றும், விதிக்கப்பட்டுள்ள பயிற்சிகளைப் பெற்றிருக்கவும் வேண்டும். புரோகிதர்கள், 'பதாண்டர்' என்று அழைக்கப்படுகின்றனர். படையல் பொருள்களில் ஒரு பகுதி, புரோகிதருக்குக் கையுறையாகக் கொடுக்கப்படுகிறது. புனிதச் சடங்குகளில் பயன்படுத்தப்படும் நீரினைத் 'தீர்த்தமாக' மக்கள் மிகுந்த ஆர்வத்தோடு புரோகிதரிடமிருந்து பெற்றுச் செல்லுகின்றனர். புரோகிதர்கள் பெரும்பாலும் ஆசிரியராகவும், சோதிடத்தில் வல்ல அறிஞராகவும் விளங்குகின்றனர்.

சுருங்கச் சொல்லுவதென்றால், பாலித்தீவில் வைதிக இந்து சமயம், தென்னிந்தியப் பண்புகள் நிறைந்த பக்தி நெறியாகத் திகழ்கிறது எனலாம்.

### தமிழ்க் கல்வெட்டு

பாலியின் கிழக்குக் கரையோரத்தில், சங்கு - பெட்ராக்கு எனும் இடத்தில் ஒரு தமிழ்க்கல்வெட்டு கிடைத்து இருக்கிறது. அங்கு எழுப்பப்பட்ட சிவன் கோயிலையும், அதில் இடம்பெற்றுள்ளமுகலிங்கத்தையும் அது குறிப்பிடுகிறது.

### பௌத்த சமயச் சிலைகள்

இங்குத் தாமரை மலரில் வீற்றிருக்கும் தாரையின் சிலை ஒன்று கிடைத்து இருக்கிறது.

சம்பாஸ் எனும் இடத்தில், நின்ற கோலத்தில் புத்தர் சிலையும், போதிசத்துவர் வடிவில், அருளொழுகும் புத்தர் சிலை ஒன்றும் கிடைத்துள்ளன. இவையாவும் மஜபாகிதப் பேரரசின் ஆதிக்கத்திற்குப் பாலி உட்பட்டிருந்த காலத்தில், படைக்கப்பட்ட சிலைகளாக இருத்தல் கூடும்.

## 7. 4. 3.

## கலைச் செல்வம்

பாலித்தீவின் கலைப்பண்புகள், கி. பி. பத்தாம் நூற்றாண்டு வரை இந்தியக் கலை மரபை அடியொற்றி உருவாக்கப்பட்டன வாகும். அதன்பிறகு, 'இந்திய - சாவகப் பண்புகள்' பாலியில் சிறப்பிடம் பெற்றன. மெல்ல, மெல்ல பாலித்தீவின் கலைக் கூறுகள் தலையெடுக்கத் தொடங்கி, வளர்ச்சியுறலாயிற்று.

பாலியில், கெசிமன் என்னும் இடத்தில் உள்ள கோயில், காலத்தால் பழமையானது. அதனை, 'மேரு' என்று அழைக் கின்றனர். நீண்ட சதுர வடிவில் அமைந்த கருவறைக்கு மேலே குறுகிச் செல்லும் விமானம் ஒன்று பத்து மாடங்களை உடையதாக, விளங்குகிறது. ஒவ்வொரு மாடத்தின் மேலும் நான்கு பக்கங்களிலும் சரிவாகப் பட்டை வடிவில் ஒரு வகையான கூரை அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பட்டை வடிவக் கூரைகளில், எளிமையான முறையில் சிற்ப வேலைப்பாடு செய்யப் பட்டு இருக்கிறது. பத்தாவது மாடத்திற்கு மேல் உள்ள கூரையின்மீது, கலசம் ஒன்று அழகுற அமைக்கப்பட்டிருக்கிறது. தொலைவிலிருந்து நோக்குகின்றபொழுது, அக்கோயில் தேர் வடிவில் அமைந்த தொரு குன்றினைப் போல் காணப்படுகிறது. சிவபெருமான் உறைகின்ற இடம் 'மேருமலை' என்பது இந்துக்கள் யாவரும் அறிந்த உண்மை. மேரு மலையினைப் போன்று, உயர்ந்த வடிவில் அமைக்கப்பட்ட தஞ்சைப் பெரிய கோயில் விமானத்திற்கு 'தட்சணமேரு' என்று இராசராசன் பெயரிட்டமை இங்கு நினைவுகூர்தற்குரியதாகும். அதைப் போன்று, பாலியிலுள்ள சிவன் கோயில், 'மேரு' என்றே அழைக்கப்படுவது கருதத்தக்கதாகும். இக்கோயிலின் வாயிலில்

இரு பக்கச் சுவர்களிலும் தெய்வத் திருமேனிகளின் சிலைகள் சில படிமேடையின்மீது அமைக்கப்பட்டிருக்கின்றன. அவை இந்திய - சாவகக் கலைப் பண்புகளின் இணைப்பினை அடிப் படையாகக் கொண்டுள்ளன.

இதைப்போன்றே, பெஸாக்கிக்(Besakih)கோயிலும் காணப் படுகிறது. கோயிலின் மாடங்களின் மீதுள்ள கூரைகள் மூங்கில் அல்லது மரத்தால் அமைக்கப்பட்டு, வழலினால் வேயப் பட்டுள்ளன. பாலியிலுள்ள சிங்கராசன் கோயில் சிறப்புடையது. கற்களால் கட்டப்பட்ட இக்கோயில், ஒப்பற்ற சிற்ப வேலைப் பாடுகளுடையதாய் விளங்குகிறது. இக்கோயிலின் தலை வாயிலில் உள்ள வாயிற்படியும், கோபுரமும் அழகிய சிற்ப வேலைப்பாடுடன் நேர்த்தியாக அமைந்துள்ளன. வாயிற் படிகளின் இருமருங்கும் இரண்டு அழகிய சிங்கத்தின் தலைகள் அணி செய்கின்றன. வாயிற்படியிலுள்ள தூணின் அமைப்பும், மதில் சுவரின் அமைப்பும் எளிமையும், எழிலும்நிறைந்து காணப்படுகின்றன. கோயில் விமானம் ஐந்து மாடங்களை உடையதாகும். அவை அழகிய அணிகலன்களைப் போன்ற வேலைப் பாடுகளைக் கொண்டுள்ளன. கற்களைச் செதுக்கியும், இழைத்தும் கவர்ச்சிமிக்க பூ வேலைப்பாடும், கோலங்களும் செய்யப்பட்டுள்ளன. அவை இந்திய-சாவகக் கலைத்தொடர்பு உடையனவாக உள்ளன.

## சிற்பக்கலை

பாலித்தீவின் சிற்பக்கலை பேரளவிற்கு அணியலங்கார இயல்புடையதாகும். ஆழந்த வளைவுகள், இயல்பான தன்மை யோடு, பெருமிதத் தோற்றத்தை உடையனவாகச் செதுக்கப் பட்டுள்ளன. அவை, நாடக நயம் வாய்ந்த வடிவத் தோற்றங் களையும் மூலைகளையும் கொண்டனவாக அமைக்கப் பட்டுள்ளன.

வடிவழகும், நேர்த்தியும் வாய்ந்தனவாக அப்புடைப்புச் சிற்பங்களும், குடைவுச் சிற்பங்களும் அங்குள்ள கோயில்களில் இடம் பெற்றுள்ளன. அவை இந்தியப் புராண, இதிகாச கதைகளைச் சித்திரிப்பனவாக உள்ளன.

இங்குள்ள திருமாலின் கற்சிலை, கூருருளை முடியோடு கூடிய தமிழகத்தின் பல்லவர் காலத்திய மகாவிஷ்ணு சிலைகளையே நினைவு படுத்துகினறன.

மற்றும், மரச்சிலைகள், உயிர்த்துடிப்பு உடையனவாகச் செய்யப்பட்டுள்ளன. உமா, திருமகள், கண்ணன், அருச்சுனன்

சிலைகள் பண்டை வனப்பும், புதுமைப் பொலிவும் உடையன வாக உள்ளன.

தாய்த் தெய்வங்களின் வழிபாட்டு வடிவங்கள் மிகப் பலவாகக் கிடைத்துள்ளன. அவற்றில் பெண்மையின் மென்மையும், அருளொழுகும் பார்வையும், அனைத்துயிர் களையும் போற்றிக் காக்கும் பண்பும் நன்கு வெளிப்படும் வகையில் செய்யப்பட்டுள்ளன, இவற்றின் அமைப்பின் அழகும் செய்முறை நேர்த்தியும் பண்டைத் தமிழகத் தெய்வத் திரு மேனிகளையே நினைவுபடுத்துகின்றன.[2]

பாலியின் தெற்குப் பகுதியில், குன்று ஒன்றில் உள்ள குகையில் எட்டுக்கைகளையுடைய சிவபெருமானின் நடனக் கோலம் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. இந்த வடிவம், சிவபெருமானுடைய 'ஊர்த்துவ தாண்டவம்' எனும் ஊழிக் கூத்தைச் சித்திரிப்பதாகும். தென்கிழக்கு ஆசிய நாடுகளில் நடராசரின், ஊழிக் கூத்தே சிறப்பிடம் பெற்று இருக்கிறது. நடராசரின் ஆனந்தக் கூத்து, கி. பி. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலேயே, தமிழகத்தில் வழிபாட்டிற்கு வந்ததை அறிகிறோம். எனவே, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு அளவில் வாழ்ந்த காரைக்கால் அம்மையார் பாடியுள்ள ஊர்த்துவ தாண்டவ திருக்கோலமே, அவ்வம்மை யார் வழிபாட்டு நெறியோடு, தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பரவிஇருக்க வேண்டும் எனும் எண்ணம் எழுகிறது.

## ஓவியக் கலை

தொன்றுதொட்டு, வரும் இந்நாட்டு கலைமரபுகளுள் ஒன்று ஓவியக்கலை. மஜபாகிதப் பேரரசு காலத்திற்கு முன்பிருந்தே, பாலியில் எண்ணெய் ஓவியங்கள் தனிச்சிறப்புடன் வரையப் பட்டுவந்தன. புராண, இதிகாசக் கதை நிகழ்ச்சிகள் அவ் வோவியங்களில் சிறப்பிடம் பெற்றன. அவற்றோடு, இயற்கைக் காட்சிகள் இனிய இடத்தைப் பெற்றன.

அவ்வோவியங்கள் பெரிய வடிவில் கவர்ச்சியும், பொலிவும் மிக்க வகையில் வரையப்பட்டுள்ளன. பாலியில், இன்றும் ஓவியக் கலை தனிச் சிறப்புடையதாகத் திகழ்கிறது. அங்குள்ள ஓவியக் கலைஞர்கள், தங்களுடைய சமுதாயத்தின் மரபைவிட, தங்களுக்கே என்றும் உரிமையுடைய தனி மரபினை வெளியிடு

2 Zimmer, H, The Art of Indian Asia, Vol. I; P. 257.

வதில் வல்லவர்களாக விளங்குகின்றனர். மேலும், தங்களுடைய ஓவியங்களுக்கான கருப்பொருள்களைத் தங்களுடைய பண் பாட்டுப் பாரம்பரியத்திலிருந்து அவர்கள் எடுத்துக் கொள்ளுவ தில்லை. மாறாகத் தங்களைச் சுற்றியுள்ள வாழ்க்கைச் சூழலி லிருந்தே தேர்ந்தெடுத்துக் கொள்ளுகின்றனர். அதே சமயத்தில், கிராமப் புறங்களில் பழைய, நாட்டுக்கலை மரபு இன்னும் வளமும் வனப்பும் பெற்றுத் திகழ்கிறது. ரெடிங்கின் பாலிக் காட்சி ஓவியம் நாட்டுப்புற வாழ்க்கையை மிகவும் உயிர்க்களை யுடன் பொலிவுறச் செய்கிறது. பாலியின் நடனம் பற்றிய சில எழில்மிகு ஓவியங்கள் மிகவும் சிறப்பு வாய்ந்தனவாக உள்ளன.

## ஆடல்கலை

பாலியின் ஆடல்கலை உலகப் புகழ் வாய்ந்தது. ஆடல்கலை சமயத்தோடு நெருங்கிய தொடர்பு உடையதாக இருந்தது. பாலியின் ஆடல்கலையில் இந்தியாவின் செல்வாக்கு மட்டுமின்றி சீனத்தின் செல்வாக்கும் பண்டைக் காலத்திலேயே படிந்துள் ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

பாலி ஆடல்கலை அரசவைச் சார்பு உடையதன்று. அது பாலி மக்களோடு ஒன்றிப்போய்விட்ட ஆடல்; சமுதாயத்தில் உயர்ந்தவர் முதல் தாழ்ந்தவர் வரை ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையோடும் பிரிக்க முடியாதவாறு இணைந்தும் பிணைந்தும் விட்ட ஆடல் அது. பாலியில் எந்த வகையான விழா வும், விடுமுறையும் ஆடலின்றிக் கழிவதில்லை. சிறு பருவம் முதலே குழந்தைப் பாலோடு ஆடல் கலையும் ஊட்டி வளர்க்கப் படுகிறது.

இந்தோனேசிய ஆடல் கலைகள் எல்லாவற்றையும்விட வெளி உலகிற்கு நன்கு தெரிந்த ஆடல் நெறி, பாலியின் ஆடற் கலையேயாகும். பாலி ஆடல்களில் மிகவும் சிறப்புடையது 'லெகாங்கு' ஆடலாகும். இரண்டு சிறு பெண்கள் இந்த ஆடலில் முக்கிய பங்கு பெறுகின்றனர். ஓரளவிற்கு இதில் பரத நாட்டியத்தின் சாயல் படிந்திருப்பதை இன்றும் நாம் காணலாம்.

'கெம்புவார்' என்பது மற்றோர் வகை ஆடல். ஒரு பரந்த வெளியில் முக்கோணத்திற்குள், மூன்று பக்கங்களிலும் இசைக்குழு முழங்க ஓர் ஆள் ஆடும் நாட்டியம் 'கெம்புவார்' ஆடலாகும். லெகாங்கு, கெம்புவார் ஆடல் கலைகள், விரல்கள், கைகள், தலை, கழுத்து, தோள்கள் முதலியவற்றின் நுட்பமான திறமையான அசைவுகளைக் கொண்டது. அங்க அசைவுகளின் மூலமும் முத் திரைகள் மூலமும், முகபாவனைகள் மூலமும் பலவகையான

மெய்ப்பாடுகள் பரத நாட்டியத்தைப் போன்று வெளிப்படுத்தப் படுகின்றன. இவற்றில் உணர்ச்சித் துடிப்பும் உயிர்க்களையும் பின்னிப் பிணைந்துள்ளதோடு, பின்னணி இசை கவர்ச்சிமிக்க ஆற்றல் ஊட்டுகிறது எனலாம்.

இவற்றிற்கு முற்றிலும் மாறானது 'கெச்சா' எனும் 'குரங்கு' ஆடலாகும். இராமாயணத்தில் இராமர் ஒரு பெரிய குரங்குப் படையைக் கொண்டு இராவணனுடைய பேரரசைத் தாக்குவதை விளக்கிக் காட்டும் குழு ஆடலே இக் 'கெச்சா' ஆடலாகும். பாலி மக்களைப் பொறுத்தவரையில் ஆடல் கலையைச் சமயத்திலிருந்து பிரிக்க முடியாதது; சமயமோ அவர்கள் வாழ்க்கையிலிருந்து பிரிக்க முடியாதது என்னும் நிலையில் இருந்து வருகிறது.

பாலியின் ஆடல்கள் ஒவ்வொன்றும் அழகோடு திகழ்கிறது. மக்கள் வாழ்க்கையின் ஒரு தேவையை அவை நிறைவு செய்கின்றன; பாலியின் கலையுள்ளத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. அவை கண்களுக்கும் செவிகளுக்கும் மட்டும் விருந்தாக அமையவில்லை; அவற்றை நோக்குபவர்களின் உயிர்நிலைக்கும் கூட விருந்தாக அமைகிறது. இந்த ஆடல்களைப் பார்ப்பவர்கள் ஒரு பரந்த விரிந்ததும் சிறப்பு மிக்கதும் அழிவில்லாததுமான ஓர் உலகிற்குச் சென்றுவிட்ட ஓர் உணர்வைப் பெற்று மெய் மறந்து விடுகின்றனர்.

## இலக்கியம்

மஜபாகிதப் பேரரசு காலத்தில் சாவக இலக்கியத்தின் பெரும்பகுதி, பாலியில் தோன்றியது. பாலித்தீவின் தனிப்பண்புகள் வாய்ந்த உள்நாட்டு இலக்கியமும் வளர்ச்சியுற்றது.

## 7. 4. 4.

## பாலியின் பண்பாடு

ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு மேற்பட்ட வரலாற்றை உடையது பாலித்தீவு என்பதைக் கண்டோம். அது, இந்து சமயப் பழக்க வழக்கங்களின் ஒரு கோட்டையாக இன்றும் விளங்குகிறது. வரலாற்றுச் சிறப்பு வாய்ந்ததும், இயற்கை எழில் வாய்ந்ததுமான சுற்றுலா நாடாக இன்றி, அது சிறப்புற்று விளங்குகிறது.

இரண்டாவது உலகப்போருக்குப் பிறகு டச்சுக்காரர் மேலாண்மையை உதறித்தள்ளிய சுதந்திர நாடாக உள்ள பாலியில், அமெரிக்கப் பண்பாட்டின் தாக்கம் பெருகிவருகிறது. எனினும், அந்நாட்டு மக்கள், பழமைப் பற்றாளர்களாகவே இருந்து வருகின்றனர். இதனால், இன்றும் பாலித்தீவு, இந்தியப் பண்பாட்டின் வளர்ப்புப் பண்ணையாகவே இருந்து வருகிறது.

### தமிழ்க் குடியேறிகள்

தமிழ் நாட்டில் இருந்து குடியேறிய தமிழர்கள், மூன்று நான்கு தலைமுறைகளுக்கு மேலாக அங்கு வாழ்ந்து வருகின்றனர்.

பாலித்தீவின் பெரும்பகுதி காடுகளும், மலைகளும் அடர்ந்த கிராமப் பகுதியாகவே உள்ளது. அங்கெல்லாம் நெல்லோடு, தோட்டப் பயிர்கள் பயிரிடப்படுகின்றன.

### நகரங்கள்

'தென்பசார்' எனும் இன்றைய தலைநகர், மேற்கு நாட்டு வாழ்க்கை முறையைப் பிரதிபலிக்கிறது. உலகப் புகழ் வாய்ந்த சுற்றுலா நகரமாக இது விளங்குகிறது. இதற்கு அடுத்து, கிந்தாமணி எனும் நகரம் சிறப்புற்று விளங்குகிறது. 'சிந்தாமணி' எனும் தமிழ்ப் பெயரே, 'கிந்தாமணி' என்று திரிந்து வழங்குவதாகக் கூறுவர். இத்திரிபு திராவிட மொழிகளுள் பெருவழக்கு. தமிழில் வழங்கும் 'செம்பு' எனும் சொல், தெலுங்கு மொழியில் 'கெம்பு' (செந்நிறம்) எனத் திரிந்து வழங்கி வருவது இங்குக் கருதத்தக்கதாகும்.

'சிங்கராஜா' எனும் நகரம், பாலித்தீவின் பண்டைத் தலைநகரம். இது, பழைய பொலிவினை இழந்து, ஆனால், பழைய நினைவுச் சின்னங்களின் கலைக்கூடமாக விளங்கி வருகிறது.

கெச்செக்கு எனும் நகரம், சிறப்புமிகு துறைமுகப்பட்டினமாகும்.

### வீர வரலாறு

இஸ்லாமியரின் தலையீட்டை எதிர்த்துப் பாலி மக்கள் கி. பி .பதின்மூன்றாம் நூற்றாண்டில் கடும்போர் புரிந்துள்ளனர். இப்போர்களைச் சித்திரிக்கும் வீரகாவியமாக 'உஸானா பாலியவிதா' எனும் பாலிமொழிக் கதைப்பாடல் போற்றப்படுகிறது.

### பழக்க வழக்கங்கள்

மகாபாரதத்தில் வரும் மாவீரர்களைப் போல வாழ வேண்டும் எனும் குறிக்கோளை உடையவர்களாக இந்நாட்டு மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இதனால், பாரத வீரர்களின் பெயர்களும், பெண்மணிகளின் பெயர்களும், இக்கால மக்களுக்குப் பெயர்களாக வழங்கப்படுகின்றன. மற்றும், இராமன், சீதை, இலட்சுமணன், ஆஞ்சநேயன், இராவணன் என்னும் பெயர்களை உடைய மக்களையும் இத்தீவில் காணலாம்.

இந்திய மக்களைப் போன்றே, நன்மை—தீமை, பாவ – புண்ணியம் போன்றவற்றையும் அவர்கள் நம்புகின்றனர். இதன் வழி ஊழ்வினைப் பயனிலும், மறுபிறப்புக் கொள்கையிலும் அசைக்க இயலாத நம்பிக்கையுடன் வாழ்ந்து வருகின்றனர்.

இறந்தோர்க்குச் செய்யும் ஈமக் கடன்களிலும், ஆண்டு தோறும் நினைவுநாள் (சிரார்த்தம்) சடங்குகள் செய்வதிலும்

அவர்கள் பேரீடுபாடு கொண்டுள்ளனர். இறந்தோரை எரிப்பதே அவர்களுடைய வழக்கமாகும்.

ஆடவர் சந்தனப் பொட்டு வைத்துக் கொள்ளுவர்; மகளிர் திலகம் இடுவதை ஒரு புனிதக் கடமையாகப் போற்றி வருகின்றனர்.

பாலித் தீவில், 'தீண்டாமை' எனும் கொடிய நோய் கிடையாது. ஆனால், ஒவ்வொரு சாதியாரும் வெவ்வேறான பாலியின் கிளைமொழிகளில் பேசும் வழக்கம் இருந்தது. இப்பொழுது தேசிய மொழியான இந்தோனேசிய மொழியையே பாலித்தீவினர் பெரிதும் பயன்படுத்துகின்றனர். தத்தம் வீடுகளிலும், உற்றார் உறவினர்களிடமும் மட்டுமே பழைய கிளை மொழிகளில் பேசிவருகின்றனர்.

பாலித் தீவில் ஈராயிரத்திற்கு மேற்பட்ட தமிழர்கள் வாழ்ந்து வருகின்றனர். அவர்களுள் பெரும்பாலோர், தமிழ் நாட்டு முஸ்லீம் பெருமக்களாவர். இராமநாதபுரம் மாவட்டத்தில் இருந்தும், மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களில் இருந்தும், ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் அங்குக் குடியேறிய தமிழ் மக்களின் வழிவந்தோர் வாழ்ந்து வருகின்றனர். தமிழையே வீட்டு மொழியாகப் பயன்படுத்துகின்றனர். தமிழ்ப் பத்திரிகைகளும், வார மாத இதழ்களும் அவர்களுடைய தமிழறிவை வளர்த்து வருகின்றன.

தமிழ்த் திரைப்படங்களைப் பார்ப்பதில் பேரார்வம் காட்டுகின்றனர். தமிழ்த் திரைப்படம் பார்ப்பதற்காக ஆறு மாதத்திற்கு ஒரு முறையாகிலும், சுமத்திராவிலுள்ள 'மேடான்' நகருக்கு இளைஞர்கள் சென்றுவருகிறார்கள்.

பத்து ஆண்டிற்கு ஒரு முறையாகிலும் தமிழ் நாட்டிற்குச் சென்று வரவேண்டும் எனும் எண்ணத்தினால், தங்கள் வருவாயில் ஒரு பகுதியைத் தமிழகப் பயணத்திற்காகச் சேமித்து வைக்கின்றனர். மெக்காவிற்குச் சென்று வருவதை எவ்வாறு ஒரு புனித யாத்திரையாகக் கருதுகின்றனரோ, அதைப் போன்று, தமிழ்நாட்டுப் பயணத்தையும் புனித யாத்திரையாகவே அவர்கள் கருதுகின்றனர்.

### தமிழக முஸ்லிம்கள்

பாலித் தீவில் வாழும், இஸ்லாமிய சமூகத்தைச் சேர்ந்த மூத்த தலைமுறையினர், 'தாயுமானவர் பாடல்களைப்' பாராயணம் செய்வதாகப் பாலிக்குச் சுற்றுலா சென்று வந்துள்ள தமிழ் எழுத்தாளர் கூறுகின்றனர்.

முஸ்லிம் சகோதரர்கள் அன்றாடம் 'பாராயணம்' செய்யும் அத்தமிழ்ப் பாடல்கள், மஸ்தான் சாகிபு எனும் சித்தரின் திருப்பாடல்களாக இருக்கக்கூடும் எனும் எண்ணம் எழுகிறது.

### சமய நிலை

பௌராணிக இந்துசமயமே அவர்களுடைய சமய நெறியாக இருந்து வருகிறது. தமிழ் நாட்டு முஸ்லீம்கள் அங்குக் குடியேறி யுள்ளனர். கடந்த முந்நூறு ஆண்டுகளில், இவர்களும் இந்து சமயப் பழக்க வழக்கங்களைப் பின்பற்றி வருகின்றனர். சமயப் பூசலோ, வெறுப்போ அங்கு இருப்பதாகத் தெரியவில்லை. முஸ்லீம் இளைஞர்க்கு சகதேவன், அர்ச்சுனன், இராமா எனும் பெயர்கள் வழங்கி வருகின்றன.

### சமயமே வாழ்க்கை நெறி

பாலித்தீவு மக்களுடைய வாழ்க்கையில் சமயம் இரண்டறக் கலந்து இருக்கிறது. 'சமயமே வாழ்வு! வாழ்வே சமயம்!' எனும் கொள்கையுடைவர்களாக அவர்கள் வாழ்ந்து வருகின்றனர்.

வேதத்தின் சில பகுதிகளைச் சம்ஸ்கிருத மொழியிலும், ஜாவானியப்—பாலி மொழியிலும் எழுதிப் படித்தும், ஓதியும் வருகின்றனர். அதைப் பிராமணர், பரம ரகசியமாக வைத்துக் கொண்டுள்ளனர். பகவத்கீதைப் பரவலாக எல்லாரும் அறியப் பட்ட இந்தியப் புனித நூலாகும். இதிகாசங்களான இராமா யணமும், மகாபாரதமும் பாலி மொழியிலும் எழுதப் பட்டுள்ளன. இந்த இரு நூல்களுமே பாமர மக்களின் வேதமாக இருந்து வருகின்றன.

### சைவ சமயம்

சிவபெருமானே, தலைமைத் தெய்வமாகப் போற்றப்படு கிறார். பிரமாவும், விஷ்ணுவும் சிவபெருமானுடைய மேலாண் மைக்குக் கட்டுப்பட்டவராகக் கருதப்படுகின்றனர்.

உமாதேவி, பர்வதராஜகுமாரியாகப் போற்றப்படுகிறாள். அவளுடைய அழிவாற்றல் நிறைந்த வடிவத்தையே, காளியின் வடிவமாகக் கருதுகின்றனர். காளியின் பேராற்றலைப் புலப்படுத்தவே, பதினாறு கைகள் உடையவளாக அவள் காட்சி தருவதாக அவர்கள் நம்புகின்றனர். காளியை 'ரனதா' என அழைக்கின்றனர்.

உழவுத் தொழிலின் தெய்வமாகவும், செல்வச் செழிப்பிற் குரிய தெய்வமாகவும் இலட்சுமி போற்றப்படுகிறாள்.

திருமாலின் துணைவியாக மட்டும் அல்லாமல், மழைத் தெய்வமாகவும் அவள் கருதப்படுகிறாள்.

திருமாலினைக் கூர்மாவதாரம், வராக அவதாரம், இராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் போன்ற மூர்த்தங்களிலும் வழிபடுகின்றனர். பொன்னால் செய்யப்பட்ட ஆமைச் சிலைகள் சில பாலியின் பல்வேறுபகுதிகளில் கிடைத்துள்ளமை நம் கருத்தைக் கவருவதாகும்.

விநாயகர் வழிபாடு, நாடு முழுவதிலும் பெரு வழக்காக உள்ளது. பல்வேறு வடிவங்களில் விநாயகரின் சிலைகள் செய்யப்பட்டு வருகின்றன. நின்ற கோலத்தில் விநாயகரை அங்குக் காணலாம். அவருடைய துதிக்கையும் தொந்தியும் புதுமைக் கோலத்தில் உள்ளன. சாவகத்தின் தாக்கத்தால் இந்தப் புதுமைப் போக்கு உண்டாகி இருக்க வேண்டும் என்பது அறிஞர் சிலரின் கருத்தாகும்.

பொன், வெள்ளி, செப்பு, மரம், சுடுமண் முதலியவற்றால் செய்யப்பட்ட விநாயக வடிவங்கள் அங்குக் கிடைத்துள்ளன. அவற்றுள் 'மூஷிகம்' எனப்படும் சுண்டெலி அருகியே காணப்படுகிறது.

முருக வழிபாடு, மயில்வாகனன் வழிபாடாகவே காட்சி தருகிறது. விநாயகர் பெற்ற பெருவாழ்வை, முருகன் அங்குப் பெற்றதாகத் தெரியவில்லை!

அனந்தன், நந்தி போன்ற கடவுளரின் வாகனச் சிலைகளும் பாலியில் நிறைய கிடைத்துள்ளன. கருடன் மீது, இரு தேவியரோடு திருமால் அமர்ந்து இருக்கும் கோலத்தில் பல கற்சிலைகளும், வெண்கலச் சிலைகளும் அங்குக் கிடைத்துள்ளன.

இவற்றால், பாலித்தீவில் சைவ, வைணவ சமயங்கள் இன்றும் சிறந்து விளங்குவதைக் காண இயலுகிறது.

## மகாயான பௌத்தம்

ஜாவானிய மேலாதிக்கத்தின் பொழுது, மகாயான பௌத்த சமயம், இங்குச் செல்வாக்குப் பெற்று இருந்தது. இதனால், அவலோகித ஈசுவரர், மைத்திரேயர், மஞ்சசூரி, தாரை முதலிய தெய்வச் சிலைகள் கல்லிலும், செம்பிலும் அங்குச் செய்யப்பட்டன. அகழ்வாராய்ச்சியில் கிடைத்த அச்சிலைகள், பாலியின் தலைநகரான தென்பசார், அருங்கலைக் காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன.

பாலியில் உள்ள கட்டடங்களின் முகப்புகளிலும், கதவுகளிலும், பலகணிகளிலும், கைப்பிடிச்சுவர்களிலும், மாடியின் மேல் விதானங்களிலும் கண்ணன், அருச்சுனன், இராமன், இலட்சுமி முதலிய தெய்வங்களின் வடிவம் செதுக்கு வேலை செய்யப்பட்டு இருக்கும் அல்லது செந்நிற வண்ண ஓவியங்களாகத் தீட்டப் பட்டு இருக்கும்.

வீட்டின், மாளிகைகளின் நிலைப்படிகளின் மேல் உள்ள போதகத்தில் கஜலட்சுமியின் வடிவம் அழகுறச் செதுக்கப்பட்டு இருக்கும். இந்த வழக்கம் பெரிதும் தமிழ்நாட்டிற்கேயுரிய தாகும்.

## வழிபாட்டு முறை

இன்றும் வீடுகள் தோறும் பூசை அறைகள் அல்லது பூசை மாடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றை சிவன் முதல் பல்வேறு தெய்வங்களின் சிறு சிலைகள் அணி செய்யும். அவற்றுள் சிவ—ஆதித்தன் (சிவ சூரியன்) சிலையே தலைமை இடம் பெறும்.

நாள்தோறும் அவற்றுக்கு அபிடேகங்கள் நடத்தப்படும். சந்தனக் குழம்பு பூசுதல் முக்கியச் சடங்காகும். பிறகு சிற்றாடைகள் அணிவிக்கப்படும்; மலர்களால் அலங்கரிக்கப்படும். பின்னர் பழங்கள், தேங்காய் போன்ற பொருள்களும், சமைக்கப்பட்ட பொங்கல் போன்ற நைவேத்தியப் பொருள்களும் அத்தெய்வங்களின் முன்னர் வைக்கப்படும். இதன் பிறகு தூப, தீப ஆராதனைகள் பல வகையாக நடத்தப்படும். அப்பொழுது சங்குகள் முழங்கும். ஆராதனை செய்பவர் இடது கையில் மணியைப் பிடித்து ஆட்டிக் கொண்டே இருப்பார். பிறகு தெய்வத் திருமேனிகளுக்கு முத்திரைகளோடு கூடிய மலர்வழி பாடு (அருச்சனை) நடத்தப்படும். பிறகு நீரினை மும்முறை நிலத்தில் தெளித்து, நெடுஞ்சாண்கிடையாக நிலத்தில் வீழ்ந்து வணங்குவர்; தோப்புக்கரணம் போடுவதும் உண்டு. அருச்சனை செய்யும்போது, வடமொழி, பாலி மொழி மந்திரங்கள் ஓதப்படும்.

இந்த வழிபாட்டு முறைகளை நேரில் கண்டவர்கள், இந்தப் பழக்க வழக்கங்கள் தமிழ் நாட்டில் காணப்படுவன என்று எழுதியுள்ளனர். வழிபாட்டில் பலவகை முத்திரைகள் பயன் படுத்தப்படுகின்றன. இவை தாந்திரிகச் சமயத்தின் தாக்கமாக இருத்தல் கூடும்.

## சிறுதெய்வ வழிபாடு

கிராமப் புறங்களில் வாழும் பிராமண வகுப்பைச் சேராத பிறசாதி மக்கள், தங்கள் நாட்டின் பழம்பெரும் தெய்வங்களை மிகுந்த பயபக்தியோடு வழிபடுவர். அவை ஆவி, பேய், (கொடிய) சக்திகள் போன்ற சிறு தெய்வங்களின் வழிபாடாகும். இவற்றை, இக்காலத்தில் மானிடவியல் நூலார் 'சிறிய மரபு' (The Little Tradition) என்று கூறுவர்.[3]

ஆலமரங்களின் அடியிலேயே இந்த வழிபாடுகள் நடக்கும். இத்தெய்வங்களுக்கு வழிபாடு செய்யும் பூசாரிகள், பிராமணரை விட உயர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். இவ்வழிபாட்டில், ஆடு, மாடு, கோழி முதலிய விலங்குகளைப் பலி கொடுப்பர்.

இத்தகைய வழிபாட்டில் தனிப்பட்ட இசையும் நடனமும் இடம்பெறுகின்றன. ஆடவரும் பெண்டிரும் குழுக்குழுவாகக் கூடி நின்று, கை கொட்டியும், கைகோத்தும் மேளவாத்தியங்களின் ஒலிக்கேற்பவும், இசைப் பாடல்களின் போக்கிற்கேற்பவும் பலவகை நடனங்கள் ஆடுவர். அவற்றில், அத்தெய்வங்களைப் பற்றிய கதைப்பாட்டுகள் இடம் பெறுவதும் உண்டு.

இந்நிலையில், பூசாரி, சாமியாடியாக மாறி, ஆவேசம் வந்தவனாகக் கொக்கரித்தது ஆரவாரம் செய்துகொண்டே ஆடுவான்.

அப்பொழுது, மக்கள் தெய்வம் ஏறி ஆடும் அவன் இடத்தில் வரங்களைத் தருமாறு வேண்டுவர். சாமியாடிகளாக வயது முதிர்ந்த மூதாட்டியரும் பணிபுரிவர்.

இந்தப் பாமர மக்களின் வழிபாட்டு நெறி, தமிழ்நாட்டின் பட்டிதொட்டிகளில் நடத்தப்பட்டு வரும் நாட்டுப்புறப் பண்பாட்டின் வழிவந்த வழிபாட்டு முறைகளோடும் பெரிதும் ஒத்துள்ளன.

இந்தப் பாமர மக்கள் ஆடும் ''சமய வழிபாட்டு நடனங்களைத் 'தாண்டவம்' எனவும், 'நிருத்தம்' எனவும் இருவகையாகப் பிரித்து விளக்கலாம்'' என்று அவற்றை நேரில் கண்ட சுவாமி சதானந்தா குறிப்பிடுகிறார்.[4] இத்தகைய வழிபாட்டு நடனங்களில் இருந்தே, இறைவன் ஆடிய ஏழுவகைத் தாண்ட

---

3. காண்க: க. த. திருநாவுக்கரசு, 'பண்பாடு சமற்கிருதமயமாக்கப்படுதல்' சமஸ்கிருத ஆதிக்கம், பக். 11-12
4. Swami Sadananda, Hindu Cultural Influence in Greater India, P. 10.

வங்கள் தோன்றி இருக்க வேண்டும் என்றும், அவற்றுள் நேர்த்தி வாய்ந்ததே அம்பலவாணரின் 'ஆனந்தக் கூத்து' என்றும் கருத இடமுண்டு.

## திருக்கோயில் வழிபாடு

பாலித் தீவில், திருக்கோயில்கள் பல உள்ளன. பெரும் பாலான கோயில்கள் குன்றுகளின் மீது கட்டப்பட்டு இருக்கும். அவை சிவபெருமானுடைய திருக்கோயில்களாகும்.

## கோயில் அமைப்பு

சிவனுடைய கோயிலுக்குத்தான் பதினொரு மாடங்களைக் கொண்ட விமானமும், கலசமும் அமைக்கப்பட்டு இருக்கும். பிற தெய்வங்களின் கோயில்களில் மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது எனும் எண்ணிக்கை உடைய மாடங்களைக் கொண்ட விமானங் கள் அமைக்கப்பட்டுள்ளன.

கோயில்களின் தலைவாயிலின் இரு பக்கங்களிலும் சிற்ப வேலைப்பாடுகள் செய்யப்பட்டு இருக்கும். கருவறை வாயிலின் இரு புறங்களிலும் 'துவாரபாலகர்', கைகளில் பருத்த கல் தடிகளோடு காட்சி தருவர். வாயில் முழுவதும் சிற்ப வேலைப் பாடுடையதாகும். படிகளைக் கடந்து உள்ளே சென்றால், சிறு மண்டபம் இருக்கும். அதற்கு அப்பால் கருவறை அமைக்கப்பட்டு இருக்கும். அதனுள் சிவலிங்கமோ, யோகநிலையில் உள்ள சிவ பெருமான் சிலைகளோ காணப்படும்.

யார் வேண்டுமானாலும், எந்தக் கோயிலின் உள்ளும் தூய்மையுடன் சென்று, கடவுளுக்கு மலரைச் சூட்டி வழி படலாம். பாலித்தீவில், 'தீண்டாமை' எனும் கொடிய நோய் இன்னும் பரவவில்லை. இந்த வகையில்; அவர்கள் கொடுத்து வைத்தவர்கள்; இல்லை! இந்தியரைவிட முற்போக்குச் சிந்தனை யாளர்களாகப் போற்றத்தக்கவர்கள்.

திருமூர்த்தி வழிபாட்டிற்கு உரிய கோயில்களும் உள்ளன. அவற்றுள் சிவபெருமான் நடுவிலும், திருமால் இடப்புறமும், பிரமன் வலப்புறமும் அமைக்கப்பட்டு இருப்பர்.

அர்த்தநாரீசுவரரின் வழிபாடும் பாலித்தீவில் இருந்து வருகிறது. இத்தகைய கற்சிலைகளும், வெண்கலச் சிலைகளும் மிகப்பலவாக இங்குக் கிடைத்துள்ளன.

பஞ்சாட்சர மந்திரத்தைக் கோயில்களில் ஓதி, வழிபாடு செய்வர்.

## காலை வழிபாடு

சூரிய சேவன (சிவ) வழிபாடு பாலித்தீவு மக்களால், நாள் தோறும் காலையில் செய்யப்படும் வழிபாடாகும். இது நம்முடைய, 'சூரிய நமஸ்காரத்'தைப் போன்று காணப்படுகிறது. பெரும்பாலான புரோகிதர்களும், பிராமண குருமார்களும் 'பதந்தா' எனும் பெயரால் இக்காலத்தில் சுட்டப்படுகின்றனர். இப்பெயர், 'பண்டாரம்' எனும் தமிழ்ச் சொல்லின் திரிபாக இருத்தல் கூடும்.

இந்தக் குருமார்கள் பழைய ஓலைச் சுவடிகளில் எழுதப்பட்ட மந்திரங்களையும், வேதத்தின் பகுதிகளையும் ஓதுவர். அந்த ஓலைச் சுவடிகளில் தமிழ் நாட்டு கிரந்த எழுத்துகளைக் காணலாம். இவற்றோடு ஜாவானிய 'கவி' மொழி எழுத்துகளை அடிப்படையாகக் கொண்ட ஒருவகை எழுத்து முறையைப் பாலி மொழிக்கு உரியதாகப் பயன்படுத்தி வருகின்றனர்.

## பொங்கல் விழா

பாலியின் நாட்டுப்புற மக்கள், 'பொங்கல் விழாவைப்' போன்ற நிலையில், சனவரி மாதத்தில் அறுவடைத் திருவிழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர்.

வீட்டின், முற்றத்தில் இலைகளைப் பரப்பி, அதில் பொங்கல் முதலிய பொருள்களை வைத்து, தூப தீப ஆராதனையை 'சூரிய-சேனா' எனப்படும் சிவ-ஆதித்தனுக்குப் படைக்கின்றனர். அடுத்த நாள் கால்நடைகளைச் சிறப்பிக்கும் வகையில் தொழுவத்திற்கு அருகில் பொங்கலிட்டுப் படைக்கின்றனர். பிறகு இரண்டு நாட்களுக்கு அவர்கள் பலவகை கேளிக்கைகளிலும், களியாட்டத்திலும் ஈடுபடுகின்றனர்.

## இலக்கியம்

பாலித்தீவு மக்கள் சமயத் தொடர்பான இலக்கியங்களையே பேணி வளர்த்து வருகின்றனர்.

## புனித நூல்கள்

ஜாவானிய மொழியிலுள்ள 'பிரமாண்ட புராணம்' (மனித இனத்தின் தோற்றம், நாகரிக வளர்ச்சி பற்றியது) எனும் நூலைத் தழுவி, அரைகுறை சம்ஸ்கிருதத்திலும் பாலி மொழியிலும் படைத்துள்ளனர். இதைப் போன்றே, புவனகோசம்" எனும் நூலும் படைக்கப்பட்டு இருக்கிறது.

'பிரகஸ்பதி தத்துவம்' எனும் நீதிநூல், சம்ஸ்கிருத மொழியில் உள்ள மூலநூலைத் தழுவியது அன்று. இது ஜாவானிய மொழியில் எழுதப்பட்டுள்ள 'பிரகஸ்பதி நீதி சாத்திரம்' எனும் நூல், அந்த நாட்டுப் பழக்கவழக்கங்களாகிய ஆசாரத்தையும், சமயப் பழக்கவழக்கங்களையும் முறைப்படுத்தித் தொகுக்கப்பட்டுள்ளதாகும். இந்நூலையே ஆதாரமாகக் கொண்டு பாலி மொழியில், இந்த நீதிநூல் இயற்றப்பட்டுள்ளது.

கந்தர் சஷ்டி கவசத்தைத் தமிழ்நாடு நன்கு அறியும். இதைப் போன்று இருபத்திரண்டு சம்ஸ்கிருத செய்யுள்களைக் கொண்ட 'இராம கவசம்' எனும் நூல், பாலியில் இன்று பெருவழக்கில் உள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

இராமாயணத்தின் சுருக்கமான 'மகாராஜா லாவணா' எனும் பாலிமொழி இலக்கியப் படைப்பு, அந்நாட்டு மக்களிடையே பெருஞ் செல்வாக்குப் பெற்று இருக்கிறது. இக்கதையில் 'இராவணன்' எனும் பெயர், 'லாவணா' என்று திரித்து வழங்கப்படுகிறது. மற்றும் இராவணனுக்கு எட்டுத் தலைகளே இருந்ததாகச் சொல்லப்படுகிறது. சீதைக்கு, 'சகுணதும் பங்கஸ் தான்கேசர்' எனும் பெயரும், இராமனுக்கு, 'லாவஹி' எனும் பெயரும் வழங்கப்படுகிறது.

**நடனக்கலை**

பாலி நடனம் உலகப் புகழ் வாய்ந்தது. பெண்கள் ஆடும் குழு நடனத்திற்கு 'லெகான்' என்பது பெயர், ஆடவர் ஆடும் நடனத்திற்குப் 'பரிஸ்' என்பது பெயர். இனிய இசையோடும் மத்தளம் போன்ற கருவியின் முழக்கத்தோடும், தாளத்தோடும் புல்லாங்குழல் இசையோடும் நடனங்கள் ஆடப்படுகின்றன. கதை தழுவிய கூத்துகள் பல ஆடப்படுகின்றன. அவை இராமாயண பாரதக் கதைகளைத் தழுவியனவாகும்.

நாடு முழுவதும் பேரார்வத்தோடு ஆடப்படும் மகளிர் நாட்டியம் உலகப் புகழ் பெற்றது. அதற்குக் 'கெச்சா' என்பது பெயராகும். இதனை 'வானர நாட்டியம்' எனவும் கூறுவர்.

இவற்றோடு 'வயாங்கு' நிழலாட்டமும் பாலித்தீவில் நடத்தப்படுகிறது. இக்கூத்தில் அந்நாட்டு மக்களுக்கு ஒருவகைத் தனிக்கவர்ச்சி இருந்து வருகிறது.

இன்றைய பாலித்தீவைக் காண்பவர்கள் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்திய தமிழகத்தைக் காண்பதைப் போன்ற உணர்வினைப் பெறுகிறோம் என்பது, உலகம் சுற்றிய தமிழர் ஒருவரின் துணிவுரையாகும்.

## 7. 4. 5.

## போர்னியோ

போர்னியோ தென் சீனக் கடலுக்கும் ஜாவா கடலுக்கும் இடையேயுள்ள பெரிய தீவாகும். இது ஜாவாவைப்போல் எட்டு மடங்கு பெரியது. போர்னியோவில் கி பி. நான்காம் நூற்றாண்டு அளவில் இந்திய நாகரிகம் நன்குபரவியிருந்தமை தொல்பொருள் ஆராய்ச்சியால் நன்கு புலனாகிறது. பண்டைக்காலத்தில் இதனை 'பர்ஹின தீபம்' என்று (வாயு. அதி. 48; பா. 12) இந்தியர்கள் அழைத்தனர். மேற்கு நாடுகள் அதனைப் போர்னியோ என அழைத்தன. இந்தோனேஷ்யா குடியாட்சி யான பிறகு போர்னியோவிற்கு 'கலி மண்டான்' எனும் பெயர் இடம் பெற்றுள்ளது.

இங்கு ஏழு சம்ஸ்கிருத கல்வெட்டுகள் கிடைத்து இருக்கின்றன. பண்டைக் காலத்து மகாகன் ஆற்றுக்கு அருகில் 'மௌராகமன்' என்ற துறைமுகம் சிறப்புற்று விளங்கியது. அத்துறைமுகம் இருந்த இன்றைய குடேய் (Kutei) மாவட்டத்தில் தான் ஏழு சம்ஸ்கிருத மொழிக் கல்வெட்டுகள் கிடைத்திருக்கின்றன. குண்டுங்கன் (Kundunga) என்ற அரசனின் மரபைச் சேர்ந்தவர்கள் கிறித்துவ சகாப்தத்தின் முதல் மூன்றாம் நான்காம் நூற்றாண்டுகள் தொடக்கத்தில் போர்னியோவை ஆண்டதாக அக்கல்வெட்டுகள் அறிவிக்கின்றன. குண்டுங்கன்— இப்பெயர் தமிழ் நாட்டிலிருந்து குடியேறிய ஓர் இளவரசன் பெயராகக் கருதப்படுகிறது. குண்டுங்கன் 'கவுண்டினியன்' என்ற புராண மரபில் வரும் அரசனாகவும் கருதப் படுகிறான். 'குண்டுங்கன்' என்ற சொல் தமிழ்ச் சொல்லாக இருக்கலாம் என்றும், பல்லவர் செப்பேடு ஒன்றில் 'குண்டு

கூரன்' என்ற பெயர் ஒன்று காணப்படுவதாக வரலாற்று ஆசிரியர் கூறுகின்றனர். அவர்கள் குண்டுங்கன் என்பவன் துணிவுமிக்க வணிகனாகவோ, வீரதீரச் செயல்களில் நாட்டம் கொண்ட தென்னிந்திய வீரனாகவோ இருக்கலாம் என்று நம்புகின்றனர். அவ்வரசனுடைய மகன் அசுவவர்மன் என்பதும், அசுவவர்மனுடைய மகன் மூலவர்மன் என்பதும் அக்கல்வெட்டு களால் தெரியவருகின்றன. மூலவர்மன் சிறப்புமிக்க அரசனாக விளங்கினான். அவன் பிராமணர்களைக் கொண்டு யாகங்கள் பல செய்தான் என்பதும், அந்த யாகசாலையில் நடப்பட்ட வேள்வித் தூண்களில் சிலவே, இன்று கல்தூண்களாக அகழ்ந் தெடுக்கப்பட்டுள்ளன. அவை ஒவ்வொன்றிலும் சம்ஸ்கிருத மொழியில் பிராமணர்களுக்கு மூலவர்மன் வழங்கிய தானங்களும் செய்த யாகங்களும் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. மூலவர்மன் செய்த யாகங்களுள் 'பாகு— சொர்ணகம்' என்பது தனிப்பெரும் சிறப்புவாய்ந்ததாகப் போற்றப்படுகிறது. அதற்குப் 'பொன்வேள்வி' என்பது பொருளாகும். வப்ரகேசுவரம் என்ற புனிதமான நிலத்தில் மூலவர்மன் 20,000 பசுக்களைப் பிராமணர் களுக்குத் தானமாகக் கொடுத்ததாக அக்கல்வெட்டுகள் குறிப் பிடுகின்றன.

அக்கல்வெட்டுகள் அனைத்தும் கி. பி. 400 அளவினதாகும். அவற்றால் கி. பி. நான்காம் நூற்றாண்டு அளவில் கிழக்குப் போர்னியோவில் இந்துக்கள் தங்களுடைய ஆதிக்கத்தை நிலை நாட்டியமைக்கு அறிகுறியாக சிறந்ததோர் அரசை நிறுவியிருந் தமை அறியப்படுகிறது. இந்து சமயம், சீரும் சிறப்புமுற்று அக்காலத்தில் விளங்கியதை அக்கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. அந்நாட்டு மக்கள் சமுதாயத்தில் முதன்மையான பங்கினைப் பார்ப்பனர் பெற்றிருந்தனர் என்பதும், பார்ப்பனர் புரோகிதர் களாகப் பல சடங்குகளை அரசரின் ஆதரவில் செய்து வந்தனர் என்பதும் கீழைப் போர்னியோவில் கிடைத்துள்ள கல்வெட்டு களால் புலனாகின்றன.

இத்தீவில் கற்பூரம், வைரம், தங்கம், செவ்வரக்கு முதலியன கிடைக்கின்றன.

கோடா பங்குன் என்னும் இடத்தில் புத்தரின் வெண்கலச் சிலை ஒன்று கிடைத்திருக்கிறது. அது குப்தர் காலத்திய கலைப் பாணியில், நேர்த்தியாகச் செய்யப்பட்டு இருக்கிறது. கீழைப் போர்னியோவின் வேறு பல இடங்களிலும் பண்டை இந்தியப் பண்பாட்டின் செல்வாக்கை அறிவிக்கும் தொல்பொருள் சின்னங்கள் பல கிடைத்துள்ளன. கோம்பெங்கு (Kombeng)

என்னும் இடத்தில் உள்ள குகையில் மரத்தினால் அமைக்கப்பட்ட கோயிலின் அழிவுச் சின்னம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அக்குகையில் இரண்டு அறைகள் உள்ளன. பின்னால் உள்ள அறையில் மணல் கல்லினால் செய்யப்பட்டுள்ள பன்னிரண்டு சிலைகளும், சிற்ப வேலைப்பாடுகளையுடைய சிதைந்த கற்களும், அரைகுறையாகப் பாழ்பட்ட நிலையில் இரும்பு மரத்தூலங்களும், விட்டங்களும் காணப்படுகின்றன. அவற்றை நோக்குகின்றபொழுது, அவை யாவும அழிவுற்ற கோயில்களின் சின்னங்கள் மறைத்து வைக்கப்பட்டிருக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றுகிறது. அந்தச் சிலைகள் வேறு இடத்திலிருந்து கொண்டுவரப்பட்டிருக்க வேண்டும் என்பது, அவற்றின் அடியில் உள்ள முளைகளினால் தெரிய வருகிறது. அச்சிலைகள் புத்த சமயத்தைச் சார்ந்தனவாகவும் இந்து சமயத்தைச் சார்ந்தனவாகவும் உள்ளன. இங்கு கிடைத்துள்ள சிவன், விநாயகன்,நந்தி, அகஸ்தியர், நந்தீசுவரன் பிரமன், கந்தன், மகாகாலன் ஆகியோரின் சிலைகள் இந்து சமயத்திற்குரியன வாகும். மேலும், புத்தர் சிலைகளும் கிடைத்துள்ளன. இச்சிலைகள் கி. பி. நான்காம்நூற்றாண்டு அளவில் செய்யப்பட்டனவாக இருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றவர். இவற்றோடு போர்னியோவின் மேற்குப் பகுதியில் கிடைத்துள்ள தொல்பொருள் சின்னங்கள் இந்தியாவிலிருந்து நேராக மக்கள் அங்கு குடியேறினர் என்பதையும், ஜாவாவிலிருந்து இந்திய நாகரிகம் போர்னியோவில் இறக்குமதி செய்யப்படவில்லை என்பதையும் உறுதிப்படுத்துகின்றன.

### சீனாவும் போர்னியோவும்

சீனாவோடு போர்னியோ நெருங்கிய வாணிகத் தொடர்பு கொண்டிருந்தமை சீன வரலாற்றுக் குறிப்பேடுகளால் புலனாகின்றது. சீனர்கள் போர்னியோவை போ-னி (P' o-ni) என்று அழைத்தனர்.

அவ்வரலாற்றேடுகள் போர்னியோவில் சீரும் சிறப்புமுற்று விளங்கிய இந்திய நாகரிகத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. பன்னிரண்டாம் நூற்றாண்டின் முடிவில் ஜாவாவின் ஆதிக்கத்திற்குப் போர்னியோ உட்பட்டது. பதின்மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் போர்னியோ தனியுரிமையுடன் விளங்கிய போதிலும், அதன் பகுதிகள் சிலவற்றை கிருதநாகரன் கைப்பற்றிக் கொண்டான்; பதினான்காம் நூற்றாண்டில், மீண்டும் போர்னியோ ஜாவாவின் ஆட்சிக்குட்பட்டது. மஜபாகிதப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு, அதாவது பதினைந்தாம்

நூற்றாண்டின் தொடக்கத்தில் அத்தீவு சீனாவிற்குத் திறை செலுத்த வேண்டியதாயிற்று. கி. பி. 1408 அளவில் போர்னியோ அரசன் சீனாவிற்குச் சென்றான்; சென்றவன் மீண்டும் திரும்பி வராது அங்கேயே இறந்தான். அவனுடைய மகனும், மனைவியும் கி. பி. 1412–இல் சீன அரசவைக்குச் சென்றனர். கி. பி. 1425-க்குப் பிறகு, போர்னியோ சீனாவிற்கு ஒழுங்காகத் திறை செலுத்தவில்லை.

## தமிழ்ப்பண்பாடு

முன்பு நாம் கண்ட மூலவர்மனின் 'குடை' கல்வெட்டுகள் சம்ஸ்கிருத மொழியில் பொறிக்கப்பட்டுள்ளன. இதனால், நெடுந்தொலைவிலுள்ள போர்னியோ தீவில் இந்திய நாட்டு மொழி, சமயம், அரசியல், சமூக நிறுவனங்கள் போன்றவை எவ்வாறு செல்வாக்குப் பெற்றிருந்தன என்பதை அறிய முடிகிறது. இந்துப் பண்பாட்டில் மூழ்கித் திளைத்த அரசவையும், சமுதாயமும் அந்நாட்டில் எவ்வாறு சிறப்புற்று விளங்கின என்பதை அவை எடுத்துரைக்கின்றன. இந்து தெய்வங்களின் பெயர்களைப் பற்றிய குறிப்புகள் கிடைத்துள்ளன. அவற்றை அரண் செய்வதைப் போன்று, இந்து சமயத்திற்குரிய சிலைகள் பல கிடைத்துள்ளன. தமிழ் மாதங்களின் பெயர்களும், தமிழ் நீட்டல் அளவைப் பெயர்களும் அந்நாட்டில் எவ்வாறு சிறப்புற்று விளங்கின என்பதை அவை எடுத்துரைக்கின்றன.

போர்னியோவில் முதலில் சைவ சமயமும், பின்னர் பௌத்த சமயமும் சிறப்புற்று விளங்கின. இச்சமயங்களுக்குரிய தெய்வங்களின் சிலைகள் பல கிடைத்துள்ளன. அவற்றில் இந்தியக் கலைப்பாணி முழுநிறைவு அடைந்துள்ளதை நாம் காணலாம்.

அத்தீவில் இந்துக்கள் குடியேறிய காலத்திற்குப் பிறகு, தொடர்ந்து இந்தியர்கள் அங்குச் செல்லவில்லை. மிகுதியாக இந்துக்களின் அருஞ்செயல்களை நாம்அங்குக் காண்பதற்கில்லை. உள்நாட்டுப் பண்புகள் அயல் (இந்திய) நாட்டுக் கலைகளின் வளர்ச்சியைத் தடுத்தன.

போர்னியோவின் தெற்கு லூசா மாவட்டத்தில் அவலோகிதசுவரர் சிலையும், பொன்னால் செய்யப்பட்ட கருடன் சிலையும் கிடைத்துள்ளன. இவை கி.பி. பன்னிரண்டாம், பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தனவாக ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

புருனேய்ப் பகுதியில் கிடைத்துள்ள தொல் பொருள் சின்னங்கள், தமிழகத்துச் சைவசமயமும், பௌத்த சமயமும் சிறப்புற்று விளங்கியதைத் தெரிவிக்கின்றன.

இங்குள்ள சம்ஸ்கிருத மொழிக் கல்வெட்டுகள் யாவுமே, பல்லவர் காலத்திய கிரந்தஎழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளன. 1946 - இல். கருத்து வேற்றுமைக்கு இடமின்றி, அக்கல்வெட்டுகள் யாவும் பல்லவ கிரந்தத்தில் பொறிக்கப் பட்டுள்ளன என்பதை ஜி. கோயிடஸ் நிலைநாட்டியுள்ளார். காலத்தின் தேவைக்கேற்ப, அவற்றில் சிற்சில மாற்றங்கள் செய்யப் பட்டுள்ளன என்பதையும் அவர் சுட்டிக் காட்டியுள்ளார்.

விஷ்ணு கருடன்மீது அமர்ந்த கோலத்திலும், அனுமான் நின்றகோலத்திலும் செய்யப்பட்ட சிலைகள் கிடைத்து இருக்கின்றன.

## 7. 4. 6

## செலிபஸ்

போர்னியோவிற்குக் கிழக்கிலும், ஜாவாவிற்கு வடகிழக்கிலும் உள்ள ஒரு பெரிய தீவு செலிபஸ். இத்தீவு மிகப் பழங்காலத்திலேயே இந்தியாவோடு மிக நெருங்கிய உறவு கொண்டிருந்தது. இதில் தென் இந்திய நாகரிகப் பண்பாட்டின் செல்வாக்கினைப் பேரளவில் இன்றும் நாம் காணுகின்றோம்.

இங்குக் கிடைத்துள்ள புத்தர் சிலைகள் அமராவதியில் சிறப்புற்று விளங்கிய கலைப்பாணியோடு பெரிதும் ஒப்புமையுடைய கலைமுறையைப் பின்பற்றிச் செய்யப்பட்டனவாகத் தெரிகின்றன. இச்சிலைகளின் வடிவ அமைப்புப் பண்புகள், அவை கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்பதை எடுத்தியம்புகின்றன. இந்தப் பண்பாடு இத்தீவின் உட்பகுதியில் எவ்வளவு தொலைவு பரவியிருந்தது என்பதைத் தொல்பொருள் ஆராய்ச்சியாளரால் அறுதியிட்டுக் கூற இயலவில்லை. அணிமைக்காலத்தில் இங்குப் பண்டைக்காலத்து 'பூசைமணி' ஒன்றும், கைத்தாளங்கள் இரண்டும் கண்டு எடுக்கப்பட்டுள்ளன. அவை இன்றும் தமிழகத்து வீடுகளில் இறை வழிபாட்டின் பொழுது பயன்படுத்தப்படும் பூசை மணியையும், கைத்தாளங்களையும் ஒத்துள்ளன. இவற்றால் தென்னிந்தியப் புத்த சமயம் இங்குப் பரவுவதற்கு முன்பே, தென்னிந்தியப் பண்பாடு இங்குச் செழித்தோங்கியிருக்க வேண்டும் என்பது புலனாகின்றது.

தென்னிந்தியாவின் — தமிழகத்தின் — குடியேற்ற நாட்டு அமைப்பினுடைய வரலாற்றின் பொற்காலம் என்று பல்லவர்கள் ஆட்சி (கி. பி. 450-900) காலம் கருதப்படுகிறது. பல்லவர் ஆட்சிக்காலத்திய சின்னங்கள் பல செலிபஸ் முதலிய தென்

கிழக்காசிய நாடுகளில் பரவியுள்ளமை வெளிப்படை. இந்நாட்டின் "தொன்மைக் கல்வெட்டுக்கலையும், கலைப்பாணிகளும், பழங்காலப் பொருள்களின் தொன்மையைப் புலப்படுத்துவனவாகும். இத்தீவுகள் தென்னிந்தியாவோடு நேர்முகமாகத் தொடர்பு கொண்டிருந்தமை, தொல்பொருள் சின்னங்களால் உறுதிப்படுகின்றன. அச்சின்னங்கள் பல்லவர்களின் எழுச்சிக்கு நெடுங்காலத்திற்கு முன்பே, இக்குடியேற்றங்களும் வாணிகத் தொடர்புகளும் உண்டாகியிருக்க வேண்டும் என்பதை அறிவிக்கின்றன"[5]

செலிபஸில் கண்டெடுக்கப் பெற்ற புத்தர் சிலையில், குப்தர் காலத்திய கலைப்பாணியின் சாயலை நாம் காணுகின்றோம். அச்சிலை நேர்த்தியான வேலைப்பாடுடையதாகும். பண்டைக் கலை மரபினைக் கருத்தாகப் போற்றிச் சிற்சில வட்டார இயல்புகளோடு அச்சிலை அமைக்கப்பட்டுள்ளது எனலாம்.

---

5. K. A. Nilakanta Sastri, South Indian Influences in the far East (1949), P. 18

## 7. 4. 7.

# பிலிப்பைன்ஸ் தீவுகள்

பிலிப்பைன்ஸ் தீவுகள், செலிபஸிற்கு நேர் வடக்கில் உள்ளன. நிலவளமும் நீர்வளமும் வாய்ந்தவையாக இவை உள்ளன. நிலப்பொதியியல் அமைப்பிலும் மாவடை (Fauna) மரவடை (Flora) அடிப்படையிலும் மலேயா தீபகற்பத்தைச் சேர்ந்தனவாக இவை உள்ளன.

### அமைப்பு

இத்தீவுக் கூட்டத்தின் தலைநகராக குயிசோன் (Quizon) எனும் பட்டினம் இருக்கிறது. இத்தீவுக் கூட்டத்தில் 7,100 தீவுகள் உள்ளன. ஏறக்குறைய மூன்று இலட்சம் சதுர கி. மீ. பரப்பளவு உடையனவாக இத்தீவுகள் உள்ளன. இத்தீவுகளுள், பதினொரு தீவுகள் மிகவும் பெரியனவாகும். அவற்றுள் லூசான் (Luzon) எனும் தீவு, சிறப்புடையதாகும். இவற்றின் கிழக்குப் பக்கத்தில், பசிபிக்மாக்கடல் இருக்கிறது. மேற்கே தென் சீனக்கடல் அமைந்து இருக்கிறது. இத்தீவுகளில் வாழுகின்ற மக்கள் தொகை மூன்று கோடியே எழுபத்தைந்துஇலட்சம் என்று மக்கள் தொகைக் கணிப்பு அறிக்கை தெரிவிக்கிறது. மணிலா எனும் நகரம் உலகப் புகழ்வாய்ந்தது. நாம் 'வேர்க் கடலை' எனவும், 'நிலக்கடலை' எனவும் சுட்டும் கடலை, முதன் முதல் நானூறு ஆண்டுகளுக்கு முன்னர் நம் நாட்டிற்கு போர்ச்சுகீசியர்களால் மணிலாவிலிருந்து கொண்டு வரப்பட்டது. தமிழ் நாட்டில் புன்செய் நிலப்பயிராக அது செழிப்புற்றது. இதனைத்

தொடக்கத்தில் 'மணிலாக் கோட்டை' என்று நம் தமிழ் மக்கள் அழைத்தனர். அப்பெயர் திரிந்து, பாமர மக்களிடையே 'மல்லா கொட்டை' என வழங்கலாயிற்று.

## மக்கள்

பிலிப்பைன்ஸ் தீவுகளில் வாழும் மக்கள் ஐவகை இனத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். தொன்மை மலாய் (Proto - Malais) மக்கள், மலாய் மக்கள் என்னும் இனத்தவர்கள் பேர் எண்ணிக்கையில் இத்தீவுகளில் வாழ்ந்துவருகின்றனர். இவர்களோடு, 'நீக்கிரிட் டோக்கள்' எனப்படும் நீக்கிரோப் பழங்குடி மக்களும், ஆஸ்திரேலியப் பழங்குடி (Austroloids) மக்களும் கணிசமான அளவில் வாழ்ந்து வருகின்றனர். மற்றும், தமிழ் நாட்டில் 'வேட்டுவர்' என்று அழைக்கப்படும் 'வெட்டர்களும்' (Veddoids) பிலிப்பைன்ஸ் தீவுகளில், குறிப்பிட்ட சில தீவுகளில் மட்டும் வாழுகின்றனர்.

## மொழிகள்

இங்கு பேசப்படும் மொழிகள் மூன்று. அவை ஆங்கிலம், ஸ்பானியம், தாகாலேவ் என்பனவாகும். இம்மூன்றும் தேசிய மொழிகளாக உள்ளன. இத்தீவுகளிலும் மக்கள் பேசும்மொழி, பதினேழு வகைக் கிளை அல்லது வட்டார மொழிகளாக வழங்கி வருகின்றன. இவை மலாய் மொழியோடு ஒட்டும், உறவும் உடையன. பெரிதும் கத்தோலிக்க சமயத்தைத் தழுவியவர்களாக இத்தீவுகளில் வாழும் மக்கள் உள்ளனர். பேரளவிற்கு ரோமானிய எழுத்துமுறையையே,அன்றாட வாழ்கையில் இத்தீவுகளில் வாழும் மக்கள் பயன்படுத்தி வருகின்றனர்.

## பண்டை வரலாறு

இத்தீவுகளின் பண்டைக் கால வரலாறு இருள் செறிந்ததாக இருக்கிறது.

தொல்பழங் காலத்திலேயே, சிறப்பாகப் பழைய கற்கருவிக் காலம் முதலே, தென்னிந்தியாவிற்கும் பிலிப்பைன்ஸ் தீவுகளுக்கும் நெருக்கமான தொடர்பு இருந்தமை, அக்காலக் கருவிகள் ஒற்றுமைப் பண்புகளுடன் இவ்விருநாடுகளிலும் கிடைத்துள்ளன. அடுத்துப் புதுக்கற்கருவிக் காலப்பயன்பாட்டுப் பொருள்களும், இரும்புக் கருவிக் காலப் பெருங்கல் (Megalithic) நினைவுச் சின்னங்களும் தமிழ்நாட்டில் கிடைத்துள்ளனவற்றைப் போன்றே அங்கும் கிடைத்துள்ளன. இவற்றை எல்லாம் ஆராய்ந்துள்ள தொல்லியல் அறிஞர்கள்

பிலிப்பைன்ஸ் தீவின் தொல்பழங்காலத்திய பழங்குடி மக்கள் பண்பாடு தென்னாட்டில் இருந்து பெறப்பட்டது எனக் கருது கின்றனர்.[6]

கிறித்துவ நூற்றாண்டின் முதல் இருநூற்றாண்டுகளிலேயே தமிழகத்து மக்கள், வாணிகத்தின் பொருட்டுத் தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்குச் சென்ற பொழுது, பிலிப்பைன்ஸ் தீவுகளி லும் தங்கள் குடியேற்றத்தை அமைத்து இருக்க வேண்டும் என்று கெர்ன் (Kern) எனும் அறிஞர் கருதுகிறார். இக்கருத்தினை நிறுவுவதற்குச் சான்றுகள் சிலவற்றை அவர் தந்துள்ளார்.

சிறப்புமிக்க கடலோடிகளான தமிழர், தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கு வந்த பொழுது, திசை மாறிச் சென்ற மரக்கலங்கள் இத்தீவுகளின் கரைகளை அடைந்து இருக்க வேண்டும் என்பர். இன்று இத்தீவில் வாழும் மக்களுள், மூன்று நான்கு வகையான (நெதரிட்டோ, இதரெட்டோ, பிசாயன்) பழங்குடி மக்கள் திராவிடரின் உடற்கூற்று அமைப்புகளை உடையவர்களாக இருக்கின்றனர். மற்றும், இன்றும் அவர்களுடைய பழக்க வழக்கங்கள் தமிழ் நாட்டு மக்களின் பழக்கவழக்கங்களோடு ஒத்தனவாக உள்ளன. திருமணச் சடங்கில், மணமகன், மண மகளுக்குத் தாலி கட்டும் வழக்கம் பிலிப்பைன்ஸ் தீவு மக்களுள் சில பிரிவினரிடத்துக் காணப்படுகிறது. இந்தச் சடங்கினைத் தமிழர்களே, வரலாற்றுக்காலம் நெடுகப் பின்பற்றி வருகின் றனர் எனும் அறிஞர் கெர்ன் அவர்களுடைய துணிவுரை யாராலும் புறக்கணிக்க இயலாத ஒன்றாகும்.

இவ்வறிஞரின் கருத்தினைப் பின்புலமாக வைத்து நோக்கு கின்ற பொழுது, பல்லவர் காலம் முதற்கொண்டாகிலும் தமிழகத்தின் செல்வாக்கு இத்தீவுகளில் கால்கொள்ளத் தொடங்கி இருக்கலாம் எனும் முடிவிற்கு வரலாம்.

இந்தோனேசியப் பேரரசுகளின் ஆதிக்கம் (கி. பி. 700-1500) இந்நாட்டில் பரவிய காலத்தில், ஜாவானியப் பண்பாட்டு வழித் தமிழ்ப்பண்பாடு பிலிப்பைன்ஸ் தீவுகளில் வேரூன்றுவதற்குரிய வாய்ப்பும் வசதியும் பேரளவில் கிடைத்து இருக்க வேண்டும் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

---

6. Juan R. Francisco, Palaeo Lithic Relation between Philippines and India, P.P. 48-50.

## அணிமைக்கால வரலாறு

ஐரோப்பியரின் 'காலனி ஆதிக்கம்' எழுச்சியுற்ற கால கட்டத்திலேயே, ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் அணிமைக்கால வரலாறு தொடங்குகிறது எனலாம்.

கி. பி. 1521-இல் ஸ்பானியக் கடலோடியான மெகலன் என்பவரே, பிலிப்பைன்ஸ் தீவுகளைக் கண்டுபிடித்தார். ஐரோப்பாவில், ஏழாண்டுப் போர் தொடங்கியவுடன், தமிழ் நாட்டில், சென்னை நகரத்தில் புனித ஜார்ஜ் கோட்டையில் இருந்த ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி நிருவாகித்தினர், பிரிட்டிஷ் அரசின் சார்பில், ஸ்பானியருடைய அதிகாரத்திற் குட்பட்டு இருந்த பிலிப்பைன்ஸ் தீவுகள் மீது படையெடுக்கத் திட்டமிட்டனர்.

தமிழ்நாட்டுச் சிப்பாய்களைக் கூலிப்படையாகக் கொண்டு, ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியார், மணிலாவின் மீது படையெடுத்துச் சென்றனர். இந்தப் படையெடுப்பு, தமிழ் நாட்டிற்கும் பிலிப்பைன்சிற்கும் நேரடியான தொடர்பு உண்டா வதற்கும், பண்பாட்டுத் தாக்கம் நிகழ்வதற்கும் சிறந்ததொரு வாய்ப்பை அளித்தது.

இந்தப் படையெடுப்பில், 2000 படைவீரர்களும், கப்பல் பணிமக்களும் கலந்து கொண்டனர். இவர்களுள் செம்பாதியான எண்ணிக்கை (1000) உடையவர்கள் மதராஸ் (சென்னை) நகரத் திற்கு அருகிலுள்ள ஆர்க்காட்டுப் பகுதியைச் சேர்ந்த தமிழ் நாட்டுச் சிப்பாய்களாவர். இவர்களோடு, தமிழ் நாட்டுத் தொழிலாளிகள் 1400 பேர் உடன் சென்றனர். இவர்கள் யாவரும் மணிலா முற்றுகையில் ஈடுபடுத்தப்பட்டனர்.

கி. பி. 1762-ஆம் ஆண்டு, செப்டம்பர், 24-ஆம் நாள், இந்தப் படை மணிலாவைச் சென்று அடைந்தது. பதினைந்து மாதங்கள் இந்தப் படை மணிலாவைக் கைப்பற்றித் தன் வசம் வைத்திருந் தது. இந்தப் போரில், ஏராளமான தமிழர்கள் இறந்துபோயினர்.

கி. பி. 1764-ஆம் ஆண்டு, சனவரி மாதம், திடுமெனப் பிரிட்டிஷ் கப்பல்கள் இந்தியாவிற்குப் புறப்பட்டன. எஞ்சி இருந்த இந்திய (தமிழ்)ச் சிப்பாய்களுக்குத் தெரிவிக்காமலே, பிரிட்டிஷ் கப்பல்கள் புறப்பட்டுவிட்டன.

ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனிப் படைத்தலைவர்களால் கைவிடப்பட்ட—அலட்சியமாகப் புறக்கணிக்கப்பட்ட—தமிழ்

நாட்டுப் படைவீரர்கள், அத்தீவுகளின் நாட்டுப்புறப் பகுதிகளில் ஒதுங்கி, வாழ்வதற்கு வழிதேடினர். இக்காலத்திய பெசிக் (pesig) பட்டணத்தில் அவர்கள், சிறு சிறு குழுக்களாகப் பிரிந்து, பரவலாக வாழத்தொடங்கினர். பிறகு, தமிழர்களின் குடியிருப்பு இன்றைய 'கெயிண்டா (Gainta) எனும் ஊராக வளர்ந்தது. தமிழ் நாட்டுச் சிப்பாய்களின் வழித்தோன்றல்களே, 'கெயிண்டா' பட்டணத்தில், இன்றும் பேரளவில் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலத்தில், 'மதராஸ் மாகாணம்' எனவும், இப்பொழுது 'தமிழ்நாடு' எனவும் வழங்கப்படுகின்ற மாநிலத்தைச் சேர்ந்த தமிழ்மக்களின் கால்வழியினர் என்பதை இன்றைய உலகம் மறந்து கொண்டு வருகிறது''[7] என்பது அணிமைக்கால இந்திய ஆராய்ச்சியாளரின் துணிவாகும். முனிசாமி, குப்புசாமி, கந்தசாமி, இராமசாமி எனும் பெயருடையவர்களாக அவர்கள் வாழ்ந்துவருகின்றனர்.

இவ்வரலாற்றுக் குறிப்பு, எவ்வாறு எல்லாம், வெளிநாடுகளுக்குத் தமிழர் சென்றுள்ளனர் என்பதை அறிய உதவுகிறது.

## இந்து-பௌத்த சமயச் சின்னங்கள்

பிலிப்பைன்ஸ் தீவுகளில் கி. பி. பத்தாம் நூற்றாண்டு வரை சைவ சமயமும், அதன் பிறகு ஜாவாவின் மகாயான பௌத்த சமயமும் தழைத்து ஓங்கின. இதனால் உண்டான தமிழ்ப் பண்பாட்டு வழிப்பட்ட இந்திய நாகரிகத்தின் சின்னங்களும், தொல்பொருள்களும் இங்குப் பரவலாகக் கிடைத்துள்ளன.

## மட்கலக் குறியீடுகளும் சுடுமண் சிலைகளும்

கி. பி. ஏழாம் நூற்றாண்டு அளவினதான மண்பாண்டங்களும், அவற்றின் உடைந்த ஓடுகளும் இத்தீவுகளில் ஏராளமாகக் கிடைத்துள்ளன. அவற்றில், சமய வழிபாட்டிற்குரிய பல்வேறு குறிகளும், வடிவங்களும் காணப்படுகின்றன. இம்மட்கலக் குறிகளால் (Graffiti) இரண்டு உண்மைகள் புலப்படுகின்றன' ஒன்று சிவ வழிபாடு அங்குச் செல்வாக்குற்று இருந்தமையாகும். சூரியனின் வடிவம், சிவலிங்க வடிவம், விநாயகருடைய புனையா ஓவியம் போன்றவை, மண்பாண்டங்களின் மீது வரையப்பட்டுள்ளமை நம் கருத்தைக் கவருவதாகும்.

---

7. Ajit Singh Rye, India-Philippines cultural Relations, P.36

அடுத்துப் பல்லவர் காலத்திய கிரந்த எழுத்துகளில் வழிபாட்டு மந்திரங்கள் சுலோக வடிவில் எழுதப்பட்டுள்ளன. மற்றும், அம்மண்பாண்டங்களைச் செய்த குயவர் குழுக்களைப் பற்றிய குறிப்புகளும் அவ்வெழுத்துகளில் காணப்படுகின்றன. இவை தமிழ்நாட்டு மக்கள் பலர், அங்கு வாழ்ந்தமைக்குச் சான்று பகருகின்றன.

## சுடுமண் (Terracotta) பொம்மைகள்

நாட்டுப்புற மக்களுடைய வழிபாட்டு முறைகளில், இன்றைய தமிழகத்தில் 'சுடுமண்' சிலைகள் இடம்பெறுவதை யாரும் புறக்கணிக்க இயலாது.

பிலிப்பைன்ஸ் தீவுகளில் சுடுமண்ணால் செய்யப்பட்ட விநாயகர், தாய்த் தெய்வம், குதிரைவீரர், சேவல், மயில், வேலேந்திய வீரன் (முருகன்) முதலிய சிலைகள் பரவலாகக் கண்டு எடுக்கப்பட்டுள்ளன.

இச்சின்னங்கள் யாவும், அத்தீவுகளில் சிவ வழிபாட்டின் தொன்மைச் சிறப்பைப் புலப்படுத்துகின்றன.

## சிவலிங்கம்

ஒருவகைச் சரளைக் கல்லினால் செய்யப்பட்ட சிவலிங்கங்களும் பிலிப்பைன்ஸ் தீவுகளில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சிகளில் கிடைத்துள்ளன. இந்த லிங்கங்களும், சுடுமண் பொம்மைகளும் ஒருவகையான மண் அடுக்குகளில் கிடைத்துள்ளன. இதனால், சிவலிங்கங்களும், சுடுமண் பொம்மைகளும் சமகாலத்தனவாக (கி பி. 600 முதல் 750 வரை) இருத்தல் கூடும் என்பது தொல்லியலாரின் துணிவாகும்.

## கற்சிலைகள்

சைவ சமயம் இங்குச் செழிப்புற்று விளங்கிய காலத்தில் (கி. பி. 750-1000), சில சிவன் கோயில்களாகிலும், பல்லவர் கலைப் பாணியில் இத்தீவுகளில் எழுப்பப்பட்டு இருக்கவேண்டும் எனக் கருதுதற்குரிய தடையங்கள் பல கிடைத்துள்ளன.

கோயில்களின் கருவறைச் சுவர்கள், அடித்தளங்கள் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் கருங்கல்லினால் செய்யப்பட்ட நந்திகள், விரிந்த தாமரை மலர் செதுக்கப் பட்டுள்ள வாயிற்படிகள், செடி கொடிகள், தேவர்கள் செதுக்கப் பட்டுள்ள நிலைப்படிகள், பட்டைத் தீட்டப்பட்ட தூண்களின் உடைந்த

துண்டுகள், வெண்கலத்தால் செய்யப்பட்டுள்ள வழிபாட்டிற் குரிய கருவிகள், உடைந்த சிலைகள் போன்றவையாவும், இஸ்லாமியரின் ஊடுருவலுக்கு முன்னர், இத்தீவுகளில், சிவ வழிபாடு நிலைபெற்றிருந்ததைத் தெரிவிக்கின்றன.

திமோர் தீவில் மும்மூர்த்தி மகாகாலன் சிலைகளும் அகழ் வாராய்ச்சியில் கிடைத்துள்ளன. இங்குக் கிடைத்துள்ள கற்சிலைகள் யாவுமே, வழிபாட்டில் இருந்திருக்க வேண்டும் என்பது கலையியலார் கருத்தாகும்.

திருமாலின் நின்ற கோலச் சிலைகள் சில, இருதேவியருடன் கிடைத்துள்ளன. பல்லவர் காலத்திய கூருளைவடிவில் செய்யப் பட்ட திருமுடியுடைய திருமால் அணிந்துள்ள கோலத்தில் காட்சி தருகிறார். உடல்வாகும், கட்டமைப்பும், நுட்பமான அணிகல வேலைப்பாடும் காஞ்சியின் கோயில்களில் உள்ள மூலவர் திருமால் சிலைகளைப் பெரிதும் ஒத்துள்ளன.

இவை அல்லாமல் சக்தி, விநாயகர், கந்தன் (முருகன்) சிலைகளும், மயில், கருடன் போன்றதெய்வ வாகனச்சிலைகளும் கிடைத்துள்ளன. நியூகினியாவிலும் சிவவழிபாட்டு நெறிக்குரிய சிலைகளும் தடையங்களும் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன.

## வெண்கலச் சிலைகள்

பிலிப்பைன்ஸ் தீவுகளில் செப்பினால் செய்யப்பட்ட சிவ பெருமானின் உருவம் ஒன்றும், பொன்னால் செய்யப்பட்ட பெண் தெய்வத்தின் சிலை ஒன்றும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அத்தீவுகளில் நெடுங்காலத்திற்கு முன்பே, சைவசமயம் பெற்று இருந்த செல்வாக்கிற்கு அவை சான்று பகருகின்றன. அவை, தமிழகத்தின் சோழர் காலத்திய வெண்கலச் சிலைகளின் கலைப் பாணியைப் பின்பற்றிச் செய்யப்பட்டுள்ளன. பெண் தெய்வத் தின் உடற்கூறும், ஆடை அணிகளும் தமிழ்நாட்டுப் பெண்களின் தோற்றப் பொலிவை நினைவூட்டுகின்றன.

சிவபெருமான், பார்வதி, கணேசர், முருகன் முதலியோர் சிலைகள் தொடக்க காலச் சோழர் கலைப்பாணியை ஒட்டிச் செய்யப்பட்டனவாகத் தோன்றுகின்றன.

பொன்னினால் செய்யப்பட்ட தாரை (பௌத்த சமயப் பெண் தெய்வம்)யின் சிலை ஒன்றும் இங்கு அகழ்ந்து எடுக்கப் பட்டுள்ளது. இது, சாவானிய கலைப் பண்புடையதாகத் தோன்றுகிறது.

இவற்றால், பிலிப்பைன்ஸ் தீவுகளில் தமிழ்நாட்டுக் கலை முறைபெற்றிருந்த செல்வாக்கை அறிய இயலுகிறது.

## பழக்க வழக்கங்கள்

பிலிப்பைன்ஸ் தீவுகளுள் மிண்டாநாவோ (Minda Navo) லூசான் (Luzon) எனும் இரு தீவுகளில், தமிழ்ப் பண்பாட்டின் பெருந்தாக்கத்தை எளிதில் காணமுடிகிறது.

ஒரு நாட்டு மக்களுடைய பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் போன்றவை, அந்த நாட்டு மக்கள் அடைந்துள்ள உள்ளப் பண்பாட்டின் மேம்பாட்டையும் நாகரிகச் சிறப்பினையும் அறிவிப்பனவாகும்.

இந்தோனேசிய மக்களுடைய பழக்க வழக்கங்களிலும், நம்பிக்கைகளிலும் தமிழ்ப் பண்பாட்டின் செல்வாக்கினை இனி அறிய முயலுவோம்.

## மலர்களை அணிந்து மகிழ்தல்

அன்றாட வாழ்க்கையில் பிலிப்பைன்ஸ் தீவுமக்கள், பல்வேறு நிலைகளில் மலர்களைச் சூடுவதும், மலர்மாலைகளை அணிவதும், மலர்க்கொத்துகளையும், கோதைகளைச் சூடுவதும் மகிழ்ச்சிக்கும் மங்கலத்திற்குமுரிய சின்னமாகப் பயன்படுத்தி வருகின்றனர்.[8]

## தாலி கட்டுதல்

பிலிப்பைன்ஸ் தீவுகளுள் நீக்கிரிட்டோ (Negrito) பழங்குடி மக்களிடம், மாப்பிள்ளை, மணமகளுக்குத் தாலிகட்டும் வழக்கம் இன்றும் இருந்து வருகிறது. மற்றும் 'தாலி' எனும் சொல், பிலிப்பைன்ஸ் மக்களுடைய மொழியில், 'கொடி' (சரடு) எனும் பொருளில் வழங்கப்பட்டு வருகிறது.

## மகப் பேற்றின் முக்கியத்துவம்

இங்கு வாழும் இகரேட்டோ (Igorato), இபுகாவோ (Ifugao) பழங்குடி மக்களிடம், மகப்பேறு வாய்க்கவில்லை யானால், தங்களுக்குச் சுவர்க்கம் கிடைக்காது எனும் நம்பிக்கை இருந்து

---

8. Tamil Culture, Vol. 4, P. 348.

வருகிறது. 'பொன்போற் புதல்வரைப்' பெறாதவர்க்குச் சுவர்க்கம் கிடைக்காது என்பது புறநானூற்று (9) க் காலத் தமிழரின் நம்பிக்கை மட்டும் அன்று. இன்றும், அவ்வாறு நம்புகின்ற மக்கள், தமிழகத்தில் மிகப் பலராக உள்ளனர்.

### மாதவிடாயின் பொழுது மகளிரைத் தனியே ஒதுக்கி வைத்தல்

இப்பழக்கம் பன்னெடுங் காலமாகத் தமிழ் நாட்டில் இருந்து வருகிறது. சங்க காலத்தில் 'வீட்டு விலக்கு' ஆன மகளிரைக் 'கலந்தொடா மகளிர்' என்று குறிப்பிட்டுள்ளனர்.[9] இந்தப் பழக்கம் இன்றைய தமிழகத்தில் அருகி வருகிறது.

ஆனால், பிலிப்பைன்ஸ் தீவுகளில் இன்றும் வழக்கில் உள்ளன. வீட்டு விலக்கில் உள்ள பெண், மீன்பிடிக்கும் வலைகளையும், சேவல்களையும் கோழிகளையும் தொடக் கூடாது எனும் விதியைக் கண்டிப்பாகப் பின்பற்றி வருகின்றனர்.

அந்தப் பெண் மீன்வலையைத் தொட்டுவிட்டால் தீட்டுப் பட்டு விடுமாம். அதனால், அந்த வலையைக் கொண்டு சென்று மீன்பிடிக்க முயன்றால், அதில் மீன்கள் சிக்காது எனும் மூடநம்பிக்கை அவர்களிடம் இருந்து வருகிறது. மற்றும் தீட்டுப்பட்ட சேவல் போரில் தோற்று விடும் எனும் நம்பிக்கையும், தீட்டுப்பட்ட பெட்டைக் கோழி, முட்டைகள் இடாது எனும்அச்சமும்அம்மக்கள் இடையே இன்றும் இருந்துவருகின்றன.

### குழந்தைக்குத் தீட்டுக் கழிக்கும் சடங்கு

குழந்தை பிறந்த ஒன்பதாம் நாள், தாயையும் சேயையும் எண்ணெய் முழுக்குச் செய்து, அதன் பிறகு ஒரு சடங்கு செய்வார்கள். இதனைத் தொல்காப்பியனார் 'நெய்யணி மயக்கம்' [10] எனக் கூறுவர்.

குளிப்பாட்டிய குழந்தையைப் புதிய பிரப்பங் கூடையில் இடுவர். இதற்கு முன்பு சாணி, அரிசி, மலர், காசு முதலியவற்றை அக் கூடையில் இடுவர். பிறகு குழந்தையை அக்கூடையில் இட்டு, மூன்று வாழ்வரசிகள் அந்தக் கூடையைப்பிடித்து,

---

9. புறநா - 299
10. தொல். பொருள். கற்பு, நூ. 5.

மூன்று முறை வீசியாட்டுவர். இந்தப்பழக்கம் தமிழ்நாட்டின் கிராமப் புறங்களில், முப்பது ஆண்டுகளுக்கு முன்புவரை பெரு வழக்காக இருந்தது.

இதே வழக்கம், 'பிசாயான்' (Bisayan) என்றும் பிலிப்பைன்ஸ் தீவு மக்கள் இடையே பெருவழக்காக இருந்து வருகிறது.

## குழந்தைக்குப் பெயரிடல்

கூடையில் இடுவதை அடுத்து, குழந்தைக்குப் பெயரிடுவர். மூதாட்டி ஒருத்தி, குழந்தையின் காதில் அப்பெயரை மூன்று முறை ஓதுவாள். பிறகு, முறத்தால் அக்குழந்தைக்கு விசிறிக் கொண்டே அப்பெயரை, அப்பெண்மணி மூன்று முறை வாய்விட்டு, அழைப்பதைப் போல கூப்பிடுவாள்.

இந்த வழக்கமும் தமிழகத்தின் கிராமப்புறங்களில், சிறப் பாக உழவர் பெருங்குடி மக்கள் இடத்து இன்றும் இருந்துவரும் வழக்கமாகும். மூன்றாவது முறவீச்சின் முடிவில் அடக்கமும் உழைப்பாற்றலும் பெற்று நீடூழிக் காலம் வாழுமாறு வாழ்த்து வார்கள். இப்பழக்கமும் மேற்கண்ட தீவு மக்களிடம் இருந்து வருவது வியப்பூட்டுகிறது. மற்றும் இச்சடங்கு முடிந்த பிறகு குழந்தையின் வாயில்—உதடுகளில்—பாலையும் தேனையும்தடவு வார்கள். பிலிப்பைன்ஸ் மக்கள், இதற்கு மாறாகக் குழந்தை யின் வாயில் உப்பைத் தடவுகின்றனர்.

## தீய சகுனங்கள்

பொதுவாகப் பிலிப்பைன்ஸ் மக்கள் வெளியில் புறப்படும் பொழுது பூனை வருவதைத் தீய சகுனமாகக் கருதுகின்றனர். இதைப் போல பகற்பொழுதில் ஆந்தை அலறினால், யாதோ, தீமை தங்களுக்கு உண்டாகப் போகிறது என்று பிலிப்பைன்ஸ் மக்கள் அஞ்சுகின்றனர்.

இவையாவும், தமிழ்நாட்டு மக்களுடைய நம்பிக்கைகள் எனச்சொல்லத் தேவை இல்லை!

## கிரகணம்

சூரிய, சந்திரரை ராகு, கேது எனும் பாம்புகள் விழுங்கு வதாலேயே, கிரகணம் உண்டாகிறது எனும் நம்பிக்கை அம் மக்களிடையே இருந்து வருகிறது.

இந்த நம்பிக்கை திருவள்ளுவருக்கும் இருந்தது.

கண்டது மன்னும் ஒருநாள்; அவர்மன்னும்
திங்களைப் பாம்புகொண்டு அற்று (திருக். 1146)

எனும் குறட்பாவால் இதனை அறிகிறோம். இந்த நம்பிக்கை இன்றும் ஏராளமான தமிழர்களிடம் இருந்து வருகிறது.

### சுவர்க்கமும் நரகமும்

புண்ணியம் செய்பவர் சுவர்க்கத்தை அடைவர் என்றும் பாவம் செய்வோர் நரகம் அடைவர் என்பதும் பிலிப்பைன்ஸ் மக்கள் நம்புகின்றனர். நல்வினை செய்வோர் நல்லுலகு (சுவர்க்கம்) அடைதலும் அல்வினை செய்வோர் இருளுலகு (நரகம்) அடைதலும் சங்க காலம் முதற்கொண்டு தமிழ்நாட்டு மக்கள் இடையே இருந்துவரும் நம்பிக்கையாகும்.

### பல தெய்வ வழிபாடு

இந்தியர்களைப் போலவே, பிலிப்பைன்ஸ் மக்களும் பல தெய்வ வழிபாட்டினை (Pantheism) மேற்கொண்டுள்ளனர்.

### முஸ்லீம் குழுக்களுக்கு இந்துதெய்வப் பெயர்கள்

தெற்குப் பிலிப்பைன்ஸில் முஸ்லீம்கள் பெருந்திரளாக வாழுகின்றனர். அவர்கள் ஐந்து பிரிவுகளாக வாழுகின்றனர். அப்பிரிவுகள் ஒவ்வொன்றுக்கும் இந்து சமயத் தெய்வங்களின் பெயர்களே, குழுப்பெயர்களாக இடப்பட்டுள்ளன. மகேசுவரா, ஸ்ரீ, காலா, பிரம்மா, விஷ்ணு என்பது அப்பெயர்களாகும்.

### உழவுத்தொழிலும் வாணிகமும்

தமிழ் நாட்டைப் போன்றே பிலிப்பைன்ஸ் மக்கள் உழவுத் தொழிலையும், கடலில் மீன் பிடிப்பதையும், வாணிகத்தையுமே பெரிதும் நம்பி வாழுகின்றனர்.

### இராமாயணக் கதையின் செல்வாக்கு

பிலிப்பைன்ஸ் தீவு மக்களுக்கு இராமாயணக் கதை நன்கு தெரியும். அதை நாட்டுப்புறப் பாடலாகவும், 'இசைப்பாடலாகவும் கதை தழுவிய கூத்தாகவும்' போற்றி வருகின்றனர்.

இராமயணக் கதையைக் கேட்பதில் அவர்களுக்குப் பேரார்வம் இருந்து வருகிறது.

அம்மக்கள் பெயர்களுள் பண்டைக் காலத்தில் இராமாயண வீரர்களின் பெயர்கள் இடம்பெற்றன. பெரிதும் கத்தோலிக்கராக மாறிவிட்ட இக்காலத்திலும் கிறித்துவப் பெயர்களுக்கு முன்னர், இராமாயணக் கதைப் பாத்திரங்களின் பெயர்கள் தலை எழுத்துகளாக அமைந்து இருப்பதைக் காணலாம்.[11]

## கிரந்த எழுத்துகள்

பிலிப்பைன்ஸ் அகழ்வாராய்ச்சியில் ஏராளமான மட்பாண்டங்களும், உடைந்த பானை ஓடுகளும் கிடைத்துள்ளன என்பதை முன்னரே கண்டோம்.

அப்பானை ஓடுகளில் பலவகையான வரிவடிவங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. 'அவை, எந்த மொழிக்குரிய எழுத்து வடிவங்கள்' என்பதிலே நெடுங்காலமாகக் கருத்து வேற்றுமை இருந்துவந்தது.

1936 அளவிலேயே, பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் அவை, 'பல்லவ கிரந்த' எழுத்துகள் என்பதை உலகிற்கு அறிவித்தார். ஆனாலும், சில அமெரிக்க அறிஞர்கள் வேறுவகையாகக் கருதினர்.

பின்னர் 1945 அளவில் நெதர்லாந்து நாட்டு அறிஞரான ஜி. கோயிடஸ் என்பவர், கூர்த்த மதியுடன், உலகத்தின் பல்வேறு எழுத்துவடிவங்களோடு ஒப்பிட்டு ஆராய்ந்து, இறுதியாகப் 'பல்லவரின் கிரந்த எழுத்துகள் சிற்சில மாறுதல்கள் செய்யப்பட்டு, பிலிப்பைன்ஸ் தீவில் பயன்படுத்தப்பட்டுள்ளன'[12] எனும் முடிவிற்கு வந்தார்.

இவருடைய துணிவுரை, ''இந்தோனேசியாவின்—ஏன் தென்கிழக்கு ஆசியாவின் பல்வேறு நாட்டு மொழிகளின் எழுத்து வடிவங்களும் கிரந்த எழுத்து முறையை அடியொற்றியே அமைத்துக் கொள்ளப்பட்டவை'' எனும் பிற அறிஞர்களின்

---

11. Juan R. Francisco Ramayana in Philippines, in The Contributions of India to the world Thought and Culture, PP. 565-572.
12. C. I Quirzton, Indian Influences in the philippines with special reference to Language and Literature PP.42-45.

கருத்துகளை அரண்செய்வதாக அமைந்துள்ளதைக் காணு கின்றோம்.

ஜப்பானிய மொழியின் எழுத்துவடிவம், கி. பி. ஏழாம் நூற்றாண்டில், தமிழ் நாட்டின் காஞ்சியைச் சேர்ந்த போதி தருமரால், 'பல்லவ-கிரந்த' எழுத்துகளை அடிப்படையாகக் கொண்டு வகுத்து அளிக்கப்பட்டதாக மொழியியல் அறிஞர்கள் நிறுவியுள்ளனர் எனும் கருத்தும் இங்கு நினைவு கூர்தற்குரிய தாகும்.

மேற்கண்ட தொல்பொருள் சின்னங்களாலும் வரலாற்றுக் குறிப்புகளாலும் தொல்பழங்கால முதற்கொண்டே, தமிழ் நாட்டிற்கும் பிலிப்பைன்ஸ் தீவுகளுக்கும் பண்பாட்டுத் தொடர் பும், வாணிகத் தொடர்பும் இருந்து வந்திருக்கிறது எனும் உண்மை புலனாகிறது. மற்றும், அத்தொடர்பு பல்லவர், சோழர் ஆட்சிக்காலத்தில் இருந்துபெருகிவந்து இருக்கிறது என்பதும் தெரிய வருகிறது.

மேலும், ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியாரின் ஆட்சிக் காலத்தில், எதிர்பாராவகையில் அங்கு விடப்பட்டு வந்த தமிழ் நாட்டு வீரர்கள், அத்தீவுகளின் பெண்களை மணம் புரிந்து கொண்டு வாழ நேரிட்டமையால், புதியதொரு கலவை இனத் தார்-தமிழகப் பிலிப்பைனிய மக்கள் சமூகம்-அங்குப்பையப்பைய தோன்றி வளர்ந்துள்ளமையும் நம் கருத்தைக் கவருவனவாக உள்ளன.

இவ்வாறு தென்கிழக்குஆசியாவில் பர்மாமுதல்பிலிப்பைன்ஸ் வரையில் தமிழ் மக்களின் குடியேற்றங்கள் சங்க காலம் (கி. மு. 300- கி. பி. 350) முதற் கொண்டு ஆங்கிலேயர் ஆட்சிக் காலம் வரையில் பரவலாக அமைக்கப்பட்டுள்ளமை, மனிதஇன வரலாற்றில் சுவைமிக்க ஓர் இயலாக அமையத்தக்க சிறப்புடைய தாகும்.

# 7. 4. 8.
# இந்தோனேசிய மொழியில் தமிழ்ச் சொற்களும், தமிழ் நாட்டு எழுத்து முறையும்

இந்தோனேசியா, மிகவும் பரந்துபட்ட தீவுகளைக் கொண்ட ஒரு குடியரசு நாடாகும். பல்வேறு இன, சமயச் சார்புடைய மக்கள், இக்குடியரசில் வாழ்ந்து வருகின்றனர். மேலும் அவர்கள் பேசிய- பேசிவரும் மொழிகள் ஏறக்குறைய இருநூற்று எண்பது என்று மொழியியலார் கணக்கிட்டுள்ளனர். இத்தகைய பலதிறப்பட்ட வேறுபாடுகளைக் கொண்ட நாடாக இது விளங்கிவருகிறது. இதனாலேயே, அந்நாட்டிற்கு விடுதலை பெற்றுத் தந்த மாபெருந் தலைவர் சுகர்ணோ, 'வேற்றுமை களுக்கு இடையே ஒற்றுமை' காண்பதையே, தம் குடியாட்சியின் தலையாய கொள்கையாக அறிவித்தார்; தேசிய வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் இந்தக் கொள்கையைக் கடைப்பிடித்து, நல்லதொரு எதிர்காலத்தை அவர் அமைத்துத் தந்தார்.

மற்றும், மொழியால் பிளவுபட்டு, விளங்கும் மக்கள் இடையே 'தேசிய மொழி ஒன்றே' எனும் கோட்பாட்டை உருவாக்கினார்.

இந்தோனேசியாவின் தேசிய மொழிக்குப் 'பாஷா இந்தோ னேசியா' என்பது பெயராகும். கடந்த முப்பத்தைந்து ஆண்டு களில், தேசிய மொழிப் பையப் பைய வளர்ந்து, சிறந்து, இந்தோனேசியாவின் ஒப்பற்ற மொழியாகப் பெருவாழ்வு பெற்றுள்ளது. தாய் மொழிக்கு அடுத்த நிலையில், 'தந்தை'

மொழியாகப் பல்வேறு தீவுகளில் வாழும் இளைய தலை முறையினர் — புதிய தலைமுறையினர் — இந்தோனேசிய மொழியை எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டு வருகின்றனர். இதனால், மொழிவழித் தேசிய உணர்வு, அவர்கள் இடையே எழுச்சியும் ஏற்றமும் பெற்று வருகிறது.

## இந்தோனேசிய மொழியில் தமிழ்ச் சொற்கள்

பன்னெடுங்காலமாகத் தமிழ் நாட்டோடு தொடர்பு கொண்டுள்ள இந்தோனேசிய மொழியில் தமிழ்ச் சொற்கள் பலவும், தமிழ் வழிச் சம்ஸ்கிருதச் சொற்கள் சிலவும் பேச்சு வழக்கிலும், இலக்கிய வழக்கிலும் இடம் பெற்றுள்ளன. ஆனால், பொருளில் மட்டும் சிறிது மாற்றத்தை அவை அடைந்துள்ளன.

## பொருள் திரிந்த தமிழ்ச் சொற்கள்

| ஜாவா, சுமத்திரா முதலிய தீவுகளில் வழங்கும் தமிழ்ச் சொற்கள் | | திரிந்த பொருள் |
|---|---|---|
| 1. கவி | ... | தோழன் |
| 2. காப்பாளர் | ... | காவலர் |
| 3. செட்டி | ... | விற்பவன் |
| 4. தம்பி | ... | இளைஞர், தவறு செய்யும் பையன் |
| 5. திசாந்து (சாந்து) | ... | அபினி |
| 6. பணம் | ... | துணை |
| 7. மதிப்பு | ... | நிலை |

## வடிவில் திரிந்த தமிழ்ச்சொற்கள்

அடுத்து வடிவில் திரிந்து வழங்கும் தமிழ்ச் சொற்கள் பல, இந்தோனேசிய மொழியில் வழங்கி வருகின்றன.

| தமிழ்ச் சொற்கள் | | திரிந்த வடிவம் |
|---|---|---|
| 1. அச்சு | — | அதிச் |
| 2. இஞ்சி | — | இஞ்சா |
| 3. இலை | — | ஹெலை |
| 4. கடலை | — | கடலா |

| | | |
|---|---|---|
| 5. காட்டு | — | கூட்டி |
| 6. கிடங்கு | — | குடங்கு |
| 7. குடுமி | — | கல்டியுமக் |
| 8. குண்டு | — | கண்ட்டோ |
| 9. கொத்தமல்லி | — | கெத்துமலரான் |
| 10. சீ | — | சே |
| 11. சீச்சி | — | சிஸ் |
| 12. செருப்பு | — | தெஜாப்பு |
| 13. பவளம் | — | புதலான் |
| 14. மாங்காய் | — | மங்கா |
| 15. முதல் | — | மொடல் |
| 16. வட்டி | — | கெஜட்டி |
| 17. வடை | — | படை |
| 18. வண்ணான் | — | பெருண் |
| 19. விலங்கு | — | பெலுங்கான் |
| 20. வேசி | — | பேசி |
| 21. வைரம் | — | வேளரம் |

## சம்ஸ்கிருதச் சொற்கள்

தமிழின் மூலம் இந்தோனேசிய மொழியில் நுழைந்த வட சொற்கள் சில உள்ளன.

| தமிழ்வழி சம்ஸ்கிருதச் சொற்கள் | | இந்தோனேசியச் சொற்கள் |
|---|---|---|
| 1. கஜம் (யானை) | — | கஜா |
| 2. கொலா (சருக்கரை) | — | குலா |
| 3. தேவதா (பெண் தெய்வம்) | — | தேவதா |
| 4. நாகம் | — | நாகா |
| 5. பீஜம் (விதை) | — | பிஜி |
| 6. புத்ரி | — | புத்திரி |
| 7. மந்திரி | — | மந்திரி |
| 8. மோக்ஷா | — | மோட்சா |
| 9. ராஜா | — | ராஜா |
| 10. விஷம் | — | விஷா |

## தனித்தமிழ்ச் சொற்கள்

இவை அல்லாமல் தனித்தமிழ்ச் சொற்களும் இந்தோனேசிய மொழியில் வழங்குகின்றன.

| | |
|---|---|
| அப்பம் | சுக்கு |
| இடம் | பண்டம் |
| கஞ்சி | பண்டிதர் |
| கட்டில் | மணி |
| கடமை | மாமா |
| கலம் | மாமி |
| காட்டு | முகம் |
| காவல் | முத்து |
| கூண்டு | வட்டில் |
| கூலி | |

என்பனவாகும். இவையாவும் பண்டைய சாவகக் கவிதையில் ஆளப்பட்டுள்ளன. இவை அல்லாமல், கப்பல், குதிரை, கூடை, தாலி, பிட்டு (உணவு வகை), பெட்டி எனும் சொற்களும் இந்தோனேசியத் தீவுகளில் வழங்கும் மொழிகளில் காணப்படு கின்றன.[13]

பாலியின் தென்பசார் எனும் தலைநகருக்கு அருகில் தமிழருடைய மரக்கலம் ஒன்று மோதுண்டு அழிந்த இடம் இருக்கிறது. அக்கரையை அடுத்துள்ள ஊரைக் 'கப்பால்' எனும் பெயரால் அழைக்கின்றனர்.[14]

மற்றும் பாலித்தீவில், கோயிலைக் 'கூயில்' எனக் குறிப்பிடு கின்றனர்.

இந்த வழக்காற்றுச் சொற்கள் யாவும், இன்றும் தமிழ் நாட்டு மக்களின் உதடுகளில் எல்லாம் உலாவரும் தமிழ்ச் சொற்களாகும்.

ஈராயிரம் கி. மீ. களுக்கு அப்பாலுள்ள நாடுகளில், தமிழ் மொழிச் சொற்கள், நிலையான வழக்காற்றைப் பெற்று இருப்பது வியப்பிற்குரிய செய்தியாகும்.

இத்தகைய வேற்று மொழிச் சொற்கள் அயல் மொழி ஒன்றில் வழங்க வேண்டும் எனில், அதற்கு மொழியியல் அறிஞர் இரு காரணங்களைக் காட்டுவர். முதலாவதாக வேற்று மொழி (தமிழ்) பேசும் மக்கள் அயல் (இந்தோனேசிய) நாட்டில் கணிசமான அளவிற்கு நெடுங்காலம் வாழ்ந்து இருக்க வேண்டும்;

---

13. Audilakshmi Anjaneyalu, 'Tamil words in the Indonesian and malayan Languages' in Tamil Culture, Vol IX; No 1. Jan.—Mar 1951, pp. 43-55.
14. சேவியர் தனிநாயகம், தமிழ்த்தூது. ப. 117.

காலப்போக்கில், குடியேறிய அயல் நாட்டு மக்களோடு, மக்களாக மாறிப் போய் இருக்க வேண்டும். அம்மொழிகள் வழங்கும் இரு நாடுகளுக்கு இடையே மிகநெருக்கமான வாணிக, பண்பாட்டுத் தொடர்பு நெடுங்காலம் நிலவி இருக்க வேண்டும் என்பது இரண்டாவது காரணமாகும். இவ்விரு காரணங்களும் நம் தமிழ் மொழிக்கு முற்றிலும் பொருந்துவனவாக உள்ளன.

இவ்வாறு இந்தோனேசிய மொழியிலும், நாட்டிலும் தமிழ்ப் பண்பாட்டின் கூறுகள் இன்றும் அழியாத அடிச்சுவடுகளைப் பொறித்துள்ளன.

## இந்தோனேசியாவில் 'பல்லவ - கிரந்த' எழுத்துகள்

இந்தோனேசியாவில் ஏறக்குறைய இருநூற்று எண்பது மொழிகள் வழங்கிவருகின்றன. அவற்றுள், சிலவற்றுக்கே எழுத்துகள் வகுக்கப்பட்டுள்ளன.[15] அவற்றின் எழுத்தும் காலந்தோறும் மாறிவருகின்றன.

பல்லவர் ஆட்சிக் காலத்தில், தமிழ் நாட்டில் சம்ஸ்கிருத மொழியை எழுதுவதற்காகக் கிரந்த எழுத்துகள் அமைத்துக் கொள்ளப்பட்டன. ஏறக்குறைய கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் 'கிரந்த எழுத்துகள்' வடிவம் பெற்றன எனலாம். கீழைச் சாவகத்திலும், கீழைக்கலிமந்தானிலும் கி. பி. ஆறாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே, பல்லவ-கிரந்த எழுத்துகளில் பொறிக்கப்பட்ட சம்ஸ்கிருத மொழிக் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன.

கி. பி. எட்டாம் நூற்றாண்டில் கீழைச் சாவகத்தில், ஜாவானிய மொழிக்கு எழுத்து வடிவம் வகுக்கப்பட்டது. அந்த எழுத்துகள் 'பல்லவ கிரந்தத்தை' அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டன.

பின்னர், ஜாவாவில், மலாய் மொழியே செல்வாக்குப் பெற்றது. இதனுடைய எழுத்து முறையும் 'பல்லவ-கிரந்தத்தை'த் தழுவியதாகும். இதனை, ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த சுமத்திராவின் கல்வெட்டுகளால் அறிகிறோம்.

கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் உண்டான இஸ்லாமியரின் ஆதிக்கத்தால் மேற்கண்ட இந்தோனேசிய 'மலாய்' மொழிக்கு அராபிய எழுத்துமுறைவகுத்துக் கொள்ளப்பட்டது.

15. செ. வை. சண்முகம், 'இந்தோனேஷிய எழுத்துகள்' புலமை, தொ. 4: பகுதி 1. முதல் இதழ் மார்ச் 1978.ப.3

விடுதலைக்குப்பிறகு சிறுபான்மையரால் பேசப்பட்டு வந்த மலாய் மொழிக்கு 'இந்தோனேசிய மொழி' எனும் பெயரைச் சூட்டி, அதனை தேசிய மொழியாக்கிக் கொண்டனர். சமயத் தொடர்புடைய அராபிய எழுத்தை மாற்றி, ரோமானிய எழுத்து முறையை இந்தோனேசிய தேசிய மொழியின் எழுத்து வடிவமாக மாற்றிவிட்டனர்.

இதன்விளைவாக, முப்பது ஆண்டுகளில் ஆட்சிமொழி, பயிற்று மொழி, நீதித்துறை ஆகியவற்றின் மொழியாக இந்தோனேசிய மொழி பெருவாழ்வு பெற்றுள்ளது இங்குச் சிந்திக்கத்தக்கதாகும்.

கி. பி. பதினாறாம் நூற்றாண்டு வரையில் 'பல்லவ-கிரந்தமே', இந்தோனேசிய மொழிகளின் எழுத்து முறை வரி வடிவங்களாக இருந்து வந்தமை, உலக வரலாற்றில் சிறப்பு மிக்க ஒரு செய்தியாகும்.

# 8.

## நிறைவுரை

தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு பரவிய பாங்கினை ஓரளவு முழுமையாகக் காண முயன்றோம். இயன்ற வரையில், நடுவுநிலையில் நின்று, இரு எல்லைகளுக்கும் போகாமல், எனக்குப் புலனாகிய உண்மைகளை, உள்ளவாறு காணவும், காட்டவும் அரும்பாடுபட்டுள்ளேன். இந்நூலில் கோடி காட்டப்பட்டுள்ள தமிழ்ப்பண்பாட்டின் கூறுகளுள், ஒன்றுகூட உயர்வு நவிற்சியாக அமைந்தது அன்று என்பது என்னுடைய தாழ்மையான கருத்து.

கடந்த நூறு ஆண்டுகளாகத் தென்கிழக்கு ஆசியாவைப் பற்றி, நடைபெற்று வரும் ஆராய்ச்சிகள் பரந்துபட்டவையாகும். 'இந்திய நாட்டின் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த வரலாற்றாசிரியர்களும்' ஆராய்ச்சிப் பேரறிஞர்களும், தென் கிழக்கு ஆசிய நாடுகளில், பரவியுள்ள இந்துப் பண்பாடு தத்தம் வட்டார - மாநிலப் பண்பாட்டு மரபுகளே எனும் எண்ணத்தை எழுப்பும் வகையில் மிகைபடக் கூறியுள்ளனர், எனும் குற்றச்சாட்டு, பரவலாகத் தென்கிழக்கு ஆசிய நாடு களின் ஆராய்ச்சி உலகில் நிலவிவருகிறது. இக்கூற்று, பேரள விற்கு உண்மை என்பதனை யாரும் மறுக்க இயலாது.

ஆனால், அவ்வாராய்ச்சியாளர்கள், தமிழ் நாட்டிற்கும், தமிழ்ப் பண்பரட்டிற்கும் முறைப்படித் தந்திருக்க வேண்டிய முக்கியத்துவத்தையும் முதன்மை இடத்தையும் தருவதற்குத் தவறிவிட்டனர் எனக்கூறுவது தவறாகும்; 'மூடிமறைத்து விட்டனர்' எனச் சொல்லுவதே சாலவும் பொருந்தும்.

இந்நூலாசிரியர், 'உலகிற்கு உண்மையை உணர்த்த வேண்டும்' எனும் ஆர்வத்தோடு, அரிதின் முயன்று 'தமிழ்ப்

பண்பாட்டின் தலைமைக் கூறுகள்' எவ்வாறு, எங்கெங் கெல்லாம், எவ்வெக்காலங்களில், யார்யாரால் கொண்டு சென்று பரப்பப்பட்டன என்பதைப் பகுத்துப்பகுத்துக்காட்ட முயன்றுள் ளார். 'முயற்சி முழுவெற்றி பெற்றுவிட்டது' என என்னால் கூற இயலாது. இந்நூலைப் படிக்கும் வாசகர்களே, இதைப்பற்றி முடிவுகட்ட வேண்டும்.

## நூலின் நோக்கும் போக்கும்

பலவகைச் சிக்கல்கள் நிறைந்த தென்கிழக்கு ஆசியாவின் வரலாற்றில், பெரும்பாலான அறிஞர்கள் உடன்படும், ஒப்ப முடிந்த கருத்துகளை மையமாகக் கொண்டு, இந்நூலின் பல்வேறு பகுதிகளும் சுற்றிச் சுழலுகின்றன.

கடந்த ஈராயிரம் ஆண்டுக்கால வரலாற்றுப் பின்னணியில், தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு, சென்று பரவிய வரலாற்றை வரன்முறைப்படுத்தித் தக்க சான்றுகளை அடிப் படையாகக் கொண்டு இந்நூலினை எழுதியுள்ளேன்.

தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பரவிய தமிழ்ப்பண்பாட்டின் கூறுகளைப் பதினாறு வகையாகப் பாகுபடுத்திக் கூறலாம். அவற்றை ஒரு பறவைக் கண்ணோட்டத்தில் காண முயலு வோம்.

## தொல்பழங்காலத் தொடர்பு

தென்னிந்தியாவும், கிழக்கேயுள்ள தென்கிழக்கு ஆசிய நாடுகளும், ஆஸ்திரேலியாவும் ஒரு நிலப்பரப்பைச்சேர்ந்தன வாக இருந்தன. இதைப் போன்றே, தென்னிந்தியாவின் மேற்குப் பகுதியிலுள்ள ஆப்பிரிக்காவும் இந்த நிலப்பரப்பின் ஒரு பகுதியாகவே இருந்தது. காலப்போக்கில் உண்டான கண்டப் பிளவுகளாலும், சிதைவுகளாலும், இந்த நாடுகள் சிதறுண்டு போயின. இவற்றிடையே கடல்கள் தோன்றின. இதனால், அந்நாடுகள் வெவ்வேறாகப் பிரிந்து போயின.

எனினும், இந்நாடுகளில் வாழும் மக்கள் இடையே, அடிப் படை உடற்கூற்று ஒப்புமைப் பண்புகள் இன்றும் முனைப் பாகத் தோன்றுகின்றன. ஆஸ்திரேலியாவின் பழங்குடி மக்கள், பிலிப்பைன்ஸின் ஆயிரக்கணக்கான தீவுகளில் வாழும் பழங்குடி மக்கள், பழையபாலி, செலிபஸ்,போர்னியோ, சுமத்திரா, ஜாவா தீவுகளில் வாழும் படாக் முதலிய பல்வேறு பழங்குடி மக்கள்

காம்பூச்சியா, வியட்நாம் நாடுகளில் வாழ்ந்து வரும் கெமர் இனமக்கள், பண்டைப் பர்மாவிற்குரிய மோன்கள், கேரேன்கள் போன்ற பழங்குடி மக்கள் எல்லாரும் பண்டைய ஆஸ்திரிக் பழங்குடி மக்களையும், திராவிட இனமக்களையும் பெரிதும் ஒத்தவர்களாக உள்ளமை, யாராலும் புறக்கணிக்க இயலாத உண்மையாகும்.

இந்நாடுகளில் காணப்படும் மாவடை மரவடைகளும்-விலங்குகளும் பறவைகளும், செடி கொடிகளும் மரங்களும்—வெப்ப மண்டலத்தைச் சேர்ந்த தமிழ்நாட்டில், இன்றும் பேரளவிற்குக் காணப்படுகின்றன.

மற்றும் தெற்காசியத் திராவிட இந்தியாவும், தென்கிழக்கு ஆசிய நாடுகளும் அரிசியையே, தலைமையான உணவுப் பொருளாகப் பயன்படுத்தி வருகின்றன. இவையாவும் பருவமழை (Monsoon) யைப் பெறும் ஆசிய நாடுகள் என்பதனை மறுப்பார் இல்லை. வேளாண்மைத் தொழிலே இந்த நாடுகளுடைய பொருளாதாரத்தின் முதுகெலும்பாக இருந்து வருவது மற்றொரு பொதுமைப்பண்பாகும்.

'இத்தகைய பொதுமைப் பண்புகளுக்குரிய காரணம்யாது?' எனும் வினாவினை எழுப்பும் நிலப்பொதியியலார். (Geologists) நம் நினைவிற்கு எட்டாத ஒரு காலத்தில் இந்த நாடுகள் யாவும், ஒரே நிலப்பரப்பாக இருந்திருக்க வேண்டும் எனும் முடிவிற்கு வந்துள்ளனர்.[1]

## வரலாற்று நூலின் தொடக்கத்திற்கு முன்னர்

ஏறக்குறைய ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்பு இருந்து, கி.மு. 1500 வரையில், தென்னிந்தியாவின் பழங்குடிமக்களான திராவிடர்கடல் வழியாகவும், நிலவழியாகவும் தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்குச் சென்று குடியேறியுள்ளனர் என்பதனைத் தொன்மைக்காலப் பழம்பொருள் சின்னங்கள் தெரிவிக்கின்றன.

தமிழ் நாட்டில் 'ஆதிதிராவிடர்' எனக் கருதப்படும் ஆஸ்திரிக் பழங்குடி மக்கள் இந்தோனேசியாவின் பல பகுதிகளில் வாழ்ந்து வருகின்றனர் (ப. 352). இவர்களுடைய இடப்பெயர்ச்சி அலைவுகளைத் திட்டவட்டமாகக் கூற இயலவில்லை.

1. Alexander Kondratov, The Riddles of three Oceans, PP. 121- 127.

எனினும், இம்மக்கள் புதுக்கற்கருவிக் காலத்தில், (கி. மு. 2000) இடம் பெயர்ந்து இருக்கலாம் என்று நம்பப்படுகிறது.

இந்தக் கால கட்டத்திலேயே தமிழகத்தில் பெருங்கற்படைப் (Megalithic) பண்பாடு அரும்பியது.

தமிழ்நாட்டில்

பெருங்கற்படைப்

பண்பாடு

தமிழ் நாட்டில் இரும்புக்கருவிக் காலம் கி. மு. 200 அளவில் புதிய கற்கருவிக் காலத்தின் இறுதியிலேயே பெருங்கற் பண்பாட்டுக்காலம் தொடங்கிவிட்டதைக் காண்கின்றோம.

தமிழ் நாட்டில் சிறப்பாகத் திருச்சிராப்பள்ளி வட்டாரத்தில் நான்காயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, 'இரும்பு' பயன்படுத்தப்பட்டதைப் புரூஸ் புட்(Bruce Foote) எனும் அறிஞர் நிறுவியுள்ளார்.[2]

இப்பண்பாட்டின் சின்னங்களாகக் கல்லறைகளே கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அவை பெரிய கற்பாறைகளையும் கற்பலகைகளையும் கொண்டு அமைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஏராளமான இரும்புக்கருவிகள் கிடைத்துள்ளன.

தமிழ் நாட்டில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள பெருங்கல் பண்பாட்டுச் சின்னங்கள் இறந்தோன் அடக்கம் செய்யப்பட்ட புதைகுழிகளாகவும். நினைவுச் சின்னங்களாகவும் உள்ளன. இறந்தோரை தாழியில் புலதப்பது புதிய கற்கருவிக் காலத்தின் கடைப்பகுதியில் வழக்கிற்கு வந்தது. அத்தாழிகளில் இரும்புக் கருவிகள் காணப்படுகின்றன.

எனவே, பெருங்கல் பண்பாடு இரும்புக் கற்கருவிக் காலத்தின் இடைப்பகுதியில் தோன்றியதாகவே தெரிகிறது.

தாழிப் புதையல்கள் காலத்தால் முற்பட்டவை. இச் சின்னங்கள் செங்கற்பட்டு மாவட்டத்தில் அமிர்தமங்கலத்திலும், மதுரை மாவட்டத்தில கொற்கையிலும், திருநெல்வேலி மாவட்டத்தில் ஆதிச்ச நல்லூரிலும் அகழ்ந்து எடுக்கப் பட்டுள்ளன.

பெருங்கல் பண்பாட்டுப்புதைகுழிகள் எட்டு வகையாக உள்ளன. அவை கல்வட்டம், கல்லறை, குடைக்கல், தொப்பிக் கல், குடைவரைக் குகை, குத்துக்கல், நடுகல், ஈமத்தாழி என்பன.

2. Bruce Eoote, pre- Historic Antiquities, P.25.

தாழிப் புதையல்களைப் பற்றியும் நடுகற்களைப் பற்றியும் சங்க இலக்கியப் பாடல்களிலும் தமிழ் இலக்கியங்களிலும் ஏராள மான குறிப்புகள் உள்ளன.[3]

இவற்றாலும் அகழ்வாராய்ச்சியாலும் கி. பி. நான்காம் நூற்றாண்டு வரை பெருங்கல் பண்பாடும், தாழிப்புதையலும் செல்வாக்குப் பெற்றிருந்ததை அறிகிறோம்.

அவற்றில் இரும்புக் கருவிகளும், பொன், வெண்கலக் கருவி களும், மண்பாண்டங்களும், சங்கு வளையல்களும், கண்ணாடி மணிகளும் பேரளவில் கிடைத்துள்ளன.

மகளிர் காலணியான சிலம்பு, சதங்கைப் போன்றவை வெண்கலத்தால் செய்யப்பட்டுள்ளன. பொற்பட்டங்கள், வேலின் முனைகள், சூலங்கள் போன்றவை அங்கு கிடைத்துள்ளன; முக்காலி, கிண்ணம், கெண்டி, தயிர்ப்பானை, எண்ணைக் கிண்ணம் போன்ற மண்பாண்டங்களும் கிடைத்துள்ளன. இவை எல்லாம் சூளையிடபட்டுள்ளன; சிவப்புக் கறுப்பு வண்ணங்களில் உள்ளன.

தாழிகளில் அரிசி, பருத்தி ஆடை, சாயம் முதலிய பொருள் கள் எலும்புகளோடு கலந்து காணப்படுகின்றன. பாண்டங்களின் விளிம்புகள் நன்கு வளைக்கப்பட்டுச் செந்நிறம் பூசப்பட்டுள்ளன

சுடுமண் வடிவங்கள், பளிங்குக் கல்லாலான மணிகள், எலும்பினால் செய்யப்பட்ட தோடுகள் முதலியன கிடைத் துள்ளன.

தமிழ்நாட்டுப் பெருங்கல் பண்பாட்டின் சிறப்பியல்புகளைக் கருத்தில் கொண்டு, தென்கிழக்கு ஆசிய நாடுகளில் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ள பெருங்கல் தொல்பொருள் சின்னங்களை முறைப்படுத்தி ஒப்புநோக்குகின்ற பொழுது புலனாகும் உண்மை கள் எத்துணை அளவிற்கு, இவற்றோடு ஒத்து வருகின்றன என்பதை நாம் அறியலாம். இந்த அடிப்படையில், தமிழ்நாட்டுப் பெருங்கல் பண்பாடு, தென்கிழக்கு ஆசிய நாடுகளில் உண்டாக்கி யுள்ள தாக்கத்தை மதிப்பிடலாம்.

---

3. நற். 271; பதிற்று. 44; புறநா. 238; தக்கயாக. 376; குலோ. உலா. 22; வீக்கிர. சோ. உலா பக். 8; அகநா. 67; புறநா. 271, பத்து. பட்டி. 79; புறநா. 264; பத்து. மலை. 389; புறநா. 221, 232, 260; புறத்தி. 5; சிலப். பதி. 35, அகநா. 35;

## தென்கிழக்கு ஆசிய நாடுகளில்பெருங்கற்படைப் பண்பாடு

ஹெய்னே கெல்டர்ன் (Heine Geldern) எனும் தொல்லியல் அறிஞர், ஜாவா, சுமத்திராமுதலிய இந்தோனேசிய நாடுகளில் அகழ்வாராய்ச்சிகள் நடத்தியுள்ளார். பெருங்கற்படைப் பண்பாட்டை, 'பழமை நிலை' (Older) எனவும் இளைய நிலை (Younger) எனவும் பாகுபடுத்தியுள்ளார்.[4] அவர் கொடுத்துள்ள பெயர்கள் பொருத்தமாக இல்லை. 'பழைய நிலை' 'புதிய நிலை' என்பதை 'இளநிலை', 'முது நிலை' எனப் பெயரிடுவதே பொருத்தமாகும். கி. மு. இரண்டாயிரத்துக்கும், ஆயிரத்திற்கும் இடைப்பட்ட பெருங்கல்பண்பாட்டுச் சின்னங்களைப் 'பழமையான நிலை' எனவும் கி. மு. 1600க்கும் கி. பி. 300க்கும் இடைப்பட்ட காலத்திய சின்னங்களை இளைய நிலை எனவும் கெல்டர்ன் பெயரிட்டுள்ளார்.

இந்தப் பின்னணியில் தமிழ் நாட்டுப்பெருங்கல் பண்பாட்டுச் சின்னங்களைக் காண்போம்.

இந்தப் பெருங்கற்படைப் பண்பாட்டிற்குரிய பழம்பொருட் சின்னங்கள் பல, தமிழ் நாட்டு அகழ்வாராய்ச்சியில் கிடைத்துள்ளதை முன்னரே கண்டோம். இதனை ஹெய்னே கெல்டர்ன் பாகுபாடு செய்துள்ள முறையில் வகைப்படுத்திப் பார்க்கலாம்.

''பழைய கற்படைப் பண்பாடு, இனக்குழுக்களும், பண்பாடுகளும் அலையலையாகப் பாய்ந்தமையால் உண்டானவையாகலாம். இந்த நிலை புதியகற்கருவிக் காலத்தில் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் உண்டாகி இருக்கவேண்டும். கி. மு. 200முதல் கி. மு. 1500க்கு இடையே தென்கிழக்கு ஆசியநாடுகளில் இந்த அலைகள் வீசி, குத்துக்கல் கல்லறைகள் (Menhirs) தனியாகவோ, தொகுதிதொகுதியாகவோ அமைக்கப்பட்டன. கல்லறைகள் [Dolmens] கற்பலகைகளால் மூடப்பட்ட கல்லறைகள் (Stone Cists) கற்படிமேடைத்தளங்கள், கல்லாலான பிரமிட்டுகள் முதலியன, இறந்தோரின் நினைவுச்சின்னங்களாக எழுப்பப்பட்டன.

'இளைய கற்படைப் பண்பாட்டு' அலை தொடர்வரிசையாக நடைபெற்ற பழங்குடி மக்களின் இடப் பெயர்வுகளால் அமைந்ததாக இருக்கவேண்டும். இந்த நிலை கி. மு. 1500 கி. பி. 300க்கும் இடையில் உண்டாகி இருக்கலாம்.

---

4. Heine Geldern, Pre-Historic Research in the Netherland Indies, P.48.

இது இரும்புக்கற்கருவிக் காலத்தின் தொடக்கத்தில் நிகழ்ந்து இருக்க வேண்டும். இக்காலத்தில் (Stone Cist) கல்லறைகள் வழக்கிற்கு வந்தன. கற்பலகைகள் உடைய கல்லறையும் (Dolmen like slabs), கற்களாலான ஆழமான சவக்குழிகளைப் போன்றவையும் பேரளவில் இக்காலத்தில் அமைக்கப்பட்டன.

பழைய பெருங்கல் பண்பாட்டில் கருவிகள் யாவும் கோணக் கணித அமைப்பில் அழகுறச் செதுக்கப்பட்ட வடிவங்களை உடையன. சேவல்,தேவரின் வடிவங்கள், வளைந்த கால்நடைகளின் தலைகள், மகளிரின் மார்பகம் போன்ற வடிவங்கள் இந்தோனேசியாவில் கிடைத்துள்ள கருவிகளில் பொறிக்கப்பட்டுள்ளன.

'இளைய நிலை' பெருங்கல் பண்பாட்டுக் கலை முறையில், வட்டங்கள், விலங்குகள், பறவைகள், கொடிகள் போன்றவை செதுக்கப்பட்டுள்ளன. கற்பலகைகளால் மூடப்பட்ட கல்லறைகள் (Cists), சிறுவடிவ நினைவுச் சின்னங்களாக உள்ளன. அவை சிறிய கற்பலகைகளால் மூடப்பட்டுள்ளன. அவற்றுள் எரிக்கப்பட்ட மனித எலும்புகளைக் கொண்ட தாழிகள் புதைக்கப்பட்டுள்ளன. தாழிப் புதையலும் சாடிப் புதையலும் மிகக் குறைவாகவே தென்கிழக்கு ஆசிய நாடுகளில் கிடைத்துள்ளன.[5]

இதைப் போலவே, பிலிப்பைன்ஸ் தீவுகளில் (ப. 530) வட, மத்திய பிலிப்பைன்ஸ் பகுதிகளில் எண்ணற்ற சாடிப் புதையலும் தாழிப்புதையலும் உடையதொல்பொருள் சின்னங்கள் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன. பாபுயான் (Babuyan), பேட்டன்ஸ், (Batanese) எனும் லூசானுக்கு வடக்கே உள்ள தீவுகளில் முதன்மையான தாழிப் புதையல் சின்னங்கள் உள்ளன. பியூகா (Fuga) தீவில் இச்சின்னங்கள் பேரளவில் உள்ளன.

இந்தக் கல்லறைகளில் பானைத்துண்டுகளும், மண்பாண்டங்களும் கிடைத்துள்ளன; தாழிகளும் சாடிகளும் நல்ல நிலையிலேயே உள்ளன.

மண்பாண்டங்கள் செய்யும் சக்கரம் அந்த கால மக்களுக்குத் தெரியாது. பானைகள் கருமஞ்சள், சிவப்பு, கரும் சாம்பல் நிற வண்ணங்களை உடைய மண்பாண்டங்கள் அங்குச் செய்யப்பட்டுள்ளன. அவற்றின் மேல் விளிம்புகள் தடிப்பாக உள்ளன.

5. Heine geldern. OP. Cit.; PP. 42- 60

இரட்டை அல்லது மூன்று பட்டைகளைக் கொண்ட விளிம்புகள் உடையனவாக அவை செய்யப்பட்டுள்ளன.

ஜாவாவில் தாழிகள் மெருகிடப்பட்டுள்ளன; கரும்பழுப்பு நிறமுடையனவாகச் செய்யப்பட்டுள்ளன. வட்டவடிவமான அடிப்பகுதியை அவற்றில் நாம் காணலாம்.

மலேசியாவில் சாடிகளும், குவளைகளுமே செய்யப் பட்டுள்ளன. இவற்றைப் போன்ற பெருங்கல் பண்பாட்டு மண்பாண்டங்கள் தென்கிழக்கு ஆசியாவில் கிடைத்துள்ளன.[6]

## ஒப்பாய்வு

புதியகற்கருவி காலத்திலேயே தமிழ் நாட்டில் இரும்புக்கால நாகரிகம் தொடங்கிவிட்டமைக்குப் பல சான்றுகள் உள்ளன. பெரும்பயறு, சிறுமுகை, பிரம்பூர், பல்லாவரம் போன்ற பகுதிகளில் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ள தொல்பொருள் சின்னங் கள் இக்கால கட்டத்தைச் சேர்ந்தவையாகும்.

கி. மு. 1500க்கும் கி. பி. 300க்கும் இடைப்பட்ட இரும்புக் கருவிக் காலச் சின்னங்கள் ஏராளமாகத் தமிழகத்தில் கிடைத் துள்ளன. இவற்றின் தலையாயப் பண்புகள் தாழிப்புதையலும் நடுகற்களுமாகும். திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஆதிச்ச நல்லூரிலும், புதுக்கோட்டை மாவட்டத்தில் அன்னவாசலிலும், செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள சானூர், அமிர்தமங்கலம் எனும் இடங்களிலும், சேலத்துச் சேர்வராயன் மலைப்பகுதி யிலும், கோவை மாவட்டத்தின் பலபகுதிகளிலும் பிற்காலப் பெருங்கல் பண்பாட்டுச் சின்னங்கள் கிடைத்துள்ளன.

ஆதிச்ச நல்லூரில் கிடைத்துள்ள இரும்பாலான சூலங்களும், வேலின் அலகும் மலேசியாவில் கெட்டாவிலும், சுமத்திராவிலும் பிலிப்பைன்ஸிலும் கிடைத்துள்ளன. ஆதிச்ச நல்லூரில் கிடைதி துள்ள தாய்த் தெய்வ பொம்மைகள் போன்றவை தென் சிழக்கு ஆசிய நாடுகளிலும் கிடைத்துள்ளன.

செந்நிற விளிம்புடைய தாழிகள் அன்னவாசல், அமிர்த மங்கலம் முதலிய இடங்களில் கிடைத்துள்ளன. இவை தென்கிழக்கு ஆசியாவில் பரவலாகக் கிடைத்துள்ளன.

சங்கு, பளிங்குகல், சூதுபவழகம் போன்றவற்றால் செய்யப் பட்டுள்ள மணிகள், வளையல்கள் தமிழ்நாட்டில் குவியல்

---

6. H. S. Ramanna, Megaliths of south India and south East Asia, A Comparative Study; PP. 58-69.

குவியலாகக் கிடைத்துள்ளன. இதைப் போன்ற மணிகளும் வளையல்களும் காம்பூச்சியா முதல் பிலிப்பைன்ஸ் தீவுகள் வரையில் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன.

தற்காப்பிற்கும், போருக்கும் பயன்படும் பலகருவிகள், ஈட்டி, வேல், வாள், அறுவாள, கோடரி போன்ற கருவிகள் ஏராளமாகத் தென்னிந்தியாவிலும் தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் கிடைத்துள்ளன.

புரிமனைகள், கலவடைகள், மண்பாண்டங்கள், வழிபாட்டுத் தட்டுகள், கெண்டிகள் போன்றவை இவ்விருபிரதேசங்களிலும் ஒரே வகையான அமைப்புடையனவாகக் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன.

முருக வழிபாட்டிற்குரிய வேல், சேவல், காவடி போன்ற பொருள்களும ஆதிச்ச நல்லூரிலும் பிலிப்பைன்ஸ் தீவுகளிலும் கிடைத்துள்ளன.[7]

இவ்வாறு, தமிழ்நாட்டில் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ள பெருங் கல் நினைவுச் சின்னங்கள், பண்பாட்டுப் பரவுதலின் மூலம் தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்குச் சென்று பரவி இருக்கவேண்டும் எனத் துணிவதற்குக கணிசமான சான்றுகள் கிடைத்துள்ளன. இந்தப் பண்பாடு, தென்கிழக்கு ஆசிய நாடுகள் அனைத்திலும் பரவியுள்ளதோடு பிலிப்பைன்ஸ் தீவுகளிலும், பார்மோசா (தைவான்) வரையிலும் விரிந்து பரவியுள்ளதைக் காணலாம்.[8]

பண்டைத் தமிழகத்திற்கு 1500 கி. மீ. க்கு மேற்பட்ட நீண்ட நெடும் கடற்கரை இருந்தது. இதனால், தமிழ் மக்கள் தொல் பழங்காலத்திலேயே, வெளிநாடுகளோடு வாணிகத் தொடர்பு கொண்டனர்.

தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பரவியுள்ள பழையபெருங்கல் பண்பாடு, சோழ மண்டலக் கடற்கரையில் இருந்து, அந்நாடு களுக்குச் சென்று பரவி இருக்க வேண்டும். ஜாவா, சுமத்திரா, பாலி, போர்னியோ, பிலிப்பைன்ஸ் தீவுகளிலேயே, முதற் கால கட்டப் பெருங்கல் பண்பாட்டுச் சின்னங்கள் பேரளவில் கிடைத்துள்ளன. சோழ மண்டலக் கடற்கரைக்கு நேராக அமைந்துள்ள தீவுகளாக இவை உள்ளமை இங்குக் கருதத்தக்க தாகும்.

---

7. க. த. திருநாவுக்கரசு, தமிழர் நாகரிக வரலாறு, பகுதி 1; பக் 95-102
8. H. S. Ramanna, op. cit, P. 69

'இளநிலை' பெருங்கல் பண்பாட்டுக் கூறுகள் சங்க காலத்திற்கு முன்பி (கி.மு. 600) ருந்து கடைச் சங்க காலம் முடிவுற்ற கி. பி. 350 வரையில் தமிழகத்தில் இருந்து வீசிய பண்பாட்டு அலைகளால், பர்மா, சம்பா, காம்பூச்சியா, தாய்லாந்து, சுமத்திரா, ஜாவா முதலிய தீவுகளில் பரவியிருக்க வேண்டும். சங்க காலத்தில் சிறப்புற்று விளங்கிய நடுகற்கள் அமைக்கும் வழக்கம், மேற்கண்ட நாடுகளிலும் காணப்படுவதே, இதற்குப் போதிய சான்றாகும்.[9]

இதனை, இந்தோனேசிய 'தொல்லியல் அறிஞர் ஆர்.பி. டிக்சன்' (R. B. Dixon) 'இங்குக் கிடைத்துள்ள கற்கருவிகளும் கண்ணாடியைப் போன்ற பொருள்களால் செய்யப்பட்டுள்ள மணிகளும் தென்னிந்திய இரும்புக் காலச் சின்னங்களில் காணப்படும் பொருள்களோடுபெரிதும் ஒத்துள்ளன அல்லதுமுழுமையும் ஒன்றாகவே உள்ளன. அங்கு நூற்றுக்கணக்கான புதைத்தாழிகளும், கற்பலகைகளால் மூடப்பட்ட சவக்குழிக் கல்லறைகளும் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. அவை சேர, சோழ, பாண்டிய அரச மரபினர் ஆட்சி புரிந்த வரலாற்றுக் காலத்திற்கு மிகவும் முற்பட்டனவாகும். அத்தகைய பெருங்கல் சின்னங்கள் மலேயா தீபகற்பத்திலும், ஜாவாவிலும், வட புரூனேயிலும் ஏராளமாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து கி. மு. முதலாயிரத்திற்கு முன்பே, தென்னிந்தியா, தென்கிழக்கு ஆசிய நாடுகளோடு நெருக்கமான வாணிகத் தொடர்பும், பண்பாட்டு மரபுவழிப்பட்ட உறவும் உடையதாக இருந்திருக்க வேண்டும் எனும் எண்ணமே எழுகிறது'[10] என்று அறிவித்துள்ளமை நம் கருத்திற்கு வலியூட்டுவதாகும்.

## தமிழரின் குடியேற்றம்

தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழருடைய குடியேற்றம், வரலாற்று நூலின் தொடக்க காலத்திற்கு முன்பு (கி. மு. 900) இருந்தே நடைபெற்றிருக்க வேண்டும் என்பதை முன்னரே கண்டோம். பியூணானில் கி. மு. 300 அளவிலேயே தமிழருடைய குடியேற்றங்கள் இருந்தன (ப. 98).

---

9. இவற்றைப் பற்றிய குறிப்புகள் இந்நூலில் பக்: 13, 14, 18, 19, 21, 98, 327-ஆம் பக்கங்களில் காணலாம்.

10. R. B. Dixon, Excavations of Iron Age Sitesin Malaya and Java, PP. 42-48

கி. பி. முதல் மூன்று நூற்றாண்டுகளில், கவுண்டினியன் எனும் சிவபிராமணன், அந்நாடுகளில் அரச மரபுகளைத் தோற்றுவித்ததாகக் கூறப்படும் மரபுவழிச் செய்திகளைப் பல பகுதிகளில் கண்டோம் (பக். 90, 92, 94, 300, 516). அந்தக் கவுண்டினியன், சங்க காலத்திய பூஞ்சாற்றூர் கவுணியன் விண்ணந்தாயன் மரபில் வந்தவனாக இருத்தல் வேண்டும் எனும் பிலியோசாவின் கருத்தும் [ப. 90] இங்கு நினைவுகூரத்தக்க தாகும்.

மணிமேகலை எனும் காவிரிப்பூம்பட்டினத்துப் பௌத்தப் பெண் துறவி, சாவகம் போய் விட்டு வந்த வரலாற்றில் [ப. 438] இருந்து, தமிழ் நாட்டு மக்கள், தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்குச் சென்று வந்த செய்தியினை அறிகிறோம்.

வரலாற்றுக் காலத்தில் சோழ மண்டலக் கடற்கரையில் இருந்து ஏராளமான பிராமணர்கள் கி. பி. எட்டாம் நூற்றாண்டில், அந்நாடுகளில் குடியேறியதை [ப. 127] இங்கு நினைவு கூரலாம்.

கம்பூச்சியாவில், தமிழ்நாட்டு மக்கள் குடியேறியதையும் [ப. 154], மேலும் காம்பூச்சியாவிற்குச் 'சிவகைவல்யர்' எனும் ஞானி, இரண்டாம் ஜெயவர்மன் காலத்தில் குடியேறியதையும் நாம் முன்னரே கண்டோம் (ப. 188).

மலேசியாவில் தமிழ்க் குடிகள் (பிராமணர்) நகோம் எனும் இடத்தில் வாழ்ந்து வருகின்றனர் (ப. 303). காலனி ஆதிக்க காலத்தில் சுமத்திரா (ப. 431) ஜாவா (ப. 437) மலேசியா (பக். 301 - 303), பாலி (ப. 532) பிலிப்பைன்ஸ் (பக். 551-552) தீவுகளிலும் தமிழ்நாட்டுமக்கள் குடியேறியுள்ளனர்.

வட சுமத்திராவில் வாழும் படாக் பழங்குடி மக்களிடத்துச் சோழர், பாண்டியர், பல்லவர், சேரர் எனும் இனக்குழு மரபுப் பெயர்கள் இன்றும்வழங்கி வருகின்றன (பக். 421-22).

## தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்க் கல்வெட்டு

### 1. பர்மா

ஈராயிரம் கி. மீ. களுக்கு அப்பாலுள்ள தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்மொழியில் (வட்டெழுத்துகளிலும், சோழர் காலத்திய தமிழ் எழுத்துகளிலும்) பொறிக்கப்பட்ட கல்வெட்டு கள் பல கிடைத்துள்ளன. அவற்றை இங்குத் தரும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது.

பர்மாவில் முதலாம் இராசேந்திரனுடைய வெற்றித் தூண் கல்வெட்டு (பதினோராம் நூ. ஆ.) கிடைத்துள்ளது (பக்.66-67). அடுத்துப் பர்மாவிலேயே நாநா தேசி வணிகருடைய கல்வெட்டுப் (பதின்மூன்றாம் நூ. ஆ.) பாதாங்கு என்னும் இடத்தில் கிடைத்து இருக்கிறது (பக். 35-36).

## 2. மலேசியா

மலேசியாவில், வெல்லஸ்லி மாவட்டத்தில் புத்தரின் சிலைகள் சில கிடைத்துள்ளன. அவற்றின் பீடத்தில் தமிழ்மொழி எழுத்துகளில் போதிமாதவரின் பெயர், பொறிக்கப்பட்டுள்ளது (ப. 300).

முதலாம் குலோத்துங்கனின் தமிழ்க் கல்வெட்டு ஒன்று (பதினோராம் நூ. ஆ.) கெட்டா (கெடா)ப் பகுதியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது (ப. 323).

மலேசியாவின் கடற்கரை ஓரத்தில் கிடைத்த வெண்கலமணி ஒன்றில் தமிழ் எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன (ப. 320).

மலேசியக் கடற்கரையில் கிடைத்துள்ள மற்றொரு வெண்கலமணியில் 'மரைக்காயர்' எனும் பெயர் பொறிக்கப் (ப.326) பட்டுள்ளது.

## 3. தாய்லாந்து

இந்தோ சீனாவைச் சேர்ந்த தாய்லாந்தில் தகுவா-பா எனும் இடத்தில் திருமால் கோயில் ஒன்றின் குளக்கரையில் 'மணிக்கிராமத்தார்' எனும் வணிகக் குழுவினர் பொறித்த தமிழ்க் கல்வெட்டு ஒன்று கிடைத்திருக்கிறது (பக். 262-64).

## 4. சுமத்திரா

இந்தோனேசியாவில் உள்ள சுமத்திரா தீவின் பரோங் பகுதியில் ஒருதமிழ் மொழிக் கல்வெட்டு கிடைத்துள்ளது (ப. 423).

இந்த நாட்டைச் சேர்ந்த ஜாவாவில் உள்ள ஜகார்த்தா அரும்பொருள் காட்சியகத்தில் புத்தர் சிலைகள் பல உள்ளன. அவற்றுள், ஒரு சிலையின் பீடத்தில், தமிழ் எழுத்துகளில் பொறிக்கப்பட்ட வாசகம் ஒன்று இருக்கிறது (ப. 424).

பிலிப்பைன்ஸ் தீவுகள் ஒன்றில் தமிழ்க் கல்வெட்டு ஒன்று கிடைத்திருப்பதாகத் தொல்பொருள் ஆய்வு அறிக்கை (1957) தெரிவிக்கிறது.

இத்தமிழ்க் கல்வெட்டுகளால் அந்த நாடுகளில் எல்லாம் கணிசமான அளவிற்குத் தமிழர் குடியேறி, வாழ்ந்து இருக்க வண்டும் எனும் எண்ணம் எழுகிறது.

## அரசரின் குடிப்பெயர்கள்

'வர்மன்' எனும் குடிப்பெயரைக் கி. பி. நான்காம் நூற்றாண்டு முதல் பல்லவ அரசமரபினர் தங்கள் பெயரோடு சேர்த்து வழங்கினர். அக்காலத்தில் தென்னாட்டு அரசர்களே-சிறப்பாகப் பல்லவர்களே, தம்முடைய குடிப்பெயராக (சத்திரியரின் சிறப்புப் பெயராக) வழங்கியுள்ளனர்,

இந்த 'வர்மன்' எனும் பெயரைத் தம்முடைய சிறப்புப் பெயராகத் தென்கிழக்கு ஆசிய நாடுகளை ஆண்ட பல்வேறு குடிகளைச் சேர்ந்தவர்கள், தத்தம் பெயரோடு சேர்த்துப் பயன்படுத்தியுள்ளனர்.

பர்மாவைச் சேர்ந்த 'மோன்' பழங்குடியைச் சேர்ந்த அரசர்கள் விக்கிரமவர்மன் (ப. 60), ஸ்ரீ பிரபுவர்மன் (ப. 60) எனும் பெயருடையவர்களாக விளங்கினர்.

பியூணாவை ஆண்ட அரசன் ஒருவன் குணவர்மன் என்று குறிப்பிடப்படுகிறான் (ப. 93).

சம்பாவின் புகழ்மிக்க அரசன் பத்திரவர்மன் ஆவார் (ப. 103). அவன் வழிவந்த அரசர்கள் யாவரும் 'வர்மன்' எனும் பெயருடையவராக வாழ்ந்தனர் (பக். 106-116).

காம்பூச்சியாவை ஆண்ட முதல் அரசமரபைச் சேர்ந்தவன் உருத்திரவர்மன் ஆவான் (பக். 153 - 154). மற்றோர் அரசனின் பெயர் உருத்திரவர்மன் என்பதாகும் (ப. 159).

காம்பூச்சியாவில் 'சித்திரசேனன்' எனும் அரசன் மகேந்திரவர்மன்' எனும் அபிடேகப் பெயரைப் பூண்டு கொண்டான் (ப. 155). இவன் வழிவந்தோர் எல்லாரும் 'வர்மன்' எனும் பெயரைச் சூட்டிக் கொண்டனர் (பக். 159-169).

மலேயாவை ஆண்ட மன்னர் சிலரும் 'வர்மன்' எனும் பெயரைச் சூட்டிக் கொண்டனர். ஸ்ரீ விஷ்ணுவர்மன் அவர்களுள் முக்கியமானவன (ப. 301) ஆவான்.

ஜாவாவை ஆண்ட மன்னர்களுள் தேவவர்மன், பூரணவர்மன் என்போர் குறிப்பிடத்தக்கவராவர் (ப. 543).

போர்னியோவை அசுவவர்மன் எனும் அரசன் ஆண்டதாகத் தெரிகிறது (ப. 543).

பாலியைப் பரமேசுவர ஸ்ரீ விசயவர்மன்என்பவன் ஆட்சி புரிந்துள்ளான் (ப. 518).

இந்த 'வர்மன்' எனும் குடிப்பெயரை முதன் முதல் சூட்டிக் கொண்ட பியூணான், சம்பா, காம்பூச்சியா அரசர்கள், பல்லவ அரசமரபோடு யாதோ ஒருவகையில்தொடர்பு உடையவர்களாக இருந்திருக்க வேண்டும். காலப்போக்கில், அரசர் குடிக்குரிய சிறப்புப் பெயராகப் பிற நாடுகளைச் சேர்ந்த அரசமரபினரால் பின்பற்றப்பட்டு இருக்க வேண்டும் என்பது புலனாகிறது.

'ஸ்ரீ மாறன்' எனும் பெயருடைய அரசன் ஒருவன் சம்பாவை ஆண்டுள்ளான். அவன் பாண்டியர் அரசமரபினைச் சேர்ந்தவன் என்பது அறிஞர் பிலியோசாவின் கருத்தாகும் (பக்.102-103).

'இராசாதிராசன்' எனும் பட்டப் பெயரை, பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்த பேயினவுங்கு எனும் அரசன் சூட்டிக் கொண்டுள்ளான் (ப. 49). இப்பெயர் தமிழ்நாட்டின் சோழ அரசருடைய பெயராகும்.

இதே பட்டப் பெயரைக் காம்பூச்சியாவை ஆண்ட ஸ்ரீ சூரியவம்ச இராம மகாதரன் எனும் அரசனும் சூட்டிக் கொண்டுள்ளான் (ப. 240).

பர்மாவைப் பதினோராம் நூற்றாண்டில் ஆட்சி செய்த கியாசிந்தன், 'திரிபுவனச் சக்கரவர்த்தி' எனும் பட்டப் பெயரைச் சூட்டிக் கொண்டு இருந்தான். அதே காலத்தில் சோழ நாட்டு அரசனான முதலாம் குலோத்துங்கன் (கி. பி.1070 1101) 'திரிபுவனச் சக்கரவர்த்தி' எனும் பட்டத்தை முதன் முதலாகப் பயன்படுத்தியுள்ளான். அவனுக்குப் பிறகு வந்த சோழ மன்னர்களும் பாண்டிய வேந்தர்களும், இப்பட்டப் பெயரைச் சூட்டிக்கொள்ளுவதில் பேரார்வம் காட்டியுள்ளனர்.

ஜாவாவை பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப் பிறகுஆண்ட சைலேந்திர அரசன் ஒருவன் 'திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தர பாண்டியன்' எனும் பட்டப் பெயரைச் சூட்டிக் கொண்டுள்ளான் (ப. 459). இவன் பாண்டியப் பேரரசன் சடையவர்மன் சுந்தர பாண்டியனோடு (1251–1273) தொடர்பு கொண்டவனாகவும் தோன்றுகிறான்.

பிராகிருதச் செப்பேடுகளையும், சம்ஸ்கிருதச் செப்பேடுகளையும் வழங்கிய பல்லவ மன்னர்களுள் சிலர், தங்களைத் 'தருமமகாராசர்' என்று அறிவித்துக் கொண்டனர். இந்தப் பெயரைச் சம்பாவின் அரசர் சிலரும், தங்கள் பெயரோடு பயன் படுத்தியுள்ளனர் (ப. 15).

மலாக்கா தீவினை ஆண்ட (பிற்கால) அரசர்கள் கூட தங்களை 'மகாராஜர்' என்று பெருமிதத்தோடு அறிவித்துக் கொண்டனர் (ப.321).

பேரரசரின் ஆதிக்கத்திற்குட்பட்ட குறுநில (Feudatories) மன்னர்கள், பேரரசின் பெயரையும் பட்டப் பெயர்களையும் சூட்டிக் கொள்ளுவது உலகம் முழுவதிலும் காணப்படும் மரபாகும்.

பல்லவ, சோழ, பாண்டிய அரசர்களின் குடிப்பெயர்களையும், சிறப்புப் பெயர்களையும் தம் பெயர்களாகச் சூட்டிக் கொண்ட தென்கிழக்கு ஆசிய நாடுகளின் அரசர்கள், 'தமிழ் நாட்டு மன்னர்களின் மேலாண்மையை ஏற்றுக் கொண்டார்களா?' எனும் முடிவிற்கு வர இயவில்லை. ஆயினும், யாதோ ஒருவகைத் தொடர்பு, அவர்களுக்கு இடையே நிலவியதை மட்டுமே அறிய முடிகிறது.

மணவுறவினை ஓர் அரசர் குடி, மற்றோர் அரச குடியோடு இராசதந்திர நோக்கொடும், கொள்ளுவது உண்டு. அப்பொழுது ஆற்றல் மிக்கவனாகவோ, புகழ்மிக்கவனாகவோ தாய்வழிப் பாட்டன் இருப்பானானால், அவனுடைய பெயரைப் பேரப் பிள்ளைகளுக்கு இடுவதும் பரபு.

இந்த நோக்கில்தான், ஜாவாவை ஆண்ட திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தர பாண்டியன் எனும் சைலேந்திர அரசன் 'சுந்தர பாண்டியன்' எனும் பெயரைச்சூட்டிக் கொண்டதாகக் கருதலாம்.

## சக ஆண்டுக்கணக்கு

நம் இந்தியக் குடியரசு, சக ஆண்டு முறையையே அரசின் ஆண்டு முறைக் கணக்கில் அதிகார பூர்வமாகக் கொண்டு இருக்கிறது. 'இரா' (Era) எனும் ஆங்கிலச் சொல்லிற்கு நேரான தமிழ்ச் சொல்லாகப் பயன்படுத்தி வருவது 'சகாப்தம்' (சக+அப்தம்) என்பதாகும். இது கி. பி. 78 ல் தொடங்கி வழக்கிற்கு வந்ததாக அறிகிறோம்.

என்ன காரணத்தினாலேயோ குப்தர்களுடைய ஆட்சி காலம் (கி.பி.4 நூ. ஆ. - 7 நூ. ஆ.) முதற்கொண்டு, வட இந்தியாவில் 'விக்கிரம' ஆண்டுக் கணக்கு முறையே பின்பற்றப் படுகிறது.

தென்னிந்தியாவில் பல்லவர் ஆட்சிக்காலம் (கி. பி. 350) முதல் 'சக' ஆண்டுக் கணக்கே பெருவழக்காக இருந்து வருகிறது.

கம்பரின் காலத்தைக் கணிக்க உதவும் இரண்டு பழம்பாடல் கள் 'எண்ணிய சகாப்தம் எண்ணூற்று ஏழின் மேல்' எனவும், 'ஆவின் கொடைச் சகரர் ஆயிரத்து நூறொழிந்து' எனவும் தொடங்குகின்றன.

இந்தச் 'சக' ஆண்டுக் கணக்கு முறையே, தென்கிழக்கு ஆசிய நாடுகளில் வழக்கில் இருந்து வந்துள்ளதைக் காணுகின்றோம். பர்மாவில் சகாப்தமே பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஜாவாவிலும் (பக். 437, 443) சுமத்திராவிலும் (ப. 428) 'சக" ஆண்டுக் கணக்கு முறையே பயன்படுத்தப் பட்டுள்ளமையால், பல்லவரோடும், மற்ற தமிழ்நாட்டு அரசர்களோடும் கொண்டிருந்த தொடர்பினை அறியமுடிகிறது.

## மணிமேகலை

தமிழ்க் காப்பியமாகிய 'மணிமேகலை'யின் கதைத் தலைவி மணிமேகலை, சாவகத்திற்குச் சென்று தரும சாவ கனைச் சந்தித்து வந்ததைப் பற்றிய செய்தி இங்குக் குறிப்பிடத் தக்கதாகும் (ப. 438).

சிலப்பதிகாரத்தில் சுட்டப்படும் 'மணிமேகலை' எனும் கடல் தெய்வம் தாய்லாந்து மக்களால் வழிபாடு செய்யப் பட்டதை அறிகிறோம் (ப. 200). மற்றும், மணிமேகலை வரலாற்றைக் கூறும் கதைப்பாடல்களும், அம்மானைப் பாடல் களும், இன்றும் தாய்லாந்தில் வழங்கி வருவது இங்குக் கருதத் தக்கதாகும்.

## காஞ்சியும் தென்கிழக்கு ஆசிய நாடுகளும்

தொண்டை மண்டலத்தின் தலைநகரமாகச் சங்ககாலத்தில் 'கச்சி' எனும் பெயருடைய காஞ்சி மாநகரம் விளங்கியது. பிற மொழியாளர்கள், இதனைக் 'காஞ்சி மாநகர் 'எனும் பெயராலேயே சுட்டியுள்ளனர்.

இந்த நகரம் கி. பி. 350 முதல் கி. பி. 700 வரை பௌத்த சமயத்தின் வளர்ப்புப் பண்ணையாக விளங்கியது. இங்கிருந்து ஈனயான பௌத்த சமயமும், தேரவாத புத்தசமயமும் பர்மா விற்கும், ஸ்ரீ லங்காவிற்கும் சென்று பரவியதை வரலாறு பேசு கிறது. கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல், தியான பௌத்தத் தின் வழிப்பட்ட மகாயான பௌத்த சமயம் காஞ்சியில் செழிப் புற்று வளர்ந்தது.

பின்னர் சைவ சமயமும், வைணவ சமயமும் பக்திநெறி எனும் இயக்கமாக வடிவம் பெற்று தென் கிழக்கு ஆசிய நாடு களில் சென்று பரவியதை முன்னரே நாம் விரிவாகக் கண்டோம்.

காஞ்சியில் சிறப்புற்று விளங்கிய 'கடிகைகள்' அக்காலத்திய கல்லூரிகளாகவும், பல்கலைக் கழகங்களாகவும் உலகப் புகழ் பெற்று விளங்கின.

இதைக் 'கல்வி கரையிலா காஞ்சி' எனும் அப்பரின் வாக்கால் அறியலாம். பல்லவரின் கோநகராக விளங்கிய (கி.பி. 350-900) காஞ்சி மாநகரைத் தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மக்கள் நன்கு அறிந்திருந்தனர்.

காஞ்சியில் இருந்து ஆறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், போதிதருமர் ஜாவாவின் வழியாகச் சீனாவிற்குச் சென்றார். மாபெரும் தத்துவ ஞானியாக விளங்கிய தருமபாலர், தென் கிழக்கு ஆசிய நாடுகளுக்குச் சென்று வந்ததாகத் தெரிகிறது (ப. 476).

பெயர் தெரியப்படாத பௌத்தத் துறவிகள் கி. பி. பத்தாம் நூற்றாண்டு முடிவு வரையில் பர்மா முதல் ஜாவா வரையில் உள்ள நாடுகளுக்குச் சென்று வந்துள்ளனர்.

காம்பூச்சியாவின் சோமவர்மன் எனும் அறிஞன், காஞ்சிக் கடிகையில் கற்றவன் எனும் செய்தி, அந்நாட்டுக் கல்வெட்டு களால் அறியப்படுகிறது (ப. 154).

கெமர் மன்னர்கள் கி. பி. 968-ல் பொறித்த கல்வெட்டு ஒன்றில், சைவ சமயத்தின் சிறப்புமிகு தலமாகக் காஞ்சிபுரம் விளங்குவதையும், அங்குச் சங்கராசாரி ஆசிரமம் இருப்பதையும் குறிப்பிடுகிறது (ப. 167).

ஜாவாவிற்குக் காஞ்சியைச் சேர்ந்த புத்தாதித்தனும், அவரு டைய சீடன் முதலி சகரிதாயனும் சென்று மகாயானத்தினைப் பரப்பியது பற்றிய குறிப்புகள்காணப்படுகின்றன (பக். 478-479).

## தமிழ்ப்பெயர்கள்

'சம்பா' எனும் நாட்டின் பெயர், காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்புப் பெயரான 'சம்பாபதி' என்பதன் திரிபு என்பதனை முன்னரே கண்டோம் (ப. 102).

'மலேயா' எனும் இக்காலப் பெயர் முதலாம் இராசேந்திரன் காலத்தில் 'மலையூர்' என வழங்கியதாகத் தெரிகிறது. அவன் காலத்திற்கு முன்பே அவ்வூர், 'மலையூர்' எனும் தமிழ்ப் பெயர் பெற்றிருந்திருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர் (ப. 296).

சிங்கப்பூரின் பழைய பெயர், 'சிங்கபுரம்' என்பதாகும். இப்பெயரும் தமிழ் மொழிவந்த பெயராகவே கருதப்படுகிறது.

இந்தோனேசியாவில்சிறப்புற்று விளங்கிய 'மத்ரா' (மதுரை) அரசின் பெயர், சைலேந்திரர், தமிழ் நாட்டுப் பாண்டியரின் தலைநகராகிய மதுரையோடு கொண்டிருந்த தொடர்பினைப் புலப்படுத்துகிறது.

'பாலித்தீவு' எனும் பெயர் 'மகாபலி' எனும் அசுரனுடைய நாடு எனும் பொருளில் வழங்கிய பெயர், காலப்போக்கில் 'பாலி' என்று திரிந்து விட்டதாகத் தெரிகிறது (ப. 519).

பொதிய மலை அகத்தியரின் ஆசிரமத்திற்கு, 'குஞ்சர குஞ்சம் எனப்பெயர் தென்கிழக்காசிய நாடுகளில் வழங்கியதாகத் தெரிகிறது (ப. 445).

இப்பெயர்கள் யாவும், தென்கிழக்கு ஆசிய மக்கள், தமிழ் நாட்டோடு கொண்டிருந்த தொடர்பினைப் புலப்படுத்துகின்றன. மற்றும், தமிழ் நாட்டின் சிறப்புமிகு நகரங்களைப் பற்றி, அந்தநாட்டு மக்கள் ஓரளவாகிலும் அறிந்திருந்தனர் என்பதும் இவற்றால் பெறப்படுகிறது.

## அரசியலுறவு

தென்கிழக்கு ஆசியநாடுகளில் தோன்றிய அரசுகள் பல. அவை யாவும், இந்தியாவில் சிறப்புற்று விளங்கிய பல்வேறு அரசர்களோடு நட்புறவு கொண்டு இருந்தன. இந்த அரசியல் வரலாற்றில் முதன்மையான கூறுகள் சிலவற்றை இங்குக் காணலாம்.

### பல்லவர் தொடர்பு

பர்மாவின் அரசர்கள் பல்லவரோடு தொடர்பு கொண்டு இருந்தனர் (ப. 60).

பியூணான் அரசமரபின் தோற்றம் பற்றிய கதை, பல்லவரின் அரசகுடியின் தோற்றம் பற்றிய செப்பேட்டுச் செய்திகளோடு பெரிதும் ஒத்துள்ளன (ப. 94).

சம்பாவில் கிடைத்துள்ள மிசோன் கல்வெட்டு, அந்நாட்டு அரசமரபு, பல்லவரோடு கொண்டு இருந்த அரசியலுறவைக் குறிப்பிடுகிறது. (ப. 159).

காம்பூச்சியாவின் இளவரசி ரங்க பதாகையை இரண்டாம் நரசிம்மவர்ம பல்லவன் மணந்த வரலாறு இங்குக் குறிப்பிடத் தக்கது (ப. 157).

இரண்டாம் நரசிம்மனாகிய இராசசிம்மனுடைய ஆட்சிக்கு, திவீபாந்திர பிரதேசத்துத் தீவுகள் உட்பட்டிருந்தமையை அறிகிறோம் (ப. 158).

இரண்டாம் நந்திவர்மன் எனும்பல்லவமல்லன், காம்பூச்சியாவிலிருந்து அழைத்துக் கொண்டுவரப்பட்டு பல்லவப் பேரரசனாகமுடிசூட்டப்பட்ட வரலாறு (ப. 162) இங்கு நினைவு கூரத்தக்கது.

சுமத்திராவை ஆண்ட சைலேந்திரர், பல்லவர்களோடு தொடர்பு கொண்டிருந்ததை (ப. 407)யும் நாம் அறிகிறோம்.

மலேசியாவில் கங்க-பல்லவர் அரச குடியைச் சேர்ந்தவர்கள், பல்லவ அரசை நிறுவி ஆட்சி செய்துள்ளனர் (ப. 305).

## சோழப் பேரரசரோடு கொண்ட தொடர்பு

பல்லவரின் பேரரசு வீழ்ச்சியுற்றதும், கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில், தமிழகத்தில் சோழப் பேரரசு எழுச்சியுற்றது. பதின்மூன்றாம் நூற்றாண்டு வரையில், பெருஞ் சிறப்பும் பேராற்றலும் வாய்ந்த பேரரசாக இது விளங்கியது. அக்கால கட்டத்தில் தென்கிழக்கு ஆசிய நாடுகள், சோழர்களோடு அரசியலுறவு கொண்டு இருந்தன.

பர்மாவை ஆண்ட கியாசிந்தன் எனும் அரசன் சோழ இளவரசியை மணம் செய்து கொண்ட வரலாற்றை அறிகிறோம் (ப. 41).

பேரரசன் இராசராசனின் ஆட்சிக் காலத்தில், சைலேந்திர அரசனுடைய முயற்சியால், நாகப்பட்டினத்தில் 'சூளாமணி பௌத்த விகாரை' எழுப்பப்பட்டதை அறிகிறோம் (ப. 409).

சைலேந்திர அரசனின் மகளைச் சோழப் பேரரசன் இராசேந்திரன் திருமணம் செய்து கொண்டதாக ஒரு மரபுவழிச் செய்தி வழங்கிவருவது (ப. 321) இங்கு நினைவு கூரத்தக்க தாகும்.

இராசேந்திர சோழன், நாகப்பட்டினத்தில் எழுப்பப்பட்ட சூளாமணி விகாரைக்கு, ஆனைமங்கலம் எனும் ஊரையே தான மாக அளித்தான் என்பதும் இங்குக் கருதத்தக்கதாகும் (பக்.415-416).

## சோழப்பேரரசரின் படையெடுப்பு

சோழப் பெருவேந்தன் முதலாம் இராசராசன் காலத்தில் சைலேந்திரர்களுக்கும், சோழப் பேரரசர்களுக்கும் நெருக்கமான நட்புறவு நிலவியதை முன்னரே கண்டோம்.

ஆனால், கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டின் தொடக்கத் தில் (1025), சோழருடைய கடற்படை ஸ்ரீவிசயத்தின்மீது, படையெடுத்துச் சென்றமை ஒரு 'புதிராக'த் தோன்றுகிறது. இதற்குரிய காரணங்களை முன்னரே (பக். 412-413) ஆராய்ந் தோம். பேரரசன் முதலாம் இராசேந்திர சோழனுடைய படைகள், ஸ்ரீவிசயத்தைத் தாக்கி, அதன் அரசனைச் சிறைப்பிடித்துச் சென்றன.

அப்படையெடுப்பில் (கி. பி. 1025) சோழப் படைகள் சுமத்திராவிலுள்ள பண்ணை,மலயுமுதலியவற்றைக் கைப்பற்றிக் கொண்டன. பிறகு மலேயாவிற்குச் சென்று, மாயிருடிங்கம், இலங்கா சோகம், கடாரம் முதலிய பகுதிகளை வென்று, வளைப்பத்தூர் (பாண்டுரங்கா) வரையில் சென்று திரும்பும் பொழுது இலாமுரி தேசத்தையும், நக்கா வரம் (நிக்கோபார்) தீவையும் கைப்பற்றிக் கொண்டு அப்படைகள் தமிழகத்திற்குத் திரும்பின.

இராசேந்திர சோழனுடைய கல்வெட்டு ஒன்று இப்படையெடுப் பைத் தெரிவிக்கிறது. சோழப் பேரரசன் வென்ற இடங்களில் எல்லாம், தம் ஆட்சியை நிறுவவில்லை. அக்காலத்திய 'ஆதிபத் தியக் கோட்பாட்டிற்கு' இணங்க தோற்ற அரசர்களைத் திறை செலுத்துமாறு பணித்தான். தமிழ்நாட்டு வாணிகத்திற்கு இருந்து வந்த தடைகள் நீக்கப்பட்டமையும், வாணிகத்திற்குப்

போதிய பாதுகாப்பு அளிப்பதாக வாக்குறுதி அளிக்கப்பட்டமையும் காரணமாக மேற்கண்ட முறையில், சோழமன்னன் தன்னுடைய மேலாண்மையை நிலைநாட்டி இருக்க வேண்டும்.

இதற்குப்பிறகு, கி.பி.1068இல்,ஸ்ரீவிசய அரசகுடும்பத்தினர் இடையே போரும் பூசலும் உண்டாயிற்று. அவர்களுள் ஒரு குழுவினர், சோழப் பேரரசருடைய உதவியை நாடினர். அப்பொழுது சோழ நாட்டை, இராசேந்திர சோழனுடைய மகனான வீரராசேந்திர சோழன் ஆட்சிபுரிந்து கொண்டு இருந்தான். அவ்வேந்தன், தன்னுடைய கடற்படையை அனுப்பி, கடாரத்தை வென்று உரியவனிடம் அதைக் கொடுத்து அரசனாக்கினான் என்பதை அறிகிறோம். இந்நிகழ்ச்சிகளுக்குப் பின் ஸ்ரீவிசயம், சோழரோடு நல்லுறவு கொண்டு இருந்தது என்பதைக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. சுமத்திராவில் உள்ள கி. பி. 1088 ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று, 'நானா தேசி வணிகர்களான 'திசையாயிரத்து ஐந்நூற்றுவர்' எனும் தமிழகத்து வணிகர் குழுவின் கிளை ஒன்று, அங்கு இருந்ததைக் குறிப்பிடுகிறது.

மேலும், கி. பி. 1090-இல், ஸ்ரீவிசய (கடாரத்து) அரசனின் வேண்டுகோளின்படி நாகப்பட்டினத்தில் இருந்த சூளாமணி விகாரைக்குச் சோழமன்னன் குலோத்துங்கன், மானியமாகச் சில ஊர்களைக் கொடுத்ததை அறிகிறோம். இவை யாவும், ஸ்ரீவிசயத்திற்கும் தமிழ் நாட்டிற்கும் இடையில், நிலவிய நல்லுறவைப் புலப்படுத்துகின்றன.

வீரராசேந்திரனுடைய ஆட்சிக்காலத்தில் (கி. பி 1062-1070) கடாரத்து அரசன் ஒருவன், தன்னுடைய நாட்டை இழந்து, சோழனிடம் அடைக்கலம் புகுந்தான். இந்த அரசனுக்கு உதவி செய்வதற்காக, வீரராசேந்திரனுடைய படைகள், கடாரத்தின் மீது படையெடுத்துச் சென்று, எதிரியைத் தோற்கடித்து சோழ வேந்தனிடம் அடைக்கலம் புகுந்த கடாரத்து அரசனிடம் ஆட்சியை ஒப்படைத்ததை (ப. 414) யும் அறிகிறோம். இவ்வாறு, சோழப் பேரரசர்கள் இருமுறை கடாரத்தின் மீது படையெடுத்துச் சென்றுள்ளனர்.

## பாண்டியரோடு தொடர்பு

ஸ்ரீமாறன் எனும் சம்பாவின் அரசன் பாண்டியர் குடியைச் சேர்ந்தவனாக இருத்தல் வேண்டும் என்பதை முன்னரே கண்டோம் (ப. 102).

பாண்டிய மன்னர்களுக்கும் சுமத்திராவை ஆண்ட சைலேந்திரர்களுக்கும் நெருக்கமான அரசியல் தொடர்பு இருந்து வந்தமை (ப. 481) இங்கு நினைவுகூரத்தக்கதாகும்.

'மாறன்' எனும் குடிப்பெயருடைய மன்னர்கள் ஜாவாவை ஆண்டுள்ளனர் (ப. 492).

ஜாவாவின் அரசர்கள், பாண்டியர்க்கு உரிய இரட்டைக்கயல் மீன் சின்னத்தைத் தங்களுடைய இலச்சினையாகக் கொண்டு இருந்தனர் (ப. 449).

ஜாவா அரசன் ஒருவனுடைய பெயர் பாண்டியன் விக்கிரம துங்கன் என்பதாகும் (ப. 458).

## தமிழ்ப் பெண்களை மணந்த அரசர்கள்

தமிழ்நாட்டின் பல்வேறு அரசகுடிகளைச் சேர்ந்த பெண்களைத் தென்கிழக்கு ஆசிய நாடுகளின் அரசர்கள் மணம் செய்து கொண்ட வரலாறும் இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும். இதைப் பற்றி முன்னரே கண்டோம்.

அணிமைக் காலத்தில், மலாக்காவை ஆண்ட சுல்தான் ஒருவன் தமிழ்நாட்டு முஸ்லீம் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டதாகத் தெரிகிறது (ப. 321). இவன் முஸ்லீமாக மாறுவதற்கு முன்னர் பரமேசுவரன் எனும் பெயருடையவனாக விளங்கினான். அவனுடைய அரசி, 'பரமேசுவரி' என்று அழைக்கப் பட்டாள். முஸ்லீமாக மாறிய பிறகும், சுல்தான்களுடைய பட்டத்தரசியர், 'பரமேசுவரி' என்றே அழைக்கப்பட்டனர் (பக். 32-26).

## போர்னியோவில் அரசர் மரபைத் தோற்றுவித்தவன் ஒரு தமிழனே!

இந்தோனேசியத் தீவுகளுள் ஒன்று போர்னியோ. அத் தீவினுள் முதன்முதல் ஓர் அரச மரபை நிறுவியவனைக் குண்டுங்கன்' எனும் பெயரால், அந்நாட்டின் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன (பக். 543-543). பல்லவர் செப்பேடு ஒன்று குண்டுகூரம் என்பவரைப் பற்றிப் பேசுகிறது. பொதுவாக இப்பெயர் காரண இடுகுறிப் பெயராக இருக்கலாம். இப்பெயர், தமிழ் நாட்டில் 'குண்டன்' எனவும் 'குண்டோதரன்' (குண்டு உதரன்) எனவும் வழங்கி வருவது இங்குக் கருதத் தக்கதாகும்.

## வாழ்வியல்

மக்கள் வாழ்க்கையின் பல்வேறு கூறுகளையும் இத்தலைப்பினுள் அடக்கிக் காட்டலாம். தென் கிழக்கு ஆசிய மக்களின் வாழ்வியலில் முதன்மை இடம் பெறுவன பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளுமாகும். ஒரு சமுதாயத்தின் மரபு வழிப்பட்ட பழக்கங்களே, காலப்போக்கில் வழக்கங்களாக மாறுகின்றன. அவை, சமுதாயத்தின் ஒட்டு மொத்தமான நலவாழ்விற்குப் பயன்படுவனவாக அமைவன.

இதைப் போன்றே நம்பிக்கைகளும் ஒரு சமுதாயத்தின் கட்டுக் கோப்பிற்கும், சமுக வாழ்விற்கும் காரணமாக அமைகின்றன. தொடக்க காலத்தில் அறிவுக்குப் பொருந்தக் கூடிய நம்பிக்கைகள், காலப்போக்கில் மக்களுடைய அறிவு வளர்ச்சிக்கும், எண்ணப்போக்கிற்கும் ஏற்ப மாறும் இயல்புடையன. இவற்றால், அவை மூடநம்பிக்கைகளாகவும் தோன்றக்கூடும். ஆயினும் அவை, அந்தச் சமுதாயத்தின் கடந்தகாலச் சிந்தனைப் போக்கை அறிவதற்குப் பேருதவியாக அமைகின்றன.

## பழக்க வழக்கங்கள்

தென்கிழக்கு ஆசிய நாடுகளின் பழக்கவழக்கங்களுள் சில, தமிழரிடம் இருந்து பெறப்பட்டனவாகத் தோன்றுகின்றன.

பியூணான் திருமணச்சடங்குகளும், விருந்தோம்பலும் தமிழருடைய பழக்க வழக்கங்களைப் பெரிதும் ஒத்துள்ளன (ப. 98).

வேட்டி, சேலை அணியும் பழக்கமும் தமிழ்நாட்டில் இருந்து சென்றிருக்க வேண்டும் (ப. 98).

காம்பூச்சியாவில் திருமணத்தில் பரிசம் அளித்தல் (ப. 225) குழந்தைப் பிறந்த ஒன்பதாம் நாள் சடங்கு செய்தல்(ப.223) தமிழ் நாட்டோடு நெருக்கமான தொடர்புடையனவாக உள்ளன.

உணவுமுறையில் அப்பம், கொழுக்கட்டை போன்றவற்றைக் கெமர்கள் செய்து உண்கின்றனர் (ப. 204).

கெமர்களின் நாட்டியக்கலை, பரத நாட்டியத்தின் வழித் தோன்றலாகவே இருக்கிறது (ப. 224).

தாய்லாந்தில் குழந்தையைத் தொட்டிலிடுதல், மூன்றாண்டுகளுக்குள் மொட்டையடித்துக் காது குத்தல், வழக்கில் உள்ளன (பக். 251—252)

பிச்சைக் காரர்களுக்குச் சோறு போடுதல் தாய்லாந்தில் ஒரு, புண்ணிய செயலாகக் கருதப்படுகிறது.

திருவிழாக்காலங்களில் அன்னதானம் செய்தலும் தாய்லாந்தில் காணப்படுகின்றது (ப. 260).

திருவிழாவின் தொடக்கத்தில் கொடியேத்துதல், காப்புக் கட்டுதல் போன்ற பழக்கங்கள் அங்குள்ளன. இறைவழிபாட்டில் பழத்தைப் படைப்பதும் பூக்களால் அருச்சனை செய்வதும் (பக். 264—265) வழக்கிலுள்ளன.

திருப்பாவை திருவெம்பாவை விழாவினை மார்கழி மாதக் கடைசியில் தாய் மக்கள் கொண்டாடுகின்றனர்.

சங்கராந்தி விழாவில் நம் பஞ்சாங்கக் குறிப்பில் காணப்படும் படத்தைப் போல வரைந்து நம்புகின்றனர். (ப. 275)

மலேசியாவில் நன்னிகழிச்சிகளில் மலரும் வெற்றிலைப் பாக்கும் கொடுத்தலும் மலாய் மக்களால் செய்யப்படுகின்றன. (ப. 328).

சிங்கப்பூரில், விருந்தினரை வழியனுப்பும் பொழுதும், பெரியோரிடம் பேசிவிட்டுத் திரும்பும் பொழுதும் ஏழடிப் பின் சென்று திரும்புகின்றனர் (ப. 382).

மன்னரை வாழ்த்தும் மரபு, சிங்கப்பூரில் தமிழரின் வழக்கத்தைப் போலவே காணப்படுகிறது (பக். 381-82).

மலாய் மக்களின் திருமணச்சடங்கில், 'ஓம்' எனும் மந்திரம் ஓதப்படுகிறது. (ப. 328).

மலாக்காவில் தீமிதித்தல் திருவிழா நடைபெற்று வருகிறது (ப. 321).

பாலித் தீவில் பொங்கலைப் போன்ற அறுவடைத் திருவிழா கொண்டாப்படுகிறது (ப. 504). ஊழ்வினை, மறுபிறப்பை அவர்கள் நம்புகின்றனர். போர்னியோவில், தமிழ் மாதங்களின் பெயர்களே வழக்கில் இருந்து வருகின்றன (ப. 545).

பியூனானில், இறந்தோரை அடக்கம் செய்தல் தமிழருடைய பழக்கவழக்கத்தைப் பின்பற்றியனவாகவே உள்ளது (ப. 98).

காம்பூச்சியாவில் இறப்பு நிகழுமாயின், பதினைந்து நாட்கள் சூதகம் காத்தல் வழக்கில் உள்ளது. பதினாறாம் நாள் தலை மழித்தல் சடங்கும் நடத்தப்படுகின்றது (ப. 258).

சம்பாவில் உறவினர், பங்காளிகள் இறந்தோருக்காகத் தலையை மழித்துக் கொள்ளுகின்றனர் (ப. 129).

தாய்லாந்திலும் ஈமச் சடங்குகள் மேற்கண்டவாறே நடை பெறுகின்றன (ப. 251).

பாலியில் சவ அடக்கத்தில், எலும்புகளைப் பானையில் இட்டு, கடலில் விடுதல் வழக்கத்தில் இருக்கிறது (ப. 523).

போர்னியோவில் புருனேய் எனும் இடத்தில் கிடைத்துள்ள கல்வெட்டுகளில், தமிழ்நாட்டுச் சைவ சமயம், சிந்தாந்தம் பற்றிய குறிப்புகள் கிடைத்துள்ளன (ப. 246)

பாலியில் உள்ள ஒரு ஊரின் பெயர் கிந்தாமணி. அப்பெயர் 'சிந்தாமணி' என்பதன் திரிபாகும் (ப. 513).

பிலிப்பைன்ஸ் பழங்குடி மக்களின் பழக்க வழக்கங்கள் தமிழருடையனவாக உள்ளன (ப. 551). தாலாட்டுப் பாடல் பாடுவதும் (ப. 539) பொன்னால் செய்யப்பட்ட தாலியைக் கட்டுவதும் (ப. 535) சிறப்புமிக்க பழக்கங்களாக அங்குக் காணப்படுகின்றன.

குழந்தைகளுக்குப் பெயரிடுதல், தொட்டிலிடும் சடங்கு முதலியன (ப.557) தமிழ்நாட்டினைப் போன்றனவாக உள்ளன.

**நம்பிக்கை**

முதன் முதலில் தனிமனிதர் சிலர், அனுபவ வாயிலாகப் பெற்ற சில நம்பிக்கைகள் காலப்போக்கில் சமுதாயத்தின் நம்பிக்கையாக மாறிவிடும். இந்த வகையில் இதுவும், பழக்க வழக்கங்களைப் போன்றதாகும்.

காம்பூச்சியாவின் கெமரின மக்களிடம் காணப்படும் சில நம்பிக்கைகள் தமிழரிடம் தொன்று தொட்டு இருந்துவரும் சில நம்பிக்கைகளை நினைவுபடுத்துகின்றன.

திருமணத்தின் பொழுது மகளிரின் கழுத்தில் மணமகனால் கட்டப்படும் தாலி, புனிதமானது எனவும், மங்கலச் சின்னம் எனவும் நம்புகின்ற வழக்கம் அவர்கள் இடையே இருந்து வருகிறது.

மலேசியா, சிங்கப்பூரில் வாழும் மக்களிடையே தமிழ் மக்களுடைய சமயநம்பிக்கைகளுள் பெரும்பாலானவை வழக்கில் இருந்து வருகின்றன. (பக். 312, 379)

பிலிப்பைன்ஸ் தீவுகளில் வாழும் பழங்குடி மக்கள் 'தாலி' யைப் புனிதச் சின்னமாக போற்றுகின்றனர் (பக். 553-556).

மகப்பேற்றினை அடையாதவர்கள், பாவம் செய்தவர்கள் எனும் நம்பிக்கை பிலிப்பைன்ஸ் மக்களிடம் காணப்படுகிறது (ப. 556).

பிலிப்பைன்ஸ் மக்கள், சூரியனையும், சந்திரனையும் பாம்பு கள் விழுங்கி விடுவதாலேயே கிரகணங்கள் உண்டாவதாக நம்பி வருகின்றனர். இந்நம்பிக்கை சங்க காலம் முதல், தமிழ் நாட்டில் இருந்து வருவதாகும்(ப. 558). அவர்கள் பூனை குறுக்கே வருவதைத் தீய சகுனமாகவே கருதுகின்றனர் (ப. 558). இதைப் போன்றே பகற்பொழுதில் ஆந்தை அலறுவதையும் தீமை உண்டாகப் போவதின் அறிகுறியாகக் கருதி அஞ்சுகின்றனர் (ப. 588).

சிவன் கோயிலை, மேருமலையாகவே அவர்கள் நம்பு கின்றனர் (ப. 554). பல தெய்வ நம்பிக்கை அவர்களிடம் காணப் படுகிறது (ப. 559).

அவரவர்கள் செய்யும் நன்மை தீமைகளுக்கு ஏற்ப, இறந்த பிறகு சொர்க்கத்தையும் நரகத்தையும் அடைகின்றனர் (ப. 554) எனும் நம்பிக்கை பிலிப்பைன்ஸ் மக்களிடம் இருந்து வருகிறது.

மகளிருக்கு மாதவிடாய் உண்டாகும் காலத்தை ஒரு வகைத் தீட்டாகவே அவர்கள் நம்புகின்றனர் (ப. 556).

இவை அல்லாமல், இந்திய மக்களிடம் காணப்படும் நம்பிக்கைகள் பல, தென்கிழக்கு ஆசிய மக்கள் இடையே இருந்து வருகின்றன.

## சமயம்

தென்கிழக்கு ஆசிய நாடுகளில், இந்தியாவின் சிறப்புமிகு சமயங்கள் பலவற்றின் அழியா அடிச்சுவடுகள், இன்றும் காணப்படுகின்றன.

பர்மாவில்தொடக்க காலத்தில்வைணவ சமயம்செல்வாக்குப் பெற்று இருந்தது(பக். 35, 38). பின்னர் ஈனயானப் பௌத்த சமயம் (தேரவாதம்) தழைத்தோங்கத் தொடங்கியது. இன்று வரை அச்சமயமேநிலைத்த வாழ்வைப் பெற்றுவருகிறது (ப.40).

பியூணானிலும் சம்பாவிலும் வைதிக சமயம் பெருவாழ்வு பெற்றிருந்தது (பக். 154-56). பின்னர் பௌத்த சமயம் செல் வாக்குப் பெற்றது (பக்.96, 139).

காம்பூச்சியாவில் சைவ சமயமே பெருவாழ்வு பெற்று விளங் கியது (பக். 190-201)

தாய்லாந்தில் சைவமும், வைணவமும் சிறப்புற்று விளங்கின (பக். 265-276). பின்னர் மகாயான பௌத்த சமயம் செல்வாக் குற்றது. இன்றுவரை அச்சமயமே நின்றுநிலவுகிறது (பக். 259-261)

மலேயா, சிங்கப்பூர் முதலிய பகுதிகளில் சைவ சமயம் பெரு வாழ்வு பெற்று விளங்குகிறது (பக். 309 - 312; 378-380).

இந்தோனேசியாவில், ஜாவா சுமத்திராத் தீவுகளில் வைதிக சமயம் செல்வாக்குப் பெறவில்லை. மகாயான பௌத்த சமயமே நெடுங்காலமாக நிலைத்த வாழ்வைப் பெற்றுள்ளது (பக். 425-430; 475 - 478)

பாலித்தீவில் இந்து சமயம், பல்வேறு வகையான வடிவத்தில் இன்றும் வாழ்ந்து வருகிறது (ப. 535).

போர்னியோ, பிலிப்பைன்ஸ் தீவுகளில் பண்டைக் காலத் தில் சைவ சமயம் பெருவாழ்வு பெற்றிருந்தமைக்குரிய தொல் பொருள் சின்னங்கள் பலகிடைத்துள்ளன. (பக். 546, 554). மஜபாகிதப் பேரரசின் ஆதிக்கம் இத்தீவுகளில் உண்டான பொழுது, மகாயானப் பௌத்த சமயம் செல்வாக்குப் பெற்று இருந்தது (பக். 545, 553).

மேற்கண்ட சமயங்கள் யாவுமே தமிழ் நாட்டிற்குரியன என்பதை மறுப்பார் இல்லை.

## வழிபாட்டு நெறிகள்

சமயத்தின் வழி, பலவகையான வழிபாட்டு நெறிகள் தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மக்கள் வாழ்க்கையில் முதன்மை யான இடத்தைப் பெற்றுள்ளன.

தமிழகத்தில் தோன்றிய பக்தி இயக்கத்தின் அலைகள் அந் நாடுகளில் (சம்பா முதல் பிலிப்பைன்ஸ் வரை) வீசியுள்ளன (பக். 132-560).

## சிவவழிபாடு

சம்பாவில் சிவவழிபாடு ஆக்கமும்ஊக்கமும் பெற்று இருந்தது (பக். 105, 135, 136); சக்திவழிபாடும் சிறப்புற்று விளங்கியது (ப. 135).

காம்பூச்சியாவிலுள்ள பண்டேய் ஸ்ரீயில், சிவவழிபாடு தழைத்தோங்கியது (பக். 132, 135, 194,210). சிவலிங்கவழிபாடு அங்குச் சிறப்புற்று விளங்கியது.

மலேசியாவில் சிவனை வழிபடும் வழக்கம் ஆயிரம் ஆண்டு களுக்கு முன்னரே வழக்கில் இருந்தது (ப. 311).

தாய்லாந்தில் சிவவழிபாடு நடராசர் வழிபாடாகவும்,வாழ்வு பெற்றுள்ளது (ப.285). ஆகமநெறிப்பட்ட கோயில் அமைப்பும் வழி பாட்டு முறைகளும் அங்கு வழக்கில் இருந்தன (ப. 266). சிவன் கோயில் பூசாரி, பட்டாரகர் எனும் பெயருடையவராக விளங் கினார் (பக். 237-54). கோயில் விமானத்திற்குப் பொன்வேயும் வழக்கமும் அங்கு இருந்தது(ப.262). நந்தியின் மீது சிவன் அமர்ந்த கோலத்தில் பல சிலைகள் அங்குக் கிடைத்துள்ளன (ப. 286).

சிவபெருமானின் ஊர்த்துவதாண்டவச் சிற்பங்கள் தாய் லாந்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன (ப.285).

மலேசியாவில் சைவ சமயத்திற்குரிய விநாயகர் (ப. 320), தண்டாயுதபாணி(பக். 309, 310, 320) மகாமாரியம்மன் (ப.310) கோயில்கள் உள்ளன. சமய வேறுபாடின்றி எல்லா மக்களும் இத்தெய்வங்களை வழிபடுகின்றனர்.

சுமத்திராவில் முருகன் கோயில் சிறப்புடன் பொலிவுறுகிறது (பக். 432-433). மற்றும் விநாயகர், மாரியம்மன் வழிபாடும்அங்கு இருந்துவருகிறது (பக். 432–33).

பாலியில் இந்து சமய தெய்வங்களுக்குரிய வழிபாடு கள்யாவுமே நடைபெறுகின்றன (பக். 524, 527, 532, 535). சூரிய நமஸ்காரம் செய்வது பெருவழக்காக இருந்து வரு கிறது (ப. 540). மலர் தூவி, தூபதீப வழிபாட்டு முறை, தமிழகத் தில் காணப்படுவதைப் போன்று, பாலியிலும் பெருவழக் காகஇருந்து வருகிறது (பக். 524, 537).

பாலியில் உள்ள குகை ஒன்றில் எட்டுக் கைகளையுடைய நடராசர் வடிவம், வழிபாட்டிற்காக அமைக்கப்பட்டுள்ளது (ப. 529) இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

பிலிப்பைன்ஸ் தீவுகளில், சிவலிங்க வழிபாடு சிறந்தோங்கியது. நியூகினியா எனும் தீவில், சிவலிங்கங்கள் பல கிடைத்துள்ளன (ப. 555). சுடுமண்ணால் செய்யப்பட்ட விநாயகர், சிவன் சிலைகளும், சிவலிங்கங்களும் பிலிப்பைன்ஸ் தீவுகளில் பரவலாகக் கிடைத்துள்ளன (ப. 554). அப்பகுதிகளில் சுடுமண் நந்திகளும், கல்லாலான நந்திகளும் கண்டெடுக்கப் பட்டுள்ளன (ப. 554). சிவபெருமானின் செப்புத் திருமேனி களும் அத்தீவுகளில் கிடைத்துள்ளன (ப. 565).

இவற்றால், பிலிப்பைன்ஸ் தீவுகளிலும் பல்லவர் காலத்திய சைவசமயம் பரவி இருந்ததை அறியலாம்.

## திருமால் வழிபாடு

திருமால் வழிபாடு பர்மா முதல் பிலிப்பைன்ஸ் தீவுகள் வரையில் பரவி இருந்ததை அறிகிறோம். சம்பாவில், திருமாலின் பல வகைப் பெயர்களும், அவதாரங்களும் வழக்கில் இருந்தன (ப.137). தாய்லாந்தில் திருமால் கோயில் இருந்ததையும் (பக். 285-87), திருமாலின் பல்வேறு சிலைகள் வழிபாட்டில் இருந்ததையும் (பக். 287-290) தொல்பொருள் சின்னங்கள் தெரிவிக்கின்றன (ப. 287).

காம்பூச்சியாவில் திருமால் வழிபாடு சிறப்புற்று விளங்கியது; தென்கலை வைணவம் வழக்கில் இருந்தது (பக். 191-92). பழங்குடி மக்களிடம் கண்ணன்-நப்பின்னை போன்ற காதல் தெய்வ வழிபாடும் (ப. 172) இருந்து வந்தது.

மலேசியாவில் திருமால் வழிபாட்டுத் தடையங்கள் சில கிடைத்துள்ளன. சிங்கப்பூரில் சீனிவாச பெருமாள் கோயில் ஒன்று உள்ளமை (ப. 379) இங்குக் குறிப்பிடத்தக்கது.

ஜாவா, சுமத்திராத் தீவுகளிலும் திருமால் வழிபாடு தழைத்தோங்கியது (பக்.473-474). பாலியில் கருடவாகனத்தில் திருமால் இருதேவியருடன் அமர்ந்துள்ள கோலத்தில் கற்சிலைகளும் வெண்கலச் சிலைகளும் கிடைத்துள்ளன (பக். 532-36). திருமால் வழிபாட்டுச் சின்னங்கள் (ப. 525), இலக்குமி (ப. 536), கஜ இலக்குமி சிற்பம் (ப. 537), கண்ணன் சிலை (ப. 528) முதலியவை இங்குக் கிடைத்துள்ளன.

பிலிப்பைன்சில் கிடைத்துள்ள திருமால் கற்சிலைகள் கூருருளை வடிவிலான திருமுடிகளை உடையனவாக உள்ளன. இவை பல்லவர் காலத்திய கலைப்பாணியாகும் (ப. 555). எனவே, ஆழ்வார்கள் காலத்திலேயே திருமால் வழிபாடு

பிலிப்பைன்ஸ் தீவுகளில் கால்கொண்டு இருக்க வேண்டும். கருடன் மீது, இருதேவியருடன் திருமால் அமர்ந்துள்ள மூலவர் சிலைகள், சில அங்குக் கிடைத்துள்ளன (பக். 555-56).

இவற்றுடன் சங்கரநாராயணரின் வழிபாடும், மும்மூர்த்திகளின் வழிபாடும் அந்நாடுகளில் சிறப்புற்று விளங்கின (பக். 93, 352, 555).

## புத்தரின் வழிபாடு

தமிழ்நாட்டின் ஈனயான பௌத்த சமயம் பல்லவர் ஆட்சிக் காலத்திலேயே தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பரவியிருந்தது. இதற்குப் பின்னர் மகாயான பௌத்த சமயத்தின் பல்வேறு பிரிவுகள் அந்நாடுகளில் செல்வாக்குப் பெற்றன. தேரவாத (ஈனயான) ப் புத்த சமயத்தினர், போதிமாதவரின் திருவடிகளையும், நினைவுச் சின்னங்களையும் வழிபட்டு வந்தனர். மகாயான பௌத்தர்கள் புத்தரின் சிலைகளை மட்டும் அல்லாமல், பௌத்த சமயத் தெய்வங்களாகப் பல வகைச் சிலைகளை வழிபாடு செய்தனர்.

தாய்லாந்தில் புத்தர் பெருமானின் சிலைகளோடு, அவலோகித ஈசுவரரின் சிலைகளும் தாரையின் சிலைகளும் கிடைத்துள்ளன (பக். 232-236). இவை மகாயான பௌத்த சமயம் பெற்றிருந்த செல்வாக்கைப் புலப்படுத்துகின்றன. அச் சிலைகள், தென்னிந்தியாவின் அமராவதிக் கலைப்பாணியைப் பின்பற்றியனவாகத் தோன்றுகின்றன.

ஜாவா, சுமத்திரா முதலிய இந்தோனேசிய நாடுகளில், மகாயானபௌத்த சமயமே தழைத்தோங்கியது. அங்கு எல்லாம், அவலோகித ஈசுவரர், தாரை, பிரக்ஞ பாரமிதை, மஞ்சசூரி போன்றவர்களுடைய சிலைகள் பேரளவில் கிடைத்துள்ளன. சைலேந்திரரும், மஜபாகித மன்னர்களும் மகாயானத்தையும், அதன் வழிப்பட்ட தாந்திரிகப் பௌத்த சமயத்தையும் போற்றி ஆதரித்தமை இங்கு நினைவுகூரத்தக்கது(பக். 476-478).

மஜபாகிதப் பேரரசின் ஆதிக்கத்திற்குப் பாலித்தீவு ஆட்பட்டிருந்த காலத்தில், அத்தீவில் மகாயான சமயம் பரவிற்று (ப. 536). அக்காலத்தில் செய்யப்பட்ட அவலோகித ஈசுவரர், மைத்திரேயர், மஞ்சசூரி (ப. 536), தாரை (ப. 526) ஆகியோருடைய கற்சிலைகளும், வெண்கலச்சிலைகளும், பொற்சிலைகளும் இங்கு கிடைத்துள்ளன. இவற்றுள் பல சோழர் காலத்திய கலைப்பாணியின் சாயலுடையனவாக உள்ளன (பக். 538-40).

## அகத்தியர் வழிபாடு

சிவபெருமானின் தலைமைச் சீடராகக் கருதப்படும் அகத்தியர் வழிபாடு தமிழகச் சைவ சமயத்தோடு, தென்கிழக்கு ஆசிய நாடுகளில் சென்று பரவியதைத் தொல் பொருள் சின்னங்கள் புலப்படுத்துகின்றன.

காம்பூச்சியாவில், அகத்தியர் வழிபாடு நடைபெற்றமைக்குரிய சான்றாக அகத்தியரின் சிலைகள் சில கிடைத்துள்ளன (ப. 158). தமிழ்நாட்டில் இருந்து, அங்குக் குடியேறிய பிராமணர்கள், தம்முடைய மூதாதையராக அகத்தியரைக் கருதுகின்றனர் (ப. 209).

மலேசியாவில், பெராக்குப் பகுதியில் அகத்தியரின் வெண்கலச் சிலை, கண்டெடுக்கபட்டுள்ளது (ப. 330).

இந்தோனேசியாவிலும் அகத்தியர் வழிபாடு, வழக்கில் இருந்ததை அறிகிறோம். ஜாவாவில், அகத்தியர் சிலைகள் பல அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன (பக். 440-44).

கி. பி. ஏழாம், எட்டாம் நூற்றாண்டுகளில், தமிழகத்துப் பாண்டிய வேந்தர்கள், அகத்தியரைத் தங்களுடைய அரசமரபின் குலகுருவாகப் போற்றியதை அவருடைய செப்பேடுகள் தெரிவிக்கின்றன. இந்தக் குலகுருவிற்கு, தென் கிழக்கு ஆசிய நாடுகளில், ஒருவகை வழிபாட்டு நெறி வளர்ச்சியுற்றமை, நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.

## காரைக்கால் அம்மை வழிபாடு

சைவசமயத்தின் அடியார்களுள் ஒருவரான (காலத்தால் முற்பட்டவரான) காரைக்கால் அம்மையாரின் வழிபாடு தமிழ் நாட்டில் தழைத்தோங்கவில்லை. ஆனால், அலைகடல்களுக்கு அப்பாலுள்ள தென்கிழக்கு ஆசியாவில், செல்வாக்குப் பெற்றிருந்ததைக் காணுகின்றோம்.

காரைக்கால் அம்மையாரின் செப்புச் சிலைகள் சில காம்பூச்சியா, அன்னாம் போன்ற நாடுகளில் கிடைத்துள்ளன (பக். 197-201). மற்றும் கோயில் சிற்பங்களில், காரைக்கால் அம்மையார் சிவபெருமானின் ஊழிக் கூத்திற்கு ஏற்பத் தாளம் போடும் நிலையிலும், மத்தளம் அடிக்கும் நிலையிலும் செதுக்கப்பட்டுள்ளகாட்சிகள் (ப. 200) நம் கருத்தைக் கவருகின்றன.[11]

---

11. காரைக்கால் அம்மையாரின் செப்புச் சிலைகளையும் கற்சிலைகளையும் கண்ட ஐரோப்பியத் தொல்லியலார், அவற்றைத் 'தாளத்தைக் கையில் ஏந்திய பேய்' என்று கூறிவந்தனர். காண்க: ரெனேகுரோ செட்டின், இந்திய நாகரிகம், (படம் 36). இந்நூலாசிரியன் 1960-ல் இதனை மறுத்து, காரைக்குடியில் இருந்து வந்த 'எழில்' எனும் இதழில் 'காரைக்கால் அம்மையாரின் சிலை' எனும் கட்டுரை எழுதியுள்ளதைக் காண்க.

இவற்றால் தமிழ் நாட்டு வணிகப் பெருமக்கள், தங்கள் குலதெய்வமாகக் காரைக்கால் அம்மையாரைப் போற்றி வழிபட்டு இருக்கக்கூடும் என்பது புலனாகிறது. கடல் வாணிகத்தின் பொருட்டு மரக்கலங்களில் எடுத்துச் சென்று இருக்க வேண்டும் என்பதும், அந்நாடுகளில் அவர்கள் அமைத்துக் கொண்ட குடியிருப்புகளில், அவ்வம்மையை வழிபட்டு இருக்க வேண்டும் என்பதும் உய்த்துணரத்தக்கதாகும்.

## தேவராஜ வழிபாடு

காம்பூச்சியா முதல் ஜாவா வரையிலான தென்கிழக்கு ஆசிய நாடுகளில், நாடாளும் அரசர், தம்மைக் கடவுளின் அவதாரமாகக் கருதியதோடு, தாங்கள் இறந்தபிறகு, தங்களைத் 'தேவராஜராக' நாட்டு மக்கள் வழிபாடு செய்வதற்கு நினைவுச் சின்னங்களாகப் பல கோயில்களைக் கட்டியுள்ளனர். அவர்கள் இறந்தபிறகு, அவர்களுடைய உடல்களை அங்குப் புதைத்தனர். பிறகு அவற்றின் மீது சிவலிங்கத்தை அமைத்தனர். பிறகு அவ்வரசர்கள் புதிய சிறப்புப் பெயர்கள் சூட்டப்பட்டு வழிபாடு செய்யப்பட்டனர்.

இவ்வாறு, தமிழ்நாட்டில் அமைக்கப்பட்ட கோயில்களுக்குப் 'பள்ளிப்படை' என்பது பெயர். காலப்போக்கில் அவை சிவன் கோயில்களாக மாறின. அக்கோயில்களிலும், பாசுபதச் சைவ சமயப் பிரிவைச் சேர்ந்த துறவிகளே பூசாரிகளாகப் பணிபுரிந்தனர். தமிழ் நாட்டில் பேரரசன் முதலாம் இராசராசனுக்கும் இத்தகைய கோயில் அமைக்கப்பட்டு இருந்ததைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.[12]

இத்தகைய வழிபாட்டு நெறி, தொல்காப்பியர் காலத்திலேயே (கி. மு. மூன்றாம் நூ. ஆ.) தமிழ் நாட்டில் வழக்கில் இருந்திருக்க வேண்டும் என்பது 'பூவை நிலை' எனும் புறத்திணைத்துறையால் புலனாகிறது.[13]

தென்கிழக்கு ஆசியாவில், கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் காம்பூச்சியாவை ஆண்ட இரண்டாம் ஜெயவர்மனால் தேவராஜவழிபாடு தொடங்கிவைக்கப்பட்டது (பக். 166, 193).

---

12. K. A. Nilakanta sastri, The colas, ARE, 151 of 1897 P. 452.
13. தொல். பொருள். புறத். நூ. 1006.

இவ்வழிபாட்டு நெறிகளால், தமிழருடைய சமயப் பண்பாட்டின் தாக்கம், அந்நாடுகளில் கணிசமான அளவிற்கு நிலவியமை தெரியவருகிறது.

## சமயத்தின் வழிப்பட்ட விழாக்களும், பழக்க வழக்கங்களும்

கடல் கடந்த அந்நாடுகளில் தமிழ்நாட்டில் சமய வழிபாட்டு முறைகளோடு தொடர்புடைய பழக்க வழக்கங்கள் இன்றும் வழக்கில் இருந்துவருகின்றன.

முதலாவதாக வீட்டுவழிபாடு, கோயில் வழிபாடு எனும் இருவகை வழிபாட்டு முறைகள் பாலியில் நிலவி வருகின்றன (ப. 524). சிறு தெய்வ வழிபாடுகள் பெரிதும் ஆலமரத்தின் அடியிலேயே நடைபெறுகின்றன (ப. 538). கோயில் பூசை செய்யும் புரோகிதர் பதந்தா (பண்டாரம்) எனவே அழைக்கப் படுகிறார் (ப. 540).

வீடுகளிலே பூசை அறைகளோ, பூசை மாடங்களோ அமைக்கப்பட்டு இருந்தன (ப . 537). தெய்வத்திருமேனிகளுக்கு அபிஷேகங்கள் இன்றும் தமிழ்நாட்டில் செய்யப்படுவதைப் போலவே, அங்கும் பயபக்தியோடு செய்யப்படுகின்றன (பக். 523-4). மலரைத்தூவி அருச்சனை செய்து, தூபதீப ஆராதனையோடு, கூடியவழிபாடு இன்றும்நடைமுறையில் அங்கு இருந்து வருகிறது (ப. 524). பூசை செய்யும் பொழுது இடக் கையில் மணியைப் பிடித்துக் கொண்டு ஆட்டும் வழக்கத்தை அங்குக்காணலாம் (ப. 547). வழிபாட்டின் நிறைவு நிலையில் நீர்வளாவுதல், தோப்பக்கரணம் போடுதல் (ப. 537), தீர்த்தம் அளித்தல் (ப. 526), சூரிய நமஸ்காரம் செய்தல் (ப. 540) போன்ற வழக்கங்களும், அந்நாடுகளில் நடைமுறையில் உள்ளன.

நெற்றியில் திருநீறு, சந்தனப்பொட்டு அணித்லும் பூசையின் தொடக்கத்தில் இடம் பெறுகின்றன. இந்துப் பெண்கள் திலகம் இட்டுக் கொள்ளுதல் மங்கலச் செயலாகக் கருதப்படுகிறது (ப. 534). இந்தப் பழக்கம்அந்நாட்டு எல்லாவகையான மகளிரிடத்தும் காணப்படுகின்றன (ப. 534).

திருக்கோயில்களின் விமானத்திற்குப் பொன்வேய்வதையும் (பக். 134, 262) அங்குக் காணலாம். பேர்ரசன் முதலாம் இராசராசன் தாம் எழுப்பிய தஞ்சைப் பெரிய கோயிலுக்கு 'இராசராசேச்சுரம்' எனும் பெயரிட்டான். இதைப் போன்ற,

அந்நாடுகளில் எந்த அரசன், எக்கோயிலைக் கட்டினானோ, அவன் பெயராலேயே அக்கோயில் அழைக்கப் பட்டதைக் காணு கின்றோம். பத்திரவர்மன் எடுப்பித்த கோயிலுக்குப் 'பத்திரே சுவரம்' எனும் பெயர் (ப. 105) வழங்கியமைஇங்கு நினைவு கூர்தற்குரியதாகும்.

தமிழ்நாட்டின் திருக்கோயில்களுக்குக் கலைவல்ல காரிகை கள் 'தேவதாசிகள்' எனும் பெயரால், போற்றி அரசர்களால். ஆதரிக்கப்பட்டனர். இதைப்போன்றே, சம்பாவிலிருந்த 'பத்திரேசுவரர்' கோயிலுக்கு நூற்றுக் கணக்கான தேவதாசியர் பணிபுரிந்தனர் என்பதையும், அரசர்கள் அவர்களுக்கு 'மானியம்' கொடுத்து ஆதரித்தனர்என்பதையும் அக்காலக் கல்வெட்டுகளால் அறிகிறோம்.

தமிழ் நாட்டில் உள்ள 'வள்ளுவர் கோட்டத்தைப்' போல, மலேசியாவின் பத்துமலையில் உள்ள பெரிய குகை ஒன்றில் வள்ளுவர் கோட்டம் பெருமிதத் தோற்றமும் நேர்த்தியும் வாய்ந்த வகையில் அமைக்கப்பட்டுள்ளமை சிறப்புமிக்க செய்தி யாகும் (ப. 361).

தாய்லாந்தில் திருப்பாவை-திருவெம்பாவைத் திருவிழா இன்றும் நடத்தப்படுகிறது (ப. 271). தாய்லாந்தில்,'சங்கராந்தி' எனப்படும் பொங்கற் பண்டிகை, 'ஸோங்ரான்' எனும்பெயரால் நடத்தப்பட்டு வருவது நம் கருத்தைக் கவருவதாகும் (ப.279). பாலியில் 'சரேஸவதி' (சரஸ்வதி) பூசையும், விஜயதசமித் திருநாளும் கொண்டாடப்படுகின்றன (ப.524). இன்று தமிழர் வாழும் பர்மா, காம்பூச்சியா, தாய்லாந்து, மலேசியா, சிங்கப்பூர், சுமத்திரா, பாலி, பிலிப்பைன்ஸ் ஆகிய நாடுகளில் சித்திரைத் திருநாள், நவராத்திரி, கந்தர் சஷ்டி, பொங்கல் திருநாள், தைப்பூசம், பங்குனி உத்தரம் முதலிய விழாக்கள் தமிழின உணர்ச்சிப் பெருக்கோடு மிகச் சிறப்பாகக் கொண் டாடப்பட்டு வருகின்றன (ப. 327).

மலாக்கா தீவில், நரகாசுரனை வழிபடும் தீபாவளியைப் போன்ற ஒரு விழா, அந்நாட்டுப் பழங்குடி மக்களால் ஆரவாரத் தோடு கொண்டாடப்படுகிறது.

### கலையும் வாழ்வும்

ஒரு நாட்டின் அல்லது ஓர் இனத்தின் நாகரிகப் பண் பாட்டின் உயர்வையும், சிறப்பையும், மாட்சியையும் வெளிப் படுத்துவன அந்நாட்டில் வளர்ந்தோங்கியுள்ள அழகுக் கலை களாகும். தென்கிழக்கு ஆசிய நாடுகளில், பலவகைக் கலைகள்

வளர்ந்து, சிறந்துள்ளன. அந்நாட்டிற்குரிய உள் நாட்டுக் கலைகள், தென்னிந்தியப் பண்பாட்டின் தாக்கத்தால், உந்துதல் சக்தியைப் பெற்றன; மலர்ச்சியுற்றன. இதன் விளைவாகப் 'புத்துருவாக்கங்கள்' பல, அந்நாடுகளின் கலையுலகில் விரைவாகவும், விரிவாகவும் நடைபெற்றுள்ளன.

குவாரிட்ச் வேல்ஸ் எனும் அறிஞர், ஆந்திர தேசத்தின் அமராவதிக் கலை முறைகளும், பல்லவர் காலத்திய கலைப் பாணியும், சோழப் பெருவேந்தர் காலத்திய கலைக் கூறுகளும் தென்கிழக்கு ஆசிய மக்களின் கலைவாழ்வில் மாபெரும புதுமைப்போக்குகளைப் புகுத்தியுள்ளதாக மதிப்பிட்டுள்ளார். அவர் குறிப்பிட்டுள்ளன யாவும், தென்னிந்திய கலைமரபைச் சேர்ந்தவை என்பது வெளிப்படை.[14]

இதே கருத்தை அறுபது ஆண்டுகளுக்கு முன்னர், கலாயோகி ஆனந்த குமாரசுவாமி அவர்கள், நடுவுநிலையில் இருந்து பிறழாமல், வகைப்படுத்திக் காட்டியுள்ளார்.

## கட்டடக் கலை

தமிழ் நாட்டைப் போன்றே, தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் தொல்பொருள்சின்னங்களாக விளங்கும் கட்டடக்கலைப் பொருள்கள், கோயில்களாகவே உள்ளன. பர்மாவின் அழகுமிகு ஆனந்தா ஆலயம், சோழரின் கலைப் பாணியைப் பின்பற்றி எழுப்பப்பட்டதாகும் (ப. 72.). சம்பாவில் காணப்படும் கோயில்கள் யாவும் மாமல்லபுரத்து ஒற்றைக்கல் தேர்களையும், கடற்கரைக் கோயிலையும், காஞ்சி கயிலாசநாதர் கோயிலையும் நினைவூட்டுவனவாக உள்ளன. எனவே, இவையாவும் பல்லவர் கலைப்பாணியைப் பின்பற்றி அமைக்கப் பட்டவை எனக்கூறத் தேவை இல்லை (பக். 141-143).

காம்பூச்சியாவில் சிறப்புற்று விளங்கும் ஆங்கோர் வாட் கோயில் திராவிடக் கட்டடக் கலைப்பாணியில் அமைக்கப்பட்டது என்பதில் அறிஞர் இடையேகருத்துவேற்றுமை இல்லை (ப. 214). பல்லவர் கலைப்பாணியைப் பின்பற்றிக் கட்டப்பட்ட கோயில்களும் அந்நாட்டில் பரவலாக உள்ளன (பக். 214-25). சம்பாவில், போநகரில் உள்ள பகவதி கோயிலும் இத்தகையதேயாகும் (ப. 143).

---

14. Quaritch wales, H. G, The Making of Greater India PP. 23-26.

மலேசியாவில் மாமல்லபுரத்துக் கோயில்பாணியில் சிவன் கோயில் ஒன்று அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும் (ப. 332).

ஜாவாவில் உள்ள போராபுதூர் புத்தர் கோயிலில், சோழர் கலைப்பாணியின் தாக்கத்தைக் காணலாம் (ப. 482). ஒரு மூலக் கோயிலைச் சுற்றிபரிவார தேவதைகளின் சிறு கோயில்களை அமைப்பது, தமிழ்நாட்டு வழக்கமாகும். அதே முறையினை, ஜாவாவின் பெரிய கோயில்களில் நாம் காணுகின்றோம் (ப. 483). சுமத்திராவில் எழுப்பப்பட்டுள்ள கோயில்களும் திராவிடக் கலைமுறையைப் பின்பற்றியனவாகவே தோன்றுகின்றன.

## கற்சிலைகள்

கோயில்களின் கருவறைகளில் இடம்பெற்று இருந்த 'மூலவர்' சிலைகள் பல, பர்மா முதல் பாலி வரையிலான தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பரவலாகக் கிடைத்துள்ளன. அவை எல்லாம், வைதிக சமயத்திற்குரிய சிலைகளாகவே உள்ளன.

பர்மாவில் திருமால், கணேசர், கருடன், அனுமார், துர்க்கை முதலியோரின் கற்சிலைகள் கிடைத்துள்ளன. (ப. 61). அவை, பல்லவர் கலைப்பாணியைப் பெரிதும் ஒத்துள்ளன.

சாம்பூச்சியாவில் திருமால், அர்த்தநாரீசுவரரின் அழகிய சிலைகள் கிடைத்துள்ளன. இவை சோழர் கலைப்பாணியில் செய்யப்பட்டுள்ளன (ப. 283).

தாய்லாந்தில் புத்தர்சிலைகள் சில கிடைந்துள்ளன (ப. 262).

மலேசியாவில் கிடைத்துள்ள துவாரபாலகர் சிலைகள், காஞ்சி கயிலாசநாதர் கோயில், துவாரபாலகர் சிலைகளை நினைவுப்படுத்துகின்றன (ப. 331). மலேசியாவில் பெராக் பகுதியில் கிடைத்துள்ள அகத்தியர் சிலை, பாண்டியரின் கலைப்பாணியில் அமைக்கப்பட்டுள்ளது (ப. 330).

சோழருடைய கலைப்பாணியில் செய்யப்பட்ட காளியின் சிலை மலேசியாவில் கிடைத்துள்ளது (ப. 330).

ஜாவாவில் கிடைத்துள்ள இந்து தெய்வச்சிலைகள் சோழர் காலத்தியனவாக உள்ளன (ப. 443). போர்னியோவில் கிடைத்துள்ள அகத்தியர் சிலை, நேர்த்திவாய்ந்தது. இச்சிலையும் பாண்டியரின் கலைப்பாணியில் செதுக்கப்பட்டுள்ளது (ப. 544) எனலாம்.

பாலித்தீவின் குகை ஒன்றில் எட்டுக்கைகளையுடைய நடராசரின் சிலை ஒன்று கவின்மிகு வனப்புடன் படைக்கப் பட்டுள்ளது (ப. 529). பாலியிலும், அழகுமிகு துவாரபாலகர் சிலைகள் கிடைத்துள்ளன(ப. 539). இவையாவும் பல்லவர் கலைப்பாணியைப் பின்பற்றிச் செய்யப்பட்டனவாக உள்ளன.

பாலியில் கிடைத்துள்ள திருமால் சிலையின் திருமுடி, கூருருளை வடிவில் அமைக்கப்பட்டுள்ளது. இப்பாணி பல்லவர் காலத்தியதாகும் (ப.528).

## சிற்பங்கள்

கோயில்களின் விமானங்கள், கோபுரங்கள், பக்கச்சுவர்கள் ஆகியவற்றில் கருத்தைக் கவரும் கல்லோவியங்கள் காட்சி தரு கின்றன. அவற்றுள் பெரும்பாலானவை புடைப்புச்சிற்பங்களாக உள்ளன. குடைவுச் சிற்பங்கள் மிகச் சிலவாகவே கிடைத் துள்ளன.

பர்மாவில் புரோம், பகான் நகரக் கோயில்களில் காணப் படும் புடைப்புச் சிற்பங்கள் பல்லவர் காலத்தியனவாகும். திருமாலின் பத்து அவதாரச்சிலைகள் கண்கொள்ளாக் காட்சி யாக உள்ளன (ப. 35). பியூணானில், பல்லவர் மாமல்லபுரத் தில் செதுக்கியயானை, குதிரை முதலியசிற்பங்களை ஒத்தவைக் காணப்படுகின்றன (ப. 96).

காம்பூச்சியாவில், பண்டேய் ஸ்ரீ கோயில் தொகுதிகளில் கருத்தைக் கவரும் புடைப்புச் சிற்பங்கள் பல உள்ளன. ஆடல் மங்கையரின் சிற்ப வடிவங்கள், தமிழ் நாட்டு, பரதநாட்டிய நங்கையரையே நினைவுபடுத்துகின்றன (ப. 221). ஆங்கோர் வாட் சிற்பங்கள் உலகப் புகழ் பெற்றவை (ப. 214).

'காலமகரம்' எனும் சின்னம் சிற்பக்கலையில் அந்நாடுகளில் முதன்மை இடம் பெற்றுள்ளது. இதனை ஆனந்த குமாரசுவாமி அவர்கள் 'கீர்த்திமுகம்' எனும் பெயரால் சுட்டியுள்ளார். ஜாவாவில், காலமகரச் சிற்பம் நேர்த்தியும் சீர்த்தியும் வாய்ந் தனவாக உள்ளன. இவை தமிழ் நாட்டில், பல்லவர் சிற்பங் களிலேயே முதன்முதல் இடம் பெற்றுள்ளன (பக். 482-483).

ஜாவாவில் பலவகைச் சிற்பங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் விநாயகர், துர்க்கை ஆகியோரின் சிற்பங்கள் தனிச் சிறப்பு வாய்ந்தன. இவை பல்லவர் கலைப்பாணியைப் பின் பற்றி அமைக்கப்பட்டுள்ளன (ப. 476).

தாய்லாந்திலும் ஜாவாவிலும் இராமாயணக் கதையின் காட்சிகள் பல, கவர்ச்சிமிகு சிற்பங்களாகச் செதுக்கப்

